உ

ஸ்ரீகணேசாயநம:.

# முகவுரை.

"அகம் பிரமாஸ்மி" என்னும் விருத்திவடிவப் பிரமை ஞானத்தால் விஷயத்தோடுகூடிய அப்பிரமை ஞான வடிவப் பந்தத்தின் நீக்கமும் பரமானந்தப் பேறுமாய மோக்ஷமுண்டாமென்பது வேதாந்த சித்தாந்தம். ஆண்டுப் பொதுவாய் விருத்தியின் சொரூபம் காரணம் பயன் என்பவற்றை அறிந்தாலன்றி முற்கூறிய விருத்தியின் சொரூபம் காரணம் பயன் என்பவை அறியப்படாவாகலின், அம்மூன்று வஸ்துக்களின் நிரூபணம் அவசியம் செய்யற்பாற்றும். பிரமாணாதிகளை, அநாத்ம பதார்த்தங்களென்றறிந்து அவற்றைப் பிரதிபாதித்தலில் சுருதியும் சூத்திரகார பாஷ்யகாரர்களும் உதாசீனமாயிருக்கினும், அவற்றின் பிரதிபாதனம் மோக்ஷகாமிகளுக்கு வேதாந்தப்பொருளைச் சிந்தித்தலில் மிக்க உபயோகமுள்ளதாமாகலின் விருத்தியின் சொரூபம், பிரமை அப்பிரமை முதலிய வேறுபாடுகள், காரணம், பயன் என்பவற்றை நிரூபித்தல் தகுதியாம். முற்கூறிய பொருள்களின் நிரூபணம் நியாயாதி அநேக நூல்களில் நிரூபிக்கப்பட்டிருத்தலோடு வேதாந்தபரிபாஷை தத்துவாநுசந்தானம் பேததிக்கார முதலிய வேதாந்த நூல்களினும் இவ்விசாரம் செவ்வையாய் எழுதப்பட்டுளது. அங்ஙனமாயினும் அவை சம்ஸ்கிருத பாஷை யுணர்ச்சி யுடையாருக் குபயோக மாதலே யன்றிப் பிராகிருதபாஷைமாத்திர முணர்ந்தார்க்குபயோகமாதலில்லையென் றுணர்ந்து பரமகாருணிகரும் தீவிர யுத்திசாலியும் ஷட்சாத்திர முணர்ந்தவரும் ச்ரோத்திரியப்பிரஹ்ம நிஷ்டரும் அநேககுணகணங்களாலலங்கரிக்கப்பட்ட ஆசாரியகோடியிலிருப்பவரும் ஸ்ரீ தாதுஜீ அவர்களின் சம்பிரதாயமாகிய ஆகாயமண்டலத்தில் தினமணியாய் விளங்கியவருமாகிய ஸ்ரீ நிச்சலதாசரென்பவர் நரமொழியுணர்ந்தார் மாட்டன்புகூர்ந்து முதலிற் றனது நிஷ்டையைச் சூசிப்பிக்கும் ஸ்ரீ விசாரசாகரமென்னும் நூலையியற்றியருளிப், பின்னர் எழுவருடபரியந்தம் மெல்ல மெல்ல இருபத்தேழு லக்ஷம் சுலோகக் கணக்குள்ள நூல்களைத்தான் சங்கிரகஞ்செய்து அவற்றைவிசாரித்து, தீவிரபுத்தி

மான்களாகிய ஹிந்திபாஷை யுணர்ச்சியுள்ளார் பொருட்டு எல்லா வற்றின் நிர்ணய வடிவ ஸ்ரீவிருத்திப்பிரபாகரமென்னும் நூலினை யியற்றியருளினர். அதன்கண் விருத்தியின் சொரூபம், பிரமை அப்பிரமை வடிவ அதன் பேதம், பிரமாண முதலிய வடிவ அதன்காரணம், வியவகார சித்தியும் மோக்ஷசித்தியுமாகிய அதன்பயன் என்பவை நிரூபிக்கப்பட்டுள. அதனை நூலாசிரியர், வித்துவான் என்னும் பட்டம் பெற்ற ஸ்ரீராமசிம்ஹஜீ என்னும் பூந்திகோட்டையரசனிடத்து வசிக்குங்காலத்து, நியாய வேதாந்த முதலிய பொருள்களா லமையப்பெற்றதாய், விருத்தியின் சொரூபத்தையும் காரணத்தையும் நிரூபிக்கும் ஏழாவது பிரகாசம் வரையிற் செய்து முடித்து "விருத்திதீபிகை" என்னும் பெயரிட்டிருந்தார். அதனை அவ்விடத்திற்றானே அவ்விராஜா பதிப்பித்திருந்தனர். பின்னாக்கேவல வேதாந்த சித்தாந்தத்தின் சித்தாந்தலேசமுதலிய நூல்களின் பொருள்களால் அமையப்பெற்றதும் விருத்தியின் பயனை நிரூபிப்பதுமாகிய இதன் எட்டாவது பிரகாசத்தைச்செய்து விக்கிரமசகாப்தம் ககூஉ0 - ல டில்லியில் பரப்பிரஹ்ம சமரசபாவத்திற்கு அடுத்த முற்காலத்தில் தமமாணாக்கர்களைப் பிரேரித்தல்வாயிலாக எட்டாவது பிரகாசத்தைச் சேர்த்தலால் இந்நூலிற்கு "விருத்திப்பிரபாகர" மென்னும் பெயரைக் கற்பிக்கலாயினர். இந்நூல் பண்டிதர் ஸ்ரீ நிச்சலதாஸரவர்களது பாண்டித்தியத்தின் பிரக்கியாதிக் கேதுவும், முமுக்ஷுக்களது மதியின் புஷ்டியைத்தரும் நலிவில்லாஷதமும், அநேக நூல்களைப் பார்த்தலாகிய ஆசைக்குச் சாந்தி வடிவ சந்தோஷத்தின் சரணியு (மார்க்கமு) மாம். இந்நூல் ஏற்பட்ட பின்னர் ஹிந்தி பாஷையை யப்பியசித்தவர்களிற் பலர் பண்டித ராய்விட்டனர். ஆதலால் ஸ்ரீநிச்சலதாசர் ஸ்ரீவிசாரசாகரம் ஸ்ரீவிருத்திப்பிரபாகர மென்னும் இரண்டு நூல்களையும் இயற்றி ஜீவர்களிடத்து மிக்க அநுக்கிரகம் செய்திருக்கின்றனர். ஸ்ரீவிருத்திப்பிரபாகரத்தை அறிதலிற் சாமர்த்தியமின்றிய அற்ப மதியினராகிய அதிகாரிகளின் பொருட்டுப் பண்டிதர் ஸ்ரீபீதாம்பரஜீ யானவர் "ஸ்ரீவிருத்திரத்நாவலி" யென்னும் நூலைச் செய்திருக்கின்றனர். அதுவும் விருத்திப்பிரபாகர மென்னும் மஞ்சத்திற்கு நிச்சிரேணி (ஏணி) யாம். வெகு காலத்திற்குமுன், உதாசீன பரமஹம்ஸரும் சாதுக்கூட்டங்களின் சிரோமணியும் சாஸ்திரங் களிற்கூறிய சகல சற்குணங்களமைந்தவரும் நிரந்தர வேதாந்த

யாகும்" என்று பிரேரிக்க, தாம் பாஷை யுணர்ச்சி உடையாரிடத்துக் கிருபாநோக்கத்தால விருத்திப் பிரபாகரத்தைச் செய்தருளினர். ஸ்ரீ நிச்சலதாஸர் ஸ்ரீகாசியி லிருந்துகொண்டு 2700000 சம்ஸ்கிருத சுலோகங்களைச் சங்கிரகித்தார். தாம் சம்ஸ்கிருத வுணர்ச்சியில் வல்லவராயினும், பாஷை யுணர்ச்சி உள்ளார்பொருட்டு இரண்டு உத்தம நூல்களை வெளிப்படுத்தினா ரென்பது விசாரசாகரத்தின் 526 - வது பிரசங்கத்தாற் றெரியவருகின்றது.

ஸ்ரீ நிச்சலதாஸர் ஸ்ரீ கடவல்லி யுபநிஷத்தின் பேரில் சம்ஸ்கிருத வியாக்யானமும் வைதிக சாஸ்திரத்தின் ஒரு நூலும் செய்திருப்பதாகக் கேள்விப்படுகின்றோம். 39 யுக்திகளுள்ள யுக்திப் பிரகாச மென்னும நூலும் செய்திருப்பதாகத் தெரியவருகின்றது. காவ்விய சாஸ்திரங்களிலும சமர்த்தரென்பது அவர் செய்த விசாரசாகர நூலின் சந்தங்களினாலேயே விளங்கும.

ஸ்ரீசுந்தரவிலாசமென்னும் நூலின் கர்த்தாவாகிய ஸ்ரீ சுந்தரதாஸரும ஸ்ரீ நிச்சலதாஸரும சேர்ந்து ஸ்ரீ தாதூஜீ அவர்கள் மார்க்கத்தை (சம்பிரதாயத்தை) மிகப் பிரகாசப்படுத்தினர்.

ஸ்ரீ நிச்சலதாஸருக்குச் சம்பிரதாயத்தின் அபிமான மிருந்ததில்லை. அவர் பெரிய நிரபிமானியாயிருந்தார். பாலியாவஸ்தையிற்றும சாதுத்தையிலேயே யிருந்தனர். அதில் பெருத்த வித்தியாப்பியாசத்தைச் செய்து, பின்னர்ப் பெரும்பாலும் பிரஹ்மசிந்தனத்திலேயே அமிழ்ந்தியிருப்பர். விக்கிரமசகம் ௧௯௨0-ல் டில்லிப்பட்டணத்தில தேகவியோக மெய்தினர். அவருக்கு ஸ்ரீ கிஹடோலியில் யிரண்டு விசாரசாகரம சமாப்தியடைந்ததோ ஆண்டுக் குருசம்பிரதாயமுமிருக்கின்றது.இப்போதும அங்குஅவர்சிஷ்யர்களு மிருக்கின்றார்கள். இம்மகாத்மாவின் சரித்திரம சம்பூரணமாய்க் கிடைக்குமாயின் அப்போது விஸ்தாரமாய் எழுதிப் பிரசுரிக்கப்படும்.

---

பரோபகாரத்தையே தமக் கங்கமாகக் கொண்டொழுகிய ம-ா-ா-ஸ்ரீ சை. ரத்நசெட்டியார் அவர்கள் ஜீவர்கள் சம்சய விபரீதங்க ளொழிந்து நிரதிசயாநந்த முறுதற்பொருட்டு இந்நூலை அச்சியற்றி வெளிப்படுத்த வேண்டுமென்றெண்ணி முயன்றவாறு முடிவுபெறச்செய்த ஈசனாகிய எமபெருமான் இந்நூல் இநநிலவுலகில் என்று நிலைபெறும்படி அருள்புரிவாராக.

தஞ்சை - வெ - குப்புஸ்வாமி ராஜு.

## ஸ்ரீ விருத்திப்பிரபாகரத்தின் அநுக்கிரமணிகை.

## உருஎ - உருகூ. திருஷ்டி சிருஷ்டி சிருஷ்டி திருஷ்டி வாதங்களின் பேதம்.



## உருகூ - உசாசா மித்தியாப்பிரபஞ்சத்தின் மித்தியாத்தன்மையின் சங்கை சமாதானம்.

விருத்திப்பிரபாகரத்தின் அநுக்கிரமணிகை

முடிந்தது.

ஓம்.

தத்ஸத் ப்ரஹ்மணே நம:.

# விருத்திப் பிரபாகரம்.

## முதற்பிரகாசம்.

## பிரத்தியக்ஷப்பிரமாண நிரூபணம்.

### மங்கலம்.

*சத்திய ஞானா நந்தத் தனிப்பெருஞ் சுடரே மேலாந்*
*தத்துவ முணர்த்து மாறு சங்கரா சார்ய னென்னு*
*மெய்த்தனிப் பெயர்பூண் டிந்த மேதினி தன்னில் வந்த*
*தத்தகு பொருளை யாமு மநுதினஞ் சிந்தை செய்வாம்.*

### நூல் வரலாறு.

*பெருத்த மாயை யழியவெய்தும் பேரின் பமியான் பிரமமெனும்*
*விருத்தி யதனாற் பெறுவதென வேதம் விளம்பு மதனாலவ்*
*விருத்தி ஹேது பயன்யாதென் வினாவின் விடையாத் தமிழ்மொழியில்*
*விருத்திப் பிரபா கரமெனுநூல் விளம்பப் படுமால் விளக்கமுற.*

அகம் * பிரஹ்மாஸ்மி (யான்பிரஹ்மம்)என்னும் விருத்தியால் காரியத்தோடு அஞ்ஞானத்தின் நிவிர்த்தியும், பரமாநந்தப் பிராப்தியு முண்டாகின்றன வென்பது வேதாந்த சித்தாந்தம். ஆண்டு, விருத்தியென்பது யாது? அதன் காரணம் யாது? அதன் பிரயோஜனம் யாது என்றிவ்வாறு அறியும் வேட்கை யுண்டாக, அக்காரணமாய் இவ் "விருத்திப்பிரபாகரம்" என்னும் நூல் சொல்லப்படுகின்றது.

## க. விருத்தியின் சாமானியலக்ஷணமும் பேதமும்.

அந்தக்கரண அஞ்ஞானங்களின் பரிணாமம் விருத்தியெனப்படும். குரோதம் சுகம் முதலியன அந்தக்கரணத்தின் பரிணாமமாக

---

* இந்நூலில் யாண்டும் 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌂 - ப்ரஹ்மம் என்னும் பதத்திற்குப் பிரஹ்மம் என்றும், 𑌬𑍍𑌰𑌮𑌂 - ப்ரமம் என்னும் பதத்திற்குப் பிரமம் என்றும், 𑌬𑍍𑌰𑌮𑌾 - ப்ரமா என்னும் பதத்திற்குப் பிரமை யென்றும் வழங்கப்படும்.

வும், ஆகாயாதிகள் அஞ்ஞானத்தின் பரிணமமாகவு மிருக்கின்றன; என்றாலும் அவற்றை விருத்தியென்று சொல்லுவ தில்லை. விஷய த்தை விளக்கும் அந்தக்கரண அஞ்ஞானங்களின் பரிணமம் எது வோ, அது விருத்தி யெனப்படும். குரோதம் சுகம் முதலிய வடிவின வாகிய அந்தக்கரண பரிணமங்களால் எப்பொருளின் விளக்கமு முண்டாகிறதில்லை. அவ்வாறே, ஆகாய முதலியவற்றாலும் விளக்க முண்டாகிறதில்லை. ஆதலால் அவை விருத்தி யன்று; ஞானரூப பரிணமத்தால் விளக்க முண்டாகின்றதாகலின், அதனையே விரு த்தி யென்பர். சுகம், துக்கம், காமம், திருப்தி, குரோதம், பொறை, தைரியம், அதைரியம், நாணம், பயமுதலிய எத்துணை அந்தக்கரண பரிணம முளவோ, அவையனைத்தும் அநேக விடங் களில் விருத்தியென்னுஞ் சொல்லால் விவகரிக்கப்பட்டிருக்கின் றன; என்றாலும் "தத்துவாநுசந்தானம்" "அத்துவைதகௌஸ்துபம்" முதலிய நூல்களில் விளக்க பரிணமமே விருத்தியெனப் பட்டது. ஆகலின் மாயை யந்தக்கரணங்களின் ஞானரூப பரிணமமே விரு த்தியென்னுஞ் சொல்லிற்கு அத்துவைத மதத்தில் பாரிபாஷிகப் பொருளாம்,

அவ்விருத்தி ஞானமும் பிரமைவடிவினது, அப்பிரமை வடிவி னது என இருவகைத்தாம். பிரமாண ஜந்நிய (அளவையாற் றோன் றிய) ஞானத்தைப் பிரமை யென்பர்; அதனின் வேறாயதை அப் பிரமை யென்பர். பிரமை ஞானம் யதார்த்தமேயாம். அப்பிரமை ஞானம் இருவகையாம்:—ஒன்று யதார்த்தம், மற்றையது பிரமம் (ஐ.உ௦). தோஷத்தாற் றோன்றியதனைப் பிரம மென்பர். தோஷத் தாற் றோன்றிய தாகாது, இந்திரிய வநுமான முதலிய பிரமாண ங்களாலேனும் வேறு எக்காரணங்களாலேனும் முண்டாவதெது வோ, அது யதார்த்த மெனப்படும. சுத்தியில் இரசத ஞானம் சாதி ருசிய (ஒப்புமைத்) தோஷத்தாற் றோன்றியதாகலின் பிரம (ஐ உ) மாம். கற்கண்டில் கைப்புணர்வு பித்த தோஷத்தாலாயது; சந்திர னிடத்து இலகுத் தன்மையின் ஞானமும், அநேக விருக்ஷங்களி னிடத்து ஒருமை யுணர்ச்சியும் சேய்மைத் தோஷத்தா லாகியன வாம்; ஆதலால் அவை பிரமமாம். விசாரசாகரத்தில் தோஷம் அத்தியாச வேதுவாகாதெனக் கண்டிக்கப்பட்டுள்ளது. அதனபிப் பிராயம் இதுவாம்:—பிரமா பிரமாணம் பிரமேயமென்னும் மூன்று தோஷமும் அத்தியாசத்திற் கேது வல்ல; யாதேனுமோர் தோஷ

மிருந்தால் அத்தியாச முண்டாகு மென்பதாம். எத்தோஷங்களு மின்றி யத்தியாச முண்டாமெனக் கூறியது * பிரௌடிவாதத் தாற் கூறியதாம். யாண்டு வேறெத்தோஷமு மில்லையோ, ஆண்டு அவித்தையே தோஷமாம். ஆதலால் தோஷத்தாற் றோன்றியதனை யே பிரமமென்பர்.

ஸ்மிருதி ஞானமும், சுக துக்கங்களின் பிரத்தியக்ஷ ஞான மும், ஈசுவர விருத்தி ஞானமும் தோஷத்தாற் றோன்றியவன் றாக லின் பிரமமும் அன்று; பிரமாண ஜந்நிய மன்றாகலின் பிரமையும் அன்று; பிரமப் பிரமைகளின் வேறாம்; ஆனால் யதார்த்தமாம். ஏனெனின்; எவ்வுணர்ச்சியின் விடயத்திற்குச் சம்சார காலத்தில் ¶ பாத (வாய) மாதலில்லையோ, அது யதார்த்த மெனப்படுதலால்.

ஸ்மிருதி ஞானத்திற் கேது சம்ஸ்கார வாயிலாகப் பூர்வ அநு பவமாம். யாண்டு யதார்த்த அநுபவத்தால் ஸ்மிருதி யுண்டாகின் றதோ, ஆண்டு ஸ்மிருதி யதார்த்தம்; பிரமவடிவ அநுபவத்தின் சம்ஸ்காரத்தாலுண்டாகும் ஸ்மிருதி அயதார்த்தமாம்.

தர்ம முதலிய நிமித்தத்தால் அநுகூலப் பிரதிகூல பதார்த்த ங்களின் சம்பந்த முண்டாதலின், அந்தக்கரணத்தின் சத்துவகுண இரஜோ குணங்களின் பரிணாமமாகிய சுக துக்கங்க ளுண்டாகின் றன; சுக துக்கங்களுக்கு நிமித்தம் யாதோ, அந் நிமித்தத்தானே சுக துக்கங்களை விஷயஞ் செய்யும் அந்தக்கரண விருத்தியு முண் டாகின்றது. அவ் விருத்தியில் ஆரூட (ஏறியுள்ள) சாட்சி சுக துக் கங்களை விளக்குகின்றது. சுகாகார துக்காகார அந்தக்கரண விரு த்தி பிரமாணஜந்நிய மன்று; அதனால் பிரமை யன்று.

ஈசனது இச்சா ஞானக் கிரியைகள் நியாயமதத்திலோ நித் தியமாம. ஆனால் சுருதியில் ஈசுவரனது ஞான முதலியவற்றிற்கு உற்பத்தி கூறப்பட்டிருத்தலால் நித்திய மன்று. ஆனால் பிராணி களது கர்மாநுசாரமாகச் சிருஷ்டியின் ஆதிகாலத்தில் சருவ பதார்த்தங்களையும் விஷயஞ் செய்யும் ஈசுவரனது ஞானம் உண்டா யிருக்கின்றது. அந்த ஞானம் பூத பவிஷ்யத வர்த்தமான கால த்துச் சகல பதார்த்தங்களின் சாமாந்திய விசேஷத் தன்மைகளை யும் விஷயஞ் செய்கின்றது; பிரளய பரியந்தம் நிற்பதாயு மிரு

* பிரௌடி - தனது மேன்மையின்பொருட்டு, வாதம் - சொல்லுதல் பிரௌடி வாதமாம்.

¶ பாதம் - மித்தியாத்துவ நிச்சயம் (பொய்யெனத்துணிதல்).

க்கின்றது. ஆதலால் அந்த ஞானத்தை ஏகமென்றும் நித்திய மென்றும் கூறுவர். அங்ஙனமே இச்சையும் கிரியையும் உற்பத்தி யுடையனவும் நிலையுள்ளனவுமாம். ஆதலால் பிரளய பரியந்தம் ஒவ்வொரு*வியக்தியிருக்கின்றது. இதன்கண் "ஈசுவரனது இச்சை பிரளயபரியந்தம் நிற்பதாகுமாயின் மழை வெயில் குளிர் என்பன ஈசுவரனதிச்சையால் உண்டாகின்றன வாகலின், பிரளய பரியந்தம் மழை, அங்ஙனமே வெயில், அல்லது குளிர் என்பன உண்டாதல் வேண்டும்" எனச் சங்கை யுண்டாயின், அச்சங்கை பொருந்தாது. ஏனெனின், ஈசுவரனது இச்சையாகிய வியக்தி நாநாவாயும் நித்திய மாயு மிருக்குமாயின், அப்போது இத்தோஷ முண்டாம். அவ்வீசு வரனது பிரளய பரியந்தம் நிற்கும் இச்சையாகிய வியக்தி நாநா வன்று; ஏகமாம். அவ்வொரு இச்சை சகல பதார்த்தங்களையும் எவ் வகையாக விஷயஞ் செய்கின்றதோ, அவ்வகையாக அவை யுண்டா கின்றன. "இவ்வளவு காலம் மழை யுண்டாகுக, இவ்வளவுகாலம் குளிருண்டாகுக, இவ்வளவு காலம வெயிலுண்டாகுக." என் றிவ் வாறு ஈசுவரனது இச்சை பதார்த்தங்களை விஷயஞ் செய்கின்றது. ஆதலால் சகல பதார்த்தங்களும் ஓர் காலத்தி லுண்டாகின்றன. பிரளய பரியந்தம் நிற்கும இச்சை யொன்றுமென்னும் இப்பக்ஷத் தில் தோஷமின்று. சுருதியில் இச்சா ஞானக் கிரியைகளுக்கு உற் பத்தி சொல்லப்பட் டிருக்கின்றது. ஆதலால் ஞான முதலியன உற்பத்தி யுடையனவாய் ஆகாயத்தைப்போல 'மகாப்பிரளய பரி யந்தம் நிற்பனவாம். ஒருவன் ஈசனது ஞானத்திற்குப் பிரபஞ்ச ஸ்திதி காலத்தில் அநேகமுறை உற்பத்தி நாச மொப்புவானாயின், அவனை ஈசுவரனிடதது ஏதோ ஓர ஞானவியக்தி பிரபஞ்சததின் ஸ்திதிகாலத்தில் எப்போதும் பொருந்தி யிருக்கின்றதா? அல்லது பிரபஞ்சமிருக்க ஓர்காலத்தில் ஞானமின்றிய ஈசுவர னிருக்கின் றனா? என்று இவ்வாறு வினவுவாம். ஞானமின்றிய ஈசுவரன் ஓர் காலத்தி லிருக்கின்றா னெனின், அக்காலத்து ஈசுவரன் அஞ்ஞ னவன். ஓர் ஞானவியக்தி ஈசுவரனிடத்து என்றுமுளதெனின், அந ந்த ஞானத்திற்கு அநந்த உற்பத்தி அநந்த நாச மொப்புதல் நிஷ் பலமாம. ஒரு ஞானமே சிருஷ்டியின் ஆதிகாலத்தி லுண்டாய் மகாப்பிரளய பரியந்தம் நிற்பதா யிருக்கின்றது. அவ்வீசுவரனது இச்சா ஞானக் கிரியைகள் விசம்வாதி யன்று; சம்வாதியாம். நிஷ்

* சாதிக்கு ஆசிரயமா யுள்ளது வியக்தி.

பலப் பிரவிருத்தியைப் பிறப்பிக்கும் இச்சை முதலியன விசம்வாதி யெனப்படும்; அதனின் வேறுயவை சம்வாதி யெனப்படும். ஜீவனது இச்சா ஞானக் கிரியைகள் சம்வாதி விசம்வாதியென இருவகையாம். ஈசுவரனது இச்சா ஞானக் கிரியைகள் நிஷ்பலப் பிரவிருத்தியை யுண்டுபண்ணுவன வாகாமையின், விசம்வாதியன்று; சம்வாதியாம். விசம்வாதி ஞானத்தைப் பிரமமென்பர், சம்வாதி ஞானத்தை யதார்த்த மென்பர். பிரமாண ஜந்நிய யதார்த்த ஞானத்தைப் பிரமை யென்பர். சீவனது ஞானம் அந்தக்கரண விருத்தி வடிவமாம்; அதுபோல் ஈசுவரனது ஞானம் மாயையின் விருத்தி வடிவமாம்; சீவர்களது அதிருஷ்டத்தாற் றோன்றியதாம்; பிரமாண ஜந்நியமன்று. ஆகலின் பிரமையன்று; தோஷத்தாற் றோன்றியது மன்று; நிஷ்பலப் பிரவிருத்தியை யுண்டுபண்ணுவது மன்று; ஆகலின் பிரமமுமன்று; யதார்த்தமாம். பிரமாண ஜந்நிய ஞானத்தைப் பிரமை யென்பர்.

## உ. பிரமாணபேதம்.

பிரமாணம்: பிரத்தியக்ஷம், அநுமானம், சப்தம், உவமானம், அருத்தாபத்தி, அநுபலப்தி யென ஆறும். பிரத்தியக்ஷப் பிரமையின் கரணமெதுவோ, அது பிரத்தியக்ஷப் பிரமாணமெனப்படும். அநுமிதிப் பிரமையின் கரணத்தை அநுமானப் பிரமாணமென்பர்; சாப்திப் பிரமையின் கரணத்தைச் சப்தப்பிரமாண மென்பர்; உவமிதிப் பிரமையின் கரணத்தை உவமானப் பிரமாண மென்பர்; அருத்தாபத்திப் பிரமையின் கரணத்தை அருத்தாபத்திப் பிரமாணமென்பர்; அபாவப் பிரமையின் கரணத்தை அநுபலப்திப் பிரமாண மென்பர். பிரத்தியக்ஷ அருத்தாபத்திப் பிரமாணங்களுக்கும் பிரமைகளுக்கும் பெயர் ஒன்றேயாம். பட்டர் மதத்தில் ஆறு பிரமாணங்கள் அங்கீகரிக்கப்பட் டிருக்கின்றன. வேதாந்த நூற்களிலும் ஆறு பிரமாணங்களே எழுதப்பட்டிருக்கின்றன. * சூத்திரகார பாஷியகாரர்கள் பிரமாண சங்கையை எழுதாவிடினும் சித்தாந்தத்திற்கு விரோதமின்றிய பட்டர் மதத்தினை அத்வைத வாதத்தில் அங்கீகரித்திருக்கின்றனர். ஆதலால் வேதாந்த பரிபாஷை முதலிய நூல்களில் ஆறு பிரமாணங்களே எழுதப்பட்டிருக்கின்றன

---

* சூத்திரகாரர் - வியாசர். பாஷியகாரர் - சங்கரபகவத்பாதர்.

## ௩. கரணலக்ஷணம்.

நியாய சாஸ்திரத்தில் நான்கு பிரமாணங்களை அங்கீகரித்திருக்கின்றனர். அருத்தாபத்தி யநுபலப்திகளை யங்கீகரிக்கவில்லை. ஆண்டு நியாய சாஸ்திரத்தின் மதம் இதுவாம்:—பிரமையின் கரணம் பிரமாண மெனப்படும். பிரத்தியக்ஷப் பிரமையின் கரணம் நேத்திர முதலிய இந்திரியங்களாம். ஆகலின் நேத்திராதி இந்திரியங்களைப் பிரத்தியக்ஷப் பிரமாண மென்பர். வியாபாரமுடைய அசாதாரண காரணம கரணமெனப்படும், ஈசுவரன், அவனது இச்சை, ஞானம், கிரியை, திக்கு, காலம், அதிருஷ்டம், பிராகபாவம், பிரதிபந்தகாபாவமென்னு மிவையொன்பதும் சாதாரண காரணமாம்; இவற்றிற்கு வேறுய காரணம் அசாதாரண காரண மெனப்படும். அசாதாரண காரணமும வியாபாரமுடையது, வியாபார மின்றியதென இருவகையாம். காரணத்திற் றேன்றிக் காரியத்தைத் தோற்றுவிப்ப தெதுவோ அது வியாபார மெனப்படும். எங்ஙனம்:— கபாலம் கடத்திற்குக் காரணம். கபால மிரண்டின் சையோகமும் கடத்திற்குக் காரணம். ஆண்டுக் கபாலங் காரணமாதலிற் சையோகம் வியாபாரமாம். ஏனெனின், கபால சையோகம் கபாலத்திற் றேன்றிக் கபாலத்தின் காரியமாகிய கடத்தைத் தோற்றுவிக்கின்றது. ஆகலின் சையோகரூப வியாபாரமுடைய காரணம் கபாலமாம். காரியத்தை ஒன்றன் வாயிலாகத் தோற்றுவியாது தானே தோற்றுவிப்பது எதுவோ, அது வியாபாரமின்றிய காரண மெனப்படும். ஈசுவரன் முதலிய ஒன்பது சாதாரண காரணங்களுக்கும் வேறுகிய வியாபாரமுடைய காரணம கரண மெனப்படும. அத்தன்மையது கபாலமாம. ஆகலின் கடத்திற்குக் கபாலம் கரணமெனப்படும. கபாலத்தின் சையோகம் அசாதாரணமாயினும், வியாபார முடையதன்று. ஆகலின் கரணமெனப்படாது, கேவலம் காரணமென்றே சொல்லப்படும்.

## ௪. பிரத்தியக்ஷப் பிரமையின் பேதம்.

அங்ஙனமே பிரத்தியக்ஷப் பிரமைக்கு நேததிர முதலிய இந்திரியங்கள் கரணமாம். ஏனெனின், நேத்திர முதலிய இந்திரியங்களுக்குத் தத்தம் விஷயங்களோடு சம்பநதமுண்டாகாவிடின் பிரத்தியக்ஷப் பிரமை யுண்டாகிறதில்லை. இநதிரிய விஷய சம்பந்தமுண்டாகும்போ துண்டாகின்றது. ஆகலின் இநதிரிய விடயங்

களின் சம்பந்தம் இந்திரியத்திற் றோன்றிப் பிரத்தியக்ஷப் பிரமையைத் தோற்றுவித்தலால் வியாபாரமாம். சம்பந்தரூப வியாபாரமுடைய பிரத்தியக்ஷப் பிரமையின் அசாதாரணகாரணம் இந்திரியமாகலின் இந்திரியங்களைப் பிரத்தியக்ஷப் பிரமாண மென்பர். இந்திரியத்தாற் றோன்றிய யதார்த்த ஞானத்தை நியாயமதத்திற் பிரத்தியக்ஷப் பிரமை யென்பர். பிரத்தியக்ஷப் பிரமையின் கரணமாகிய இந்திரியம் ஆறாயிருத்தலின் பிரத்தியக்ஷப் பிரமையும் அறுவகையாம். சுரோத்திரம், துவக்கு, நேத்திரம், இரசனை, கிராணம், மனமென்னும் ஆறும் இந்திரியங்களாம். சுரோத்திர ஜந்நிய யதார்த்த ஞானம் சுரோத்திரப் பிரமையாம். துவக் கிந்திரியத்தாற் றோன்றிய யதார்த்த ஞானம் துவாசப் பிரமையாம். நேத்திரேந்திரியத்தாற் றோன்றிய யதார்த்தஞானம் சாக்ஷுஷப்பிரமையாம். இரசனேந்திரியத்தாற் றோன்றிய யதார்த்தஞானம் இராசனப் பிரமையாம். கிராணேந்திரியத்தாற் றோன்றிய யதார்த்த ஞானம் கிராணஜப்பிரமை யாம். மன இந்திரியத்தாற் றோன்றிய யதார்த்த ஞானம் மானசப் பிரமையாம். நியாயமதத்தில் சுத்தி ரஜித முதலிய பிரமமும் இந்திரிய ஜந்நியமாம் ஆனால் கேவல இந்திரிய ஜந்நியமன்று; தோஷத்தோடு கூடிய இந்திரிய ஜந்நியமாம். விசம்வாதியாம்; யதார்த்தமன்று. ஆகலின் சுத்தியில் இரசதஞானம் சாக்ஷுஷ ஞானமாயினும் சாக்ஷுஷப் பிரமையன்று. இவ்வாறு மற்ற இந்திரியத்தாலு முண்டாகும் பிரமம் யாதோ, அது பிரமையன்று.

## ரு. பிரத்தியக்ஷப் பிரமையின் சுரோத்திரஜப் பிரமையின் நிருபணம்.

சுரோத்திரேந்திரியத்தால் சத்தத்தின் ஞானமும், சத்தத்திலுள்ள சத்தத்தன்மைச் சாதியின் ஞானமு முண்டாகின்றன. அவ்வாறே சத்தத்தன்மையின் வியாப்பியமான ககரத்துவ(ககரத்தன்மை) முதலியவற்றின் ஞானமும்*தாரத்துவ முதலியவற்றின் ஞானமு முண்டாகின்றன; அங்ஙனமே சப்தாபாவத்தின் ஞானமும் சப்தத்தில் தாரத்தன்மை முதலியவற்றின் அபாவ ஞானமு முண்டாகின்றன. சுரோத்திரேந்திரியத்தால் எதன் ஞான முண்டாகின்ற

* தாரம் - உச்சஸ்வரம்.

தோ, அவ்விடயத்தோடு சுரோத்திரேந்திரியத்திற்குச் சம்பந்தஞ் சொல்லவேண்டியதாகலின் சம்பந்தம் சொல்லப்படுகின்றது. நியாய மதத்தில் நான்கிந்திரியங்களுமோ முறையே வாயு, அக்கினி, ஜலம், பிருதிவி யென்பவற்றினின்றும் உண்டாயின. சுரோத்திரமும் மனமும் நித்தியமாம். கர்ணகோளகத்திலுள்ள ஆகாயத்தைச் சுரோத்திர மென்பர். வாயு முதலியவற்றினின்றும் துவக்கு முதலியன உண்டாயிருப்பதுபோல ஆகாயத்தினின்றும் சுரோத்திரமுண்டாயிருக்கின்றதெனநையாயிகர் கொள்ளார். கர்ணத்திலுள்ள ஆகாயமெதுவோ, அதனையே சுரோத்திரமென்பர். குணத்திற்குக் குணியோடு சமவாய சம்பந்தங் கூறுவர். சத்தம் ஆகாயத்தின் குணமாம். ஆதலால் ஆகாய வடிவமாகிய சுரோத்திரத்தோடு சத்தத்திற்குச் சமவாய சம்பந்த முண்டு. பேரிமுதலிய விடங்களிலுள்ள ஆகாயத்தில் சத்த முண்டாகின்றது. கர்ண உபகித (காதில் வளைப்பட்ட) ஆகாயத்தைச சுரோத்திர மென்பராகலின், பேரி முதலியவற்றான் உபகித ஆகாயத்தில் சப்தத்தின் சம்பந்த முளது. கர்ண உபகித ஆகாயத்திலில்லை; என்றாலும் பேரிதண்டங்களின் சையோகத்தால் பேரியுபகித ஆகாயத்தில் சப்த முண்டாகின்றது. அதற்குக் காண உபகித ஆகாயத்தோடு சம்பந்த மில்லை யாகலின் பிரத்தியக்ஷமாகிறதில்லை. ஆனல் அச் சப்தத்தினின்றும் வேறு சப்தங்கள் பதது திசைகளான் உபகிதமாய ஆகாயத்தில் உண்டாகின்றன. அவற்றினின்றும் வேறு (சத்தங்கள்) உண்டாகின்றன. காணஉபகித ஆகாயததி லுண்டாகும் சத்தத்தின் பிரத்தியக்ஷ ஞான முண்டாகுமே யன்றிப் பிறவற்றின் ஞான முண்டாவதில்லை. சத்தத்தின் பிரததியக்ஷப் பிரமை பலம. சுரோத்திரேந்திரியம் கரணம. துவாச முதலிய பிரத்தியக்ஷ ஞானத்திலோ சகல விஷயங்களுக்கும் இநதிரியத்தோடுள்ள சமபநதமே வியாபாரமாம். சுரோத்திரப் பிரமையில விஷயத்தோடு இநதிரியத்திற்குள்ள வியாபாரம் சம்பநதமாதல இல்லை. ஏனெனின் பிறவிடங்களில் விடயங்களுக்கு இநதிரியங்களோடு சையோக சம்பந்தமுளது. சத்தததிற்குச் சுரோததிரத்தோடு சமவாய சம்பந்தமுளது. நியாய மதததில் சையோகம் ஜநநியமாம, சமவாயம நித்தியமாம். துவக்கு முதலிய இந்திரியங்களுக்குக் கடாதிகளோடுள்ள சையோக சம்பந்தம் துவக்கு முதலிய இநதிரியங்களினின்றுந் தோற்றிப் பிரமையை யுண்டாக்குகின்றமையால் வியாபாரமாம். அவ்வாறு

விசாரதற்பரரும் பிரபஞ்சோபரதரும ஸ்ரீ நிச்சலதாசர் மாணுக்கரு மாகிய ஸ்வாமி திரிலோகராம்ஜீ என்பவா பிரயாசையுடன் இநநூல் முழுவதையும சுத்தமாயெழுதுவிதது மும்பயி(பம்பாய்)நகாக் கெழுநதருளிஅங்குப்பதிப்பித்து,பண்டிதபீதாமபரா முதலிய சற்சனர் களுக்குச செவ்வையாய்ச சிரவணஞ் செய்வித்து, விக்கிரமசகம் ௧௯௨௫-ல் அஙகிருநதுபுறப்பட்டு மகிமண்டனததில வசிததுக்கொண்டிருநதனா.வெகுகாலததிறகுப்பினனாப் பிரஹ்மநிஷ்டபண்டித ஸ்ரீபீதாமபரஜீ அவாகள் இதனைச்செவ்வையாய்ப்பரிசோதித்து சில முக்கியப் பிரசங்கங்களும்,அநேக மததியப்பிரசஙகஙகளுமாகப்பிரிதது அமைததுக்கொடுகக அவ்வாறேபதிப்பிக்கப்பட்டுளது.விசார சாகரம விருத்திப்பிரபாகரமென்னும் இரண்டனையும செவ்வையாய் ஆய்ந்துணாநதோா பிரஹ்மசூததிர பாஷ்ய முதல ஸ்ரீ அப்பய தீக்ஷிதஸ்வாமிகளாலியறறப்பட்ட சிததாநதலேசமுதலிய அதவைத நூல்களையும நியாய முதலிய ஏனைய நூல்களிற பலவற்றையும் பல நாள் முயன்று கற்பதனுலாமபயனை எளிதிற் பெறுவதோடு நல்லாசிரியா வாயிலாகக் கேட்டலால் நிரதிசயாநநததததையு முறுவரென்பது திண்ணம.

ஆனல இநநூலகள பிறமொழியிலிருநதலால இத்தமிழ்நாட்டாருககுபயோகமாகாதிருத்தல்கண்டு,அவறறைததமிழ்நாட்டாருக்குபயோகமாகவுவிப்பான முயன்றகாலததது,அவற்றுள் முன்னையதாகிய விசாரசாகர மென்னும நூல் முன்னமே தமிழில மொழிபெயாக்கப்பட்டிருநததலின, அதனைவிட்டுப பின்னையதாகிய இவ்விருத்திப்பிரபாகரமெனனு நூலு மொழிபெயாக்கப்பட்டது. இநநூலாசிரியா இவ்வரிய நூலை மிக வெளிய நடையில் வசனரூபமாக எழுதியிருத்தல்பற்றி அவ்வாறே இங்கும யாவரும எளிதி லுணருமாறு இஃது எளிய தமிழ்நடையில் மொழிபெயாக்கலாயிற்று. இதனைக கண்ணுறும நல்லோரா யாரும் பிரமாததததா லேறபடும எழுததுப்பிழை சொற்பிழை முதலியவற்றைக் கருதாது, இவ்வரிய பொருள் வெளிப்பட நோந்த திருவருடபாஙகை நோக்கி யெமது குறறத்தைப் பொறுத்தருள்வாராக.

பிரததியக்ஷ முதல அறுவகைப் பாகியம சுகமுதலியவறறைக் கோசரிக்கும ஆந்தரம ஈசுவராசிரிதம் என்னும வேறுபாட்டால் எண்வகைப் பிரமா விருததியும, சம்சயம் பிரமம தாக்கம் சொப்பனப் பிரமவிருத்தி அயதார்த்த ஸ்மிருதி யென்னும்

வேறுபாட்டால் மூவகை அயதார்த்த அப்பிரமா விருத்தியும், யதார்த்த ஸ்மிருதி யென்னும் யதார்த்த அப்பிரமையுமாய இவை விருத்திஞானவடிவ பதின்மூன்று இரத்தினங்கள். இவற்றை இந்நூல் சூரியன்போல் விளக்குவதா யிருத்தலின் இதற்கு விருத்திப்பிரபாகர மென்றும், இதன் எட்டுப்பிரகரணங்களுக்கும் பிரகாசமென்றும் பெயரிடப்பட்டது. இதன்கண் உள்ள விஷயங்களை இதன் அநுக்கிரமணிகையினால் தெரிந்துகொள்ளலாம்.

இந்நூலாசிரியர் ஸ்ரீ நிச்சலதாஸர் சரித்திர முழுவதனையும் எழுதுவதற்குத்தக்க ஆதாரம் அகப்படாமையின் ஈண்டுச் சிறிது வரையப்படுகின்றது:—

ஸ்ரீ நிச்சலதாஸரது ஜன்மகாலமும் இடமும் அறியப்படவில்லை. வித்தியாப்பியாசத்தில் இவருக்கு மிக்க விசுவாசமிருந்தது. 14 வது வருஷமுதல் 70-வது வருஷபரியந்தம் வித்தியாப்பியாசத்திலேயே காலத்தைக் கழித்தனர். அது விசாரசாகரத்தின் 526 வது பிரசங்கத்தில் வாணிக்கப்பட்டிருக்கின்றது. இத்தகைய அப்பியாச முடையோர் இக்காலத்து அரிதாய்க் காணப்படுகின்றனர். விசாரசாகரத்தினானே அவரது அற்புத நிஷ்டை அநுமிக்கற்பாற்று. என்னை, சித்தாந்தக்கூற்றெதனையும் ஓரிடத்தும் ஒளித்துக் கூறினாரில்லை; அன்றியும் மோக்ஷ காமருக்கு நிஷ்டை கூடுதற்றன்மையினையும் செவ்வனே அதன்கண் அமைத்திருக்கின்றனராகலின்.

அவர் வியவகாரம் மிக உத்தமமானதும் சங்கை யில்லாததுமாயிருந்தது. சிலர் ஞானித்தன்மை யபிமானத்தைக் கொண்டு தேகாபிமான முதலியவற்றில் அமிழ்ந்திருக்கின்றனர். அவ்வாறு இம்மகாத்ம புருஷ ரிருந்தாரில்லை. மகாவிரக்த நிலையினை யுடையராய்ப் பெருத்த பிரஹ்ம நிஷ்டராயிருந்தனர். பிரஹ்மாகார விருத்தியிலேயே எப்போதும் மூழ்கி யிருப்பர்.

நியாய வியாகரண முதலியன புத்தியைத் தீவிரமாக்குகின்றன. தீவிரபுத்தி வேதாந்தத்தில் உபயோகமாம். அங்ஙனமாயினும் அதிகமாய்ப் படித்தலால் அவை அநாதமாவின் (துவைதத்தின்) கண் புத்தியைச் சேர்ப்பித்து மதியை மலினமாக்கிவிடும் என்று கூறுவர். அதாவது நூறு மடங்கு வேதாந்தத்தை விசாரித்தால் அப்போது நியாயத்தாற் றாக்ஷிக்கப்பட்ட புத்தி சாந்தியை யடையும் என்று முதியோர் மொழிவர். ஸ்ரீ நிச்சலதாஸர்

வியாகரணம் ந்யாய முதலியவற்றில் மிக்கச் சமர்த்தராயினும் அவருக்கு வேதாந்தத்தின்கண்ணே பிரபலநிஷ்டை யிருந்தது.

தாம் சிற்சிலருக்கு நியாயாதி சாஸ்திரங்களைப் படிப்பித்துக் கொண்டிருப்பர். அங்கு எவரேனும் காலையில் நியாய முதலியவற்றைப் படிக்க வருவரேல், அவர்களைப் படிப்பிக்காது "காலையில் யாம் அநர்த்தப்பிரதிபாதக நூல்களைப் படிப்பியேம்" என்று பகர்வர்.

இத்திருஷ்டாந்தங்களால் நிச்சலதாஸர் அற்புத நிஷ்டையுடையவரா யிருந்தனரென்பது பெறப்பட்டதாகின்றது.

ஸ்ரீநிச்சலதாஸரது பாண்டித்தியம் மிக வற்புதமானதென்பது அவரது அப்பியாசத்தினாலே பெறப்படுகின்றது. விருத்திப் பிரபாகர நூலைப்பார்த்துப் பெரியபெரிய வித்துவான்களும் அவரது பாண்டித்தியத்தைப் புகழ்கின்றார்கள். அதிகமாய்ச் சொல்லுவதினாலென்னை? அவர் காலத்திலும் இப்போதும் சாது புருஷர்களில் பரிபக்குவ வித்தையினையுடைய பண்டிதர் ஸ்ரீநிச்சலதாஸருக்குச் சமானமானவர் ஒருவரும் இல்லை.

ஸ்ரீநிச்சலதாஸர் பிருதிவியின்கண் யாண்டுச் சரித்துக்கொண்டிருந்தனரோ, ஆண்டுத் தினந்தோறும் வேதாந்த சாஸ்திரத்தின் கதை செய்துகொண்டிருப்பர். விசாரசாகரத்தையும் தாம் அநேகமுறை கதை செய்திருக்கின்றனர். அவர் சிரவணம் செய்வித்துக்கொண்டிருந்த விடங்கள்தோறும் சிரவணத்தின்பொருட்டு அநேக சாதுக்களின் சபைசேர்ந்து அதிரஸிக பாஷணத்தைக் கேட்டு ஆநந்த முடையராவர்.

அநேகமாய் ஸ்ரீநிச்சலதாஸர் ஸ்ரீகாசி க்ஷேத்திரத்திலேயேவசித்தனர். அங்குத் தாமும் சில சிரவணங்களிற்செல்லுவர். ஒருசமயம் ஸ்ரீகாசியில் இராமாயண கர்த்தாவின விலக்ஷணரான மஹாத்மா ஸ்ரீதுளஸிதாஸரெனபவர் கதை செய்துகொண்டிருந்த விடத்துத் தாமசென்றார். தொடர்பாட்டால் ஸ்ரீதுளஸிதாஸர் "ஈசுவரனிடத்து ஆவரண சக்தியில்லை, விக்ஷேபசக்தியுண்டு" என்றுசொல்ல அதனை ஸ்ரீநிச்சலதாஸர் கேட்டு "ஈசுவரனிடத்து இரண்டுமில்லை" என்றார். இவ்விஷயமாய்ச் சிலநேரம் வார்த்தை நடந்தது. அதன்பின் அவர் அம்மகாத்மாவின் கதைக்குப் போனாரில்லை. காரணம் யாதெனின்

நம்முடைய வார்த்தையினால் யாருக்கும் துன்பமுண்டாகலாகாது என்பதாம். ஆனால் அம்மகாத்மாவின் நிஷ்டையைப் பற்றித் தாம் புகழ்ந்து பேசுவர். அவ்வாறே துளசிதாஸரும் நிச்சலதாஸரது பாண்டித்தியத்தையும் அற்புத நிஷ்டையினையும் அடிக்கடி ஸ்துதி செய்வார். "ஈசுவரனிடத்து ஆவரணசக்தி விக்ஷேபசக்தி இரண்டுமில்லை" என்பது விசாரசாகரத்தின் 206, 207 - வது பிரசங்கங்களிற் செவ்வையாய்ப் பிரதிபாதனஞ் செய்யப்பட்டுளது. விசாரசாகர மென்னு நூலைச் செய்யுங்காலத்து எந்நூலின் சகாயமுமின்றி ஒருவர் சகசமாய் நிருபம் எழுதுவதுபோலச் செய்துமுடித்தனர். விருத்திப்பிரபாகரத்தைச் செய்யுங்காலத்தில் வேறு நூல்களைப் பார்ப்பர். அதுவும் தமது நூலைத் தோஷமின்றிய தாக்குதற்பொருட்டாம். விருத்திப்பிரபாகரத்தில் அநேக பிரமாணமுடைய நூல்களின் பிரமாணங்கள் காட்டப்பட்டன. அதன்கண் நூல்களின் தோஷமும் ஸ்பஷ்டமாகக் காட்டப்பட்டுளது. இப்போதும் சிற்சில ஸமஸ்கிருத முணர்ந்த பண்டிதர்கள் அந்நாட்டில் விருத்திப்பிரபாகரத்தை மறைவாகவைத்து வாசித்துவருவதென்னை: ஸமஸ்கிருதவுணர்ச்சி யுடையோராயிருந்தும் பாஷை நூலின் சகாயத்தைக் கொள்ளுதல் அவர்களுக்கு நாணமா யிருத்தலின் என்க. ஆனால் மிக மேன்மை யுடையதா யிருத்தலின் அதன் சகாயத்தைக் கொள்ளுகின்றனர். விருத்திப்பிரபாகரத்தில் நியாய முதலிய அநேக பாண்டித்திய மதங்கள் காட்டப்பட்டிருக்கின்றன. கடைசிப் பிரகரணத்தில் சகல மதங்களையும் கண்டித்து வேதாந்த மதத்தைப் பிரதிபாதனம் செய்திருக்கின்றனர்.

ஹிந்துஸ்தானத்தில் புந்தியென்னும் நகரத்தில் ராமசிம்மஹாராஜாவானவர் நிச்சலதாஸரை மிக்க ஆதரவோடு தம்மிடத்து வைத்திருந்தனர். இராஜா இராணி இருவரும் அவரிடம் குருபாவம் வைத்திருந்தனர். நிச்சலதாஸரது சோதனையினால் அவ்விராஜா பண்டிதபதவியை யடைந்தனர். இராஜாவானவர் ஒருகால் பெரிய பண்டிதர்களின் சபை சேர்த்திருந்தார். அதில் சாஸ்திரார்த்தங்கள் நிகழ்ந்தன. அதனை இராஜா உள்ளவாறே பரீக்ஷித்தனர். அன்று முதல் பண்டிதர்கள் யாவரும் அவ்வரசனுக்கு வித்துவானென்று பெயர்வைத்தனர். அவ்வரசன் நிச்சலதாஸரை வணங்கி "ஹிந்துஸ்தானிபாஷையில் பண்டிதர்களுக் குபயோகமாகத்தக்க வேதாந்த நூல்கள் ஒன்றுமில்லையாகலின் நாம் செய்யுமிடத்து அது சகஜமா

## சுரோத்திரஜப் பிரமையின் நிரூபணம்.

சத்தத்திற்குச் சுரோத்திரத்தோடுள்ள சமவாயசம்பந்தம் சுரோத்திர ஜந்நியமன்று; ஆதலால் வியாபாரமாகாது; சுரோத்திர மனதுகளுக்குள்ள சையோகம் வியாபாரமாம். சையோகம் இரண்டினை ஆசிரயித்திருக்கும். எவற்றை யாசிரயித்துச் சையோக மிருக்குமோ, அவ்விரண்டும் சையோகத்திற்கு உபாதான காரணமாம். சுரோத்திர மனதுகளின் சையோகத்திற்கு உபாதான காரணம சுரோத்திரம் மனமெனும் இரண்டுமாம். சுரோத்திர மனதுகளின் சையோகம் சுரோத்திரத்தாற் றோன்றிச் சுரோததிரத்தாற் றோன்றும் ஞானத்தைத் தோற்றுவிப்பதாயிருததலின் வியாபாரமாம.

இதில், சுரோத்திர மனதுகளின் சையோகம் சுரோத்திரத்தாற் றோன்றியதாயினும் எங்ஙனம் சுரோத்திர ஜநிய பிரமையை யுண்டாக்குவதாம் எனச் சங்கை நிகழுமாயின், அதற்குச் சமாதானம் வருமாறு :— ஆன்ம மனதுகளின் சையோகமோ சகல ஞானத்திற்கும் சாதாரண காரணமாம. ஆகலின் ஞானத்தின் சாமாநிய சாமக்கிரி ஆன்ம மனதுகளின் சையோகமாம். பிரத்தியக்ஷ முதலிய ஞானத்தின் விசேஷ சாமக்கிரி இநதிரிய முதலியன. வாகலின், சுரோததிர ஜநநியப் பிரத்தியக்ஷ ஞானத்திற்குமுன்னும ஆத்ம மனதுகளுக்குச் சையோக முண்டாகின்றது; அங்ஙனமே மனதிற்கும் சுரோத்திரத்திற்கும சையோகமுண்டாகின்றது. மனதிற்கும் சுரோத்திரத்திற்கும சையோக முண்டாதலின்றிச சுரோத்திர ஜந்நிய ஞானமுண்டாகிறதில்லை. ஏனெனின், அநேக இந்திரியங்களுக்குத் தத்தம விஷயங்களோடு ஒருகாலத்திற சம்பநதமுண்டாகியும் ஒருகாலத்தில் அவ்வெல்லா விஷயங்களின் ஞானமும இநதிரியங்களால் உண்டாதலில்லை. அதன்கண் இஃது ஏதுவாம:—மனதின் சையோகமுடைய இந்திரியத்திற்கு விஷயததோடு சம்பந்தமுண்டாகுங்கால் ஞானமுண்டாகின்றது. மனதோடுகூடாத இந்திரியத்திற்குத் தனது விஷயத்தோடு சமபந்தமுண்டாயினும் ஞானமுண்டாகிறதில்லை. நியாயமதத்தில் மனம பரமாணுவாகலின் ஒருகாலத்தில் அநேக இந்திரியங்களோடு மனதிற்குச் சையோகம் சம்பவிப்பதில்லை. இக்காரணத்தால் அநேக இந்திரியங்களால் ஒரேகாலத்தில் அநேக விடயங்களின் ஞானமுண்டாதலில்லை. ஞானத்திற்கு ஏது இந்திரிய ம—ஙகளின் சையோக மன்றெனின், ஒரேகாலத்தில் அநேக இநதிரியங்க — விஷயங்களோடு சம்பந்த

மூண்டாகி ஏக காலத்தில் அநேக ஞானம் உண்டாதல்வேண்டும். இவ்வாற்றால் சக்ஷுமுதலிய விந்திரியங்களுக்கு மனதோடுண்டாகுஞ் சையோகம் சாக்ஷுஷ முதலிய ஞானங்களுக்கு அசாதாரண காரணமாம். துவாச ஞானத்தில் துவக்கு மனதுகளின் சையோகம் காரணம்; இராசன ஞானத்தில் இரசனை மனதுகளின் சையோகம் காரணம; அங்ஙனமே சாக்ஷுஷஞானத்தில் நேத்திர மனதுகளின் சையோகமும், கிராணஜ ஞானத்தில் கிராண மனதுகளின் சையோகமும், சுரோத்திரஜ ஞானத்தில் சுரோத்திர மனதுகளின் சையோகமும் காரணமாம். இவ்வாற்றால் சுரோத்திரமனதுகளின் சையோகம சுரோத்திரத்திற்றோன்றிச சுரோத்திரத்திற்றோன்றும் ஞானத்தைத தோற்றுவிப்பதாயிருத்தலின் வியாபாரமாம. ஆன்ம மனதுகளின் சையோகம சகலஞானத்திறும ஏதுவாம. ஆகலின், முதலில் ஆன்ம மனதுகளின் சையோக முண்டாகி, அதன்பின் எவ்விந்திரிய ஜந்ய ஞான முண்டாகுமோ அவ்விந்திரியத்தோடு ஆத்ம சையுக்த மனதிற்குச சையோக முண்டாகின்றது; பின்னர் மனசையுக்த இந்திரியத்திற்கு விஷயத்தோடு சம்பந்த முண்டாய்ப் பாகியப் பிரத்தியக்ஷ ஞான முண்டாகின்றது. இந்திரிய விஷயங்களின் சம்பந்த மின்றிப் பாகியப் பிரத்தியக்ஷ ஞான முண்டாகிறதில்லை.

விஷயத்திற்கு இந்திரியத்தோ டுள்ள சம்பந்தம் அநேக விதம்:—யாண்டுச சுரோத்திரத்தால சப்தத்தின் பிரத்தியக்ஷஞான முண்டாகின்றதோ, ஆண்டுச சப்தமாத்திரமே சுரோத்திரஜந்ய ஞானத்திற்குவிடயமன்று; சப்தத்தின தர்மமாகிய சப்தத்தன்மை முதலியனவும் அந்த ஞானத்திற்கு விஷயமாம. சப்தத்திற்கோ சுரோத்திரத்தோடு சமவாயசம்பந்த முளது, சப்தத்தின் தர்மமாகிய சத்தத்தன்மை முதலியவற்றோடு சுரோத்திரத்திற்குச் சமவேத சமவாயசம்பந்த முளது. ஏனெனின், குண குணிகளுக்குப்போல ஜாதிக்குந் தனது ஆசிரயத்தில் சமவாயசம்பந்த முண்டு. அதனால் சத்தத்தன்மைச் சாதிக்குச சத்தத்தில் சமவாய சம்பந்த முண்டு. சமவாய சம்பந்தத்தோ டிருப்ப தெதுவோ, அதனைச சமவேத மென்பர். சுரோத்திரத்தில் சமவாய சம்பந்தமாயிருக்கும் சப்தம் எதுவோ அது சுரோத்திர சமவேதமாம. அச்சுரோத்திர சமவேத சத்தத்தில் சத்தத்தன்மையின் சமவாயமிருத்தலின் சுரோத்திரத்திற்குச் சத்தத்தன்மையோடு சமவேத சமவாய சம்பந்த முளது.

சுரோத்திரஜப் பிரமையின் நிரூபணம்.

அங்ஙனமே சுரோத்திரத்தில் சத்தஞான முண்டாகாத காலத்துச் சப்தாபாவத்தின் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. ஆண்டுச் சத்தா பாவத்திற்குச் சுரோத்திரத்தோடு விசேஷணத்தன்மைச் சம்பந்த முளது. எவ் வதிகரணத்தில் பதார்த்தத்தின் அபாவ முண்டா கின்றதோ, அவ்வதிகரணத்துள்ள பதார்த்தத்தின் அபாவத்திற்கு விசேஷணத்தன்மைச சம்பநதம சொல்லப்படுகின்றது. வாயுவில் உருவமில்லையாகலின் வாயுவில உருவமின்மையின் விசேஷணத் தன்மைச சம்பநதமுளது. யாண்டுப் பிருதிவியில் கடமில்லையோ, ஆண்டுப் பிருதிவியில் கடாபாவத்திற்கு விசேடணததன்மைச் சம் பநதமுளது.. இவ்வாற்றால் சத்த சூனிய சுரோததிரததில் சத்தா பாவததின விசேஷணததன்மைச சமபந்தமுளது. ஆகலின், சுரோ த்திரததோடு சததாபாவத்தின் விசேஷணத்தன்மைச சமபந்தம் சத்தாபாவத்தின் பிரததியக்ஷஞானததிற்கு ஏதுவாம். சுரோத்திர ததினால் ககரமுதலிய சததததின பிரததியக்ஷ முண்டாகுமிடத்து ச்சமவாய சமபநத முளது, அவ்வாறே ககர முதலியவற்றிலுள்ள கத்துவமுதலிய சாதிகளின் பிரத்தியக்ஷ ஞானம சமவேத சமவாய சமபந்தத்தா லுண்டாகின்றது. சுரோத்திரத்தில் சத்தாபாவத்தின் பிரத்தியக்ஷம் விசேஷணத் தன்மைச சம்பந்தததா லுண்டா கின்றது. அவ்வாறே சுரோததிர சமவேத ககரததில் * ஙத்துவா பாவத்தின் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. ஆண்டுச சுரோததிரத் திற்கு ஙததுவாபாவததோடு சமவேத விசேஷணத்தன்மைச்சம்பந்த முளது. ஏனெனின், சுரோத்திரத்திற் சமவேதித்திருக்கும் ககரத் தில் ஙத்துவாபாவததின் விசேஷணத் தன்மைச சமபந்த மிருக் கின்றது. இது முதல் அநேக சமபநதங்கள் அபாவப் பிரத்தி யக்ஷத்தில் சுரோததிரத்தோ டிருக்கின்றன. ஆனால் விசேஷணத் தன்மைத தன்மை சகல அபாவங்களின் சம்பந்தத்திலு முளது. ஆதலால் அபாவப் பிரத்தியக்ஷததில சுரோத்திரத்திற்கு ஒரே விசேஷணத தன்மைச சமபந்த முளது. இவ்வாற்றால் சுரோத்திர ஜந்நியப் பிரமைக்கு ஏது மூன்று சமபநதமாம. சப்தத்தின் ஞானத் திற்கு ஏது சமவாய சம்பந்தமாம், சத்தத்தின் தர்மமாகிய சத்தத் தன்மை கத்தன்மை முதலியவற்றின் ஞானததிற்கு ஏது சமவேத சமவாய சம்பந்தமாம். அபாவததின் சுரோததிர ஜநநிய ஞானத்

* ஙத்துவம் - ஙகரத் தன்மை.

தில் விசேஷணத்தன்மைச் சம்பந்தம் ஏதுவாம். அவ்விசேஷணத் தன்மை பலவகைப்படும். சப்தாபாவத்தின் பிரத்தியக்ஷத்தில் சுத்த விசேஷணத்தன்மைச் சம்பந்தமுண்டு. ககரத்தில் ஙத்துவாபாவத்தின் பிரத்தியக்ஷத்தில் சமவேத விசேஷணத் தன்மையுண்டு. விசேஷணத்தன்மைச்சம்பந்தத்திற்குஅநேகவேறுபாடுகளுளவாயினும், எல்லாவற்றிலும் விசேஷணத் தன்மைத் தன்மைச் சமமாதலின் விசேஷணத் தன்மை ஒன்றேயெனப்படுகின்றது. சத்தம் இரண்டு வகையாம்:—ஒன்று பேரிமுதலிய விடத்திலுண்டாகும் துவனிவடிவினதாகிய சத்தம்; மற்றொன்று கண்ட முதலியவிடத்து வாயுவின் சையோகத்தா லுண்டாகும் வர்ண (எழுத்து) வடிவினதாகிய சத்தம். சுரோத்திரேந்திரியத்தால் இருவகைச சத்தத்தின் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. வர்ண ரூப சத்தத்தில் எங்ஙனம் கத்துவ முதலிய சாதிகளின் பிரத்தியக்ஷம் சமவேத சமவாய சம்பந்தத்தா லுண்டாகின்றதோ, அங்ஙனமே துவனிரூப சத்தத்திலுள்ள தாரத்துவ மந்தத்துவ முதலிய தர்மங்களின் பிரத்தியக்ஷமும் சுரோத்திரத்தின லுண்டாகின்றது. ஆனால் கத்துவ முதலியனவோ வர்ணங்களின் தர்மமாகிய ஜாதிரூபமாம். ஆதலால் கத்துவாதிகளுக்குக் ககரமுதலிய வடிவினவாகிய சத்தங்களோடு சமவாய சம்பந்த முண்டு. துவனிரூப சத்தத்தின் தாரத்துவ முதலிய தர்மம் ஜாதிரூபமன்று; நியாயமதத்தில் உபாதி ரூபமாம். ஆகலின், தாரத்துவ முதலியவற்றிற்குத் துவனிரூப சத்தத்தில் சமவாயசம்பந்தமில்லை; சுவரூப சம்பந்த முளது. ஏனெனின் நியாய மதத்தில் சாதிரூப தர்மத்திற்கும் குணத்திற்கும் கிரியைக்கும் தமது ஆசிரயத்தில் சமவாய சம்பந்தங் கூறுவர். சாதி குணக் கிரியைகளின் வேறாகிய தர்மத்தினை உபாதி யென்பர். உபாதிக்கும் அபாவத்திற்கும் அதனதன் ஆசிரயத்தோடுள்ள சம்பந்தத்தைச் சொரூப சம்பந்த மென்பர். சொரூபத்தையே விசேஷணத்தன்மை யென்பர். ஆகலின் சாதிக்கு வேறாகிய தாரத்துவ முதலிய தர்மங்களுக்குத் துவனி ரூப சத்தத்தோடு சொரூப சம்பந்த முண்டு. அதனையே விசேஷணத்தன்மை யென்பர். ஆதலால் சுரோத்திர சமவேதமாகிய துவனியில் தாரத்துவ மந்தத்துவங்களின் விசேஷணத் தன்மைச் சம்பந்த மிருத்தலின், சுரோத்திரத்திற்கும் தாரத்துவமந்தத்துவங்களுக்கும் சுரோத்திர சமவேத விசேஷணத் தன்மைச் சம்பந்த முண்டு. இவ்வாற்றால் சுரோத்திரேந்திரியம் சுரோத்திரப் பிரத்தியக்ஷப் பிரமையின்

கரணமும், சுரோத்திரமனதுகளின்சையோகம் வியாபாரமும், சத்த முதலியவற்றின் பிரத்தியக்ஷப் பிரமையாகிய ஞானம் பலமுமாம்.

## ௬. துவாசப் பிரமையின் நிரூபணம்.

துவக்கிந்திரியத்தால் ஸ்பரிசத்தின் ஞான முண்டாகின்றது; அப்படியே ஸ்பரிசாசிரயத்தின் ஞானமு முண்டாகின்றது. அன்றியும் ஸ்பரிசத்தின் ஆசிரிதமான ஸ்பரிசத்துவ ஜாதியின் பிரத்தியக்ஷமும் ஸ்பரிசாபாவத்தின் பிரத்தியக்ஷமும் துவக்கிந்திரியத்தினுலுண்டாகின்றன. ஏனெனின், எவ்விந்திரியத்தால் எப்பதார்த்தத்தின் ஞான முண்டாகின்றதோ, அப்பதார்த்தத்தின் அபாவத்தினது ஞானமும் அப்பதார்த்தத்தினது ஜாதியின் ஞானமும் அவ்விந்திரியத்தால் உண்டாம். பிருதிவி ஜலம் தேயு வென்னும் மூன்றுதிரவியங்களின்பிரத்தியக்ஷ ஞானமும் துவக்கிந்திரியத்தினுலுண்டாகின்றது. வாயுவின் பிரத்தியக்ஷஞான முண்டாகிற தில்லை. ஏனெனின், பிரத்தியக்ஷ யோக்கிய ரூபமும பிரத்தியக்ஷ யோக்கிய ஸ்பரிசமுமாகிய இரண்டும் எத்திரவியத்தி லிருக்கின்றனவோ, அத்திரவியத்தின் துவாசப் பிரத்தியக்ஷ முண்டாம். வாயுவில் ஸ்பரிசமோ இருக்கின்றது; ஆனுல் உருவம் இல்லை. ஆகலின், வாயுவின் துவாசப் பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. வாயுவினது ஸ்பரிசத்தின் பிரத்தியக்ஷம் துவக்கிந்திரியத்தான் உண்டாகின்றது; ஸ்பரிசத்தின் பிரத்தியக்ஷத்தால் வாயுவின் அநுமிதிஞான முண்டாகின்றது.

மீமாம்ஸா மதத்தில் வாயுவின் பிரத்தியக்ஷ முண்டாகிற தென்பதின் அபிப்பிராயம் இதுவாம்:—பிரத்தியக்ஷ யோக்கிய ஸ்பரிசம் எத்திரவியத்திலிருக்கின்றதோ அத்திரவியத்தின் துவாசப் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. துவக்கிந்திரிய ஜந்நிய திரவியத்தின் பிரத்தியக்ஷத்தில் உருவத்தின் அபேக்ஷை யில்லை. கேவல ஸ்பரிசத்தின் அபேக்ஷை யிருக்கிறது. எங்ஙனம்: திரவியத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தில் உற்பூத வுருவத்தின் அபேக்ஷை யுண்டு; ஸ்பரிசத்தின் அபேக்ஷை யில்லை. ஏனெனின் திரவியத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தில் உற்பூத ஸ்பரிசத்தின் அபேக்ஷை யிருக்குமாயின், தீபத்தின் பிரபையிலும் அங்ஙனமே சந்திரனது பிரபையிலும் உற்பூத ஸ்பரிசமில்லை யாகலின், அவற்றின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷ முண்டாகாது; பிரத்தியக்ஷமோ உண்டாகிறது. அன்றியும் (திரி) அணுகத்தில் ஸ்பரிசமோ விருக்கின்றது; ஆனுல் உற்பூத

ஸ்பரிச மில்லை. ஆகலின் துவாசப் பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை; கேவலம் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷ முண்டாகிறது. ஆதலாற் கேவல உற்பூத ரூபமுடைய திரவியத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. அங்ஙனமே கேவல உற்பூத ஸ்பரிசமுடைய திரவியத்தின் துவாசப் பிரத்தியக்ஷமு முண்டாகின்றது. வாயுவில் உருவமோ இல்லை; உற்பூத ஸ்பரிச மிருக்கின்றது. ஆகலின் வாயுவின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷ முண்டாகிற தில்லை; துவாசப் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. மற்றும் எல்லா ஜனங்களுக்கும் எனக்குத் துவக்கினால் வாயுவின் பிரத்தியக்ஷ முண்டாகின்றதென்று அநுபவ முண்டாகின்றது. ஆகலின் வாயுவின் பிரத்தியக்ஷமும் துவக்கிந்திரியத்தினா லுண்டாகின்ற தென்பது மீமாம்ஸாமதமாம்.

ஆனால் நியாயசித்தாந்தத்தில் வாயு பிரத்தியக்ஷ மன்று. பிருதிவி ஜல தேயுக்களினும் யாண்டு உற்பூதஉருவமும் உற்பூதபரிசமுமுண்டோ, ஆண்டு அவற்றின் துவாசப்பிரத்தியக்ஷ முண்டாகின்றது; மற்றவற்றின் துவாசப்பிரத்தியக்ஷ முண்டாவ தில்லை. பிரத்தியக்ஷ யோக்கியமாகிய உருவமும் பரிசமும உற்பூத மெனப்படும். கிராண ரசன நேத்திரங்களில் உருவமும பரிசமு மிருக்கின்றன; ஆனால் அவை உற்பூத மன்று. ஆகலின் பிருதிவி ஜல தேயுவடிவான அவ்விந்திரியங்களின் துவாசப்பிரத்தியக்ஷமும சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமு முண்டாகிறதில்லை. அன்றியும சாளரத்திற் றோன்றும் அதி நுட்பமான துகள் எதுவோ அது அணுகரூபமான பிருதிவியாம். அதில் உற்பூத உருவம் இருக்கின்றது. ஆகலின் அணுகத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமோ உண்டாகின்றது; உற்பூத பரிச மின்மையான் துவாசப்பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. அணுகத்தில் பரிசமு மிருக்கின்றது; ஆனால் அப்பரிசம உற்பூதமன்று. வாயுவில் உற்பூதபரிசமோ இருக்கின்றது; உருவ மில்லை. ஆகலின் வாயுவின் துவாசப் பிரத்தியக்ஷமும் அஙஙனமே சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமு முண்டாகிறதில்லை. இதனால் திரவியத்தின் சாக்ஷுஷப்பிரத்தியக்ஷத்தில் உற்பூத வுருவம் ஏதுவாமென்பதும், திரவியத்தின் துவாசப் பிரத்தியக்ஷத்தில் உற்பூத வுருவமும் உற்பூத ஸபரிசமுமாகிய இரண்டும் ஏதுவாமென்பதுஞ்சித்தித்தன. எத்திரவியத்தில் உற்பூதவுருவமும் உற்பூத ஸபரிசமு முளவோ அத்திரவியத்திற்கே துவாசப்பிரத்தியக்ஷ முண்டாம். எத்திரவியத்தின் துவாசப்பிரத்தியக்ஷ முண்டாகின்றதோ, அத்திரவியத்தின் பிரத்தியக்ஷ யோக்கிய ஜாதியின்

துவாசப் பிரத்தியக்ஷமு முண்டாகின்றது. எங்ஙனம் கடத்தின் துவாசப் பிரத்தியக்ஷ முண்டாகுமிடத்துக் கடத்திலுள்ள பிரத்தியக்ஷ யோக்கிய ஜாதியாகிய கடத்தன்மையின் துவாசப் பிரத்தியக்ஷமு முண்டாகின்றதோ, அங்ஙனமே திரவியத்திலுள்ள ஸ்பரிசம் சங்கை பரிமாணம சையோகம் விபாகம் முதலிய யோக்கிய குணங்களின் துவாசப் பிரத்தியக்ஷமும, ஸ்பரிச முதலியவற்றின்கணுள்ள ஸ்பரிசத்தன்மை முதலிய ஜாதிகளின் துவாசப் பிரத்தியக்ஷமு முண்டாகின்றன. மென்மைத் திரவியத்தில் வன்மைப்பரிசத்தின் அபாவமும் குளிர்ந்த ஜலத்தில் உஷ்ண ஸ்பரிசத்தின் அபாவமு மிருக்கின்றன. அவற்றின் துவாசப பிரததியக்ஷ முண்டாகுமிடத்துக் கடமுதலிய திரவியங்களோடு இந்திரியத்திற்குச் சையோக சமபந்த மிருக்கின்றது. கிரியையாற் றோன்றுவது சையோகமாம. திரவியத்திற்கோ சையோக முண்டாகின்றது. துவக்கிந்திரியம் வாயுவின பரமாணு ஜந்யமாகலின் அது வாயுவடிவ திரவியமாம்; கடமும பிருதிவிவடிவ திரவியமாம். சிலவிடத்தில் துவக்கிந்திரியத்தின்கோளகமாகிய சரீரத்தின்றொழிலால்துவக்கிற்கும் கடத்திற்கும சையோக முண்டாகின்றது; சிலவிடத்துக் கடத்தின்றொழிலால் துவக்கிற்கும கடத்திற்கும சையோகமுண்டாகின்றது; சில விடத்து இரண்டின்கண்ணு முண்டாகும் றொழிலால் சையோக முண்டாகின்றது. நேத்திரத்திலோ கோளகத்தைவிட்டுக் கேவல இந்திரியத்தில் கிரியையுண்டாகின்றது. துவக்கிந்திரியத்தில் கோளகம் விட்டுச் சுவதந்திரத்தில் கிரியை ஒருநாளும உண்டாவதில்லை. ஆகலின் துவக்கிந்திரியத்தின் கோளகமாகிய சரீரத்தின் றொழிலாலேனும, அல்லது கடமுதலிய விஷயங்களின் றொழிலாலேனும்,அல்லது அவ்விரண்டின் றொழிலாலேனும துவக்கிற்குக்கட முதலிய திரவியங்களோடு சையோக முண்டாகின்றது. அப்போது துவாசஞானம் உண்டாகின்றது. ஆண்டுத் துவாசப பிரத்தியக்ஷப் பிரமை பயன்; துவக்கிந்திரியம் கரணம; துவக்கிந்திரியத்திற்குக் கடத்தோடுள்ள சையோகம வியாபாரமாம். ஏனெனின், துவக்கிற்கும் கடத்திற்குமுள்ள சையோகத்திற்கு உபாதானகாரணம கடமும துவக்குமாகிய இரண்டுமாம். ஆகலின் அச்சையோகம் துவக்கிந்திரிய ஜந்யமாம். துவக் கிந்திரியத்தின் காரியமாகிய துவாசப்பிரமையை யுண்டாக்குவதா யிருத்தலால் துவக்கிற்குக் கடத்தோடுள்ள சையோகம் வியாபாரமாம். யாண்டுத் துவக்கினால் கட

த்தின் கடத்துவ சாதி, ஸ்பரிச முதலிய குணங்கள் என்பவற்றின் துவாசப் பிரத்தியக்ஷ முண்டாகின்றதோ, ஆண்டுத் துவக் கிந்திரியம் கரணம்; பிரத்தியக்ஷப் பிரமை பயன்; சையுத்த சமவாய சம்பந்தம் வியாபாரமாம். ஏனெனின், துவக்கிந்திரிய சையுத்த (துவக்கிந்திரியத்தோடு சையோகமுடைய) கடத்தில் கடத்தன்மைச்சாதி ஸ்பரிசமுதலிய குணங்கள் என்பவற்றின் சமவாய மிருக்கின்றது. .........அங்ஙனமே கடமுதலியவற்றின் ஸ்பரிச முதலிய குணங்களிலுள்ள ஸ்பரிசத்துவமுதலிய ஜாதிகளின் துவாசப்பிரத்தியக்ஷமாகிய பிரமை யுண்டாகின்றது. ஆண்டுத் துவக்கிந்திரியம் கரணம்; ஸ்பரிசத்தன்மை முதலியவற்றின் பிரத்தியக்ஷப் பிரமை பயன்; சையுக்தசமவேத சமவாயசம்பந்தம் வியாபாரமாம். ஏனெனின், துவக் கிந்திரியத்தோடு சையுக்தமான கடத்தில் சமவேதமாகிய (சமவாய சம்பந்தத்தானிருக்கும்) ஸ்பரிசமுதலியவற்றில் ஸ்பரிசத்துவ முதலிய சாதியின் சமவாயமிருக்கின்றது. சையுத்தசமவாயமும் சையுத்தசமவேத சமவாயமுமாகிய இரண்டு சம்பந்தங்களினும் சமவாயபாகமோ நித்தியமாய் இந்திரியஜந்நியமாகாததா யிருக்கின்றது; என்றாலும் சையோகமுடையதனைச் சையுத்தமென்பர். அச் சையோகம் ஜந்நியமாம். ஆதலால், துவக்கிந்திரியத்தின் சையோகம் துவக்கு ஜந்நியமா (துவக்காற் றோன்றியதா) யிருத்தலின், துவக்கு சையுத்த சமவாயமும் துவக்கு சையுத்த சமவேத சமவாயமும் துவக்கிந்திரிய ஜந்நியமும, துவக்கிந்திரிய ஜந்நியமாகித் துவாசப் பிரமையை யுண்டுபண்ணுவனவுமாம். ஆதலால் வியாபாரமாம். யாண்டுப் புஷ்பமுதலிய மென்மைத் திரவியத்தில் வன்மைப் பரிசாபாவத்தின் துவாசப் பிரத்தியக்ஷமும், குளிர்ந்த ஜலத்தில் உஷ்ண ஸபரிசாபாவத்தின் துவாசப் பிரத்தியக்ஷமு முண்டாகின்றனவோ, ஆண்டுத் துவக்கிந்திரியம் கரணமும், அபாவத்தின் துவாசப் பிரமை பயனுமாம். இந்திரியத்தோடு அபாவத்திற்குத துவக்கு சையுத்த விசேஷணத் தன்மைச் சம்பந்த மிருக்கின்றது. அது வியாபாரமாம். ஏனெனின், துவக்கிந்திரியத்திற்குக் கட முதலிய திரவியங்களோடு சையோக மிருக்கின்றது. ஆகலின் துவக்கு சையுத்த மென்மைத் திரவியத்தில் வன்மைப் பரிசாபாவத்தினது விசேஷணத் தன்மைச் சம்பந்த மிருக்கின்றது. அதுபோலத் துவக்குசையுத்த குளிர்ந்த ஜலத்தில் உஷ்ண ஸ்பரிசாபாவத்தின் விசேஷணத் தன்மைச் சம்பந்த மிருக்கின்றது. யாண்டுக் கட

ஸ்பரிசத்தில் உருவத் தன்மை அபாவத்தின் துவாசப் பிரத்தியக்ஷ முண்டாகின்றதோ, ஆண்டுத் துவக்கு சையுக்த கடத்திற் சமவேதமான ஸ்பரிசத்தில் உருவத்தன்மை யபாவத்தின் விசேஷணத் தன்மைச் சம்பந்த மிருத்தலின், துவக்கு சையுக்த சமவேத விசேஷணத் தன்மைச் சம்பந்த மிருக்கின்றது. இவ்வாற்றால் துவாசப் பிரத்தியக்ஷத்தில் நான்கு சம்பந்தங்கள் ஏதுவாம். அவை (க) துவக்கு சையோகம், (உ) துவக்கு சையுக்த சமவாயம், (ங) துவக்கு சையுக்த சமவேதசமவாயம், (ச) துவக்கு சம்பந்த விசேஷணத் தன்மை என்பனவாம். துவக்கோடு சம்பந்தமுடையதனைத் துவக்கு சம்பந்த மென்பர். யாண்டு மிருதுவான திரவியத்தில் கடின ஸ்பரிசாபாவ முளதோ, ஆண்டுத் துவக்கின் சையோக சம்பந்தமுடைய மென்மைத் திரவிய மிருக்கின்றது. அத்துவக்கு சம்பந்த முடைய மென்மைத் திரவியத்தில் கடின ஸ்பரிசாபாவத்தின் விசேஷணத் தன்மைச் சம்பந்தம் வெளிப்படையா யிருக்கின்றது. யாண்டு ஸ்பரிசத்தில் உருவத்தன்மையபாவத்தின் பிரத்தியக்ஷ முளதோ, ஆண்டுத் துவக்கிற்கு ஸ்பரிசத்தோடு சையுக்த சமவாய சம்பந்த முளது. துவக்கோடு சையுக்த சமவாய சம்பந்த முடையதாயிருத்தலின் துவக்கு சம்பந்தம் ஸ்பரிசம்; அதன்கண் உருவத்தன்மை யபாவத்தின் விசேஷணத் தன்மைச் சம்பந்த மிருக்கின்றது. இவ்வாற்றால் துவாசப் பிரமைக்கு ஏது சையோகாதி நான்கு சம்பந்தங்களாம்.

## எ. சாக்ஷுஷப்பிரமையின் நிரூபணம்.

அதுபோலச் சாக்ஷுஷப் பிரமைக்கு (க) நேத்திரசையோகம், (உ) நேத்திர சையுக்தசமவாயம், (ங) நேத்திர சையுக்த சமவேத சமவாயம், (ச) நேத்திர சம்பந்த விசேஷணத்தன்மை என்னும், நான்கு சம்பந்தமும் ஏதுவாம்; அதுவே (சம்பந்தமே) வியாபாரமாம். யாண்டு நேத்திரத்தால் குட முதலிய திரவியங்களின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷ முண்டாகின்றதோ, ஆண்டு நேத்திரத்தின் கிரியையால் திரவியத்தோடு சையோக சம்பந்த முண்டாகின்றது. அச்சையோகம் நேத்திர ஜந்நியமும், நேத்திரத்தாற் றோன்றுஞ் சாக்ஷுஷப் பிரமையைத் தோற்றுவிப்பதுமாம்; ஆகலின் வியாபாரமாம். யாண்டு நேத்திரத்தால் திரவியத்தின் குடத்தன்மை முதலிய ஜாதியின் பிரத்தியக்ஷமும், உருவம் சங்கைமுதலிய குணங்

களின் பிரத்தியக்ஷமுமுண்டாகின்றனவோ, ஆண்டு நேத்திர சையு த்த திரவியத்தில் கடத்தன்மை முதலிய ஜாதி, உருவம், சங்கை முதலிய குணங்கள் என்பவற்றின் சமவாயசம்பந்த மிருக்கின்றது. ஆகலின் திரவியத்தினது ஜாதி குணமென்பவற்றின் சாக்ஷாத்காரப் பிரத்தியக்ஷத்தில் நேத்திர சையுக்த சமவாய சம்பந்த மிருக்கின்றது. யாண்டுக் குணத்திலிருப்பதாகிய ஜாதியின் சாக்ஷாத்காரப் பிரத்தியக்ஷ முண்டாகின்றதோ, ஆண்டு உருவத்தன்மை முதலிய ஜாதியோடு நேத்திரத்திற்குச் சையுக்த சமவேத சமவாய சம்பந்த மிருக்கின்றது. ஏனெனின், நேத்திரத்தோடு சையுக்தமான கடமுதலியவற்றின் சமவேதமான உருவமுதலியவற்றில் உருவத்தன்மைமுதலியவற்றின் சமவாயம் இருக்கின்றது. நேத்திரத்தோடு சையோகம் சகல திரவியங்களுக்கும் சம்பவிக்குமாயினும், உற்பூத வுருவமுடைய திரவியத்தோடு நேத்திரத்திற் குண்டாகும் சையோகம் சாக்ஷாத்காரப் பிரத்தியக்ஷத்திற் கேதுவாம். மற்றத்திரவியங்களோடு நேத்திரத்திற் குண்டாகும் சையோகம் சாக்ஷாத்காரப் பிரத்தியக்ஷத்திற் கேதுவாகாது. பிருதிவி ஜலம் தேயு வென்னும் இம்மூன்றும் உருவமுடையனவாம்; மற்றவை யுருவமுடையன வன்று. ஆகலின், பிருதி விஜல தேயுக்கள் மாத்திரத்தின் சாக்ஷாத்காரப் பிரத்தியக்ஷ முண்டாம். இவற்றினும் யாண்டு உற்பூத உருவமிருக்கின்றதோ ஆண்டு அதன் சாக்ஷாத்காரப் பிரத்தியக்ஷ முண்டாம், எதன்கண் அநுற்பூத வுருவ முளதோ, அதன் சாக்ஷாத்காரப்பிரத்தியக்ஷ முண்டாதலில்லை. எங்ஙனம்: கிராணம், இரசனம், நேத்திர மென்னு மிம்மூன்றிந்திரியங்களும் முறையே பிருதிவி ஜல தேயு வடிவங்களாம். இம்மூன்றன்கண்ணும் உருவ முளது. ஆனால் இவற்றின் உருவம் அநுற்பூதமாம்; உற்பூத மன்று. ஆகலின், இவற்றின் சாக்ஷாத்காரப் பிரத்தியக்ஷ முண்டாகிற தில்லை; இதனால் உற்பூதஉருவமுடைய பிருதிவி ஜல தேயுக்களே சாக்ஷாத்காரப்பிரத்தியக்ஷத்திற்குவிஷயமாமென்பது சித்தமாயிற்று. அவற்றிற் சில குணம் சாக்ஷாத்காரப் பிரத்தியக்ஷ யோக்கியமாம்; சில சாக்ஷாத்காரப் பிரத்தியக்ஷ யோக்கிய மன்று. எங்ஙனம்: பிருதிவியில் (௧) உருவம், (௨) இரசம், (௩) கந்தம், (௪) பரிசம், (௫) சங்கை, (௬) பரிமாணம், (௭) வேற்றுமை, (௮) சையோகம், (௯) விபாகம், (௧0) பரத்துவம், (௧௧) அபரத்துவம், (௧௨) குருத்துவம், (௧௩) திரவத்துவம், (௧௪) சம்ஸ்காரம் என்னும் பதினான்கு குணங்க ளுள. இவற்றுள் கந்தத்தைவிட்டுச் சிநேகத்தைச் சேர்க்

கின் பதினொன்று குணங்கள் ஜலத்திற் குரியனவாம். இவற்றுள் இரசம் கந்தம் குருத்துவம சிநேக மென்பவையொழிந்த பதினொரு குணங்கள் தேயுவிற் குரியனவாம். இவற்றுள் உருவம், சங்கை, பரிமாணம், வேற்றுமை, சையோகம, விபாகம், பரத்துவம், அபரத்துவம், திரவத்துவ மென்னும் குணங்கள் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷ யோக்கியமாம்; மற்றவை யாகா. ஆகலின், நேத்திர சையுக்த சமவாயரூப சம்பந்தமோ சர்வகுணங்களோடு முண்டு; யாவும் நேத்திரயோக்கியமல்ல. எத்துணை நேத்திரயோக்கியமோ, அத்துணைக் குணங்களின் பிரத்தியக்ஷமே நே திர சையுக்த சமவாய சம்பந்தத்தானுண்டாகின்றது. ஸ்பரிசத்தில் துவக்கிந்திரியத்திற்கு யோக்கியதை யிருக்கின்றது; நேத்திரத்திற்கில்லை. உருவததில் நேத திரத்திற்கு யோக்கியதை யிருக்கின்றது; துவக் கிநதிரியத்திற்கில்லை. சங்கை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், பரத்துவம, அபரத்துவம், திரவத்துவ மென்பவற்றில் துவக்கு நேத்திர மென்னு மிரண்டற்கும் யோக்கியதை யிருக்கின்றது. ஆகலின், துவக்கு சையுத்த சமவாயம நேத்திர சையுத்தசமவாய மென்னும் இரண்டு சமபநதமும் சங்கை முதலியவற்றின் துவாசப் பிரததியக்ஷத்திற்கும் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்திற்கும் ஏதுவாம். இரசத்தில் இரசனை மாததிரத்திற்கு யோக்கியதை யிருக்கின்றது; மற்ற விநதிரியங்களுக் கிலலை. கநதததில் கிராணத்திற்கு யோக்கியதை யிருக்கின்றது; மற்றவறறிற் கில்லை. எவ்விந்திரியத்தின் யோக்கியதை எக்குணததி லிருக்கின்றதோ, அவ்விந்திரியத்தான் அக்குணத்தின் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. பிறவற்றோடு இந்திரியத்திற்குச் சம்பநத முண்டாயினும் பிரத்தியக்ஷமாகிற தில்லை. அதுபோலக் கடமுதலியவற்றிலுள்ள உருவ முதலியன சாக்ஷுஷ ஞானததிற்கு விஷயமாம். அவற்றின் உருவத்தன்மை முதலிய ஜாதியினது சாக்ஷுஷப் பிரத்தியக்ஷம் நேத்திர சையுத்த சமவேத சமவாயத்தால் உண்டாகின்றது. சாக்ஷுஷ ஞானத்திறகு விஷயமாகாத இரசமுதலியவற்றில் இரசத்துவமுதலிய ஜாதியோடு நேத்திரத்திற்குச் சையுக்த சமவேத சமவாய சம்பந்த மிருக்கினும் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. இதனால் உற்பூதவுருவமுடைய திரவியத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷம் நேத்திர சையோகத்தானும், உற்பூதவுருவமுடைய திரவியத்தினது நேத்திர யோக்கிய ஜாதி, நேத்திர யோக்கிய குண

மென்பவற்றின் 'சாக்ஷாத்ஷப் பிரத்தியக்ஷம் சையுக்த சமவாய சம்பந்தத்தாலுண்டாகின்றன வென்பது சித்தித்தது. அங்ஙனமே நேத்திர யோக்கிய குணம் உருவத் தன்மை முதலிய ஜாதி யென்பவற்றின் சாக்ஷாத்ஷப் பிரத்தியக்ஷம நேத்திர சையுக்த சமவேதசமவாய சம்பந்தத்தா லுண்டாகின்றது. அங்ஙனமே அபாவத்தின் சாக்ஷாத்ஷப் பிரத்தியக்ஷம நேத்திர சமபநதத்தா லுண்டாகின்றது. யாண்டுப் பூதலத்தில் கடாபாவத்தின் சாக்ஷாத்ஷப் பிரத்தியக்ஷ முண்டாகின்றதோ, ஆண்டுப் பூதலத்தில நேத்திரத்தின் சையோக சமபநத மிருக்கின்றது ஆகலின், நேத்திர சம்பந்தமுடைய பூதலத்தில் கடாபாவத்தின் விசேஷணத தன்மைச் சம்பநத மிருக்கின்றது. அங்ஙனமே, நீலகடத்தில் பொன்மை யுருவத்தினது அபாவத்தின் சாக்ஷாத்ஷப் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. ஆண்டு நேத்திரத்தோடு சையோக மிருததலின் நேத்திரசம்பந்தமுடைய நீலகடததில் பொன்மை யுருவததினது அபாவத்தின் விசேஷணத்தன்மைச சமபந்த மிருக்கின்றத; அங்ஙனமே கடத்தின் நீலவுருவத்தில் பொன்மைத தன்மைச சாதி அபாவத்தின் சாக்ஷாத்ஷப் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. ஆண்டு நேத்திரத்தோடு சையுக்த சமவாய சமபந்தமுடைய நீல வுருவ மிருக்கின்றது. ஆகலின், நேததிர சமபந்தமான நீல வுருவததில் பொன்மைத்தன்மை யபாவத்தின் விசேஷணததன்மைச சமபநத மிருத்தலான், நேத்திரசமபந்த விசேஷணத தன்மைச சமபநத மிருக்கின்றது. இவ்வாற்றால (க) நேததிரசையோகம, (உ) நேத்திர சையுக்த சமவாயம, (ங) நேத்திரசையுக்த சமவேத சமவாயம, (ச) நேததிரசமபநத விசேஷணததன்மை யென்னும நான்கு சம்பந்தமும் சாக்ஷாத்ஷப்பிரமைககு ஏதுவாம. அதுவே வியாபாரமாம்; நேத்திரம கரணமும சாக்ஷாத்ஷப்பிரமை பயனுமாம.

## ௮. இரசனப்பிரமையின் நிரூபணம்.

துவக்கினாலும் நேத்திரத்தினாலும் திரவியத்தின் பிரத்தியக்ஷ முண்டாவதுபோல இரசனேந்திரியததால் திரவியத்தின் பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. ஆனால் இரசம, இரசத்துவ மதுரத்துவ முதலிய இரசத்தினது ஜாதி, அங்ஙனமே இரசாபாவம, மதுர முதலிய இரசத்தில் புளிப்புத் தன்மை முதலிய ஜாதியின் அபாவ மென்பவற்றின் இராசனப் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. ஆகலின்

இராசனப் பிரத்தியக்ஷத்திற் கேது, இரசனேந்திரியத்தோடு விஷயங்களுக் குண்டாகும இரசன ஸம்யுக்த சமவாயம, இரசன சையுக்த சமவேத சமவாயம, இரசன சம்பந்த விசேஷணத் தன்மையென்னும மூன்று சம்ப்ந்தமுமாம. யாண்டுப் பழத்தினது மதுர ரசத்தின் இராசனப் பிரத்தியக்ஷம் இரசனேந்திரியத்தா லுண்டாகின்றதோ, ஆண்டுப் பழத்திற்கும இரசனத்திற்கும சையோக சம்பந்த மிருக்கின்றது. ஆகலின இரசன சையுக்த பழத்தின்கண் இரச குணத்தின் சமவாய மிருத்தலால இரசத்தின் இராசனப் பிரத்தியக்ஷத்தில சையுக்த சமவாய சம்பந்தம இருக்கின்றது; அது வியாபாரமாம். ஏனெனின, சையுக்த சமவாய சம்பந்தத்திலுள்ள சமவாயக் கூறு நித்தியமாம; இரசனத்தாற் றோன்றிய தன்று. ஆனாற் சையோகக்கூறு இரசனத்தாற் றோன்றியதும, இரசனேந்திரியத்தாற் றோன்றும இரசத்தின் இராசன சாக்ஷாத்கார மெதுவோ அதனைத் தோற்றுவிப்பதுமா மாகலின வியாபாரமாம. அவ் வியாபார முடைய இராசனப் பிரத்தியக்ஷ அசாதாரண காரணம இரசனேந்திரியமாம, அது கரணமா யிருத்தலின் பிரமாணமாம; இராசனப் பிரமை பயனும். அங்ஙனமே இரசத்தி லுள்ள இரசத்தன்மைச சாதி, மதுரத்தன்மை புளிப்புத் தன்மை உவாப்புத் தன்மை கைப்புத்தன்மை துவாப்புத் தன்மை உறைப்புத் தன்மைகளாகிய ஆறுதர்மங்கள் எனனு மிவற்றின் இராசனப் பிரத்தியக்ஷம இரசனேந்திரியத்தான் உண்டாகின்றது. ஆண்டு இரசனத்தோடு புழ முதலிய திரவியத்திற்குச் சையோகம் இருக்கின்றது. அத திரவியத்தில் இரசம் சமவேதமாம். ஆகலின் இரசன சையுக்த திரவியத்தில் சமவேதமான (சமவாய சம்பந்தமுடைய) இரசத்தில் இரசத்தன்மை இரசத் தன்மையின் வியாபியமான மதுரத்தன்மை முதலியன வென்னு மிவற்றின் சமவாய மிருத்தலால் இரசன ஸம்யுக்த சமவேத சமவாய சம்பந்தம இருக்கின்றது. அங்ஙனமே பழத்தின் மதுர ரசத்தில் புளிப்புத தன்மையபாவத்தின் இராசனப் பிரத்தியக்ஷம உண்டாகின்றது. ஆண்டு இரசனேந்திரியத்திற்குப் புளிப்புத் தன்மை யபாவத்தோடு சுவை (ரசன) சம்பந்தவிசேஷணத்தன்மைசசம்பந்தமிருக்கின்றது. ஏனெனின், ஸையுக்த சமவாய சம்பந்தத்தான், இராசன சம்பந்தமுடையது மதுர ரசம; அதன்கண் புளிப்புத்தன்மை யபாவத்தின் விசேஷணத் தன்மைச் சம்பந்த மிருக்கின்றது. ஆகலின் இரசனேந்திரி

யத்திற்குப் புளிப்புத் தன்மை யபாவத்தோடு சையுத்த சமவேத விசேஷணத் தன்மைச் சம்பந்த மிருக்கின்றது. இரசனேந்திரிய த்தாற் றோன்றிய இராசனப் பிரத்தியக்ஷத்திற் கேது மூன்று சம்ப ந்தமாம்.

## ௬. கிராணஜப் பிரமையின் நிரூபணம்.

அங்ஙனமே கிராணஜ (கிராணேந்திரியத்தாற் றோன்றும்) பிர த்தியக்ஷப் பிரமை யுண்டாகுமிடத்தும் கிராணத்திற்கு விஷயங்க ளோடுள்ள மூன்று சம்பந்தங்கள் ஏதுக்களாகின்றன. அவையா வன:-(க)கிராண சையுக்த சமவாயம்,(உ)கிராணசையுக்த சமவேத சமவாயம், (௩) கிராண சம்பந்த விசேஷணத் தன்மை யென்பன வாம். கிராணேந்திரியத்தால் திரவியத்தின் பிரத்தியக்ஷமோ உண் டாகிற தில்லை; ஆனால் கந்தகுணத்தின் பிரத்தியக்ஷ முண்டாகின் றது. திரவியத்தின் பிரத்தியக்ஷ முண்டாகுமாயின் கிராணத்தின் சையோக சம்பந்தம் பிரத்தியக்ஷத்தில் காரணமாம். திரவியத்தின் பிரத்தியக்ஷம் கிராணத்தால் உண்டாகிற தில்லை. ஆகலின் கிராண சையோகம் பிரத்தியக்ஷத்திற் கேதுவன்று. கந்தத்திற்குக் கிராண த்தோடு நேரே சம்பந்தமில்லை. ஆனால் புஷ்பமுதலியவற்றில் கந்த த்தின் சமவாய சம்பந்த மிருக்கின்றது. கிராணத்தோடு புஷ்ப முதலியவற்றிற்குச் சையோக சம்பந்தம் இருக்கின்றது. ஆகலின் கிராண சையுத்த சமவாய சம்பந்தத்தாற் கந்தத்தின் கிராணஜப் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. கிராணத்தால் மற்றக் குணங்களின் பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. ஆனால் கந்தத்திலுள்ள கந்தத்தன் மைச் சாதி, கந்தத் தன்மை வியாப்பியமான நற்கந்தத் தன்மை துர்க்கந்தத்தன்மை யென்பவற்றின் பிரத்தியக்ஷம் உண்டாகின் றன. அங்ஙனமே கந்தாபாவத்தின் கிராணஜப் பிரத்தியக்ஷ முண் டாகின்றது. எவ்விந்திரியத்தால் எப்பதார்த்தத்தின் உணர்ச்சி யுண்டாகின்றதோ, அவ்விந்திரியத்தால் அதனது ஜாதியின் உணர் ச்சியும் அதன் அபாவத்தின் உணர்ச்சியும் உண்டாகும். யாண்டுக் கந்தத் தன்மை, நற்கந்தத்தன்மை துர்க்கந்தத் தன்மை யென்ப வற்றின் பிரத்தியக்ஷ முண்டாகின்றதோ, ஆண்டுக் கிராண சையு க்த சமவேத சமவாய சம்பந்தம் கிராணஜப் பிரத்தியக்ஷத்திற் கேதுவாம். ஏனெனின், கிராண சையுத்தமான புஷ்ப முதலியவற் றில் சமவேதம் கந்தம்; அதிற் சமவாயம கந்தத்துவ முதலியவற்

றிற் குளது. அங்ஙனமே புஷ்பத்தின் நற்கந்தத்தில் துர்க்கந்தத் தன்மை யபாவத்தின் கிராணஜப் பிரத்தியக்ஷம் உண்டாகின்றது. ஆண்டுக் கிராணத்திற்குத துர்க்கந்தத தன்மை யபாவத்தோடு சுவ (கிராண) சம்பந்த விசேஷணததன்மைச் சம்பந்த மிருக்கின்றது. ஏனெனின், சையுத்த சமவாய சமபந்தத்தால் கிராண சம்பந்தமுடைய நற்கந்தத்தில் துர்க்கந்தத்தன்மை யபாவத்தின் விசேஷணத் தன்மைச சமபந்தம இருக்கின்றது. யாண்டுப் புஷ்ப முதலியன தூரத்திலிருக்கக் கந்தத்தின் பிரத்தியக்ஷம உண்டாகின்றதோ, ஆண்டுப் புஷ்பத்தில் கிரியை காணப்படுகிறதில்லை யாகலின், புஷ்ப முதலியவற்றிற்குக் கிராணத்தோடு சையோக மின்மையால் கிராண சையுக்த சமவாய சமபந்தம் சமபவியாது. என்றாலும் கந்தமோ குணமாகலின் கந்தத்திற கிரியை யுண்டாகாது. ஆனால் கந்தத்திற் காசிரயமான புஷ்ப முதலியவற்றின் சூக்ஷ்ம அவயவங்களிற் கிரியை யுண்டாய்க் கிராணத்தோடு சையோக முண்டாகின்றது. ஆதலாற் கிராண சையுக்த புஷ்ப முதலியவற்றின் அவயவங்களில் கந்தததின் சமவாய மிருத்தலின் கிராண சையுக்த சமவாய சம்பந்தமே கந்தத்தின் கிராணஜப் பிரத்தியக்ஷத்திற் கேது வாம். இவ்வாற்றால் கிராணஜப் பிரத்தியக்ஷத்திற் கேது மூன்று சம்பந்தங்களாம்; அவை வியாபாரமாம். கிராணேந்திரியம் கரணமும், கிராணஜப் பிரத்தியக்ஷப் பிரமை பயனுமாம். இவ்வாற்றாற் சுரோத்திரமுதலிய ஞானேந்திரியங்களாற் புறப்பொருள்களின் ஞானமுண்டாகின்றது.

## ௧0. மானசப் பிரத்தியக்ஷப் பிரமையின் நிரூபணம்.

ஆத்மா, ஆத்மாவின் சுகமுதலிய தர்மங்கள், ஆத்மத் தன்மைச் சாதி, அங்ஙனமே சுகத்தன்மை முதலிய சாதி யென்னு மிவற்றின் பிரத்தியக்ஷம சுரோத்திர முதலியவற்றா லுண்டாகிற தில்லை. ஆனால் ஆத்மா முதலிய உட் பதார்த்தங்களின் பிரத்தியக்ஷத்திற் கேது மன விந்திரியமாம. ஆன்மாவிற்கும் அதன் தர்மமாகிய சுக முதலியவற்றிற்கும் வேறாயவற்றைப் பாகிய (வெளி) மென்றும், ஆத்மாவையும அதன் தர்மங்களையும் ஆந்தரம் (உள்) என்றும் கூறுவர். எங்ஙனம் பாகியப் பிரத்தியக்ஷப் பிரமைக்குக் கரணம் சுரோத்திர முதலிய விந்திரியங்களோ, அங்ஙனமே ஆந்தரமாகிய ஆத்மா முதலியவற்றின் பிரத்தியக்ஷப் பிரமை

க்குக் கரணம் மனமாம்; ஆகலின் மனமும் பிரத்தியக்ஷப் பிரமாணமாம், இந்திரியமுமாம். மனதிற் கிரியை யுண்டாய் ஆத்மாவோடு சையோக முண்டாகுங் காலத்து ஆத்மாவின் மானசப் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. ஆண்டு ஆத்மாவின் மானசப் பிரத்தியக்ஷமாகிய பயனே பிரமையாம், ஆத்ம மன சையோகம் வியாபாரமாம்; ஏனெனின், ஆத்ம மன சையோகம் மனோ ஜந்யமும் மனோஜந்யமான ஆத்மாவின் பிரத்தியக்ஷப் பிரமையை யுண்டு பண்ணுவதுமா மாகலின் வியாபாரமாம். அசம் சையோகமாகிய வியாபாரத்தையுடைய ஆத்மாவினது பிரத்தியக்ஷப் பிரமையின் அசாதாரணகாரணம் மனம்; அது பிரமாணமாம். ஞானம், இச்சை, பிரயத்தனம், சுகம், துக்கம், துவேஷமென்பவை ஆத்மாவின் குணங்கள். அவற்றின் சாக்ஷாத்காரத்திற்கும் ஏது மனமாகிய பிரமாணமாம். ஆண்டு மனதோடு ஞான முதலியவற்றிற்குச் சாக்ஷாத் (நேர்) சம்பந்தமோ வில்லை; ஆனால் பரம்பரைச் சம்பந்த மிருக்கின்றது. தனது சம்பந்தியின் சம்பந்தம் பரம்பரைச் சம்பந்த மெனப்படும். ஞானமுதலியவற்றிற்கு ஆத்மாவினிடத்துச் சமவாய சம்பந்த மிருக்கின்ற தாகலின் ஞான முதலியவற்றின் சம்பந்தி யாத்மாவாம். அதனோடு மனத்திற்குச் சையோக மிருத்தலின் மனதோடு ஞானாதிகளுக்குப் பரம்பரைச் சம்பந்த மிருக்கின்றது. அந்த ஞான முதலியவற்றிற்கு மனதோடு சுவசமவாயி சையோக சம்பந்த மிருக்கின்றது. (ஸ்வ என்பது ஞான முதலியன; அவற்றின் சமவாயி என்பது சமவாயமுடைய ஆத்மா; அதற்கு மனதோடு சையோக மிருக்கின்றது.) அங்ஙனமே மனதிற்கு ஞான முதலியவற்றோடும் பரம்பரைச் சம்பந்தமிருக்கின்றது. அது மனசையுக்த சமவாயமாம். (மனதோடு சையுக்த என்பது சையோகமுடைய ஆத்மா; அதன்கண் ஞானாதிகளுக்குச் சமவாய சம்பந்த மிருக்கின்றது.) அங்ஙனமே ஞானத்தன்மை, இச்சைத்தன்மை, பிரயத்தனத்தன்மை, சுகத்தன்மை, துக்கத்தன்மை, துவேஷத்தன்மை யென்பவற்றின் பிரத்தியக்ஷம் மனதினால் உண்டாகின்றது. ஆண்டு மனதோடு ஞானமுதலியவற்றிற்குச் சுவாசிரய சமவாயி சையோகசம்பந்த மிருக்கின்றது. (சுவ என்பது ஞானத்தன்மை முதலியன; அவற்றின் ஆசிரயம் என்பது ஞான முதலியன; அவற்றின் சமவாயி என்பது சமவாயமுடைய ஆத்மா; அதற்கு மனதோடு சையோக மிருக்கின்றது.) அங்ஙனமே மனதிற்கு

ஞானத்தன்மை முதலியவற்றோடு மனசையுக்த சமவேத சமவாய சம்பந்த மிருக்கின்றது. ஏனெனின், மனசையுக்த ஆத்மாவின்கண் சமவேதமான ஞான முதலியவற்றில் ஞானத் தன்மை முதலியவ ற்றின் சமவாய சம்பந்த மிருக்கின்றது. அங்ஙனமே ஆத்மாவி னிடத்துச் சுகாபாவ துக்காபாவங்களின் பிரத்தியக்ஷமுண்டாகின் றது. ஆண்டு மனசம்பந்தமுடைய விசேஷணத் தன்மைச் சம்பந்த மிருக்கின்றது. ஏனெனின், மனதோடு சம்பந்தமுடைய அதாவது சையோக சம்பந்தமுடைய ஆத்மாவின்கண் சுகாபாவ துக்காபா வங்களின் விசேஷணத் தன்மைச் சம்பந்த மிருக்கின்றது; அன்றி யும் சுகத்தில துக்கத்தன்மை யபாவத்தின் பிரத்தியக்ஷ முண்டா கின்றது. ஆண்டு மனசையுக்த சமவாய சம்பந்தத்தால் மன சம்ப ந்தமுடைய சுகததில் துக்கத்தன்மை யபாவததின் விசேஷணத் தன்மைசசம்பந்த மிருக்கின்றது. ஏனெனின் மனதோடு சையுக்த மான ஆத்மாவினிடத்துச சுகமுதலிய குணங்களின் சமவாய சம்பந்த மிருக்கின்றது. அபாவத்திற்கு விசேஷணத்தன்மைச சம் பந்தமே யுண்டாகின்றது. இவ்வாற்றால் அபாவத்தோடு மானசப் பிரத்தியக்ஷத்திற்கேது மன சம்பந்த விசேஷணத் தன்மை யொன் றேயாம். யாண்டு ஆத்மாவின்கண் சுகாபாவ முதலியவற்றின் பிரத்தியக்ஷ முண்டாகின்றதோ, ஆண்டுச் சையோக சம்பந்தத் தால் மனசம்பந்தமுடைய வாத்மாவின்கண் சுகாபாவ முதலியவற் றின் விசேஷணத்தன்மைச சம்பந்த மிருக்கின்றது. சுகமுதலியவ ற்றில் துக்கத் தன்மை யபாவ முதலியவற்றின் பிரத்தியக்ஷ முண் டாகின்றது. ஆண்டுச் சையுக்த சமவாய சம்பந்தத்தால் மனசம்ப ந்தமுடையன சுகாதிகள்; அவற்றில் துக்கத்தன்மை யபாவமுதலிய வற்றின் வி[illegible]ஷணத்தன்மைச் சம்பந்தமிருக்கின்றது. சிலவிடத்து சசாக்ஷாத் சம்பந்தத்தால மனசம்பந்த முடையவற்றின்கண்ணும், சிலவிடத்துப பரம்பரைச சம்பந்தத்தான் மன சம்பந்த முடைய வற்றின் கண்ணும அபாவத்தின் விசேஷணத்தன்மைச் சம்பந்த மிருக்கின்றது. இவ்வாற்றான் மானசப் பிரத்தியக்ஷத்திற் கேது நான்குசம்பந்தங்களாம். அவையாவன:—(௧)மனசையோகம்,(௨) மனசையுக்த சமவாயம்,(௩)மனசையுக்த சமவேத சமவாயம், (௪) மனசம்பந்த விசேஷணத் தன்மை யென்பனவாம. மானசப பிரத்தி யக்ஷத்திற் கேதுவாகிய நான்கு சம்பந்தமும் வியாபாரமாம்; சம்ப ந்தரூப வியாபாரமுடைய அசாதாரண காரணமான மனம் கரண

மூரம்; ஆதலாற் பிரமாணமாம். ஆத்ம சுகமுதலியவற்றின் மானச சாக்ஷாதகாரமானை பிரமை பயன். எங்ஙனம் ஆத்மாவின் குண மாகிய சுகமுதலியவற்றின் பிரததியக்ஷததிற் கேது சையுக்த சம வாய சம்பந்தமோ, அங்ஙனமே தர்மம் அதர்மம் சம்ஸ்கார முத லியனவும ஆத்மாவின் குணங்களாகலின், அவற்றோடு மனதிற்குச் சையுதத சமவாய சமபநதம் இருக்கின்றது. ஆனால் தர்ம முத லிய குணங்கள் பிரத்தியக்ஷ யோக்கிய மன்று. ஆகலின் தர்ம முத லியவற்றின் மானசப் பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. பிரத்தியக்ஷ யோக்கியமற எதன்க ணில்லையோ, அதன் பிரத்தியக்ஷ முண்டா கிறதில்லை. யாண்டு ஆசிரயததின் பிரததியக்ஷ முண்டாகினறதோ, ஆண்டுச சையோகத்தின் பிரததியக்ஷ முண்டாகின்றது. எங்ஙனம்: இரண்டு விரல்கள் சையோகத்திற் காசிரயமாம. விரல்களிரண்டின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷ முண்டாகுங் காலத்துச் சையோகத்தின் சாக்ஷுஷப் பிரததியக்ஷ முண்டாகின்றது. விரல்களின் துவாசப் பிரத்தியக்ஷ முண்டாகுங்காலதது விரலகளினது சையோகத்தின் துவாசப் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. அங்ஙனமே அதமமன சை யோகத்தால ஆதமாவின் மானசப பிரததியக்ஷ முண்டாகின்றது. ஆண்டுச் சையோகத்திற் காசிரயம் ஆதமாவாகலின், சையோகத தின் மானசப் பிரததியக்ஷமு முண்டாதல் வேண்டும. என்றாலும சையோகத்திற் காசிரயம இரண்டாம. யாண்டு இரண்டும் பிரத்திய க்ஷமாகின்றனவோ ஆண்டுச் சையோகததின பிரததியக்ஷ முண்டா கும். யாண்டு ஒன்றன் பிரததியக்ஷ முண்டாய் மற்றொன்றின் பிரத தியக்ஷ முண்டாகவில்லையோ, ஆண்டு சையோகததின் பிரததியக்ஷ முண்டாதலில்லை. எங்ஙனம: இரண்டு கடங்களின் பிரத்தியக்ஷ முண்டாகின்றதாகலின அவற்றினது சையோகத்தின் பிரத்தி யக்ஷமு முண்டாகின்றது. அன்றியும், கடததின் கிரியையால் கட த்திற்கும் ஆகாசத்திற்கும் சையோக முண்டாகின்றது. ஆண்டுச சையோகத்திற காசிரயம கடமும ஆகாசமுமாம. அவற்றுள் கடமோ பிரததியக்ஷம, ஆகாயம பிரததியக்ஷமன்று. ஆதலால அவற்றின் சையோகமும பிரததியக்ஷ மன்று. இவ்வாற்றால் ஆத்ம மன சையோகததிற் காசிரயம ஆதமாவும மனமுமாம். அவற் றுள், ஆத்மாவின் மானசப்பிரததியக்ஷ முண்டாகின்றது, மனதின் மானசப் பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை யாகலின், ஆத்ம மன சையோகததின் மானசப் பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. ஆத்மா,

ஞானம் சுகமுதலியன வென்னு மிவற்றின் மானசப் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. ஆண்டு ஞானம் சுக முதலியவற்றை விட்டு ஆத்மாமாத்திரத்தின் பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. ஆத்மாவை விட்டுக் கேவலம் ஞானம சுகமுதலியவற்றின் பிரத்தியக்ஷமு முண்டாகிறதில்லை. ஆனுல் ஞானம இச்சை கிரியை சுகம் துக்கம் துவேஷ மென்னும குணங்களுள் யாதேனும் ஓர குணத்தின் மானசப் பிரத்தியக்ஷமும ஆதமாவின் மானசப் பிரத்தியக்ஷமு முண்டாகின்றன. யான அறிகிறேன், யான் இச்சையுடையவன், முயற்சியுடையவன், சுகி, துக்கி, துவேஷமுடையவன் என்றிவ் வாறு யாதேனும் ஓர குணத்தை விஷயஞ் செய்வதாய் ஆதமா வின் மானசப் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. இவ்வாற்றுல் இந்தி ரிய ஜநகியப் பிரத்தியக்ஷப் பிரமைக் கேது இநதிரியததின் சமபாந்த மாம; அது வியாபாரமாம; இநதிரியம பிரத்தியக்ஷப் பிரமாண மாம; இநதிரிய ஜநகிய சாக்ஷாதகாரமாகிய பிரத்தியக்ஷப் பிரமை பயனும. இது நியாய சாஸ்திரத்தின் சித்தாந்தம்.

## கக. பிரத்தியக்ஷப் பிரமையினது கரணத்தின் விசாரம்.

கௌரிகாந்த பட்டசாரியர், பிரத்தியக்ஷப் பிரமைக்கு இந் திரியம கரண மன்று. ஆனுல் இநதிரியததின் சமபநதமாகிய எதனை வியாபாரமெனக் கூறுகின்றுர்களோ, அது கரணமாம்; இநதிரியம காரணமாம; கரண மனறு என் றிவ்வாறு எழுதி யிருக்கின்றனா. அதன் அபிபபிராயமஇதுவாம:—வியாபாரமுடைய காரணம கரணமெனப் படுவதில்லை. ஆனுல் எதுண்டாகவே காரி யத்தில் விலமப (தாமத) முண்டாகிறதில்லையோ, மறைப்பின்றிய பிற்கணததில் காரியமுண்டாகிறதோ, அப்படிபபட்ட காரணம் கரணமெனப்படும். இநதிரியததின் சமபநத முண்டாகவே பிரத் தியக்ஷப் பிரமையாகிய காரியத்தில் விலமப முண்டாகிறதில்லை. இநதிரிய சமபநதத்தான் மறைப்பின்றிய பிறகணததில பிரத்தி யக்ஷப் பிரமையாகிய காரியம அவசிய முண்டாகின்றது. ஆதலால் இந்திரியத்தின் சமபநதமே கரணமா யிருத்தலின் பிரத்தியக்ஷப் பிரமாணமாம்; இநதிரியம் பிரமாண மன்றென்னும் மதத்தில் கட த்தின்கரணம் கபால மன்று; ஆனுற் கபாலத்தின சையோகம் கர ணமாம். கபாலமோ கடததின் காரணமாம,கரண மன்று. அங்ஙனு

மே படத்தின் கரணமும் தந்துவன்று; ஆனால் நூலின்சையோகம் கரணமாம். தந்துவோ படத்திற்குக் காரணமாம், கரண மன்று. இவ்வாற்றால் முதற்பக்ஷத்தில் எதனை வியாபார வடிவ காரண மென்று கொண்டிருக்கின்றார்களோ, அதுவே சபக்ஷத்தில் கரண மாம். எதனைக் கரணமாகக் கொண்டிருக்கின்றார்களோ அது கேவல காரணமாம்.

## கஉ. ஞானத்தின் ஆசிரயத்தைக் கூறுதல்.

பிரத்தியக்ஷ ஞானத்திற் காசிரயம் ஆத்மாவாம், அது கர்த் தாவாம். அதனையே பிரமாதா வென்றும் ஞாதா வென்றும் கூறு வர். பிரமை ஞானத்தின் கர்த்தா பிரமாதா வெனப்படும்; ஞானத் தின் கர்த்தா ஞாதா வெனப்படும். அந்த ஞானம பிரம மாயினு மாகுக, அல்லது பிரமை யாயினு மாகுக. நியாய சித்தாந்தத்தில் எங்ஙனம் பிரமைஞானம் இந்திரிய ஜந்நியமோ, அங்ஙனமே பிரம ஞானமும இந்திரிய ஜந்நியமாம. ஆனால் பிரமஞானத்தின் காரண மாகிய இந்திரிய மெதுவோ, அது பிரமஞானத்தின் கரண மென ப்படும்; பிரமாண மெனப்படுகிறதில்லை; பிரமையின் அசாதாரண காரணம் பிரமாண மெனப்படுதலான்.

பிரமஞானத்தின் விசாரம் கங—கஎ.

## கங. நியாயமதத்தின் அநுசாரமான பிரமத்தின் றன்மை.

யாண்டுப் பிரம முண்டாகின்றதோ, ஆண்டு நியாயமதத்தில் இதுகிரமமாம.—தோஷத்தோடுகூடிய நேத்திரத்தின் சையோகம இரஜ்ஜுவினோடு எப்போ துண்டாகின்றதோ,அப்போது இரஜ்ஜு த்தன்மைத தர்மத்தோடு நேத்திரத்திற்குச சையுத்த சமவாய சம்பந்தம் இருக்கின்றது. ஆனால் தோஷத்தின் வலியால் இரஜ்ஜு த்தன்மை தோற்றுகிற திலலை, இரஜ்ஜுவில் சர்ப்பத் தன்மை தோற்றுகின்றது. சர்ப்பத் தன்மையோடு நேத்திரத்திற்குச சையு க்த சமவாய சம்பந்த மில்லையாயினும், இந்திரிய சம்பந்தமின்றியே தோஷ வலியால் சர்ப்பத் தன்மையின் சம்பந்தம் இரஜ்ஜுவில் நேத்திரத்தால் தோற்றுகின்றது. ஆனால் எவனுக்குத் தண்டத் தன்மையின் ஸமிருதி முன்னுளதோ, அவனுக்கு இரஜ்ஜுவில் தண்டத் தன்மை தோற்றுகின்றது. எவனுக்குச் சர்ப்பத் தன்மை

யின் பூர்வ ஸ்மிருதி யுளதோ, அவனுக்கு இரஜ்ஜுவில் சர்ப்பத் தன்மை தோற்றுகின்றது.

## கச. வஸ்துவின் ஞானத்தில் விசேஷணஞானம் ஏதுவாதல்

யாண்டுத் தோஷமின்றிய இந்திரியத்தால் யதார்த்த ஞானமுண்டாகின்றதோ, ஆண்டுமே விசேஷணத்தின் ஞானம் ஏதுவாம். ஆகலின் இரஜ்ஜுஞானத்திற்குமுன் இரஜ்ஜுத்தன்மையின் ஞானமுண்டாகின்றது. ஏனெனின், வெள்ளைப் பாகையும் வெள்ளைக் கஞ்சுகமு (சட்டையு) முடைய தண்டந் தாங்கிய பிராமணனோடு நேத்திரத்திற்குச் சையோக முண்டாகின்றது. ஆண்டு ஓர்காலத்து மனிதன் என்னும் ஞானமும், ஓர்காலத்துப் பிராமண னென்னும் ஞானமும், ஓர்காலத்துத் தண்டந்தாங்கிய பிராமண னென்னும் ஞானமும், ஓர் காலத்துச் சட்டையுடைய பிராமண னென்னும் ஞானமும், ஓர்காலத்து வெள்ளைச் சட்டையுடைய பிராமண னென்னும் ஞானமும், ஓர்காலத்துப் பாகையுடைய பிராமண னென்னும் ஞானமும், ஓர்காலத்து வெள்ளைப்பாகையுடைய பிராமண னென்னும் ஞானமும், ஓர்காலத்துப் பாகையும் சட்டையுமுடைய தண்டந் தாங்கிய பிராமண னென்னும் ஞானமும், ஓர் காலத்து வெள்ளைப் பாகையும் வெள்ளைச் சட்டையு முடைய தண்டந் தாங்கிய பிராமண னென்னும் ஞானமு முண்டாகின்றன. ஆண்டு நேத்திர சையோகமோ எல்லா ஞானங்களுக்கும் சாதாரண காரணமாம். ஞானங்களின் விலக்ஷணத் தன்மையில் இஃது ஏதுவாம்:— யாண்டு மனிதத்தன்மையாகிய விசேஷணத்தின் ஞானமும் நேத்திர சையோகமு முண்டாகின்றனவோ, ஆண்டு மனிதனென்னும் சாக்ஷுஷஞான முண்டாகின்றது. யாண்டுப் பிராமணத்தன்மையின் ஞானமும் நேத்திரசையோகமுமுண்டாகின்றனவோ, ஆண்டுப் பிராமணனென்னும் சாக்ஷுஷஞான முண்டாகின்றது. யாண்டுத் தண்ட பிராமணத் தன்மைகளின் ஞானமும் நேத்திர சையோகமு முண்டாகின்றனவோ, ஆண்டுத் தண்டந்தாங்கிய பிராமணனென்னும் சாக்ஷுஷஞான முண்டாகின்றது. யாண்டுச் சட்டை பிராமணத்தன்மை யென்னும் இரண்டு விசேஷணங்களின் ஞானமும் நேத்திரத்தின் சையோகமு முண்டாகின்றனவோ, ஆண்டுச் சட்டையுடைய பிராமணனென்னும் சாக்ஷுஷஞான முண்டாகின்

றது. யாண்டு வெண்மையோடுகூடிய சட்டைவடிவமும் பிராமணத்தன்மை வடிவமுமாகிய விசேஷணங்களின் ஞானமும் நேத்திரசையோகமு முண்டாகின்றனவோ, ஆண்டு வெள்ளைச் சட்டையுடைய பிராமண னென்னும் சாக்ஷுஷ ஞான முண்டாகின்றது. யாண்டுப் பாகை பிராமணத்தன்மையென்னும் இரண்டு விசேடணங்களின ஞானமும் நேத்திரசையோகமு முண்டாகின்றனவோ, ஆண்டுப பாகையுடைய பிராமண னென்னும் சாக்ஷுஷ ஞான முண்டாகின்றது. யாண்டு வெண்மையோடு கூடிய பாகையும் பிராமணத்தன்மையு மாகிய விசேஷணங்களின் ஞானமும் நேத்திரசையோகமு முண்டாகின்றனவோ, ஆண்டு வெள்ளைப் பாகையுடைய பிராமண னென்னும் சாக்ஷுஷ ஞான முண்டாகின்றது. யாண்டுப் பாகை, கஞ்சுகம், தண்டம், பிராமணத்தன்மையென்னும் நான்கு விசேஷணங்களின் ஞானமும் நேத்திர சையோகமு முண்டாகின்றனவோ, ஆண்டுப் பாகையும சட்டையுமுடைய தண்டந் தாங்கிய பிராமண னென்னும் ஞான முண்டாகின்றது. யாண்டு வெண்மை யடுத்த பாகை வெண்மையடுத்த கஞ்சுகம தண்டம் பிராமணத் தன்மை யென்னும விசேஷணங்களின் ஞானமும நேத்திர சையோகமு முண்டாகின்றனவோ, ஆண்டு வெள்ளைப்பாகையும வெள்ளைக் கஞ்சுகமுமுடைய தண்டந் தாங்கிய பிராமண னென்னும ஞான முண்டாகின்றது. இவ்வாற்றால எவ்விசேஷண பூர்வகமான ஞான முண்டாகின்றதோ, அவ்விசேஷண விசிஷ்டத்தின் ஞானம இந்திரியத்தா லுண்டாகின்றது. ஆண்டு இந்திரியத்தின் சம்பந்தமோ முழுதும் சமமாம். விசிஷ்டப் பிரத்தியக்ஷத்தின் விலக்ஷணத் தன்மைக்கு ஏது விலக்ஷண விசேஷண ஞானமாம். விலக்ஷண விசேஷணஞானத்தைக் காரணமென அங்கீகரியாவிடின், நேத்திர சையோகத்தால் பிராமணனது சகல ஞானமும சமமாதல் வேண்டும். யாண்டுக் கடத்தோடு நேத்திரத்திற்கும அங்ஙனமே துவக்கிற்கும் சையோகமுண்டாகின்றதோ, ஆண்டு ஓகாலத்துக் கடமிருக்கின்றதென்னும் பிரத்தியக்ஷ முண்டாகின்றது; ஓகாலத்து மண்ணிருக்கின்றதென்னும் ஞான முண்டாகின்றது; ஓகாலத்துக் கடமண் ணிருக்கின்ற தென்னும ஞானம உண்டாகின்றது. யாண்டுக் கடத்தன்மையாகிய விசேஷணத்தின் ஞானமும இந்திரிய சையோகமு முண்டாகின்றனவோ, ஆண்டுக் கடமிருக்கின்ற தென்னும் பிரத்

தியக்ஷ முண்டாகின்றது. யாண்டு மண்டன்மையாகிய விசேஷணத்தின் ஞானமும் இந்திரிய கட சையோகமு முண்டாகின்றனவோ, ஆண்டு மண் ணிருக்கின்றதென்னும பிரத்தியக்ஷ முண்டாகின்றது. யாண்டுக் கடத்தன்மை மண்டன்மை யென்னும இரண்டு விசேஷணங்களின் ஞானமும் இந்திரிய சையோகமு முண்டாகின்றனவோ, ஆண்டுக் கடமண் என்னும் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. இவ்வாறாகல கடத்தோடு இந்திரியத்தின் சையோகமாகிய காரணம ஒன்றும்; விஷயமாகிய கடமும ஒன்றும. கடத்தன்மை மண்டன்மைச சாதிகள் கடத்தில் என்று மிருக்கின்றன ; என்றாலும கடத்தன்மையோடு கூடிய கடமாத்திரத்தை ஞானம் விஷயஞ் செய்கின்றது. திரவியத் தன்மை மண்டன்மை முதலிய ஜாதிகளையும உருவமுதலிய குணங்களையும கடமிருக்கிறதென்னும ஞானம விஷயஞ்செய்கிறதில்லை. ஓகாலத்து மண்ணிருக்கின்றதெனனும கடஞானம கடத்தில் கடத்தன்மையையும விஷயஞ் செய்கிறதில்லை; ஆனால் மண்டன்மையையும கடத்தையும அங்ஙனமே மண்டன்மையின சம்பந்தத்தையும விஷயஞ் செய்கின்றது; ஓ காலத்து மண்டன்மை கடத்தன்மைச சாதிகளையும, அவற்றிற்குக் குடத்திலுள்ள சம்பந்தத்தையும, அங்ஙனமே கடத்தையும விஷயஞ்செய்கின்றது. இவ்வாறாகல ஞானத்தின பேதம சாமக்கிரிகளின பேதமின்றிச சம்பவியாது. ஆண்டு விசேஷண ஞானமாகிய சாமக்கிரியின் பேதமே ஞானத்தின விலக்ஷணத்தன்மைக்கு ஏதுவாம. யாண்டுக் கடமிருக்கின்றதெனனும ஞான முண்டாகின்றதோ, ஆண்டுக் கடமும, கடத்தன்மையும, கடத்தில் கடத்தன்மையின் சமவாய சம்பந்தமும விளங்குகின்றன. யாண்டு மண்ணிருக்கின்றதெனக் கடத்தின் ஞான முண்டாகின்றதோ, ஆண்டுக் கடமும, மண்டன்மையும், கடத்திலுள்ள மண்டன்மையின் சமவாயசம்பந்தமும விளங்குகின்றன.

## கரு. விசேஷண விசேஷியங்களின் சொரூபம்.

ஆண்டுக் கடத்தன்மை மண்டன்மைகள் விசேஷணமும், கடம விசேஷியமுமாம. ஏனெனின், சம்பந்தத்தின பிரதியோகி விசேஷணமெனப் படும, சம்பந்தத்தின் அநுயோகி விசேஷிய மெனப படும. எதன் சம்பந்த முண்டாகின்றதோ அது சம்பந்தத்தின் பிரதியோகியெனப்படும், எதிற் சம்பந்த முண்டாகிறதோ அது அநு

யோகியெனப்படும். குடத்தன்மை மண்டன்மைகளின் சமவாய சம்பந்தம் கடத்திற் காணப்படுகின்றது. ஆகலின், குடத்தன்மை மண்டன்மைகள் சமவாயசம்பந்தத்தின் பிரதியோகியா யிருத்தலின் விசேஷணமாம், சம்பந்தத்தின் அநுயோகி கடமாகலின் விசேஷியமாம். யாண்டுத் தண்டி புருஷனென்னும் ஞான முண்டாகின்றதோ, ஆண்டுத் தண்டத்தன்மை விசிஷ்டதண்டம் சையோகசம்பந்தத்தால் புருஷத்தன்மை விசிஷ்ட புருஷனிடத்துக் காணுகின்றது. அதன் ஞானமே காஷ்டமுடைய மனிதனென உண்டாகின்றது. ஆண்டுக் காஷ்டத்தன்மை விசிஷ்ட தண்டம் மனிதத்தன்மை விசிஷ்ட புருஷனிடத்துச் சையோக சம்பந்தத்தால் தோற்றுகின்றது. முதல் ஞானத்தில் தண்டத்தன்மை விசிஷ்டதண்டம் சையோகத்தின் பிரதியோகியா யிருத்தலின் விசேஷணமாம்; புருஷத்தன்மை விசிஷ்ட புருஷன் சையோகத்தின் அநுயோகியா யிருத்தலின் விசேஷியமாம். இரண்டாவது ஞானத்தில் காஷ்டத்தன்மை விசிஷ்ட தண்டம் பிரதியோகியாம், மனிதத்தன்மை விசிஷ்ட புருஷன் அநுயோகியாம். இரண்டு ஞானங்களினும் தண்டம் விசேஷணமும் புருஷன் விசேஷியமுமா யிருக்கினும், முதல்ஞானத்திலோ, தண்டத்தில் தண்டத்தன்மை தோற்றுகின்றது; காஷ்டத்தன்மை தோன்றுகின்றதில்லை. புருஷனிடத்துப் புருஷத்தன்மை தோற்றுகின்றது; மனிதத்தன்மை தோற்றுகிறதில்லை. அங்ஙனமே இரண்டாவது ஞானத்திலோ, தண்டத்தில் காஷ்டத்தன்மை தோற்றுகின்றது; தண்டத் தன்மை தோற்றுகிற தில்லை. புருஷனிடத்து மனிதத்தன்மை தோற்றுகின்றது; புருஷத்தன்மை தோற்றுகிற தில்லை. தண்டத்தன்மையும் காஷ்டத் தன்மையும் தண்டத்தின் விசேஷணங்களாம். ஏனெனின், தண்டத்தன்மை முதலியவற்றிற்குத் தண்டத்திலுள்ள சம்பந்த மெதுவோ, அதன் பிரதியோகி தண்டத்தன்மை முதலியனவாம். தண்டத்தன்மை முதலியவற்றிற்குத் தண்டத்தில் சம்பந்த மிருக்கின்றது. ஆகலின் சம்பந்தத்திற்கு அநுயோகியா யிருத்தலின் தண்டம் விசேஷியமாம். இவ்வாற்றால் தண்டத்தன்மைக்குத் தண்டம் விசேஷியமாம்; புருஷனுக்குத்தண்டம் விசேஷணமாம்; ஏனெனின், தண்டத்திற்குப் புருஷனிடத்துள்ள சையோகசம்பந்த மெதுவோ, அதன் பிரதியோகி தண்டமாம்; ஆகலின் அது புருஷனுக்கு விசேஷணமாம், அச்சையோகத்திற்குப் புருஷன் அநுயோகி யாகலின் விசேஷியமாம்.

புருஷனுக்குத் தண்டம விசேஷணமாதல் போலவே புருஷத்தன்மை மனிதத் தன்மைகளும் புருஷனுக்கு விசேஷணங்களாம. ஏனெனின், தண்டத்திற்குப் புருஷனோடு சையோக சமபநதம் தோற்றுவதுபோலப் புருஷத்தன்மை முதலியசாதிக்குச் சமவாயசம்பந்த தோற்றுகின்றது. அசசமபநதத்திற்குப் புருஷத தன்மைமுதலியன பிரதியோகியா யிருத்தலின் விசேஷணமுமம, புருஷன் அநுயோகியா யிருத்தலின் விசேஷியமுமாம. ஆனால் இத்துணைப் பேதமுண்டு:—புருஷனது தாமமாகிய புருஷததன்மை மனிதத்தன்மைமுதலியன எவையோ, அவை கேவலம புருஷவியக்தியின்விசேஷணங்களாம. புருஷததன்மைமுதலிய தாமவிசிஷ்ட புருஷவியக்தியில் தண்டமுதலியன விசேஷணமாம. தண்டமுதலியனவும், தண்டதன்மைமுதலிய தர்மங்களின் விசேஷியமுமம, புருஷததன்மை முதலியவற்றின் விசேஷணமுமாம. ஆனால தண்டத்தன்மைமுதலிய விசேஷணங்களின் சமபநததலைக்கொண்டு புருஷன் முதலிய விசேஷியத்தின் சமபநதி உததர காலததில தண்டாதிகளாம. இவ்வாற்றால் கேவல வியக்தியில் புருஷததன்மை மனிதத்தன்மைகள் விசேஷணமாம். புருஷத்தன்மை அல்லது மனிதத்தன்மை விசிஷ்ட புருஷ வியக்தியில் தண்டததன்மை அல்லது காஷ்டத்தன்மை விசிஷ்டதண்டம் விசேஷணமாம. கேவலதண்டவியக்தியில தண்டத்தன்மையல்லது காஷ்டத்தன்மை விசேஷணமாம.

இவ்வாற்றால், ஞானததிறகு விஷயமாதலைவிசாரிக்கின் வெகு சூக்ஷ்மமாம. இதனைச சக்கரவர்ததிகதாதர பட்டாசாரியர் சங்கதி யென்னும நூலில எழுதியிருக்கின்றனா. ஜயராமபஞசானன பட்டாசாரியரும, அஙஙனமே இரகுநாதபடடாசாரியரும விஷயத் தன்மைவிசார மெனனுநூலில எழுதியிருக்கின்றனா. சூக்ஷ்ம பதார்த்தங்கள் சமஸ்கிருதவாக்கானன்றி எழுதப்படா; அறிதற் கரியனவுமாம். அதுபற்றி மிகவும் ஸ்தூலமான விதமாததிரம ஈண்டு அறிவிக்கப்பட்டிருக்கின்றது.

---

## ௧௬. விசேஷண விசேஷியங்களினது ஞானத்தின் பேதபூர்வகமான நியாயமதத்தினது பிரமஞானத்தின் சமாப்தி.

இவ்வாற்றால், விசிஷ்ட ஞானத்திற்கு ஏது விசேஷண ஞானமாய்; அவ்விசேஷணத்தின் ஞானம் சிலவிடத்து ஸ்மிருதிரூபமாம், சிலவிடத்து நிருவிகற்பமாம். சிலவிடத்து விசிஷ்டஞானமே விசேஷணமாம். விசேஷியத்திற்கு முன் விசேஷண மாத்திரத்தோடு இந்திரியத்திற்குச் சம்பந்தமுண்டாகின்றது. ஆண்டுவிசேஷணம் விசேஷண மாத்திரமாக இந்திரிய சம்பந்த ஜந்நியமாம். அதுவும் விசிஷ்டப்பிரத்தியக்ஷமேயாம். யாண்டுப் புருஷனின்றிக் கேவல தண்டத்தோடுஇந்திரியத்திற்குச் சம்பந்தமுண்டாய்ப் பிற்கணத்தில் புருஷனோடுசம்பந்தமாகின்றதோ, ஆண்டுத் தண்டரூபவிசேஷணத்தின் ஞானம் விசேஷணமாத்திரத்தின் சம்பந்தத்தா லுண்டாகின்றது. அதற்குப் பிற்கணத்தில் தண்டிபுருடன் என்னும் விசிஷ்டத்தின் ஞானமுண்டாகின்றது. கடமிருக்கிறதென்னும் முதல்விசிஷ்டஞானமெதுவோ, அதற்குமுன் கடத்துவரூபவிசேஷணத்தின் நிர்விகற்ப ஞானம் இந்திரிய சம்பந்தத்தா லுண்டாகின்றது. பிற்கணத்தில்கடமிருக்கிறதென்னும் கடத்துவவிசிஷ்டகடஞானமுண்டாகின்றது. எவ்விந்திரிய சம்பந்தத்தால் கடத் தன்மையின் நிர்விகற்ப ஞானமுண்டாகின்றதோ, அவ்விந்திரிய சம்பந்தத்தாற்றானே கடத்துவ விசிஷ்டகடத்தின் சவிகற்ப ஞானமுண்டாகின்றது. கடத்தன்மையின் நிர்விகற்ப ஞானத்தில் இந்திரியம் கரணமும், இந்திரியத்தின் சையுக்த சமவாய சம்பந்தம் வியாபாரமு மாம். கடத் தன்மை விசிஷ்ட கடத்தின் சவிகற்ப ஞானத்தில் இந்திரியத்தின் சையுக்த சமவாய சம்பந்தம் கரணமும், நிருவிகற்பஞானம் வியாபாரமுமாம். இவ்வாறு ஓர் ஆதுனிக(நவீன)நையாயிகர் நிர்விகற்பக சவிகற்பக ஞானங்களில் கரணத்தின் பேதம் கூறியிருக்கின்றனர்.

அது சம்பிரதாயத்திற்கு விருத்தமாம். ஏனெனின், வியாபாரமுடைய அசாதாரண காரணம் கரணமெனப்படு மென்னும் மதத்தில் பிரத்தியக்ஷ ஞானத்திற்குக் காரணமாயிருத்தலால் இந்திரியமே பிரத்தியக்ஷப் பிரமாணமெனப் படுகின்றது. ஆதுனிகர் கிரமப்படி சவிகற்பகஞானத்தின் கரணமாயிருத்தலால், இந்திரியத்தின் சம்பந்தத்தையும் பிரமாண மெனல் வேண்டும். சம்பிரதாயமுடை

யோர் சம்பந்தத்தைப் பிரமாணமீாகக் கூறினரில்லையாகலின், இரண்டு பிரத்தியக்ஷ ஞானங்களுக்கும இந்திரியமே கரணமாம. ஆதலால் இந்திரியம பிரத்தியக்ஷப் பிரமாணமாம். ஆனால் நிர்விகற்பக ஞானத்தில் இந்திரியத்தின் சமபந்தமாத்திரம வியாபாரமாம். சவிகற்பஞானத்தில் இந்திரியத்தின் சமபந்தமும் நிர்விகற்பஞானமுமாகிய இரண்டும வியாபாரமாம. இருவகைப பிரத்தியக்ஷ ஞானத்திற்குங் கரணமாயிருத்தலால் இந்திரியம பிரத்தியக்ஷப் பிரமாணமாம. தாமதாமிகளின் சமபந்தத்தை விஷயஞ் செய்யும ஞானம் சவிகற்பகஞான மெனப்படும. கடமிருக்கின்றது என்னும ஞானத்தால் கடத்தில் கடத தன்மையின சமவாயம விளங்குகின்றதாகலின், சவிகற்ப ஞானத்திற்குத தாமம தர்மி சமவாயமென்னும் மூன்றும் விஷயமாம. ஆதலால் கடமிருக்கிறது என்னும விசிஷ்டஞானம சமபந்தத்தை விஷயஞ்செய்தலால் சவிகற்பக மெனப்படுகின்றது. அதனின் வேறாய ஞானத்தை நிருவிகற்பக ஞான மென்பா. சவிகற்பக நிருவிகற்பக ஞானங்களின் இலக்கணம சிந்தாமணி கண்டிபில விஸ்தாரமாய் எழுதப்பட்டிருக்கின்றது. அவ்வர்த்தம் சூக்ஷ்மமா யிருத்தலின் ஈண்டு விஸ்தாரமாய் எழுதப்படவில்லை. இவ்வாற்றான் முதல்விசிஷ்ட ஞானத்தை யுண்டுபண்ணும் விசேஷணஞானம் நிருவிகற்பக ஞானமாம். ஒருமுறை கடமிருக்கிறது என்னும் விசிஷ்டஞான முண்டாய்ப் பின்னாக் கடத்தின் விசிஷ்டஞான முண்டாகுமிடத்து, கடத்தோடு இந்திரியத்திற்குச் சமபந்தமிருக்கின்றது. முன் அநுபவித்த அதே கடத்தன்மையின் ஸ்மிருதி யுண்டாகின்றது. அதற்குப் பிற்கணத்தில் கடமிருக்கிற தென்னும் விசிஷ்டஞான முண்டாகின்றது. இவ்வாற்றான் இரண்டாவது முதலிய விசிஷ்ட ஞானத்திற் கேதுவாகிய விசேஷண ஞானம் ஸ்மிருதிரூபமாம்.

யாண்டுத் தோஷத்தோடுகூடிய நேத்திரத்திற்கு இரஜ்ஜுவோடாயினும் சுத்தியோடாயினும சமபந்த முண்டாகின்றதோ, ஆண்டுத் தோஷத்தின் வலியால் சாப்பத்தன்மையின் அல்லது இரஜதத்தன்மையின் ஸ்மிருதி யுண்டாகின்றது; இரஜ்ஜுத்தன்மை சுத்தித் தன்மைகளின் ஸ்மிருதி யுண்டாகிறதில்லை. விசிஷ்டஞானத்திற் கேதுவாகிய விசேஷண ஞானம் எத் தர்மத்தை விஷயஞ் செய்கின்றதோ, அத்தர்மமே விசிஷ்டஞானத்தோடு விஷயத்

தில் விளங்குகின்றது. சாபபத் தன்மை இரஜதத் தன்மைகளின் ஸமிருதி ஞானம் இரஜ்ஜுத்தன்மை சுத்தித்தன்மைகளை விஷயஞ் செய்கிற தில்லை; ஆனால் சாப்பத் தன்மை இரஜதத் தன்மைகளை விஷயஞ் செய்கின்றது. ஆகலின் சாப்ப மிருக்கிறது என்னும இர ஜ்ஜுவின் விசிஷ்ட ஞானத்தால் இரஜ்ஜுவில் சர்ப்பத் தன்மை தோற்றுகின்றது. இரஜதம் இருக்கின்ற தென்னும சுத்தியின் விசி ஷ்டஞானத்தால் சுத்தியில் இரஜதத்தன்மை தோற்றுகின்றது. சர் ப்பமிருக்கின்ற தென்னும விசிஷ்டப் பிரமத்தில் விசேஷியம இர ஜ்ஜு, சர்ப்பத்தன்மை விசேஷணம். ஏனெனின், சர்ப்பத்தன்மை யின சமவாய சமபநதம இரஜ்ஜுவில் தோற்றுகின்றது. அச் சம வாயத்திற்குச் சர்ப்பததன்மை பிரதியோகியும, இரஜ்ஜு அநு யோகியுமாம. அங்ஙனமே வெள்ளியிருக்கின்றது என்னும பிரமத் தால் சுததியில் இரஜதத்தன்மையின் சமவாயம தோற்றுகின்றது. அசசமவாயததிறகுப் பிரதியோகி இரஜதத்தன்மையாகலின் அது விசேஷணமாம; சுததி அநுயோகியாகலின் விசேஷியமாம். இவ் வாற்றால் சகல பிரமஞானங்களாலும விசேஷணத்தின் அபாவ முடையதன்கண் விசேஷணம் தோற்றுகின்றது. ஆகலின் நியாய மதத்தில் விசேஷணத்தின் அபாவமுடையதன்கண் விசேஷணந் தோறறுதல் பிரமம் (மயக்கம) எனப்படும். அதனையே அயதார்த்த ஞான மென்பர்; அந்நியதாக்கியாதி யென்றும கூறுவர். பிரமஞானத் தின்கண் சூக்ஷ்மவிசாரத்தைஅந்நியாதக்கியாதிவாதமென்னும்நூலில் சக்கரவர்ததி கதாதரபடடாசாரியர் எழுதியிருக்கின்றனர். அஃது அறிதற்கரியதாகலின் ஈண்டெழுதப்படவில்லை.இவ்வாற்றால் நியாய மதத்தில் சாப்பமுதலிய பிரமத்திற்கு விஷயம இரஜ்ஜுமுதலியன வாம; சர்ப்பாதிக ளன்று. பிரத்தியக்ஷவடிவமான பிரம(மயக்கம) ஞானமும இநதிரிய ஜநநியமாம்.

## ௬௭. வேதாந்த சித்தாந்தத்தின் அநுசாரமாக இந்திரிய ஜந்நியமாகாத பிரமஞானத்தின்றன்மை.

வேதாந்த சித்தாந்தத்தில் சர்ப்பப்பிரமத்திற்கு விஷயம இரஜ் ஜுவன்று; அநிர்வசனீய சர்ப்பமாம. பிரமஞானம் இந்திரியஜந்நிய மன்று. நியாய மதத்தில் சகல ஞானங்களுக்கும் ஆசிரயம ஆத்மா வாம். வேதாந்த மதததில் ஞானத்திற் குபாதானகாரணம் அந்தக் கரணமாகலின் அந்தக்கரணம் ஆசிரயமாம. நியாயமதத்தில் சுக முதலியவற்றை ஆதமாவின் குணமென்பர். அவை முழுவதும

அந்தக்கரணத்தின் பரிணமமாம். ஆகிலின் அந்தக்கரணத்தின்தர்மமாய. ஆத்மாவின் தர்ம மன்று. ஆனல் பிரமஞானம் அந்தக்கரணத்தின் பரிணம மன்று; அவித்தையின் பரிணமமாம. இதனை விசாரசாகரத்தில் எழுதியிருததலால், ஈண்டு எழுதுவதனுற் பயனில்லை.

பிரமஞானத்தின் சுருக்கமாகிய தன்மை இதுவாம்:—சாப்ப சம்ஸ்காரத்தோடு கூடிய புருஷனது தோஷ சகித நேத்திரத்திற்கு இரஜ்ஜுவுடன் சமபநத முண்டாகுங்காலதது இரஜ்ஜுவின் விசேஷ தாமமாகிய இரஜ்ஜுத்தன்மையும தோற்றுகிற தில்லை; இரஜ்ஜுவிலுள்ள வைக்கோல் வடிவமாகிய அவயவம் யாதோ அதுவும் தோற்றுகிறதில்லை; ஆனல்இரஜ்ஜுவில்சாமானிய தர்மமாகிய இதந்தை (இதுவெனுந்தன்மை) தோற்றுகின்றது. அங்ஙனமே சுத்தியில் சுத்திததன்மையும், கருமுதுகுடைமையும், முக்கோணத் தன்மையும் தோற்றுகிற தில்லை. ஆனல் சாமானிய தர்மமாகிய இதந்தை தோற்றுகின்றது. ஆகலின் நேததிர வாயிலாக அநதக்கரணம இரஜ்ஜுவை யடைநது இதுவென்னும வடிவினதாகிய பரிணமத்தை யடைகின்றது. அநத இது வென்னும வடிவினதாய விருத்தி யுபகித (விருத்தியை யுபாதியாக வுடைய) சேதனததின்கணுள்ள அவித்தையின் சர்ப்பாகாரம் ஞானகாரமென்னும் இரண்டு பரிணமங்க ளுண்டாகின்றன. அங்ஙனமே தண்ட சம்ஸ்காரத்தோடு கூடிய புருஷனது தோஷத்தோடுகூடிய நேத்திரத்திற்கு இரஜ்ஜுவின் சமபந்தத்தால் யாண்டு விருத்தி யுண்டாகின்றதோ, ஆண்டுத் தண்டமுமு அதன் ஞானமுமம அவித்தையின் பரிணமங்க ளாகின்றன. மாலையும் அதன் ஞானமும், மாலைச சம்ஸ்காரத்தோடு கூடிய புருஷனது தோஷ சகித நேத்திரத்திற்கு இரஜ்ஜுவோடு சமபந்தமுண்டாக, எதனது இதுவென்னும் வடிவினதாய விருத்தி யுண்டாகின்றதோ, அதனது விருத்தி யுபகித சேதனத்திலுள்ள அவித்தையின் பரிணமமாகின்றன. யாண்டு ஒரு இரஜ்ஜுவோடு மூன்று புருஷாகளது தோஷத்தோடுகூடிய நேத்திரங்களுக்குச சமபநத முண்டாக, சாப்பம் தண்டம் மாலையென்னும் ஒவ்வொன்றன் பிரமம அவர்களுக் குண்டாகின்றதோ, ஆண்டு எவன் விருத்தி யுபகிதத்தில எவ்விஷய முண்டாயிருக்கின்றதோ, அவனுக்கு அவ்விஷயமே காணப்படுகின்றது. மற்றவனுக்குக் காணப்படுகிறதில்லை. இவ்வாற்றல் பிரமஞானம் இந்திரிய

ஜந்நிய மன்று; அவித்தையின் விருத்தி ரூபமாம். ஆனால் எந்த விருத்தி யுபகித சேதனத்திலுள்ள அவித்தையின் பரிணாமம் பிரமமோ, அவ்விதுவென்னும் வடிவினதாய விருத்தி நேத்திரத்தோடு இரஜ்ஜு முதலிய விஷயங்களுக சுண்டாம் சம்பந்தத்தா னுண்டாகின்றது. இதனால் பிரம ஞானதகில் இந்திரிய ஜந்நியத் தன்மை தோற்றுகின்றது. அநிர்வசனீயகியாதியின்நிரூபணமும்அந்நியதாக்கியாதி முதலியவற்றின் கண்டனமும் கௌடப் பிரஹ்மாநந்தராற் செய்யப்பட்ட கியாதிவிசாரததில் எழுதப்பட்டிருக்கின்றன. அவை மிகக் கடினமாகலின் ஈண் டெழுதப்படவில்லை. இவ்வாற்றால் வேதாந்த சித்தாந்ததகில் பிரமஞானம் இந்திரிய ஜந்நியமன்று.

## ௧அ. நியாயத்திற்கும் வேதாந்தத்திற்குமுள்ள அந்நிய வேற்றுமை.

வேதாந்த சித்தாந்தத்தில அபாவததின் ஞானமும் இந்திரிய ஜந்நியமன்று. அநுபலப்தியெனனும வேறு பிரமாணத்தால்அபாவத்தின் ஞான முண்டாகின்றது. ஆகலின் அபாவத்தினது பிரத்தியக்ஷததிற் கேதுவாக விசேஷணத தன்மைச சமபந்தத்தை அங்கீகரித்தல் நிஷ்பலமாம. ஜாதிக்கும் வியக்திக்கும் சமவாய சம்பநதமில்லை. ஆனால் தாதாத்மிய சமபந்த முண்டு. அங்ஙனமே குணத்திற்கும் குணிக்குமு, கிரியைக்கும காததாவிற்கும, காரியததிற்கும உபாதான காரணததிறகும தாதாத்மிய சம்பந்த முண்டு. ஆகையால் சமவாய ஸதானத்தில் தாதாத்மியத்தைக் கூறுகின்றனர். துவக்கு முதலிய இந்திரியங்கள் எங்ஙனம பூத ஜநநியமோ, அங்ஙனமே சுரோத்திரேநதிரியமும ஆகாய ஜந்நியமாம; ஆகாய வடிவமன்று. மீமாம்ஸாமதத்தில சத்தம திரவிய மாம். வேதாந்த மதத்தில குணமாம. ஆனால நியாயமதத்திலோ சத்தம ஆகாயத்தின் குணமேயாம. வேதாநத மதத்தில வித்தியாரணிய சுவாமிகள பஞச பூதங்களுக்கும குணம கூறியிருக்கின்றார். வேதாந்த மதத்தில்வாசஸபதிமிசிரர மனமஇநதிரியமெனக்கொண்டிருக்கின்றார்; மற்றைய நூலாசிரியாகள் மனதை இநதிரியமெனக் கொள்ளவில்லை. எவர்கள் மதத்தில மனம் இந்திரிய மன்றோ, அவர்கள் மதத்தில் சுக துககங்களின் ஞானம பிரமாண ஜந்நிய மன்று; ஆகையால் பிரமையன்று. அனாலசுக துக்கங்கள்சாக்ஷிபாஸியமாம் வாசஸ்பதிமிசிரர் மதத்தில சுக முதலியவற்றின் ஞானம் மனரூபப்

பிரமாண ஜந்யமாம். ஆகையாற் பிரமையாம். பிரஹ்மத்தின் அபரோக்ஷ ஞானமோ இரண்டு மதங்களிலும் பிரமையாம. அது வாசஸ்பதிமிசிரர் மதத்தில் மனரூப பிரமாணஜந்யமும, மற்றையோர் மதத்தில் சப்தரூப பிரமாண ஜந்யமுமாம்.

## ௧௯. சாரக்கிராகி (சாரத்தைக் கிரகிக்கும்) திருஷ்டியினுல் வாசஸ்பதி மதத்தின் (மனதினது. இந்திரியத்தன்மையின்) அங்கீகாரம்.

எவர்கள் மதத்தில் மனம இந்திரிய மன்றே, அவர்கள மதத்தில் இந்திரிய ஜந்யதத்வம பிரத்தியக்ஷ ஞானத்தின் இலக்ஷண மன்று. ஆனுல் விஷய சேதனத்திற்கு விருத்தி சேதனத்தோடுள்ள அபேதமே பிரத்தியக்ஷ ஞானத்தின் இலக்ஷணமாம். விருத்திசேதனத்திற்கும் விஷய சேதனத்திற்கும அபேத முண்டாகுந தன்மை விசார சாகரத்தில் ஸ்பஷ்டமாம. வாசஸ்பதியின் மதமும நன்றே. ஆனுல, வாசஸ்பதியின் மதத்தில் இததோஷங்கள் கூறுகின்றனர்:— (௧) மனதிற்கு அசாதாரண விஷய மிலலை. ஆகலின் மனம இந்திரிய மன்று. (௨) கீதையின் வசனத்திற்கும விரோதமாம. கீதையின் மூன்றுவது அத்தியாயத்தின நாற்பத்திரண்டாவது சுலோகத்தில் மனம இந்திரியங்களின் பரமாம (இந்திரியங்களுக்கு மேலானதாம்) என்று சொல்லப்பட்டிருக்கின்றது. மனமும் இந்திரியமாகுமாயின் இந்திரியத்தினும மனம பரமெனல் சம்பவியாது (௩) மானசஞானத்திற்குப்பிரஹ்மமவிஷயமாகாதென்று சுருதி ஸ்மிருதிகளில எழுதப்பட்டிருக்கின்றது. வாசஸ்பதியானவர்மனதிற்குஇந்திரியத்தன்மையைஅங்கீகரித்துபிரஹ்ம சாக்ஷாத்காரமும் மனோரூப இந்திரிய ஜந்யமாமாகலின் மானசமா மெனக் கூறியிருக்கின்றனர். அது விருத்தமாம். (௪) அந்தக்கரணத்தின் அவஸ்தையை மன மென்பர. அவ்வந்தக்கரணம பிரத்தியக்ஷ ஞானத்திற்கு ஆசிரயமா யிருத்தலின் கர்த்தாவாம். யாது கர்த்தாவாகுமோ, அது கரணமாகாது. ஆகலின் மனம் இந்திரிய மன்று. எத்தோஷங்கள் மனதின் இந்திரியத்தன்மையில் சொல்லப்படுகின்றனவோ, அவை விசாரித்துப் பாாக்குமிடத்தது தோஷமாகா. ஏனெனின், (௧) மனதின் அசாதாரண விஷயங்கள் சுகம் துக்கம இச்சை முதலியனவாம. அந்தக்கரண விசிஷ்டன் ஜீவன்.(௨)கீதை

யில் இந்திரியங்களுக்குப் பரம் மன மெனக்கூறப்பட்டிருக்கின்றது. ஆண்டு இந்திரிய சப்தத்தால் புற விந்திரியங்கள் கொள்ளப்படுகின்றன. ஆகலின் புற விந்திரியங்களினும மன விந்திரியம பரமா மென்பது கீதாவசனத்தின் அர்த்தமாதலால் விரோதமில்லை.

(௩)மானசஞானத்திற்குவிஷயம் பிரஹ்மமன்றெனக் கூறுதற்கு இவ்வதபிப்பிராய மாம்:— சம தமாதி சமஸ்கார மின்றிய விக்ஷிப்த (கலக்கமுள்ள)மனதினுலுண்டாகியஞானததிற்கு விஷயம பிரஹ்ம மன்று. மானச ஞானத்தின் பலவியாப்பியத் தன்மை பிஹ்ரமத்தி லில்லை.விருத்தியிற் சிதாபாசன்பலமெனப்படுவன். அவனுக்கு(சிதா பாசனுக்கு) விஷயம பிரஹ்மமன்று. கடமுதலிய அநாத்மபதார்த் தங்களை விருத்தியடையுங்காலத்து விருத்திசிதாபாசனென்னுமஇர ண்டற்கும பதார்த்தங்கள் வியாப்பிய (விஷய) மாகின்றன. பிரஹ் மாகார விருத்தியிற் சிதாபாசனுக்குப் பிரஹ்மம வியாப்பிய(விஷய) மன்று;விருத்திமாத்திரததிற்கு விஷயமாம்.இவ்விஷயம் விசாரசாக ரத்தின் நான்காவது தரங்கத்தில தெளிவாகச் சொல்லப்பட்டிருக் கின்றது. பிரஹ்மததினிடதது மனதிற்கு விஷயமாந் தன்மை நிஷே திக்கபபட டிருத்தல்போலச சத்தததிற்கு விஷயமாந் தன்மையும் நிஷேதிககப் பட்டிருக்கின்றது. "யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மநஸா ஸஹ - வாக்கானது மனதோடு சென்றடையாது எதனினின்றும திரும்புகின்றதோ" என்பது(சுருதி) நிஷேதவசனம். ஆண்டுசசததததாற்றோன்றியஞானத்திற்குவிஷயம் பிரஹ்மமன்று என்னும்பொருளை அங்கீகரிக்கின்மகாவாக்கியங்களுஞசத்தரூபமே யாம். அவற்றாலுண்டாகிய ஞானத்திற்கும் பிரமம் விஷயமாகாது; சித்தாந்தத்திற்கும பங்கமுண்டாகும். ஆதலால் நிஷேத வசனத் திற்கிது பொருளாம:—பிரஹ்மம் சத்தத்தின் சக்திவிருத்தி ஜந்நிய ஞானத்திற்கு விஷயமாகாது;ஆனால் சுத்தத்தின் இலக்ஷணாவிருத்தி ஜந்நிய ஞானத்திற்கு விஷயமாகும் என்பதாம. அங்ஙனமே இல க்ஷணா விருத்தி ஜந்நிய ஞானத்திலும சிதாபாச ரூப பலத்திற்குப் பிரஹ்மம விஷய மன்று.ஆனால் ஆவரண பங்கரூப விருத்தி மாத்திர த்திற்கு விஷயமாந் தன்மை பிரஹ்மத்தின்கண் ணுளது. சப்த ஜந் நிய ஞானததிற்கு விஷயமாந்தன்மை முற்றிலும் நிஷேதிக்கப் படுவதில்லை. அதுபோல மானஸ ஞானததிற்கு விஷயமாந்தன்மை யும முற்றிலும நிஷேதிக்கப்படுகிறதில்லை. ஆனாற் சம்ஸ்காரமின்

றிய மனதிற்குப் பிரஹ்ம ஞானத்தில் ஏதுவாந் தன்மை யில்லை. மானச ஞானத்திலுள்ள சிதாபாச அம்சம் ஏதுவோ, அதற்கு விஷயமாந் தன்மையு மில்லை. சங்கை:—பிரஹ்ம ஞானத்தில் மனதிற்குக் கரணத் தன்மை யிருக்கின், பிரஹ்ம ஞானம் இரண்டு பிரமாணத்தாற் றோன்றியதா மெனல் வேண்டும். ஏனெனின், மகாவாக்கியங்களில் பிரஹ்ம ஞானத்தின் கரணத்தன்மை யுளதெனப் பாஷியகாரர் முதலியோர்களால் எங்கும் சொல்லப் பட்டிருக்கின்றது: ஆதலால் அதன் நிஷேதமோ பொருந்தாது. மனதிற்கும் கரணதன்மை கூறுவோமாயின், பிரமையின் கரணம் பிரமாண மெனப்படு மாகலான், பிரஹ்மப் பிரமைக்குச் சத்தம் மனமென்னும் இரண்டு பிரமாணங்கள் சித்தமாகின்றன. ஆயின் அது திருஷ்ட விருத்தமாம். ஏனெனின், சாக்ஷுஷ முதலிய பிரமைகளுக்கு நேத்திர முதலியன ஒவ்வொன்றே பிரமாணமாம். ஓர் பிரமைக்கு இரண்டு பிரமாணம் ஏதுவாதலைக் கண்டதுமில்லை, கேட்டதுமில்லை. நையாயிகரும சாக்ஷுஷமுதலிய பிரமையில் மனதிற்குச சககாரித்தன்மையை யங்கீகரித்து, நேத்திர முதலியவற்றிற்கே பிரமாணத்தன்மை ஒப்பி யிருக்கின்றனர். மனதிற் கொப்பவில்லை. சுகமுதலியவற்றின் ஞானத்தில் கேவல மனதிற்கே பிரமாணத்தன்மை யங்கீகரித்திருக்கின்றனர். மற்றவற்றிற்கில்லை. ஆகலின் ஒரு பிரமைக்கு இரண்டினைப் பிரமாணமாகக் கூறுதல் திருஷ்ட விருத்தமாம. கடத்தில் நேத்திரம் துவக்கு என்னும் இரண்டிந்திரியங்களுக்கும யோக்கியதை யிருததல்போல யாண்டு ஒரு பதார்த்தத்தில் இரண்டு இந்திரியங்களுக்கு யோக்கியதை யுண்டாகின்றதோ, ஆண்டும இரண்டு பிரமாணத்தால் ஒரு பிரமை யுண்டாகிற திலலை. நேத்திரப் பிரமாணத்தால் குடத்தின் சாக்ஷுஷப் பிரமையும், துவக்குப் பிரமாணத்தால் துவாசப் பிரமையு முண்டாகின்றன. இரண்டு பிரமாணங்களால் ஒரு பிரமையின் உற்பத்தி காணப்படுகிற தில்லையென்று இவ்வாறு கூறுவாராயின், அச்சங்கை பொருநதாது. ஏனெனின், பிரத்தியபிஞ்ஞாபிரத்தியக்ஷ முண்டாகுமிடத்துப் பூர்வஅநுபவமும இந்திரியமுமாகிய இரண்டு பிரமாணங்களால ஒருபிரமை யுண்டாகின்றது; ஆதலால் திருஷ்ட விருத்த மாகாது. யாண்டுப் பிரத்தியபிஞ்ஞை யுண்டாகின்றதோ, ஆண்டுப் பூர்வ அநுபவம சமஸ்காரவாயிலாக ஏதுவாம். சையோகமுதலிய சமபந்த வாயிலாக இந்திரியம் ஏதுவாம்.

ஆகலின் சம்ஸ்காரரூப வியாபாரமுடைய காரணம் பூர்வ அநுபவ மாம். சம்பந்தரூப வியாபாரமுடைய காரணம் இந்திரியமாம். ஆக லின் பிரமைக்குக் கரணமாயிருத்தலின் இரண்டும் பிரமாணமாம்.

அங்ஙனமே பிரஹ்மசாக்ஷாத்காரமாகிய பிரமைக்குச் சப்தம் மனமென இரண்டு பிரமாணங்களுளவெனக் கூறுதலில் திருஷ்ட விரோதமின்று. * மாறுகிய பிரஹ்மசாக்ஷாத்காரத்திற்கு மனமாகிய இந்திரியத்தாற் றோன்றிய தன்மை அங்கீகரிக்கின் பிரத்தியக்ஷத் தன்மை விவாதமின்றிச் சித்திக்கின்றது. பிரஹ்ம ஞானத்திற்குக் கேவலம் சப்தத்தாற் றோன்றிய தன்மை யங்கீகரிக்கின் விவாதத் தாற் பிரத்தியக்ஷத்தன்மை சித்திக்கின்றது. தசம திருஷ்டாந்தத் திலும் இந்திரியத்தாற் றோன்றிய தன்மை சத்தத்தாற் றோன்றிய தன்மைகளுக்கு விவாதமுளது. இநதிரிய ஜநநிய ஞானத்திற்குப் பிரத்தியக்ஷத தன்மையில் விவாத மில்லை. பிரத்தியபிஞ்ஞாபிரத்தி யக்ஷத்தில் பூர்வ அநுபவத்தாற் றோன்றிய சம்ஸ்காரம் சககாரியும் கேவல இந்திரியம பிரமாணமுமாமெனக் கூறின், அதற்குச் சமா தானம் இதுவாம்:—பிரஹ்மசாக்ஷாத்காரமாகிய பிரமையினும் சத் தம் சககாரியும், கேவல மனம் பிரமாணமுமாம். வேதாந்த பரி பாஷை முதலிய நூல்களில் இந்திரிய ஜந்ய ஞானத்திற்குப் பிரத் தியக்ஷததன்மை கூறுதலில் எததோஷம சொல்லப்பட்டிருக்கின் றதோ, அதற்குச் செவ்வையான சமாதானம் நியாய கௌஸ்துப முத லிய நூல்களில் எழுதப்பட் டிருக்கின்றது. அதனைத் தெரிய விரு ம்புவோர்அவற்றிற்கண்டுகொள்க. (௪) ஞானத்திற்குஆசிரயமாயிரு த்தலின்அந்தக்கரணம் கர்த்தாவாம்;ஆகலின்ஞானத்திற்குக் கரண மாகாதெென மனதிற்கு இந்திரியத் தன்மையில் எந்தத் தோஷம் சொல்லப்பட்டிருக்கின்றதோ, அநதத்தோஷமுமில்லை. ஏனெனின் தர்மியாகிய அந்தக்கரணம் ஞானத்திற்கு ஆசிரயமாயிருத்தலின் கர்த்தா வாம். அந்தககரணத்தின் பரிணமமாகிய மனம் ஞானத் திற்குக் கரணமாம். இவ்வாற்றான் மனமும் பிரமை ஞானத்திற்குக் கரணமாம். ஆகலின் பிரமாணமாம்.

---

* பிரபஞ்ச திருஷ்டி பகிர்முகமும் பிரஹ்ம திருஷ்டி அந்தர்முகமுமா யிருத்தலின் மாறுகிய பிரஹ்மசாக்ஷாத்கார மென்றார்.

பிரத்தியக்ஷ விசாரத்திலுள்ள பேதம்.

யாண்டு இந்திரியத்தால் திரவியத்தின் பிரத்தியக்ஷ முண்டாகின்றதோ, ஆண்டு நியாய வேதாந்தமதங்களில் வேற்றுமையில்லை. திரவியத்திற்கு இந்திரியத்தோடுண்டாம சையோகமே சம்பந்தமாம். இந்திரியத்தோடு திரவியத்தினது ஜாதி அல்லது குணத்தின் பிரத்தியக்ஷ முண்டாகுமிடத்து நியாயமதத்திலோ சையுக்த சமவாய சம்பந்த மிருக்கின்றது. வேதாந்த மதத்தில் சையுக்த தாதாத்மிய சம்பந்த மிருக்கின்றது. ஏனெனின், நியாயமதத்தில் எவற்றிற்குச் சமவாய முண்டோ, அவற்றிற்கு வேதாந்த மதத்தில் தாதாத்மிய சம்பந்த முண்டு. குணத்தினது ஜாதியின் பிரத்தியக்ஷத்தில் நியாய மதப்படி சையுக்த சமவேத சமவாய சம்பந்த முண்டு. வேதாந்த மதத்தில சையுக்த தாதாத்மியமுடைய தாதாத்மிய சம்பந்த முண்டு. இதனையே சையுக்தாபின்ன தாதாத்மிய மென்பா. இந்திரியத்தோடு சையுக்தமான கடமுதலியவற்றில் தாதாத்மிய முடையன உருவ முதலியன வாம். அவற்றில் தாதாத்மிய சம்பந்தம் உருவத்தன்மை முதலிய ஜாதிக்காம. எங்ஙனம உருவமுதலியன கடமுதலியவற்றில் தாதாத்மிய முடையனவோ, அங்ஙனமே கடமுதலியவற்றோடு அபின்னமுமா மென்றுசொல்லப்படுகின்றன. அபின்னத்திற்கே தாதாத்மிய சம்பந்த முண்டாகின்றது. யாண்டுச் சுரோத்திரத்தால் சத்தத்தின் சாக்ஷாத்கார முண்டாகின்றதோ, ஆண்டு நியாயமதத்திலோ சமவாய சம்பந்த முண்டு. வேதாந்த மதத்தில் சுரோத்திரேந்திரியம ஆகாயத்தின் காரியமாகலின், சக்ஷுமுதலியவற்றில் கிரியை யுண்டாவதுபோல, சுரோத்திரத்திற் கிரியை யுண்டாய்ச் சத்தமுடையதிரவியத்தோடு சுரோத்திரத்திற்குச் சையோக முண்டாகின்றது. அச்சுரோத்திரசையுக்த திரவியத்தில சத்தத்தின் தாதாத்மியசம்பந்த மிருக்கின்றது. ஏனெனின், வேதாந்த மதத்தில் சத்தம் பஞ்சபூதங்களின் குணமாயிருத்தலால் பேரிமுதலியவற்றிலும் சத்தம் இருக்கின்றது. ஆகலின் சுரோத்திரத்தின் சையுத்த தாதாத்மிய சம்பந்தத்தான் சத்தத்தின் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. சத்தத்தன்மையின் பிரத்தியக்ஷ முண்டாகுமிடத்துச் சுரோத்திரத்தின் சையுக்த தாதாத்மியமுடைய தாதாத்மியசம்பந்த மிருக்கின்றது. வேதாந்தமதத்தில எங்ஙனம சத்தத்தன்மை சாதியோ, அங்ஙனமே தாரத்தன்மை மந்தத்தன்மைகளும ஜாதியேயாம. நியாய மதத்தைப்போல ஜாதிக்கு வேறாய் உபாதியில்லை. ஆகலின் சத்தத்

தன்மை ஜாதிக்குச் சுரோத்திரத்தோடுள்ள சம்பந்த மெதுவோ, அசசம்பந்தமே தீரத்தன்மை மந்தத் தன்மைகளுக்குமாம். விசேஷணத்தன்மைச் சம்பந்தமில்லை. அபாவத்தின் ஞானம் அநுபலப்திப்பிரமாணத்தா லுண்டாகின்றது. எவ்விந்திரியத்தாலும் அபாவத்தின் ஞானமுண்டாகிறதில்லை. ஆகலின் அபாவத்திற்கு இந்திரியத்தோடு சம்பந்தம் அபேக்ஷிக்கப்படுகிறதில்லை. இது நியாயமதத்திற்கும் வேதாந்த மதத்திற்கும் பிரத்தியக்ஷவிசாரத்திலுள்ள பேதமாம்.

## உக. பிரத்தியக்ஷப் பிரமையின் உபசங்காரம்.

இவ்வாற்றால் பிரத்தியக்ஷப் பிரமைக்கு ஆறு பேத முண்டு. அவற்றின் கரணமும் ஆறும். ஆகையால் நேத்திர முதலிய ஆறு இந்திரியங்களும் பிரத்தியக்ஷப்பிரமாணமெனப்படும். நியாயமதத்திலும் வாசஸ்பதிமதத்திலும் ஆறுவது பிரத்தியக்ஷப் பிரமாணம் மனமாம். பஞ்சபாதிகை யென்னும் நூலின் கர்த்தாவாகிய பத்மபாதாசாரியரது மதத்தை யநுசரித்தவர்கள் மனதைப் பிரமாணமென்று கொள்ள வில்லை. சுக துக்கங்களோ சாக்ஷி பாஸ்யங்களாமாகலின் அவற்றின் ஞானம் பிரமையன்று. விசிஷ்டஜீவனில் அந்தக்கரண பாகம் சாக்ஷி பாஸ்யமாம். சேதன பாகம் சுவயம் பிரகாசமாம். ஆகலின் ஜீவனது ஞானமும் மானசமன்று. பிரஹ்மவித்தையாகிய அபரோக்ஷ ஞானம் பிரமை வடிவமாயினும், அதன் கரணம் சத்தமாம்; மனம் பிரமாண மன்று. ஆனால் பஞ்சபாதிகாநுசாரசித்தாந்த மெதுவோ, அதன்கண்ணும் பிரத்தியக்ஷப் பிரமைக்கு ஆறு பேதமுண்டு. சப்தஜந்ய பிரஹ்மப் பிரத்தியக்ஷப் பிரமை ஆறுவதாம். அபாவத்தின் ஞானம் அநுபலப்திப் பிரமாண ஜந்யமாயினும் பிரத்தியக்ஷமாம். இவ்வார்த்தையினை அநுபலப்திப்பிரமாண நிரூபணத்திற் கூறுவாம். இதனாற் பிரத்தியக்ஷப் பிரமைக்கு ஏழு பேதங்கள் சம்பவிக்கின்றன. என்றாலும் இந்நூலின்படி அபாவ ஞானத்தில் பிரத்தியக்ஷத் தன்மை யில்லையாகலின், பிரத்தியக்ஷப்பிரமைக்கு ஆறுபேத முண்டு; ஏழில்லை. சுருக்கமாகப் பிரத்தியக்ஷப் பிரமாணம் சொல்லப்பட்டது.

முதற்பிரகாசம்

பிரத்தியக்ஷப்பிரமாணநிரூபணம்

முடிந்தது.

ஓம்.

தத்ஸத்ப்ரஹ்மணேநம:

# இரண்டாவது பிரகாசம்.

# அநுமானப் பிரமாண நிரூபணம்.

## உஉ. அநுமிதியினது சாமக்கிரியின் பேதமும் சொரூபமும்.

அநுமிதிப் பிரமையின் கரணமெதுவோ அது அநுமானப் பிரமாணமெனப்படும். இலிங்க ஞானத்தாற் றோன்றும ஞானமெதுவோ, அது அநுமிதியெனப்படும். எங்ஙனம்: பருவதத்தில் புகையின் பிரத்தியக்ஷ ஞானமுண்டாய் வன்னியின் ஞானமுண்டாகின்றது; ஆண்டுப புகையின் பிரத்தியக்ஷஞானம் இலிங்கஞானமெனப்படும். அதனால் வன்னியின் ஞானமுண்டாகின்றமையின் பருவதத்தில் வன்னியின் ஞானம் அநுமிதியாம. எதன் ஞானத்தாற் சாத்தியத்தின் ஞானமுண்டாகின்றதோ அது இலிங்கமெனப்படும். அநுமிதி ஞானத்தின் விஷயம சாத்தியமெனப்படும. அநுமிதிக்கு விஷயம் வன்னியாகலின் வன்னி சாத்தியமாம். தூம ஞானத்தால் வன்னியாகிய சாத்தியத்தின் ஞானமுண்டாதலான் தூமம் இலிங்கமாம். வியாப்பியத்தின் ஞானத்தால் வியாபகத்தின் ஞானமுண்டாகின்றதாகலின் வியாப்பியத்தை இலிங்கமென்பர். வியாபகத்தைச் சாத்தியமென்பர். வியாத்தியுடையதனை வியாப்பியமென்பர். வியாப்தி நிரூபகத்தைவியாபக மென்பர். அவிநாபாவரூப சம்பந்தத்தை வியாத்தி யென்பர். எங்ஙனம: தூமத்தில் வன்னியின் அவிநாபாவரூப சம்பந்த மிருக்கின்றது; அதுவே தூமத்தில் வன்னியின் வியாப்தியாம். ஆகையால் தூமம வன்னியின் வியாப்பியமாம். அந்த வியாப்திரூப சம்பந்தத்தின் நிரூபகம வன்னியாம். ஆகலின் தூமத்தின் வியாபகம வன்னியாம. எஃதின்றி எது உளதாகாதோ, அதன் அவிநாபாவரூப சம்பந்தம் அதன்கண் சொல்லப்படுகின்றது. வன்னியின்றித் தூமமிராதாகலின் வன்னியின் அவிநாபாவரூபசம்பந்தம தூமத்தின்கணுளது. வன்னியினிடத்துத் தூமத்தின் அவிநாபாவமில்லை, ஏனெனின் ஒழுகக்காய்ச்சிய இருப்புத்துண்டில் தூமமின்றி வன்னியிருக்கின்றது. ஆகையாற் றூம

த்தின் வியாப்பியம் வன்னி யன்று. வன்னியின் வியாப்பியம் தூம மாம். அங்ஙனமே உருவத்தின் வியாப்பியம் இரசமாம். பிருதிவி ஜல தேயுக்களில் உருவமிருக்கின்றது. பிருதிவியினும் ஜலத்தினும் இரச மிருக்கின்றது. ஆகையால் உருவத்தின் அவிநாபாவரூப சம் பந்தம இரசத்தின்க ணிருத்தலால் உருவத்தின் வியாப்பியம் இரச மாம. உருவத்தில் இரசத்தின் விநாபாவம (இரசமின்றியிருத்தல்) இருக்கின்றது. தேயுவில்இரசவிநாபாவம்(இரசமின்றி உருவத்தின் சத்தை)இருக்கின்றது. ஆகையால் இரசத்தின் வியாப்பியம் உருவ மன்று.எதுஎதனின்வியபிசாரியா(பிறழ்வுடையதா)கின்றதோஅது அதன் வியாப்பிய மாகாது. அதிக தேசத்திலிருப்பது எதுவோ, அதுவியபிசாரியெனப்படும். தூமத்தினும அதிகதேசத்திலிருக்கும் வன்னி யெதுவோ, அது தூமத்தின் வியபிசாரியாம். இரசத்தி னும் அதிக தேசத்தில் உருவ மிருக்கின்றது. ஆகையால் இரசத் தின் வியபிசாரி உருவமாம. அற்ப தேசத்தி லிருப்பது எதுவோ, அதன்கண் அவிநாபாவ சம்பந்தமுண்டு. அதுவே வியாப்பியமாம். வன்னியினும அற்பதேசத்தில் தூமமுளதாம. ஆகலின் வன்னிக்கு த் தூமத்தில் அவிநாபாவரூப் வியாப்தி யுண்டு. அத்தூமம் வியாப் பியமாம். உருவத்தினும அற்ப தேசத்தில் இரச மிருக்கின்றது. ஆகையால் இரசத்தில் உருவத்தின் வியாப்தியுளது. அதனையுடைய இரசம் வியாப்பியமாம். எங்ஙனம அற்பதேசத்தி லிருப்பதன்கண் அதிக தேசமுடையதின் வியாப்தி யுண்டோ, அங்ஙனமே இரண்டு பதார்த்தங்கள் சமான தேசத்தி லிருப்பன வாகுமாயின், அவற் றிற்கு மொன்றற் கொன்று வியாப்தியுண்டு. கந்தகுணமும் பிரு திவித்தன்மைச் சாதியும கேவலம் பிருதிவியின்க ணிருப்பன வாம. ஆண்டுக் கந்தத்தின் வியாப்தி பிருதிவித் தன்மையினும், பிருதிவித் தன்மையின் வியாப்தி கந்தத்தினும் உண்டு. அங்ங னமே சிநேக குணமும் ஜலத்தன்மைச் சாதியும் ஜலத்தின்க ணுண்டு. ஜலமின்றிச் சிநேகமும் ஜலத்தன்மையு மிரா. ஆகலின் சமதேசத்திலிருப்பனவா யிருத்தலின் இரண்டும் ஒன்றற்கொன்று வியாப்தியுடையன வாதலால் வியாப்பியமாம. ஏனெனின், எங்ங னம் அற்பதேசத் திருப்பதன்கண் அவிநாபாவரூப சம்பந்த மிருக்கின்றதோ, அங்ஙனமே சமான தேசத்தி லிருப்பனவாகிய பதார்த்தங்களுக்கும ஒன்றற்கொன்று அவிநாபாவமுண்டு. பிருதிவி த்தன்மையினும் அற்ப தேசத் திருப்பது கந்தம்; ஜலத் தன்மையி

னும் அற்ப தேசத்திருப்பது சிநேகம். ஏனெனின், முதல் க்ஷணத்தில் நிர்க்குணத் திரவிய முண்டாகின்றது. இரண்டாவது க்ஷணத்தில் குணமுண்டாகின்றது. ஜாதி முதல்க்ஷணத்திலும் திரவியத்திலிருக்கின்றது. ஆகலின் கடத்தின் முதல் க்ஷணத்தில் கந்தத்தின் வியபிசாரியாகிய பிருதிவித்தன்மை யிருத்தலால் அதன்கண் கந்தத்தின் அவிநாபாவ சம்பந்தமாகிய வியாப்தியின் அபாவமிருக்கின்றது. உற்பத்தி க்ஷணத்தி லிருப்பதாகிய ஜலத்தில் சிநேகத்தின் வியபிசாரியாகிய ஜலத்தன்மை யிருத்தலால் அதன்கண் சிநேகத்தின் அவிநாபாவரூப சம்பந்தமில்லை. ஆதலாற் சிநேகத்தின் வியாப்திக்கு ஜலத்தன்மையில் அபாவ மிருத்தலால் சிநேகத்தின் வியாப்பியம் ஜலத்தன்மையன்று. இவ்வாற்றால் பிருதிவித்தன்மையின் வியாப்பியம் கந்தமாம்; கந்தத்தின் வியாப்பியம் பிருதிவித்தன்மையன்று. அங்ஙனமே ஜலத் தன்மையின் வியாப்பியம் சிநேகமாம்; சிநேகத்தின் வியாப்பியம் ஜலத் தன்மை யன்று. என்றாலும் கந்தமுடைமையும் பிருதிவித்தன்மையும் ஒன்றற்கொன்று வியாப்தியுடையனவாம். ஆகலின் இரண்டும் ஒன்றற்கொன்று வியாப்பியமாம். அங்ஙனமே சிநேகமுடைமையும் ஜலத்தன்மையுமாகிய இரண்டும் ஒன்றற்கொன்று வியாப்பியமாம். ஏனெனின், கந்தத்தின் அதிகரணத்தன்மையைக் கந்தமுடைமை யென்பர். சிநேகத்தின் அதிகரணத்தன்மையைச் சிநேகமுடைமை யென்பர். எதன்கண் எந்தப் பதார்த்தம் எப்போதாயினு மிருக்குமோ, அதன்கண் அப்பதார்த்தத்தின் அதிகரணத்தன்மை என்றுமுளதாம். இது வியாப்திநிரூபணத்தில் ஜகதீச பட்டாசாரியா முதலியோர்களால் எழுதப்பட்டிருக்கின்றது. ஈண்டு இது பிரசங்கமாம்:—அவியாப்பியவிருத்தி பதார்த்தத்தின் அதிகரணத்தன்மை வியாப்பியவிருத்தியாம். அதிகரணத்தன்மை அவியாப்பியவிருத்தி யாகிறதில்லை. * **அவியாப்பிய விருத்தி இருவகையாம்.** தேசத்தானாகிய அவியாப்பிய விருத்தியு முண்டு. காலத்தானாகிய அவியாப்பிய விருத்தியு முண்டு. எது பதார்த்தத்தின் ஏகதேசத்திலிருந்து ஏகதேசத் தில்லாதிருக்கின்றதோ, அது **தேசத்தானாகிய அவியாப்பிய விருத்தி** யெனப்படும். எங்ஙனம்: பதார்த்தத்தின் ஏகதேசத்தில் சையோகமுண்டாகின்றது. அது **தேசத்தானாகிய அவியாப்பிய விருத்தியாம்.** ஆனால் சையோகத்தின் அதிகரணத்தன்மை பதார்த்தமுழுவதினு மிருக்கும். ஏகதேசத்தி

---

* தனது அத்தியந்தாபாவ ஸமானாதிகரணத் தன்மை அவ்வியாப்பிய விருத்தித் தன்மையாம்.

விராது. ஆகலின் அவியாப்பியவிருத் திசையோகத்தின் அதிகரண த்தன்மை வியாப்பிய விருத்தியாம்; அவியாப்பிய விருத்தி யன்று, இது சித்தாந்த மாம். ஒருகாலத்திலிருந்து ஒருகாலத்தில் இல்லா திருப்ப தெதுவோ, அது காலிக அவியாப்பிய விருத்தி யெனப்படும். முற்கூறிய விதத்தாற் கந்தமுதலிய குணங்கள் காலிக அவியாப்பிய விருத்தியாம். அவற்றின் அதிகரணத்தன்மை திரவியத்தின் உற் பத்திக்ஷணத்திலு மிருக்கின்றதாகலின் கந்தமுடைமை இரச முடைமைகள் பிருதிவித்தன்மை ஜலத்தன்மைகளின் சமதேச சமகாலத் திருப்பனவாம. இது நியாய ரீதியான சமாதானமாம். வேதாந்தமதத்திலோ நிர்க்குணதிரவிய முண்டாகிறதில்லை. முதற் கண்ணே சகுணமுண்டாகின்றது. ஆகலின் கந்த ரசங்களுக்கும் பிருதிவித்தன்மை ஜலத்தன்மைகள் வியாப்பியமாம்.

## ௨௩. அநுமிதிஞானத்தில் வியாப்தியினது ஞானம் அபேக்ஷிக்கப்படுமாறு.

இவ்வாற்றால் அவிநாபாவரூப சம்பந்தம் வியாப்தியும் அதனை யுடையது வியாப்பியமுமாம. எவனுக்குப் பர்வத முதலியவற்றில் வியாப்பியமாகிய தூமத்தின் பிரத்தியக்ஷ ஞானம அல்லது சத்த ஞான முண்டாகின்றதோ, அவனுக்குப் பர்வத முதலியவற்றில் அக்கினியின் அநுமிதி ஞான முண்டாகின்றது. அங்ஙனமே இரச த்தின் ஞானத்தால் உருவத்தின் ஞான முண்டாகின்றது. ஆனால் எந்தப் புருஷனுக்குத் தூமம் வன்னி வியாப்பியமா மென்னும் ஞானம் முன் நிகழ்ந்திருக்குமோ, அவனுக்குத தூமஞானத்தால் வியாப்பியத்தன்மையின் ஸ்மரண முண்டாய் வன்னியின் அநுமிதி யுண்டாகின்றது. வியாப்தியை வியாப்பியத்தன்மை யென்பர். அங் ஙனமே உருவத்தின் வியாப்பியம் இரசமாமென்னும் ஞானம் எவ னுக் குண்டாகின்றதோ, அவனுக்கு இரசத்தின் ஞானத்தால் இர சத்தில் உருவத்தினது ஸ்மரண முண்டாய் உருவத்தின் அநுமிதி யுண்டாகின்றது. எவனுக்கு வியாப்பியத் தன்மையின் ஞானம் முன் நிகழவில்லையோ, அவனுக்குத் தூமமுதலியவற்றின் ஞானத் தால் வன்னி முதலியவற்றின் அநுமிதி நிகழா தாகலின், வியாப்தி யின் ஞானம அநுமிதிக்குக் கரணமாம். வியாப்தி யுடையதனை வியாப்பியமென்றும, வியாப்தியினை வியாப்பியத் தன்மையென்றும் கூறுவர். அந்த வியாப்தி ஞானமும சகதேசரூப காரண மன்று. ஏனெனின், தூமம் வன்னியின் வியாப்தி யுடையதா? அன்று?

என்னும் ஞானம் எவனுக்கு முன் உண்டாயிருககின்றதோ, அவ
னுக்குத் தூமஞானத்தால் வன்னியின்ஞானமுண்டாகாது. ஆனால்
"தூமம் வன்னியின் வியாப்தி யுடையது" என்னும் நிச்சய ரூப
ஞானம்எவனுக்குண்டாயிருக்கின்றதோ,அவனுக்குத்தூமஞானத்
தால் வன்னியின் அநுமிதியாகிய ஞான முண்டாம. ஆகலின் வியா
ப்தியின் நிச்சயம் அநுமிதிக்கு ஏதுவாம. அந்த வியாப்தியின் நிச்
சயம் உடனிகழ்சசி ஞானததா லுண்டாகினறது. அடுக்களை முத
லியவற்றில் அடிக்கடித் தூம வன்னிகளின் உடனிகழ்ச்சியைக்
கண்டு "வன்னியின்வியாப்பியம் தூமமாம" என்னும் ஞான முண்
டாகின்றது. "தூமத்தின் வியாப்பியமாம வன்னி" என்னும் ஞான
முண்டாகிறதில்லை. ஏனெனின், அடுக்களை முதலியவற்றில் வன்னி
யின் உடனிகழ்ச்சி எங்ஙனம் தூமத்திற் காணப் படுகின்றதோ,
அங்ஙனமே தூமத்தின் உடனிகழ்ச்சி வன்னியிற் காணப்படினும்
தூமத்தின் வியபிசாரமும வன்னியிற் காணப்படுகின்றது. இதனால்
எதன்கண் எப் பதாாத்தத்தின் வியபிசாரம தோற்ருது உட
னிகழ்ச்சி தோற்றுகின்றதோ, அதன்கண் அப்பதார்த்தத்தினது
வியாப்தியின் நிசசயமுண்டாகின்றது. தூமததில் வன்னியின் விய
பிசாரம் தோற்ருது, உடனிகழ்சசி தோற்றுகின்றதாகலின், தூம
த்தில் வன்னியினது வியாபதியின் நிச்சய முண்டாகின்றது. வன்னி
யில் தூமத்தின் உடனிகழ்சசியும் தோற்றுகின்றது; வியபிசாரமும்
தோற்றுகின்றது. ஆகலின், 'தூமத்தின் வியாப்பியமாம் வன்னி'
என்னும் நிச்சயம் உண்டாகிறதில்லை. உடனிகழ்ச்சி யென்பது கூட
விருத்தற்காம். வியபிசார மென்பது வேரு யிருத்தற்காம். நீரினது
புகையின்கண் வன்னியின் வியபிசாரமிருக்கின்றது. அக்கினி அணை
ந்தகாலத்து அடுக்களையி லிருக்கும் தூமமெதுவோ, அதன்கண்
ணும் வன்னியின் வியபிசார மிருக்கின்றது. என்ருலும் எதன்
மூலம் சேதிக்கப்படவில்லையோ, அப்படிப்பட்ட உயாந்த தூம
ரேகையில் வன்னியின் வியபிசார மில்லை. ஆகையால் விலக்ஷண
மான தூம ரேகையில் வன்னியினது வியாப்தியின் பிரத்தியக்ஷ
மாகிய நிச்சய முண்டாகின்றது. அப்படிப்பட்ட விலக்ஷண தூம
ரேகையின் பிரத்தியக்ஷம் பாவதமுதலியவற்றி லுண்டாய் 'தூமம்
வன்னியின் வியாப்பியமாம்' என்னும் அநுபவத்தின் சம்ஸ்காரம்
எழும்புகின்றது. அதன்பின், 'வன்னியுடையது பாவதம' என்னும்
அநுமிதி யுண்டாகின்றது.

## உசு. சகல நையாயிகமதத்திலுமுள்ள அநுமிதியின் கிரமம்.

நியாயமதத்தில் அநுமானப் பிரசங்கத்தில் அநேக பக்ஷங்களுள. அவை அவர்கள் நூல்களில் ஸ்பஷ்டமாம. ஆனால் சகல நையாயிகர் மதத்திலும் அநுமிதியின் கிரமம் இதுவாம:— முதற்கண் அடுக்களை முதலியவற்றில ஏது சாத்தியங்களின் உடனிகழ்ச்சிக் காட்சி யுண்டாகின்றது. அதனால் ஏதுவில் சாத்தியத்தினது வியாப்தியின் நிசசயமஉண்டாகின்றது. அதன்பின் பாவத முதலியவற்றில் ஏதுவின் பிரததியக்ஷ முண்டாகின்றது. அதன்பின் சம்ஸ்காரத்தின் எழுசசி யுண்டாய் வியாப்தியின் ஸ்மிருதி யுண்டாகின்றது. அதன்பின் சாததியத்தினது வியாபதி விசிஷ்ட ஏதுவின் பிரத்தியக்ஷம பக்ஷததிலுண்டாகின்றது. அதனைப் பராமரிசமென்பர். வன்னியின் வியாப்பிய தூமமுடையது மலையென்பது பிரசிததாநுமானத்தில் பராமரிசத்தின் ஆகாரமாம. சாத்திய வியாப்பிய ஏதுவுடையது பக்ஷம என்பது பராமரிசததின் சாமானிய ரூபமாம். அதன் பின்னா வன்னியுடையது பாவதம என்னும அநுமிதி ஞான முண்டாகின்றது. இநத முறையாக அநுமிதி யுண்டாகின்றது. ஆனால் பிராசீனா (பழமையாோா) மததநில் அநுமிதியின் கரணம பராமரிசமாம. மறறெலலா ஞானமும அநநியதாசித்தமாம (பிறிதோராற்றுற் பெறப்படுவதாம). அவர்கள் மதத்தில் பராமரிசமே அநுமானமாம. பராமரிசத்தின் வியாபாரம அகபபடாவிடினும, அவாகள மததநில் வியாபாரமின்றிய காரணத்தைக் கரண மென்பா. ஆகையால பராமரிசமே அநுமிதியின் கரணமாயிருததலின் அநுமானமாம். சில நையாயிகா ஞான வேதுவினை அநுமான மென்பர். ஓாபக்ஷததில ஏதுவின ஞானத்தை அநுமான மென்பர்; வியாபதியின ஸ்மிருதியையும பராமரிசததையும் வியாபாரமென்பா. சிலா வியாப்தியின் ஸ்மிருதி ஞானததை அநுமான மென்பா; பராமரிசததை வியாபாரமெனபா. இவ்வாறு நையாயிகர்களுக்கு அநேகமத முண்டு. ஆனால எல்லோா மதததிலும் பராமரிசத்தின் அங்கீகாரமுண்டு. சிலா பராமரிசத்தைக கரணமென்பா், சிலா வியாபாரமென்பா. பராமரிசமின்றி யநுமிதியுண்டாகாதென்பது சகல நையாயிகாகளது மதமாம.

---

## மீமாம்ஸை மதம்.

மீமாம்ஸைமதம் இதுவாம்:—யாண்டு பருவதத்தில் தூமத்தின் பிரத்தியக்ஷத்தால் வியாப்தியின் ஸ்மிருதியுண்டாய் வன்னியின் அநுமிதியுண்டாய் விடுகின்றதோ, ஆண்டு பராமரிசமின்றியும் அநுமிதி யநுபவசித்த மாம். ஆகையால் யாண்டுப் பராமரிசமுண்டாய் அநுமிதி யுண்டாகின்றதோ, ஆண்டும் பராமரிசம அநுமிதிக்குக் காரணமன்று. ஆனால் பராமரிசம் அந்யதாசித்தமெனப்படுகின்றது. எங்ஙனம்: தெய்விகமாய் வந்த கழுதை அல்லது குலால பத்தினி கடத்தில் அந்யதாசித்தமாம். காரண சாமக்கிரியினும் புறம்பாயுள்ளதெதுவோ, அது அந்நியதாசித்த மெனப்படும். இவ்வாற்றான் மீமாம்ஸை மதத்தில் பராமரிசம் காரண மன்று. அதன் அநுசாரிகளும் பராமரிசமொன்றை விட்டு நையாயிகர்களைப் போல அநேகபதார்த்தங்களை அநுமானமென்பர். சிலர் வியாப்தியின் ஸ்மிருதியையும், சிலர் அடுக்களை முதலியவற்றின்கண் வியாப்தியின் அநுபவத்தையும், சிலர் பக்ஷத்தில் ஹேதுவின் ஞானத்தையும் அநுமானமென்பர்.

## உகா. அத்வைத மதாநுசாரமான அநுமிதியின் கிரமம்.

அத்வைத நூலும் யாண்டு விரோத முண்டாதல்லையோ, ஆண்டு மீமாம்ஸையினது * பிரக்கிரியையின அநுசாரமாம். ஆதலால் அத்வைத மதத்திலும் பராமரிசம காரண மன்று. ஆனால் அடுக்களை முதலியவற்றின்கண் உண்டாகும் வியாப்தியின் பிரத்தியக்ஷமாகிய அநுபவம யாதோ, அது அநுமிதியின காரணமாம். அந்த வியாப்தியினது அநுபவத்தின் உற்பத்தித(எழும்பிய) சம்ஸ்கார மே வியாபாரமாம். பர்வதத்திலுண்டாகும தூமத்தின் பிரத்தியக்ஷமெதுவோ, அது சம்ஸ்காரத்தின † உற்போதகமாம். யாண்டு வியாப்தியின் ஸ்மிருதியுண்டாய் விடுகின்றதோ, ஆண்டும ஸ்மிருதியின் உற்பத்தியால் சம்ஸ்காரங்களினது நாசமோ உண்டாகிற தில்லை. ஆதலால் ஸ்மிருதி சம்ஸ்காரம எனனும இரண்டுமுண்டு. ஆண்டும் அநுமிதியின் வியாபாரரூப காரணம சம்ஸ்காரமாம. வியாப்தியின் ஸ்மிருதி காரண மன்று. ஏனெனின், அநுமிதியில் வியாப்தி ஸ்மி

* ஒரு பிரகாரமாகச் சொல்லப்படும விஷயம் பிரக்கிரியை யெனப்படும்.
† உற்போதகம்=எழுப்புவது, புலப்படுத்துவது.

ருதியினை வியாபாரமாகிய காரணமென அங்கீகரிக்கினும் ஸ்மிருதியின் காரணம் சம்ஸ்கார மென அங்கீகரித்தலும், ஸ்மிருதியில் அநுமிதியின் காரணத்தன்மையை அங்கீகரித்தலும் வேண்டும். ஆதலால்இரண்டினுமகாரணத்தன்மையைக் கற்பித்தல் † கௌரவமாம். ஸ்மிருதியின் காரணமா யங்கீகரித்த சம்ஸகாரம் எதுவோ, அதனை அநுமிதியின் காரணமாக அங்கீகரிக்கின், ஸமிருதியின் காரணத்தன்மையை விடுதல் ‡ இலாகவமாம். இவ்வாற்றல் வியாப்தியின் அநுபவம் கரணமும்,சம்ஸ்காரம் வியாபாரமும், அநுமிதிபயனுமாம். இது வேதாந்தபரிபாஷைமுதலிய அத்வைத நூல்களிற் சொல்லிய கிரமமாம். நையாயிகர் மதததிற் போலப் பராமரிசம் அநுமிதியின் காரணமன்று.

## ௨எ. வியாப்தியினது ஸ்மிருதியின் வியாபாரத்தன்மையும் சம்ஸ்காரத்தின் அவ்வியாபாரத் தன்மையும்.

சம்ஸ்காரத்தை அநுமிதியின் வியாபாரமென அங்கீகரியாது, ஸ்மிருதியை வியாபாரமென அங்கீகரிக்கினும சித்தாநதத்திற்குக் கெடுதி யில்லை. வேதாந்தபரிபாஷை முதலிய நூல்களில் விரோதமிருக்கினும், யுக்தியினுல் அர்த்த நிச்சயஞ் செய்தலால் ஆதுனிக நூல்களின் விரோதத்தாற் கெடுதி யில்லை. ஆனுற் சுருதி ஸ்மிருதிகளின் விரோதத்தா லேனும் சித்தாந்த விரோதத்தா லேனும் கெடுதியுண்டாம்.அநுமிதியின் வியாபாரரூபகாரணம் ஸ்மிருதி அல்லது சம்ஸ்காரமா மென்னும் அர்த்தத்தில் சுருதி ஸ்மிருதிகள் உதாசீனமா யிருக்கின்றன. சித்தாந்தமும உதாசீனமா யிருக்கின்றது. ஆதலால் வியாப்தியின் ஸமிருதிக்கு வியாபாரத்தன்மையைக் கூறுதலில் விரோதமில்லை. மாறுதலான சாதகயுக்தி யுளது.

ஏனெனின், வியாப்தியின் சம்ஸ்காரத்தை அநுமிதிக்குக் காரணமாகச் சொல்லு மிடத்து, அநற்புத்த சம்ஸகாரத்தால் அநுமிதியுண்டாகுமாயின், பர்வதத்தில் தூமத்தின் பிரத்தியக்ஷ

† ஒரு வஸ்துவினுலேயே ஒரு காரியம் சித்திக்கக்கூடியதாயிருக்க, அதற்குப் பல வஸ்துக்களை ஏதுவாகக் கற்பித்தலைக் கற்பனுகௌரவ மென்பர்.

‡ ஈண்டுக் கூறிய இலாகவம் எளிதின் முடிதலாம்; தோஷமன்று.

மின்றியும் என்றுமே அநுமிதி யுண்டாதல் வேண்டும். அதனுல் உற்புத்த(புலப்பட்ட)சம்ஸ்காரம அநுமிதிக்கு ஏதுவாமென அங்கீ கரிக்க வரும். உற்புத்த சம்ஸ்காரங்களினுலேயே ஸ்மிருதி ,யுண் டாகின்றது. ஆதலால் யாண்டு அநுமிதியின் சாமக்கிரி யுளதோ, ஆண்டு நியமமாக ஸமிருதியின்சாமக்கிரியுண்டு. இரண்டின் சாமக்கி ரிகளுமிருக்குங்காலத்துஎந்தஞான முண்டாகுமென்பதைத்*தர்ம ராஜரைக் கேட்கவேண்டும. ஒன்றற கொன்று பிரதிபந்திக்கபடுந் தன்மையும் பிரதிபந்திக்குந் தன்மையும் அங்கீகரிக்கின் கௌரவ தோஷமுண்டாகும்; † விநிகமன விரஹமு முண்டாகும்; அநுபவ விரோதமு முண்டாகும். ஏனெனின், பாவதத்தில் தூம தரிசனத் தால் தூமதநில் வன்னியினது வியாப்தியின் ஸமரணத்திற்குப் பிற்காலத்தில் அநுமிதி யுண்டாகின்றது. இது புத்திமான்களது அநுபவசித்தமா (அநுபவததாற் பெறப்பட்டதா)ம். அநுமிதியால் வியாப்தியினது ஸமிருதியின் பிரதிபந்தம் அநுபவ விருத்தமாம். யாண்டு இரண்டு ஞானங்களின் இரண்டு சாமக்கிரிகளு முளவோ, ஆண்டு ஒரு சாமககிரிக்கு மறறொ சாமக்கிரி பிரதிபந்தகமாம். ஈண்டு அநுமிதியின் சாமக்கிரியும ஸமிருதியின் சாமக்கிரியும் ஒரே சம்ஸ்காரமாம். அதற்குப் பிரதிபந்திக்கப் படுவது பிரதிபந்திப்ப தெனுந்தன்மைபொருந்தாது. அன்றியும்அநுமிதியால் ஸ்மிருதிக்கு ப் பிரதிபந்த முளதெனின், அநுமிதி பவிஷ்ய (எதிர்கால)த்ததாம்; அது உண்டாகவில்லை. அதற்குப பிரதிபந்தகத் தன்மை சம்பவி யாது. வேதாந்த பரிபாஷையினும் அங்ஙனமே அதன் உரையினும் அநுமிதியால் ஸ்மிருதிக்குப் பிரதிபநதம் எழுதப்படவில்லை. ஏனெ னின், உரையோடு கூடிய வேதாநத பரிபாஷையில் இஃதெழுதப் பட்டிருக்கின்றது. தூம தரிசனத்தால் சம்ஸ்காரம உற்புத்தமாகின் றது. அதனுற் சிலவிடத்து ஸமிருதி யுண்டாகின்றது; சிலவிடத் துண்டாகிறதில்லை. யாண்டுஸ்மிருதி யுண்டாகின்றதோ, ஆண்டும் சம்ஸ்காரங்களின் நாசமோ வுண்டாகிறதில்லை. சம்ஸ்காரம் ஸ்மி ருதி யென்னு மிரண்டுமுள. ஆனுல் ஸ்மிருதி சூனியமான ஸ்தல த்தில் எங்ஙனம் சம்ஸ்காரம் வியாபாரமோ, அங்ஙனமே ஸ்மிருதி

* தர்மராஜர் என்பவர் வேதாந்த பரிபாஷை யென்னும் நூலின் கர்த்தா.

† இரண்டில் ஒருபக்ஷத்தைநிச்சயிக்கும் யுக்தியின்மையை விநிகமன விரஹமென்பர்.

யின் இருப்பாகிய ஸ்தலத்திலும சமஸ்காரமே வியாபாரமாம்; ஸ்மிருதியன்று. இது தர்மராஜரது நூல். அதன்கண் புத்திமான்களுக்கு இவ்வாசசரிய முண்டாகின்றது. உற்பத்த சம்ஸ்காரமிருக்க, ஸ்மிருதி சூனியமான ஸ்தல மெங்ஙனமிருக்கும்? ஸ்மிருதியின் உற்பத்தியால சமஸ்காரத்திற்கு நாச முண்டாகின்றது; ஸ்மிருதியால் வேறு சமஸ்கார முண்டாகின்ற தென்பது யுக்தியோடுகூடிய பக்ஷமாம். அதன் உபபாதனம (அடைவு) வேறு நூலகளிற் பிரசித்தமாம. இந்தப் பக்ஷத்தில ஸ்மிருதி சம்ஸ்காரம் என்னு மிரண்டு மிருப்பதாகக் கூறுதல் முற்றும விருத்தமாம.

## உ௮ சுவார்த்தாநுமிதி அநுமானங்களின் சொரூபம்.

ஆகையால் வியாப்தியின் அநுபவம் காரணமும், வியாப்தியின் ஸ்மிருதி வியாபாரமுமா மென்னும இப்பக்ஷம தோஷமின்றியதாம. இவ்வாற்றால் யாண்டு அநுமிதி யுண்டாகின்றதோ, ஆண்டு அது சுவார்த்த(தன்பொருட்டு)அநுமிதி யெனப்படும. அன்றியும் நியாய மதத்தில் தூமத்தின் பிரத்தியக்ஷமும வியாப்தியின் ஸ்மரணமும முண்டாகியும் வன்னியின் அநுமிதி யுண்டாகிற தில்லை. இரண்டு ஞானங்களுக்கும பின்னாப் பராமரிசமென்னும மூன்றாவது ஞான முண்டாகின்றது. அங்ஙனமே அநுமிதியுமுண்டாகின்றது. 'வன்னி வியாப்பிய தூமமுடையது 'மலை' என்னும ஞானத்தைப் பராமரிச மென்பா. அதனை வேதாந்தத்தில அநுமிதியின் காரணமாக அங்கீகரிப்பதில்லை. இவ்வாற்றான் வாக்கியப பிரயோகமின்றி வியாத்தி ஞான முதலியவற்றான் எவ்வநுமிதி யுண்டாகின்றதோ, அது சுவார்த்தாநுமிதி யெனப்படும. அதன் காரணமாகிய வியாப்தி ஞான முதலியன சுவார்த்தாநுமான மெனப்படும.

## உ௯. பரார்த்த அநுமானம், அநுமிதி, தர்க்க மென்பவற்றின் சொரூபம்.

ஓர் புருடன் 'பர்வதத்தில் வன்னி, அநுமானப் பிரமாணத்தால் நிச்சயிக்கப்பட்டது' என்கின்றான். மற்றொருவன் 'இல்லை' என்று சொல்லுகின்றான். இவ்வாறு இருவருக்கும விவாதம நேர்ந்தவிடத்து, வன்னி நிச்சயமுடைய புருஷன் தனது பிரதிவாதியை நிருவிததிக்கும பொருட்டு வாக்கியப் பிரயோகஞ் செய்கின்றான். அதனைப் பரார்த்தாநுமான மென்பர். அவ்வாக்கியம வேதாந்த மத

த்தில் மூன்று அவயவங்களை யுடையதாம். க. பிரதிஞ்ஞை, உ. ஏது, ௩. உதாகரணம் என்பன வாக்கியத்தினது அவ்வயவங்களின் பெயர்கள். க. பர்வதம் வன்னியுடைத்து, உ. புகையுடைமைபால, ௩. யாது யாது தூமமுடைத்து, அது அது வன்னியுடைத்து, அடுக்களைபோல வென்று மிவ்வளவும் மகாவாக்கியமாம். அதன்கண் மூன்று அவாந்தர வாக்கியங்களுள; அவற்றிற்குப் பிரதிஞ்ஞை முதலியன முறையே பெயர்களாம். சாத்திய விசிஷ்டமான பக்ஷத்தை அறிவிக்கும் வாக்கியம் பிரதிஞ்ஞை வாக்கிய மெனப்படும். இவ்வியல்பினது 'பர்வதம்வன்னியுடைத்து' என்னும் வாக்கியமாம். 'வன்னி விசிஷ்டம் பர்வதம்' என்னும் அறிவு இவ்வாக்கியத்தா லுண்டாகின்றது. ஆண்டு வன்னி சாத்தியம், பர்வதம் பக்ஷம். ஏனெனின், அநுமிதிக்கு விஷயம் எதுவோ, அது சாத்திய மெனப்படும். அநுமிதிக்கு விஷயம் வன்னியாகலின் சாத்தியமாம். 'பர்வதம் வன்னியுடைத்து' என்னும் அநுமிதி யுண்டாகின்றது. அதற்குப் பர்வதமும் விஷயமாகின்றது. அதனையும் சாத்தியமெனல்வேண்டும். என்றாலும் வேதாந்த மதத்தில 'பர்வதம் வன்னியுடைத்து' என்னும் ஞானமோ ஒன்றேயாம்; ஆனால் அது பர்வத அம்சத்தில் இந்திரியஜந்யமும், வன்னியம்சத்தில் தூமஞானமாகிய அநுமானத்தால் தோன்றியதுமாம். ஆகையால் ஒரு ஞானத்தில் சாக்ஷாத்தன்மை அநுமிதித்தன்மை என்னுமிரண்டு தர்மங்களுள. சாக்ஷாத்தன்மையமசத்தின் விஷயத்தன்மை பர்வதத்திலும், அநுமிதித்தன்மை யமசத்தின் விஷயத்தன்மை வன்னியின்கண்ணு முள வாகலின், அநுமிதிக்கு விஷயம் பர்வதமன்று; கேவலம் வன்னியாம். எவ்வதிகரணத்தில சாத்தியத்தை யறியும் விருப்ப முண்டாய்ச் சாத்தியத்தின் அநுமிதி வடிவ நிச்சய முண்டாகின்றதோ, அது பக்ஷ மெனப்படும். அவ்வியல்பினது பர்வதம். பிரதிஞ்ஞை வாக்கியத்திற்கு வேறாய் இலிங்கத்தை யறிவிக்கும் வசனம் எதுவோ, அது ஏது வாக்கிய மெனப்படும். அத்தன்மைய வாக்கியம் 'புகை யுடைமையான்' என்பதாம். ஏது சாத்தியங்களின் உடனிகழ்ச்சியை யறிவிப்பதாகிய திருஷ்டாந்தத்தைப் பிரதிபாதிக்கும் வசனம் எதுவோ, அது உதாகரண வாக்கியமெனப்படும். வாதி பிரதிவாதிகளுக்கு யாண்டு விவாதமுண்டாக வில்லையோ, யாண்டு இருவராலும் நிச்சயிக்கப்பட்ட அர்த்த முளதோ, அது திருஷ்டாந்த மெனப்படும். அவ்வியல்பினது அடுக்களையாம். இவ்வாற

றால் பிரதிஞ்ஞை முதலிய மூன்றன் சமுதாயமாகிய மகாவாக்கியத்தான் விவாதம நிவிருத்தியாகின்றது. மகாவாக்கியத்தைக் கேட்டும், அடுக்களை முதலியவற்றின்கண் வன்னியின் உடனிகழ்ச்சியாகிய தூமமிருக்கின்றது; பர்வதத்தில் வன்னியின் வியபிசாரியாகிய தூமமிருக்கின்றது. ஆகையால் பாவதத்தில் தூமமுண்டு; வன்னி யில்லையென்று பிரதிவாதி ஆக்கிரகஞ் செய்யின், அல்லது வியபிசாரத்தின் சங்கையுண்டாயின், தர்க்கத்தால் ஆக்கிரக சங்கை(சந்தேகங்)களின் நிவிருத்தியுண்டாகின்றது. அநிஷ்டத்தைச் சம்பாதித்தலேத தர்க்கமென்பர். பர்வதத்தில் வன்னியின்றித் தூம மிருக்குமாயின் தூமம வன்னியின் காரியமாகா தென்பது தர்க்கம். இதனுல் தூமத்தில் வன்னியின் வியபிசார சந்தேகம் நீங்குகின்றது. வன்னி தூமங்களுக்குக் காரண காரியத்தன்மை இஷ்டமாம்; அவற்றின் அபாவம் அநிஷ்டமாம. ஆகையால் காரண காரியத்தன்மைகளின் பங்கம் சம்பாதிக்கப படுகின்றது, அக்காரண காரியத் தன்மைகளின் பங்கம் அநிஷ்டமாம். ஆகையால் அநிஷ்டத்தைச் சமபாதித்தல் வடிவினது தாக்கமாம். இத்தர்க்கத்தால் பிரதிவாதியின் நிவிருத்தியும் சங்கையின் நிவிருத்தியு முண்டாகின்றன. ஏனெனின், வன்னி தூமங்களின் காரண காரியத் தன்மை இருவருக்கும் இஷ்டமாம; அதன் பங்கம் இருவருக்கும் அநிஷ்டமாம். வன்னியின் வியபிசாரம் தூமத்திற் கூறின் அநிஷ்டத்தின் சித்தியுண்டாகும். அப்பயத்தால் வன்னியின் வியபிசாரியாம் தூமமென்னும் வார்த்தையைப் பிரதிவாதி சொல்லான். இவ்வாற்றான் மூன்றவயவங்களின் சமுதாயமாகிய மகாவாக்கிய மெதுவோ, அதனைப் பரார்த்தாநுமான மென்பர். அதன்பின்னர் உண்டாம் அநுமிதி யாதோ, அது பரார்த்தாநுமிதி யெனப்படும். அநுமானப் பிரமாணத்தால் நிச்சயஞ்செய்ய, வியபிசார சங்கை யுண்டாகுமாயின், அது தர்க்கத்தால் நிவிருத்தியாகும். ஆகையால் பிரமாணத்தின் சககாரி தாக்கமாம்.

## ௯௦. வேதாந்தமதத்தில் தர்க்கத்தோடு கூடிய பரார்த்தாநுமானத்தின் சொரூபம்.

வேதாந்த வாக்கியங்களால் ஜீவனிடத்து நிசசயிக்கப்பட்டிருக்கும் பிரஹ்மத்தின் அபேதம எதுவோ, அது அநுமானத்தானும் இவ்வாற்றாற் சித்திக்கின்றது:—ஜீவன் பிரஹ்மாபின்னம், சேதனத் தன்மையால், யாண்டு யாண்டுச சேதனத் 'தன்மை

யுண்டோ, ஆண்டாண்டுப் பிரஹ்மாபேத முண்டு; பிரஹ்மத்திற் போல இதுமூன்றவயவங்களின் சமுதாயமாகிய மகாவாக்கியமாம். ஆகையாற் பரார்த்தாநுமான மெனப்படும். ஈண்டுச் சீவன் பக்ஷம், பிரஹ்மாபேதம் சாத்தியம், சேதனத் தன்மை ஏது, பிரஹ்மம் திருஷ்டாந்தம். ஈண்டுப் பிரதிவாதியானவன் ஜீவனிடத்துச் சேதனத்தன்மையாகிய ஏதுவோ விருக்கின்றது, பிரஹ்மாபேதமாகிய சாத்தியமில்லை யென்றிவ்வாறு பக்ஷத்தில் சேதனத்தன்மையாகிய ஏதுவிற்குப் பிரஹ்மாபேதரூப சாத்தியத்தோடு வியபிசார சங்கை செய்யின், தர்க்கத்தால் அச்சங்கையை நிவிருத்தி செய்யவேண்டும். ஈண்டுத் தர்க்கத்தின் சொரூபம் இதுவாம்:—ஜீவனிடத்துச் சேதனத்தன்மையாகிய ஏதுவை யங்கீகரித்துப் பிரஹ்மாபேதமாகிய சாத்தியத்தை யங்கீகரியாவிடின், சேதனத்திற்கு அத்விதீயத்தன்மையைப் பிரதிபாதிக்கும் சுருதிக்கு விரோதமுண்டாகும். அநிஷ்டத்தைச் சம்பாதித்தல் தர்க்க மெனப்படும். சுருதியின் விரோதம் சாவ ஆஸ்திகர்களுக்கும் அநிஷ்டமாம். வியாவஹாரிகப்பிரபஞ்சம் மித்தை, ஞானத்தால் நிவிருத்திக்கப்படுந் தன்மையால், யாண்டு யாண்டு ஞானத்தால் நிவிருத்திக்கப்படுந் தன்மையுண்டோ, ஆண்டு ஆண்டு மித்தியாத்துவமுண்டு, இப்பிவெள்ளி முதலியவற்றிற்போல. ஈண்டு வியாவகாரிகப் பிரபஞ்சம் பக்ஷம், மித்தியாத்தன்மை சாத்தியம், ஞானத்தால் நிவிருத்திக்கப்படுந்தன்மை ஏது, இப்பிவெள்ளிமுதலியன திருஷ்டாந்தம். வியாவகாரிகப் பிரபஞ்சம் மித்தை யென்பது பிரதிஞ்ஞை வாக்கியம், ஞானத்தால் நிவிருத்திக்கப்படுந் தன்மை யுடைமையா லென்பது ஏது வாக்கியம், யாண்டியாண்டு ஞானத்தால் நிவிருத்திக்கப்படுந்தன்மையுண்டோ, ஆண்டு ஆண்டு மித்தியாத்துவ முண்டு, இப்பிவெள்ளி முதலியவற்றிற்போலவென்பது உதாகரணவாக்கியம். ஈண்டும் பிரபஞ்சத்திற்கு ஞானத்தால் நிவிருத்திக்கப்படுந்தன்மையைஅங்கீகரித்து மித்தியாத்தன்மையை யங்கீகரியாவிடின் சத்தி(உள்ளத)ற்கு ஞானத்தால் நிவிருத்தி பொருந்தாது. அதனால் ஞானத்தால் சகல பிரபஞ்சமும் நிவிருத்தியாதலைப்பிரதிபாதிக்கும் சுருதி ஸ்மிருதிகளுக்கு விரோதமுண்டாமென்னும் தர்க்கத்தால் வியபிசார சங்கையின் நிவிருத்தி யுண்டாகின்றது.

---

## ௬௧. வேதாந்தத்தில் அநுமானத்தின் பிரயோஜனம்.

இவ்வாறு வேதாந்த அர்த்தத்தின் அநுசாரிகளாகிய அநேக அநுமானங்களுள. ஆனால் வேதாந்தவாக்கியங்களால் அத்துவிதீய பிரஹ்மத்தின் எந்த நிச்சயம் சித்தித்திருக்கின்றதோ, அதன் சம்பாவனை (பொருத்தம)மாத்திரத்திற்கு ஏது அநுமானப் பிரமாணமாம். சுவதந்திர அநுமானம பிரஹ்மநிச்சயத்திற் கேதுவன்று; வேதாந்தவாக்கிய மொழிந்த மற்றைய பிரமாணங்களுக்குப் பிரஹ்மத்திற் பிரவிருத்தி யில்லையென்பது சித்தாந்தமாகலின். சுருக்கமாக அநுமானப் பிரமாணம சொல்லப்பட்டது.

இரண்டாவது பிரகாசம்
அநுமானப்பிரமாணநிரூபணம்
முடிந்தது.

---

ஓம்.

தத்ஸதப்ரஹ்மணேநமஃ.

# மூன்றாவது பிரகாசம்.

# சப்தப்பிரமாண நிரூபணம்.

---

## ௬௨. சாப்திப்பிரமையின் பேதம்.

சாப்திப்பிரமையின் கரணத்தைச் சப்தப்பிரமாண மென்பர். சாப்திப்பிரமை இருவகையாம். ஒன்று வியாவகாரிகம், மற்றொன்று பாரமார்த்திகம். வியாவகாரிக சாப்திப் பிரமையும் இருவகை யாம். ஒன்று இலௌகிக வாக்கிய ஜந்நியம், மற்றது வைதிக வாக்கிய ஜந்நியம். 'நீலக்குடம்' என்றல் முதலியன இலௌகிக வாக்கியமும், 'வஜ்ரஹஸ்தன் புரந்தரன்' என்றல் முதலியன வைதிகவாக்கியமுமாம். பதங்களின் சமுதாயத்தை வாக்கிய மென்பர். பொருளுடைய வர்ணம் (எழுத்து) அல்லது வர்ணசமுதாயம் பதமெனப்படும். அகார முதலிய வர்ணங்களும் விஷ்ணுமுதலிய பொருளுடையனவாயிருக்கின்றன. நாராயணன்முதலிய பதங்களில் வர்ணங்களின் சமுதாயம் (கூட்டம்) அர்த்தமுடையதா யிருக்கின்றது. நீலோகடஃ - நீலம் குடம்என்னும் வாக்கியத்தில் வியாகரணத்தின்படிஇரண்டு பதங்க

ளுள, நியாயமதத்தின்படி நான்கு பதங்களுள. வியாகரண மதத்தி லும் அர்த்தத்தை யறிவிக்குந் தன்மை நான்கு சமுதாயங்களினு முண்டு. பதம நான்கில்லை.

## ௯௯. சாப்திப்பிரமையின் தன்மை.

ஆண்டுச் சாப்திப்பிரமையின் தன்மை, இதுவாம:—நீலம் குடம் என்னும் வாக்கியத்தைக் கேட்டகாலத்துச் சுரோதாவி ற்கு (கேட்பவனுக்கு) ச்சகல பதங்களின் சிரவண ஞான முண் டாகின்றது. பதங்களின் சாக்ஷாதகாரத்தால் பதார்த்தங்களின் ஸ்மிருதி யுண்டாகின்றது. சங்கை:—பதங்களின் அநுபவம் பதங்க ளின் ஸ்மிருதிக்கு ஏதுவாம, பதார்த்தங்களின் அநுபவம் பதார்த்தங்க ளின் ஸ்மிருதிக்கு ஏதுவாம். பதங்களின் சாக்ஷாத்காரம் பதார்த்தங் களின் ஸ்மிருதிக்கு ஏதுவாதல் பொருந்தாது. ஏனெனின், எந்த வஸ்துவின் பூர்வ அநுபவ முளதோ, அதன் ஸ்மிருதி யுண்டாகும். மற்றொன்றின் அநுபவததால் மற்றொன்றின் ஸ்மிருதி யுண்டா காது. ஆகையால் பதங்களின் ஞானத்தால் பதாாத்தங்களின் ஸ்மிருதி யுண்டாதல் பொருந்தாது.

சமாதானம்:—சம்ஸ்காரவாயிலாகப் பதார்த்தங்களின் அநு பவமே பதார்த்தங்களின் ஸ்மிருதிக்கு ஏதுவாம; என்றாலும் உற் பூத சம்ஸ்காரங்களால் ஸ்மிருதி யுண்டாகின்றது; அநுற்பூத சம்ஸ் காரங்களால் ஸ்மிருதி யுண்டாகிறதில்லை. அநுற்பூத சம்ஸ்காரங்க ளாலும் ஸ்மிருதி யுண்டாகுமாயின், அநுபவிக்கப்பட்ட பதார்த்த ங்களின் ஸ்மிருதி எப்போது முண்டாதல் வேண்டும். ஆண்டுப் பதார்த்தங்களினது சம்ஸ்காரததின் உறபவத்திற்கு ஏது பத ஞானமாம். ஏனெனின், சமபந்திகளின் ஞானததால் அங்ஙனமே சாதிருசிய பதாாததங்களின் ஞானததால் அல்லது சிநதனத்தால் சம்ஸ்காரம் உற்பூதமாகின்றது. அதனால் ஸ்மிருதி யுண்டாகின் றது. எங்ஙனம: புத்திரனைப் பார்த்துப் பிதாவின் ஸ்மிருதியும், பிதாவைப்பார்த்துப் புததிரனது ஸ்மிருதியு முண்டாகின்றன. ஆண்டுச் சமபந்தியின் ஞானம் சம்ஸ்காரங்களின் உற்பவத்திற்குக் காரணமாம். அங்ஙனமே ஒர தவசியைக் கண்டு முற் கண்ட மற்றோர் தவசியின் ஸ்மிருதி யுண்டாகின்றது. ஆண்டுச் சம்ஸ் காரத்தின் உற்போதகம் (புலப்படசெய்வது) சதிருச தரிசனமா (ஒப்புமைக் காட்சியா) ம. யாண்டு ஏகாநததநி லுட்கார்ந்து

கொண்டு, அநுபவிக்கப்பட்ட பதார்த்தங்களின்சிந்தனம் செய்யுமிடத்து, அதனால் அநுபவிக்கப்பட்ட பதார்த்தங்களின் ஸ்மிருதி யுண்டாகின்றதோ, ஆண்டுச் சம்ஸ்காரங்களின் உற்போதகம் சிந்தனமாம். இவ்வாற்றாற் சம்பந்தி ஞான முதலியன சம்ஸ்காரத்தின் உற்போத (எழுச்சி) வாயிலாக ஸ்மிருதிக்கு ஏதுவாம். சம்ஸ்காரத்தின் உற்பத்தி வாயிலாகச் சமான விஷயமுடைய பூர்வ அநுபவம் ஸ்மிருதிக்கு ஏதுவாம். ஆகையாற் பதார்த்தங்களின் பூர்வ அநுபவமோ பதார்த்தங்களை விஷயிக்கும் சம்ஸ்காரத்தின் உற்பத்திவாயிலாக ஏதுவாம். பதார்த்தங்களின் சம்பந்தி பதம்; ஆதலாற் பதார்த்தங்களின் சம்பந்திகளாகிய பதங்கள் எவையோ, அவற்றின் ஞானம் சம்ஸ்காரத்தின் உற்போத வாயிலாகப் பதார்த்தங்களின் ஸ்மிருதிக்கு ஏதுவாம். ஆகையாற் பதங்களின் ஞானத்தால் பதார்த்தங்களின் ஸ்மிருதி சம்பவிக்கும். யாண்டு ஒரு சம்பந்தியின் ஞானத்தால் மற்றொரு சம்பந்தியின் ஸ்மிருதி யுண்டாகின்றதோ, ஆண்டு இரண்டுபதார்த்தங்களினது சம்பந்தத்தின் ஞானம் எவனுக் குண்டாகின்றதோ, அவனுக்கு ஒன்றன் ஞானத்தால் மற்றொன்றன் ஸ்மிருதி யுண்டாகும். எவனுக்குச் சம்பந்தத்தின் ஞான முண்டாக வில்லையோ, அவனுக்கு ஒன்றன் ஞானத்தால் மற்றொன்றின் ஸ்மிருதி யுண்டாகாது. எங்ஙனம்: பிதா புத்திரர்களுக்கு ஜந்நிய ஜநகபாவ சம்பந்த முண்டு. எவனுக்கு ஜந்நிய ஜநக பாவ சம்பந்தத்தின் ஞான முண்டாகின்றதோ, அவனுக்கு ஒருவனது ஞானத்தால் மற்றொருவனது ஸ்மிருதி யுண்டாகின்றது. எவனுக்கு ஜந்நிய ஜநக பாவ சம்பந்தத்தின் ஞான முண்டாகவில்லையோ, அவனுக்கு ஒருவனது ஞானத்தால் மற்றொருவனது ஸ்மிருதி யுண்டாகாது. அங்ஙனமே பதத்திற்கும் பொருளிற்கும் தம்மிலுள்ள சம்பந்தமெதுவோ, அதனை விருத்தி யென்பர். பதத்திற்கும் அர்த்தத்திற்கு முள்ள விருத்தியாகிய சம்பந்தம் யாதோ அதன்ஞானம் எவனுக்குண்டாகின்றதோ, அவனுக்குப் பதத்தின் ஞானத்தால் அர்த்தத்தின் ஸ்மிருதி யுண்டாகும். பதத்திற்கும் அர்த்தத்திற்கு முள்ள விருத்தி ரூப சம்பந்தம் எதுவோ, அதன் ஞான மில்லாதவனுக்குப் பதத்தின் ஞானத்தால் அர்த்தத்தின் ஸ்மிருதி யுண்டாகாது. ஆதலால் விருத்தியோடுகூடிய பதத்தின் ஞானம் பதார்த்தத்தின் ஸ்மிருதிக்கு ஏதுவாம்

---

கூறுதல்.

அந்த விருத்தி சக்தி விருத்தி இலக்ஷணா விருத்தி யென இரண்டு வகையாம். நியாயமதத்தில ஈசுவரனது இச்சையே சக்தியாம். மீமாம்ஸை மதத்தில் சக்தி யென்பது ஓர் பின்ன பதார்த்தமாம். வியாகரணமதத்திலும் பாதஞ்சலமதத்திலும வாச்சிய வாசகத்தன்மைக்குக் காரணமான பதத்திற்கும பொருளிற்குமுள்ள தாதாத்மிய சம்பந்தமெதுவோ அதுவே சக்தியாம. விசாரசாகரத்தில் யோக்கியதையாகிய சக்தி வியாகரணமதத்தால் எழுதப்பட்டிருக்கின்றது. அது பூஷணகாரர் மதமாம. வியாகரணத்தின் மஞ்சூஷா வென்னும நூலில் யோக பாஷியத்தின்படி வாச்சிய வாசகபாவத்திற்கு மூலமாகிய தாதாத்மியசம்பந்தமே சக்தியெனச் சொல்லப்பட் டிருக்கின்றது. அத்வைத சித்தாந்தத்தில் முழுவதும் தனதுகாரியத்தைசசெய்தலின் சாமர்த்தியமே சக்தியாம். எங்ஙனம் தந்துவில் படஞ்செய்தலின் சாமர்த்தியமாகிய சக்தி யிருக்கின்றதோ, எங்ஙனம வன்னியில் தாகஞ் செய்தலின் சாமர்த்தியமாகிய சக்தி யிருக்கின்றதோ, அங்ஙனமே பதங்களிலுள்ள தமது அர்த்த ஞானத்தின் சாமர்த்தியமே சக்தியாம. ஆனால் இதனுணைப் பேதமுண்டு:—வன்னிமுதலிய பதார்த்தங்களிலுள்ள சாமர்த்தியமாகிய சக்திக்கு ஞானத்தின அபேக்ஷை யில்லை. சக்தி அறியப்பட்டதாகுக; அல்லது அறியப படாததாகுக. இரண் டிடங்களிலும் வன்னி முதலியவற்றால தாகாதி காரியங்களுண்டாகின்றன. பதத்தினது சக்தியின ஞான முண்டாகுமாயின், அப்போது அர்த்தத்தின் ஸ்மிருதியாகிய காரிய முண்டாகின்றது. சக்தியின ஞான முண்டாகாவிடின், அப்போது அர்த்தத்தின் ஸ்மிருதியாகிய காரிய முண்டாவதில்லை. ஆகையால் பதத்தின சாமர்த்தியமாகிய சக்தி அறியப்பட்டதாகுமாயின் அப்போது பதார்த்தங்களின் ஸ்மிருதியாகிய காரியமுண்டாகின்றது.

சங்கை:—யாண்டு அநீத (கழிந்த) பதத்தின் ஸ்மிருதி யுண்டாகின்றதோ, ஆண்டுப் பதத்தின் ஸ்மரணமாகிய ஞானத்தால் அர்த்தத்தின ஸ்மிருதி யுண்டாகின்றது. அஃதுண்டாகலாகாது; சாமர்த்தியரூப சக்தியுடைய பதத்தின த்வம்ஸம் (நாசம) உண்டாய்விட்டமையால் அர்த்தத்தின் ஸ்மிருதிக்கு ஏதுவாகிய பதத்தின் அபாவ மிருத்தலின்.

சமாதானம் :—மீமாம்ஸைமதத்தில் சகல பதங்களும் நித்திய மாம். அவற்றிற்கு உற்பத்தி நாச முண்டாகிறதில்லை. ஆகையால் பதத்திற்குத் துவம்ஸம் பொருந்தாது. பதங்களை அநித்தியமெனக் கொள்ளின், இது சமாதானமாம்:—பதார்த்த ஸ்மிருதியின் சாமர்த்தியம் பதத்திலில்லை. ஆனால் பதஞானத்தில் பதார்த்தத்தினது ஸ்மிருதியின் சக்தி யுளது. யாண்டுப் பதத்தின் துவம்ஸ முண்டாகின்றதோ, ஆண்டும் பதத்தின் ஸ்மரணரூப ஞானமுண்டு. யாண்டு வார்த்தமான பதமுளதோ, ஆண்டுப் பதத்தின் சிராவண சாக்ஷாத்கார ஞானமுண்டு. அந்த ஞானத்தில் பதார்த்தத்தினது ஸ்மிருதியின் சாமர்த்திய மிருக்கின்றது. அதுவே சக்தியாம். இந்தப் பக்ஷத்தில் சக்தி யுடையது பத மன்று; ஆனால் பதத்தின் ஞானமாம். இந்தப் பக்ஷம் கதாதர பட்டாசாரியரால் சக்திவாத கிரந்தத்தில் ஞான சக்தி வாதமாக எழுதப்பட் டிருக்கின்றது. இவ்வாற்றால் பதத்தின் சாமர்த்தியம் அல்லது பதத்தினது ஞானத்தின் சாமர்த்தியம் சக்தியெனப்படும். இரண்டாவது பக்ஷத்திலும் பதம் சக்தி யுடையதாம் என்னும் வியவகார சித்தியின்பொருட்டுப் பதத்தின் தர்மமாகியசக்தி அபேக்ஷிக்கப்படுவதாயின், எப்பதத்தின் ஞானம் எவ்வார்த்தத்தின் ஸ்மிருதியில் சாமர்த்தியமுடைய தாகின்றதோ, அப்பதத்திற்கு அவ்வர்த்தத்தில் சக்தி சொல்லப்படுகின்றது.

## ௩௫. சாப்திப்பிரமையின் கிரமபூர்வகமாகச் சக்தியில் விவாதம்.

இவ்வாற்றாற் சக்தியோடு கூடிய பதஞானத்தால் பதார்த்தத்தின் ஸ்மிருதி யுண்டாகின்றது. எவ்வளவு பதார்த்தங்களின் ஸ்மிருதி யுண்டாகின்றதோ, அவ்வளவு பதார்த்தங்களினது சம்பந்தத்தின் ஞானமாதல், சம்பந்தத்தோடு கூடிய சகல பதார்த்தங்களின் ஞானமாதல் வாக்கியார்த்த ஞான மெனப்படும். அதனையே சாப்திப்பிரமை யென்பர். 'நீலோகட:(நீலோ கட:)' என்னும் வாக்கியத்தில் ௧. நீலபதம், ௨. ஓகாரபதம், ௩. கடபதம், ௪. விஸர்க்கபதமென நான்கு பதங்க ளுள. நீலரூப விசிஷ்டத்தில் நீலபதத்தின் சக்தி யிருக்கின்றது. ஓகாரபதம் பொருளின்றியதாம். இவ்வார்த்தை வியுத்பத்தி வாதமுதலிய கிரந்தங்களில் ஸ்பஷ்டமாம். அல்லது ஓகாரபதத்திற்கு அபேத அர்த்தமாம். கடபதத்திற்குக் கடத்தன்மை

விசிஷ்டத்தில் சக்தியுண்டு. * விசர்க்கத்திற்கு ஒருமையெண்ணில் சக்தி யிருக்கின்றது. சக்தியின் ஞானம், கோசம் (நிகண்டு) வியாகரணம் (இலக்கணம்) முதலிய நூல்களா லுண்டாகின்றது. நீலம் பீதம் (கருமை பொன்மை) முதலிய பதங்களுக்கு வர்ணத்தினும் வர்ண முடையதன்கண்ணும் சக்தி உண்டென்பது கோசத்தில் எழுதப்பட்டிருக்கின்றது. விசர்க்கத்திற்கு ஒருமைச சங்கையில்லை, சக்தி யுண்டென்பது வியாகரணத்தான் அறியப்படுகின்றது. கடபதத்திற்குக் கடத் தன்மை விசிஷ்டத்தில் சக்தி யுண்டென்பது வியாகரண நூலினும் சக்திவாதமுதலிய தர்க்க நூல்களினும் எழுதப்பட்டிருக்கின்றது. நியாயசூத்திரத்தில் கௌதமரானவர் ஜாதி ஆகிருதி வியக்திகளில் சகலபதங்களுக்கும் சக்தியுண்டென்று சொல்லியிருக்கின்றார். அவயவங்களின் சையோகத்தை ஆகிருதி யென்பர். அநேக பதார்த்தங்களிலிருக்கும் நித்தியமாகிய ஒரு தாமமேது வோ, அது ஜாதி யெனப்படும். அநேக கடங்களிலுள்ள நித்திய மும் ஏகமுமாகிய கடத்தன்மை சாதியாம். அங்ஙனமே ஜாதியின் ஆசிரயத்தை வியக்தியென்பர். இம்மதத்தில் கடபதத்திற்குக் கபால சையோகத்தோடு கூடிய கடத்தன்மை விசிஷ்டகடத்தில் சக்தி யுண்டு. ஸ்ரீதீதிகாரசிரோமணி பட்டாசாரியர் மதத்தில் சகல பதங்களுக்கும் வியக்தி மாத்திரத்தில் சக்தி யுண்டு. ஜாதி ஆகிருதிகளிலில்லை. இம்மதத்தில் கடபதத்திற்கு வாச்சியம் கேவல வியக்தியாம். கடத் தன்மையும் கபால சையோகமும் கடபதத்திற்கு வாச்சியமாகா. ஏனெனின், எப்பதத்திற்கு எப்பொருளின்கண் சக்தியுண்டோ, அப்பதத்திற்கு அப்பொருள் வாச்சியமெனப்படும்; சக்கியமென்றும் சொல்லப்படும். கேவல வியக்தியில் சக்தியிருத்தலான் கேவல வியக்தியே வாச்சியமாம்.

சங்கை:—கடபதத்தின் உச்சாரணத்தால் கடத்தன்மையின் தோற்றமும், கோபதத்தின் உச்சாரணத்தால் கோத்தன்மையின் ஞானமும், பிராமணபதத்தின் உச்சாரணத்தால் பிராமணத்தன்மையின் ஞானமு முண்டாகின்றன. அஃது இம்மதத்தி லுண்டாக

---

* விசர்க்கமென்பது சம்ஸ்கிருதத்தில் உயிர்வர்க்கத்தின் ஈற்றிலுள்ள (ஃ) இரண்டு புள்ளி வடிவினது. தமிழில் கரியன் தேவதத்தன் என்னும் வாக்கியத்தைக்கொண்டு, அதனை 'கரிய, ன், தேவதத்த, ன்' என்று நான்கு பதங்களாகப் பிரித்து முடித்துக்கொள்க.

லாகாது. ஏனெனின், அவாச்சிய ஆர்த்தத்தின் ஞானம் இலக்ஷணை யின்றிப் பதத்தா' லுண்டாகிறதில்லை. அவாசசிய ஆர்த்தத்தின் ஞானம் இலக்ஷணையின்றிப் பதத்தால் அங்கீகரிக்கின், கட பதத் தின் அவாச்சியமாகிய கடத்தன்மையின் ஞானம் எங்ஙனம் கட பதத்தால் அங்கீகரிக்கப் படுகின்றதோ, அங்ஙனமே கடபதத்தி ற்கு அவாசசியமாகிய பட முதலியவற்றின் ஞானமும கடபதத்தா லுண்டாதல் வேண்டும்.

சமாதானம்:—வாசசியத்தின் பிரதீதி பதத்தால் உண்டாகின் றது; அன்றியும் வாசசியததிலிருக்கும ஜாதி யெதுவோ, அதன் தோற்றமு முண்டாகின்றது. ஆகலின் இது நியமமாம:—ஜாதிக்கு வேருகிய அவாசசியத்தின் பிரதீதி யுண்டாகிற தில்லை. வாசசியத் தின்கணுள்ள ஜாதி எதுவோ, அது அவாச்சியமாகியும் தோற்று கின்றது. ஆகையால் கடத்தன்மை முதலியனவோ, அவாசசிய மாகியும் கடமுதலிய பதங்களால தோற்றுகின்றன; பட முதலிய அவாசசியம தோற்றுகிறதில்லை.

சங்கை:—வாச்சியததின்க ணிருக்கும் அவாசசிய சாதி யின் தோற்றம் பதங்களா லங்கீகரிககின, கடபதத்தால் பிருதிவி த்தன்மைச் சாதியின்தோற்றமுமுண்டாதல்வேணடும. ஏனெனின், கட பதததின் வாசசியத்தில் எப்படிக் கடத்தன்மைச சாதி யிருககின்றதோ, அதுபோலப் பிருதிவிததன்மையு மிருக்கின்றது. ஆதலால் இரண்டும வாசசியத்தி லிருபபனவாயும அவாசசியமாயு மிருக்கின்றன. கடத்தன்மையின் தோற்றமபோலப் பிருதிவித்தன் மையின் தோற்றமு முண்டாதல் வேண்டும. கோபதத்திற்கு வாச் சியமாகிய பதம் எதுவோ, அதன்கண் கோத்தன்மையைப் போல ப்பசுத்தன்மை (விலங்குததன்மை) யுமிருக்கின்றது. ஆதலால் இர ண்டும் வாசசியமாம். அங்ஙனமே பிராமணபதத்தால் பிராமணத் தன்மையைப்போல மனிதத்தன்மையும தோற்றல்வேண்டும்.

சமாதானம்:—வாச்சியத்தன்மை யவசசேதகமான அவாச் சியம் எதுவோ, அதன் தோற்றமும வாசசியத்தின் தோற்றமும் பதத்தா லுணடாகின்றன. பிறவற்றின் தோற்ற முண்டாவதில்லை. எங்ஙனம்: கட பதததின் வாசசியமான கட வியக்தியின் தோற்ற மும், வாசசியத் தன்மை யவசசேதகமான கடத் தன்மையின் தோறறமும கடபதத்தா லுண்டாகின்றன. பிருதிவித்தன்மை

வாச்சியமு மன்று; வாச்சியத்தன்மை யவச்சேதகமு மன்று. ஆகலின் கட பதத்தால் பிருதிவித் தன்மையின் தோற்ற முண்டாகிறதில்லை. வாச்சியத்தன்மையினும் குறைந்தவிடத் திருப்பதும் அதிகவிடத் திருப்பது மாகாமல், எவ்வளவிடத்தில் வாச்சியத்தன்மையுள்ளதோ, அவ்வளவிடத்தி லிருப்பது எதுவோ, அது வாச்சியத் தன்மை யவச்சேதக மாம். கட பதத்தின் வாச்சியத் தன்மை சகல கட வியக்திகளினு மிருக்கின்றது. கடத் தன்மையும் சகல கட வியக்திகளினு மிருக்கின்றது. ஆதலால் கடத் தன்மை கடத்தின் வாச்சியத்தன்மையினும் குறைந்தவிடத்திருப்பதும் அதிகவிடத்திருப்பது மாகாமல், சமான தேசத்திருப்பதா யிருத்தலால் கட பதத்தின் வாச்சியத்தன்மை யவச்சேதகமாம். கடபதத்தின் வாச்சியத் தன்மை படத்தி லில்லை. பிருதிவித் தன்மை படத்தினுண்டு. ஆதலால் அதிக விடத்திருப்பதா யிருத்தலின் பிருதிவித் தன்மை கட பதத்தின் வாச்சியத் தன்மை யவச்சேதக மன்று. கோபதத்தின் வாச்சியத்தன்மை சகல கோவியக்திகளினு முண்டு. கோத் தன்மையும் சகல கோ வியக்திகளினு முண்டு. ஆகலின் கோத் தன்மை கோ பதத்தின் வாச்சியத் தன்மை யவச்சேதகமாம் அசுவத்தில் கோபதத்தின் வாச்சியத்தன்மை யில்லை. அதன் கண் பசுத் தன்மை யிருக்கின்றது. ஆதலால் கோ பதத்தினது வாச்சியத்தினும் அதிகவிடத் திருப்பதா யிருத்தலான் கோ பதத்தின் வாச்சியத்தன்மை யவச்சேதகம் பசுத்துவமன்று. அங்ஙனமே பிராமணபதத்தின் வாச்சியத்தன்மை சகல பிராமண வியக்திகளினு முண்டு. பிராமணத் தன்மையும் சகல பிராமண வியக்திகளினு முண்டு. ஆகையால் பிராமண பதத்தின் வாச்சியத்தன்மை யவச்சேதகம் பிராமணத்தன்மையாம். க்ஷத்திரியர் முதலியோரிடத்துப் பிராமணபதத்தின் வாச்சியத்தன்மை யில்லை. ஆண்டு மனிதத்தன்மை யிருக்கின்றது. ஆதலால் அதிக விடத்திருப்பதாயிருத்தலால் பிராமணபதத்தின் வாச்சியத்தன்மை யவச்சேதகம மனிதத் தன்மை யன்று. இவ்வாற்றால் கடமுதலிய பதங்களால் கடத் தன்மைமுதலியவற்றின் தோற்ற முண்டாகின்றது. சத்தியின்மையால் அவை (கடத்தன்மை முதலியன) கடமுதலிய பதங்களின் வாச்சியமன்று; ஆனால் வாச்சியத்தன்மை யவச்சேதகமாம். இது சிரோமணி பட்டாசாரியரது மதமாம. கட முதலிய பதங்களுக்குச் சாதி மாத்திரத்தில் சக்தி யுண்டு; வியக்தியின்க ணில்லை யென்பது மீமாம்ஸை மதம்.

**சங்கை:**—எவ்வர்த்தத்தில் எப்பதத்தினது சக்தியின் ஞான முண்டாகின்றதோ, அவ்வர்த்தத்தின் ஸ்மிருதி அப்பதத்தா லுண்டாகச் சாப்திப்பிரமை யுண்டாகின்றது. பதத்தின் சக்தியின்றிப் பதத்தால் வியக்தியின் ஸ்மிருதியும் சாப்திப்பிரமையும் உண்டாகலாகாது.

**சமாதானம்:**—சப்தப் பிரமாணத்தினாலோ ஜாதியின் ஞானமே யுண்டாகின்றது. அங்ஙனமாயினும் அருத்தாபத்திப் பிரமாணத்தால் வியக்தியின் ஞான முண்டாகின்றது. பகலுண்ணுப புருஷனுக்கு இராத்திரி போஜனமின்றிப் பருமை சம்பவியாததுபோல வியக்தியின்றிக் கேவல ஜாதியில் ஒரு கிரியையும் சம்பவியாது. ஆகையால் அர்த்தாபத்திப் பிரமாணததால் வியக்தியின் போத முண்டாகின்றது. "ஆவைகொண்டுவா" என்னும வாசசியத்தால் கோத்தன்மையினது கொண்டுவருதலின் ஞான முண்டாகின்றது. அது கோவியக்தியின் கொண்டு வருதலையின்றிப பொருந்தாது. கோவியக்தியின் கொண்டு வருதலானது சம்பாதகமாம; கோத தன்மையின் கொண்டு வருதலானது சம்பாத்தியமாம். சம்பாதக ஞானத்திற்கு ஏதுவாகிய சம்பாத்தியத்தின் ஞானம் அர்த்தாபத்திப் பிரமாணமெனப்படும். சம்பாதகஞானம பிரமையாம். இவ்விடத்துச் சாதியின் ஞானம் பிரமாணமும, வியக்தியின் ஞானம பிரமையுமாமென்பது பட்டமீமாம்ஸகர் மதம். ஓர ஜாதிசக்திவாதி * அநுமானததால் வியக்தியின் ஞானத்தை யங்கீகரித்துளன். அது பிற நூல்களில் தெளிவாயுண்டு. கடினப் பிரசங்கத்தான் ஈண்டு எழுதப்படவில்லை. கேவல ஜாதியில் சக்தியை யங்கீகரிப்பவர் மதததில் வியக்தியின் ஞானம சத்தப் பிரமாணத்தால் உண்டாகிற தில்லை; அர்த்தாபத்தியால் அல்லது அநுமானத்தால் வியக்தியின் ஞான முண்டாகின்றது. ஆனால் ஓர நூலாசிரியர ஜாதியில குப்ஜசக்தியை யங்கீகரித் திருக்கின்றனர். அவர் மதததில் வியக்தியின் ஞானமும சப்தப் பிரமாணததானே யுண்டாகின்றது. அவர் அபிப்பிராயம் இதுவாம் :— சகல பதங்களின் சக்தியோ ஜாதிவிசிஷ்ட வியக்தியிலுண்டு. ஆனால் சக்தியின் ஞானம் எவனுக்குண்டாயிருக்கின்

---

* அவ்வநுமானம வருமாறு.—

கடத்தன்மை வியக்தியை யாசிரயித்ததாம, சாதித்தன்மையால். யாது யாது ஜாதியோ அதுஅது வியக்தியை யாசிரயித்ததேயாம்; படத்தன்மை போல.

றதோ, அவனுக்குப் பதத்தால் அர்த்தத்தின் ஸ்மிருதியும் சாப்த போதமு முண்டாகின்றன; பிறனுக்கில்லை. ஆண்டுக் கடபதத்தின் சக்தி கடத்தன்மையிலுண்டு. இவ்வாற்றான் ஜாதி சக்தியின்ஞானம் பதார்த்தத்தினது ஸ்மிருதிக்கும் சாப்தபோதத்திற்கும் ஏதுவாம். வியக்தியில் சக்தியினது ஞானத்தின் உபயோக மில்லை. வியக்தி அநந்தமாகலின் எல்லா வியக்திகளின் ஞானமும் சமபவியாது. இக்காரணத்தால் வியக்தியின்சக்தி சொரூபமாகப் பதார்த்தத்தினது ஸ்மிருதிக்கும் சாப்தபோதத்திற்கும் ஏதுவாம். அதன்ஞானம் ஏது வன்று. இவ்வாற்றான் கட பதத்திற்குக் கடத்துவ விசிஷ்டத்திற் சக்தி யிருத்தலான் கட பதத்தின் வாச்சியமோ கடத்துவம் கடமென்னு மிரண்டுமாம. ஆதலால் கடபதத்தின் வாச்சியமாகிய கடத்தன்மை கடமென்பவற்றின் சாப்தபோதத்திற்கு ஏது கடத்தன்மையிலுள்ள சக்தியின் ஞானமாம. இப்பக்ஷத்தினைக் * குப்ஜ சக்தி வாத மென்பர். வேறு வகையாற் குப்ஜசக்தி வாதம் கதாதர பட்டாசாரியரால் சக்தி வாதத்தின் ஈற்றில் எழுதப்பட் டிருக்கின்றது. அது கடினமாகலின் ஈண்டெழுதப்படவில்லை. கட முதலிய பதங்களால் ஜாதி விசிஷ்ட வியக்தியின் ஞான முண்டாவதுபோல வியக்தியி லுள்ள ஜாதியின் சமவாய முதலிய சம்பந்தங்களின் ஞானமு முண்டாகின்றது. ஆதலால் ஜாதி வியக்தி சமபந்தமென்னும் மூன்றினும் கடமுதலிய பதங்களின் சக்தி யுண்டென்பது கதாதர பட்டாசாரியர் மதம். சகல மதங்களினும் ஜாதிவிசிஷ்ட வியக்தியில் கடமுதலிய் பதங்களுக்குச் சக்தியுண்டு. இம்மதமும் அநேக நூலாசிரியர்களால் எழுதப்பட்டிருக்கின்றதாம். ஆதலால் கடத்தன்மைவிசிஷ்டத்திலகடபதத்தின்சக்திசொல்லப்பட்டிருக்கின்றது.

## ௩௬. வாக்கியங்களின் பேதம்.

நீலத்தின் அபேதமுடைய ஒரு கட மிருக்கின்ற தென்பது 'இது நீலக்குடம்' என்னும் வாக்கியத்தின் அர்த்தமாம். அங்ஙனமே 'வஜ்ரஹஸ்தன் புரந்தரன் (வச்சிராயுதத்தைக் கையிலுடையவன் இந்திரன்)' என்பது வைதிக வாக்கியம். 'நீலக்குடம்' என்னும் வாக்கியத்தில் எங்ஙனம் நீலபதம் விசேஷணத்தை யறிவிப்பதும், கடபதம் விசேஷியத்தை யறிவிப்பதுமா யிருக்கின்றனவோ, அங்ஙனமே வஜ்ரஹஸ்தன் என்னும் பதம் விசேஷணத்தை யறிவிப்

* குப்ஜம் - வளைவு.

பதும், புரந்தரனென்னும் பதம் விசேஷியத்தை யறிவிப்பதுமாம. விசேஷண பதத்தின் ஈற்றிலுள்ள னகரம் பொருளின்றியதாம், அல்லது அபேதத்தின் பொருட்டாம். விசேஷிய பதத்தின் ஈற்றிலுள்ள னகரம் ஒருமையை யுணர்த்துதற் பொருட்டாம். வஜ்ரஹஸ்தத்தின் அபேதமுடைய ஒருபுரந்தர னுளனென்பது வாக்கியத்தின் அர்த்தம். இவ்வாற்றான் இலௌகிக வைதிக வாக்கியங்களுக்குச் சமானமான தன்மை யுண்டு. ஆனால் வைதிக வாக்கியம் இருவகையாம்:—ஒன்று வியாவகாரிகப்பொருளை யுணர்த்துவது, மற்றொன்று பரமார்த்த தத்துவத்தை யறிவிப்பது. பிரஹ்மத்தின் வேறாய யாவும் வியாவகாரிகப் பொருளெனப்படும், பிரஹ்மம் பரமார்த்ததத்துவ மெனப்படும். பிரஹ்மத்தை யறிவிக்கும் வாக்கியமும் அவாந்தரவாக்கியம் மகாவாக்கியமென இருவகைப்படும். அவற்றுள் தத்பதார்த்தத்தின் அல்லது துவம்பதார்த்தத்தின் சொரூபத்தை யறிவிப்பது அவாந்திர வாக்கியமாம். அது 'சத்திய ஞான அநந்தம் பிரமம்' என்னும் வாக்கியம் தத்பதத்தை யறிவிப்பதும், 'இவன் இருதயத்தினுள் உட்சோதியாயுள்ள புருஷன்' என்னும் வாக்கியம் துவம்பதத்தின் சொரூபத்தை யறிவிப்பது மாதல் போலவாம். தத்பதார்த்த துவமபதார்த்தங்களின் அபேதத்தை அறிவிக்கும் தத்துவமஸி முதலியன மகாவாக்கியமாம்.

## கூஎ. சத்தத்தின் சக்திவிருத்தி லக்ஷணைவிருத்திகளைச் சுருக்கமாகக் கூறுதல்.

எப்பொருளில் எப்பதத்தின் விருத்தி யுளதோ, அப்பொருளின் ஞானம் அப்பதத்தாலுண்டாகின்றது. அவ்விருத்தியும் சக்தி இலக்கணை யென்னும பேதத்தால் இருவகையாம். ஈசுவரனது இச்சையை அல்லது வாச்சிய வாசகத்தன்மைச் சம்பந்தமாகிய மூலதாதான்மியத்தை அல்லது பதார்த்தஞான வேதுவாகிய சாமர்த்தியத்தைச் சக்தி யென்பர். எப்பொருளின்கண் பதத்தின் சக்தி யுண்டாகின்றதோ, அப்பொருள் பதத்தின் சக்கியமெனப்படும். சக்கிய சம்பந்தத்தை இலக்ஷணையென்பர். கங்கையென்னும் பதத்தின் சக்தி பிரவாகத்தின்கணிருக்கின்றதாகலின், கங்கையென்னும் பதத்தின் சக்கியம் பிரவாகமாம். அதனோடு சையோக சம்பந்தம் தீரத்திற்(கரைக்)குளது. இவ்வாற்றாற் பதத்திற்குப் பொருளோடுள்ள பரம்பரைச சம்பந்த மெதுவோ, அது இலக்ஷணை

யாம். கங்கையென்னும் பதத்திற்குத் தீரத்தோடு பரம்பரைச் சம்பந்த மிருக்கின்றது. அதுவே தீரத்தில் கங்கையென்னும் பதத்திற்கு இலக்ஷணை யெனப்படும். ஏனெனின், சாக்ஷாத் சம்பந்த முள்ளதோடுள்ள சம்பந்த மெதுவோ, அது பரம்பரைச் சம்பந்த மெனப்படும். கங்கையென்னும் பதத்திற்குச் சக்திரூப சம்பந்தம் பிரவாகத்தோடுண்டு; அதனோடுசையோகம் தீரத்திற்குண்டு. ஆகையால் கங்கையெனும் பதத்திற்குத் தீரத்தோடு சுவ(தனது)சக்கிய சையோகரூப பரம்பரைச்சம்பந்தமுண்டு. அதுவே இலக்ஷணையெனப்படும். இதனால் இது சித்தித்தது:—எப்பொருளோடு எப்பதத்திற்குச் சக்திரூப சாக்ஷாத் சம்பந்த முண்டாகின்றதோ, அப்பொருள் அப்பதத்தின் சக்கிய மெனப்படும். எப்பொருளோடு எப்பதத்தினது சக்கியத்தின் சம்பந்த முண்டாகின்றதோ, அப்பொருள் அப்பதத்தின் இலக்ஷிய மெனப்படும். கங்கையென்னும் பதத்தின் சக்கியமாகிய பிரவாகமெதுவோ, அதற்குத் தீரமாகிய பொருளோடு சையோகசம்பந்தமிருக்கின்றது. ஆதலால் கங்கையென்னும் பதத்திற்குச் சக்கியம் பிரவாகமும், இலக்ஷியம் தீரமுமாம்.

இவ்வாற்றாற் பதத்தின் சாக்ஷாத் சம்பந்தமும் பரம்பரைச் சம்பந்தமுமாகிய சக்தி யிலக்கணைகளின் பேதத்தால் விருத்தி யிருவகைப்படும். எப்பதத்தின் விருத்தி எப்புருஷனுக்கு அறியப் படாததா யிருக்கின்றதோ, அப்பதத்தின் சாக்ஷாத்காரம் அப்புருஷனுக் குண்டாகியும் பதார்த்தத்தின் ஸ்மிருதியும் சாப்தபோதமு முண்டாகிறதில்லை. ஆதலால் சக்தி யிலக்கணையென்னும் விருத்திகளின் ஞானம் பதார்த்த ஸ்மிருதிக்கும் சாப்தபோதத்திற்கும் ஏதுவாம்.

## ௩-அ. வாக்கியார்த்த ஞானத்தின் கிரமம்.

சாப்த போதத்தின் கிரமம் இதுவாம்:—எந்தப் புருஷனுக்குப் பதத்தின்விருத்தி அறியப்பட்டதாகின்றதோ, அந்தப்புருஷனுக்கு வாக்கியத்தினது சகல பதங்களின் சாக்ஷாத்காரமு முண்டாகின்றது. எப்பதத்தின் விருத்தி எப்பொருளில் முன் அறியப்பட்டதா யிருக்குமோ, அப்பதத்தான் அப்பொருளின் ஸ்மிருதி யுண்டாகின்றது. அதன்பின் ஒன்றற்கொன்று சம்பந்தமுடைய சகல பதார்த்தங்களின் ஞானமாகிய அல்லது சகல பதார்த்தங்களின் ஒன்றற் கொன்றுள்ள சம்பந்த ஞானமாகிய வாக்கியார்த்த ஞான

மூண்டாகின்றது. எங்ஙனம் : 'நீ ஆவைக் கொண்டுவா' என்னும் வாக்கியத்தில் ஆமுதலிய பதங்களைவயோ, அவற்றிற்குத் தமது பொருளில் விருத்தியின் இவ்வியல்பினதாய ஞானம் முதலிற் புருஷனுக் குண்டாதல் வேண்டும். ஆவென்னும் பதத்திற்கு ஆத் தன்மை விசிஷ்ட பசு விசேஷ (விலங்கின் பேத) த்தில் சக்தி யுண்டு. இரண்டாம் வேற்றுமைக்குச் செயப்படுபொருண்மையிற் சக்தியாம, கொண்டுவருதலிற் கொண்டுவாவென்னும்பதத்திற்குச் சக்தியாம், ஆய்விகுதி புணர்ந்துகெட்ட வாவென்னும் பதத்திற்கு வினையினும் ஏவற்கண்ணும் சக்தியாம். சம்போதன யோகசேதன த்தில் ( விளித்தலின் சமபநதத்தையுடைய உயர்திணையில் ) நீ யென்னும் பதத்திற்குச் சக்தியிருக்கின்றது. இவ்வாற்றால் சக்திஞான முடையவனுக்கு 'நீ ஆவைக் கொண்டுவா' என்னும் வாக்கியத் திற்குச் சுரோத்திரத்தோடு சம்பந்தமுண்டாகவே, ஆ முதலிய சகல பதங்களின் சாக்ஷாத்காரமு முண்டாய் அதனுல் அப் பதங் களினது சக்கியார்த்தத்தின் ஸ்மிருதி யுண்டாகின்றது. யானைப் பாகனது ஞானத்தால் அவன் சம்பந்தமுடைய யானையின் ஸ்மி ருதி யுண்டாதல போலப் பதங்களின் ஞானத்தால் அவற்றின் சம்பந்தமுடைய சக்கியார்த்தங்களின் ஸ்மிருதி யுண்டாகின்றது. 'இவன் யானைப்பாகன்' என்று யானைக்கும் மாவுத்தனுக்கு முள்ள சம்பந்தத்தின் ஞானம் எவனுக்குண்டாகாமல் 'மனிதன்' என்னும் ஞான முண்டாகின்றதோ, அவனுக்கு யானைப்பாகனைக் கண்டுழி யும் யானையின் ஸ்மிருதி யுண்டாகிறதில்லை. அதுபோல இப்பதத் திற்கு இது சக்கியமாம், அல்லது இலக்கியமாமெனச் சக்தியல்லது இலக்கணையாகிய சமபந்தத்தின் பூர்வ ஞானம் எவனுக் குண்டா காமல், அறியப்படாத பொருளினையுடைய பதத்தின் சிராவண சாக்ஷாத்கார மு (செவி யுணாவு) ண்டாகின்றதோ, அவனுக்குப் பதங்களின் சிரவணத்தாலும் அர்த்தங்களின் ஸ்மிருதி யுண்டாகிற திலலை. ஆகலின் விருத்தியோடு கூடிய பதத்தின் ஞானம் பதார்த்த ஸ்மிருதிக்கு ஏதுவாம; கேவல பதத்தின் ஞானம் ஏதுவன்று. பதங் களின் ஞானத்தால் சகலபதார்த்தங்களின் ஸ்மிருதியு முண்டாய்ச் சகல பதார்த்தங்களின் ஒன்றற்கொன்றுள்ள சம்பநதத்தின் ஞான முண்டாகின்றது. அல்லது பதங்களின் ஞானத்தால் ஒன் றற்கொன்று சம்பந்தமுள்ள எப்பதார்த்தங்களின் ஸ்மரண முண் டாயிருக்கின்றதோ, ஒன்றற்கொன்று சம்பந்தத்தோடு கூடிய அப்

பதார்த்தங்களின் ஞான முண்டாகின்றது. அந்தப் பதார்த்தங்களின் ஞானம் அல்லது சம்பந்தத்தோடு கூடிய பதார்த்தங்களின் ஞானம் வாக்கியார்த்த ஞானமெனப்படும்; சாப்திப்பிரமையென்றும் சொல்லப்படும். 'ஆவைக் கொண்டுவா நீ' என்னும் வாக்கியத்தில் ஆ வென்னும் பதப் பொருட்கு இரண்டாம் வேற்றுமைப் பொருளாகிய செயப்படு பொருண்மையில் ஆதேயத் தன்மைச் சம்பந்த முண்டு. ஆதேயத்தன்மையினை விருத்தித்துவம் (விருத்தித்தன்மை) என்பர். 'கொண்டுவா' என்பதின் பொருளாகிய கொணர்தலிற் செயப்படு பொருண்மையை நிரூபிக்குந் தன்மைச் சம்பந்த முண்டு. வாவென்பதற்கு வினை, ஏவலென இரண்டு பொருளுண்டு. ஆண்டு வினையிற்கொணர்தலின் அநுகூலத்தன்மைச் சம்பந்தமுண்டு. வினைக்கு நீ யெனனும் பதப்பொருளில் ஆசிரயத்தன்மைச் சம்பந்தமும், ஏவற்கு நீ யென்னும பதப்பொருளில விடயத்தன்மைச் சம்பந்தமுமுண்டு. ஆகலின் "ஆவின்கணிருக்கும் செயப்படு பொருண்மையை நிரூபிக்கும கொணாதலான அநுகூல வினையின் ஆசிரயமாகிய பிரேரணை (ஏவலின்) விஷயம நீ யென்னும் பதப்பொருளாம்" என்னும ஞானவாக்கியம சுரோதாவிற்குண்டாகின்றது. ஆண்டுவிருத்தி விசிஷ்ட சகல பதங்களின் ஞானமும சத்தப்பிரமாணமாம; பதங்களின் ஞானத்தாலுண்டாகும் அவற்றினது அர்த்தத்தின் ஸ்மிருதி வியாபாரமாம; வாக்கியார்த்த ஞானமு பயனும. இவ்வாற்றான் இலௌகிக வைதிக வாக்கியங்களால் அநேக விடங்களில் பதார்த்தங்களினது சம்பந்தத்தின் அல்லது சம்பந்தத்தோடுகூடிய பதார்த்தங்களின்ஞானமே பயனாகின்றது. என்றாலும் துவமபதார்த்தத்தின் சம்பந்தியாகிய தத்பதார்த்தத்தின் ஞானமும் தத்பதார்த்தத்தின் சம்பந்தியாகிய துவமபதார்த்தத்தின் ஞானமும் மகா வாக்கியங்களால் அங்கீகரிக்கின், "இப்புருஷன் அசங்கனே" என்றல் முதலிய சுருதி வாக்கியங்களால் வேதாந்தப் பிரதிபாத்திய (உபநிடதங்களாற் சொல்லப்படும்) பிரஹ்மத்திற்கு அசங்கத் தன்மை சொல்லப் படுகின்றமையால் அதற்குப் பாதமுண்டாகின்றது. ஆதலால் மகாவாக்கியங்களாற்சொல்லப்படுவது அகண்டபிரஹ்மமாம். வாக்கியங்கள் அகண்டார்த்தத்தை யறிவிப்பனவா மென்பதில் திருஷ்டாந்தம சம்க்ஷேபசாரீரகத்தில் ஸ்பஷ்டமாம்; விரிவஞ்சி யெழுதப்படவில்லை.

## ௩௬. இலக்ஷணையின் றன்மை.

மகா வாக்கியங்களில் இலக்கணையின் கிரமம் விசார சாகரத்தில் எழுதப்பட்டிருக்கின்றது. அதனைத் தெரிந்துகொள்க. பதத்தின் சக்கியத்தோடுள்ள சம்பந்தத்தினை இலக்ஷணையென்பர். ஆதலால் பதத்திற்குப் பரம்பரைச் சம்பந்தமாகிய இலக்ஷணை யிருக்கின்றது. ஏனெனின், பதத்தின் சாக்ஷாத் சம்பந்தம் சக்கியத்தோடுண்டாகின்றது. அச்சக்கியத்தின் சம்பந்தம் இலக்ஷணையோடுண்டாகின்றது; ஆதலால் சக்கியவாயிலாகப் பதத்திற்குச் சம்பந்தமிருத்தலான் பரம்பரைச் சம்பந்தமாகிய இலக்ஷணாவிருத்தி யுண்டு. இக்காரணத்தானே நூலாசிரியர்கள் இலக்ஷணா விருத்தியினை * ஜகந்நிய மெனக் கூறியிருக்கின்றனர். யாண்டுப் பதத்திற்குச் சாக்ஷாத் சம்பந்தமாகிய சக்திவிருத்தி சம்பவிக்க வில்லையோ, ஆண்டுப் பரம்பரைச் சம்பந்தமாகிய இலக்ஷணாவிருத்தி அங்கீகரிக்கப்படும். இக்காரணத்தானே நூலாசிரியர்கள், யாண்டுச் சக்கியார்த்தத்தில் சொல்லுவோனது தாற்பரியஞ் சம்பவிக்கவில்லையோ, ஆண்டு இலக்ஷணாவிருத்தியை யங்கீகரித்துப் பதத்தினிலக்ஷியப் பொருளை யங்கீகரித்தல் தகுதியாம். யாண்டுச் சக்கியார்த்தத்தில் உரைப்போனது தாற்பரியம் சம்பவிக்கின்றதோ, ஆண்டு இலக்ஷியப்பொருளை யங்கீகரித்தல் தகுதியன்றென்று எழுதியிருக்கின்றார்கள். அவ்விலக்ஷணை கேவல லக்ஷணை, இலக்ஷித லக்ஷணையென்னும் பேதத்தால் இருவகையாம். பதத்திற்குச் சக்கியத்தின் சாக்ஷாத் சம்பந்த முண்டாகுமாயின் அதனைக் கேவல லக்ஷணையென்பர். கங்கையென்னும் பதத்திற்குக் கரையினிடத்து இலக்ஷணை யுண்டாகின்றது. ஆண்டுக் கங்கையென்னும் பதத்தின் சக்கியமாகிய பிரவாகம் எதுவோ அதற்குக் கரையோடுள்ள சாக்ஷாத் சம்பந்தம் யோகமா(அவயவசக்தியா)ம் ஆகலின் கங்கையென்னும் பதத்திற்குக் கரையினிடத்துக் கேவல இலக்ஷணையாம். இலக்ஷித லக்ஷணையின் உதாகரணம் இதுவாம்:— † "துவிரேபம் ஒலிக்கின்றது" என்னும் வாக்கியத்திற்கு "இரண்டு ரேபங்கள் (ரகரங்கள்) ஒலிக்கின்றன" என்னும் பொருள் பதங்களின் சக்தி

---

* ஜகந்நியம் - தாழ்ந்தது.

† துவிரேபம் என்பது இரண்டு ரகாரங்களையுடைய பதத்தின் பொருளாம். இரண்டு ரகாரங்களையுடைய பதம் பிரமரம்; அதன்பொருள் வண்டு.

யாற் ரோற்றுகின்றது. அவ்வெழுத்து வடிவான ரேபத்தில் ஒலித் தல் சம்பவியாது. ஆதலால் சக்கியார்த்தத்தில் உரைப்பவனுக்குத் தாற்பரியமில்லை. ஆனால் இரண்டு ரேபங்களையுடைய பிரமரபதம் எதுவோ அதன்சக்கியத்தின்கண்ணே ரேப பதத்திற்கு இலக்ஷணை யாம். அது கேவலலக்ஷணையோவன்று. ஏனெனின் எப்பொருளில் பதத்தினது சக்கியத்தின் சாக்ஷாத் சம்பந்தமுண்டாகின்றதோ, அதன்கண் கேவல லக்ஷணை யுண்டாகின்றது. துவிரேப பதத்தின் சக்கியம் இரண்டுரேபமாம். அவற்றின் அவயவித்தன்மைச் சம்பந் தம் பிரமரபதத்திலுளது. அப்பதத்தின் சக்திரூபசம்பந்தம் தனது வாச்சியமாகிய வண்டில் இருக்கின்றது. ஆதலால் சக்கிய சம்பந்தி யாகிய பிரமரபதம் எதுவோ அதன் சம்பந்தமிருத்தலால் சக்கியத் தின் பரம்பரைச்சம்பந்த மிருக்கின்றது; ஆகலின் இலக்ஷிதலக்ஷணை யாம். இரண்டுரேபங்களைத் துவிரேபமென்றுகூறுவதில்லை. இரண்டு ரேபங்களுடையதனைத் துவிரேபமென்பர். இரண்டு ரேபமுடை யது பிரமரபதமாம். ஆகலின் துவிரேப பதத்தின் சக்கியமாகிய பிர மரபதமெதுவோ, அதற்கு வண்டினோடு சாக்ஷாத் சம்பந்த மிருத் தலால் கேவலலக்ஷணைசம்பவிக்கின்றது. என்றாலும் வியாகரணமத த்தில் அது சமாசத்தின் (*தொகைச்சொல்லின்)சக்தியாமாகலின் துவிரேப பதத்தின் சக்கியம் இரண்டு ரேபங்களையுடைய பிரமர பதமாம். நியாயவைசேஷிகர் முதலியோர் மதத்தில் சமாசசமுதாயத் திற்கு (தொகைச்சொற் றொகுதிக்கு)ச் சக்தி யங்கீகரிப்பதில்லை. ஆனால் சமாச சமுதாயத்தின் அவயவங்க ளெவையோ, அவற்றி ற்கு இலக்ஷணா விருத்தியினால் அதிக அர்த்தம் சமாசத்தின்கண் தோற்றுகின்றது. எங்ஙனம்: 'துவிரேபம' என்னும் இவ்வளவும் சமாச சமுதாயமாம். அதற்கு எப்பொருளினும் சக்தி யில்லை. ஆண்டுத் துவித்துவ (இருமைச்) சங்கை விசிஷ்டம் துவிபதத்தின் அர்த்தமாம். ரேபத்தன்மைச் சாதிவிசிஷ்ட அக்ஷரம் ரேபபதத் தின் பொருளாம். துவிபதத்தின் சக்கியத்திற்கும் ரேபபதத்தின் சக்கியத்திற்கு முள்ள அபேதசம்பந்தம் வாக்கியார்த்த மாகுமா யின், துவித்துவ சங்கையுடையன ரேபங்களாமென்னும் அர்த்த மே சக்கியமாம். துவிரேபமுடைய பதத்தினைத் துவிரேபமென் பர். அஃது இலக்ஷணா விருத்தியை யங்கீகரித்துக் கூறுகின்றனர்.

* துவிரேபம் என்பது தேன்மொழியினைப் போல அன்மொழித் தொகைச்சொல்.

ஆனால் இத்துணைப் பேதமுண்டு:—நியாய வைசேஷிகமதத்தில் வாக்கியத்திற்கு இலக்ஷணை யங்கீகரிப்பதில்லை. ஏனெனின், சக்கிய சம்பந்தத்தை இலக்ஷணை யென்பர். பதசமுதாய வடிவினதாகிய வாக்கியத்திற்கு எப்பொருளினும் சக்தியில்லை. ஆதலால் வாக்கியத்தினது சக்கியத்தின் அபாவமிருத்தலான் சக்கிய சம்பந்தமாகிய இலக்ஷணை வாக்கியத்திற்குப் பொருந்தாது. பதத்திற்கு இலக்ஷணையுண்டென்னும் மதத்தில் இரேப பதத்திற்கு இரேபமுடையதன்கண் இலக்ஷணையாம். மீமாம்ஸைமதத்தினும் அங்ஙனமே வேதாந்த மதத்தினும் வாக்கியத்திற்கும் இலக்ஷணை யங்கீகரித்துளர். வாக்கியத்தி னிலக்ஷணையில் எத்தோஷம் சொல்லப்பட் டிருக்கின்றதோ, அதற்கிது சமாதானமாம்:— பத சமுதாயத்தினை வாக்கியமென்பர். அச்சமுதாயம் ஒவ்வோர் பதத்தினும் வேறன்று. ஆதலாற் பதங்களின் சக்கியமே வாக்கியத்தின் சக்கியமாம். அல்லது சக்கிய சம்பந்தம் இலக்ஷணை யன்று; போத்திய(அறியப்படுதற்)சம்பந்தம் இலக்ஷணையா மென்பர். பதத்தின் சக்கியத்தன்மை சக்திவிருத்தியா லறியப்படுவ தாதல்போல ஒன்றற்கொன்று சம்பந்தத்தோடு கூடிய பதார்த்தவடிவ அல்லது பதார்த்தங்களின் சம்பந்த வடிவ வாக்கியார்த்தம் வாக்கியத்தால் அறியப்படுவதாம். ஆதலால் பதத்தா னறியப்படும் சம்பந்தமாகிய இலக்ஷணை எங்ஙனம் பதத்திற்குளதோ, அங்ஙனமே வாக்கியத்தா னறியப்படும் சம்பந்தமாகிய இலக்ஷணை வாக்கியத்திற்கு முண்டென்னும் மதத்தில் துவிரேப சமுதாயத்திற்கு இரண்டு ரேபமுடைய பதத்தின்கண் இலக்ஷணையாம். இவ்வாற்றான் துவிரேப பதத்தான் இலக்ஷித (இலக்ஷிக்கப்பட்ட) பிரமர பதத்திற்கு வண்டினிடத்து இலக்ஷணையிருத்தலான் இலக்ஷித இலக்ஷணையெனப்படும். அதுவும இலக்ஷணையினு ளடங்கியதேயாம். ஏனெனின், துவிரேப பதத்தின் சக்கியமாகிய இரண்டு ரேபங்களுக்குப் பிரமர பதத்தோடு சாக்ஷாத சம்பந்தமும் பிரமரமாகிய வண்டோடு பிரமர பதவாயிலாகப் பரம்பரைச் சம்பந்தமு மிருக்கின்றனவாகலின், சக்கிய சம்பந்தமாகிய இலக்ஷணையினும் இலக்ஷித லக்ஷணை வேறன்று. வியாகரண மதத்தில் துவிரேப பதத்தின் சக்கியம இரண்டு ரேபங்களையுடைய பிரமரபதமாம். அதற்கு வண்டோடு சாக்ஷாத் சம்பந்தமுண்டு. ஆகலின், இவ்வுதாரணம இலக்ஷித லக்ஷணையினதன்று; கேவல இலக்ஷணையினதாம். இம்மதத்தில் இலக்ஷித லக்ஷணையின் உதாரணம் 'இப்

கம் தேவதத்தன்' என்றல் முதலியனவாம். ஈண்டுச் 'சிங்கத்தோ டபின்னன் தேவதத்தன்' என்னும் வாக்கியார்த்தம் பதங்களின் சக்திவிருத்தியாற் றோன்றுகின்றது; அது சம்பவியாது. ஏனெனின் பசுத்தன்மைச் சாதியும் மனிதத் தன்மைச் சாதியும் ஒன்றற் கொன்று விருத்தமாம்; ஒன்றினிடத்துச் சம்பவியா. ஆகலின் சிங்க மென்னும் சொல்லிற்குச் சூரத்தன்மை குரூரத்தன்மைத் தர்ம முடைய புருஷனிடத்து இலக்ஷணையாம். அப்புருடனோடு சிங்க மாகிய சக்கியத்திற்குச் சாக்ஷாத் சம்பந்த மின்மையால் கேவல லக்ஷணையோ இல்லை. ஆனால் சூரத்தன்மை முதலியவற்றோடு சிங்க சத்தத்தின் சக்கியத்திற்கு ஆதேயத்தன்மைச் சம்பந்தமுளது. சக்கிய சம்பந்தியாகிய சூரத்தன்மை முதலியவற்றிற்குப் புருஷனிடத்து ஆசிரயத்தன்மைச் சம்பந்தமுண்டு. ஆனால் சிங்கத்தின் சூரத்தன்மைக்கும் புருஷனது சூரத் தன்மைக்கும் அபேதம் அங்கீகரிக்கின் சிங்கத்தின் சூரத்தன்மைக்குத் தேவதத்தனிடத்து அதிகரணத்தன்மையின் சம்பந்தமாம். இரண்டு சூரத்தன்மைகளுக்கும் ஒன்றற்கொன்று பேத மங்கீகரிக்கின், சிங்கத்தினது சூரத்தன்மைக்குப் புருஷனிடத்துத் தன்னினமுள்ள சூரத்தன்மையின் அதிகரணத்தன்மைச் சம்பந்தமுண்டு. சிங்கத்தின் சூரத்தன்மை தானென்னும் சொல்லிற்குப் பொருளாம். இவ்வாற்றான் வாக்கியத்திற்குப் பரம்பரைச் சம்பந்த மிருத்தலான், சிங்க சத்தத்திற்குச் சூரத்தன்மை முதலிய குண விசிஷ்டனிடத்து இலக்ஷித லக்ஷணையாம். சக்கியத்தின் பரம்பரைச் சம்பந்தத்தினை இலக்ஷித லக்ஷணையென்பர்.

இலக்ஷித லக்ஷணையென்னும் சொல்லால் முற்கூறிய பொருளின் சித்தி (பெறுதி) கிலேசமுடையதாம்; ஏனெனின், இலக்ஷித லக்ஷணையெனுஞ் சொல்லின் * ரூடியோ சக்கியத்தின் பரமபரைச்

* ரூடி (இடுகுறி) யெனபது பதத்தின் சமுதாய சக்தி (பொதுவாற்றல்). அவவாற்றலுடைய பதங்கள் மரம், நிலம் என்பனவாம். யோகம் (காரணம்) என்பது பதத்தின் அவயவங்களில் (சொல்லின் பகுதி விகுதி முதலிய வுறுப்புகளில்) உள்ள சக்தியாம். அவவாற்றலுடைய பதங்கள் அணி, முடி முதலியனவாம். யோகப்பொருளிலிருக்கும் ரூடி சக்தி யோகரூடி (காரண இடுகுறி) யாம். இவவாற்றலுடைய பதங்கள் பங்கயம் முக்கண்ணன் முதலியனவாம். யோகப் பொருளினும் வேறாய பொருளிலிருக்கும் ரூடி சக்தி யௌகிகரூடிசக்தியாம். அவவாற்றலுடையபதம் உற்பிதம்முதலியன. உற்பிதமென்னும பதத்திற்கு யோகப்பொருள் பிளந்துகொண்டுவரும் மரம் கொடி முதலியன; ரூடிப்பொருள் ஓர் யாகம்.

சம்பந்தத்தால் கோசம் (நிகண்டு) முதலியவற்றில் ஓரிடத்து மில்லை. யோகவிருத்தியால் இலக்ஷணையென்னும் சொல்லிற்கு முற்கூறிய பொருள் தோற்றுகிற தில்லை. ஏனெனின், இலக்ஷிதத்தின் இலக்ஷணை இலக்ஷித இலக்ஷணையென்றிவ்வாறு ஆறும்வேற்றுமைத் தொகையாகச் செய்யின், இலக்ஷிதம் அதாவது இலக்ஷணை விருத்தியாற் றோன்றிய தெதுவோ, அதன் இலக்ஷணை யென்பது இலக்ஷித லக்ஷணையென்னும் சொல்லிற்குப் பொருளாகச் சித்திக்கின்றது. துவிரேபம் ஒலிக்கின்றது, சிங்கம் தேவதத்தன் என்றல் முதலியனவாகச் சொல்லப்பட்ட இலக்ஷிதலக்ஷணையின் உதாகரண மெதுவோ, அதில் முற்கூறிய சொரூபமுள்ள இலக்ஷித லக்ஷணை சம்பவியாது. ஏனெனின் 'துவிரேபம் ஒலிக்கின்றது' என்னும் வாக்கியத்தில் துவிரேப பதத்தால் பிரமரபதம் இலக்ஷித மாகின்றது. அதற்கு வண்டினிடத்து இலக்ஷணை யுண்டாகுமாயின், முற்கூறிய அர்த்தம் சம்பவிக்கும். அவ்விரண்டு வார்த்தையு மில்லை. ஏனெனின், துவிரேப பதத்தினது சக்கியத்தின் சம்பந்தம் பிரமர பதத்தோ டுளதாயினும் துவிரேப பதத்தால் இலக்ஷிதம் பிரமர பதமன்று. ஏனெனின் சொல்லுவானது கருத்திற்கு விடயமாகும் சக்கிய சம்பந்தி இலக்ஷிதமாம்; கேவல சக்கிய சம்பந்தி இலக்ஷிதமன்று, கேவல சக்கிய சம்பந்தி இலக்ஷிதமாயின், கங்கையென்னும் பதத்தினது சக்கியத்தின் சம்பந்திகள் மீனமுதலிய அநேகமுள; அவை யாவுமே கங்கையென்னும் பதத்தால் இலக்ஷிதமாதல் வேண்டும். ஆதலால் சொல்லுவான் குறிப்பிற்கு விடயமாகும் சக்கியசம்பந்தி இலக்ஷிதமாம். கங்கையென்னும் பதத்தின் சக்கிய சம்பந்தியோ அநேகமாம், என்றாலும் 'கங்கையில் இடைச்சேரி' என்னும் வாக்கியத்தில் கேட்பவனுக்குக் கங்கையென்னும் சொல்லால் கரையின் ஞான முண்டாகின்றது. இவ்வாறு கருத்திற்கு விடயமாகும் சக்கிய சம்பந்தி கேவலம் கரையாம். ஆகலின் கங்கையென்னும் பதத்தால் கரையே இலக்ஷிதமாம். மீன முதலியனவும் சக்கிய சம்பந்திகளா யிருக்கினும், முற்கூறிய கருத்திற்கு விடயமாதலில்லை யாகலின், கங்கையென்னும் பதத்தால் இலக்ஷிதமாகா. இவ்வாற்றான் துவிரேப பதத்திற்குச் சக்கியத்தின் சம்பந்தியோ பிரமரபதமாம்.ஆனல் துவிரேப பதத்தால் பிரமரபதத்தின் ஞானம் கேட்பவனுக் குண்டாதல் வேண்டுமென்பது சொல்லுவான் கருத் தன்று. ஆனல் துவிரேப பதத்தால் பிரமர

பதத்தின் சக்கியமாகிய வண்டின் ஞானம் கேட்பவனுக் குண்டா தல் வேண்டுமென்பது சொல்லுவோனது கருத்தாம். ஆதலால் துவிரேப பதத்தினது சக்கியத்தின் சம்பந்தியும் பிரமரபதமாம். சொல்லுவோனது முற்கூறிய கருத்திற்கு விடயமாதலின்மையால் துவிரேப பதத்தால் இலக்ஷிதம் பிரமரபத மன்று. ஒருவாற்றால் துவிரேப பதத்தால் இலக்ஷிதம் பிரமரபதமா மென்னும் வார்த் தையினை அங்கீகரித்துக் கொள்வோமாயினும் பிரமர பதத்திற்கு வண்டின்கண் சக்தி யிருக்கின்றதாகலின் அதற்கு இலக்ஷணை கூறு தல் அசங்கதமாம், இவ்வாற்றான் 'இலக்ஷிதமாகிய வண்டினது இலக்ஷணை இலக்ஷித லக்ஷணையாம்' என்றிவ்வாறு ஆறும்வேற்று மைத் தொகையின் பொருள் முற்கூறிய உதாரணத்திற் சம்பவி யாது. அங்ஙனமே 'சிங்கம் தேவதத்தன்' என்னும் உதாரணத் தினும் முற்கூறிய அர்த்தம் சம்பவியாது. சிங்கத்தின்க ணுள்ள சூரத்தன்மை முதலியன சிங்கசத்தத்தினது சக்கிய சம்பந்திகளா யிருக்கினும், சிங்க சத்தத்தால் சூரத் தன்மை முதலியவற்றின் ஞானம் கேட்பவனுக் குண்டாதல் வேண்டு மென்பது சொல்லு வோனது கருத்தன்று. ஆனல் சிங்க சத்தத்தால் சிங்கத்தை யொத்த புருஷனது போதம் கேட்பவனுக் குண்டாக வேண்டுமெ ன்பது சொல்லுவானது கருத்தாம். ஆதலால் சக்கிய சம்பந்தியாயி னும் சூரத்தன்மை முதலிய குணங்கள் முற்கூறிய கருத்திற்குவிடய மாகா திருத்தலான், சிங்க சத்தத்தால் இலக்ஷித மன்று. அன்றி யும் ஒருவாற்றால் சிங்க சத்தத்தால் இலக்ஷிதமாம சூரத் தன்மை முதலிய குணங்களென்பதை ஒப்புக்கொள்ளுவோ மாயினும் அவ ற்றிற்கு இலக்ஷணை கூறுதல் விருத்தமாம். ஏனெனின், சக்தியும் இலக்ஷணையும் எழுத்துவடிவமான சத்தத்தினவாம். சூரததன்மை முதலிய குணங்கள் சத்தரூபமன்று. ஆதலால் அவற்றிறகுச சக்தி அல்லது இலக்ஷணை பொருந்தாது. இவ்வாற்றான் "இலக்ஷிதமாகிய பிரமர பதத்தின் இலக்ஷணை இலக்ஷித லக்ஷணையாம" "இலக்ஷித மாகிய சூரத்தன்மை முதலிய குணசமுதாயத்தின் இலக்ஷணை இல க்ஷித லக்ஷணை யாம்" என்னும இவ்வகையான பொருள் ஆறும் வேற்றுமைத் தொகையை யங்கீகரித்தலா லுண்டாகின்றது. இவ் வர்த்தத்தில் சக்கியத்தினது பரம்பரைச் சம்பந்தத்தின் ஞானம் இலக்ஷித லக்ஷணை யென்னும் சொல்லா லுண்டாகிறதில்லை. முற் கூறிய உதாரணங்க ளிரண்டினும் சக்கியத்தின் பரமபரைச் சம்

பந்தமோ வண்டினிடத்தும் புருஷனிடத்துமாம். முற்கூறிய வண்ணம் இலக்ஷித இலக்ஷணையென்னும் சொல்லிற்கு*யோகப்பொருள் சம்பவியாது. என்றாலும் இனிக் கூறப்படும் வகையான் இலக்ஷித லக்ஷணை யென்னுஞ் சொல்லின் யோகப் பொருள் ஆறும் வேற்றுமைத் தொகையை யங்கீகரித்துச சக்கியத்தின் பரம்பரைச் சம்பந்தமாகவே சம்பவிக்கின்றது. சொல்லுவானது கருத்திற்கு விடயமாகும் சக்கிய சம்பந்தி இலக்ஷித சப்தத்திற்குப் பொருளாமாயினும், பாகத்தியாக லக்ஷணையினால் சொல்லுவானது கருத்திற்கு விடயமாதலென்னும் இத்துணைப் பாகத்தைவிட்டு நின்ற சக்கிய சம்பந்தி ஈண்டு இலக்ஷித சத்தத்திற்குப் பொருளாம். அங்ஙனமே இலக்ஷணையென்னும் சொலலின் பொருளும சக்கிய சம்பந்தமாம். அதன்கண் சக்கிய பாகத்தைவிட்டு நின்ற சம்பந்தமாத்திரம் பாகததியாக லக்ஷணையால் இலக்ஷணையென்னும் சொல்லிற்குப் பொருளாம். ஆதலால் இலக்ஷிதமாகிய சக்கிய சம்பந்தியின் இலக்ஷணையாகிய சம்பந்தம் இலக்ஷித லக்ஷணை யென்னும் சொல்லிற்குப் பொருளாம. இவ்வாற்றான் சக்கிய சம்பந்தியின் சமபந்தம இலக்ஷிதலக்ஷணை யென்னும சொல்லால் யோகவிருத்தியானே சித்தமாகின்றது. அல்லது இலக்ஷித சத்தத்திற்கோ சக்கிய சமபந்தியில் பாகததியாக லக்ஷணையாம. இலக்ஷணையெனுஞ் சொல்லிற்குச் சக்கிய சமபந்தமே பொருளாம். அதற்குச் சம்பந்த மாத்திரததில் இலக்ஷணையில்லை. "இலக்ஷிதத்தான் இலக்ஷணை, இலக்ஷித லக்ஷணை" என்றிவ்வாறு மூன்றும்வேற்றுமைத் தொகையை யங்கீகரிக்கின், இஷ்டமான பொருளின் சித்தியுண்டாகின்றது. இலக்ஷிதத்தால் அதாவது சக்கிய சமபந்தவாயிலாக, இலக்ஷணை அதாவது சக்கியத்தின் சம்பந்தம என்பது இலக்ஷித லக்ஷணையென்னும் சொல்லிற்குப் பொருளாம. சக்கிய சம்பந்தம் சிலவிடத்து நேரேயாகின்றது; சிலவிடததுச சக்கிய சம்பந்திவாயிலாக வுண்டாகின்றது. "துவிரேபம ஒலிக்கின்றது" என்றல் முதலிய விடங்களில் துவிரேப பதத்தின் சக்கியமாகிய இரண்டு ரேபங்களுக்கு வண்டோடு சம்பந்தமில்லை. அங்ஙனமே சிங்க சத்தத்தினது சக்கியத்தின் சம்பந்தியாகிய சூரத்தன்மை முதலிய குணங்களின் வாயிலாகச் சிங்கசததத்தினது சக்கியததின் சம்பந்தி சூரத் தன்மை முதலிய குண விசிஷ்டத்தின்கண்ணதாம். ஆதலால் சிங்க சத்த

* அவயவ ஆற்றலா லுணரப்படும் பொருளினை யோகப்பொருளென்பர்.

த்திற்கு இலக்ஷித மெனப்படும் சக்கிய சம்பந்தியாகிய குரத்தன்மை முதலிய குணங்களின் வாயிலாக இலக்ஷணை அதாவது சிங்க சத்தத்தினது சக்கியத்தின்சம்பந்தம் புருஷனிடத்துளதாம். ஆறும் வேற்றுமைத் தொகையை யங்கீகரிக்கின், இலக்ஷிதம் இலக்ஷணை யென்னும் சொற்களில் பாகத்தியாக லக்ஷணையை யங்கீகரித்தல் வேண்டும். மூன்றும்வேற்றுமைத் தொகையை யங்கீகரிக்கின், இலக்ஷணையென்னும் சொல்லின் முக்கியார்த்தம் நிற்கின்றது. இலக்ஷித சத்தமொன்றினும் பாகத்தியாக லக்ஷணை யங்கீகரித்தல்வேண்டும். இலக்ஷித லக்ஷணையென்னும் சொல்லில் கர்மதாரய சமாசம் (பண்புத்தொகை) அங்கீகரிக்கின் இலக்ஷிதம் இலக்ஷணையென்னும் சொற்களிரண்டிற்கும் முக்கிய யோக அர்த்தம் நிற்கின்றது. பாகத்தியாக லக்ஷணை யங்கீகரிக்க வேண்டியதில்லை. அவயவங்களின் சக்தியால் எந்தச் சத்தம் தனது பொருளைத் தெரிவிக்கின்றதோ, அதனை யௌகிக சத்தமென்பர். எங்ஙனம்: * பாசகனென்னும் சொல்லில் 'பாச்' என்னும் அவயவத்திற்குப் பாகம் பொருளாம், 'அகன்' என்னும் அவயவத்திற்குக் கர்த்தா (செய்வோன்) என்பது பொருளாம். இவ்வாற்றான் அவயவசக்தியால் பாகஞ்செய்வோன் பாசகனென்னும் சொல்லிற்குப் பொருளாயிருந்தலின், பாசகசப்தம் யௌகிக சப்தமாம். அவயவசக்தியை யோகமென்பர். இது பாரிபாஷிகச்சொல். சாஸ்திரத்தின் அசாதாரண சங்கேதம் பரிபாஷை யெனப்படும். பரிபாஷையாற் பொருளை யறிவிக்கும்சொல் பாரிபாஷிகச் சொல்லெனப்படும். இலக்ஷித சப்தத்திற்கு இலக்ஷ், இத என்னும் இரண்டும் அவயவங்களாம். அவற்றுள் இலக்ஷ என்னும் பதத்திற்குப் பொருள் இலக்ஷணம்; இதவென்னும் பதத்திற்குப் பொருள் சம்பந்தியாம். ஆதலால் இலக்ஷண சம்பந்தியென்னும் பொருளை யறிவிக்கும் இலக்ஷிதசத்தம் யௌகிகமாம் இதனால் இலக்ஷணமுடையது இலக்ஷித சத்தத்தின் பொருளாம்; அங்ஙனமே சக்கிய சம்பந்தத்தின் பெயர் இலக்ஷணையாம். இது சாஸ்திரத்தின சங்கேதமாம். ஆதலால் இலக்ஷணையென்னும் சொல் பரிபாஷையால் சக்கிய சம்

---

* சமைப்பவன் என்னும் சொல்லில் 'சமை' என்னும் அவயவத்திற்குச் சமைத்தல் பொருளாம்; 'அன்' என்னும் சொல்லிற்குக் கர்த்தா (செய்வோன) என்பது பொருளாம். இவ்வாற்றானே அவயவ ஆற்றலால் சமையல் செய்வோன் சமைப்பவனென்னும் சொல்லிற்குப் பொருளாதலின் சமைப்பவன் என்னும் சொல் யௌகிக (காரண)ச் சொல்லாம்.

பந்தமாகிய பொருளை யறிவிப்பதா யிருத்தலால் பாரிபாஷிகமாம். 'இலக்ஷிதமாகிய இலக்ஷணை இலக்ஷித லக்ஷணை' என்பது பண்புத் தொகை. இலக்ஷணமுடையதாகிய இலக்ஷணை யென்னும் பொருள் பண்புத் தொகையாற சித்திக்கின்றது. அசாதாரண தர்மத்தை இலக்ஷணமென்பர், சக்கியசம்பந்தத்தை இலக்ஷணையென்பர். ஆதலால் இலக்ஷணையின அசாதாரண தர்மம் சக்கிய சம்பந்தத்தன்மையாம். அதுவே அதன் இலக்ஷணமாம். சக்கியத்தின் சம்பந்தம் சாக்ஷாத் பரம்பரையென்னும் வேறுபாட்டால இருவகைத்தாம். அநேக விடங்களில் சக்கியத்தின் சாக்ஷாத் சம்பந்தமாகிய இலக்ஷணையுண்டு. 'துவிரேபம் ஒலிக்கின்றது' 'சிங்கம் தேவதத்தன்' என்றல் முதலியவற்றில் சக்கியத்தின் சாக்ஷாத் சம்பந்தமில்லை. என்றாலும இலக்ஷணையின் அசாதாரண தர்மம் சக்கிய சம்பந்தத் தன்மையாம். சம்பந்தத்திலுள்ள சாக்ஷாத்தன்மை இலக்ஷணையின் இலக்ஷணத்தில் பிரவேச முடையதன்று. யாண்டுச் சக்கியத்தின் பரம்பரைச் சமபநதமுளதோ, ஆண்டும் சக்கிய சம்பந்தத் தன்மையாகிய தன்னிலக்கணமுடையது இலக்ஷணையாம். 'கங்கையில்இடைச்சேரி' என்றல் முதலிய உதாரணங்களில் சக்கியத்தின் சாக்ஷாத் சம்பந்தமாகிய இலக்ஷணை யுளதாயினும், சம்பந்தத்தின் சாக்ஷாத் தன்மை இலக்ஷணையின் இலக்ஷணத்தில பிரவேச முடையதன்று. ஆனால் சாக்ஷாத் பரமபரைச் சாதாரண சம்பநதத்தன்மை வடிவமாக இலக்ஷணையின் இலக்ஷணத்தில் சம்பநதமாத்திரம் பிரவேச முடையதாம். இதனாற்றான் 'சக்கியசம்பந்தமுடையது இலக்ஷணை' எனச் சொல்லப்பட் டிருக்கின்றது. 'சக்கியத்தின் சாக்ஷாத் சம்பந்தம் இலக்ஷணை' என்று சொல்லவில்லை. இவ்வாற்றான் இலக்ஷித அதாவது சக்கிய சமபநதத்தன்மை வடிவ தன்னிலக்கணமுடைய இலக்ஷணை இலக்ஷித லக்ஷணையெனும் சொல்லிற்கு பொருளாம். அது பரம்பரைச் சமபநத ஸ்தலத்திற் சம்பவிக்கின்றது. இலக்ஷித லக்ஷணையென்னும சொல்லிற்கு முற்கூறிய பொருள் சாக்ஷாத் சம்பந்த ஸ்தலத்திலும் சம்பவிக்கின்றது. ஆண்டும் இலக்ஷித லக்ஷணை சொல்லுதல்வேண்டும்; என்றாலும் "இலக்ஷிதமான லக்ஷணை இலக்ஷிதலக்ஷணை" என்று சொல்லுதலின் அபிப்பிராயம் இதுவாம்:— சக்கிய சாக்ஷாத்தன்மை விசிஷ்ட சம்பந்தத்தன்மை யின்றிய கேவலசக்கியசம்பந்தத்தன்மையான இலக்ஷணமுடையதாகிய இலக்ஷணை இலக்ஷித லக்ஷணை யென்பதாம். ஆதலால் கேவல லக்ஷணை கொள்ளப்படுகிறதில்லை. இவ்வாற்றாற் பண்புத்தொகையாம்.

விருத்தியைக் கூறுதல்.

சில நூல்களில் இவ்வாறெழுதப்பட் டிருக்கின்றது:—"சிங்கம் தேவதத்தன்" என்றல் முதலிய வாக்கியங்களில் சிங்கமுதலிய சொற்கள் கௌணி விருத்தியால் புருஷன் முதலியோரை அறிவிப்பனவா யிருக்கின்றன. எங்ஙனம் சக்தி லக்ஷணைகள் பதத்தின் விருத்திக ளாகின்றனவோ, அங்ஙனமே மூன்றுவது கௌணியும் விருத்தியாம். பதத்தின் சக்கிய அர்த்தத்தில எந்தக்குண மிருக்கின்றதோ, அதனையுடைய அசக்கிய அர்த்தத்தில் பதத்தின் கௌணி விருத்தி சொல்லப்பட் டிருக்கின்றது. எங்ஙனம்: சிங்க பதத்தின் சக்கியத்தில் சூரத்தன்மை முதலிய குணங்க ளிருக்கின்றன; அவற்றையுடையவன் சிஙக சதத்திற்கு அசக்கியமாகிய (சக்கியமாகாத) புருடன்; அவனிடத்துச் சிங்க சத்தத்தின் கௌணி விருத்தியிருக்கின்றது. அது முற்கிரமப்படி இலக்ஷணையின் உட்பட்டதாம்.

## சக. நான்காவது வியஞ்சனுவிருத்தியைக் கூறுதல்.

நான்காவது வியஞ்சனுவிருத்தி அலங்கார நூல்களில் எழுதப்பட்டுளது. அதன் உதாரணம இதுவாம்:—சத்துருவின் வீட்டில் போஜனத்தின் பொருட்டுப் பிரவர்த்திதத புருஷனைப் பார்த்து 'விஷத்தைப் புசி' என்று அவனுக்குப் பிரியனுகிய மற்ருெர் புருஷன் சொல்லுகிறுன். ஆண்டு 'விஷத்தைச் சாப்பிடு' என்பது சக்திவிருத்தியால் வாக்கியத்தின் பொருளாம். சொல்லுவோனுக்குப் போஜனத்தின் அபாவத்தில் கருததாம். போஜனத்தில் சக்தியுடைய அப்பதத்திற்கு அபாவத்தில சம்பநதமின்மையால் இலக்ஷணையும்பொருந்தாது. ஆதலாற் சததுருவின் வீட்டி லுண்ணுதலின் நிவிருத்தி வாக்கியததின் வியங்கியப்பொருளாம். வியஞ்சனுவிருத்தியாற் ருெற்றும் பொருள் எதுவோ, அது*வியங்கியப் பொருளெனப்படும். வேறு உதாரணம்:—சந்தியாகாலத்தில் அநேக புருஷர்களைப் பல காரியங்களிற் பிரவர்ததித்தற்பொருட்டு ஒருவன் 'சூரியன் அஸ்தமித்தது' என்னும் வாக்கியத்தை யுச்சரித்தான். அதைக்கேட்டுப் பலபுருஷர்கள் அக்காலத்தில் தத்தம் கர்த்தவ்வியங்களை (தாம் தாம் செய்யவேண்டியவற்றை)த தெரிந்து பிரவர்த்திக்கிறுர்கள். ஆண்டு அநேக புருடர்களுக்குப் பல கர்த்தவ்வியத்தின் ஞானம வியஞ்சனுவிருத்தியா லுண்டாகின்றது. இவ்வாறு

* வியங்கியம்=குறிப்பு.

வியஞ்சனவிருத்தியின் அநேக உதாரணங்களை காவ்வியப்பிரகாசம் காவ்வியப் பிரதீப முதலிய நூல்களில் மம்மபட்டர் கோவிந்தபட்டர் முதலியோர் எழுதியிருக்கின்றனர். அவ்வநேக வுதாரணங்களும் சிங்கார ரசமுடையனவா யிருத்தலின் ஈண்டு எழுதப்படவில்லை. நியாய நூல்களில் வியஞ்சனவிருத்திக்கும் இலக்ஷணவிருத்தியில் அடக்கம் சொல்லப்பட் டிருக்கின்றது. சக்கிய சம்பந்தமுடைய அர்த்தத்தின் ஞானமோ இலக்ஷணவிருத்தியாற் சமபவிக்கும். சக்கியார்த்தத்தின் சம்பந்தியாகிய அர்த்தத்தில் இலக்ஷணை சம்பவியாது. அது சத்தத்தாற் றோற்றும்பொருட்டு வியஞ்சனவிருத்தி யங்கீகரித்தல் வேண்டுமென்று அலங்காரநூலார் கூறுவர். அதற்குச சமாதானம் வருமாறு:— சாக்ஷாத் பரம்பரை யென்னும பேதத்தால் சம்பந்தம் இருவகையாம். அவற்றுள் சாக்ஷாத் சம்பந்தமோ பரஸ்பரம் சிலவற்றிற்கே யுண்டாகின்றது; எல்லாவற்றிற்கு முண்டாவதில்லை. பரம்பரைச் சம்பந்தமோ சகல பதார்த்தங்களுக்கும் பரஸ்பரம் சம்பவிக்கும். அதிகமாய்ச் சொல்லுவதென்ன? கோத்தன்மை அசுவத்தன்மைகளுக்கும பரஸ்பரம*வியதிகரணத்தன்மைச் சம்பந்த மிருக்கின்றது. கடாபாவமும் கடமும பரஸ்பர விரோதிகளாம். என்றாலும் கடத்தில் கடாபாவத்தின் பிரதியோகித்தன்மைச் சம்பந்த மிருக்கின்றது. கடத்திற்குத் தனது அபாவத்தில் சுவவிருத்திப் (தன்னிடத்திருக்கும) பிரதியோகித்தன்மையை நிரூபிக்குந் தன்மைச்சம்பந்தமிருக்கின்றது. இவ்வாற்றால் சர்வபதார்த்தங்களுக்கும் தம்மில் பரம்பரைச சம்பந்தம சம்பவிக்கின்றது. ஆதலால் வியங்கியப்பொருளும சக்கிய சமபந்தியாயிருத்தலின் இலக்ஷியத்தில் அடங்கியதாம். வியஞ்சனவிருத்தியின்நிரூபணம் காவியப்பிரகாசத்திலும் அதன் உரையிலும ஜயராமபட்டாசாரியா முதலியோரால் எழுதப்பட்டிருக்கின்றது. அங்ஙனமே காவியப்பிரதீபத்திலும்அதன் உரையாகிய உத்யோதனத்திலும் நாகோஜிப்பட்டா எழுதியிருக்கின்றனர்; அதன் கண்டனமும நியாயநூல்களில் எழுதப்பட்டிருக்கின்றது. வியாகரண நூல்களிலும சிலவிடத்துக் கண்டனமும் சிலவிடத்து நிரூபணமும் எழுதப்பட்டிருக்கின்றன. அத்வைத நூல்களில் கண்டனத்தின் அல்லது நிரூபணத்தின் ஆக்கிரகம(மேற்கொள்ளல்) இல்லை. ஆதலால் நிரூபணத்தின் தன்மைமாத்திரம் அறிவிக்கப்பட்டது.

---

* வியதிகரணத்தன்மை=வேற்றுநிலைக்களத்திருத்தல்.

## சஉ. இலக்ஷணையின் பேதத்தைக் கூறுதல்.

சக்தி இலக்ஷணை யென்னும் இரண்டும் எல்லோர் மதத்திலு முண்டு. மகாவாக்கியத்தின் அர்த்தத்தை நிரூபித்தலிலும் இரண்டு மே உபயோகமாம். அவற்றுள் சக்தியின் நிரூபணம் செய்யப்பட் டது. சக்கியத்தின் சாக்ஷாத் சம்பந்தம் பரம்பரைச் சம்பந்த மெனும் பேதத்தால் கேவலலக்ஷணை இலக்ஷிதலக்ஷணையென இரண்டு பேதம் இலக்ஷணைக்குச் சொல்லப்பட்டது. ஜகல் லக்ஷணை (விட்ட லக்கணை) அஜகல் லக்ஷணை (விடாத லக்கணை) பாகத் தியாக லக்ஷணை (ஜகதஜகல் லக்ஷணை விட்டுவிடாத லக்கணை) யென்னும் பேதத்தால் மீண்டும் மூவகை இலக்ஷணையுண்டு.

யாண்டுச் சக்கியம் தோற்றுமல் கேவல சக்கிய சம்பந்தி தோ ற்றுகின்றதோ, ஆண்டு ஜகல்லக்ஷணை யுண்டாகின்றது. எங்ஙனம்: 'விஷத்தைப் புசி' என்னுமிடத்தில் சக்கியமாகிய விஷபோஜன த்தை விட்டுச் சக்கியசம்பந்தியாகிய போஜனநிவிருத்தி தோற்றுத லால் ஜகல்லக்ஷணையாம்.

யாண்டுச சக்கியார்த்தத்தின் சம்பந்தம் சம்பவிக்க வில்லை யோ ஆண்டு ஜகல் லக்ஷணை யங்கீகரிக்கப்படும். எங்ஙனம்: 'கங் கையிற் கிராமம்' என்னுமிடத்தில் பதங்களுக்கும் சக்கியார்த்தங் களுக்கும் பரஸ்பர சம்பந்தம் சம்பவியாது. என்றாலும், 'விஷத்தை ப் புசி' என்னு மிடத்துச் சக்கியார்த்தத்தின் அந்நுவயம் சம்ப விக்கும். விஷம் மரணத்திற் கேதுவாமாயினும் போஜனத்தில் விஷத்தின் அந்நுவயம் சம்பவிக்கின்றது. ஆதலால் அந்நுவயாநுப பத்தி (கொண்டுகூட்டுணர்வுநிகழாமை) இலக்ஷணைக்குப் பீஜமன்று. தாற்பரியாநுபபத்தி (தாற்பரிய வுணர்வு நிகழாமை) யே இலக்ஷணை க்குப் பீஜமாமென்று நூல்களி லெழுதப்பட்டிருக்கின்றது. அதன் அபிப்பிராயம் இதுவாம்:—அந்நுவயத்தின் அதாவது சக்கியார்த்த த்தினது சம்பந்தத் தன்மையின் அநுபபத்தி அதாவது அசம்பவம், யாண்டு நிகழுகின்றதோ ஆண்டு இலக்ஷணை யுண்டென்பது நியம மன்று. இதுவே நியமமாகுமாயின் 'தண்டத்தை உள்ளே விடு' என்னும் வாக்கியத்தில் தண்டமென்னும் சொல்லிற்குத் தண்டந் தாங்கியவனிடத்து இலக்ஷணை நிகழாது; தண்டமென்னும் சொல் லின் சக்கியத்திற்கு உள்ளேவிடுதலிற் கொண்டுகூட்டு(அந்நுவயம்) சம்பவித்தலான், ஆதலால் தாற்பரியாநுபபத்தி இலக்ஷணைக்குப் பீஜ

மாம்; அந்நுவயாநுபபத்தி பீஜமன்று. தாற்பரிய மென்பது வாக்கியத்தைப் பிரயோகஞ் செய்வோனது இச்சை; அதன் அநுபபத்தியாவது அது சக்கியார்த்தத்தில் சம்பவியாமை; இது இலக்ஷணையை யங்கீகரித்தற்குப் பீஜமாம், அதாவது ஏதுவாம். 'தண்டத்தை உள்ளே விடு' என்னும் வாக்கியத்தில் தாற்பரியாநுபபத்தி யுண்டு, ஏனெனின், தண்டத்தை உள்ளே விடுதலாகிய சக்கியார்த்தத்தில் போஜன சமயத்தில் சொல்லுவோனது கருத்துச சம்பவியாது. ஆதலால் தண்டமெனனும்சொல்லிற்குத் தண்டந்தாங்கிய புருடனிடத்திலக்ஷணையாம். அங்ஙனமே மரணத்திற்கு ஏதுவாகிய விஷபோஜனத்தில் பிதாவின் தாற்பரியம் நிகழாதாகலின் போஜன நிவிருத்தியில் ஜகல் லக்ஷணையாம். "கங்கையிற் கிராமம்" என்னுமிடத்துத் தாற்பரியாநுபபத்தியும் சம்பவிக்கின்றதாகலின், யாண்டுத் தாற்பரியாநுபபத்தி யுளதோ, ஆண்டு இலக்ஷணை யங்கீகரிக்கப்படுமென்பது நியமமாம். "கங்கையில் கிராமம" என்னுமிடத்தும் கங்கையென்னும் சொல்லிற்குச் சக்கியமாகிய தேவநதியின் பிரவாகம் (வெள்ளம்) எதுவோ, அதனைவிட்டுச் சக்கிய சம்பந்தியாகிய கரையின் ஞானமுண்டாகின்றது; ஆகலின் ஜகல்லக்ஷணையாம்.

யாண்டுச் சாமானியமான கரையின் உணர்ச்சியில் சொல்லுவோனது கருத்தின்றி, கங்கைக்கரையில் சொல்லுவோனது தாற்பரியமுளதோ, ஆண்டுக் கங்கையென்னும் பதத்திற்குங் கங்கைக்கரையின்கண் அஜகல் லக்ஷணையாம். அஜகல் லக்ஷணையின் அசாதாரண உதாரணமோ"காகங்களினின்றும தயிர் இரக்ஷிக்கப்படுக" என்றல் முதலியவாம். சக்கியத்தோடுகூடிய சக்கிய சம்பந்தியின் ஞானம் யாண்டுளதோ, ஆண்டு அஜகல்லக்ஷணை யுண்டு. போஜனத்தின்பொருட்டுத தயிரை இரக்ஷிததலில்சொல்லுவோனதுதாற்பரியமாம். அது பூனை முதலியவற்றினின்றும் தயிரை ரக்ஷித்தலின்றிச் சம்பவியாது. ஆதலாற் காகமென்னும சொல்லிற்குத் தயிரைக் கெடுப்பதன்கண் அஜகல்லக்ஷணையாம். இவ்வாறே 'கவிகையாளர் செல்கின்றனா' என்னுமிடததுக் கவிகையாளர் என்னுஞ் சொல்லிற்குக் கவிகையாளனோடுகூடிய கூட்டத்தின்கண் அஜகல்லக்ஷணையாம். நியாயமதத்தில் நீலமுதலிய பதங்களுக்குக் குணமாத்திரத்திற் சக்தி யுண்டு. 'நீலக்குடம்' என்றல் முதலிய வாக்கியங்களில் நீலவுருவ முடையதனை யறிவிக்கும் நீலமுதலிய பதங்கள் இலக்ஷணையாலுளவாம். ஆண்டுச சக்கியத்தோடுகூடிய சம்பந்தியின்ஞான

முண்டாகின்றதாகலின், அஜகல் லக்ஷணையாம். கோசகாரர் மதத்தில் நீல முதலிய பதங்களுக்குக் குணத்தினும் குணியினும் சக்தியுண்டு; இலக்ஷணையில்லை. வேதாந்த பரிபாஷையென்னும் நூலில் நீல முதலிய பதங்களுக்குக் குணியினிடத்து அஜகல் லக்ஷணை சொல்லப்பட் டிருக்கின்றது. அது நியாயநூலார் மதம்.

யாண்டுச் சக்தியார்த்தத்தின் ஏகதேசத்தைவிட்டு ஏகதேசத்தை யறிதலில் சொல்லுவோன் கருத்துளதோ, ஆண்டுப் பாகத்தியாகலக்ஷணையாம். எங்ஙனம்: 'அவனே இத்தேவதத்தன்' என்னுமிடத்துப் பாகத்தியாக லக்ஷணையாம. ஈண்டுப் பரோக்ஷவஸ்து அவனென்னும் சொல்லிற்கும், அபரோக்ஷவஸ்து இவனென்னும் சொல்லிற்கும், தகர முதலிய வெழுத்துக்களை யடுத்த பெயரினை யுடைய புருஷ சரீரம தேவதத்தனென்னும சொல்லிற்கும் பொருளாம். அவனென்னும் சொற்பொருளோடு இவனென்னும் சொற்பொருளுக்குள்ள அபேதம் அவனெனுஞ் சொல்லிலுள்ள முதல் வேற்றுமைக்குப் பொருளாம. இவனென்னும சொற்பொருட்குத தேவதத்த னென்னும் சொற்பொருளோடுள்ள அபேதம் இவனென்னும் சொல்லிலுள்ள முதல் வேற்றுமையின் பொருளாம்; அல்லது அவன் இவன் என்னும் சொற்களிலுள்ள வேற்றுமைகள் பொருளில்லாதனவாம். சமானவிபக்தி (ஒருவேற்றுமை) யுடைய பதங்களின் சந்நிதானத்தால் பதார்த்தங்களின் அபேத ஞானமுண்டாகின்றது. ஆதலால் பரோக்ஷவஸ்துவோடு அபின்னமான அபரோக்ஷ வஸ்துவின் சொரூபம தேவதத்த னென்னும் பெயரையுடைய சரீரமாம். இது வாக்கியத்தினது பதங்களின் சக்தியார்த்தமாம். அது உஷ்ண சீதளமென்பதுபோலப்பாதிதமாம் (வாதிக்கப்படுவதாம). பாதிதார்த்தத்தில் சொல்லுவோனது கருத்து நிகழ்வதன்று. ஆதலால் அவன் இவனென்னும சொற்களின் சக்தியத்தில் பரோக்ஷத்தன்மை அபரோக்ஷத்தன்மைப் பாகங்களைத் தியாகஞ் செய்து (விட்டு) வஸ்துபாகத்தில் இலக்ஷணை யிருத்தலின் **பாகத்தியாக லக்ஷணையாம.**

இவ்வாற்முன்மூவகை இலக்ஷணையும் **பிரயோஜனவதி** (பயனுடை) **லக்ஷணை நிரூட** (இடுகுறி) **லக்ஷணையென்னும்** பேதத்தால் இருவகையாம். யாண்டுச் சக்தி யுடைய பதத்தினை விட்டு இலாக்ஷணிக (இலக்ஷணையுடைய) சத்தப் பிரயோகத்தில் பிரயோஜன முண்டாகின்றதோ, அது **பிரயோஜனவதிலக்ஷணையெனப்படும். எங்ஙனம்:**

கங்கையென்னும் பதத்திற்குக் கரையிற் பிரயோஜனவதி லக்ஷணை யாம். கரையிற் கிராமமென்று சொல்லுவோ மாயின், கரையிற் குளிர்ச்சி தூய்மை முதலியவற்றின் ஞான முண்டாகாது. கங்கை யென்னும பதத்தான் கரையையறிவிக்கின் கங்கையின் தர்ம மாகிய குளிர்ச்சி தூய்மை முதலியன கரையிற் காணப்படும். இதன்பொருட்டே வியஞ்சன விருத்தியை அலங்காரநூலார் அங்கீ கரிக்கின்றனர். நியாயமதத்தில குளிர்ச்சி தூய்மை முதலியன சொல்லுணர்ச்சிக்கு விடயமன்று; அநுமிதிக்கு விடயமாம். அங் ஙனமன்றோ? கங்கைக்கரை குளிர்ச்சி தூய்மை முதலியவற்றை யுடையதாம்; கங்கையென்னும சொல்லா னறிவிக்கப்படுந் தன்மை யான், கங்கையைப்போல வென்பது அநுமானம. எவ்வாற்றானும் பிரயோஜனவதிலக்ஷணையுண்டு.

பததிற்கு எப்பொருளில் சக்திவிருத்தி யில்லையோ, சக்திய த்தைப்போல எப்பொருளி னுணர்ச்சி எப்பதத்தான் எல்லோரு க்கும் பிரசித்தமாகின்றதோ, அப்பொருளில் அப்பதத்திற்கு பிர யோஜன சூன்ய லக்ஷணையாகிய நிரூடலக்ஷணை சொல்லப்படுகின்றது. எங்ஙனம்: நீல முதலிய பதங்களுக்குக் கோசத்தின்படி குண குணியில் சக்தியை யங்கீகரிக்கின், கௌரவதோஷ முண்டு. சக்திய த்தன்மையவச்சேதகமான ஒவ்வொரு தர்மத்தின் இலாபமு முண் டாவதில்லையாகலின், குணமாத்திரத்திற் சக்தியுண்டு. நீலம குட மென்றன்முதலிய வாக்கியங்களைக்கேட்டல் மாத்திரத்தானே யெல் லாப்புருடருக்கும் குணியின்உணர்ச்சி யுண்டாதல் மிகப்பிரசித்தம். ஆதலால் நீலமுதலிய பதங்களுக்குக் குணியில் பிரயோஜன சூனிய லக்ஷணை யிருத்தலின் நிரூடலக்ஷணையாம். நிரூடலக்ஷணை சக்திக்குச் சமானமாம். யாதானு மோர் விலக்ஷணமான அநாதி தாற்பரிய முளதாயின், ஆண்டு நிரூடலக்ஷணை யுண்டு.

யாண்டுப் பிரயோஜனம் அநாதிதாற்பரிய மென்னு மிரண்டு மில்லையோ, நூலாசிரியா தனதிச்சையால் இலாக்ஷணிக சத்தத் தைப் பிரயோகமின்றிப் பிரயோஜனப்படுத்துகின்றாரோ, ஆண்டு மூன்றாவது ஐச்சிகலக்ஷணையுண்டு. ஆனால் அநாதி தாற்பரியமும் பிரயோஜனமு மின்றிய இலாக்ஷணிக சத்தத்தின் பிரயோகத்தை வித்துவான்கள் நலமுடையதாகக் கருதார். இக்காரணத்தானே காவியப் பிரகாசமுதலிய சாகித்திய நூல்களில் நிரூட லக்ஷணையும் பிரயோஜனவதி லக்ஷணையும் உதாரணத்துடன் எழுதப்பட் டிருக்

கின்றன. ஐச்சிகலக்ஷணை எழுதப்பட வில்லை. கதாதர பட்டா சாரியர் முதலியோர் ஐச்சிகலக்ஷணையை யெழுதி யிருக்கின்றனர். அவர்கள் தாற்பரியம ஐச்சிகலக்ஷணையினது சமபாவனையின் கண்ணும் (பொருத்தத்திலாம்).'ஐச்சிக லக்ஷணையுடைய பதத்தின் பிரயோகம் 'நலமுடையது'என்னும்பொருளில் தாற்பரியமன்று. இலக்ஷணையின் அவாந்தரபேதமாக மம்மட்டா' முதலியோர்களால் மற்று மநேக மெழுதப்பட் டிருக்கின்றன. என்றாலும் வேதாந்த நூல்களில் யாண்டும எழுதப்படவில்லை யாகலின், ஞான விருப்புடையோருக்கு அவற்றை யெழுதுவதால் உபயோகமில்லை.

## சாஉ. சாப்தஞானத்திற்கு ஏதுவாந் தன்மையின் விசாரம்.

சக்கியத்தன்மை யவச்சேதகத்தில் சக்தி யிருப்பதுபோல இலக்ஷியத்தன்மையவச்சேதகமான தீரத்வ முதலியவற்றிற் கங்கை முதலிய பதங்களுக்கு இலக்ஷணையில்லை. ஆனால் வியக்திமாத்திரத்தில் இலக்ஷணைவிருத்தி யுண்டு. பதத்தின் விருத்தியின்றி இலக்ஷியத்தன்மை யவச்சேதகத்தின் ஸ்மிருதியும் சாப்தபோதமு முண்டாகின்றனவென்பது சப்தார்த்தநதை நிருணயிக்கும் நூல்களிற் கூறப்பட்டிருக்கின்றது. மீமாம்ஸைமதத்தில் இலாக்ஷணிக சத்தத்தால இலக்ஷியார்த்தத்தின் ஸ்மிருதியே யுண்டாகின்றது. இலக்ஷியார்த்தத்தின் சாப்தபோதத்திற்கு ( சொலலுணர்ச்சிக்கு ) ஏதுவாவது இலாக்ஷணிக பதமன்று. ஆனால் இலாக்ஷணிக பதத்தைச் சமீபித்துள்ள பிறபத மெதுவோ, அது தன் சக்கியார்த்தத்தின் சாப்த போதத்திற்கும், இலக்ஷியார்த்தத்தின சாப்த போதத்திற்கும் ஏதுவாகின்றது. எங்ஙனம்: ''கங்கையிற் கிராமம' என்னும் வாக்கியத்தில் 'கங்கையென்னும் பதம கரையின்கண் இலாக்ஷணிகமாம். அது கரையின் ஸ்மிருதிக்கு ஏதுவாம. கரையின்கண் சாப்த போதத்திற்கு ஏது வன்று. ஆனால் கரையின்கண் சாப்த ஞானத்திற்கு ஏதுவும், தனது சக்கியத்தில் சாப்த ஞானத்திற்கு ஏதுவும் கிராமமென்னும பதமாம. இம்மதத்திற்குச சாதகமான யுக்தி இதுவாம்:—இலாக்ஷணிக சத்தத்திற்குச சாப்தபோதத்தை யுண்டாக்குந் தன்மை யங்கீகரிக்கின் சகல சாப்தபோதத்தையு முண்டாக்குந தன்மையின் அவச்சேதகமான தர்மத்தின் இலாப முண்டாகாது. ஏனெனின், மீமாம்ஸைமதத்தில் சாப்தபோதத்தை யுண்

டாக்குந் தன்மை இலாக்ஷணிக பதத்தின்க ணில்லை. ஆனுற் சக்த (சக்தியுண்டய)பதத்தி லிருக்கின்றது. ஆகலின் சாப்த போதத்தை யுண்டாக்குந் தன்மையின் அவச்சேதகம் சக்தியாம். இலாக்ஷணிக பதத்திற்கும் சாப்த போதத்தை யுண்டாக்குந் தன்மை யங்கீகரிக்கின் அவ்வுண்டாக்குந் தன்மையினும் சக்தி அற்பதேசத்திருப்பதாயிருத்தலின், அதன் அவச்சேதகமாகாது. எது எதன் அற்பதேசத்திருப்பதும் அதிக தேசத்திருப்பதுமாகாமல், அதன்சமான தேசத்திருப்பதாகின்றதோ, அது அதன் அவச்சேதகமாம். சாப்த போதத்தை யுண்டாக்குந்தன்மை சகல சக்தபதங்களினுமஇருக்கின்றது. அதன் சமான தேசத்தில் சக்தி யிருக்கின்றது. ஆகலின் சாப்த போதத்தை யுண்டாக்குந்தன்மையின்அவச்சேதகம் சக்தியெனல் சம்பவிக்கும். இலாக்ஷணிக பதத்தினும் சாப்தபோதத்தை யுண்டாக்குந் தன்மை யங்கீகரிக்கின் இலாக்ஷணிகபதத்தில் சக்தியில்லை. சாப்த போதத்தை யுண்டாக்குந் தன்மை யிருக்கின்றது. ஆதலால் அற்ப தேசத் திருப்பதாதலின் சாப்தபோததகை யுண்டாக்குந் தன்மையின் அவச்சேதகம் சக்தியெனல்சம்பவியாது.சக்தம் இலாக்ஷணிகமென்னுமெல்லாப் பதங்களினு மிருப்பதான ஒரு தாமமு மில்லை. ஆகலின சாப்தபோதத்தையுண்டாக்குநதன்மைநிரவச்சேதகமாம். அந்த நிரவச்சேதகமான உண்டாக்கும் தன்மை அப்பிரசித்தமாம். தண்டம் குலாலன் முதலியவற்றின்கண் குடமுதலியவற்றை யுண்டாக்குந்தன்மையின் அவச்சேதகம் தண்டத்தன்மை குலாலத்தன்மை முதலியனவாதலால் நிரவசசேதகமான ஜநகத்தன்மை (உண்டாக்குந்தன்மை)அப்பிரசித்தமாம்.இவ்வாற்றுன் இலாக்ஷணிகபதத்திற்குச் சாப்த போதத்தை யுண்டாக்குந தன்மை யில்லையென்பது மீமாம்ஸகர் மதம். அது அத்வைத மதத்திற்கு மிக்க விரோதியாம். ஏனெனின், மகாவாக்கியங்களில் சகல பதங்களுமஇலாக்ஷணிகமாம். அவற்றுன் சாப்தபோதத்தின் நிகழ்ச்சியின்மை யுண்டாகும். ஆதலால் இம்மதத்தின் கண்டனம் அவசியம் செய்யத்தக்கதாம். அதன்கண் இத்தோஷமுண்டு:—'கங்கையிற் கிராமம்' என்னும் வாக்கியத்தில் கிராமமென்னும பதததாற் கரையின்கண் சாப்த போதம் அங்கீகரிக்கின் கிராம பதத்திற்குக் கரையின்கண்ணும் சக்தியுண்டாதல் வேண்டும். ஏனெனின், எந்தப்பதம் இலக்ஷணையின்றி எப்பொருளில் சாப்த போதத்தை யுண்டாக்குவதாகின்றதோ, அப்பதத்திற்கு அப்பொருளிற் சக்தி யுண்டென்பது நிய

மம். மீமாம்ஸகமதத்தில் கிராமபதம் இலக்ஷணையின்றிக் கரையிற்
சாப்த போதத்தை யுண்டாக்குவதா யிருத்தலின் கரையின்கண்
சக்தி யுண்டாதல் வேண்டும். இது நியமமாம்:—எப்பதத்தில் எட
பொருளின் விருத்தியுண்டாகின்றதோ, அப்பதத்தான் அப்பொரு
ளின்கண் ஸமிருதி யுண்டாம்; அப்பொருளின்கண்ணே அப்பதத்
தான் சாப்தபோதமு முண்டாம். மீமாம்ஸகமதத்தில் இந்நியமத்
திற்குப் பங்கமுண்டாம். ஏனெனின் மீமாம்ஸக மதத்தில் கங்கை
யென்னும் சொல்லின் இலக்ஷணாவிருத்தியோ கரையிலுளது; தீரத்
தின் ஸ்மிருதியும் கங்காபதத்தா லுண்டாகின்றது. தீரத்தில் சாப்த
போதம் கங்காபதத்தா லுண்டாகிறதில்லை ஆனால் கிராம பதத்தால்
தீரத்தின் சாப்தபோத முண்டாகிறது. அந்தக் கிராம பதத்திற்குத்
தீரத்தில் சக்தி அல்லது இலக்ஷணா விருத்தியில்லை; கிராம பதத்தி
னால் தீரத்தின் ஸமிருதியு மில்லை. ஆதலால் இம்மதம் புத்திமான்க
ளது நகைப்பிற் கிடமானதாம். ஏனெனின், யாண்டு அரிமுதலிய
ஒவ்வொரு பதத்திற்கும் அநேகம் பொருள்களில் சக்தியிருக்கின்ற
தோ, ஆண்டும் ஒருகாலத்தில் ஒருபுருடனுக்கு அரியென்னும் பதத்
தான் ஒரே பொருளின் ஞானமுண்டாகின்றது. அநேக பதார்த்தங்
களின் ஞானம் ஒருபதத்தா லுண்டாகுமாயின், அரியென்றசொல்
லுதலான் குரங்கின்மேல் சூரியனிருக்கிறதென் றிவ்வாறு சாப்த
போத முண்டாதல் வேண்டும். கிராமமெனனும் ஒரு பதத்தால்
பரஸ்பர சம்பந்தமுண்டாய கிராமதீரங்களின் சாப்தபோத முண்டா
கின்றது. அங்ஙனமே அரியென்னும் ஒரு சொல்லால், பரஸ்பர
சம்பந்தமுடைய வானர சூரியர்களின் சாப்தபோத முண்டாதல்
வேண்டும். ஒரு பதத்தால் இரண்டு சக்கியங்களின் சாப்தபோத
முண்டாகாதெனக்கூறின், அவ்வொரு பதத்தாற் றனது சக்கியத்
தோடு தனது அசக்கிய அலக்ஷியங்களினது சம்பந்தத்தின் சாப்த
ஞானமுண்டாதல் அத்தியந்த தூரமாம். ஆதலால் 'ஶாக்ஷணிகம்
நாநுபாவிகம்-இலாக்ஷணிகம் சாப்தானுபவத்தின தன்று' என்
னும் மீமாம்ஸையின் வசனம் அரங்கதமாம் (பொருத்தமுடையதா
கிறது). அன்றியும் இலாக்ஷணிகசத்தத்திற்குச் சாப்தானுபவத்தை
யுண்டுபண்ணுந் தன்மையில் தோஷம் சொல்லப்பட்டது; சாப்த
போதத்தையுண்டாக்குந் தன்மையின் அவச்சேதகம் கிடைக்காது
எனின், அதற்குச் சமாதானம் இதுவாம்:— சத்தத்தில் சக்தி
லக்ஷணை யென்னும் வேறுபாட்டால் இருவகை விருத்தி யுண்டு.

சிலவிடத்து அர்த்தத்திற்குச் சக்தி விருத்தியும் சிலவிடத்து அர்த்தத்திற்கு இலக்ஷணாவிருத்தியு முண்டு. சாப்த போதத்தை யுண்டாக்குந்தன்மை சக்திமாத்திரத்தி னுளதாம்; விருத்தியும் சக்திமாத்திரத்தி னுளதாம். ஆதலால் அந்தவுண்டாக்குந்தன்மையின் சமான தேசத்திருத்தலான், அதன் அவச்சேதகம் விருத்தியாம். அல்லது சாப்தபோதத்தை யுண்டாக்குந்தன்மையின் அவச்சேதகம யோக்கிய சத்தத் தன்மையாம். இவ்வாற்ருல் இலாக்ஷணிக பதத்தானும் சாப்தபோத முண்டாகின்றது.

## ௪௪. மகாவாக்கியத்தில் இலக்ஷணையின் உபயோகமும் அதன்கண் சங்கை சமாதானங்களும்.

மகா வாக்கியங்களில ஜகல் லக்ஷணையும அஜகல் லக்ஷணையுமில்லை. ஆனல் பாகத்தியாக லக்ஷணையுண்டு. அதன்றன்மை விசாரசாகரத்தில் எழுதப்பட் டிருக்கின்றது. அந்தப் பாகத்தியாக லக்ஷணை மகா வாக்கியங்களில் இலக்ஷித லக்ஷணை யன்று. ஆனல் கேவலலக்ஷணையாம். ஏனெனில், இலக்ஷிய சேதனத்தோடு வாச்சியத்திற்குச் சாக்ஷாத் சம்பந்தமுண்டு பரம்பரைச் சம்பந்தமில்லை. யாண்டுப் பாகத்தியாகலக்ஷணை யுண்டோ ஆண்டு வாச்சியத்தின் ஏகதேசம இலக்ஷியமாம். அவ்வாச்சியத்தின் ஏகதேசத்தோடு வாச்சியத்திற்குச் சாக்ஷாத் சம்பந்தமுளது; ஆதலால் கேவல லக்ஷணையாம். மகாவாக்கியத்தால் ஞான விருப்புடையோருக்கு அகண்டபிரஹ்மத்தின் ஞான முண்டாகுக வென்பது ஈசுவரனது அநாதி தாற்பரியம். ஆதலால் அது நிரூடலக்ஷணையாம; பிரயோஜனவதி லக்ஷணை யன்று. ஈண்டிதுசங்கை:—வாக்கியார்த்தத்திற்கு இலக்ஷிய சேதனத்தோடு சம்பந்தம அங்கீகரிக்கின், இலக்ஷியார்த்தத்தில் அசங்கத் தன்மைக்குக் கேடுண்டாகும. சம்பந்தம் அங்கீகரியாவிடின், இலக்ஷணைபொருந்தாது. ஏனெனின், சக்கிய சம்பந்தத்தை அல்லது போத்திய சம்பந்தத்தை இலக்ஷணையென்ப. அது அசங்கத்திற் சம்பவியாது.

இதற்குச் சமாதானம்:—வாச்சியார்த்தத்தில் சேதனம் ஜடமென விரண்டுபாகமுண்டு. அதன் சேதன பாகத்திற்கு இலக்ஷியார்த்தத்தில் தாதாத்மியசம்பந்த முண்டு. சகல பதார்த்தங்களுக்கும் சொரூபத்தில் தாதாத்மிய சம்பந்த முண்டு. வாச்சியபாகமான சேதனத்தின் சொரூபமே இலக்ஷியசேதனமாம். ஆதலால் வாச்சிய

த்தில் சேதன பாகத்திற்கு இலக்ஷிய சேதனத்தோடு தாதாத்மிய சம்பந்த முண்டு. வாச்சியத்தில் ஜட பாகத்திற்கு இலக்ஷிய சேதனத்தோடு அதிஷ்டானத்தன்மைச் சம்பந்த முண்டு. கற்பிதத்தின் சம்பந்தத்தால் அதிஷ்டானத்தின் சுபாவம் கெடாது. தனது தாதாத்மிய சம்பந்தத்தாலும் சுபாவத்திற்குக் கேடுண்டாகாது. அதனால் இலக்ஷியார்த்தத்தின் அசங்கத்தன்மை கெடாது.

மற்றோர் சங்கை.— தற்பதத்திற்கு அகண்ட சேதனத்தில் இலக்ஷணை யங்கீகரித்துத் துவம்பதத்திற்கும் அகண்ட சேதனத்தில இலக்ஷணை யங்கீகரிக்கின் புநருக்தி தோஷ (கூறியது கூறற் குற்ற) மாகுதலான், குடம் குடமென்னும் வாக்கியத்தினைப்போல அப்பிரமாணவாக்கிய மாகும். இரண்டு பதங்களுக்கும் இலக்ஷியார்த்தம் வேறாகக் கொள்ளின், அபேதத்தை யறிவிக்குந் தன்மை யுண்டாகாது.

அதற்கு இது சமாதானம்:—மாயா விசிஷ்டனும் அந்தக்கரண விசிஷ்டனும் தற்பத துவம்பதங்களுக்குச் சக்கியராவர்; உபகிதர்கள இலக்ஷிய ராவர். பிரஹ்ம சேதனம் இரண்டு பதங்களுக்கும் இலக்ஷிய மாகுமாயின் புநருக்தி தோஷமுண்டாகும்; அந்தப் பிரஹ்ம சேதனம இலக்ஷிய மன்று; மாயா வுபகிதமும் அந்தக் கரண வுபகிதமும் இலக்ஷியமாம். அது உபாதிபேதத்தாற் பின்னமாயிருத்தலின் புநருக்தியில்லை. உபகித மிரண்டும் பரமார்த்தமாய் அபின்னமாம். ஆதலால் அபேதத்தைப் போதிக்குந்தன்மை வாக்கியத்திற்குச் சம்பவிக்கின்றது. இவ்வாற்றால் தற்பதார்த்த துவம் பதார்த்தங்களின் உத்தேச விதேயத்தன்மையை அங்கீகரித்து அபேதத்தைப் போதிக்குந்தன்மை நிர்தோஷமாம். தற்பதார்த்தத்தில் பரோக்ஷத்தன்மைப் பிராந்தி நீங்குதற்பொருட்டுத் தற்பதார்த்தத்தை யுத்தேசித்துத் துவம்பதார்த்தத்தன்மை விதேயமா (அமைக்கப்பட்டதா)ம். துவம்பதார்த்தத்தில் பரிச்சின்னத்தன்மைப்பிராந்தி நீங்குதற்பொருட்டுத்துவம்பதார்த்தத்தை யுத்தேசித்துத் தற்பதார்த்தத்தன்மை விதேயமாம். புநருக்தியைப் பரிகரித்தற்பொருட்டுச் சில நூலாசிரியர் அபிப்பிராயம் இதுவாம்:— இரண்டு பதங்களுக்கும் வேறு வேறு இலக்ஷகத (இலக்ஷணையினாலறிவிக்குந) தன்மை யங்கீகரிக்கின், புநருக்தியின் சங்கை யுண்டாகின்றது. அந்த வெவ்வேறு இலக்ஷகத் தன்மையோ இல்லை, ஆனால் மீமாம்சகரது கிரமமாக இரண்டு பதங்களும் சோந்து

அகண்ட பிரஹ்மத்தின் இலக்ஷகமாம். இதனாற்றான் பிராசீன ஆசாரியர்கள் மகா வாக்கியங்களுக்குப் பிரதிபாதிக்கும் அர்த்த மாத்திரத்தை அறிவிக்குந்தன்மை கூறியிருக்கின்றனர். உத்தேச விதேயத்தன்மைச் சூனியமான அர்த்தத்தை யறிவிக்கும் வாக்கியம் உலகத்தில் அப்பிரசித்தமாயினும், அலௌகிக அர்த்தம் மகா வாக்கியங்களுக்காம். ஆதலால் அப்பிரசித்த தோஷ மில்லை; அதனால் பூஷணமாம். அப்பிரசித்ததோஷ மாகுமாயின், வாக்கியத்திற்கு அசங்கமுடைய அர்த்தத்தினை யறிவிக்குந தன்மையும் உலகத்தில் அப்பிரசித்த மாகலின், அசங்கமுடைய பிரஹ்மத்தை யறிவிக்குந்தன்மையும மகாவாக்கியங்களுக் குண்டாகாது. எங்ஙனம உலகத்தில் அப்பிரசித்தமான அசங்கமுடைய பிரஹ்மத்தை யறிவிக்குந தன்மை அங்கீகரிக்கப்படுகின்றதோ, அங்ஙனமேஉத்தேச விதேயபாவ சூனியமான அகண்டார்த்ததினையறிவிக்குந்தன்மையுஞ் சமபவிககின்றது. இவ்வாறு இலக்ஷணைப்பிரசங்கத்தில் அநேக விசாரம பழைமையான ஆசாரியர்களால் எழுதப்பட்டிருக்கின்றது.

## சரு. இலக்ஷணையின்றிச் சக்தி விருத்தியால் மகாவாக்கியத்திற்கு அத்வைதப் பிரஹ்மத்தை யறிவிக்குந் தன்மை யுளதெனல்.

சில நவீன நூலாசிரியா இலக்ஷணையின்றிச சக்தி விருத்திமாத்திரத்தான் மகாவாக்கியங்களுக்கு அத்துவிதீயப் பிரஹ்மததை யறிவிக்குந்தன்மை யங்கீகரித்திருக்கின்றனா. அவர்கள் இவ்வாறு எழுதியிருக்கின்றனர்:—விசிஷ்ட வாசக பதத்தின் அர்த்தத்திற்கு அநநிய பதததின் விசிஷ்ட அாத்ததநோடு யாண்டுச் சம்பநதம் நிகழவில்லையோ, ஆண்டுப் பதத்தின்சக்தியினுனே விசேஷணத்தை விட்டு விசேஷியததின் தோற்றமுண்டாகின்றது. எங்ஙனம்: அநித்தியம் குடம என்னும வாக்கியத்தில கடத்தன்மை விசிஷ்ட வியக்தியின் வாசகம கடபதமாம். அதற்குஅநித்தியத்தன்மை விசிஷ்டமான அநித்திய பதார்த்ததநோடு அபேதசம்பநதம அறிவிக்கப்படுகின்றது. கடததன்மைச் சாதி நித்தியமாம். ஆகலின் கடத்தன்மை விசிஷ்டத்திற்கு அநித்திய பதார்த்தத்தோடு அபேதம் பாதிக்கப்படுவதாயிருத்தலின் அதற்கு அநித்தியபதார்த்தத்தோடு அபேத சம்பந்தம் நிகழாது. ஆண்டுக் கடத்தன்மையாகிய விசே

ஷணத்தை விட்டுக் கட பதத்தால் வியக்திமாத்திரத்தின் ஸ்மிருதியும், அநித்திய பதார்த்தத்தோடுள்ள சம்பந்த ஞானமாகிய சாப்த போதமு முண்டாகின்றன. அங்ஙனமே வீட்டிற் குடமென்னும் வாக்கியத்தில் கடத்தன்மை வடிவினதாகிய விசேஷணத்தைவிட்டுக்கடபதத்தால் விசேஷியவியக்திமாத்திரத்தின் ஸ்மிருதியும் சாப்த போதமு முண்டாகின்றன. அங்ஙனமே கடத்தில் உருவம் என்னும் வாக்கியத்திலும் கடத்தன்மையை விட்டு வியக்தி மாத்திரத்தின் ஞான முண்டாகின்றது. ஏனெனின், வீட்டிற்குட மென்னும் வாக்கியத்தான் வீட்டின் ஆதேயத்தன்மை கடபதார்த்தத்தில் தோற்றுகின்றது. கடத்தன்மைச் சாதியில் தனது ஆசிரயமான வியக்தியின் ஆதேயத்தன்மை யுளது. ஆனால் வீட்டின் ஆதேயத்தன்மை பாதிதமாம். ஆதலால் கடத்தன்மையை விட்டு வியக்தி மாத்திரத்தில் வீட்டின் ஆதேயத் தன்மையின் சம்பந்தம் அறிவிக்கப் படுகின்றது. அங்ஙனமே வீடென்னும் பதார்த்தத்தில் வீட்டுத்தன்மையின் நீக்க முண்டாகின்றது. கடத்தில் உருவம் என்னும் வாக்கியத்திலும் கடத்தன்மையை விட்டுத் திரவியரூப வியக்தி மாத்திரத்தில் அதிகரணத் தன்மையும், உருவத்தன்மையைவிட்டுக் குணமாத்திரத்தில் ஆதேயத் தன்மையும் தோற்றுகின்றன. ஏனெனின், கடபதார்த்தத்தின் ஆதேயத்தன்மை யுடையது உருவபதார்த்தமா மென்பது வாக்கியத்தின் அர்த்தமாம். ஆண்டுக் கடத்தன்மையின் ஆதேயத்தன்மை எதனிடத்து மில்லை. ஆதலால் கடத் தன்மையை விட்டு வியக்தி மாத்திரம் கடபதார்த்தத்தின் அர்த்தமாம். அதன் ஆதேயத்தன்மை யுருவத்தன்மை ஜாதியிலில்லை. ஆனால் உருவவியக்தியின் ஆதேயத்தன்மை உருவத் தன்மையிலுண்டு. ஆதலால் உருவபதார்த்தத்தில் உருவத் தன்மையின் நீக்க முண்டு. அங்ஙனமே உண்டாயிற்று குடம், அழிந்தது குடம் என்றல் முதலிய வாக்கியங்களில் ஜாதி வடிவமாகிய விசேஷணத்தை விட்டு வியக்தி மாத்திரம் கடமுதலிய பதங்களின் அர்த்தமாம். ஏனெனின், ஜாதி நித்தியம், அதற்கு உற்பத்தி நாசம் நிகழாது. எங்ஙனம் முன் வாக்கியங்களில் விசிஷ்ட வாசக பதங்களில் சக்தி வலியானே விசேஷிய மாத்திரத்தின் ஞான முண்டாகின்றதோ, அங்ஙனமே மகாவாக்கியங்களிலும் விசிஷ்டவாசக பதங்களின் சக்திவலியானே மாயை அந்தக்கரணமென்னும் விசேஷணங்களை விட்டுச் சேதனமாகிய விசேஷிய மாத்திரத்தின் ஞானம்

சம்பவிக்கின்றது. இலக்ஷணையை யங்கீகரித்தல் நிஷ்பலமாம். ஆனால் இதனுடைய பேதமாம்:—விசிஷ்டவாசக பதத்தினது வாச்சியத்தின் ஏகதேசம விசேஷியமும் ஏகதேசம் விசேஷணமுமாம்; ஜாதிவிசேஷணமும வியக்தி விசேஷியமுமாம. அவற்றுள்விசேஷிய பாகத்தின் போதமோ சக்தியினு லுண்டாகின்றது; கேவல விசேஷணத்தின் போத முண்டாகிறதில்லை. வாசசியத்தினது விசேஷண மாத்திரத்தின் ஞானமும விசிஷ்ட வாசகத்தினது சத்தத்தின் சத்தியா லுண்டாகுமாயின், அநித்தியம் கடமென்னும வாக்கியம் போல நித்தியம கடமென்னும வாக்கியமும கடபதத்தால் ஜாதி மாத்திரத்தை யறிவித்து நலமுடையதாதல் வேண்டும. ஆதலால் விசிஷ்ட வாசகபதத்தின் சக்தியால் விசேஷிய மாத்திரத்தின் தோற்ற முண்டாகின்றது. அவனே இதசேவதத்த னென்னும் வாக்கியத்திலும பரோக்ஷத்தன்மை அபரோக்ஷத தன்மை விசேஷணங்களை விட்டு, விசேஷிய மாத்திரத்தின் ஞானம சக்தி விருத்தியானே யுண்டாகின்றது. பாகத்தியாக லக்ஷணைக்கு ஒரு உதாரணமு மில்லை. ஆதலால் ஜகல லக்ஷணை அஜகல லக்ஷணை யென்னும பேதத்தால இருவகை இலக்ஷணை அங்கீகரித்தல வேண்டும. பாகத்தியாக லக்ஷணை பொய்யாம. வேதாந்த பரிபாஷையில் தர்மராஜர் முற்கூறிய வண்ணம் மகா வாக்கியங்களில் இலக்ஷணையைக் கண்டித்துப் பாகத்தியாக லக்ஷணையின் சொரூபத்தையும், உதாரணத்தையும் இவ்வாறு கூறுகின்றார்:—சம்பிரதாயப்படி வாசசியத்தின் ஏகதேசத்தி லிருப்பது பாகத்தியாகலக்ஷணையின் சொரூபமா மென்னும் மதத்தில் வாச்சியத்தின் ஏகதேசத் திருப்பது சக்தியின் சொரூபமேயாம். அது பாகத்தியாக லக்ஷணையின் சொரூபமன்று. சக்கியத்திலும் அசக்கியத்திலு மிருப்பது எதுவோ அது பாகத்தியாக லக்ஷணை யெனப்படும். அஜகல் லக்ஷணையும சக்கிய அசக்கியங்களி லிருப்பதாயினும் யாண்டு விசேஷணத் தன்மையான் சக்கியார்த்தத்தின் ஞானமும், விசேஷியத தன்மையான் அசக்கியார்த்தத்தின் ஞானமு முண்டாகின்றனவோ, ஆண்டு அஜகல் லக்ஷணை சொல்லப்படுகின்றது. எங்ஙனம :— "நீலக்குடம்" என்னும் வாக்கியத்தில் நீலபதத்தின் சக்கியம் உருவமாம. அதன் ஞானம் விசேஷணத்தன்மையா லுண்டாகின்றது. நீல உருவத்தின்ஆசிரயமான திரவியம் அசக்கியமாம. அதன்ஞானம்விசேஷியத்தன்மையா லுண்டாகின்றது. ஆதலால் நீலபதத்திற்கு நீலவுருவ

த்தின் ஆசிரயத்தில் அஜகல்லக்ஷணையாம். இவ்வாறு மஞ்சம் கூப் பிடுகின்றது என்னும் வாக்கியத்தில் மஞ்ச பதத்தின சக்கியம விசேஷணமும,அசக்கியமாகிய புருஷன் விசேஷியமுமாம;ஆதலால் அஜகல்லக்ஷணையாம. யாண்டிச சக்கியம அசக்கிய மிரண்டும விசே ஷிய மாகின்றனவோ, சக்கியத்தனமை யவசசேதகததினும் வியா பகமான இலக்ஷியத்தன்மை யவசசேதக தாமம விசேஷண மாகி ன்றதோ, ஆணடுப் பாகத்தியாக லக்ஷணை ரொல்லப் படுகின்றது. எங்ஙனம்: காகங்களினின்றும் தயிர இரக்ஷிக்கப்படுக வென்னும் வாக்கியத்தில் காகமெனனும பதததின சக்கியமான வாயஸமு (காக்கையு)ம், அசக்கியமான பூனைமுதலியனவும் விசேஷியமாம். சக்கியத்தன்மை யவசசேதக காகததன்மையின் வியாபகமான தயிரை யழிக்குந்தன்மை இலக்ஷியத்தன்மை யவசசேதக விசேஷ ணமாம. ஏனெனின் தயிரை யழிப்பனவாகிய காகம பூனை முத லியவற்றினின்றும் தயிரை இரக்ஷியென்பது வாக்கியத்தின பொரு ளாம். ஆண்டுக் காகத்தன்மை விசிஷ்டவியக்தி காகபதததின சக் கியமாம. அதில காகததன்மையை விடடுத தயிரை யழிக்குந் தன்மை விசிஷ்டமான காகம பூனை முதலியவற்றின் ஞானம இல க்ஷணையினு லுண்டாகுதலான், காக பதததினது வாசசியததின் ஒரு பாகமாகிய காகததன்மையின் நீககமும வியக்திபாகத்தின் ஞானமு முண்டாகின்றன. அங்ஙனமே பூனைத்தன்மை முதலிய வற்றின் நீக்கமும, வியக்தியின் ஞானமு முண்டாகின்றன. ஆத லாற் பாகத்தியாக லக்ஷணையாம். அங்ஙனமே கவிகையாளர் செல் கின்றனர் என்னும வாக்கியததினும பாகததியாக லக்ஷணையுண்டு. ஏனெனின், கவிகை யுடையவர்களும கவிகை யின்றியவர்களு மாய் ஒருங்குகூடிய புருஷர செல்லுகின்றன ரென்பது வாக்கியத் தின் பொருளாம ஆணடுக கவிகை யாளரென்னும பதத்திறகுக் கவிகையுள்ளாரும, கவிகை யிலலாதவருமாகிய இருவரும விசே ஷியமாவர். சககியத்தன்மை யவசசேதகமான கவிகை யுடைமை யின் வியாபகமான ஒருங்குகூடியதன்மை இலக்ஷியத்தன்மை யவச் சேதகமான விசேஷணமாம. இவ்விடத்தும கவிகையின் சம்பநத விசிஷ்டனான கவிகையாளனென்னும பதத்தின்சக்கியமெதுவோ, அதனிடத்துக் கவிகைச் சம்பநதமாகிய சக்கியத்தன்மை யவச் சேதகத்தினை விட்டு, ஒருங்குகூடியதன்மை விசிஷ்டனுன கவிகை யாளன் அவனுக் கந்நியமானவர்க ளென்னு மிவர்களின் ஞானம்

இலக்ஷணையினுண்டாகுதலான், வாச்சியத்தின் ஒரு பாகமான கவிதைச் சம்பந்தத்தினை விட்டு ஒரு பாகமான புருஷனது ஞான முண்டாகின்றது. ஆதலால் பாகத்தியாகலக்ஷணையாம். இவ்வாறு வேதாந்த பரிபாஷையில் பாகத்தியாக லக்ஷணையின் உதாரணம் கூறியிருக்கின்றனர். அவை யாவும சம்பிரதாயமுள்ளார் மதத்தில் அஜகல் லக்ஷணையின் உதாரணமாம். சிலவிடத்து அஜகல்லக்ஷணையின் உதாரணத்தில் சக்கியார்த்தம விசேஷணமாம; சிலவிடத்து விசேஷியமாம். சக்கியத்தோடு கூடிய அசக்கியத்தின் தோற்றம் சமானமாம். சிறிது பேதத்தைக்கண்டு இலக்ஷணையின் பேதத்தை யங்கீகரித்தல் பயனற்றதாம் எல்லா ஆசிரியர்களும அஜகல் லக்ஷணையின் உதாரணமாகக் கூறியவற்றைப் பாகத்தியாகலக்ஷணையின் உதாரணமாக இவர் கூறுவதற்கு ஆசாரியர்களது வசனத்தை விரோதித்தலே பயனும. சக்கியார்த்தத்தின் விசேஷணத்தன்மை விசேஷியத் தன்மைகளில் அஜகல் லக்ஷணை பாகத்தியாக லக்ஷணைகளின் பேதம அங்கீகரிக்கின், யாண்டு சக்கியார்த்தத்தின் விசேஷணத்தன்மையுளதோ, ஆண்டுப பாகத்தியாக லக்ஷணையும, யாண்டுச் சக்கிய அசக்கியங்களிரண்டின் விசேஷியத் தன்மை யுளதோ, ஆண்டு அஜகல் லக்ஷணையுமாக இவ்வாறு விபரீதத்தை அங்கீகரிக்கின் ஒரு பாதகமும் இல்லை. ஆதலால் மகா வாக்கியங்களிலும், அவனே இத்தேவதத்தனென்னும வாக்கியத்திலும் இலக்ஷணையை நிஷேதித்துப் பாகத்தியாக லக்ஷணையின் சொரூபமும உதாரணமும் கூறுதல் தர்மராஜருக்குப் பயனின்மையாம. மகா வாக்கியங்களில இலக்ஷணையினறி நிருவாகம கூறியதெதுவோ அதுவும அசங்கதமாம. ஏனெனின, கடமுதலிய பதங்களுக்குச சாதி விசிஷ்டத்தில் சக்தியை யங்கீகரித்து, இலக்ஷணையின்றிப் பதத்தாற் கேவல வியக்தியின் ஞானம் கூறுதல யுக்தி யில்லாததாம். கேவல வியக்தியில் சக்தியை யங்கீகரித்து, ஜாதி விசிஷ்டவியக்தியில் அங்கீகரியாவிடின, கேவல வியக்தியின் ஞானம கடமுதலியபதங்களால நிகழும; அதனை யங்கீகரிக்கவில்லை. ஆனால் விசிஷ்டவாசக பதத்தின் சக்தியால் விசேஷிய மாத்திரத்தின போதம உண்டாகின்றதென்று தர்மராஜர் எழுதியிருக்கின்றார். அது சக்திவாதமுதலிய நூல்களில் நிபுண மதியினையுடைய பண்டிதர்களுக்கு ஆச்சரியத்தை யுண்டாக்குவதா யிருக்கின்றது! சக்திவாதத்தில் இப்பிரசங்கம் விளக்கமாயுளது. சில சப்தம ஒரு தாம விசிஷ்ட தர்மியின்

வாசகமாம். சில சப்தம் அநேக தர்ம விசிஷ்ட தர்மியின் வாசக மாம்; சில சப்தம் அநேக தர்ம விசிஷ்ட அநேக தர்மியின் வாசக மாம். எப்பதத்திற்கு எப்பொருளில் சக்தியுண்டோ, அப்பதம அப்பொருளின் வாசகமெனப்படும். எங்ஙனம்: கட பதத்திற்குக் கடத் தன்மை வடிவினதாகிய ஒரு தர்ம விசிஷ்ட தாமியிலும், கோ பதத்திற்குக் கோத்தன்மையாகிய ஒரு தர்ம விசிஷ்ட தர்மி யிலும் சக்தியுண்டு. அது அவற்றின் வாசகமாம.தேனுபததிற்கு ப் பிரசவமும் கோத்தன்மையுமாகிய அநேக தாம விசிஷ்ட ஒரு தர்மியில் சக்தியுளது. அது அதன் வாசகமாம். புஷ்பவந்தரென் னும் பதத்திற்குச் சந்திர சூரியத்தன்மை வடிவினவாகிய அநேக தர்ம விசிஷ்ட அநேக தர்மியாகிய சந்திர சூரியர்களிடதது்ச் சக்தி யுளது. அப் புஷ்பவந்தரென்னும் பதம் சந்திர சூரியர்க ளிருவ ரின் வாசகமாம். எநதத் தாம விசிஷ்டத்திற் சக்தியுளதோ அத் தர்மத்தை விட்டுக் கேவல ஆசிரயததின் ஞானம் இலக்ஷணையினு லுண்டாகின்றது. இலக்ஷணையின்றி யுண்டாவதில்லை. ஆதலால் கட முதலிய பதங்களால் கேவல வியக்தியின் போதம் இலக்ஷணை யினு லுண்டாகின்றது. அநேக தாம விசிஷ்ட தர்மியின் வாசகமா கிய தேனுபத மெதுவோ, அதனுல் ஒரு தர்மத்தை விட்டு ஒரு தர்ம விசிஷ்ட தர்மியின் ஞானம் இலக்ஷணையின்றி யுண்டாகாது. ஆதலால் தேனுபதத்தால் பிரசவியாத கோவின் அல்லது பிரசவி த்த எருமையின் ஞானம் சக்தியினு லுண்டாகாது. சிலவிடத்துக் கோமாத்திரத்தின் ஞானம தேனுபதந்தாலுண்டாகின்றது. அது பாகத்தியாக லக்ஷணையால உண்டாகின்றது; சக்தியா லுண்டாவ தில்லை. அங்ஙனமே புஷ்பவந்த ரென்னும பதத்தான் சந்திரனை விட்டுச்சூரியனது ஞானமும் சூரியனைவிட்டுச் சநதிரனது ஞானமும் சக்தியாலுண்டாகிறதில்லை. இவ்வாறு சக்திவாதத்தி லெழுதப்பட் டிருக்கின்றது. அதுவேசமபவிக்கிறது. சக்தியானதுவிசிஷ்டத்தின் கணுளது; சக்தியால் விசேஷியததின் ஞானமுண்டாமெனக் கூறு தல் முற்றும் பொருததமுடைய தன்று. எநதத தாமமுடைய அர் த்தத்தில் பதத்தின் சக்தியுளதோ, அதனிலும குறைந்த அல்லது அதிகமான அாத்தம் இலக்ஷணையினுல் தோற்றும; சக்தியினுல அநதத் தர்மமுடைய அர்த்தமே தோறறுமெனபது நியமம். வியக்தி மாத்திரததில் சக்தி யுண்டு, விசிஷ்டத்தி லில்லையெனக் கூறும் இத் தருமராஜரது அபிப்பிராய மெதுவோ, அது பொருந

காது. ஏனெனின், விசிஷ்ட வாசக பதத்தின் சக்தியால் விசேஷி யத்தின் ஞானமுண்டாகின்றதென்பது தர்மராஜராற் சொல்லப் பட்டது. வியக்தி மாத்திரத்தில் சக்தி விரும்பப்பட்டதாகுமாயின், வியக்தி மாத்திரத்தில் பதத்தின் சக்தியால் அதன் ஞானமுண்டா குமென்னங் கூறுவர். விசிஷ்ட வாசக பதத்தினைக் கூறுர். வியக்தி மாத்திரத்திற சக்தி ஒருவர்மதத்தினுமில்லை. அது எல்லோர்மதத்தி னும் விருத்தமாம். சிரோமணி பட்டாசாரியா வியக்தி மாத்திரத் தில் சக்தி யங்கீகரித்துளராயினும் பதத்தால் ஆகத்தின் ஸ்மிரு தியும சாப்தபோதமும சாதி விசிஷ்டத்தினவாக அவா மதத்தி லுண்டாகின்றன. வியக்தி மாத்திரத்தின் சாப்தபோதம் சக்தியால் ஒருவர் மதத்தினும் உண்டாவதில்லை. கடமுதலிய பதங்களுக்குச் சாதி விசிஷ்டத்திலும சக்தி யுண்டு. கேவல வியக்தியிலும் சக்தி யுண்டு. சிலவிடத்து ஜாதி விசிஷ்டத்தின் ஞானமுண்டாகின்றது. சிலவிடத்துக் கேவல வியக்தியின் ஞான முண்டாகின்றது. அரி யென்னும் சொல் பலபொருளுடையதாதல்போல எல்லாப் பதங் களும பலபொரு ளுடையனவாமென் றிவ்வாறு கூறின், இப் பொருள் முற்றும பிழைபாடுடையதாம. அவா நூல்களினும இப் பொருளில்லை. பிழைபாடுடைமைக்கு இது ஏதுவாம:—இலக்ஷணை யினுல யாண்டு நிருவாக முண்டாகின்றதோ, ஆண்டுப் பலபொரு ளில சக்தியை விடுகின்றனர். ஒருபொருளில் சக்தியையும் மற்ற தில் இலக்ஷணையையும் அங்கீகரிக்கின்றனா. தர்மராஜரே நீலமுதலிய சொற்களுக்குக் குணத்திற சக்தியும், குணியில இலக்ஷணையுமாம; இரண்டினும சக்தி யிருத்தல் ஒரிடத்து மில்லையென்று எழுதியிருக் கின்றனர். ஆதலால் இலக்ஷணையின் அச்சத்தான் பல பொருண்மை யை யங்கீகரிப்பதன்று. ஆனல் பல பொருண்மையின் அச்சத்தான் இலக்ஷணையை யங்கீகரித்தலாம். ஆதலால விசிஷ்டத்தினும் சக்தி யுண்டு; வியக்தி மாத்திரத்தினும சக்தி யுண்டென்னும் பிழைப் பொருளில் தருமராஜருக்குத் தாற்பரியமில்லை. ஆனல் விசிஷ்டத் தில் சகல பதங்களுக்கும் சக்தி யுண்டு அவ்விசிஷடத்தில் சக்தி யின் மான்மியத்தால சில விடத்து விசிஷ்டத்திற்கு அந்நிய பதார் த்தங்களோடு அந்நுவய முண்டாகின்றது. சிலவிடத்து விசேஷிய த்திற்கு அந்நிய பதார்த்தங்களோடு அந்நுவய முண்டாகின்றது. யாண்டு விசிஷ்டத்தில அந்நுவயத்திற்கு யோக்கியதை யுண்டா கின்றதோ, ஆண்டு விசிஷ்டத்தின் அந்நுவய போதமும், யாண்டு

விசிஷ்டத்தில் அந்நுவயத்திற்கு யோக்கியதை யில்லையோ, ஆண்டு விசேஷிய மாத்திரத்தின் அந்நுவய போதமும் சக்தியா லுண்டா கின்றதெனவென்பது தர்மராஜர்மதம. அது கூடாது. ஏனெனின், சக்தி விசிஷ்டத்திலும, இலக்ஷணையின்றி வியக்திமாத்திரத்தின் அந்நுவய போதமுமங்கிகரிக்கின் தேனுபதத்தாலும் இலக்ஷணையின்றிப் பிரச வியாதகோவின் ஞானமும, பிரசவித்தளருமையின் ஞானமு முண் டாதல் வேண்டும. புஷ்பவந்தரென்னும பதத்தால் இலக்ஷணை யின்றிச சூரியனென்றின் அல்லது சந்திரனென்றின் ஞான முண் டாதல் வேண்டும. உண்டாகிறதில்லை யாகலின், அநித்தியம குடம் என்றல் முதலிய வாக்கியங்களில் குடமுதலிய பதங்களுக்கு விய க்திமாத்திரத்தில் பாகத்தியாக லக்ஷணையாம். வெகு பிரயோகங் களில் வியக்திமாத்திரத்தின் ஞான முண்டாகுதலான் சக்தியினு லேயே ஞான முண்டாகின்றதெனக் கூறின், அதற்குச் சமாதா னம் வருமாறு:—பிரயோக மிகுதிப்பாட்டால் பொருளில் சக்கியத் தன்மை யங்கீகரிக்கின் நீலமுதலிய பதங்களின் பிரயோகமிகுதிப் பாடு குணியிலுளது; அதுவும சக்கியமாதல்வேண்டும். நீலமுதலிய பதங்களுக்குக் குணி சக்கியமன்று, இலக்ஷியமாமென்று தரும ராஜரும வேதாந்தசூடாமணி யென்னும் உரையில அவா புத்திரரும் எழுதியிருக்கின்றார்கள். ஆதலால் யாண்டு விசிஷ்டவாசகபதத்தான் விசேஷிய மாத்திரத்தின் ஞானமுண்டாகின்றதோ, ஆண்டு முழுவ தும் பாகத்தியாக லக்ஷணையாம. ஆனல் அது நிரூட லக்ஷணையாம். நிரூட லக்ஷணைக்கு சக்தியினும சிறிதுதான் பேதம. அதன் பிர யோக மிகுதிப்பா டுண்டாகின்றது. எப்பொருளில் சததப்பிர யோகத்தின மிகுதிப்பாடுளதோ, அப்பொருளில் முழுவதும சக்தி யை யங்கீகரிக்கின் சாதிசக்தி வாதத்தில் வியக்தியின்ஞானம் முழு வதும இலக்ஷணையா லுண்டாகின்றது. அது பொருத்தமுடைய தாகாது. நியாயமதத்திலும இராஜ புருஷனென்றல் முதலிய வாக் கியங்களில் இராஜனென்னும் பதத்திற்கு இராஜ சம்பந்தமுடைய தன்கண்முழுதும இலக்ஷணையாம. அது அசஙகதமாகும் (பொருத்த மின்றியதாம). இவ்வாற்றுன் விசிஷடவாசக பதத்தான் விசே ஷிய மாததிரததின் ஞானம இலக்ஷணையின்றி யுண்டாகாது. ஆத லால் மகாவாக்கியங்களில் இலக்ஷணை யுண்டென்னும் சாம்பிரதா யிகமதமே ஜிஞ்ஞாசுவுக்குக் கொள்ளத்தக்கதாம. வேதாந்த வாக்கியங்களான் அசங்கப் பிரஹ்மத்தின் ஆத்மரூபமான சாக்ஷாத்-

காரமுண்டாகின்றது. அதனால் பிரவிருத்தி நிவிருத்தியின்றிய பிரஹ்மவடிவமாய் நிலைத்தலாகிய பயனுண்டாகின்றது. இது அத்வைத வாதத்தின் சித்தாந்தமாம.

## ௪௬. மீமாம்ஸக மதம்.

அதில் மீமாமஸையை யநுசரித்தவர்கள்சங்கை யிதுவாம:—சகல வேதமும பிரவிருததி அல்லது நிவிருத்தியை யறிவிப்பனவாம். பிரவிருத்தி நிவிருத்திகளின்றிய பொருளை வேதம் அறிவிப்பதில்லை. அறிவிக்குமாயின், பயனின்றிய பொருளை யறிவிக்கும் வேதம் அப்பிரமாணமாகும். ஆகலால் விதி நிஷேதமின்றிய வேதாந்த வாக்கியங்களுக்கு விதிவாக்கியங்களோடு சம்பந்த மிருத்தலின் விதி வாக்கியங்களுக்கு வேதாந்த வாக்கியம் சேஷ (சாதன) மாம. சில வாக்கியங்கள் கர்மஞ் செய்வோனது சொரூபத்தை யறிவிப்பனவாம. அது துவம்பதார்த்தத்தினை யறிவிக்கும் பஞ்சகோச வாக்கியமாம. சில வாக்கியங்கள் கர்ம சேஷ (சாதன)மான தேவதையின் சொரூபத்தை யறிவிப்பனவாம். அது தற்பதார்த்தத்தை யறிவிக்கும் வாக்கியமாம். ஜீவப் பிரஹ்மங்களின் அபேதததை யறிவிக்கும் வாக்கியங்களுக்குப் பொருளிதுவாம்:—காமஞ் செய்யுஞ சீவன் தெய்வத்தன்மையை யடைகின்றான். ஆதலால் கர்மம அவசியம் செய்யத்தக்கதாம். இவ்வாறு கர்மததின் பயனைத் துதித்தலான அபேதத்தை யறிவிக்கும் வாக்கியம் அர்த்தவாதரூபமாம். மீமாம்ஸை மதத்தில் தேவதை மந்திரமயமாம். விக்கிர முடையதும் ஐசுவரிய முடையதுமாகிய ஒரு தேவதை யில்லையாகலின் தெய்வத்தன்மையின் அடைவைச சொல்லுதல் சம்பவியாது; என்றாலும் சம்பாவனை மாத்திரத்தால் கர்ம பலத்தின் ஸ்துதியாம். அங்ஙனமன்றோ? கிருஷ்ணப் பிரபையின் உவமை கோடிசூரியப் பிரபையாகச் சொல்லப்பட்டது. ஆண்டுக் கோடி சூரியப் பிரபை அப்பிரசித்தமாம். என்றாலும் சம்பாவனையால் உவமை சொல்லபபட்டது. கோடி சூரியனது பிரபை ஓரிடத்திருக்குமாயின் கிருஷ்ணப் பிரபையின் உவமை சம்பவிக்கும். இங்ஙனமே சாவஞ்ஞத்துவம் (முற்றறிவுடைமை) முதலிய குண விசிஷ்ட பரமைசுவரிய முடைய ஓர் அற்புத தெய்வ மிருக்கின், அப்படிப்பட்ட சொரூபம கர்மஞ் செய்வோனுக்குண்டாம். இவ்வாறுசம்பாவனையால் தெய்வததன்மையின் அடைவு சொல்லப்பட்

டிருக்கிறது. இவ்வாற்றான் எல்லா வேதமும் சாக்ஷாத்தாகவாவது பரம்பரையாக வாவது பிரவிருத்தி நிவிருத்திகளை யறிவிப்பன வாம். பிரவிருத்தியில் உபயோகமின்றிய பிரஹ்மஞானம் வேத வாக்கியங்களால் சம்பவியாது.

## சஎ. பிராசீன விருத்திகாரர் மதம்.

பிராசீன விருத்திகாரர் வேதாந்தியெனப் படுவர். அவர் மதம் இதுவாம்:— கர்மவிதிப் பிரகரணத்தில் வேதாந்த வாக்கியங்களில்லை; ஆதலால் பின்னைப் பிரகரணத்தில் படிக்கப்பட்ட வேதாந்த வாக்கியம் கர்ம விதியின் சேஷ (சாதன) மன்று. உபாசனை விதி வேதாந்தப் பிரகரணத்தி லுளது. ஆதலால் சகல வேதாந்த வாக்கியங்களும் உபாசனா விதியிற் சேஷ (சாதன) மாம். துவம்பதார்த்தத்தை யறிவிக்கும வாக்கியம் உபாசகனது சொரூபத்தை யறிவிக்கின்றது; தத்பதார்த்தத்தை யறிவிக்கும் வாக்கியம் உபாசியத்தின் சொரூபத்தை யறிவிக்கின்றது. துவம் பதார்த்த தத்பதார்த்தங்களின் அபேதத்தை யறிவிக்கும் வாக்கியங்களுக்குப் பொருளிதுவாம்:— சமசார தசையில் ஜீவப் பிரஹ்மங்களுக்குப் பேத முண்டு. உபாசனையின் வலியால் மோக்ஷ தசையில் அபேத முண்டாகின்றது. அத்வைத வாதத்திலோ என்றும் அபேதமாம். பேதத் தோற்றம் சமசாரதசையினும் பிரம (மயக்க) வடிவினதாம். இம் மதத்தில் சம்சாரதசையில் பேதமும், மோக்ஷதசையில் அபேதமு முண்டாகின்றன. மோக்ஷ தசையினும் ஜீவப் பிரஹ்மங்களின் பேதத்தை யங்கீகரிப்பவர் இம்மதத்தில் தோஷம் கூறுகின்றனர். ஜீவனிடத்துப் பிரஹ்மத்தின் பேதம் சொரூபமாக வுளதா? அல்லது உபாதியானகியதாயுளதா? சொரூபமாகப் பேத மங்கீகரிக்கின் எத்துணைச் சொரூபமுளதோ, அத்துணைப் பேதத்தின் நிவிருத்தி யுண்டாகாது. மோக்ஷ தசையில் பேதம நீங்குதற்பொருட்டு ஜீவனது சொரூபத்தின் நிவிருத்தியை யங்கீகரிக்கின், சித்தாந்தத்தின் நீக்கமும் மோக்ஷத்திற்குப் புருஷார்த்தத்தன்மை யின்மையு முண்டாகும். ஏனெனின், மோக்ஷதசையில் சொரூபத்தின் நிவிருத்தியை விருத்திகாரர அங்கீகரிக்கவில்லை. ஒருவர் சித்தாந்தத்தினும் மோக்ஷத்தில் சொரூபத்தின் நிவிருத்தி உண்டாகிறதில்லை. யாவராயினும் சொரூப நிவிருத்தியை மோக்ஷ தசையில் அங்கீகரிக்கின் சொரூப நிவிருத்தியில் ஒரு புருஷனுக்கும் அபிலாசை யுண்டாகாது. ஆதலால் மோக்ஷத்தில் புருஷார்த்தத் தன்மையின்

இன்மை யுண்டாகும். புருஷனது அபிலாசைக்கு விஷயம் எது வோஅது புருஷார்த்த மெனப்படும். ஆதலால் ஜீவனிடத்துப்பிரஹ்மத்தின் பேதம் சொரூபமாக அங்கீகரிக்கின், மோக்ஷ தசையில் அபேதம் சம்பவியாது. ஜீவனிடத்துப் பிரஹ்மத்தின் பேதத்தை உபாதியானதாகக் கூறின் உபாதி நிவிருத்தியால் மோக்ஷதசையில் அபேதமோ சம்பவிக்கும். ஆனல் அத்வைத மதத்தினும இம் மதத்திற்குப் பேதம் சித்திக்காது. ஏனெனின், அத்வைத வாதத்தினும உபாதியானதிய பேதம் அங்கீகாரமாம். உபாதியானதிய பேதமும் மித்தையாகும். அதன் நிவிருத்தியும் அத்வைத வாதத்தைப்போலக் கேவலஞானத்தால் அங்கீகரிக்கத் தக்கதாம். மோக்ஷத்தின் பொருட்டு உபாசனைக்கிரியை பயனற்றதாகும். விருத்திகாரர்மதத்தில் நையாயிகர் முதலியோர் இக்குதர்க்கம் செய்கின்றனர். அது பொருந்தாது. ஏனெனின், ஜீவனிடத்துப் பிரஹ்மத்தின் பேதம் சொரூபமாயில்லை; உபாதியானதாயுளது. உபாதி மித்தையாமாயின், உபாதியானதிய பேதமும மித்தையாம. அதன் நிவிருத்தி கேவல ஞானத்தானும். விருத்திகாரர் மதத்தில் ஆகாய முதற்பொருள்கள் பிரளயபரியந்தம் நிலைத்துள்ளனவாம். அவை மித்தையன்று. அங்ஙனமே ஜீவனது உபாதியாகிய அந்தக்கரண முதலியனவும் சத்தியமாம. ஞானமாத்திரத்தான் அவற்றின் நிவிருத்தி யுண்டாகிற தில்லை. மோக்ஷ தசையில் அந்தக்கரண முதலியவற்றின் நாச முண்டாகின்ற தாகலின், துவம்ஸ ரூபியத் தன்மை வடிவினதாகிய நித்தியத்தன்மை விருத்திகாரர் மதத்திலும பொருந்தாதாயினும, ஞானத்தாற் பாதிக்கப்படுதற தன்மையின்மை வடிவினதாகிய நித்தியத்தன்மை விருத்திகாரர் மதத்தில சகல பதார்த்தங்களினும் சம்பவிக்கின்றது. இவ்வாறுன் உபாதி சத்தியமாம; அச்சத்திய உபாதியானதிய பேதமும் சத்தியமாம. ஜலசையோகமாகியசத்திய உபாதியானதியசீதளத்தன்மைபிருதிவியிற் சத்தியமாம; அங்ஙனமே சத்திய வுபாதியானதிய பேதமும் சத்தியமாம். அச்சத்திய பேதத்தின் நிவிருத்தியும் உபாதியின் நிவிருத்தியும் ஞான மாத்திரத்தா னுண்டாகாது. ஆனல் நித்திய கர்ம வுபாசனைகளோடு கூடிய ஞானத்தான் உபாதி நீங்குதலான் மோக்ஷ தசையில் பேதம நிவிருத்தியாகின்றது. அத்வைதமதத்தில் சகல வுபாதிகளும் பேதமும் மித்தையாம். அவற்றிற்கு ஞானமாத்திரத்தால் நிவிருத்தி யுண்டாகின்றது. சம்சாரதசையிலும் மித்தையா

கிய உபாதியால் பாரமார்த்திகமான அத்வைதத் தன்மை கெடாது. ஆதலால் அத்வைத மதத்தோடு விருத்திகாரர் மதத்திற்குப் பேத முண்டு. இவ்வாற்றால் விருத்திகாரர மதத்தில் பேதத்தை யறிவிப்பனவும் அபேதத்தை யறிவிப்பனவுமாகிய வாக்கியங்களின் கதி சம்பவிக்கின்றது. சீவனிடத்துப் பிரஹ்மத்தின்பேதத்தை யறிவிக்கும வாக்கியமோ சம்சாரிக ஜீவனது சொரூபத்தை யறிவிக்கின்றது. அபேதத்தை யறிவிக்கும வாக்கியம முக்த ஜீவனது சொரூபத்தை யறிவிக்கின்றது. முக்த தசையினும பேதத்தை யங்கீகரிக்கின், அவர்கள் மதத்தில் அபேதத்தை யறிவிக்கும் வாக்கியங்களுக்குப் பாதமுண்டாகின்றது. அத்வைத வாதத்தில் எப்போதும் அபேதம் அங்கீகாரமாம. அம்மதத்தில் ஜீவப் பிரஹ்மங்களின் பேதத்தை யறிவிக்கும வாக்கியங்களுக்குப் பாதமுண்டாகின்றது. ஆதலால் சமஸார தசையில் பேதமும முக்தி தசையில் அபேதமும் அங்கீகரித்தல் தகுதியாம.

இம்மதமும் நலமுடைய தன்று. ஏனெனின், சகல வேதாந்த வாக்கியங்களும தள்ளத் தகாததும கொள்ளத்தகாததுமாகிய பிரஹ்மத்தை யறிவிப்பனவாம. விதியின் சேஷ (சாதன) மான பொருளை யறிவிப்பன வாகா. இவ்வர்த்தத்தினை உத்தர மீமாம்ஸையின் முதல் அத்தியாயத்தின் நான்காவது சூத்திரத்தின் வியாக்கியானத்தில் பாஷ்யகாரர விஸ்தாரமாய் எழுதி யிருக்கின்றனர். சில மந்த மதியுள்ள புருடருக்கு மீமாம்ஸை விருத்திகாரர் முதலியோர் மதத்தில் அதிக சிரத்தையுண்டாய்ப் புத்தி சாஸ்திரத்தில் பிரவேசிக்குமாயின் பாமதிநிபந்தனம் பிரஹ்மவித்தியாபரண முதலிய வியாக்கியானங்களோடு கூடிய பாஷிய விசாரத்தால புத்தி தோஷத்தை நிவிருத்தி செய்யவேண்டும். சூத்திர பாஷிய விசாரத்தில் புத்தி சாமர்த்தியமுடையதன்றாயின், அவன் பாஷியகாரரது வியாக்கியானங்களோடு கூடிய உபநிடத நூல்களை விசாரிக்கக்கடவன். அவற்றின் தாற்பரியம் தள்ளத்தகாததும் கொள்ளத்தகாததுமான பிரஹ்ம ஞானத்தின்கண்ணும. உபாசனாவிதியில் தாற்பரிய மில்லை. ஏனெனின், இலௌகிக வாக்கியத்தின் தாற்பரியமோ பிரகரண முதலியவற்றான் அறியப்படுகின்றது. அந்தப் பிரகரண முதலியன காவியப்பிரகாச காவியப்பிரதீபங்களில் எழுதப் பட்டுள்ளன.

---

## ௪௮. ஆறுவைதிக வாக்கியங்களினது தாற்பரியத்தின் இலிங்கம்.

வைதிக வாக்கியங்களின் தாற்பரியவுணர்ச்சிக்கு ஏது உபக்கிர மோபசங்கார முதலிய ஆறும். (௧) உபக்கிரம உபசங்காரங்களின் ஒரு வடிவாந்தன்மை, (௨) அப்பியாசம், (௩) அபூர்வதை, (௪) பலம் (௫) அர்த்தவாதம், (௬) உபபத்தியென்னும் ஆறும் வைதிகவாக்கியங் களினது தாற்பரியத்தின் இலிங்கமாம். இவற்றால் வைதிக வாக்கியங் களின் தாற்பரியம் அறியப்படுதலால் இவை தாற்பரியத்தின்இலிங்க மெனப் படுகின்றன. தூமத்தான் வன்னி யறியப்படுதலால் தூமம் வன்னியின் இலிங்கமெனப்படும். உபநிடதங்கட்கு வேறாய்க் கர்ம காண்டத்தை யறிவிக்கும வேதததிற்குத் தாற்பரியம் கர்மவிதி யின்கண்ணும். உபக்கிரமோபசங்கார முதலியன பூர்வ வேதத் தின் கர்மவிதியின்கண்ணதாதல் ஜைமினியாற் செய்யப்பட்ட பன் னிரண்டத்தியாயமுள்ள பூர்வமீமாம்ஸையின்கண் தெளிவாயுளது. உபநிஷத வடிவமான வேதத்தின் உபக்கிரமோபசங்கார முதலி யன அத்துவிதீயப் பிரஹ்மத்தினகண்ணவாம். ஆதலால் அத்துவி தீயப் பிரஹ்மத்தில் அவற்றிற்குத் தாற்பரியமாம். எங்ஙனம்: சாந்தோக்கியத்தின் ஆறுவது அத்தியாயத்தின் உபக்கிரமத்தில் அதாவது ஆரம்பத்தில அத்விதீயப் பிரஹ்ம முளது. உபசங்காரத்தி லும் அதாவது முடிவிலும் அத்விதீயப்பிரஹ்மமுளது. எப்பொருள் ஆரம்பத்திலுளதோ அதுவே அந்தத்திலு மிருக்குமாயின், ஆண்டு உபக்கிரமோபசங்காரங்களின் ஒரு வடிவாந்தன்மை சொல்லப்படு கின்றது. அடிக்கடி சொல்லுதற்கு அப்பியாசமென்று பெயர். சாந்தோக்கியத்தின் ஆறுவது அத்தியாயத்தில் ஒன்பதுமுறை தத் துவமஸி வாக்கியமுளது. ஆகலின், அதத்துவிதீயப் பிரஹ்மத்தில் அப்பியாசமாம். பிரமாணாந்தர (வேறுபிரமாண)ங்களால் அறியப் படாத தன்மையினை அபூர்வதை யென்பர். உபநிடத வடிவமான சத்தப்பிரமாணத்தின் வேறான பிரமாணங்களுக்கு அத்துவிதீயப் பிரஹ்மம் விஷயமாதலில்லை. ஆகலின், அத்துவிதீயப் பிரஹ்மத்தில் அறியப்படாத தன்மை வடிவினதாகிய அபூர்வதை யுளது. அத்து விதீயப் பிரஹ்மத்தின் ஞானத்தால் மூலத்தோடு கூடியசோகமோக ங்களின் நிவிருத்தி பலமெனப் படுகின்றது. ஸ்துதியை அல்லது நிந் தையை யறிவிக்கும் வாக்கியம் அர்த்தவாத மெனப்படும். அத்துவி

தீயப்பிரஹ்மஞானத்தின் ஸதுதி உபநிடதங்களில் தெளிவாயுளது: கூறும் பொருளிற்கு அநுகூலமான யுக்தியினை உபபத்தி யென்பர். சாந்தோக்கியத்தில் சகல பதார்த்தங்களுக்கும் பிரஹ்மத்தோடு அபேதம் சொல்லுதற் பொருட்டுக் காரியத்திற்குக் காரணத்தோடு அபேதத்தைப்பிரதிபாதித்தல அநேக திருஷ்டாந்தங்களாற் சொல்லபபட் டிருக்கின்றது. இவ்வாறே ஆறு இலிங்கங்களான் எல்லா வுபநிடதங்களுக்கும் தாற்பரியம அதுவிதீயப் பிரஹ்மத்தின்கண்ணும. இந்த ஆறு இலிங்கங்களையும உபநிடதங்களின் வியாக்கியானங்களில பாஷியகாரா தெளிவாய் எழுதியிருக்கின்றனர். அவற்றில் வேதாநத வாக்கியங்களுக்கு அதுவிதீயப் பிரஹ்மத்தில் தாற்பரிய நிசசய முண்டாகின்றது. எப்பொருளில் சொல்லுவானது கருத்தின் உணாசசி யுண்டாகின்றதோ, அப்பொருளின் உணாசசி கேட்பவனுக்குச சத்தத்தா லுண்டாகின்றது. ஏனெனின், சந்ததினது சக்தியின் அல்லது இலக்ஷணை விருத்தியின் ஞானம சாப்தபோதததிற் (சொல்லுணாசசிக்) குக் காரணமாம.

## சக. அவாய்நிலைமுதலிய நான்கும் சாப்தபோதத்தின் சககாரிகளாமெனல்.

அவாய்நிலை (ஆகாங்க்ஷை) யுணாவு, தகுதி (யோக்கியதை) யுணாவு, தாற்பரியவுணாவு, ஆசத்தி (அண்மை) யென்னும நான்கும சககாரிகளாம ஒரு பதாாததததிற்கு வேறு பதாாத்தத்தோடு கொண்டுகூட்டுணாவின்மை அவாயநிலை(ஆகாங்க்ஷை)யெனப்படும். இவன் வருகின்றான் புத்திரன் இராஜனது புருஷன் நீக்கப்படுக வென்னும வாககியததில் இராஜ பதாாத்தத்திற்குப் புத்திர பதாாததததோடு கொண்டுகூட்டுணாவுண்டாகிய பின்னர்ப் புருஷனென்னும் பதாாத்தததோடு கொண்டுகூட்டுணர் வின்மையால் (அந்நுவயபோத மின்மையால்) சாபதபோத முண்டாகிறதில்லை; ஒரு பதாாத்தத்தோடு அநநுவய முண்டாகிய பின்னா அநநுவய போதமின்மை வடிவினதாகிய அவாய்நிலை யின்மையான். ஸூதலக் கிரமம் இதுவாம்:—அவாய்நிலை என்பது இசசைக்காம.அதுசேதனத்திலிருககினும் பதததிற்கும அர்ததததிற்கும் எவ்வளவுகாலம் வேறுபதார்த்தங்களோடு அநநுவயததின் ஞான முண்டாகவில்லையோ, அவ்வளவுகாலம் தனது அாததததின் அநநுவயததின்பொரு

ட்டு வேறுபதத்தின் இச்சை சமானமாய்த் தோற்றுகின்றது. அந்நுவய போதமுண்டாகியபின்னர்த் தோற்றுதலெதுவோ அது அவாய்நிலை யெனப்படும். அவாய்நிலையின் சொரூபம சூக்ஷ்மக கிரமமாக நூல்களில் எழுதப்பட்டுளது. அது கடினமாகலின் அதன் தன்மை மாத்திரம அறிவிக்கப்பட்டது. இராஜனது புத்திரன் வருகின்றான் என்றிவ்வாறு இராஜபதார்த்தத்திற்குப் புத்திர பதார்த்தத்தோடு அந்நுவயபோதமுண்டாகியபின்னர்ப் புருஷபதார்த்தத்தோடு அந்நுவய போதத்திற்கு ஏதுவான அவாய்நிலை இராஜ பதார்த்தத்தி லில்லையாகலின், இராஜனது புருஷனை நீக்கிவிடு என்னும் ஞானமுண்டாகிறதில்லை. ஆனால் புருஷனை நீக்கிவிடென்னும் ஞானமுண்டாகின்றது. அவாய்நிலையுணர்வு சாப்தபோதத்திற்கு ஏதுவாகாவிடின் இராஜாவின் புத்திரன் வருகின்றான்; இராஜாவின் புருஷனை நீக்கிவிடென்னும ஞான முண்டாதல் வேண்டும். ஆதலால் அவாய்நிலை யுணர்வு சாப்த போதத்திற்கு ஏதுவாம. ஒரு பதார்த்தத்திற்கு வேறு பதார்த்தத்தோ டுள்ள சமபந்தம யோக்கியதை (தகுதி) யெனப்படும். தகுதியில்லா விடத்துச சொல்லுணர்ச்சி யுண்டாகாது. தீயால்நனைகின்றானென்னும வாக்கியத்தில் வன்னியின்கண்ணுள்ள கரணத்தன்மை வடிவினதாய மூன்றும் வேற்றுமைப் பொருட்குத் தெளித்தற் பொருளில நிரூபிக்குந தன்மைச் சமபநத வடிவினதாய தகுதி யில்லை. ஆதலால சாப்தபோத முண்டாகிற தில்லை. சாப்தபோதத்தில் தகுதி யேதுவாகாவிடின், தீயால் நனைக்கின்றான் என்னும வாக்கியத்தில் சாப்தபோத முண்டாதல் வேண்டும. சொல்லுவோனது இச்சையைத தாற்பரிய மென்பர். எவ்வர்த்தத்தில் தாற்பரிய ஞான முண்டாக வில்லையோ, அதன் சாப்தபோத முண்டாகாது. எங்ஙனம்: மாவைக் கொண்டுவா வென்னும வாக்கியத்தான போஜன சமயத்தில் சொல்லுவோனது இச்சையாகிய தாற்பரியம குதிரையின்கண் நிகழா தாகலின் குதிரையின் சாப்தபோத முண்டாகாது. அங்ஙனமே நடக்கும் சமயத்தில் * மாவின் சாப்தபோத முண்டாகிற தில்லை. தாற்பரிய ஞானம சாப்தபோதத்திற்கு ஏதுவாகாவிடின், மாவைக்கொண்டுவா வென்னும் வாக்கியத்தான் போஜன சமயத்தில் குதிரையின் ஞானமும, நடத்தற் சமயத்தில் மாவின் ஞானமு முண்டாதல வேண்டும. ஆதலால் சாப்தபோதத்தில் தாற்பரியஞானம் ஏதுவாம.

* மா=மாமபழம், மாவு.

ஈண்டிவ்வாறு சங்கை புண்டாகின்றது:— சொல்லுவானது இச்சையினைத் தாற்பரிய மென்பர். கிளியின் வாக்கியத்தில் சொல்லுவானது இச்சையில்லை. கிளியின் வாக்கியத்தால் சாப்த போத முண்டாகின்ற தாகலின் தாற்பரிய ஞானம சாப்த போதத்திற் கேதுவாதல சமபவியாது. மீமாமஸகா வேதத்தை நிததியமாகக் கொள்ளுகின்றனா. அவாகள் மததகில ஈசுவரனது அங்கீகார மில்லை. வேறெநதச சீவனும வேதததிறகுக காததாவலலன். ஆனால் வேதம நித்தியமாம். அவாகளுக்குச் சொல்லுவோனது இசசையாகிய தாற்பரியத்தின் ஞானம வைதிக வாக்கியங்களிற் சமபவியாது.

இதற்குச சமாதானம மஞ்சூஷாவென்னும் நாலில் நாகோஜி பட்டர் இவ்வாறு எழுதி யிருக்கின்றனர்:— சகல சாபதபோதத் திற்கும் ஏது தாற்பரிய ஞான மாகுமாயின, இநதத் தோஷமுண்டாம. சகல சாபததிற்கும ஏது தாற்பரிய ஞானமன்று. ஆனால் நாநார்தத பதங் (பலபொருட்சொற) களோடு கூடிய வாக்கிய ஜநநிய சாப்தபோதததிற்கு ஏது தாறபரிய ஞானமாம். ஆதலால் தோஷமில்லை.

விவரணகிரந்தத்தில் பிரகாசாதம ஸ்ரீசரணா தாறபரிய ஞானம சாப்தபோதத்திற்குக் காரணமாதலை முற்றும் நிஷேதித திருக்கின்றனா. அவ்விருவா வாாததையும நலமுடைய தன்று. ஏனெனின், இவ்விருவா மதத்திலும் வேதவாக்கியங்களின் தாறபரிய நிச்சயத் திற்கு ஏதுவாகிய பூாவ மீமாம்ஸை உததர மீமாமஸைகள் பயனில லாதனவாம. ஆதலால் தாறபரியநிச்சயம சகல சாப்தபோதததிற கும்ஏதுவாகும். கிளி வாக்கியததிலும் மீமாமஸகருக்கும தாற்பரிய ஞானம சமபவிக்க வில்லை யென்பதற்குச சமாதானம் இதுவாம்:— மீமாமஸகாகளுக்கு வேதஞ்செய்தவனது தாறபரிய ஞானமோ சமபவியாது. ஆனால் வேதமுரைப்பவனாகிய பாடகனது தாற்பரிய ஞானம் சமபவிக்கின்றது. கிளி வாககியத்தில் தாற்பரிய ஞானம் சம்பவியா விடினும கேட்பவனுக்கு அறிவிக்கும விருப்பால் எவ்வாக்கியம உச்சரிக்கப் படுகின்றதோ, அது அறிவித்தல் வேட்கையி னதீனமான வாக்கிய மெனப்படும். கிளியின் வாக்கியம் அறிவித்தல வேட்கை யாதீன மன்று. வேதவாக்கியமும் பாடகனது அறிவித்தல் வேட்கை யாதீனமாம். அறிவித்தல் வேட்கை

யாதீன வாக்கியத்தாற் றோன்றும ஞானத்தில் தாற்பரிய ஞானம் காரணமாம். கிளிக்கு அறிவித்தல் வேட்கை யில்லையாகலின் கிளி வாக்கியத்தாற் றோன்றும் ஞானததில் தாற்பரிய ஞானம் காரண மன்று. வேதாநத பரிபாஷையில் கிளிவாக்கியத்தினும் தாற்பரி யம் கொள்ளப்பட் டிருக்கின்றது. அது சொல்லுவோனது இச் சையாகிய தாற்பரிய மன்று. ஆனால் இஷ்டமான அர்த்தத்தின் ஞானத்தைப் பிறப்பித்தலிற் றகுதி தாற்பரியமெனச் சொல்லப் பட் டிருக்கின்றது. இவ்விஷயததிற் சங்கை ஸமாதானம் மேலும் எழுதப்பட்டுளது. அது முழுவதும பயனில்லாததாம. தாற்பரியத் தின் பொருள் சொல்லுவோனது இச்சையென்பது பிரசித்தம். அதனைவிட்டுத் தாற்பரியத்திற்குப் பாரிபாஷிகமான பொருளைக் கொண்டுக் கிளிவாக்கியததினும தாற்பரியத்தைச் சொல்லுவதற்கு உலகப் பிரசித்தியின் விரோதத்தையன்றி வேறு பய னில்லை. உலகப் பிரசித்தியின் விரோதமாத்திரமே பயனும. ஏனெனின் சுக (கிளி) வாக்கியம தாற்பரிய முடையதன்றென்பது உலக முழு வதினும அநுபவப் பிரசித்தமாம. சுகவாக்கியம் தாற்பரிய முடை யது என்று ஒருவரும சொல்லார. ஆதலால் அறிவித்தல் வேட்கை யாதீன வாக்கியத்தாற் றோன்றும சாப்த போதத்தில் தாற்ப ரிய ஞானம ஏது வன்று; ஞானமில்லிய புருடனுச்சரிதத வாக் கியத்தால் சாபத போத முண்டாகின்றது. ஆனால அவ்வாக்கியம அறிவித்தல் வேட்கை யாதீன மன்று. ஆதலால் அவ்வாத்த ஞான த்தில் தாற்பரிய ஞானம ஏதுவன்று. மௌநியாற் செய்யப்பட்ட செய்யுளில் சொல்லுவானது இச்சை தாற்பரியமன்று. ஏனெனின் உச்சாரணத்தைச் செய்பவன் சொல்லுவோ னெனப்படுவன். மௌநி உச்சாரணஞ் செய்யாதாகலின் மௌநியின் இச்சை சொல்லுவோனது இச்சை யனறென்று வேதாந்த பரிபாஷை யின் உரையில் தாமராஜருடைய புத்திரா எழுதியிருக்கின்றனர்.

அது சப்தரத்ந வியாகரண நூலால கண்டிக்கப்பட்டுளது. அண்டு இது பிரசங்கமாம:—உச்சரித்த சததததாற் போதமுண்டா கின்றது, உச்சரித்தலின்றிச் சாபதபோத முண்டாகிறதில்லை என் னும அரத்ததகதை யறிவிக்கும மகா பாஷியத்தின் வாக்கியத்தை யெழுதி உச்சரித்தலின்றிச் சாப்தபோதம நிகழாதெனின், ஏகாந்த த்தில் உச்சரித்தலின்றிப் புத்தகம் பார்ப்பவனுக்குச் சாப்தபோத முண்டாக லாகாதென்னும சங்கையை யெழுதி யிருக்கின்றனர்.

அதற்கு, ஆண்டும் புத்தகம பார்ப்பவன் சூக்கும உச்சாரணம செய்கின்றான் என்று சமாதானம் எழுதியிருக்கின்றார். இவ்வாற்றான் மௌனியால் எழுதப்பட்ட சுலோகத்தின் உச்சரித்தலைச் செய்பவன் மௌனியாவன்.

அபேத ரந்நகாரர் மதம இதுவாம்:—யாண்டுத் தாற்பரியத்தின் சந்தேக முண்டாகின்றதோ, ஆண்டுச சாப்தபோத முண்டாகிறதில்லை; அன்றியும் யாண்டுத் தாற்பரியததினது இன்மையின் நிசசய முண்டாகின்றதோ, ஆண்டும சாப்த போத முண்டாகிறதில்லை. யாண்டு முதலில் தாற்பரியத்தின் சந்தேக முண்டாகி, அல்லது தாற்பரிய அபாவததின் நிச்சயமுண்டாகிப் பிற்காலததில் தாற்பரியத்தின் நிசசய முண்டாய்விடுகின்றதோ, ஆண்டுச சாப்த போத முண்டாகின்றது. ஆதலால் தாற்பரியத்தின் சநதேகத்திற்குப் பிற்காலதது நிகழும சாப்த போதத்தின்கண்ணும, தாற்பரியாபாவததின் நிச்சயததிற்குப் பிற்காலதது நிகழும சாப்தபோதத்தின்கண்ணும் தாற்பரிய ஞானம் ஏதுவாம்; எல்லாச் சாப்த போதததினும ஏதுவாகாது என்பதாம். இமமதத்தில் தோஷம் வேதாந்த சிகாமணியில் எழுதப்பட்டிருக்கின்றது. கண்டனத்தில் ஆக்கிரக மில்லையாகலின் இங்குத் தோஷ மெழுதப்பட வில்லை. விவரணகாரர் மஞ்ஜூஷாகாரர் மதத்தில் எங்ஙனம் பூர்வ உத்தர மீமாம்சைகள் பயனற்றவை யாமோ, அங்ஙனம் இமமதததில் மீமாம்சை பயனற்றதாகாது. ஏனெனின் இமமதத்தில் தாற்பரிய சநதேகத்திற்குப் பின்னிகழும் சாப்த போததிற்குத் தாற்பரிய ஞானம் ஏதுவாம. வேதவாககியங்களில தாறபரியததின் சநதேக முண்டாகின்றது. அதன் நிவிருத்தி மீமாமசையான் உண்டாகும். வேதவாககியங்களில் சநதேகமும் அதன் நிவிருத்தியும எங்ஙன முண்டாகுமோ, அது பூரவ உததரமீமாம்சைகளில் ஸ்பஷ்டமாம.

இவ்வாற்றான் அவாய்நிலை, யோக்கியதை, தாற்பரிய மென்பன சாப்த போததிற்கு ஏதுவாம. ஆனால் அவாய்நிலை முதலியவற்றின் ஞானம ஏதுவாம; சொரூபமாக அவாய்நிலை முதலியன ஏதுவாகா. ஏனெனின, யாண்டு அவாய்நிலை முதலியவை யின்றிய வாக்கியங்களில் அவாய்நிலை முதலியவற்றின் மயக்க முண்டாகின்றதோ, ஆண்டுச சாப்தபோத முண்டாகின்றது. சொரூபமாக அவாய்நிலை முதலியன ஏதுவாதலை யங்கீகரிக்கின், அவாய்நிலை முத

லியவற்றின் பிரமஸ்தலத்தில் சாப்தபோதம் உண்டாகாதிருத்தல் வேண்டும். அவாய்நிலை முதலியவற்றின் ஞானம ஏதுவாதலை யங்கீகரிக்கின், சாப்தபோதத்திற்குக் காரணம பிரமவடிவ ஞானமாயிருத்தலின் சாபதபோதம சம்பவிக்கும். சொரூபமாக அவாய்நிலை முதலியன ஏதுவாதலை யங்கீகரிக்கின், யாண்டு அவாய்நிலை முதலியனவிருந்தும கேட்பவனுக்கு இவ்வாக்கியம் அவாய்நிலை முதலியவை யின்றியதெனப் பிரம முண்டாகின்றதோ, ஆண்டும் சாப்த முண்டாதல் வேண்டும். அங்ஙன முண்டாகிறதில்லை. ஆதலால் அவாய்நிலை முதலியவற்றின் ஞானம் ஏதுவாம. அந்த ஞானம பிரமமாயினுமாகுக, அல்லது பிரமையாயினுமாகுக. சாப்தபோதத்திற்கு ஏது பிரமப் பிரமைகளின் சாதாரணமான அவாய்நிலை முதலியவற்றின் ஞானமாம. பிரம சாமக்கிரியால் சாப்தபோதம பிரமமாகிற தில்லை; விஷயத்தின் அபாவத்தால் சாபத போதம் பிரமமாகின்றது. எங்ஙனம்: வன்னியின் வியபிசாரியாகிய பிருதிவித் தன்மையில் வன்னிவியாப்பியத்தன்மைப் பிரம முண்டாய்ப் பிருதிவித்தன்மை ஏதுவால் வன்னியுடைய பர்வதத்தில் வன்னியின் அநுமிதி ஞான முண்டாகின்றது. அது விஷயத்தின் இருப்பால் பிரமையாகின்றது. விஷயமின்றிய விடத்தில் வியபிசாரியேதுவால் அநுமிதிப்பிரம முண்டாகின்றது. ஆதலால் விஷயத்தினிருப்பால் பிரம சாமக்கிரியினுல் அநுமிதிப் பிரமை யுண்டாகின்றது. அங்ஙனமே அவாய்நிலை முதலியவற்றின் ஞானமாகிய சாபதபோத சாமக்கிரி பிரமமாகுக, அல்லது பிரமை யாகுக. யாண்டு விஷயத்தின் இருப்புளதோ, ஆண்டுச சாப்தபோதம் பிரமையாம. யாண்டு விஷயத்தின் அபாவ முளதோ, ஆண்டுச சாப்தபோதம் பிரமமாம். ஆனுல் யாண்டு யோக்கியதை (தகுதி) யுணாவு பிரம மாகின்றதோ, ஆண்டு நியமமாகச் சாப்த போத முண்டாகின்றது; பிரமை யுண்டாகிறதில்லை. ஏனெனின், யாண்டுச் சாப்தபோதத்தின் விஷயமுளதோ, ஆண்டு நியமமாக யோக்கியதை யுணர்வு பிரமை யாகின்றது. யாண்டுத் தகுதி யுணர்வு பிரம மாகின்றதோ, ஆண்டு நியமமாகச சாப்த போதத்தின் விஷயமிருப்பதில்லை. ஆதலால் விஷயத்தினிருப்பால் சாப்தபோதம் பிரமையும், விஷயத்தின் இன்மையால் பிரமமுமா மென்பது நியமமாம. அவாய்நிலை முதலியவற்றின் உணர்வு சாப்த போதத்திற்கு ஏதுவாதலபோல ஆசத்தியும சாப்தபோதத்திற்கு ஏதுவாம். நியாய

நூல்களில் பதங்களின் சமீபத தன்மையை ஆசத்தி (அண்மை) யென்பர். வியவகித (மறைப்பட்ட) பதங்களினது அர்த்தத்தின் அந்நுவயபோத முண்டாகிறதில்லை. எங்ஙனம: கிரி உண்ணபபட்டது வன்னியுடைத்து, தேவதத்தனால் என்னும வாக்கியத்தால் அந்நுவயபோதம உண்டாகிறதில்லை. கிரிவன்னியுடைநதது, தேவ தத்தனுலுண்ணப்பட்டது எனக்கூறின் சாபதபோத முண்டாகின் றது. ஆதலால் பதங்களின் சமீபத் தன்மையாகிய அண்மை சாப்த போதத்திற்கு ஏதுவாம். யாண்டு அண்மையில்லாதிருக்க அண்மை யின் பிரம முண்டாகின்றதோ, ஆண்டுசு சாப்தபோத முண்டாகி ன்றது. ஆதலால் பிரமப்பிரமைகளுக்குப் பொதுவான அண்மை யின் ஞானம் ஏதுவாம். சொரூபமாக ஆசததி (அண்மை) ஏது வன்று. பிற நூலகளில் இங்ஙனம எழுதப்பட் டிருக்கின்றது:— யாண்டு வியவகித பதமுளதோ ஆண்டுசு சுலோக முதலியவற்றில் சாப்தபோதம் உண்டாகின்றது. ஆதலால் முற்கூறிய அண்மை சாப்தபோதத்திற்கு ஏதுவன்று. ஆனல் சக்தி அல்லது இலக்ஷணை யாகிய பதத்தின் சமபநததத்தானுணடாகும் பதார்த்தங்களின் விய வதானமின்றிய ஸ்மிருதி யெதுவோ, அவ்வாசததி சாப்தபோதத் திற்கு ஏதுவாம். பதங்களுக்கு வியவதான முளதாகுக, அல்லது அவ்வியவதான முளதாகுக. எநதப் பதார்த்ததிறகு எநதப்பதார் த்தத்தோடு அநநுவயபோத முண்டாகின்றதோ, அப்பதார்த்த ங்களின் ஸமிருதி வியவதானமின்றியதாதலவேண்டும். பதார்த தங்களின் சாப்தபோதம ஸமிருதி மாத்திரத்தால் உண்டாகு மாயின், எவ்வாற்ருனுயினும ஒரு பதார்த்தததின் ஸ்மிருதி யுண்டாகுமிடத்து அதன் சாப்தபோத முண்டாதல் வேண் டும். பததததின் சம்பநதத்தா லுண்டாகும் பதார்த்தத்தின் ஸ்மிருதியினைச் சாப்த போதத்திற்கு ஏதுவாகக் கூறுவோமா யின் எல்லாப் பதங்களுக்கும் ஆகாயத்தோடு சமவாய சம்பந்த மிருக்கின்றது. ஆதமாவினிடத்துச் சகல பதங்களுக்கும் சுவா நுகூலகிருதி (தன் அநுகூலவினைச) சம்பந்த முளது. ஆதலால் கட முதலிய பதங்களின் சமவாய சமபநததால் யாண்டு ஆகாயத் தின் ஸமிருதியும, சுவாநுகூலகிருதி சம்பநதத்தால் யாண்டு ஆத் மாவின் ஸ்மிருதியுமுண்டாகின்றனவோ, ஆண்டு அவற்றின் ஞானம் கடத்தைக் கொண்டுவா என்றல் முதலிய வாக்கியங்களால் உண் டாதல் வேண்டும். ஆதலால் சக்தி யல்லது இலக்ஷணவிருத்தியாகிய

பதத்தின் சம்பந்தத்தா லுண்டாகும் பதார்த்தத்தின் ஸ்மிருதி சாப்தபோதத்திற்கு ஏதுவாம். கடமுதலிய பதங்களின் சமவாய சம்பந்தம் ஆகாயத்தின்கணுளது. சுவாநுகூலகிருதி சம்பந்தம் ஆத்மாவின்கணுளது. சக்தியல்லது இலக்ஷணவிருத்தியாகிய சம்பந்தம் கடமுதலிய பதங்களுக்கு ஆகாயத்தினும் ஆத்மாவினு மில்லை. ஆகாயம் ககனம்முதலிய பதங்களுக்குச் சக்தியாகிய சம்பந்தம் ஆகாயத்தின்க ணுளது. சுவ (தானென்னும்) பதத்திற்கும் ஆத்ம பதத்திற்கும் சக்தியாகிய சம்பந்தம் ஆத்மாவின்கணுளது. ஆதலால் ஆகாச பதத்தோடுகூடிய வாக்கியத்தால் ஆகாயத்தின் சாப்த ஞான முண்டாகின்றது. ஆத்ம பதத்தோடுகூடிய வாக்கியத்தான் ஆத்மாவின் சாப்தபோத முண்டாகின்றது. இவ்வாற்றான் எப்பதத்தின் விருத்தியாகிய சம்பந்தத்தால் எப்பதார்த்தத்தின் ஸ்மிருதி யுண்டாகின்றதோ, அதன் சாப்தபோத முண்டாகின்றதெனக் கூறினும் 'கடத்தைக் கொண்டுவா' என்னும் வாக்கியத்தால் எந்த ஞான முண்டாகின்றதோ அந்த ஞானத்தின் உற்பத்தியானது கடம், கர்மதத்தன்மை (செயப்படு பொருண்மை), கொண்டுவருதலாகிய வினையென்னு மித்துணைப் பதங்களாலுமுண்டாதல் வேண்டும். ஏனெனின், இரண்டு வாக்கியங்களுக்கும் பதங்களின் சக்தி சமானமாம். முதல் வாக்கியத்தால் சாப்தபோத முண்டாகின்றது, இரண்டாவதா லுண்டாகிறதில்லை. இதன்கண் இது ஏதுவாம்:—யோக்கிய பதத்தின் விருத்தியால் எப்பதார்த்தத்தின் ஸ்மிருதி யுண்டாகின்றதோ, அதன் சாப்தபோத முண்டாம். முதல் வாக்கியத்தின் பதம் யோக்கியமாம். இரண்டாவதின் பதம் யோக்கிய மன்று. யோக்கியதை (தகுதி) யும், அயோக்கியதை (தகுதி யின்மை) யும் அநுபவத்தை யொட்டி அநுமிக்கத் தக்கனவாம். எப்பதங்களால் சாப்த போதம் அநுபவ சித்தமாமோ அவற்றில் யோக்கியதை யுண்டு. எப்பதங்களால் சாப்தபோதத்தின் அபாவம் அநுபவசித்தமாமோ அவற்றில் யோக்கியதை யில்லை. இவ்வாற்றான் யோக்கிய பதத்தின் விருத்திரூப சம்பந்தத்தான் உண்டாகும் மறைப்பின்றிய பதார்த்தங்களின் ஸ்மிருதி ஆசத்தி யெனப்படும். இவ்வியல்பினதாய ஆசத்தி சொரூபமாகச் சாப்த போதத்திற்கு ஏதுவாம்; அதன் ஞானம் ஏதுவன்று. இவ்வாற்றால் அவாய்நிலை யுணர்வு முதலிய நான்கும் சாப்தபோதத்திற்கு ஏதுவாம். இந்நான்கையும் சாப்தசாமக்கிரி யென்பர்.

## போதத்திற்கு ஏதுவாதல்.

அநுமிதியின் சாமக்கிரி வியாப்தி ஞானமாம். பிரத்தியக்ஷ சாமக்கிரி இந்திரியசையோக முதலியனவாம். யாண்டு இரண்டு சாமக்கிரிகளுளவோ ஆண்டு இரண்டின் பயனு முண்டாகிறதில்லை. ஏனெனின் ஒருக்ஷணத்தில் இரண்டு ஞானங்களின் உற்பத்தியுண்டாகாது. ஞானமிரண்டற்காதாரம ஒருக்ஷணமாகுமாயினும ஞானமிரண்ட னுற்பத்திக் காதாரம ஒருக்ஷணமாகாது. அவ்வுற்பத்தியும் வியதிகரணத்துள்ள இரண்டு ஞானங்களுககு ஒரு க்ஷணததிலுண்டாகும. எங்ஙனம: தேவததனது ஞானமும் எஞ்ஞததனது ஞானமும வியதிகரணமாம். அவற்றின் உற்பததி ஒரு க்ஷணத்திலுண்டாம. என்றுலும சமானதிகரணத்துள்ள இரண்டு ஞானங்களின் உற்பததிஒரு க்ஷணததி லுண்டாகிறதிலலையென்பது சித்தாந்தம். இரண்டு சாமக்கிரிகளின் பயனும ஒருக்ஷணத்தி லுண்டாகிறதில்லை. ஆகலின் பிரபல சாமககிரியின் பயனுண்டாகின்றது. துர்ப்பலத்திற்குப் பாத முண்டாகினறது; பிரபலத தன்மையும துர்ப்பலத்தன்மையும் அநுபவததை யொட்டி யநுமிககத தக்கனவாம. எங்ஙனம்: பூதலமகடமென்பவற்ரேருடு நேததிரததிறகுசசையோக முண்டாகின்றது. அக்காலததில கடமுடையது பூதலம் என்னும் வாக்கியததின சிரவண முண்டாகின்றது. ஆண்டுக கடமுடையது பூதலமென்னும பிரததியக்ஷஞானத்தின் சாமக்கிரியும சாப்தஞானத்தின் சாமக்கிரியு முள. என்றுலும பிரத்தியக்ஷ ஞானமுண்டாகிறது; சாப்தஞானமுண்டாகிறதிலலை. ஆதலால்சமானவிஷயமுடைய பிரத்தியக்ஷஞானசாப்தஞானங்களின் இரண்டு சாமக்கிரிகளுமுள்ளவிடத்தும பிரததியக்ஷஞானததின் சாமககிரி பிரபலமும், சாப்தஞானத்தின் சாமக்கிரி துர்ப்பலமு மாகின்றன. யாண்டுப் பூதலத்தோடு கூடிய குடத்தோடு நேததிரத்திற்குச சையோகமுண்டாக, அதே காலத்தில் உனக்குப் புத்திரன் பிறநதான் என்னும் வாக்கியததின் சிரவண முண்டாகின்றதோ, ஆண்டுப் பூதலததில் கடத்தின் பிரததியக்ஷ முண்டாகிறதில்லை; ஆனல் புததிரனது பிறப்பின் சாப்த ஞானமுண்டாகின்றது. ஆதலால பின்னவிஷயங்களையுடைய ஞானததின் பிரததியக்ஷ சாமக்கிரியும சாபதசாமக்கிரியு முள்ளவிடத்து, சாபத சாமக்கிரி பிரபலமும் பிரததியக்ஷ சாமக்கிரி துர்ப்பலமு மாகின்றன. இவவாறு பாததிய பாதக பாவத்தை (வாதிக்கப்படுவது வாதிப்பதென்னுந் தன்மையை) விசாரிததுச சூக்ஷ்மதிருஷ்டி

யுள்ள புருஷன்பிரபலதுர்ப்பலததன்மைகளைத்தெரிந்துகொள்ளுக. ஆனால் ஜிஞ்ஞாஸை (அறிதலவேட்கை) யில்லாவிடத்து முற்கூறிய பாத்திய பாதக பாவமுளது. யாண்டு ஒரு வஸ்துவை யறியும்வேட்கை யுண்டாகின்றதோ, மற்றொன்றினை யறியும வேட்கை யுண்டாகவில்லையோ, ஆண்டு இரண்டுஞானங்களின்சாமக்கிரிகளுமிருக்கினும், ஜிஞ்ஞாஸிதத் (அறியவிரும்பிய) தின் ஞான முண்டாகுமேயன்றி அறியவிரும்பாததின்ஞான முண்டாகிறதில்லை. ஆதலால் அறியவிரும்பியதினது ஞானததின் சாமக்கிரிபிரபலமும்; அறிய விரும்பாததினதுஞானத்தின்சாமக்கிரிதுர்ப்பலமுமாம. ஞானததின் இசசை ஜிஞ்ஞாஸை (அறிதல்வேட்கை) யெனப்படும; அதன்விஷயம்ஜிஞ்ஞாஸிதம் (அறியவிரும்பியது) எனப்படும. ஜிஞ்ஞாஸையோடு கூடிய சாமக்கிரி முழுவதும பிரபலமாம். யாண்டு இரண்டின் ஜிஞ்ஞாஸையு முண்டாகின்றதோ, ஆண்டு தீவிரஜிஞ்ஞாஸை பாதகமாம். இக்காரணத்தானே அத்தியான்ம நூலகளில் தீவிர ஜிஞ்ஞாசை யுள்ளவனுக்குப் பிரஹ்மஞான முண்டாம, தீவிரஞானவிருப்ப மில்லாதவனுக்குப் பிரஹ்மஞான முண்டாகாதென்று எழுதப்பட் டிருக்கின்றது. ஏனெனின், அறிய விரும்பும் பதார்த்தத்தின் அறிதல் வேட்கையோடு கூடிய ஞான சாமக்கிரி யுளதாயின், அதனினும் தீவிர ஞானவிருப்பததோடு கூடிய ஞான சாமக்கிரியினால் அதற்குப் பாத முண்டாகின்றது. இல்லையாயின் ஞான விருப்போடு கூடிய சாமக்கிரியினால் மற்றச சாமக்கிரிக்குப் பாத முண்டாகின்றது. இலௌகிக பதார்த்தங்களின் ஜிஞ்ஞாஸையும அவற்றின் பிரத்தியக்ஷ முதலிய ஞானத்தின் சாமக்கிரியும எப்போதும் சாக்கிரகாலத்தில் சம்பவிக்கின்றன. அவற்றால் ஞானவிருப்ப மின்றிய பிரஹ்ம ஞானத்தின் சாமக்கிரிக்குப் பாதமுண்டாகும். ஆதலால் இலௌகிக பதார்த்தங்களின் ஜிஞ்ஞாஸையோடு கூடிய பிரத்தியக்ஷமுதலிய ஞானததின் சாமக்கிரியினது பாதததின் பொருட்டுப் பிரஹ்மத்தின் தீவிரமான ஞானவிருப்பம வேண்டும. தீவிர ஞான விருப்பததோடு கூடிய பிரஹ்ம ஞானத்தின் சாமக்கிரியினால் இலௌகிக பதார்த்தங்களினது ஞானததின் சாமக்கிரிகளுக்குப் பாதம் உண்டாகின்றது. *'அதாதோ ப்ரஹ்மஜிஜ்ஞாஸா' என்னும்

* இது பிரஹ்மசூத்திரததின் முதற்சூத்திரம். இதன்பொருள் அதன்பின் பிரஹ்மத்தின ஞானவிருப்பானது செயயத்தக்கதாம் அதாவது பிரஹமத்தை அறிய விரும்பவேண்டும் என்பதாம்.

சூத்திரத்திற்கும் இப்பொருளின் கண்ணே தாற்பரியமாம். வியாக்கியானகாரர் விசாரத்தில் ஜிஞ்ஞாஸை யென்னும் பதத்திற்கு இலக்ஷணையைக் கூறிக் கர்த்தவ்விய பதத்திற்கு * அத்தியாகாரம் கூறியிருக்கின்றனராகலின், பிரஹ்மஞானத்தின்பொருட்டு வேதாந்த வாக்கியங்களின் விசாரம் செய்யவேண்டுமென்பது இச்சூத்திரத்தின் பொருளாயினும் விசார வாசகமான பதத்தைவிட்டு இலாக்ஷணிகமான ஜிஞ்ஞாஸையென்னும் பதத்தைப் பிரயோகிப்பதினால் சூத்திரகாரருக்கு வாச்சியமும் இலக்ஷியமுமாகிய இரண்டு பொருளினும் தாற்பரியமாம். பிரஹ்மஜிஞ்ஞாஸை பிரஹ்மஞானத்திற்கு ஏதுவாமென்பது வாச்சியார்த்தம். ஒரேசொல்லான் இலக்ஷணாவிருத்தி சக்திவிருத்திகளால் இரண்டு பொருள்களின் ஞான முண்டாகாதென்னும் பழைமையான சொல், கங்கையில் மீன்களும் இடைச்சேரியு முளவென்னும் வாக்கியத்திற் பிறழ்தலான் விசுவசிக்கத் தக்கதன்று. கங்கையில் மீன்களும் இடைச்சேரியுமுளவென்னும் வாக்கியத்தில் கங்கையென்னும் பதத்தின் வாச்சியார்த்தத்திற்கு மீனோடு சம்பந்தமும், இலக்ஷியார்த்தத்திற்கு இடைச்சேரியோடு சம்பந்தமு முண்டாகின்றன. ஆதலால் கங்கையில் மீன்களும் கரையில் இடைச்சேரியுமுண்டென்பது வாக்கியத்தின் பொருளாம். நூலாசிரியர்கள் சூத்திரத்திற்கு அநேகம் பொருள்கள் எழுதி யிருக்கினும் அவ்வநேகம் பொருள்களும் சூத்திரத்திற்குப் பூஷணமாம். விசாரத்திற்போல ஜிஞ்ஞாஸையில் விதி சம்பவிக்கின்றதா, இல்லையாவென்னும் பொருளை யெழுதுவதில் நூல் விரியுமாகலின் ஈண்டு எழுதப்படவில்லை.

## ருக. வேதாந்தத்தின் தாற்பரியமும், வேதத்தினையும் சொல்லினையும் விசாரித்தலும்:

அவாய்நிலையுணர்வு முதலியன சாப்த போதத்திற்கு ஏதுவாம். அவற்றில் தாற்பரிய ஞான முளது. வேத வாக்கியத்தின் தாற்பரிய ஞானத்திற்கு ஏது உபக்கிரம முதலியனவாம். அவ்வுபக்கிரம முதலியவற்றான் வேதாந்த வாக்கியங்களுக்கு அத்துவிதீயப பிரஹ்மத்தின்கண் தாற்பரிய முளதாம். உபாசனை விதியிற் றாற்ப

* வாக்கியமுடிதற் பொருட்டாயினும், பொருள் முடிதற் பொருட்டாயினும் எஞ்சிநின்ற பதங்களை வருவித்துரைத்தல் அத்தியாகாரமாம். இதனையே வாக்கிய சேஷமென்றும் கூறுவர்.

ரியமில்லை. இவ்வர்த்தம்பாஷியகாரரால் * சமன்வய சூத்திரத்திற்கு விஸ்தாரமாய் எழுதப்பட்டிருக்கின்றது. ஆதலால் மீமாம்ஸக விரு த்திகாரர்களது மதங்கள் நலமுடையனவன்று. அவர்களது மதகண் டனத்திற்கு அநுகூலமான தர்க்கம் சம்ஸ்கிருதபாஷை தெரியாத சுரோதாக்களு (கேள்வியாளரு) க்கு அறிதற் கரியதா மாகலின் எழுதப்படவில்லை. இவ்வாக்கியத்தால் கேட்பவனுக்கு இப்பொரு ளின் ஞான முண்டாகவேண்டுமென்னும் சொல்லுவானது விருப் பம் (இச்சை) தாற்பரியமெனப்படும். மீமாம்ஸக மதத்தில் வேதம் நித்தியம்; ஆண்டுக் கருத்தாவின் இச்சையோ சம்பவியாது. அத்தி யாபக (ஓதுவிப்போ) னது இச்சை சமபவிக்கும் நையாயிக மதத் தில் சப்தம் மூன்றாவது க்ஷணத்தில் நாச மாகின்றது. வேதமும் சத்த வடிவாயிருத்தலின் க்ஷணிகமாம. மூன்றாவது க்ஷணத்தில் எதற்கு நாசமுண்டாகின்றதோ, அது க்ஷணிகமெனப்படும். நையா யிக மதத்தில் உச்சாரணததின் பேதத்தால் வேதத்திற்குப் பேத முண்டு. ஒருமுறை உசசரித்து மீண்டும் உசசரிக்கப்படும் வாக்கி யம எதுவோ அது முன் வாக்கியத்தினும வேறாகின்றது. ஆனால் முன்வாக்கியத்திறகுச சஜாதீய (ஒத்தவின) மாய்ப் பின்வாக்கிய முளது. ஆதலால் அபேதப்பிரம முண்டாகின்றது. நையாயிகமதத் தில் பாரத முதலியவறறைப்போல வேதம் பௌருஷேயமும் (புரு ஷனாற் செய்யப்பட்டதும) க்ஷணிகமுமாம். ஏனெனின் வர்ண சமுதாயத்தின் வேறாகவோ வேதம இல்லை. வாண சமுதாயத்தி னையே வேத மென்பா. அசசமுதாயம் தனித்தனி வாணங்களி னும் வேறன்று. ஆதலால் வேதம வர்ணவடிவமாம. அவ்வர்ணம் சத்தவடிவமாம். ஆகாயத்தின் குணம சத்தமாம. நாநா (பல) சத்தங்கள் ஒரு காலத்தி லுண்டாகா. ஏனெனின், எங்ஙனம் ஆன்மாவின் விசேஷகுணங்கள் ஞானமுதலியனவோ, அங்ஙனமே ஆகாயத்தின் விசேஷகுணம் சத்தமாம். விபுவின் விசேஷகுணங்க ளவையோ, அவை யிரண்டு ஒருகாலத்தி லுண்டாகா. ஆனால் தேவ தத்தனது சத்தமும் எஞ்ஞதத்தனது சததமும ஒருகாலத்தி லுண் டாகின்றன; பேரியின் சத்தமும் தாளத்தின் சத்தமும் ஒரு கால த்தி லுண்டாகின்றன. ஒருநிலைக்களதத (சமானதி கரணமுடைய) விரண்டு சத்தங்களுக்கு ஒருகாலத்தில் உற்பத்தி நிகழாதெனக்

* பிரஹ்ம சூத்திரததினது முதல் அததியாயம் முதல் பாதத்தின் ச-வது சூத்திரம் சமன்வயசூத்திர மெனப்படும.

கூறினும், எல்லாச் சத்தங்களும் சமவாய சம்பந்தத்தான் ஆகாயத் திருப்பனவாயிருத்தலின் ஒரு நிலைக்களத்தனவாம். எச்சத்தமும் வேறு நிலைக்களத்ததாகாது. என்றாலும ஆகாயத்தில் சத்தத்திற்குச் சமவாய சம்பந்த மிருப்பதுபோலக் கண்டம்,மேல்வாய்,பல், மூக்கு, உதடு, நாநுனி, உரம, சிரமென்னும எட்டுறுப்புகளினும் வாண (எழுத்து) வடிவான சத்தத்திற்கு அவச்சேதகத்தன்மைச சம்பந்த முளது. துவனி (ஒலி) வடிவான சத்தத்திற்குப் பேரிதாள முதலியவற்றில் அவச்சேதகத்தன்மைச சமபந்த முளது. ஒரு அதிகரண (நிலைக்கள)த்தி லிருப்பதனைச் சமானாதிகரணம் (ஒரு நிலைக்களத்தது) என்பா. சமவாயசமபந்தத்தால் எல்லாச் சத்தங்களும் ஆகாயத் திருப்பனவாகலின் சமானாதிகரணமா யிருக்கின்றன. என்றாலும் அவச்சேதகத்தன்மைச்சம்பந்தத்தால் தேவதத்த சத்தமும எஞ்ஞதத்த சத்தமும் வியதிகரணமாம. அங்ஙனமே பேரிசத்தமும தாளசத்தமும அவச்சேதகத தன்மைச சமபந்தத்தால் வியதிகரணமா(வேற்றுநிலைக்களத்தவா)ம. இதுநியமமாம:— அவச்சேதகத்தன்மைச சமபந்தத்தால் ஒரு அதிகரணத்தில் இரண்டு சத்தங்களின் உற்பத்தி யொருகாலத்தி லுண்டாகிறதில்லை. அதாவது ஒரு அவச்சேதகத்தில் இரண்டு சத்தங் (சொற்) களின் உற்பத்தி ஒருகாலத்தி லுண்டாகிறதில்லை. ஆதலால், வாக்கிய பதங்களின் அவயவ வடிவமான வாணங்களுக்கு ஒரு காலத்தில் உற்பத்தியுண்டாகிறதில்லை. ஆனால் எல்லா வாணங்களும கிரமமாக உண்டாகின்றன. கிரமமாக உண்டாகும வாணங்களுக்கு நிமித்தமின்றி நாச மங்கீகரிக்கின், சகல வாணங்களுக்கும முதற்கணத்தில் உற்பத்தியும் இரண்டாவது கணத்தில் நாசமு முண்டாகும. ஆதலால் உற்பத்தி நாசமின்றிச் சத்தத்தில வேறு எந்தப் பிரத்தியக்ஷ முதலிய வியாபாரங்களும சித்தியா வாகலின், சத்தத்தின் நாசத்திற்கு யாதானு மோா நிமித்தத்தை யங்கீகரித்தல்வேண்டும். எந்த நிமித்தமின்றி இரண்டாவது கணத்தில் சத்தத்திற்கு நாசமுண்டாகாதோ, அது வேறெந்தச சத்தத்தின் நாசத்திற்கும் நிமித்தமாதல் சமபவியாது. முன் சத்தத்தின நாசத்திற்கு எது தன் பின்னிற்கும சத்தமாம்; गौः(கௌ:-ஆ) என்னும வாக்கியத்தில புருஷனது முயற்சியால் நாபிதேசத்தி னின்றும வாயுவின்றொழி லுண்டாய்க் ககாரத்தை யுண்டுபண்ணும நாவினடியில வாயுவின் சையோகமுண்டாய் ஔகாரத்தை யுண்டுபண்ணும கண்டவுத்டு

ளுடன் வாயுவின் சையோகம் உண்டாகின்றது. அதன்பின் விசர்க்கத்தை (:) உண்டுபண்ணும் கண்டஸ்தானத்தில் வாயுவின் சையோக முண்டாகின்றது. எவ்வொழுங்கால் மூன்று சையோகங்களு முண்டாகின்றனவோ, அவ்வொழுங்கானே ககார ஔகார விசர்க்கங்களாகிய மூன்றுவர்ணங்களு முண்டாகின்றன. கௌமுதி முதலியநூல்களிற் கவர்க்கத்திற்குக் கண்டஸ்தான மெழுதப்பட்டிருக்கினும், பாணினியாற் செய்யப்பட்ட சிக்ஷையில் கவர்க்கத்திற்கு நாவினடி ஸ்தானமாக எழுதப்பட் டிருக்கின்றது:— அந்தச் சிக்ஷா வசனத்தை யனுசரித்து நாவினடியில் வாயுவின் சையோகத்தால் ககாரத்தின் உற்பத்தி சொல்லப்பட் டிருக்கின்றது. வியாகரணமதத்தில் கௌ: (மௌ:) வென்னும இத்துணை வர்ணங்கள் வாக்கியரூப மாகாவாயினும் நியாயமதத்தான் வாக்கியமெனப் படுகின்றன. முதல் க்ஷணத்தில் ககாரத்தின் உற்பத்தியும், இரண்டாவது க்ஷணத்தில ஔகாரத்தின் உற்பத்தியும்,மூன்றாவது க்ஷணத்தில் விசர்க்கத்தின் உற்பத்தியுமுண்டாகின்றன. ஆண்டுக் ககாரத்தின் நாசத்தில் ஔகாரம் ஏதுவாம், ஔகாரத்தின் நாசத்தில் விசர்க்கம் ஏதுவாம். மூன்றாவது க்ஷணத்தில் சத்தத்திற்கு நாச முண்டாகின்றது; இரண்டாவது க்ஷணத்தில் உண்டாகிறதில்லை. ஏனெனின், நாசத்திற்கு ஏது தனது பின்சத்தமாம். அஃது இரண்டாவது க்ஷணத்தில் உண்டாகின்றது. காரணத்தின சித்தியின்றிக் காரிய முண்டாகாது. முதல் க்ஷணத்தில் இரண்டாவது சத்தம் பெறப்படாததா யிருத்தலான், இரண்டாவது க்ஷணத்திற் பெறப்படும இரண்டாவது சத்தத்தால் மூன்றாவது க்ஷணத்தில முதற் சத்தத்தின் நாச முண்டாகின்றது. இவ்வாறு மூன்றாவது சத்தத்தான் இரண்டாவதற்கு நாச முண்டாகின்றது. இவ்வாறே உபாந்திய (ஈற்றயல்) சத்த பரியந்தம் தத்தம் பின்னிற்கும சத்தங்களான் (முன்) சத்தங்களுக்கு நாச முண்டாகின்றது. அந்திய (கடைசி) சத்தத்திற்கு ஈற்றயற் சத்தத்தான் சுந்தோபசுந்தநியாயத்தால் நாச முண்டாகின்றது. சுந்தன் உபசுந்தனென்ன இரண்டு சகோதரர் இருந்தனர். அவர்களுள் ஒருவருக்கொருவரான் நாச முண்டாகியதுபாரதத்திற் பிரசித்தம ஆனாலிதிலிதுதோஷமாம்:— ஈற்றயற் சத்தத்தால் அந்திய சத்தத்திற்கு நாசம் அங்கீகரிக்கின் இரண்டாவது க்ஷணத்திற்றானே அந்திய சத்தத்திற்கு நாச முண்டாகும். ஆதலால் உற்பத்தி நாசத்தின் வேறான வியாபாரமின்றிய

அந்திய சத்தம் அப்பிரத்தியக்ஷமாதல் வேண்டும். ஜகதீசபட்டாசாரியர் அந்தியசத்தம் அப்பிரத்தியக்ஷ மென்று கூறி யிருக்கின்றனராகலின், அப்பிரத்தியக்ஷத்தை யிட்டுதல் இஷ்டமே, தோஷமின்றெனக்கூறுவராயினும், மூன்றாவது க்ஷணத்திற் சத்தத்திற்கு நாசமுண்டாமென்னும் நியமத்திற்குக் கேடுண்டாம். ஆதலால் அந்திய சத்தத்தின் நாசத்தில் ஈற்றயற சத்தத்தின் நாசம் ஏதுவாம். ஈற்றயல் சத்தம் ஏதுவன்று. இப்பக்ஷத்தில அந்திய சத்தத்தின் நாசத்தில் இரண்டாவது க்ஷணத்தில் நாசத்தின் ஆபத்தி(அடைவி)ல்லை. ஏனெனின், ஈற்றயல சத்தத்தின் நாசம அந்தியசத்தத்தா னுண்டாகின்றது. ஆதலால் அந்தியசத்தத்தின் இரண்டாவதுக்ஷணத்தில ஈற்றயலின் நாசமும அதற்கடுத்தக்ஷணத்தில் அந்தியத்தின் நாசமுமுண்டாகின்றன. இவ்வாற்றான் சகல சத்தங்களின் நாசமும் மூன்றாவது க்ஷணத்தி லுண்டாகின்றது. இதன்கண் இது சங்கையாம்:—யாண்டு ஒரே வர்ணவடிவமான சத்த முண்டாகின்றதோ, ஆண்டுச் சத்தத்தின் நாசத்திற் கேதுவாக ஒரு சத்தமு மில்லை. அதற்கு இது சமாதானமாம:—கண்ட முதலியவற்றோ டுண்டாகும் வாயுவின் சையோகம வர்ணவடிவமான சத்தத்திற்கு ஏதுவாம். பேரி முதலியவற்றோடு தண்ட முதலியவற்றிற் குண்டாகும சையோகம தொனிவடிவ சத்தத்திற்கு ஏதுவாம. மூங்கிற் பிள விரண்டின் பிரிவு தொனிவடிவ சத்தத்திற்கு ஏதுவாம. அங்ஙனமே சத்தமும் சத்தத்திற்கு ஏதுவாம். பேரி தண்டங்களின் சையோகத்தால் பேரிதேசத்திலுண்டாகும சத்தமெதுவோ அதனினின்றுமுண்டாகிய சத்தத்தின் சாக்ஷாத்காரம் சிரவணத்தா (காதினு) லுண்டாகின்றது. அங்ஙனம் கண்டமுதலிய விடங்களில் வாயுவின் சையோகத்தால் உண்டாகும் வர்ணரூப சத்த மெதுவோ, அதன் சாக்ஷாத்காரம சிரவணத்தால் உண்டாகிறதில்லை. ஆனால் வர்ணரூப சத்தத்தான் வேறு சத்த முண்டாய் அதன் சாக்ஷாத்கார முண்டாகிறது. இவ்வாற்றான் அந்திய சத்தமின்றிய ஒரு சத்தம் அப்பிரசித்தமாம. ஆனால் இம்மதத்தில் வர்ணங்களின் சமுதாய வடிவமான பதத்திற்கு ஏக காலத்திற் சம்பவ மில்லையாகலின் பதத்தின் சாக்ஷாத்காரமோ சம்பவியாது. என்றாலும் ஒவ்வொரு எழுத்தின் சாக்ஷாத்காரத்தால் எல்லா வெழுத்துக்களையும் விஷயஞ்செய்யும் ஒரு ஸ்மிருதி யுண்டாகின்றது. ஸ்மரிக்கப்பட்ட பதத்தால் பதார்த்தத்தின் ஸ்மிருதி யுண்டாகின்றது.

த்தனுற் சாப்த போத முண்டாகின்றது. அல்லது முன் முன் வர்ணங்களின் அநுபவத்தால் சம்ஸ்கார முண்டாகின்றது. சமஸ்கார த்தோடு கூடிய அந்திய வர்ணத்தின் அநுபவமே பதத்தின் அநு பவமெனப் படுகின்றது. அதனுல் பதார்த்தத்தின் ஸ்மிருதி யுண் டாகின்றது; அதனுற் சாப்தபோத முண்டாகின்றது. இது நியாய மதம். மீமாம்ஸக மதத்தில் வர்ணம நித்தியமாம; ஆதலால் வர்ண ங்களின் சமுதாயமாகிய வேதமும் நித்தியம். அன்றியும் எல்லா வர்ணங்களும விபுவாம். யாண்டுககண்ட முதலியவிடங்களில்அந்தி யான்ம வாயுவின் சையோக முண்டாகின்றதோ, ஆண்டு வர்ணங் களின் அபிவியக்தி (வெளிப்படுதல்) உண்டாகின்றது. நையாயிக மதத்தில் வர்ணங்களின் உற்பத்திக்கு ஏதுவாயுள்ள தெதுவோ, அதுவே மீமாம்ஸக மதத்தில் வர்ணங்களின் அபிவியக்தி(வெளிப் படை)க்கு ஏதுவாம். இவ்வாற்றுன் வர்ண சமுதாயமான வேதம நித்தியம; ஆதலால் அபௌருஷேயமாம் (புருஷனுலாகிய தன்றும்). வேதாந்தமதத்தில் வர்ணமும அவற்றின் சமுதாயமான வேதமும் நித்தியமன்று. ஏனெனின், வேதத்திற்கு உற்பத்தி சுருதி கூறி யிருக்கின்றது. சேதனத்திற்கு வேறுகிய யாவும் அநித்தியமாம். ஆதலால் வேதம் நித்திய மன்று; க்ஷணிகமு மன்று. சிருஷ்டி யின் ஆதிகாலத்தில் சர்வஞ்ஞ ஈசுவரனது சங்கற்ப மாத்திர த்தால் வேதத்தின் உற்பத்தி யுண்டாயிருக்கின்றது. ஆதலால் சுவாசத்தைப் போல அநாயாசமாக ஈசுவரன் வேதத்தை யுண்டு பண்ணினுர். நையாயிகமதத்தில் பாரத முதலியவற்றைப் போல வேதம பௌருஷேயமாம. வேதாந்தமதத்தில் பாரத முதலியவற் றைப்போல ஈசுவரரூப புருஷனுலாக்கப்பட்டதாகலின் பௌரு ஷேயமாம. ஆனுல சர்வஞ்ஞர்களாகிய வியாசர் முதலியோர் எல் லாச் சிருட்டிகளினும் பாரத முதலியவற்றைச் செய்திருக்கின்ற னா. ஆண்டு எங்ஙனம் முன் சர்க்கத்தில் (சிருஷ்டியில்) ஒழுங்கு இருந்ததோ அங்ஙனமே பாரத முதலியன பின் சர்க்கத்திலும் உண்டாமென்னும நியமமில்லை. ஆனுல் தனதிஷ்டப்படி பாரத முதலியவற்றின ஒழுங்கினைச செய்திருக்கின்றனர். வேதத்தின் ஒழுங்கு விலக்ஷணமாகாது. ஆனுல் முன் சர்க்கத்தின் ஒழுங்கினை நினைத்துப் பின சர்க்கத்தில் முன்கற்பத்துக்குச சமானமான ஒழுங்கினை யுடையதாக வேதத்தினை ஈசுவரன் சிருஷ்டித்திருக்கி ன்றனா. புருடனுற் செய்யப்படுந் தன்மையாகிய பௌருஷேயத்

தன்மை வேதத்தில் பாரத முதலியவற்றின சமானமாம அந்நிய சர்க்கத்தினது ஒழுங்கினை நினைவின்றிப் புருடனு லாக்கப்படுந தன்மை வடிவினதாகிய பௌருஷேயத தன்மை பாரத முதலிய வற்றின்க ணுளது; வேதத்திலின்று. வேதத்தில் முன் சாக்கத்து ஒழுங்கினை ஸமரிததுப் புருஷனுலாக்கப்படுந்தன்மை யுளது. ஆத லால் வேதத்தின் ஒழுங்கு அநாதியாம; வேதம் ஈசுவரனுகிய புருஷ னு லாக்கப்பட்டதாம; இதில விரோதமின்று.

மூன்றவது பிரகாசம்
சத்தப்பிரமாண நிரூபணம
முடிந்தது.

ஓம தத்ஸத்பரஹ்மணே நம:.

# நான்காவது பிரகாசம்.

## உவமானப்பிரமாண நிரூபணம்.

### ரூஉ. கிரமபங்கத்தின் அபிப்பிராய பூர்வகமான இரண்டு நியாயக் கிரமத்தான் உவமான உவமிதிகளின் இருவகைச் சொரூபம்.

நியாய வேதாந்தங்களின் எல்லா நூல்களினும், உவமான நிரூபணத்திற்குப் பின் சத்தம் நிரூபிக்கப்பட்டுளதெனினும், மூன்று பிரமாண வாதிகளாகிய சாங்கியர் முதலியோர் உவமானத்தை யங்கீ கரிப்பதில்லை. பிரததியக்ஷம் அநுமானம சத்தமென்னும மூன் றனையும் யங்கீகரிக்கின்றனர. அவர்களுக்குபயோகமுள்ளபிரமாண ங்களை முன்னர்ச் சொல்லவேண்டுமாகலின், சத்தப் பிரமாணத் தின்பின் உவமானம் நிரூபிக்கப்படுகின்றது. எவ்வொழுங்கான் சாஸதிரங்களில் அதிகப் பிரமாணங்கள் அங்கீகரிக்கப்பட்டுள வோ, அவ்வொழுங்காக இந்நூலில பிரமாணம நிரூபிக்கப்படுகின்ற தாகலின், ஈண்டு வேறு சங்கதியி (தொடாபி) ன் அபேக்ஷையில்லை.

உவமிதிப் பிரமையின கரணம உவமானப்பிரமாணமெனப் படும். நியாயக்கிரமமாய் உவமிதி உவமானங்களின் சொரூபம் இது வாம்:—* சம்ஞியில சம்ஞையினது வாசகியத்தன்மையின் ஞானம் உவமிதியெனப்படும; அதன கரணமெனப்படும் வியாபாரமுடைய

* சொல்லின்பெயா சம்ஞை; பொருளின்பெயர் சம்ஞி.

அசாதாரண காரணமெதுவோ அது உவமானமெனப்படும். ஓர் நகரவாசியாகியபுருஷன் கவயம் (ஆமா) என்னும் சொற்பொருளை யுணராதவனும் ஆரணியத்தில் வசிக்கு மொருவனோடு கவய மெத் தன்மைத்தென்று கேட்க, அப்போது ஆவினையொக்கும் ஆமா வென்ற ஆரணிய புருடன் வாக்கியத்தைக் கேட்டு வாக்கியார் தத்தினை யநுபவித்து வனத்தில் ஆவினையொத்த ஆமாவைக் கண்டு, ஆவினை யொக்கும ஆமா வென்னும் வாக்கியார்த்தத்தை ஸமரிக்கின்றான். அதன்பின் கண்டபசுவில் ஆமாவென்னும சொற் பொருட் டன்மையை யறிகின்றான். ஆண்டுப் பசுவிசேடததில் ஆமாவென்னும சொற்பொருட்டன்மை ஞானம் உவமிதியாம். ஆர ணிய புருடனாலறிவிக்கப்பட்ட வாக்கியார்த்தத்தின் சத்தாநுபவம் கரணமாம்; ஆவினையொத்த பிண்டத்தைக் கண்டு வாக்கியார்த்தத் தை ஸமரித்தல் வியாபாரமாம; ஆவையொதத பிண்டததின் பிரத் தியக்ஷம் சம்ஸ்காரத்தின் உற்போதகமாயிருததலின் சககாரியாம். ஆதலால் வாக்கியார்த்தாநுபவம உவமானமும்,வாக்கியார்த்த ஸ்மி ருதி வியாபாரமுமாம.எங்ஙனம் அவாய்நிலைமுதலியன சாத்தத்தின் சககாரிகளோ, அங்ஙனமே ஆவையொத்த பிண்டத்தின் பிரத்தி யக்ஷம் உவமிதியின் சககாரியாம, உவமிதி பயன். இது சாம்பிரதா யிகமான நையாயிகர் மதம்.

நவீன நையாயிகர் இங்ஙனம கூறுகின்றனா:—சககாரியெனக் கொள்ளப்பட்டிருக்கும் ஆவையொத்த பிண்டத்தின் பிரத்திய க்ஷம் உவமானமாம். வாக்கியார்த்த ஸமிருதி வியாபார மாம். ஆமாவென்னும் பதத்தினது வாச்சியத்தன்மையின் ஞானம் உவ மிதியாகிய பயனும். இம்மதத்தில் வாக்கியார்த்தத்தின் அநுபவம் காரணத்திற்குக் காரணமாயிருத்தலின் குலாலபிதாவைப்போல அந்நியதாசித்தமாம்(பிறிதோராற்றாற்பெறப்படுவதாம்). பொருள் இதுவாம்:—குலாலபிதா கடத்தினது சாமக்கிரியினும் புறமாதல் போல உவமிதி சாமக்கிரியினும் வாக்கியார்த் தாநுபவம பாகிய (புற) மாம். இவ்விரண்டு மதங்களும் நையாயிகாகளுடையவாம். இவற்றில் அநேக சங்கை சமாதானமாகிய விசாரம் நியாய கௌ ஸ்துப முதலியவற்றில் எழுதப்பட்டுளது. சித்தாந்தத்தில் உபயோக முடைய தன்றாகலின் அதனை யாம் எழுதவில்லை.

உவமிதி ஒப்புமை ஞானத்தால் உண்டாவதுபோல விதர்ம ஞானத்தானும் உண்டாகின்றது. யாண்டுக் காண்டாமிருகமென்

னும் பதத்தின் வாச்சியத்தையறியாதவன் ஆரண்ணியபுருஷனால ஒட்டையின் விலக்ஷணதர்மமுள்ள கொம்போடுகூடிய மூக்கினையுடையது 'காண்டாமிருகம' என்னும் பதத்தின் வாசசியமாமென்னும் வாக்கியத்தைக் கேடடு வாக்கியார்ததாநுபவமுண்டாகியபின்னர் வனத்திற்சென்று ஒட்டையின் விதாமமான காண்டா * மிருகத்தின் பிரத்தியக்ஷததிற்குப் பின் அதனிடத்துக் காண்டாமிருகமென்னும் பதத்தின் வாசசியத்தன்மையை யறிகின்றான். பிருதிவியென்னும பதத்தின் வாசசியத்தை அறியாதான் ஜலம் முதலியவற்றின் வைதாமியமுடையது பிருதிவியென்னுங் குருவாக்கியத்தைக்கேட்டு அதன் அா்த்தத்தை யனுபவித்து, ஜலாதிவைதர்மியமுடைய பதார்த்தததினைக் கண்டு, வாக்கியார்த்ததநதை ஸ்மரித்து அப்பதார்ததத்தில் பிருதிவி யென்னும பதததின் வாசசியததன்மையை நிசசயஞ் செய்கின்றான். விருத்த தர்மமுடையதனை விதர்மமென்பர். விருத்த தாமததினை வைதர்மிய மென்பர். காண்டாமிருகத்தின்கண் ஒடடையினும விருத்த தர்மம குறுகிய கழுத்து முதலியனவாம். பிருதிவியில் ஜல முதலியவற்றினும விருத்த தர்மம் கநதமாம். இரண்டு உதாரணங்களினும் சாம்பிரநாயிகக்கிரமமாக வாக்கியாத்தாநுபவம கரணமும, வாக்கியாரதத ஸமிருதி வியாபாரமும, விருத்த தாமமுடைய பதாாத்தததின் தரிசனம் சககாரியுமாம. நவீனக்கிரமமாக விருத்த தாம விசிஷ்ட பதாாத்தத்தின் பிரத்தியக்ஷம் கரணமும், வாககியாாத்த ஸமிருதி வியாபாரமும், வாக்கியார்த் தானுபவம பாகியசாமக்கிரியுமாம. காண்டாமிருக பதத்தின் வாச்சியத்தன்மை ஞானமும் பிருதிவியென்னும் பதத்தின் வாச்சியத் தன்மை ஞானமும உவமிதியாகிய பயனும். இவ்வாற்றான் நியாயமததநில் சம்ஞையின வாசசியத்தன்மை ஞானம் உவமானப் பிரமாணத்தின் பயனும. பிராசீனமதத்தில் வாக்கியார்த்தாநுபவத்தை உவமானப் பிரமாணமென்பா. நவீன மதத்தில் ஒப்புமையடுநத பிண்டதரிசனம அல்லது வைதர்மிய விசிஷ்ட பிண்டதரிசனம உவமானப் பிரமாணமா மென்பர்.

---

* மூக்கிற் கததிபோன்ற வொரு கொம்புள்ள ஓர் மிருகம். இதனை வடநூலார் கட்கமிருக மென்பர்.

## ருரு. வேதாந்தத்தின்படி உவமான உவமிதிகளின் சொரூபம்.

வேதாந்த மதத்தில் உவமிதி உவமானங்கட்கு வேறு சொரூபமாம்:—கிராமத்தில் கோவின் வியக்தியைக் காண்பவன் வனத்திற் சென்று கவயத்தைக் காணுங்கால் "இப்பசு ஆவொப்புமையுடையது" என்னும் பிரத்தியக்ஷம உண்டாகின்றது; அதனபின் என் ஆ இப்பசுவினை ஒத்தது என்னும் ஞானம் உண்டாகின்றது. ஆண்டுக் கவயத்தில் ஆ வொப்புமையின் ஞானம் உவமானப் பிரமாணமெனப்படுமே; ஆவிற் கவயத்தின் ஒப்புமை ஞானம் உவமிதியெனப் படும். இமமததகதினும் உவமிதியின் கரணமே உவமானமெனப் படுகின்றது. ஆனல் உவமிதியின் சொரூபமும் இலக்கணமும் வேறும். ஆதலால் உவமானத்தின் இலக்கண வேற்றுமையின்றி சொரூபத்தின் வேற்றுமை சித்திக்கின்றது. நியாய மதத்திலோ சம்ஞியில் சம்ஞையின் வாச்சியத்தன்மை ஞானம் உவமிதி யெனப் படுகின்றது. வேதாந்த மதத்தில் ஒப்புமை ஞானத்தாற் றோன்றிய ஞானத்தினை உவமிதியென்பர். கவயததில் ஆவின் ஒப்புமை ஞானத்தால் ஆவில் கவயத்தின் ஒப்புமை ஞானம் ஜநநியமாம். இவ்வாற்றான் உவமிதியின் இலக்கணம் நியாயமததகினும வேறும். அதன் கரணம எதுவோ அது உவமானமெனப்படுகின்றது. சாதிருசிய ஞான ஜந்நிய ஞானமாகிய உவமிதி ஆவிற் கவயததின் ஒப்புமை ஞானமாம. அதன் கரணம கவயத்தில் ஆவின் ஒப்புமை ஞானமாம. அதுவே உவமானமாம். இம்மதத்தில் உவமானப் பிரமாணம் வியாபார மின்றியதாம். உவமானததிற்குப் பின்னர் உவமிதியின் உற்பத்தியில் ஓர வியாபாரமும ஒப்பபதில்லை. இமமதத்தில் வைதாமிய விசிஷ்ட ஞானத்தால உவமிதி யங்கீகரிக்கப்படுகிறதில்லை; ஏனெனின் ஒப்புமை ஞானததாற் றோன்றிய ஞானத்தினையே உவமிதியென்பா; பிறவற்றினை யன்று.

## ருசு. விசாரசாகரத்தில் நியாயக்கிரமமாய் உவமிதியைச் சொல்லுதலின் அபிப்பிராயம்.

விசாரசாகரத்தில் நியாயககிரமமாக உவமிதியின் சொரூபம் சொல்லப்பட்டிருக்கின்றது. அதன் அபிப்பிராயம் இதுவாம்:—

நியாயக் கிரமமாக உவமிதி உவமானங்களின் சொரூபத்தை அங்கீகரிக்கினும் அத்வைத சித்தாநதத்திற்குக் கெடுதி யில்லை.

மாறுன நியாயக் கிரமத்தான் சித்தாந்தத்திற்கு அநுகூலமான உதாரணம் கிடைக்கின்றது. ஏனெனின் வைதர்மிய ஞானத்தான் உவமிதி நியாயமதத்திற் கொள்ளப்பட்டுளது. சித்தாந்தத்திற் கநுகூலமான அதன் உதாரணம் இதுவாம் :— "ஆன்ம பதத்தி னர்த்தம் எவ்வியல்பினது?" என்னும் வினவிற்குத் "தேக முதலியவற்றின் வைதர்மியமுடையது ஆன்மா" என்றுரைத்த குருவின்விடையைக்கொண்டு அநித்தியமும் அசுசியும் துக்க சொரூபமுமான தேகாதிகளினும் விதர்மமுடைய நித்திய சுத்த ஆநந்தரூபம் ஆன்ம பதத்தின் வாச்சியமாமென்று ஏகாந்தமான விடத்தில் விவேகிக்குங் காலத்து, மனதிற்கு ஆத்மா வோடு சையோக முண்டாய் உவமிதிஞான முண்டாகின்றது. சாதிருசிய ஞானத்தாற் றோன்றிய ஞானத்தினையே உவமிதியென அங்கீகரிக்கின் ஆன்மாவில் எதற்கும் சாதிருசியம் (ஒப்புமை) இன்று. ஆகலின் ஜிஞ்ஞாசுவுக்கு (ஞான விருப்புடையோனுக்கு) அநுகூலமான உதாரணம் கிடைக்கிற தில்லை. அசங்கத்தன்மை முதலிய தர்மங்களான் ஆகாயத்தினை யொத்தது ஆன்மாவாமாகலின் ஆகாயத்தில் ஆன்மாவின் ஒப்புமை ஞானம் உவமானமாம்; ஆன்மாவில் ஆகாயத்தின் ஒப்புமை ஞானம் உவமிதியாம். ஜிஞ்ஞாசுவுக்கு அநுகூலமான இவ்வுதாரணம் சித்தாந்தத்தின் உவமிதிக்குச் சமபலிக்குமாயினும், எவ்வதிகரணத்தில் எப்பதார்த்தத்தினது அபாவத்தின் ஞான முளதோ, ஆண்டு அபாவ ஞானத்தில் பிரம (மயக்க) புத்தி உண்டாத லின்றி, அவ்வதிகரணத்தில் அப்பதார்த்தத்தின் ஞானம் உண்டாகாது. எங்ஙனம்: ஆன்மாவில் கர்த்திருத்துவ முதலியவற்றின் அபாவ ஞானமுளதாக நியாயமுதலிய சாஸ்திரங்களைக் கேட்டும் முதல் ஞானத்தில் பிரமபுத்தி யுண்டாதலின்றிக் கர்த்தா போக்தா ஆன்மாவென்னும் ஞானம் நிகழாது. எவனுக்குத் வேதாந்தார்த்த நிச்சயஞ் செய்தும் நையாயிகர் முதலியோரது குசங்கத்தால் கர்த்தா போக்தா ஆன்மாவா மென்னு ஞான முண்டாகின்றதோ, ஆண்டு முதல் ஞானத்தில் பிரமபுத்தி யுண்டாகின்றது. முதல் ஞானத்தில் பிரமபுத்தி யுண்டாத லின்றி விரோதமுடைய ஞானம் நிகழாது. அப்பிரமபுத்தி பிரம (மயக்க) வடிவினதாருக, அல்லது உண்மை வடிவினதாருக. இதில் ஆக்கிரகமில்லை. ஆனால் பிரமபுத்தியில் பிரமத்தன்மை நிச்சயம் வேண்டியதின்றென்பது ஆக்கிரகமாம். இவ்வாற்றான் ஏக்காலத்தில் குரு

வாக்கியங்களான் ஜிஞ்ஞாசுவுக்கு ஆகாயமுதலிய சகல பிரபஞ்சமும் கந்தருவ நகரம்போல் திருஷ்ட நஷ்ட (காணும்போதே யழியும்)சுபாவமுடையனவாம்; அவற்றின் விலக்ஷண சுபாவமுடையது ஆன்மா; ஆகாயமுதலியவற்றில் ஆன்மாவிற்குச் சிறிதும ஒப்புமையின்றென்னும திடநிச்சயமுண்டாகுங்காலத்தில் ஆகாயத்திற்கும் ஆன்மாவிற்கும் ஒப்புமை ஞானம் சம்பவியாதாகலின் உத்தமஜிஞ்ஞாசுவுக்கு அநுகூலமான சித்தாந்தத்தினது உவமிதியின்உதாரணம் கிடைக்காது.

## ருரு. முற்கூறிய வேதாந்தக்கிரம நியாயக்கிரமங்களின் விலக்ஷணமான உவமிதி உவமானங்களின் இலக்கணம்.

முற்றும் நையாயிகக் கிரமத்தின் உவமிதியில் வித்துவேஷமு (விசேஷ வெறுப்பு) ண்டாகுமாயின் உவமிதிக்கு இவ்விலக்கணஞ் செய்துகொள்ளல் வேண்டும்:— சாதிரிசிய ஞானத்தாற் றோன்றிய ஞானம் அல்லது வைதர்மிய ஞானத்தாற் றோன்றிய ஞானம என்னும இரண்டனுள் யாதானு மொன்றுளதேல் அது உவமிதியெனப்படும். காண்டாமிருகத்தில் ஒட்டையின் வைதர்மிய ஞானத்தான் ஒட்டையில் காண்டாமிருகத்தின் வைதர்மிய ஞானம உண்டாகின்றது. பிருதிவியில் ஜலத்தின் வைதர்மிய ஞானத்தால் ஜலத்தில் பிருதிவியின் வைதர்மிய ஞான முண்டாகின்றது. ஆதலால் ஒட்டையில் காண்டாமிருகத்தின் வைதர்மிய ஞானமும் ஜலத்திற் பிருதிவியின் வைதர்மிய ஞானமும் உவமிதியாம. அதன் கரணம உவமான மெனப்படும்; ஈண்டுக் காண்டாமிருகத்தில் ஒட்டையின் வைதர்மிய ஞானமும் பிருதிவியில் ஜலத்தின் வைதர்மிய ஞானமும் கரணமாகலின் உவமானமாம். விபரீதமாகவும உவமான உவமிதித் தன்மை சமபவிக்கின்றது. இந்திரிய சம்பந்தமுடையதில் சாதிருசிய ஞானம் உவமானமாம். இந்திரியத்தின் மறைபட்டதில் சாதிருசிய ஞானம் உவமிதியாம். அங்ஙனமே பிரபஞ்சத்தில் ஆத்மாவின் வைதர்மிய ஞானத்தால் ஆத்மாவில் பிரபஞ்சத்தின் வைதர்மிய ஞானம் உவமிதியாகின்றது. இவ்வாற்றான் சாதிருசிய ஞானஜந்நிய ஞானம் வைதர்மிய ஞானஜந்நிய ஞானம் என்னும் இரண்டனையும் உவமிதியாகக் கூறின் ஜிஞ்ஞாசுவுக்கு அநுகூலமான உதாரணம சமபவிக்கின்றது.

## அதனுரையினும் கூறியதன் கண்டனம்.

வேதாந்த பரிபாஷையில் சாதிருசியஞான ஜந்திய ஞான மொன்றே உவமிதியின் இலக்கணமாகச்சொல்லப்பட்டது. அதன் உரையில் அந்நூலாசிரியர் புத்திரர் இரண்டாவது உவமிதியைக் கண்டித்தற்பொருட்டுக் கூறியிருத்தல்வருமாறு:—யாண்டுக் கமலத்தால் லோசன (நேத்திர) ததை உவமிக்கின்றேன் என்றிவ்வாறு உவமான உவமேயத்தன்மை யுண்டாகின்றதோ, அவ்விடத்திற்றான் உவமானப்பிரமாண முண்டாகின்றது. வைதாமியஞான முண்டாகுமிடத்து உவமான வுவமேயத்தன்மை யுண்டாகிறதில்லை. ஆதலால் உவமானப் பிரமாணம் சம்பவியாது என்பதாம். அவரை இது கேட்டல் வேண்டும்:—வைதர்மிய ஞான ஜந்திய உவமிதிக்கு எவ்வுதாரணங்கள் கூறப்பட்டனவோ, அவற்றில உவமிதியினது விஷயத்தின் ஞானம் உவமானப் பிரமாணத்தா லுண்டாகிறதில்லையெனின், எப்பிரமாணததால் அவற்றின் ஞானம் உண்டாகின்றது? எப்பிரமாணத்தால் அவற்றின் ஞானத்தைக் கூறுவரோ அப் பிரமாணத்தானே சாதிருசிய ஞான ஜந்திய உவமிதியினது விஷயத்தின் ஞானமும் உண்டாய்விடும். உவமானப் பிரமாணத்தினை பிரயோஜனத்தின் அபாவத்தால் அங்கீகரித்தல் வேண்டும். கவயத்தின் பிரத்தியக்ஷத்தில் ஆவின் சாதிருசியமோ பிரத்தியக்ஷம்; ஆனால் ஆவில் கவயததின் சாதிருசியம் பிரததியக்ஷமன்று. ஏனெனின், தாமியோடு இநதிரியததின் சையோகமுண்டாகுமாயின், இநதிரிய சையுதத தாதான்மிய சம்பந்தத்தால் சாதிருசிய தர்மத்தின பிரத்தியக்ஷ முண்டாகும. ஆவடிவ தர்மியோடு இநதிரிய சையோகமின்மையால ஆவில கவயததின் சாதிருசியம பிரததியக்ஷத்திற்கு விஷய மன்று. ஆதலால் ஆவில் கவயத்தின் சாதிருசிய ஞானத்திற்கு ஏதுவாகக் கவயத்தில் ஆவின் சாதிருசிய ஞான வடிவமாகிய உவமானப்பிரமாணம வேண்டியதாயின், அங்ஙனமே காண்டாமிருகத்தில் ஒட்டையினது வைதர்மியத்தின் பிரத்தியக்ஷ ஞானமேோவுளது; ஒட்டையினோடு இந்திரிய சையோக மின்மையால் ஒட்டையில் காண்டா மிருகததினது வைதர்மியத்தின் ஞானம் பிரத்தியக்ஷ வடிவமாகாது; அதற்கு ஏதுவாகக் காண்டாமிருகத்தில் ஒட்டையின் வைதர்மிய ஞானமாகிய உவமானமே பிரமாணமென்று அங்கீகரிக்கத் தக்கதாம.வேதாந்த பரிபாஷையின் உரையில் எந்த ஞானத்திற்குப் பின் உவமிக்

கின்றேனென்னும் தோற்றம், ஞாதாவு (அறிபவனு) க் குண்டாகின்றதோ, அந்த ஞானம் உவமிதியாம். வைதர்மிய ஞானத்தாற் றோன்றிய வைதர்மிய ஞானத்திற்குப் பின் உவமிக்கின்றே னென்னும தோற்ற முண்டாகிறதில்லை. ஆதலால் உவமிதியன்றென வெழுதி யிருக்கின்றனா. அது பிசகு; ஏனெனின் முகத்தில் சந்திரனது சாதிருசியப் பிரதத்தியக்ஷததின் பின்னர் முகத்தைச் சந்திரனோடு உவமிக்கின்றே னென்னும் தோற்ற முண்டாகின்றது. முகததில் சநதிரனது சாதிருசியத்தின் பிரத்தியக்ஷ ஞானமுளது. உவமிதியில்லை. ஆதலால் உவமிககின்றேன் என்னும் வியவகாரத்திற்கு விஷயம உவமை யலங்காரமாம். யாண்டு உவமான உவமேயங்களுக்குச சமான சிறப்புண்டாகின்றதோ ஆண்டு உவமையலங்காரம் சொல்லப்படுகின்றது. அலங்காரததின் சாமானிய லக்ஷணமும் உவமை முதலியவற்றின் விசேஷ லக்ஷணமும் அலங்காரசந்திரிகை முதலியவற்றிற் பிரசித்தமாம். அது கடினமும் உபயோகமின்றியதுமா மென்றறிநது ஈண் டெழுதப்படவில்லை. ஆதலால் யாண்டு உவமிக்கின்றேன் என்னும தோற்றமுண்டா கின்றதோ அதன்விஷயம் உவமிதி ஞானமன்று.ஆனுல் சாதிருசிய ஞானஜந்நிய ஞான வைதர்மிய ஞான ஜந்நியஞானங்களில் உவமிதி சத்தம் பாரிபாஷிகமாம். எங்ஙனம் சந்தோகிரந்தங் (யாப்புநூல்) களில் ஐந்து ஆறு ஏழுகளில் பாணம் ரஸம் முனியென்னும் சொற்கள் பாரிபாஷிகமாயுளவோ, அங்ஙனமே உவமிதி சத்தமும் நியாய சாஸ்திர அத்வைத சாஸ்திரங்களில் வேறுவேறு பொருள்களில் பாரிபாஷிகமாம். ஆதலால் அத்வைத சாஸ்திரததில் சாதிருசியஞான ஜந்நிய ஞானத்தினைப் போல வைதாமியஞான ஜநநியஞானமும் உவமிதி சத்தத்தின் அாத்தமாம்.

பேதத்தோடுகூடிய சமான தா்மத்தினைச் சாதிருசிய மென்பர். எங்ஙனம: கவயத்தில் கோவின் பேதததோடுகூடிய சமான அவயவம் கவயத்திலுளது. அதுவே கோவின சாதிருசியமாம. கோவின் சமான தாமம கோவிலுளது; பேதமில்லை. கோவின்பேதம் அசுவத்திலுளது; சமான தாமமின்று. ஆதலால் சாதிருசியமில்லை. சந்திரனது பேதத்தோடுகூடிய சநதோஷததை யுண்டுபண்ணுந் தன்மை வடிவினதாகிய சமான தாமம் முகத்திலுளது. அதுவே முகத்தில் சநதிரனது சாதிருசியமாம. இவ்வாறுன் உவமான உவமேயங்களின் பேதத்தோடுகூடிய சமான தாமமே சாதிருசிய பதத்தின்

பொருளாம். சிலா சாதிருசிய மென்பது ஓர் பின்ன பதார்த்தம்; அது உவமான உவமேயங்களி லுள்ளது. உவமான உவமேயங்களி னது நிரணயிக்கப்பட்ட தர்மங்களினவேறுமெனக் கூறுகின்றனர். அது நலமுடையதன்று. ஏனெனின், யாண்டு இரண்டு பதார்த்தங் களின் சமானதாமம் அற்பமுளதோ, ஆண்டு அபகிருஷ்ட (தாழ்ந்த) சாதிருசியமெனப் படுகின்றது. சமான தாமம அதிகமுள்ள விடத்து உத்கிருஷ்ட (உயர்ந்த) சாதிருசியமெனப் படுகின்றது. இவ்வாற்றான் சமான தாமததின் மிகுதி குறைவுகளாற் சாதிருசியத்தில உத்காஷ அபகாஷங் (உயாவு தாழ்வு)க ளுண்டாகின்றன. நிரணயிககப்பட்ட தர்மங்களின வேறான சாதிருசியமுளா தாயின், பிராஹ்மணத் தன்மை முதலிய ஜாதியைப்போல அகண்டமாகும; அதனிடத்து உத்கர்ஷ அபகாஷங்கள் பொருநதா. ஆகலின சமானதாமம் சாதிருசியமா மென்னும உதயநாசாரியர்மதம் சிததாநததத்தில் அங்கீகரிக்கத்தக்கதாம.

## ௬௭. கரணத்தினது இலக்ஷணத்தின் நிர்ணயம்.

ஆனல் உவமிதிசத்ததததின் பரிபாஷைக்கு நியாயமததததிலும் அத்வைதமததததிலும பேதமுளது. உவமானசததததின் பொருள் இரண்டு மதததிலும பின்னமன்று. ஏனெனின் உவமிதியின் கரணம உவமான மெனப்படும. நியாயமதததில் கவயபததததின் வாச்சியத்தன்மை யுணாசசி உவமிதிபதததின் பாரிபாஷிகப்பொரு ளாம். அதனகரணம் வாககியாாததாநுபவம, அலலது சாதிருசிய விசிஷ்டபிண்டப் பிரததியக்ஷமாம. அதவைத மதததில் சாதிரு சியஞான ஜநநிய ஞானமும, வைதாமிய ஞான ஜநநிய ஞான மும உவமிதிபதததின பாரிபாஷிகப பொருளாம். அதன்கரணம் சாதிருசிய ஞானமும வைதாமிய ஞானமு மாம. இவ்வாற்றான் உவமிதி சத்தத்திற்குப் பரிபாஷையில் பேதமுண்டு. அதன் வேறுபாட் டால் உவமானததின் பேதம சிதத மாகின்றது. உவமான பதம் பாரிபாஷிக மன்று; ஆனல் யௌகிகமாம. வியாகரணத்தின்படி ஒருபதம அவயவப்பொருளை விடுகிறதிலலையோ, அது யௌகிகபத மெனப் படுகின்றது. ஈண்டு வியாகரணத்தின்படி உவமிதியின் கர ணம் உவமானபதததினது அவயவங்களின் பொருளாம. உவமான த்தால் உவமிதியின் உற்பத்தியில் வியாபாரமிலலை. ஆதலால் வியாபாரமுடைய காரணமே கரணமா மென்னும நியம மில்லை.

ஆனால் நிர்வியாபார காரணமும் கரணமாகின்றது. நியாயமத நிரூபணத்தின பிரசங்கத்தில் வியாபாரமுடைய அசாதாரண காரணத்திற்கே கரணத்தன்மை சொல்லப்பட்டிருக்கிற தாகலின், நிர்வியாபார காரணத்தில கரணததன்மை சம்பவியாது. என்றாலும சித்தாந்தமதததில் வியாபாரததிற்கு வேறான அசாதாரண காரணத்திற்குக் கரணத்தன்மை சொல்லுதல வேண்டும. வியாபாரமுடைய அசாதாரண காரணததிற்கே கரணத்தன்மை யிலலை. எங்ஙனம் வியாபாரமுடையதென்று சொல்லுவதனால் வியாபாரததில் கரணலக்ஷணம் செல்லாதோ, அங்ஙனமே வியாபாரததிறகு வேறானதென்று சொல்லுதலாலும வியாபாரத்தில் கரணலக்ஷணமசெல்லாது. ஏனெனின், எஙஙனம வியாபாரததில் வியாபாரமுடைமை யில்லையோ, அங்ஙனமே வியாபாரததின்வேறுதற்றன்மையுமவியாபாரததிலில்லை. இவ்வாறான் வியாபாரததின் வேறாய அசாதாரண காரணம் கரணமெனபபடும. அது வியாபாரமின்றிய தாகுக, அல்லது வியாபாரமுடைய தாகுக பிரத்தியக்ஷம அநுமானம சத்தம என்னும மூன்றுமோ பிரததியக்ஷப்பிரமை அநுமிதிப்பிரமை சாப்திப்பிரமைகளின் வியாபாரமுடைய காரணமாம. உவமானம் அர்த்தாபத்தி அநுபலபதி யென்னும மூன்றும உவமிதி முதலிய பிரமையின் நிர்வியாபார காரணமாம. ஆதலால் சித்தாந்தத்தின்படி கரணலக்ஷணததில் வியாபாரமுடைய தென்னும பதமுள்ள இடத்தில் வியாபாரத்திற்கு வேறானதென்று சொலலுதல் வேண்டும. நியாயமதத்திலோ கரணலக்ஷணத்திற்கு வியாபாரததில் அதிவியாப்தியை நீக்குதற பொருட்டு வியாபார முடைய தென்னும பதத்தினைச் சேர்க்க, அல்லது வியாபாரததின் வேறாகியதென்னும் பதத்தினைச் சேர்க்க. இருவகையானும கரணலக்ஷணம் சமபவிக்கும. ஏனெனின், நியாய மதத்தில் உவமிதிப் பிரமையின் கரணமாகிய உவமானப் பிரமாணத்தில் வாக்கியார்ததஸ்மிருதி வியாபாரமாம. இது நியாயாநுசாரமான உவமான நிரூபணததில் முன் சொல்லப்பட்டது. ஆதலால் உவமிதியின் காரணமாகிய உவமானத்தில் வியாபாரமுடையதெனக் கூறினும் கரண லக்ஷணத்தின் அதி வியாப்தியில்லை. அர்த்தாபத்தியை அநுமானததி லடங்கியதாக நையாயிகர் அங்கீகரிததிருக்கின்றனர். ஆதலால அர்த்தாபத்தியில் பிரமையின் கரணத்தன்மை வடிவினதாகிய பிரமாணத் தன்மையை அங்கீகரியாமையால் அதில கரணததன்மை வியவகாரத்தின்

அபேக்ஷையில்லை. அங்ஙனமே அபாவத்தின் பிரமையில் அநுப லப்தியைச்சககாரி(துணைக்)காரணமென்றே மதித்திருக்கின்றனர். பிரமைக்கரண வடிவினதாகிய பிரமாணத் தன்மையை அநுபலப்தி க்கு நையாயிகா அங்கீகரிப்பதில்லை. ஆனால் அபாவப் பிரமையில் அநுபலப்தியோடு கூடிய இந்திரிய முதலியவற்றிற்கே பிரமாணத் தன்மையை யங்கீகரிக்கின்றனா. ஆதலால் அநுபலப்தியினும் பிரமைக்கரணத்தன்மை வடிவினதாகிய பிரமாணத தன்மையின் அங்கீகார மின்மையால் கரணத தன்மை வியவகாரததின் அபே க்ஷையில்லை. ஈண்டு இது நிசசயம:—அாத்தாபத்திஅநுபலப்திகளில் கரணததன்மை வியவகாரததில் இஷடமுளதாக, கரணததின் இல க்கணம் இல்லையாயின், கரண லக்ஷணத்தில் அவ்வியாப்தி தோஷ முண்டாம. அாத்தாபத்தி அநுபலபதிகளில் பிரமாணத்தன்மை யுளதேல் கரணத்தன்மையின அபேக்ஷ அவசியமுண்டாம். ஏனெனின், பிரமையின் கரணத்தைப பிரமாணமென்பா. ஆத லால் பிரமாணத தன்மையில கரணததன்மையின் பிரவேச மிருதத லின், கரணத தன்மையின்றிப பிரமாணத தனமை சம்பவியாது. நியாய மததகில் அாததாபததி அநுபலப்திகளில் அநதப் பிரமா ணத் தன்மையின் அங்கீகார மின்மையால இரண்டினும கரணத் தன்மை வியவகாரம அபேக்ஷிக்கப படுவதின்று. இவ்வாற்றான் கரணத்தன்மை யின்றிய அர்ததாபததி, அநுபலபதிகளில் கரண லக்ஷண மின்மையால் அவ்வியாப்தி தோஷ முண்டாகிறதில்லை. இவ்வாற்றான் நியாயமததகில வியாபாரமுடைய அசாதாரண கார ணம் கரணமெனக் கூறினும அவ்வியாப்தியிலலை. சித்தாந்தத்திலோ வியாபாரமுடையதாகக் கூறின் உவமான முதலிய மூன்று பிர மாணங்களினும கரண லக்ஷணததின் அவ்வியாப்தி யுண்டாகின் றது. ஏனெனின், சிததாநத மதத்தில் இந்திரிய சம்பநத முடைய கவயத்தில் கோவின் பிரததியக்ஷ வடிவினதாகிய சாதிருசிய (ஒப் புமை) ஞானம் உவமானப் பிரமாணமாம. மறைபட்டுள்ள (தூரத் துள்ள) கோவில் கவயத்தின் சாதிருசிய ஞானம் உவமிதிப் பிரமை யாம. அங்ஙனமே இந்திரிய சமபநத முடைய பசுவினுண்டாம் மறைபட்டுள்ள பசுவின் வைதர்மிய ஞானமோ உவமானப் பிர மாணமாம். மறைபட்டுளள பசுவினுண்டாம இந்திரிய சம்பந்த முடைய பசுவின் வைதர்மிய ஞானம உவமிதிப் பிரமையாம். இவ் வாறு உவமானத்தால் உவமிதியின் உற்பத்தியில் ஓர் வியாபார

மும் சம்பவிக்கிறதில்லை. உவமிதிப் பிரமையின் கரணத்தை உவமானப் பிரமாண மென்பர். ஆதலால் உவமானப் பிரமாணத்திற் கரணத் தன்மை வியவகாரம் இஷ்டமாம். அங்ஙனமே அர்த்தாபத்தி அநுபலப்திகளிலும் பிரமாணத் தன்மையைக் கூறுவாம். ஆகலின் கரணத்தன்மை வியவகாரம் இஷ்டமாம்; வியாபாரத்தின் சம்பவமின்று. அதனால் உவமான அர்த்தாபத்தி அநுபலப்திகளில் கரண லக்ஷணத்தின் அவ்வியாப்தி யுண்டாகும். ஆதலால் கரணத்தின் இலக்கணத்தில் சித்தாந்தத்தின்படி வியாபாரமுடையதென்னும பதத்தை விட்டு, வியாபாரத்தின் வேறுய வெனக் கூறவேண்டும். வேதாந்த பரிபாஷை யென்னும் நூலில் தர்மராஜர் வியாபாரமுடையஅசாதாரண(சிறப்புக்)காரணமென்றுகரணலக்ஷணம் கூறியிருக்கின்றார். அன்றியும் பிரமையின் கரணம் பிரமாணமென்று பிரமாணத்தின் இலக்ஷணம் கூறி யிருக்கின்றார். தர்மராஜருடைய புத்திரர வேதாந்த பரிபாஷையின் உரையில் இங்ஙனம் கூறி யிருக்கின்றார்:—உவமிதியின் அசாதாரண காரணம் உவமானம. அது வியாபார மின்றியதாம. அங்ஙனமே அர்த்தாபத்தி அநுபலபதிகளும வியாபாரமின்றிய காரணங்களா மாகலின், உவமான முதலிய மூன்றி னிலக்ஷணத்தில் வியாபாரத்தின் பிரவேசமில்லை. உவமிதிப் பிரமையின் வியாபாரமுடைய அசாதாரண காரணம உவமானமாம். உபபாதகத்தினது பிரமையின் வியாபாரமுடைய அசாதாரண காரணம அர்த்தாபத்திப் பிரமாணமாம். அபாவப் பிரமையின் வியாபார முடைய அசாதாரண காரணம் அநுபலப்திப் பிரமாணமாமென் றிவ்வாறு உவமான முதலிய மூன்றற்கும் வியாபார முடையதென்னும் பதம் பொருந்தியதாக இலக்ஷணத்தைச செய்யின், மூன்றற்கும வியாபார முடைமையின்மையால், உவமான முதலியவற்றின் விசேஷ லக்ஷணம் சம்பவியாததாகும். ஆகலின் வியாபார முடையதென்னும பதமின்றியது விசேஷ லக்ஷணமாம். உவமிதிப பிரமையின் அசாதாரணகாரணம் உவமான மெனப்படும. இவ்வாறே அர்த்தாபத்தி அநுபலப்தியின் இலக்ஷணத்திலும் வியாபாரமுடையதெனக் கூறலாகாது.ஆதலால் அசமபவமின்று. இவ்வாறு தர்மராஜர் புத்திரர் உவமானப் பிரமாண முதலியவற்றின் விசேஷ லக்ஷணமோ பொருநதும் வண்ணம் கூறுகின்றார். எந்தக் கரணலக்ஷணமும அங்ஙனமே பிரமாணத்தின் சாமானிய லக்ஷணமும் மூலகாரரால் (தர்மராஜரால்) முன்

கூறப்பட்டனவோ அவற்றின்கண் ஓர் வேற்றுமையுங் கூறினு ரில்லை. ஆகலின், அவர் புத்திரா கூற்றிற் குறையுளது. ஏனெனின், கரண இலக்கணததில் விசேடத்தைக் கூறினல்லால் வியாபார முடைமையின் அபாவத்தால், உவமிதியின் கரணம் உவமானம், அர்த்தாபத்திப் பிரமையின் கரணம அர்த்தாபத்தி, அபாவப் பிர மையின் கரணம அநுபலப்தி என்னும விவகாரம் உண்டாகலா காது. அங்ஙனமே கரணத் தன்மையின் அபாவத்தால் உவமான முதலியவற்றில் பிரமாணத்தனமை விவகாரமு முண்டாகலாகாது. ஆகலின், மூலகாரரது கரண இலக்கணததில வியாபார முடையது என்னும பதத்திற்கு வியாபார பின்னமென் றுரைசெய்வதில் சாவ இஷ்ட சிததியு முணடாகிறது. ஆகலின் மூலகாரரது கரண இலக்கணததில் வியாபாரமுடையது என்னும பததததிற்கு வேறு பொருள் செய்யாமையின் புத்திரா கூற்றிற் குறை யுளது. நமது கிரமமாகவோ வியாபார மின்றிய உவமான முதலியவற்றினும உவமிதி முதலிய பிரமைகளின் கரணததன்மை சமபவிககின்றது. இவ்வாறமுன் பிரபஞசததில் பிரஹ்மத்தின் விதர்மத் தன்மையின் (வேற்றியல்பதாந தன்மையின்) ஞானம் உபமானமாம. பிரபஞ்ச த்தினும் விதர்மம் (வேற்றியல்புடையது) பிரஹ்மமா மென்பது உவமானப் பிரமாணத்தின் பயனாகிய உவமிதி ஞானமாம்.

நான்காவது பிரகாசம்
உவமானப்பிரமாண நிருபணம்
முடிந்தது.

---

ஓம தத்ஸத் ப்ரஹ்மணே நமஃ.

# ஐந்தாவதுபிரகாசம்.

# அர்த்தாபத்திப் பிரமாணம்.

---

## ரு அ. நியாயமதத்தில் அர்த்தாபத்தியின் அங்கீகார மின்மையும், மூவகைஅனுமானங்களின் வர்ணனமும்.

நையாயிகமதத்தில் முற்கூறிய நான்குமே பிரமாணங்களாம். வெதி ரேகியநுமானத்தில் அாததாபத்திப்பிரமாணம்அடங்கும் சித்தாந்த த்தில் கேவல வெதிரேகியநுமானம் அங்கீகரிக்கபபடவில்லை யாக

லின், அர்த்தாபத்தி வேறு பிரமாணமாம். கேவல வெதிரேகி அநுமானத்தின் பிரயோஜனம் அர்த்தாபத்தியாற் பெறப்படுகின்றது. எதில்அந்நுவயிவியாப்திக்குஉதாரணங்கிடைக்காது சாத்தியாபாவத்தில் ஹேதுவபாவத்தினது வியாபதியின் உதாரணம் கிடைக்கின்றதோ, அது கேவல வெதிரேகி யநுமான மெனப்படும். எங்ஙனம்:— பிருதிவி பிறவற்றின் வேறு; கந்தமுடைமையான் என்னுமிடத்து யாண்டுக் கந்த முடைமையுண்டோ, ஆண்டுப் பிறவற்றின் வேறுதற்றன்மை யுண்டு என்னும் அந்நுவய வியாப்திக்கு உதாரண மில்லை. ஏனெனின் பக்ஷத்தின் வேறுனது திருஷ்டாந்தமாம். ஈண்டுப் பிருதிவிமுழுவதும் பக்ஷமாம.அதனின்வேறுயஜலமுதலியவற்றில் பிறவற்றினவேறுதலும் கந்தமுமில்லை. ஆதலால் இது கேவல வெதிரேகி யநுமானமாம. யாண்டுப் பிறவற்றின் வேறுத லின்மை யுளதோ, ஆண்டுக் கந்தமின்மையுளது, ஜலத்திறபோல என்றிவ்வாறு சாத்தியா பாவத்தில் ஹேதுவின்மையின் வியாப்தி ஞானத்திற்கேதுவாகிய உடனிகழ்ச்சி யுணாவு யாதோ,அது ஜலமுதலியவற்றிலுளதாம். ஆகலின் ஜலமுதலியன உதாரணமாம். வியாப்திஞானத்திற் கேதுவாகிய உடனிகழ்ச்சி யுணாவு எதிலுளதோ, அது உதாரணமெனப்படும. அந்நுவயி அநுமானத்தில எங்ஙனம் வியாப்பிய வியாபகத்தன்மையுளதோ, அங்ஙனமே அதனின் விபரீதம (மாறுபட்டது)வெதிரேகியிலுளதாம். அநநுவயியில் ஹேது வியாப்பியமும்,சாத்தியம் வியாபகமுமாம. வெதிரேகியில் சாததியாபாவம் வியாப்பியமும, ஏதுவின் அபாவம வியாபகமுமாம. ஆனல் ஈண்டு நையாயிகர்களின் இரண்டு மத முண்டு. சாத்தியா பாவததில் ஏதுவபாவத்தின் உடனிகழ்சசிக காடசியுண்டாகின்றது. ஆனல் ஹேது அபாவததின் வியாப்தியின் ஞானமும் சாத்தியாபாவததிலுண்டாகின்றது. இப்பக்ஷத்தில் சிலநையாயிகர் ஸித்தோஷங் கூறுகின்றனர்:— எந்த பபதார்த்தததில் 'ஏதனது வியாப்தியின் ஞானமுளதோ அப்பதாாததமாகிய ஏதுவிஞல அசசாததியத்தின் அநுமிதி யுண்டாகின்றது. எப்பதார்த்தங்களுக் கொன்றற்கொன்று வியாப்பிய வியாபகத்தன்மை யறியப்படவில்லையோ, அவற்றிற் கொன்றற் கொன்று ஏது சாத்தியத் தன்மைகள் பொருநதா. பிறவற்றின் வேறுத லின்மை கந்த மின்மைகளுக்கு வியாப்பிய வியாபகத்தன்மைகளும், கந்தம் பிறவற்றின் வேறுதலென்பவற்றிற்கு ஏது சாத்தியத்தன்மைகளும கூறுதல் ஆச்சரியத்தை

யுண்டுபண்ணுவதாம். ஆதலால் சாத்தியாபாவ ஏதுஅபாவங்களின் உடனிகழ்சசி யுணாவினுலும ஏதுவில் சாத்தியத்தின் வியாப்தி ஞான முண்டாகின்றது. அநநுவயி வெதிரேகி யநுமானங்களுக்கு இத்துணையே பேதமாம்:— யாண்டு ஏது சாத்தியங்களின் உடனிகழ்ச்சி யுணாவினுல ஏதுவில் வியாப்தியின் ஞானமுண்டாகின்றதோ, அது அந்நுவயி யநுமான மெனப்படும். யாண்டுச் சாத்தியாபாவத்தில ஏதுஅபாவததின் உடனிகழ்சசி யுணர்வால் ஏதுவில் சாத்தியத்தின வியாப்தி ஞான் முண்டாகின்றதோ, அது வெதிரேகியநுமான மெனப்படும. சாததி யாபாவததில் ஏதுவபாவததின் வியாப்திஞானம ஓரிடத்து முண்டாகிறதில்லை. யாண்டுச சாத்தியாபாவத்தில ஏதுஅபாவததின வியாப்தி ஞானமுண்டாய் விடுகின்றதோ, ஆண்டுச சாததியாபாவத்தால் ஏது அபாவததின் அநுமிதியே யுண்டாகினறது. ஏதுவால் சாததியத்தின் அநுமிதி யுண்டாகிறதிலலை. ஏனெனின் வியாப்பிய ஞானததால் வியாப்பியததின் அநுமிதி யுண்டாமெனபது நியமம். முதறபக்ஷம் பிராசீனரது; இரண்டாம பக்ஷம நவீனரது. அநுமானப் பிரகரணத்தில் நியாய நூலைப படிததலின்றிப் புத்தியின் பிரவேசம உண்டாகாதாகலின் அநுமானததின் சில பொருளை யாம விஸதாரமாக எழுதவில்லை. இவ்வாறு கேவல வெதிரேகியநுமானத்திறகு உதாரணமுளது. யாண்டுச சாத்தியாபாவ ஹேது அபாவங்களின் உடனிகழ்சசிககு உதாரணம் கிடைக்கவில்லையோ, அது கேவலாந்நுவயி அநுமானமெனப்படும. எங்ஙனம:—கடம பதசகதியுடையது (சொல்லாற்றலுடையது); ஞேயத்தன்மையால்; படமபோல. ஈண்டுச் சாத்தியாபாவ ஏதுஅபாவங்களின் உடனிகழ்சசி ஓரிடத்தும்கிடைப்பதில்லை. நியாயமதத்தில் ஞேயத்தன்மையும பதசக்தியும் எல்லாவற்றின் கண்ணுமுள. ஆகலின் அபாவங்களின் உடனிகழ்சசிக்கு உதாரணம் கிடைக்கவில்லை. யாண்டு இரண்டற்கும உதாரணம் கிடைக்கின்றதோ, அது அந்நுவயவெதிரேகியநுமானமெனபபடும. இவ்வாறு பிரசித்தஅநுமானமுளது. பாவதம வன்னியுடைதது என்பதைப் பிரசித்தநுமான மென்பா. ஈண்டு அந்நுவயததின் உடனிகழ்சசிக் குதாரணம அடுக்களை, வெதிரேகததின் உடனிகழ்சசிக்கு உதாரணம் மடு. இவ்வாறு மூவகையநுமானம் நையாயிகர் கூறுவா.

---

### ௫௬. வேதாந்தத்தின்படி ஒரே அந்நுவயி (அந்நுவயி வெதிரேகி) அநுமானமும், அர்த்தாபத்தியைக் கொள்ளுதலும்

வேதாந்தமதத்தில் கேவல வெதிரேகியின் பிரயோஜனம் அர்த்தாபத்தியினு லுண்டாகின்றது. பிறவற்றின் வேறுதலின்றிக் கந்தமுடைமை சம்பவியாது. ஆதலால் கந்த முடைமையின் அநுபபத்தி (சமபவமின்மை) பிறவற்றின் வேறுதலைக் கற்பிக்கின்றது. இவ்வாற்ருன் அர்த்தாபத்திப பிரமாணத்தால் கேவல வெதிரேகி பொருளின்றியதாம. கேவலாநுவயி அநுமான மென்பது ஒன் றில்லை. ஏனெனின், சகலபதாாத்தங்களும பிரஹ்மத்திலில்லை. ஆதலால வெதிரேகவுடனிகழ்சசிக்கு உதாரணம்பிரஹ்மததில் கிடைக் கின்றது. விருத்தி ஞானததிற்கு விடயமாநதன்மை வடிவினதாகிய ஞேயததன்மை பிரஹ்மத்தினகணுளது. உளதாகவே அதன் அபாவம் பிரஹ்மத்தின்கண் பொருந்தாது. என்றுலும் ஞேயத் தன்மை முதலியன மித்தையாம். மித்தையாகிய பொருளும் அதன் அபாவமும் ஒரு அதிஷ்டானத்தி லிருக்கும். ஆதலால் எதனை நையாயிகர் அநுவய வெதிரேகி யென்பரோ, அதுவே அந்நுவயி யென்னும் ஒருவகை யநுமானமாம. இது வேதாந்தமதம். இமமதத் தில் கேவல வெதிரேகி யநுமானத்தின் அங்கீகாரமில்லை; அர்த்தா பததிப பிரமாணம் அங்கீகாரமாம். விசாரிததுப்பார்க்கின் இரண் டனையும அங்கீகரிததல் வேண்டும. ஏனெனின், யாண்டு ஒரு பொருளினது ஞானத்தின் அநுவியவசாயம பின்னமாகின்றதோ, ஆண்டு அப்பொருளினது ஞானததின் பிரமாணம் பின்னமாகின் றது. வியவசாய ஞானததை யுண்டுபண்ணும் பிரமாணபேதமின்றி அநுவியவசாயத்தின் பேதமுண்டாகாது. ஓர் வன்னியின் பிரத்தி யக்ஷ ஞான முண்டாகுமாயின், அப்போது வன்னியைச் சாக்ஷாத் கரிக்கின்றேன் என்னும அநுவியவசாய முண்டாகின்றது. அநு மான ஜந்நியஞான முண்டாகுங் காலத்து, வன்னியை யநுமிக்கின் றேன் என்னும அநுவியவசாயம உண்டாகின்றது. சத்தததால் வன்னியின் ஞான முண்டாகுமிடத்து, வன்னியைச் சத்தததாலறி கின்றேன் என்னும அநுவியவசாய முண்டாகின்றது. சூரியனிடத் துள்ள வன்னியின் சாதிருசிய ஞானமாகிய உவமானப பிரமா ணத்தால் சூரியனையொதத வன்னியின் ஞான முண்டாகுமிடத்து,

சூரியனால் வன்னியை உவமிக்கின்றேனென்னும் அநுவியவசாய முண்டாகின்றது. ஞானத்தின் ஞானத்தை அநுவியவசாயமென்பர். அநுவியவசாயத்திற்கு விஷயமாகும் ஞானமெதுவோ, அது வியவசாய மெனப்படும். இவ்வாறு வியவசாய ஞானத்தை யுண்டுபண்ணும் பிரமாண பேதத்தால் அநுவியவசாயத்தின் பேத முண்டாகின்றது; ஒரு காலத்துக் கந்தத்தால் பிறவற்றின் வேறுதலைப் பிருதிவியின்கண் அநுமிக்கின்றேனென்று அநுவியவசாயமுண்டாகின்றது. ஒருகாலத்துக் கந்த அநுபபத்தியால் பிறவற்றின் வேறுதலைப் பிருவிதியிற் கற்பிக்கின்றேனென்று அநுவியவசாயமுண்டாகின்றது. யாண்டு அநுவியவசாயத்திற்கு விஷயமாகிய வியவசாயம் அநுமானப்பிரமாண ஜந்நியமாகின்றதோ, ஆண்டு, முதல் அநுவியவசாயம் உண்டாகின்றது. யாண்டு அநுவியவசாயத்திற்கு விஷயமாகிய வியவசாயம அர்த்தாபத்திப் பிரமாண ஜந்நியமாகின்றதோ, ஆண்டு இரண்டாவது அநுவியவசாயம் உண்டாகின்றது. இவ்வாறு அநுவியவசாயத்தின் பேதத்தால் வியவசாயம வேறுபடுதலின் வியவசாய ஞானத்தை யுண்டுபண்ணும அநுமானம அர்த்தாபத்தியென்னும இரண்டு மிருக்கின்றன. ஒன்றை யங்கீகரித்து மற்றொன்றை நிஷேதித்தல் பொருந்தாது. சப்தசக்திப் பிரகாசிகை முதலிய நூல்களில் அநுமானப் பிரமாணத்தால் சப்தப்பிரமாணத்தின் பேதம் அநுவியவசாயத்தின் பேதத்தானே பெறப்படுவதாக சசொல்லப்பட்டிருக்கின்றது. ஆதலால் பிரமாணபேதத்தின் சித்தியில் அநுவியவசாயத்தின் பேதம பிரபல ஏதுவாம. இவ்வாற்றான் அர்த்தாபத்தி கேவலவேதிரேகி யநுமானமென்னு மிரண்டனையும் அங்கீகரித்தல் வேண்டும். யாண்டு விஷயத்தின் பிரகாசம் ஒரு பிரமாணத்தாற் பெறப்படுகின்றதோ, ஆண்டு வேறு பிரமாணத்தின் நிஷேத முண்டாகிறதில்லை. கேவல வெதிரேகியின் சொரூபம் சுருக்கமாய்க் காட்டப்பட் டிருக்கின்றது.

## ௬௦. அர்த்தாபத்திப் பிரமாண பிரமைகளின் சொரூப பேதமும், உதாரணமும்.

அர்த்தாபத்தியின் சொரூபம் இதுவாம்:—பிரத்தியக்ஷ மென்னுஞ்சொல் பிரமாணத்தையும் பிரமையையும் அறிவிப்பதாதல் போல அர்த்தாபத்தி யென்னும் சொல்லும் பிரமாணமும் பிரமையுமாகிய இரண்டனையும் அறிவிப்பதாம. உபபாதக கற்பனைக்கு

ஏதுவாகிய உபபாத்திய ஞானத்தை அர்த்தாபத்திப் பிரமாணமென்பர். உபபாதக ஞானத்தை அர்த்தாபத்திப் பிரமை யென்பர். உபபாதகம் சம்பாதகம் (சம்பாதிப்பது) என்பன பரியாயச் சொற்கள். ஆதலால் விசாரசாகரத்தில் சம்பாதக ஞானத்தை அர்த்தாபத்தி யென்று கூறியிருக்கின்றது. அது விரோத மில்லை. எது இன்றி எது சம்பவியாதோ, அதற்கு அது * உபபாத்தியமெனப்படும். அது இராப் போஜனமின்றிப் பகலுண்ணும் புருஷனிடத்து ஸ்தூலத்தன்மை சம்பவியாதாகலின், இராப் போஜனத்திற்கு ஸ்தூலத்தன்மை உபபாத்தியமாதலாம். எதன் அபாவத்தால் எதன் அபாவ முண்டாகின்றதோ, அது அதற்கு உபபாதக மெனப்படும். அஃது, இராப்போஜனத்தின் அபாவத்தால் பகலுண்ணுதவனுக்கு ஸ்தூலத் தன்மையின் அபாவ முண்டாகின்றது, ஆதலால் இராத்திரி போஜனம் ஸ்தூலத் தன்மையின் உபபாதகமா மென்பது.

சங்கை:—இவ்வாற்றான் வியாபகத்திற்கு உபபாதகத் தன்மையும் வியாப்பியத்திற்கு உபபாத்தியத் தன்மையும் சித்தமாகின்றன. உபபாதக ஞானத்திற்கு ஏதுவாகிய உபபாத்திய ஞானம் அர்த்தாபத்திப் பிரமாணமாம். இங்ஙனம் கூறுவதால் வியாபகஞானத்திற்கு ஏதுவாகிய வியாப்பிய ஞானம் அர்த்தாபத்திப் பிரமாணமென்பது பெறப்படுகின்றது. இத்தன்மையது அநுமானப் பிரமாணமாம். அர்த்தாபத்திப் பிரமாணத்திற்கு அநுமானப் பிரமாணத்தினும் பேதம் தோற்றவில்லை.

உத்தரம்:—தூலத்தன்மை இராப் போஜனத்தின் வியாப்பியமாம், தூலத்தன்மை யுடையவன் தேவதத்தன் என்னும் இரண்டு ஞானமுமுண்டாய் யாண்டு இராப் போஜனத்தின் ஞானமுண்டாகின்றதோ, ஆண்டு அது அநுமிதி ஞானமாம்; பகலுண்ணுத புருஷனிடத்து இராத்திரி போஜனமின்றி ஸ்தூலத்தன்மை சம்பவியாதென்னும் ஞானத்திற்குப் பின்னுண்டாகும் இராத்திரி போஜனத்தின் ஞானம் அர்த்தாபத்திப் பிரமையாம். இக்காரணத்தானே முதற்கிரமப்படி இராத்திரி போஜனத்தினது ஞானத்தின் பின் தூலத்தன்மையினால் இராத்திரி போஜனத்தை அநுமிக்கின்றேன் என்னும் அநுவியவசாயமுண்டாகின்றது. இரண்டாவதுகிரமத்தின்

* உபாத்தியம் சம்பாத்தியம் (சம்பாதிக்கப்படுவது) என்பன ஒரு பொருட் சொற்கள்.

படி இராத்திரி போஜனத்தின் ஞானத்திற்குப்பின் தூலத்தன்மை சம்பவியாமையால் இராப் போஜனத்தைக் கற்பிக்கின்றேன் என்னும் அநுவியவசாய முண்டாகின்றது. இவ்வாற்றான் உபபாத்திய அநுபபத்தி ஞானத்தால உபபாதகத்தைக்கற்பித்தல் அர்த்தாபத்திப் பிரமை யெனப்படும். உபபாதக கற்பனைக்கு ஏதுவாகிய உபபாத்தியத்தின் அநுபபத்திஞானம அர்த்தாபத்திப் பிரமாண மெனப்படும். அர்த்தமாவது உபபாதக வஸ்து; அதன் ஆபத்தியாவது கற்பனையா மென்னும அர்த்தத்தால் அர்த்தாபத்தி யென்னும் சொல பிரமையை யறிவிப்பதாகின்றது. ஆண்டு அர்த்தத்தினது ஆபத்தி என்னும * ஆறும வேற்றுமைத தொகையாம. அன்றியும அர்த்தத்தின் ஆபத்தியை யுண்டாக்குவதென்னும அன்மொழித் தொகையால் அர்த்தத்தின் கற்பனை எதனினின்றும் உண்டாகின்றதோ, அந்த உபபாத்தியத்தின் அநுபபத்தி ஞானமாகிய பிரமாணம அர்த்தாபத்தி சப்தத்தின் பொருளாம. அர்த்தாபத்தி இருவகையாம:—ஒன்று திருஷ்டார்த்தாபத்தி (கண்டவருத்தாபத்தி), மற்றொன்று சுருதார்த்தாபத்தி (கேள்வி யருத்தாபத்தி). யாண்டுத் திருஷ்டஉபபாத்தியத்தின்அநுபபத்தி ஞானத்தால்உபபாதகத்தின் கற்பனை யுண்டாகின்றதோ, ஆண்டுத் திருஷ்டார்த்தாபத்தி சொல்லப்படுகின்றது. எங்ஙனம:—பகலுண்ணாதவனது தூலத்தில் உண்டாகும இராத்திரி போஜனத்தின் ஞானம திருஷ்டார்த்தா பத்தியாம; உபபாத்தியமாகிய தூலத்தன்மை திருஷ்டமாகலின் யாண்டுச் சுருத உபபாத்தியத்தின் அநுபபத்தியின் ஞானத்தால் உபபாதகத்தின கற்பனையுண்டாகின்றதோ, ஆண்டுச் சுருதார்த்தாபத்தி யெனப்படுகின்றது. எங்ஙனம:— வீட்டி லில்லாத தேவதத்தன் ஜீவிக்கின்றான என்னும வாக்கியத்தைக் கேட்டு, வீட்டிற்கு வெளியிடத்தில தேவதத்தனது இருப்பின்றி வீட்டிலில்லாத தேவதத்தனது ஜீவனம பொருந்தாது. ஆதலால் வீட்டிலில்லாத தேவதத்தனது ஜீவனம சம்பவியாமையால வீட்டிற்குப் புறமபே தேவதத்தனது இருப்புக கற்பிக்கப்படுகின்றது. ஆண்டு வீட்டிலில்லாத தேவதத்தனது ஜீவனம திருஷ்டமன்று; சுருதமாம. சுருத அர்த்தத்தின் அநுபபத்தியினால உண்டாகும உபபாதகத்தின் கற்பனை சுருதார்த்தாபத்திப் பிரமை யெனப்படுகின்றது. அதற்கு ஏதுவாகிய

---

* ஈண்டு அர்த்தாபத்தி யென்னும் சொல் ஆறும் வேற்றுமைத்தொகையால் பிரமையையும் அன்மொழித்தொகையால் பிரமாணத்தையும் உணர்த்துவதைக் காட்டுகின்றார்.

சுருதார்த்தத்தின் அநுபபத்தி ஞானம் சுருதார்த்தாபத்திப் பிரமாண
மெனப்படும். ஈண்டு வீட்டிலில்லாத தேவதத்தனது ஜீவனம் உப
பாத்தியமாம், வீட்டிற்குப் புறம்பிலிருத்தல் உபபாதகமாம். அபி
தாநா நுபபத்தி அபிஹிதா நுபபத்தி யென்னும் வேறுபாட்டால்
சுருதார்த்தாபத்தி இருவகைப்படும். 'துவாரம் (வாயில்)' அல்லது
'மூடு' என்றல் முதலிய விடங்களில் யாண்டு வாக்கியத்தின் ஏக
தேசம் உசசரிக்கப்படடு, ஏகதேச முச்சரிக்கப் படவில்லையோ,
ஆண்டுச் சுருத பதத்தினது அர்த்ததின் 'அந்நுவயத்திற்குரிய
அர்த்தத்தின் அத்தியாகார முண்டாகின்றது. அல்லது அந்நுவய
த்திற்குரிய அர்த்தத்தை யறிவிக்கும் பத மெதுவோ, அதன்
அத்தியாகார முண்டாகின்றது. இவற்றையே கிரமமாக அர்த்தாத்தி
யாகார வாதம் சப்தாத்தியாகார வாதமென்று நூல்களில் கூறுவர்.
ஆனால் அர்த்தாத் தியாகாரததின் ஞானம் அல்லது பதாத்தியா
காரத்தின் ஞானம் அநநியப பிரமாணத்தாற் சம்பவியாது; அர்
த்தாபததிப பிரமாணத்தின லுண்டாகின்றது. ஈண்டு அபிதானநுப
பத்தி வடிவினதாகிய சுருதார்த்தா பத்தியுளது. ஏனெனின், அந்நுவய
போதமாகிய பயனையுடைய சத்தப் பிரயோகத்தை அபிதானமென்
பர். துவாரமென்றல் முதலிய சப்தப் பிரயோகமாகிய அபிதானத்
திற்கு மூடுதலாகிய அாத்தத்தின் அல்லது மூடுஎன்னும் பதத்தின்
அத்தியாகாரமின்றி அநுபபத்தி (சமபவியாமை) யுளது. அல்லது
இந்த இடத்தில் ஒரு பதாாத்ததிறகு இஷ்டமான வேறு பதார்
த்தத்திலுள்ள அநநுவயபோதத்தில் சொல்லுவோனுக்குள்ள தாற்
பரியம அபிதானமென்னும் சொல்லிறகுப பொருளாம்.துவாரமெ
ன்னுமித்துணையேகூறின் ஆண்டுத்துவாரத்தின் செயப்படுபொருண்
மையை நிரூபிக்குந தன்மைச சமபநதத்தால் மூடுதலந்நுவயபோதம்
கேட்பவனுக் குண்டாக வேண்டுமென்று சொல்லுவான் கருத்
தாகிய அபிதான மிருக்கின்றது. 'மூடு என்னும் இத்துணையே கூறின்,
ஆண்டும முற்கூறிய சொல்லுவான் கருததாகிய அபிதான மிருக்
கின்றது. சொல்லுவான் கருத்தாகிய அபிதானத்தின் அத்தியா
காரமின்றி அநுபபததி யிருக்கின்றதாகலின் அபிதாநாநுபபத்தி
யெனப்படுகின்றது. ஈண்டு அாததததின் அத்தியாகாரம் அல்லது
சத்தத்தின் அததியாகாரம் உபபாதகமாம். போதமாகிய பயனை
யுடைய சத்தப் பிரயோகம் உபபாததியமாம், அல்லது முற்கூறிய
தாற்பரியம உபபாத்தியமாம். போதமாகிய பயனையுடைய சத்தப்
பிரயோக 'மென்னும் உபபாத்தியத்தின் அநுபபத்தியினால் அல்

லது தாற்பரியமாகிய உபபாத்தியத்தின் அநுபபத்தியினால் அர்த்தம் அல்லது சத்தமாகிய உபபாதகத்தின் கற்பனை யிருக்கின்றது. ஆதலால் அத்தியாகாரரு செய்யப்பட்ட அர்த்தத்தின் அல்லது சத்தத்தின் அபிதானுநுபபத்தியாகிய அர்த்தாபத்திப் பிரமாணத்தால் போத முண்டாகின்றது. யாண்டு முழுவாக்கியத்தின் அர்த்தமும் வேறு அர்த்தத்தைக் கற்பித்தலின்றி யநுபபன்னமா (பொருந்தாதது) கின்றதோ, ஆண்டு அபிகிதாநுபபத்தியாகிய சுருதார்த்தாபத்தி யுளது. எங்ஙனம்:—சுவர்க்ககாமன் யஜிக்கக்கடவன் என்னும் வாக்கியத்தின் அர்த்தம் அபூர்வ கற்பனை யின்றி அநுபபன்னமாம். ஆதலால் அபிகிதாநுபபத்தியாகிய சுருதார்த்தாபத்தி யுளது. ஈண்டு யாகத்திற்குச் சுவர்க்க சாதனத்தன்மை உபபாத்தியமாம். அதன் அநுபபத்தியால் உபபாதகம் அபூர்வத்தின் கற்பனையாம். சுவர்க்க சாதனத்தன்மை திருஷ்டமன்று; ஆனால் சுருதமாம். ஆதலால் சுருதார்த்தா பத்தியாம்.

## ௬௧. அர்த்தாபத்தியின் ஜிஞ்ஞாசுவுக் கநுகூலமான உதாரணம்.

சுருதார்த்தா பத்தியின் ஜிஞ்ஞாசுவுக் கநுகூலமான உதாரணம், ஆத்மாவை யறிந்தவன் சோகத்தைக் கடக்கின்றா னென்பதாம். ஈண்டு ஞானத்தாற் சோகம் நீங்குதல் சுருதமாம். அது சோகத்தின் மித்தியாத் தன்மையின்றிச் சம்பவியாததாயிருத்தலின், ஞானத்தாற் சோகத்தின் நிவிருத்தி சம்பவியாமையால பந்தத்தினது மித்தியாத்தன்மையின்கற்பனையுண்டாகின்றது. பந்தமித்தியாத்துவம உபபாதகமாம்; ஞானத்தால் சோகநிவிருத்தி உபபாத்தியமாம். அது திருஷ்டமன்று; ஆனால் சுருதமாம். ஆதலால் சுருதார்த்தா பத்தியாம். அங்ஙனமே மகா வாக்கியங்களில் ஜீவப் பிரஹ்மங்களின் அபேதம் கேட்கப்படுகின்றது. அது உபாதியினாலாகிய பேதமாயின் கூடும்; சொரூபமாகப் பேதமாயின் கூடாது. ஆதலால் ஜீவப் பிரஹ்மங்களின் அபேதம சம்பவியாமையூால் பேதத்தின் ஔபாதிகத்தன்மை (உபாதியினாலாந தன்மை) யுணர்ச்சி அர்த்தாபத்திப் பிரமாண ஜந்நியமாம. ஈண்டு ஜீவப் பிரஹ்மங்களின்அபேதம் உபபாத்தியமாம். பேதத்தில் ஔபாதிகத்தன்மை உபபாதகமாம். எல்லா உபபாத்திய ஞானமும பிரமாணமாம. உபபாதக ஞானம் பிரமையாம. ஈண்டு ஜீவப்பிரஹ்மங்களின் அபேதம வித்துவான்களுக்குத் திருஷ்டமாம். அ

.நியர்களுக்குச் சுருதமாம். ஆதலால் இது திருஷ்டார்த்தாபத்தி சுருதார்த்தா பத்தி யென்னும் இரண்டற்கும் உதாரணமாம். யாண்டு வாக்கியத்தில் பதத்தின் அல்லது அர்த்தத்தின் அத்தியா கார மில்லையோ, அநந்யார்த்தத்தின் கற்பனையின்றி வாக்கியார்த்தத்தின் அநுபபத்தி யிருக்கின்றதோ (வாக்கியார்த்தம் சம்பவிக்கவில்லையோ), ஆண்டு அபிகிதாநுபபத்தியாகிய சுருதார்த்தாபத்தி யுண்டாகின்றது. ஆதலால் துவாரம் என்னும் ஒரு உதாரணத்தை விட அபிகிதாநுபபத்தியாகிய சுருதார்த்தாநுபபத்தியின் உதாரணமு முளது. அங்ஙனமே வெள்ளியின் அதிகரணமாகிய சுத்தியில் வெள்ளியின நிஷேதம் திருஷ்டமாம். அது வெள்ளியின் மித்தியாத தன்மையின்றிச் சம்பவியாதாகலின நிஷேதத்தின அநுபபத்தியால் இரஜதமித்தியாத தன்மையின கற்பனை யுண்டாகின்றது. இது திருஷ்டார்த்தாபத்திக்கு உதாரணமாம். ஈண்டு வெள்ளியின் நிஷேதம் உபபாத்தியமும், மித்தியாத்தன்மை உபபாதகமுமாம். மனதின் விலயத்திற்குப்பின் நிர்விகற்ப சமாதிகாலத்தில அத்விதீயப் பிரஹ்மமாத்திரம எஞ்சி நிற்க, சகல அநாத்ம வஸ்துக்களின் அபாவமு முண்டாகின்றது. அவ்வநாத்ம வஸ்து மானஸமாயின் மனதின் விலயத்தால் அதன் அபாவம் சம்பவிக்கும். மானஸமாகாவிடின் மனதின் இலயத்தால் அதன் அபாவ முண்டாகாது. ஏனெனின், ஒன்றின் விலயத்தால மற்றொன்றன் அபாவமுண்டாகாதாகலின் மனதினவிலயத்தால் சகலத் துவைதத்தின் அபாவமும சம்பவியாமையால சகல துவைதமும மனோமாத்திரமாமென்னும கற்பனை யுண்டாகின்றது. ஈண்டு மனதின் விலயத்தால் சகல துவைதத்தின விலயமும உபபாத்தியமாம். அதன் ஞானம அர்த்தாபத்திப் பிரமாணமாம. சகலத் துவைதத்திற்கும மானஸத்தன்மை உபபாதகமாம. அதன் ஞானம அர்த்தாபத்திப் பிரமையாம. ஈண்டு உபபாதகப பிரமையின் அசாதாரண காரணம அர்த்தாபத்திப் பிரமாணமாம. அது வியாபார மின்றியதாயிருக்கினும, அதனிடத்து உபபாதகப் பிரமையின் கரணத்தன்மை சம்பவிக்கின்றது. இது உவமான நிரூபணத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

ஐந்தாவது பிரகாசம்

அர்த்தாபத்திப் பிரமாண நிருபணம்

முடிந்தது.

ஓம்.

தத்ஸத் ப்ரஹ்மணே நம:.

# ஆறுவது பிரகாசம்

# அநுபலப்திப் பிரமாணம்.

## ௬௨. அபாவத்தின் சாமானிய லக்ஷணமும் பேதமும்.

அநுபலப்திப் பிரமாணத்தால் அபாவத்தின் பிரமை யுண்டாகின்றதாகலின், அபாவப் பிரமையின் அஸாதாரண காரணத்தை அநுபலப்திப்பிரமாணமென்பர். நியாய வேதாந்தங்களின் சமஸ்காரமினறியவர் அபாவத்தின சொரூபத்தை யறியாராகலின் முதலில் அபாவத்தின் சொரூபத்தைக் கூறுவாம். நிஷேதமுக ஞானத்திற்கு விஷயமாவது, அல்லது பிரதியோகியின் அபேக்ஷையோடு கூடிய ஞானத்திற்கு விஷயமாவது எதுவோ, அது அபாவமெனப்படும். முதலிலக்கணம் பிராசீனமதத்தது. நவீன மதத்தில் துவம்ஸமும் பிராக பாவமும் ந என்னும் சொல்லாற் றோன்றும ஞானத்திற்கு விஷயமாகா. இவ்வாறதும மேற்றெளிவாகும். இதனால இரண்டாவது இலக்கணம் சொல்லப்பட்டது. பிரதியோகியை விட்டு அபாவ ஞான முண்டாகாதாகலின், எல்லா அபாவங்களும் பிரதியோகியின் அபேக்ஷையோடு கூடிய ஞானத்திற்கு விஷயமாவனவாம். அபாவத்தைப்போலச் சம்பந்தமும் ஸாதிருசியமும் பிரதியோகியி னபேக்ஷயின்றிய ஞானத்திற்கு விஷயமாகாது பிரதியோகியின் அபேக்ஷையுடைய ஞானத்திற்கு விஷயமாம். அவற்றில் அபாவத்தி னிலக்கணம செல்லுகின்றது. என்றாலும சம்பந்த ஸாதிருசியங்களின்பிரதியோகித் தன்மையினும அபாவத்தின்பிரதியோகித் தன்மை விலக்ஷணமாம. அது நியாயநூல்களில் அபாவாபாவவடிவத்தன்மையாகிய அபாவத்தினதுபிரயோகித்தன்மையின் சொரூபமாக ஆசாரியர்களால எழுதப்பட்டிருக்கின்றது. இத்தன்மைத்தாய பிரதியோகித்தன்மை சம்பந்த ஸாதிருசியங்களுக்கில்லை. ஆதலால் சம்பந்த ஸாதிருசியங்களின் பிரதியோகித் தன்மைக்கு விலக்ஷணமான பிரதியோகிததன்மை யுடையது எதற்குப் பிரதியோகி யாகின்றதோ, அஃது அபாவமெனப்படும. ஸூத்ரலக்கிரமம் இதுவாம்:—சம்பந்த ஸாதிருசியங்களுக்கு வேறாய்ப் பிரதியோகியின் அபேக்ஷையுடைய ஞானத்திற்கு விஷயமாவது யாதோ, அஃது அபாவமெனப்படும். அவ்வபாவம ஸம்ஸர்க்காபாவம் அந்நி

யோந்நியாபாவமென இருவகைப்படும். அவற்றுள் அந்நியோந்நியா பாவமோ ஒரே விதமாம். சம்சர்க்காபாவம் பிராகபாவம், பிரத் துவம்சாபாவம், சாமயிகாபாவம், அத்தியந்தாபாவ மென்னும்பேத த்தால் நான்கு வகைப்படும். இவ்வாற்றான் நால்வகைச் சம்சர்க் காபாவமும் அந்நியோந்நியா பாவமும் சேர்ந்து அபாவம் ஐந்து வகையாம். கபாலத்தில் கடத்தின் உற்பத்திக்குமுன் கடத்தின் அபாவமிருக்கின்றது. பச்சையான கபாலத்தில் இரத்த வுருவம் உண்டாதற்கு முன் இரத்த வுருவத்தின் அபாவ மிருக்கின்றது; அது பிராகபாவமாம். கடத்தின் உற்பத்திக்குப்பின் தடிமுதலிய வற்று லுடைந்தகாலத்துக் கபாலத்தில் கடத்தின் அபாவமிருக் கின்றது; அது பிரத்தொம்ஸாபாவமாம். வெந்த கபாலத்தில் கரு நிறத்தின் அபாவமுண்டாகின்றது; அது கரு நிறத்தின் பிரத்துவம் ஸாபாவமாம். நையாயிக மதத்தில பிரத்துவம்ஸாபாவம் ஸாதியும் (உற்பத்தி யுடையதும்) அநந்தமு (நாசமில்லாதது) மாம். ஏனெ னின், கடத் துவம்ஸத்தின் உற்பத்தியோ தண்ட முதலியவற்று லுண்டாகின்ற தென்பது அநுபவ சித்தமாம். துவமஸத்திற்குத் துவமஸம் சமபவியாது. ஏனெனின் பிராகபாவம, பிரதியோகி, துவம்ஸம என்னும் மூன்றனுள் ஒன்றன் அதிகரணகாலம அவசிய முளதாம். பிராகபாவ துவமஸங்களின் அநாதார காலம பிரதி யோகிக்கு ஆதாரமாகின்றதென்பது நியமம். அவ்வாறு கடமுண் டாய் நாசமாவதற்கு முன் கடத்தின் பிராகபாவத் துவம்ஸங்க ளின் அநாதாரகால மிருக்கின்றது. ஏனெனின், பிராகபாவம் நாச மாய்விட்டது; கடத்தின் துவம்ஸ முண்டாகவில்லை. ஆதலாற் கட த்துவம்ஸத்தின் அநாதார காலமாம. அது கடத்தின் ஆதாரகால மாம. கடத்துவம்ஸத்தின் துவம்ஸத்தை யங்கீகரிக்கின், கடத் துவம்ஸத்தினது துவம்சத்தின் அதிகரணகாலம் கடப்பிராகபாவ கடத்துவமஸங்களின் அநாதாரமாயிருத்தலான் கடத்தின் ஆதார மாதல் வேண்டும. இவ்வாற்றான் துவம்ஸத்தின் துவம்ஸத்தை யங்கீகரிக்கின், பிரதியோகியின் எழுச்சி உண்டாதல் வேண்டும். இதனுற்றான் பிராகபாவத்தினை அநாதியென் றங்கீகரித்திருக்கின் றனா. ஸாதி (உற்பத்தியுடையது)என் றங்கீகரிக்கின் பிராகபாவத் தின் உற்பத்திக்கு முந்திய காலம பிராகபாவத் துவம்ஸங்களின் அநாதாரமா யிருத்தலான் பிரதியோகியின் ஆதாரமாதல் வேண் டும. ஆதலால் பிராகபாவம அநாதியும் ஸாந்தமு(அந்தமுடையது) மாம. துவம்ஸம் அநந்தமும ஸாதியுமாம். பூதலமுதலியவற்றில்

யாண்டு ஓர்காலத்துக் கடமுளதாகின்றதோ, ஆண்டுக் கடமில்லாத காலத்திற் கடத்தின் சாமயிகாபாவ முளதாகின்றது. ஓர்சமயத் திருப்பது யாதோ, அது சாமயிகாபாவமெனப்படும். வாயுவில் உரு வம் ஒருகாலத்தது மிராது. ஆகலின் வாயுவில் உருவத்தின் அத்தியந் தாபாவ மிருக்கின்றது. கடத்தின் வேருகிய பதார்த்தங்களிலுள்ள கடத்தின் பேதம யாதோ, அது கடத்தின் அந்நியோந்நியாபாவ மாம. சாமயிகாபாவமோ ஸாதி ஸாந்தமாம (ஆதியுடையதுமஅந்த முடையதுமாம). அத்தியந்தாபாவம அந்நியோந்நியாபாவ மென் னும் இரண்டும அநாதி அநந்தமாம. இவ்வாற்ருன் ஐவகையபாவ முண்டு.

## ௯௩. பிராசீன நியாயமதத்தில் அபாவங்களின் ஒன்றற்கொன்றுள்ள விலக்ஷணத்தன்மையின் சாதகவுணர்ச்சி.

அவற்றின் ஒன்றறகொன்றுள்ள விலக்ஷணத தன்மையின் சாதகமான விலக்ஷண வுணர்வைக கூறுவாம:—கபாலத்தில் கடத தின உற்பத்திக்குமுன் கபாலததிற் கடமில்லையெனனும உணர் ச்சி யுண்டாகின்றது. அதற்கு விஷயம் கடத்தின் பிராகபாவமாம். ஏனெனின், பிரதியோகியின் உபாதான காரணததில் சாமயிகா பாவமும அத்தியந்தாபாவமுமோ இரா வென்னும பொருளை மேற கூறுவாம. ஆனல் தனது பிரதியோகியின் உபாதானத்தை விட்டு வேறிடததில இரண்டும அபாவமாயிருக்கின்றன. ஆதலால் கபாலத்திற கடமில்லையென்னும் உணர்விற்கு விஷயம் சாமயிகா பாவமும் அத்தியந்தாபாவமு மன்று. கடத்தின் உற்பத்திக்குமுன் துவமசததின் சமபவ மில்லை. ஏனெனின், துவம்சததின் பிரதி யோகி நிமித்தகாரண மாகின்றது. காரணததிற்குமுன் காரியம சமபவியாதாகலின் கடத்தின் உற்பததிற்குமுன், கபாலத்திற் கட மில்லையெனனும உணர்விறகு விஷயம கடத துவமசமுமன்று. கட த்தின் அந்நியோந்நியாபாவம் கபாலததில் எப்போது மிருககினும், கபாலம் கடமன்றென்று அந்நியோந்நியாபாவத்தின் உணர்வுண் டாகின்றது; கபாலத்திற் கடமில்லையென்னும அந்நியோந்நியா பாவத்தின் உணர்வுண்டாகிறதில்லை. இவ்வித வுணர்சசிக்கு யாது விஷயமோ அது பிராகபாவமெனப்படும. அங்ஙனமே தண்டமுத லியவற்ருன் கடத்தின் அதரிசன முண்டாகுங் காலத்துக் கபாலத்

தில் கடமில்லையென்னு முணர்வுண்டாகின்றது. அவ்வுணர்விற்கு விஷயம் பிராகபாவமன்று. ஏனெனின், பிராகபாவத்தின் நாசம் பிரதியோகி வடிவமாகின்றது. கடத்தின் உற்பத்திக்குப்பின் பிராகபாவத்தின் சம்பவமின்று. மூன்றபாவமெவையோ, அவற்றின் சம்பவமும முற்கூறிய வண்ணஞ்சம்பவியாது. ஆதலால்தண்டமுதலிய வற்ருற் ரேன்றிய கடத்தின் அதரிசன காலததில் கபாலத்திற் கடமில்லையென்னும் உணர்வுண்டாகின்றது. அதற்கு விஷயம் பிரத்தோம்ஸாபாவமாம. இவ்வாற்ருன் பிராகபாவமும பிரத்துவம்சாபாவமும ந என்னும சொல்லாற் ரேன்று முணர்ச்சிக்கு விஷயமாம். இது பிராசீனர் மதம.

## சுச. நவீன நியாயமதத்தில் அபாவங்களின் ஒன்றற்கொன்றுள்ள விலக்ஷணத்தன்மையின் சாதகவுணர்வு.

நவீனமதத்தில் பிரதியோகியின் உபாதான காரணத்திலும் அத்தியந்தாபாவ மிருக்கின்றது. ஏனெனின், அத்தியந்தாபாவத திற்குப் பிரதியோகியோடு விரோதமிருககின்றது ; பிறவற்ருேடில்லை. யாண்டுப் பிரதியோகி யில்லையோ, ஆண்டு முழுவதும அத்தியந்தாபாவமாகின்றது. ஆதலால் கடத்தின் உற்பததிக்குமுன்னும் பிரதியோகியின் நாசகாலத்திலும் பிரதியோகியின் அத்தியந்தாபாவ மிருத்தலான் கபாலத்திற் கடமில்லையென்னும ஞானத்திற்கு விஷயம் அத்தியந்தாபாவமாம். இவ்வித வுணர்வால் பிராகபாவப் பிரத்துவம்சாபாவங்களின் சித்தி யுண்டாகிறதில்லை. ஆனல் கபாலத்தில் கடம் உண்டாகுமென்னும் உணர்வு கடத்தின் உற்பத்திக்கு முன் னுண்டாகின்றது. அதன் விஷயம் பிராகபாவமாம. கடம துவம்ஸஞ்செய்யப்பட்டதென்று முணர்வினுக்கு விஷயம் துவம்ஸமாம். இவ்வாற்ருன் கடத்தினுற்பத்திக்கு முநதியகாலத்தில் கடத்தின் அத்தியந்தாபாவம் பிராகபாவமென்னும் இரண்டும் இருக்கின்றன. அவற்றுள் கபாலத்தில் கடமில்லையென்னும் உணர்வுக்கு விஷயம் கபாலத்தில் கடத்தின் அத்தியந்தாபாவமாம். கபாலத்திற் கடமுண்டாமென்னும் உணர்விற்கு விஷயம் கபாலத்திற் கடத்தின் பிராகபாவமாம். அங்ஙனமே தண்டமுதலியவற்ருற் கபாலத்தில் கடத்தின் அதரிசனமுண்டாயின் அக்காலத்தும் கபாலத்திற் கடமில்லை; கபாலத்திற் கடம் துவமஸமாயிற்று என் றிவ்வாறு இரு

வகை யுணர்வுகளுண்டாகின்றன. அவற்றுள் முதலுணர்விற்கு விஷயம் கடத்தின் அத்யந்தாபாவமும், இரண்டாவது உணர்விற்கு விஷயம கபாலத்தில்கடத்தின் பிரத்துவம்ஸாபாவமுமாம். இவ்வாற்றான் நவீன மதத்தில் பிராகபாவப் பிரத்துவம்ஸாபாவங்கள் ந என்னும சொலலாற் றோன்றிய வுணர்விற்கு விடயமன்றாகலான் முத லிலக்கணம் பிராசீன மதத்தை யநுசரித்ததும், இரண்டாவ திலக்கணம் இருமதங்களை யநுசரித்ததுமாம். ஆதலால் இரண்டாவது இலக்கணமே செவ்விதாம.

## ௬௫. அபாவத்தின் இரண்டாவது இலக்கணமும் விலக்ஷண வுணர்வும்.

சமபந்த சாதிருசியங்களுக்கு வேறாய் அந்யத்தின் அபேக்ஷையுடைய வுணர்விற்கு விஷயம எதுவோ, அஃது அபாவ மெனப்படும. இஃது இரண்டாவது இலக்கணமாம. பூதலத்தில் கடமில்லை யென்னும் உணர்வுக்கு விடயம பிராகபாவமும துவமஸமு மன்று. ஏனெனின் பிரதியோகியின் உபாதானத்தில இரண்டு அபாவங்களுமிருக்கின்றன. கடாபாவத்தின் பிரதி யோகியாகிய கடத்தின் உபாதானம பூதல மன்று. ஆதலால் முறகூறிய வுணர்விற்கு விடயம் இரண்டபாவங்களு மன்று. அத்தியந்தாபாவமும அந்நியோந்நியா பாவமுமோ நித்தியமாம். பூதலத்தில் கடாபாவம் அநித்தியமாம. ஆதலால, கடத்தின் சாமயிகாபாவமே முற்கூறிய பிரதீதி (உணர்வு) க்கு விஷயமாம. வாயுவில் உருவ மில்லையென்னும் உணர்வுக்கு விஷயம கேவலம் அத்தியந்தாபாவமாம. அநந்தமா (நாச மிலலாததா) யிருந்தலான் பிராகபாவ மன்று; அநாதித் தன்மையால் துவமஸமு மன்று; எப்போதுமிருத்தலான் சாமயிகாபாவ மன்று. ஆதலால முற்கூறிய வுணர்வுக்கு விஷயம் அத்தியந்தாபாவமாம. அங்ஙனமே வாயு உருவமுடையதன்று என்னும உணர்வுக்கு விஷயம் அந்நியோந்நியாபாவமாம. முற்கூறிய வுணர்வால் வாயுவில் உருவமுடையதின் பேதம விளங்குகின்றது. அங்ஙனமே கடம் பட மன்று என்னும உணர்வுக்கு விஷயம் அந்நியோந்நியாபாவமாம. அந்நியோந்நியாபாவத்தினையே பேதமென்பர்.

## ௬௬. அந்நியோந்நியாபாவ லக்ஷணமும், அதிற் சங்கை சமாதானமும்.

அபேதத்தை நிஷேதிக்கும் அபாவம் எதுவோ, அது அந்நியோந்நியாபாவ மெனப்படும். கடம் பட மன்று என்று கூறுதலாற் கடத்திற் படத்தினது அபேதத்தின் நிஷேத முண்டாகின்றது. ஆதலால் கடத்திற் படத்தினது அபேதத்தின் நிஷேதம் கடத்திற் படத்தின் அந்நியோந்நியாபாவமாம். ஏனெனின், ந என்னும் சொல்லின்றி எதனிடத்து எது தோற்றுகின்றதோ, அதன் நிஷேதம ந என்னும சொல்லா லுண்டாகின்றது. எங்ஙனம்: ந என்னும் சொல்லின்றிய கடம பட மென்னும வாக்கியத்தான் நீலம குடமென்றன் முதலியவற்றைப்போலப் படத்தில் குடத்தின் அபேதம அல்லது குடத்தில் படத்தின் அபேதம் தோற்றுகின்றது. அவ்வபேதத்தின் நிஷேதம ந என்னும சொல்லா லுண்டாகின்றது. ஆனல் இத்துணைப் பேதமாம:—எந்தப் பதத்தோடு ந என்னும சொல்லின சம்பந்த முண்டாகின்றதோ, அப்பதத்தினது அர்த்தத்தின் அபேதத்தினது நிஷேதம உண்டாகின்றது. எங்ஙனம்:—கடம் பட மன்று என்னும் வாக்கியத்தில் படபதத்தோடு ந என்னும சொல்லின் சம்பந்த மிருககின்றது. ஆண்டுக்கடத்தில் படபதத்தினது அர்த்தத்தின் அபேதம் நிஷேதமாகின்றது. படம் கடமன்றுஎன்னும வாக்கியத்தில் கடப்பதத்தோடு ந என்னும பதத்தின் சம்பந்தமிருக்கின்றது. ஆண்டுக் கட பத அர்த்தத்தின் அபேத நிஷேதம படத்தி லுண்டாகின்றது. இதனுற்றுன் கடம் பட மன்று என்னும் வாக்கியத்தாற் றோற்றும அந்நியோந்நியாபாவம் எதுவோ, அதற்குக் கடம அநுயோகியும், படம் பிரதியோகியுமாம. அங்ஙனமே படம கட மனறென்னும வாக்கியத்தாற் றோற்றும அந்நியோந்நியாபாவத்திற்குப் படம் அநுயோகியுமகடம் பிரதியோகியுமாம. எதன்கண் அபாவ முண்டாகின்றதோ, அது அபாவத்தின் அநுயோகி யெனப்படும. எதன் அபாவமுண்டாகின்றதோ, அது பிரதியோகி யெனபபடும.

சங்கை:— எதன் நிஷேதம் செய்யப்படுகின்றதோ அதற்கு அபாவம் சொல்லப்படுகின்றது. அதுவே அபாவத்தின் பிரதியோகி யெனப்படுகின்றது. முன் இவ்வாறுகூறப்பட்டிருக்கின்றது:—கடம் படமன்றென்னும் வாக்கியத்தான் கடத்தில் படத்தின் அபேதம்

நிஷேதிக்கப் படுகின்றது. படம் கட மன்றென்னும் வாக்கியத்தால் படத்தில் கடத்தின் அபேதம் நிஷேதிக்கப்படுகின்றது. ஆதலால் கடம் படம் அன்று என்னும் வாக்கியத்தாற் றோற்றிய அபாவத்தின் பிரதியோகி படத்தின் அபேதமாம்; பட மன்று. அங்ஙனமே படம் கட மன்றென்னும் வாக்கியத்தாற் றோற்றிய அபாவத்தின் பிரதியோகி கடத்தின் அபேதமாம்; கட மன்று. ஆதலால் இரண்டு வாக்கியங்களிலும் அபேதத்தின் நிஷேதம் கூறவே, படத்திலும் கடத்திலும் கிரமமாகப் பிரதியோகித் தன்மையைக் கூறுதலால் விரோதமுண்டாம.

சமாதானம:—அபேத மென்பது அசாதாரண தர்மத்தின் பெயர். எது தனது சொரூபத்திலன்றி எப்பதார்த்திலு மிராதோ; தன்னிடத்து மாத்திர மிருக்குமோ, அது தனது அசாதாரண தர்ம்ம மெனப்படும். கடத்தின் அபேதம கடத்தின்கண்ணே யிருக்கும்; பிறவற்றில் இராது. ஆதலால் கடத்தின் அபேதம கடத்தின் அசாதாரண தர்மமாம். அவ்வசாதாரண தர்மமாகிய அபேதமே சகல பதார்த்தங்களுக்கும் தம்மிலுள்ள சமபந்தமாம். இவ்வாற்றான் சகல பதார்த்தங்களின் அசாதாரண தர்மமாகிய அபேத சமபந்தம் தமது சொரூபத்தி லிருக்கின்றது. எந்தப் பதார்த்தத்தின் எந்தச் சமபந்தம் எதன்கணிருக்கின்றதோ, அப்பதார்த்தம அச்சமபந்தத்தால் அதன்கணிருக்கின்றது. எங்ஙனம: கடத்தின் சையோக சமபந்தம பூதலத்தி லிருக்கின், ஆண்டுச் சையோக சம்பந்தத்தால் பூதலத்தில கட மிருக்கின்ற தென்னும வியவகாரம் உண்டாகின்றது. ஆதலால் கடத்தின் சையோக சம்பந்தம் பூதலத்தில் இருக்கின்றது, சையோக சமபந்தத்தால் பூதலத்திற கட மிருக்கின்றது என்று சொல்லுதலில அர்த்தபேத மில்லை. அங்ஙனமே சையோகசம்பந்தத்தால் பூதலத்திற் கடாபாவமிருக்கின்றது, பூதலத்தில் கட சையோகத்தின் அபாவ மிருக்கின்றது என்று கூறுதலிலும பொருள் ஒன்றேயாம. இவ்வாறு படத்தில அபேத சம்பந்தத்தால் கடாபாவமும், படத்தில் கடத்தினது அபேத சமபந்தத்தின் அபாவமுமாகியஇரண்டும ஒத்து உடனிகழ்வனவாயிருத்தலின் ஒரே பதார்த்தமாம. சமநியத (ஒத்துஉடனிகழும,) அபாவங்கட்குப் பேத முண்டாகாது. எங்ஙனம: கடத்தன்மை யத்தியந்தாபாவமும், கடாந்நியோந்நியாபாவமும் கடத்திற்கு வேருய்ச் சகல பதார்த்தங்களினு மிருக்கின்றன. ஆனால் ஒரே அபாவத்தில்,

கடத்துவாத்தியந்தாபாவத்தன்மையும் கடாந்நியோந்நியா பாவத் தன்மையுமாகிய இரண்டு தர்மங்களுள. ஒரே அபாவத்திற்குக் கடத்தன்மை கடமெனை இரண்டு பிரதியோகிகளுள. கடத்துவா த்தியந்தாபாவத்தன்மை வடிவால் எந்த அபாவத்திற்குக் கடத் தன்மை பிரதியோகியோ, அவ் வபாவத்திற்கே கடாந்நியோந்நி யாபாவத்தன்மை வடிவான் கடமும் பிரதியோகி யாம். எவ்வாற் றன் ஒரே அபாவத்திறகு உருவபேதத்தால் இரண்டு பிரதியோகிக ளிருக்கின்றனவோ, அவ்வாற்றன் உருவபேதத்தால் ஒரே அபாவத் திற்குப் பிரதியோகித்தன்மை யவச்சேதகமான இரண்டு சம்பந் தங்களுள. கடத்துவ அத்தியந்தாபாவததன்மை வடிவான் பிரதி யோகித்தன்மை யவசசேதகமான சமவாய சம்பநத முண்டு. கட அந்நியோந்நியா பாவத்தன்மை வடிவான் அவ்வபாவததிற்கே பிரதியோகித்தன்மை யவச்சேதகமான சமவாய சமபந்தம உண்டு. இவ்வாற்றல் பட முதலிய சகல பதார்த்தங்களிலும் உள்ள கடாபேதத்தின் அத்தியந்தா பாவமும் கடாந்நியோந்நியாபாவ முமஒன்றும. அவ்வொருஅபாவததிலகடாபேத அத்தியந்தாபாவ ததன்மை கடாந்நியோந்நியாபாவத்தன்மை யென்று இரண்டு தர் மமங்களுள. கடாபேத அத்தியந்தா பாவத்தன்மை வடிவான் அவ் வபாவததிற்குக் கடாபேதம பிரதியோகியாம், பிரதியோகிததன் மை யவச்சேதகம் சொரூப சம்பந்தமாம். அந்நியோந்நியா பாவத் தன்மை வடிவான் அவ்வபாவத்திற்கே கடம பிரதியோகியாம். பிரதியோகிததன்மை யவசசேதகம் அபேத சம்பநதமாம. அவ் வபேத சமபநததநினையே தாதாத்மிய மென்பா. அதன் வடிவாந் தன்மை (வியக்தித்தன்மை) யென்றுங்கூறுவர். இவ்வாற்றன் கட த்தினது அபேத நிஷேதததின் பிரதியோகி கடம என்று கூறு தலும பொருந்தும; விரோதமின்றி.

ஈண்டு இது நிச்சயமாம்:—எந்த வாக்கியத்தால் ந என்னும் சொல்லின்றி எப்பதார்த்தத்தில் எச்சம்பந்தத்தால் எப்பதார்த் தம் தோற்றுகின்றதோ, ந என்னுஞ் சொல்லோடுகூடிய அவ்வா க்கியத்தால் அப்பதாரத்ததில் அச்சம்பந்தத்தால் அப்பதார்த் த்தின் நிஷேதம தோற்றுகின்றது. எங்ஙனம்: நீலம் குடமென் னும் வாக்கியத்தால் கட பதார்த்தத்தில் அபேத சம்பந்தத்தால் நீல பதாரத்தம் தோற்றுகின்றது. ஏனெனின், அபேத சமபந்தத் தால் நீல விசிஷ்டம் குடமென்பது வாக்கியத்தின பொருளாம்.

ந என்னுஞ் சொல்லோடுகூடிய குடம நீல மன்று என்னும் வாக்கியத்தான் அபேத சம்பந்தத்தினால் நீலத்தின் நிஷேதம் கடத்தில் தோற்றுகின்றது. அங்ஙனமே கடம படமென்னும் வாக்கியத்தானும ந என்னுஞ் சொல்லின்றிப் படப் பொருளில் அபேத சம்பந்தத்தான் கடபதார்த்தந் தோற்றுகின்றது. ஏனெனின் யாண்டு இரண்டு பதங்களினும சமான வேற்றுமை யுளதாகின்றதோ, ஆண்டு ஒரு பதார்த்தத்தில் அபேத சம்பந்தத்தால் மற்றைய பதார்த்தத்தின் தோற்ற முண்டாமென்பது நியமம். நீலம் குடமென்னும வாக்கியத்திற்போல குடம படமென்னும வாக்கியத்தினும இரண்டு பதங்களும சமான (ஒரு) வேற்றுமை யுடையனவாம. ஆகலின் ந என்னுஞ் சொல்லின்றிக் குடம படமென்னும வாக்கியத்தானும பட பதார்த்தத்தில் அபேத சம்பந்தத்தால் குட பதார்த்தம தோற்றுகின்றது. அபேத சம்பந்தத்தாற பட பதார்த்தத்தில் குட பதார்த்தஞ் சம்பவியாதாயினும், ஒரு பதார்த்தத்தில அபேத சம்பந்தத்தால் மற்றப் பதார்த்தம தோற்றுதற்குச சாமக்கிரி (சாதனம்) சமான வேற்றுமை யாம். அது கடம படமென்னும வாக்கியத்தினு முளது. ஆதலால் ந என்னுஞ் சொல லின்றி கடம பட மென்னும வாக்கியத்தாற் பட பதார்த்தத்தில் அபேத சம்பந்தத்தாற் குட பதார்த்தந் தோற்றுகின்றது. ஆனால் பட பதார்த்தத்தில் அபேத சம்பந்தத்தால உண்டாகுங் குடபதார்த்தத்தின் தோற்றம் பிரம (மயக்க) வடிவமாம்; பிரமை யன்று. ஆதலால் ந என்னுஞ் சொல்லின்றி யொரு பதார்த்தத்தில் எச் சம்பந்தத்தால் பிறபதார்த்தத்தின் றோற்றம பிரமவடிவாகவேனும் பிரமை வடிவாகவேனும உண்டாகின்றதோ, ஆண்டு ந என்னுஞ் சொல்லைச்சேர்க்கின் ஒரு பதார்த்தத்தில் அச் சம்பந்தத்தால் பிறபதார்த்தத்தின் நிஷேத முண்டாகின்றது. இவ்வாற்றான் ஒரு பதார்த்தத்தில்அபேதசம்பந்தத்தால்வேறுபதார்த்தத்தை நிஷேதிக்கும் அபாவம் அந்நியோந்நியாபாவமெனப்படுகின்றது.

## ௯௭. நவீனக்கிரமமாகச் சம்சர்க்காபாவத்தின் நான்குபேதமும், அவற்றி னிலக்கணமும், பரீக்ஷையும்.

அதனின் வேறாகிய அபாவமெதுவோ அதனைச் சம்சர்க்கா பாவமென்பர். சம்சர்க்காபாவம் பிராசீன மதத்தில் நான்குவகைப்

படும்:—அநாதி ஸாந்தமாகிய அபாவ மெதுவோ அது பிராகபாவ மெனப்படும். தனது பிரதியோகியின் உபாதான காரணத்தில் பிராகபாவ மிருக்கின்றது. எங்ஙனம்: கடத்தின் பிராகபாவத்திற்குப்பிரதியோகி கடம். அதன் உபாதான காரணமாகிய கபாலத்தில கடத்தின் பிராகபாவ மிருக்கின்றது. கபாலத்தின் உற்பத்திக்கு முன்னும கபாலத்தின் உபாதான காரணத்தில் கடத்தின் பிராகபாவ மிருக்கின்றது. இவ்வாற்ருல் சிருஷ்டிக்குமுன் கடத்திற்குக் காரணமாகிய பரமாணு சமுதாயத்தில் கடத்தின் பிராகபாவ மிருக்கின்றது. பரமாணு கடங்களுக்கு இடையில் உள்ள துவியணுக முதற்கபாலமீருயுள்ள அவயவிகள் எல்லாவற்றின் பிராகபாவமும சிருஷ்டிக்குமுன் பரமாணுவி லிருக்கின்றன. இவ்வாற்ருற் பிராகபாவம அநாதியும (உறபததியின்றியதும்) ஸாந்தமும (அந்தமுடையதும) ஆம. (அநதமென்பது துவம்ஸதநிற்காம. அதனையே நாசமென்பா.) கடத்தினது உற்பத்திக்குச சாமக்கிரி எதுவோ, அதனுல் கடத்தின் பிராகபாவத்திற்கு அந்தமுண்டாகின்றது. ஆதலால் கடத்தினது பிராகபாவத்தினந்தம் கடவடிவமேயாம. கடத்தினது பிராகபாவததின் துவம்சம் கடத்தினும வேறன்று. பிரத்துவமசாபாவம் அநநதமும் கடம் ஸாந்தமுமாம. கடத்தினது பிராகபாவத்தின் துவமசம கடவடிவமாகுமாயின், பிரத்துவமசாபாவமுஞ் ஸாந்தமாகும. பிரததுவம்சாபாவம் அநந்தமென்னும் நியமததிற்குப் பங்கமுண்டாம. என்ருலும் துவம்சம் நாசம் அந்தமென்பன பரியாயச சொற்கள். அத்துவம்சம் இருவகையாம். ஒன்று பாவ பதாாததத்தின் நாச வடிவமான துவம்சம். மற்றையது அபாவத்தின் நாசவடிவமான துவம்சம. பாவபதார்த்தத்தின் நாசவடிவமான துவம்சமோ அபாவ வடிவமாம். அதனையே பிரத்துவம்சாபாவமென்பா. எங்ஙனம்: குட முதலிய பாவ பதார்த்தங்களின் நாசம அபாவ வடிவமாம. அதனைப் பிரத்துவம் சாபாவமென்பர். அபாவ பதார்த்ததின் நாச வடிவினதாகிய துவம்சம் பாவரூபமாம். அதனைத் துவம்சப் பிரத்துவம்சமென்று கூறுகின்றனர். துவம்சாபாவம் பிரத்துவம்சாபாவமென்று கூறுவதில்லை. எங்ஙனம: கடத்தின் பிராகபாவம் அபாவ பதார்த்தமாம். அதன் நாச வடிவினதாகிய துவம்சம் கடமாம். அது பாவரூபம். அதனைப் பிரத்துவம்சா பாவமென்று கூறுவதில்லை. ஆனுல் கடப்பிராகபாவத்தின் நாசவடிவினதாகிய கடத்தைச சுவப்பிராக

பாவத்தின் (தனது முன்னின்மையின்) துவம்சமென்றும் பிரத்துவம்சமென்றுமே கூறுவர். இவ்வாற்றான் துவம்சம் இருவகையினதாம் அவற்றுள் பாவரூப துவம்சமோ ஸாந்தமாம்; ஆனால் அபாவரூபத் துவம்சம் அநந்தமாம். ஆதலால கடப்பிராகபாவத் துவம்சமாகிய கடரூபமோ சாந்தமாம். அங்ஙனமாயினும் பிரத்துவம்சாபாவம் அநந்தமென்னும் நியமத்திற்குக் கேடில்லை. இவ்வாற்றான் அநாதி ஸாந்தமாகிய அபாவ மெதுவோ அது பிராகபாவமெனப்படுகின்றது. அநாதிப்பாவம் அத்தியந்தாபாவமுமாம்; ஆனால் அது ஸாந்த மன்று. ஸாந்த அபாவம சாமயிகாபாவமுமாம; ஆனால் அது அநாதியன்று. வேதாந்தசித்தாந்தத்தில் அநாதிஸாந்தம மாயை; அஃதபாவமன்று. ஆனால் அது ஜகத்தின் உபாதான காரணமாம். அது அபாவ வடிவ மாகுமாயின் அதற்கு உபாதான காரணத்தன்மைசமபவியாது. ஏனெனின், கட முதலியவற்றின் உபாதான காரணமாகிய கபால முதலியன பாவரூபமாகவே யிருத்தல் பிரசித்தம். அபாவம எதற்கும உபாதான காரண மாகாது. ஆதலால் மாயை அபாவ ரூப மன்று; ஆனால பாவ ரூபமாம. மாயை பாவ அபாவங்களுக்கு வேறான அநிர்வசனீயமாமாகலின் பாவ வடிவத்தன்மையும் அதனிடத்துச சம்பவியாது. அங்ஙனமாயினும் அபாவரூபம மாயையன்றாகலின், பிராகபாவத்தி னிலக்கணத்தில் அபாவபதம் செல்லுதலால மாயையில் பிராகபாவத்தின் இலக்கணம செல்லாது. மாயை பாவரூபமன்றென்று சொல்லுதற்கு அபிப்பிராயம இதுவாம:—மூன்று காலத்திலும எதற்குப் பாதம் உண்டாகிறதில்லையோ, அது பாமார்த்தசத்தென்றும பாவமென்றும் சொல்லப்படும. அத்தன்மையது பிரஹ்மமாம்; மாயையன்று. ஏனெனின், ஞானத்திற்குப் பிந்திய காலத்து மாயையின் பாதமுண்டாகின்றது. ஆதலால பரமார்த்த சத்து ஸ்வரூபமான பாவமோ மாயையன்று. ஆயினும், விதிமுக வுணர்ச்சிக்கு எது விஷயமாகின்றதோ, அதுவும சத்தென்றும பாவமென்றும சொல்லப்படுகின்றது; நிஷேத முகவுணர்ச்சிக்கு விஷயமாவது எதுவோ, அது அபாவ மெனப்படுகின்றது. நிஷேதமுகவுணர்ச்சிக்கு விஷயமாந் தன்மை மாயையிலின்று. ஆதலால் மாயையும் பாவரூபமாம்.

மாயை பிரகிருதி அவித்தை அஞ்ஞானம் என்பன பரியாயச்சொற்கள். அவித்தை அஞ்ஞானமென்னும சொற்களில் அகாரம் நிஷேதவாசகமாம, ஆதலால மாயையும் நிஷேத முகவுணர்ச்சிக்கு விஷய

மாகுதலான், அபாவரூபமே யாமென்று சொல்லுதல் வேண்டும். அங்ஙனமாயினும், அகாரத்திற்கு நிஷேதமாத்திரம் பொருளன்று; ஆனல் விரோதமுடையது, பேதமுடையது, அற்பமென்பனவும் அகாரததின் பொருளாம. எங்ஙனம்: அதர்மமென்னும் சொல் லில் அகாரத்திறகு விரோதமுடையது பொருளாம். தர்ம விரோதி யினை அதர்மமென்பர். அப்பிராமணன் அநாசாரியனென்னுமிடத்து அகாரத்திற்குப் பேத முடையது பொருளாம். பிராமணனின் வேறனவன் ஆசாரியத்தன்மைக் குரியவனல்லனென்பது வாக்கிய த்தின் பொருளாம. அநுதரை (உதரமிலி) தேவதத்தன் கன்னிகை யென்னுமிடத்து அகாரத்திற்கு அற்ப மென்பது பொருள். அற்ப உதரமுடையவள் தேவதத்தன் கன்னிகையென்பது வாக்கியத்தின் பொருள். எங்ஙனமித்துணைத்தானங்களில் அகாரத்திற்கு நிஷேத ப்பொரு ளின்றே, அங்ஙனமே அவித்தை யஞ்ஞான மென்னும் சொற்களினும் அகாரத்திற்கு நிஷேதப் பொரு ளின்று; ஆனல் விரோதிப் பொருளுளது. மாயைக்கு ஞானத்தோடு கெடுக்கப்படு வது கெடுப்பதெனுந் தன்மை விரோதமுளது; அதனல், அதனை அஞ்ஞானமென்கின்றனர். மாயைகெடுக்கப்படுவது, ஞானம் கெடுப் பது. வேதாந்தவாக்கியத்தாற்றேன்றியபிரஹ்மாகாரவிருத்தியினை வித்தையென்பர். அது மாயையின் விரோதியாகலின் மாயையை அவித்தை யென்பர். மாயை, அஞ்ஞானம், அவித்தை யென்னுஞ் சொற்களின் வாசசியமாயினும், அகாரத்திற்கு விரோதமுடைய தென்பது பொருளாகுதலான் அது பாவரூபமாம். பாவரூபமும் பிரஹ்மத்தைப்போலப் பரமார்த்த சத்துரூபமன்று. ஆனல் விதி முகவுணர்ச்சிக்கு விஷயமாகுதலான் வியாவகாரிக சத்துரூபமாம்.

பிராகபாவத்தின் இலக்கணத்தில் அபாவமென்னும் பதம் இராவிடின் மாயையில் இலக்கணத்தின் அதிவியாப்தி யுண்டாகி ன்றது. ஏனெனின், மாயை அநாதியும் ஸாந்தமுமாம. ஆதலால் அநாதி ஸாந்தமாகிய அபாவ மெதுவோ, அது பிராகபாவ மென ப்படுகின்றது. ஸாதி அநந்த அபாவ மெதுவோ அது பிரத்துவம்ஸா பாவ மெனப்படும். குட முதலியவற்றின் துவம்சம் தண்டமுத லியவற்றா னுண்டாகின்றது. ஆதலால் ஸாதியாம். அநந்தம் அதன் கண் யுக்தியோடு கூடியதாகவே யிருக்கின்றது. அநந்த அபா வம பிரத்துவம்ஸாபாவமா மெனின் அத்தியந்தாபாவத்தில் அதி

வியாப்தி யுண்டாம். ஆதலால் பிரத்துவம்சாபாவத்தின் இலக்கண த்தில் ஸாதியெனக் கூறல் வேண்டும். அத்தியந்தாபாவம் ஸாதி யன்று; ஆனால் அநாதியாம். ஸாதியபாவத்தினைப் பிரத்துவம்சா பாவமெனின் ஸாதியபாவம சாமயிகாபாவமுமாம. ஆண்டு அதி வியாப்தி யுண்டாம. சாமயிகாபாவம் அநநத மன்று; ஸாந்தமாம. ஸாதி யநந்தத்தினைப் பிரத்துவம்சாபாவ மெனின் மோக்ஷத்தில் அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் மோக்ஷம உண்டாகுதலால் ஸாதியும,முக்தனுக்கு மீண்டுஞ் சமசார முண்டாகாமையின அநந்த முமாம. ஆனால மோக்ஷம பாவ ரூபமாம்; அபாவரூப மன்று. ஆதலால் பிரத்துவமசாபாவதறி னிலக்கணத்தில் அபாவ மென்ப தைக் கூறவேண்டும். அஞ்ஞானமும் அதன் காரியமும நிவிரு த்தியாதலே மோக்ஷ மென்பர். நிவிருத்தி யென்பது துவமசததிற்கா மாகலின் மோக்ஷமும் அபாவ ரூபமாம. ஆகலின பிரததுவமசா பாவததி னிலககணததில அபாவ பதத்தைச் சேர்க்காவிடினும் மோக்ஷததில் அதிவியாப்தியாதி தோஷ மினறு. ஏனெனின், இல க்கிய மல்லாததன்கண்ணும் இலக்கணஞ்செல்லுதலே அதிவியாப்தி யென்பர். அஞ்ஞான தற்காரியங்களின் துவமசம மோக்ஷததிறகு இலக்ஷியத்தன்மையாதல் வெளிப்படையேயாம. சகல நாசமும் துவம்சாபாவத்தினது இலக்கணததின் இலக்கியமாம. சகல நாச ங்களுக்கும் உள்ளடங்கியே காரியததோடு அஞ்ஞானம நசித்தல் வடிவினதாகிய மோக்ஷம இருககின்றது. என்றாலும கற்பிததததின் நிவிருத்தி அதிஷ்டான வடிவமாம. அஞ்ஞானமும அதன் காரிய மும் கற்பிதமா மாகலின் அவற்றின் நிவிருத்தி அதிஷ்டானப் பிரஹ்ம வடிவமாம். ஆதலால் அபாவரூபம மோக்ஷ மன்று. ஆனால் பிரஹ்மரூபமா யிருததலால் மோக்ஷம பாவ ரூபமாம். அதன்கண் துவமசத்தி னிலக்கணஞ் செல்லுமாயின் அதிவியாப்தி யுண்டாம். ஆதலால் ஸாதி யநநதமாகிய அபாவ மெதுவோ அது பிரத்துவம்சாபாவ மெனப்படுகின்றது. உற்பத்தி நாசமுடைய அபாவ மெதுவோ அது சாமயிகாபாவ மெனப்படுகின்றது. யாண்டு ஒருகாலத்துப் பதார்த்த முளதாய் ஒருகாலத்து இல தாகின்றதோ, ஆண்டுப் பதாரதத சூனிய காலதது அப்பதார்த்த த்தின் சாமயிகாபாவ முண்டாகின்றது. எங்ஙனம: பூதல முதலிய வற்றிற் குட முதலியன ஓர் காலததி லுளவாய் ஓர் காலததி லில வாகின்றன. ஆண்டுக் கட சூனியகால சமபநதமுடைய பூதல முத

•லியவற்றில் கட முதலியவற்றின் சாமயிகாபாவ மிருக்கின்றது. சமய விசேஷத்தி லுண்டாய்ச் சமய விசேஷத்தில் நஷ்டமாவ தெதுவோ அது சாமயிகாபாவ மெனப்படுகின்றது. பூதலத்தி னின்றுங் கடத்தை வேறிடத்திற் கொண்டுபோயின, அப்போது கடத்தி னபாவம பூதலத்திலுண்டாகின்றது. அப்பூதலத்திற்றனே கடத்தைக் கொண்டுவரின், அப்போது கடத்தின் அபாவம் பூதல த்தில்நஷ்டமாகின்றது. இவ்வாற்றுற்சாமயிகாபாவமஉற்பத்திநாச முடையதாம். உற்பத்தியுடைய அபாவம் பிரத்துவம்சாபாவமா கின்றமையால்ஆண்டுஅதிவியாப்தி நீக்குதற்பொருட்டுச சாமயிகா பாவத்தின் இலக்கணத்தில் நாச மெனனும பதஞ சொல்லப்பட் டிருக்கின்றது. பிரத்துவமசாபாவமும உறபத்தியுடைய அபாவ மாயினும நாசமுடைய தன்று. ஆதலால நாசமென்னும பதத்தை க்கூறின் அதிவியாப்தி தோஷமின்று. நாசமுடைய அபாவத்தை ச் சாமயிகாபாவ மெனின் பிராகபாவத்தில அதிவியாப்தி யுண்டா கும். ஆதலால் சாமயிகாபாவத்தினிலக்கணத்தில் உற்பத்தியென் னும பதம சொல்லப்பட்டிருக்கின்றது. இலக்கணத்தில் உற்பத்தி யென்னும பதத்தின்பிரவேசத்தாலபிராகபாவத்தின்அதிவியாப்தி யின்று. ஏனெனின, பிராகபாவத்தின் நாசமோ வுண்டாகின்றது. ஆனல் அது அநாதியாயிருத்தலின் உறபத்தியாகிறதில்லை. சாம யிகாபாவத்தினிலக்கணத்தில் அபாவமென்னும சொல்லைச சேர்க் காது, உற்பத்தி நாசமுடையதனை ச சாமயிகாபாவ மெனக்கூறின், கட முதலியவற்றில் அதிவியாப்தி யுண்டாம. ஏனெனின், கட முதலியனவும பூத பௌதிகமான அநேக பதார்த்தங்களும் உற் பத்தி நாசமுடையனவாயிருக்கின்றன. அபாவ பதத்தின் பிரவேச த்தால் கட முதலியவற்றிறகுப் பாவ ரூபத்துவம இருத்தலான், அவற்றில் சாமயிகா பாவத்தினது இலக்ஷணத்தின் அதிவியாப்தி யின்று. இவ்வாறுற்ற பூதல முதலியவற்றில கட முதலியவற்றின் உற்பத்தி நாசமுடைய அபாவம சாமயிகாபாவமாம. அந்நியோந்நி யாபாவத்திறகு வேறய் உற்பத்திநாசமின்றிய அபாவமெதுவோ, அது அத்தியந்தாபாவ மெனப்படும. யாண்டு எக்காலத்திலும் எப் பதார்த்த மிருப்பதில்லையோ, ஆண்டு அப்பதார்த்தத்தின் அத்திய ந்தாபாவம் சொல்லப்படுகின்றது. எங்ஙனம்: வாயுவில் உருவம் எக்காலத்து மிருப்பதில்லை; ஆண்டு உருவத்தின் அத்தியந்தாபாவ மிருக்கின்றது. அங்ஙனமே கந்தமும் வாயுவில் எப்போது மிருப்ப

தில்லை. ஆதலால் வாயுவில் கந்தத்தின் அத்தியந்தாபாவ மிருக்கின்றது. சிநேக குணம் நீர் மாத்திரத்தி னிருக்கின்றது. பிறவற்றில் எப்போது மிருப்பதில்லை. ஆதலால் ஜல மல்லாத வேறு பதார்த்தங்களில் சிநேகத்தின் அத்தியந்தாபாவம் இருக்கின்றது. ஆதமாவினிடத்து உருவம் இரசம் கந்தம பரிசம சப்த மென்பன என்று மிருப்ப தில்லை. ஆதலால் உருவ முதலியவற்றின் அத்தியந்தாபாவம் ஆத்மாவிலிருக்கின்றது. பிருதிவியினும் ஜலத்தினும் இரசம் இருக்கின்றது. பிறவற்றில் என்று மிருப்பதில்லை. ஆதலால் பிருதிவி ஜலங்களுக்கு வேறாய பதார்த்தங்களில் இரசத்தின் அத்தியந்தாபாவ மிருக்கின்றது. பிருதிவித்தன்மைச சாதி பிருதிவிமாத்திரத்தி னிருக்கின்றது. ஜலமுதலியவற்றில் என்று மிருப்பதில்லை. ஆதலால் ஜலமுதலியவற்றில்பிருதிவித்தன்மையின்அத்தியந்தாபாவ மிருக்கின்றது. பிராமணனுக்கு வேறாய க்ஷத்திரியா முதலியோரிடத்துப்பிராமணத்தன்மையென்றுமிருப்பதில்லை. ஆதலால் க்ஷத்திரியர்முதலியோரிடத்துப்பிராமணத்தன்மையின் அத்தியந்தாபாவ மிருக்கின்றது. ஆகாயம காலம திக்கு ஆத்மாவென்பனவியாபகம். அவற்றில் என்றும் கிரியை யுண்டாகிற தில்லை. ஆதலால் ஆகாய முதலியவற்றில்கிரியையின் அத்தியந்தாபாவமிருக்கின்றது. பிருதிவி ஜலம் தேயு வாயு மனமென்பவற்றில் கிரியை யுண்டாகின்றது. ஓர்காலத்துக் கிரியையின் அபாவம உண்டாகின்றது. ஆதலால் பிருதிவி முதலியன கிரியை யின்றியவாகுங் காலத்துப் பிருதிவி ஜலம் தேயு வாயு மனது என்பவற்றில் கிரியையின் அத்தியந்தாபாவமில்லை; அங்ஙனமே சாமயிகாபாவமு மில்லை. ஏனெனின், சாமயிகாபாவம திரவிய மாத்திரத்திற் குண்டாகின்றது. கிரியைக்குச சாமயிகாபாவம சம்பவியாது என்பதை மேறகூறுவாம். ஆதலாற் சாமயிகாபாவமும் இல்லை. ஆனால் பிருதிவி முதலியவைகளினும கிரியையின பிராகபாவமும் துவம்ஸாபாவமு மிருக்கின்றன.

### சூ அ. நான்கு சம்ஸர்க்காபாவங்களுக்கும் பிரதியோகியோடு விரோதமும், அந்நியோந்நியாபாவத்திற்கு அவிரோதமு முண்டெனல்.

இவ்வாற்றாற் பூதல முதலியவற்றில் யாண்டுக் கடமுதலியன ஓர் காலத்து இருந்து, ஓர் காலத்திலிருப்ப தில்லையோ, ஆண்டு

முழுவதும் சாமயிகாபாவமாம்; அத்தியந்தாபாவ மின்று. ஏனெனின், அபாவத்திற்குப் பிரதியோகியோடு விரோதமிருக்கின்றது. யாண்டுப் பிரதியோகி யுளதோ, ஆண்டு அபாவம் இருப்பதில்லை. ஆனல் அபாவததின் அபாவம் இருக்கின்றது. யாண்டுப் பூதல முதலியவற்றில் ஓர் காலத்திற் கடமுதலியன விருந்து ஓர் காலத்தில் இருப்பதில்லையோ, ஆண்டு அத்தியந்தாபாவம் அங்கீகரிக்கின், அத்தியந்தாபாவம் நித்தியமா மாகலின் கட காலத்திலும் கடத்தின் அத்தியந்தாபாவம் இருத்தல் நேருதலான் அத்தியந்தாபாவத்திற்குத் தனது பிரதியோகியோடு விரோத மின்மையுண்டாகும். ஆதலாற் பூதல முதலியவற்றிற் கட முதலியவற்றின் அத்தியந்தா பாவம் சமபவியாது. எங்ஙனம்: கடத்தின் உற்பத்திக்கு முன் கபாலத்தில் கடத்தின் பிராகபாவம் இருக்கின்றது. கடமாகிய பிரதியோகி யுண்டாகவே கபாலத்தில் கடத்தின் பிராகபாவமிருப்பதில்லை; அதன் நாச முண்டாய்விடுகின்றது. ஆதலால் பிராகபாவத்திற்குப் பிரதியோகியோடு விரோதம் இருக்கின்றது. அங்ஙனமே கடத்தின் பிரத்தொம்ஸாபாவம் இருக்குங் காலத்துக் கடமிருப்பதில்லை, கடமிருக்குமளவும் கபாலத்திற் கடத்தின் பிரத்துவமஸாபாவம உண்டாகிற்றில்லை. ஆதலால் பிரத்துவம்ஸாபாவத்திற்கும் பிரதியோகியோடு விரோதமிருத்தல் வெளிப்படையாம். அங்ஙனமே பூதலமுதலியவற்றிற் சையோக சம்பந்தத்தால் கடமுதலியன விருக்குமளவும் பூதல முதலியவற்றிற் கடமுதலியவற்றின் சாமயிகாபாவ மிருப்பதில்லை; ஆனல் எதுவரையில் கடமுதலிய பிரதியோகி பூதல முதலியவற்றி லில்லையோ, அதுவரையில் சாமயிகாபாவ மிருக்கின்றது. கடமுதலிய பிரதியோகி வந்துவிடுமாயின், அப்போது சாமயிகாபாவத்திற்கு நாச முண்டாகின்றது. வநத கடத்தை யெடுத்துக்கொள்ளின், அப்போது சாமயிகாபாவம் மீண்டு முண்டாகின்றது. இதனுற்றான் சாமயிகாபாவத்திற்கு உற்பத்திநாசங்களை யங்கீகரித்திருக்கினறனர். இவ்வாற்ருன் சாமயிகாபாவத்திறகும பிரதியோகியோடு விரோதம் இருப்பது வெளிப்படையாம. எங்ஙனமபிராகபாவ முதலியவற்றிற்குப் பிரதியோகியோடு விரோத மிருக்கின்றதோ, அங்ஙனமே அத்தியந்தாபாவத்திற்கும் பிரதியோகியோடு விரோதம் சொல்லுதல் வேண்டும். சகல அபாவங்களுக்கும் பிரதியோகியோடு விரோத மிருக்கின், எந்தக்காலத்திற் பூதலத்திற் கடம் வைக்கப்பட்டதாகின்ற

தோ, அந்தக் காலத்தில் கடத்தின் அந்நியோந்நியாபாவம் பூதல த்தி லிருக்கலாகாது; கட முடைய பூதலத்தில் கடத்தின் அந்நி யோந்நியாபாவ மிருக்கின்றது. ஏனெனின், பேதத்தினை அந்நி யோந்நியாபாவ மென்பர். அதனைத் தன்னின் வேறுயதன்மை யென் றும், பின்னத் தன்மை யென்றும், வேற்றுமை யென்றும் கூறுவர். கடமுடைய பூதலமு கட சொரூப மன்று; கடத்தின் வேறாய தெனப்படும். இவ்வாற்றாற் கடமுடைய பூதலத்திற் கடத்தின் அந்நியோந்நியாபாவம் இருக்கின்றது. ஆதலால் கடத்தின் அந்நி யோந்நியாபாவத்திற்குக் கட ரூபப் பிரதியோகியோடு விரோதம் இல்லை. அங்ஙனமே பட முதலியவற்றின் அந்நியோந்நியாபாவத் திற்குப் பட முதலியவற்றோடு விரோத மில்லை. ஆதலால் எல்லா அபாவங்கட்கும் பிரதியோகியோடு விரோத மிருப்பதாகக் கூறு தல் சம்பவியாது. ஆனால் சில அபாவங்கட்குப் பிரதியோகியோடு விரோதமிருக்கின்றது; சிலவற்றிற்கு விரோதமில்லை.

பிராகபாவ முதலிய திருஷ்டாந்தத்தால் அத்தியந்தா பாவத் திற்குப் பிரதியோகியோடு விரோதம் சாதிக்கின், அப்போது அந்நி யோந்நியா பாவ திருஷ்டாந்தத்தால் அத்தியந்தா பாவத்திற்குப் பிரதியோகியோடு அவிரோதமும் சித்திக்கும். ஆதலால் கடத்தின் அந்நியோந்நியாபாவம்போலக் கடத்தின் அத்தியந்தாபாவமும் கட த்தின் அதிகரணத்திற் சம்பவிக்கின்றது.

என்றாலும் கடத்தின் அதிகரணத்தில் கடத்தின் அத்தியந்தா பாவம் சம்பவிக்கிறதில்லை. ஏனெனின், அபாவம் இருவகைத்தாம்:— ஒன்று அந்நியோந்நியாபாவம், மற்றொன்று சமசர்க்காபாவம். சம்சர்க்காபாவம் நால்வகைப்படும். இவ்வாற்றான ஐவகையபாவ முள. அவற்றுள், அபாவத்தன்மைத் தாமம் எல்லாவற்றினும் சமானமாம். நிஷேதமுக வுணர்சசிக்கு விஷயமாந தன்மையும் எல்லா அபாவங்களினும் சமானமா யிருக்கின்றது. என்றாலும் அந்நியோந்நியாபாவத்தினும் நால்வகைச சமசாக்காபாவத்தில் வேற்றுமை அநேக விதமாயுளது. எந்தவாக்கியத்தில் பிரதியோகி அநுயோகிகளை யறிவிக்குமபின்னவிபக்திகளை(வெவ்வேறுவேற்று மைகளை) யுடைய பதங்க ளுளவோ, அவ்வாக்கியத்தால் சம்சர் க்காபாவத்தின் பிரதீதி யுண்டாகின்றது. எங்ஙனம: உற்பத்திக்கு முன் கபாலத்தில் கட மில்லையென்னும வாக்கியத்தில் அநுயோகி

யை யறிவிக்கும் தபால மென்னும் பதம் ஏழாம் வேற்றுமை யீற்றதாம். பிரதியோகியை யறிவிக்கும் கட மென்னும் பதம் முதல் வேற்றுமை யீற்றதாம். ஆண்டுப் பிராகபாவத்தின் பிரதீதி யுண்டாகின்றது. அங்ஙனமே தடி. முதலியவற்றால் கடத்தின் காட்சியின்மை யுண்டாகின்றது. அப்போது அவ்வாக்கியத்தாற் றோனே கடத் துவம்ஸத்தின் தோற்ற முண்டாகிறது. வாயுவில் உருவமில்லையென்னும் வாக்கியத்தான் வாயுவில் உருவத்தினது அத்தியந்தாபாவத்தின் தோற்ற முண்டாகின்றது. ஆண்டும் அநு யோகியை யறிவிக்கும் வாயுவென்னும் பதம் ஏழாம் வேற்றுமை யீற்றதாம். பிரதியோகியை யறிவிக்கும் உருவபதம் முதல்வேற்று மை யீற்றதாம். அங்ஙனமே பூதலத்திற் கட மில்லை யென்னும் வாக்கியத்தாற் றோன்றிய ஞானத்திற்கு விஷயம் சாமயிகாபாவ மாம். ஆண்டும் அநுயோகியை யறிவிக்கும் பூதலபதம் ஏழாம் வேற்றுமை யீற்றதாம்; பிரதியோகியை யறிவிக்கும் ரூப பதம் முதல் வேற்றுமை யீற்றதாம். பூதலம் கடமன்றென்னும் வாக்கிய த்தால் பூதலத்திற் கடத்தின் அந்நியோந்நியாபாவம் தோற்று கின்றது. ஆண்டு அநுயோகியை யறிவிக்கும் பூதலபதமும் பிரதி யோகியை யறிவிக்கும் கடபதமுமாகிய இரண்டும் முதல்வேற்று மை யீற்றவாம. இவ்வாற்றான் பின்ன வேற்றுமை முடிபினை யுடைய பதங்களமைந்த வாக்கியத்தாற் றோன்றும் உணர்ச்சிக்கு விஷயமாந்தன்மை சமசர்க்காபாவத்தி லுளது; அந்நியோந்நியா பாவத்திலில்லை. சமான வேற்றுமை யந்தத்தினை யுடைய பதங்க ளமைந்த வாக்கியத்தாற்றோன்றிய வுணர்வுக்கு விடயமாந்தன்மை அந்நியோந்நியா பாவத்துண்டு, சம்சர்க்காபாவத்தி லில்லை. இவ் வாற்றான் அந்நியோந்நியாபாவத்தினும் விலக்ஷண சுபாவத்தினை யுடைய நால்வகைச் சம்சர்க்காபாவ முள. ஆதலால் பிராகபாவ பிரத்தொம்ஸாபாவங்களின் திருஷ்டாந்தத்தால் அத்தியந்தாபாவ த்திற்குப் பிரதியோகியோடு விரோதமே பெறப்பட்டதாகின்றது; விலக்ஷண சுபாவமுடைய அந்நியோந்நியாபாவத்தின் திருஷ்டாந்த த்தால் பிரதியோகியோடு விரோத மின்மை பெறப்படுவதில்லை. சம்சர்க்கா பாவத்திற்கு அந்நியோந்நியா பாவத்தோடு மற்றும் வேற்றுமை யுண்டு.

## பாவங்கட்கும் ஒன்றற்கொன்றுள்ள விரோதமும், அந்நியோந்நியாபாவத்திற்கு அவற்றோடுள்ள அவிரோதமும்.

நால்வகைச் சம்சர்க்காபாவங்கட்கும் ஒன்றற்கொன்று விரோதமுண்டு. ஒரு சம்சர்க்காபாவத்தின் அதிகரணத்தில் மற்றச சம்சர்க்காபாவங்கள் இரா. எங்ஙனம: கபாலத்தில் கடத்தின் உற்பத்திக்கு முன் கடத்தின் பிராகபாவமிருக்கின்றது. ஆண்டுக் கடத்தின் துவம்ஸமாவது, அத்தியந்தாபாவமாவது, சாமயிகாபாவமாவது இருப்பதில்லை. அங்ஙனமே கபாலத்தில் கடத்தின் துவம்ஸமுண்டாகுங்காலத்துப் பிராகபாவமுதலிய மூன்றுசமசர்க்காபாவங்களுமிருப்பதில்லை. கடத்தின அந்நியோந்நியாபாவம் கபாலத்தில் என்றுமிருக்கின்றது. அங்ஙனமே பூதலத்தில் கடத்தின் சாமயிகாபாவ மிருக்கின்றது. ஆண்டும் கடத்தின் பிராகபாவம், பிரத்துவம் சாபாவம, அத்தியந்தா பாவமென்னும மூன்று மிருப்பதில்லை. கடத்தின் அந்நியோந்நியாபாவம் ஆண்டும் இருக்கின்றது. அங்ஙனமே வாயுவில் உருவத்தின் அத்தியந்தாபாவம் இருக்கின்றது. ஆண்டு உருவத்தின் பிராகபாவம, பிரத்துவம்ஸாபாவம, சாமயிகாபாவமென்னும மூன்றும இருப்பதில்லை. உருவத்தின் அந்நியோந்நியாபாவம் வாயுவிலிருக்கின்றது. இவ்வாற்றான் நால்வகைச சமசர்க்காபாவங்கட்கும் ஒன்றற் கொன்று விரோதம உண்டு. அந்நியோந்நியாபாவத்திற்கு அவற்றோடு விரோத மில்லை. எங்ஙனம் அந்நியோந்நியாபாவத்திற்கு மற்ற அபாவங்களோடு விரோதமில்லாதிருக்கினும் பிராகபாவ முதலியவற்றிற்கு ஒன்றற்கொன்று விரோதமின்மை பெறப்படுவதில்லையோ, அங்ஙனமே அந்நியோந்நியாபாவத்திற்குப் பிரதியோகியோடு விரோதமின்மையைக் காணுதலான் எந்தச சமசர்க்காபாவத்திற்கும பிரதியோகியோடு விரோதமின்மை பெறப்படுவதில்லை.

## ௭௰. பிராசீனமதத்தில் அபாவங்களுக்கு ஒன்றற்கொன்றும் பிரதியோகியோடு முள்ள விரோதாவிரோதங்களை விரிவாய்க் கூறுதல்.

இனி அபாவங்கட் கொன்றற் கொன்றும பிரதியோகியோடு முள்ள விரோதாவிரோதங்களை விஸ்தாரமாய்க் கூறுவாம்:— பிரதி.

யோகியின் உபாதான காரணத்தில் பிராகபாவப் பிரத்துவம்ஸாபாவங்களிரண்டுமுள. எங்ஙனம்: கடத்தின் உபாதான காரணமாகிய கபாலத்தில் கடப் பிராகபாவம் கடத்தின் உற்பத்திக்கு முன்னுளது. தண்ட முதலியவற்றால் கடத்தையுடைக்கின், அப்போது கடத்தின் பிரத்துவம்ஸாபாவம அக்கபாலத்தின்கண்ணே யுளது. ஆதலால் பிராகபாவப் பிரத்துவம்ஸாபாவங்களுக் கொன்றற்கொன்று விரோதம் கூறுதல் பொருந்தாது. அங்ஙனமாயினும ஒரு காலத்தில் இரண்டு மிரா; ஆனால் வெவ்வேறு காலத்திலிருக்கும். ஆதலால் ஒரு காலத்தில் உடனிருத்தலின்மை வடிவினதாகிய விரோதம் பிராகபாவப் பிரத்துவம்ஸாபாவங்கட்கு ஒன்றற் கொன்றுளது. அங்ஙனமே அத்தியந்தாபாவத்திற்கும் அவற்றோடு விரோதம் அங்கீகரித்தல் வேண்டும். அந்நியோந்நியாபாவத்திற்கு எவ்வபாவத்தோடும் விரோத மில்லை. ஏனெனின், கபாலத்தில் கடத்தின் பிராகபாவ மிருக்கின்றது; ஆண்டுக் கடத்தின் அந்நியோந்நியாபாவமும் இருக்கின்றது. கபாலத்தில் கடத்தின் பிரத்தொம்ஸாபாவமுள்ள காலத்தும் கடத்தின் அந்நியோந்நியாபாவம் இருக்கின்றது. தந்துவில் கடத்தின் அத்தியந்தாபாவம இருக்குமிடத்தும் கடத்தின் அந்நியோந்நியாபாவம் இருக்கின்றது. பூதலத்தில் கடத்தின் சாமயிகாபாவம் இருக்குங்காலத்தும ஆண்டுக் கடத்தின் அந்நியோந்நியாபாவ மிருக்கின்றது. இவ்வாற்றான் அந்நியோந்நியாபாவத்திற்கு எவ்வபாவத்தோடும விரோதமில்லை. அங்ஙனமாயினும் சம்சர்க்கர்பாவத்திற்கு இது சுபாவமாம்:— நால்வகைச் சம்சர்க்காபாவங்களில் ஒரு சம்சர்க்காபாவம் ஒரு காலத்திருக்கும்; மற்றைய இரா. எங்ஙனம்: கபாலத்தில் உற்பத்திக்கு முன் கடத்தின் பிராகபாவ மிருக்கின்றது. அக்காலத்தில் கடத்தின் பிரத்துவம்ஸாபாவ மிருப்பதில்லை; கடத்தின் பிரத்துவம் ஸாபாவ மிருக்குமாயின், அப்போது பிராகபாவ மிருப்பதில்லை. கபாலத்தில் கடத்தின் சாமயிகாபாவமும் அத்தியந்தாபாவமும் என்று மிருப்பதில்லை. கபாலத்தில் கடத்தின் பிராகபாவமும் பிரத்துவமஸாபாவமு மிருக்குங்காலத்துப் படத்தின் அத்தியந்தாபாவமு மிருக்கின்றது. ஆயினும், ஒரு பிரதியோகியினையுடைய இரண்டு சம்சர்க்காபாவ மிருப்பதில்லை யென்பது நியமம். வேறு பிரதியோகியினையுடைய வேறு சம்சர்க்காபாவம் இருத்தற்கு விரோதமில்லை. அங்ஙனமே பூதல முதலியவற்றில் கடத்தின் சாம

யிகாபாவ மிருக்கின், ஆண்டுக் கடத்தின் அத்தியந்தாபாவு மும், பிராகபாவமும், பிரத்துவம்ஸாபாவமு மிருப்பதில்லை. வாயு வில் உருவத்தின் அத்தியந்தாபாவ மிருக்கின், ஆண்டு உருவத்தின் பிராகபாவமுதலியன இருப்பதில்லை.

சையோக சம்பந்தத்தால் ஓர் காலத்துப் பூதல முதலியவற் றிற் கட மிருக்கின்றது. சமவாய சம்பந்தத்தாற் கபாலமல்லாத பிற பதார்த்தங்களிற் கடம் என்றும இராது. ஆதலால் சமவாய சம்பந்தத்தால் கடத்தின் அத்தியந்தாபாவம பூதல முதலியவற்றி லிருக்கின்றது. சையோக சம்பந்தத்தால் கடத்தின் சாமயிகா பாவ மிருக்கின்றது. ஆதலால் சாமயிகாபாவ அத்தியந்தாபாவங் கடகு ஒன்றற்கொன்று விரோதம சம்பவியாது. அங்ஙனமாயி னும் கடத்தின் சையோக சம்பந்தத்தால் வரைந்து கொள்ளப் பட்ட சாமயிகாபாவத்திற்குக் கடத்தின் சையோகசம்பந்தத்தால் வரைந்து கொள்ளப்பட்ட அத்தியந்தாபாவத்தோடு விரோதம் உளது. சமவாய சம்பந்தத்தால வரைந்து கொள்ளப்பட்ட அத்தி யந்தாபாவத்தோடு விரோதமில்லை. இதனுல் இந்நியமம் பெறப் பட்டதாயிற்று:—எவ்வதிகரணத்தில் எக்காலத்தில் எப்பதார்த்த த்திற்கு எச்சம்பந்தத்தால் ஒரு சம்சாக்காபாவ முளதாகின்ற தோ, அவ்வதிகரணத்தில அக்காலத்தில அப்பதார்த்தத்திற்கு அச்சம்பந்தத்தால் வேறு சம்சர்க்காபாவம உண்டாவதில்லை; வேறு சம்பந்தத்தால் உண்டாகின்றது. எச்சம்பந்தத்தால் எப் பதார்த்தம யாண்டு இருக்க வில்லையோ, ஆண்டு அப்பதார்த்தத் திற்கு அதன் சம்பந்தத்தால் வரைந்து கொள்ளப்படும் அபாவம் சொல்லப்படுகின்றது. பூதலத்திற் சையோக சம்பந்தத்தால் ஓர் காலத்துக் கடமுளதாகின்றது ஆதலால் சையோகசம்பந்தத்தால் வரைந்துகொள்ளப்பட்ட கடத்தின் அத்தியந்தாபாவம் பூதலத்தில் என்று மில்லை. ஆனுல் பூதலத்தன்மைச் சாதியினும, பூதலத்தின் உருவமுதலிய குணங்களினும் சையோக சம்பந்தத்தால் கடம் என்றும் இருப்பதில்லை. ஏனெனின், இரண்டு திரவியங்கட்குச் சையோகமுண்டாம; திரவியத்திற்கும சாதிக்கும், அங்ஙனமே திர வியத்திற்கும் குணத்திற்கும சையோக முண்டாவதில்லை. ஆதலாற் பூதலத்தன்மையினும், பூதலத்தின் உருவ முதலிய குணங்களினும் கடத்தின் சையோக சம்பந்தத்தால் வரைந்து கொள்ளப்பட்ட அத்தியந்தாபாவ மிருக்கின்றது. பூதலத்தன்மையினும் அங்ஙனமே

உருவமுதலிய குணங்களிலும், சமவாய சம்பந்தத்தாலும கடம ஒருநாளும் இருப்பதில்லை. ஏனெனின்:—

காரியத் திரவியத்திற்குத் தனது உபாதான காரணத்தில் சமவாயசம்பந்த முளதாகின்றது; பிறவற்றிலிருப்பதில்லை. குணத்தின் சமவாயம் குணியிலிருக்கும். ஜாதியின் சமவாயம் கிரியையுடையதன்கண்ணிருக்கும். வேறிடங்களில் எங்கும சமவாய சம்பநதமிராது. பரமாணுமுதலிய நித்தியத் திரவியங்களிலும் விசேஷ பதார்த்தத்தின் சமவாயம் நையாயிகர் அங்கீகரிக்கினும், விசேஷ பதார்த்தம அப்பிரசித்தமாம். அதனைக்கற்பித்தல் நிஷ்பிரயோஜனமாம். இஃது அத்வைத நூல்களில் வெளிப்படை. தீநிதிகார சிரோமணி பட்டாசாரியரும விசேஷ பதார்த்தத்தின் கண்டனமே கூறியிருக்கின்றார். ஆதலால் உபாதான காரணத்திலும் குணியினும் வியக்தியினும கிரியை யுடையதன்கண்ணுமே முறையே காரியத திரவியம் குணம ஜாதி கிரியை யென்பவற்றின் சமவாய சமபநதமிருக்கும. வேறெதற்கும எதன்கண்ணும் சமவாய சம்பநதமின்று. இவ்வாற்றாற பூதலத்தினும பூதலத்தின் உருவமுதலிய குணங்களிலும கடத்தின் சமவாய சமபநதம் என்றும் இருப்பதில்லை. ஆனாற் கபாலத்திற்றான் கடத்தின் சமவாயமிருக்கின்றது. ஆதலால் கடத்தின் உபாதான காரணமாகிய கபாலத்தை விட்டுப் பிறவிடங்களில முழுவதும கடத்தின் சமவாய சம்பந்தத்தான் வரைநது கொள்ளப்பட்ட அத்தியநதாபாவ மிருக்கின்றது. கடத்தின் வேறு சமசர்க்காபாவம அவ்வத்தியநதா பாவத்தோடிருப்பதில்லை. ஏனெனின், கடத்தின் பிராகபாவமும் பிரதவம்சாபாவமும கபாலமின்றிய பிறவிடங்களில் இருப்பதில்லை. சாமயிகாபாவம ஆண்டிருக்கும. யாண்டு ஓர காலத்தில் எசசம்பந்தததால் பிரதியோகி யுளதாகின்றதோ, ஆண்டு ஓர சமபநதத்தால் எக்காலத்தில பிரதியோகி யிருப்பதில்லையோ, அக்காலத்து அதன் சமபநதத்தான் வரைநது கொள்ளப்பட்ட அத்தியந்தாபாவமே உளதாகின்றது. கபாலமின்றிய பிற பதார்த்தங்களில் சமவாய சமபநதத்தான கடம என்றும் இருப்பதில்லை. ஆதலால் கடத்தின் சமவாய சம்பநதத்தான் வரைநதுகொள்ளப்பட்ட அத்தியநதாபாவத்தின் அதிகரணத்தில் கடத்தின் சமவாய சமபநதத்தான் வரைநது கொள்ளப்பட்ட சாமயிகாபாவ மிருப்பதில்லை.

ஆராயுமிடத்துத் திரவியத்தின் சமவாயசம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட சாமயிகாபாவம் அப்பிரசித்த மாம்; திரவியத்தின் சையோக சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட சாமயிகாபாவமே பிரசித்தமாம். ஏனெனின், நித்தியத் திரவியமோ சமவாயசம்பந்தத்தான் எதனினு மிருப்பதில்லை. ஆதலால் நித்தியத் திரவியத்திற்குச் சமவாயசம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட அத்தியந்தாபாவமு மிருக்கின்றது. சமவாய சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட சாமயிகாபாவம் நித்தியத் திரவியத்திற்கு ஓரிடத்து மில்லை. காரியத் திரவியத்திற்குத் தனது உபாதானகாரணத்தில் பிராகபாவம் அல்லது பிரத்துவம்ஸாபாவம் இருக்கும். ஆண்டுச் சமவாய சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட சாமயிகாபாவமாவது சமவாயசம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட அத்தியந்தாபாவமாவது இருப்பதில்லை. தனது உபாதான காரணத்தைவிட்டு அந்நிய பதார்த்தத்தில் சமவாய சம்பந்தத்தால் காரியத் திரவியம் ஓர் காலத்திருந்து, ஓர் காலத்திராதாயின் சமவாய சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட சாமயிகாபாவ முளதாம். உபாதானத்தின் வேறாகியதில் காரியத் திரவியம் என்றும் இராது. ஆதலால் உபாதானத்தின் வேறாய பதார்த்தங்களில் காரியத் திரவியத்திற்குச் சமவாய சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட சாமயிகாபாவம் சம்பவியாது. ஆனால் ஆண்டும் சமவாய சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட அத்தியந்தாபாவமே காரியத் திரவியத்திற்காம். இவ்வாற்றான் சமவாய சம்பந்தாவச்சின்ன சாமயிகாபாவம் திரவியத்திற்கு அப்பிரசித்தமாம்.

குணக்கிரியைகளும் சமவாய சம்பந்தத்தான் எந்தத் திரவியத்திலுண்டாய் நஷ்டமாய் விடுகின்றனவோ, அத்திரவியத்தில் சமவாய சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட சாமயிகாபாவம் இருப்பதில்லை. ஆனால் முதலிற் பிராகபாவமும் பின்னர்ப் பிரத்துவம்ஸாபாவமுமுள. கடத்தின் குணக்கிரியைகள் சமவாய சம்பந்தத்தால் அந்நியத் திரவியத்தில் என்றுமிரா. ஆண்டும் அவற்றின் சமவாய சம்பந்தாவச்சின்ன அத்தியந்தாபாவமுளது; சாமயிகாபாவமின்று. இவ்வாற்றான் குணக்கிரியைகளுக்கும் சமவாய சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட சாமயிகாபாவம் அப்பிரசித்தமாம்; அங்ஙனமே சையோக சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட சாமயிகாபாவமும் குணக் கிரியைகளுக்கு அப்பிரசித்த

மாம். ஏனெனின், சையோக சம்பந்தத்தான் குணக்கிரியைகள் ஓர் காலத்திருந்து ஓர் காலத் தில்லாதிருக்குமாயின், சையோக சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்படும சாமயிகாபாவம் குணக்கிரியைகளுக் குளதாம. சையோக சம்பந்தத்தான் குணக்கிரியைகள் எதனினும என்று மிருப்பதில்லை. ஆதலால் குணக்கிரியைகளுக்குச் சையோக சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்படும் அத்தியந்தாபாவமே யுளது. அவ்வத்தியந்தாபாவும எல்லாப் பதார்த்தங்களினு முளதாம. ஏனெனின், சையோக சம்பந்தத்தான் குணக்கிரியைகள் ஓர் பதார்த்தத்தி லிருக்குமாயின், அப்பதார்த்தத்தில சையோக சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட அத்தியந்தாபாவம் குணக்கிரியைகளுக் கிராது. அச்சையோக சம்பந்தத்தான் குணக்கிரியைகளுக் காதார மொன்றும் இல்லை. ஆதலால் குணக்கிரியைகளின் சையோகசம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்படும அத்தியந்தாபாவம் கேவலாந்வயியாம். எதன் அபாவம் ஓரிடத்து மிருப்பதில்லையோ, அது கேவலாந்வயி யெனப்படுகின்றது. முற்கூறிய அத்தியந்தாபாவம்முழுவதுமாம். அவ்வத்தியந்தாபாவத்திற்கு அபாவம் ஓரிடத்து மில்லையாகலின் கேவலாந்நுவயி யெனப்படுகின்றது. இவ்வாற்றான் சமவாய சம்பந்தத்தான் வரைந்துகொள்ளபபட்ட சாமயிகாபாவமும், சையோக சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட சாமயிகாபாவமும குணக்கிரியைகளுக்கு அப்பிரசித்தமாம்.

அங்ஙனமே ஜாதிக்கும் சாமயிகாபாவம் அப்பிரசித்தமாம். ஏனெனின், சையோக சம்பந்தத்தாலோ ஜாதி எப்பதார்த்தத்திலும் என்று மிருப்பதில்லை. ஆதலால் சகல பதார்த்தங்களினும் ஜாதியின் சையோக சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட அத்தியந்தாபாவம் உளது; சாமயிகாபாவம இல்லை. அங்ஙனமே தனது ஆசிரயமாகிய வியக்தி எதுவோ, அதன்கண் சமவாய சம்பந்தத்தான் ஜாதி எப்போதும் இருக்கின்றது. அந்த வியக்தியில் ஜாதியின் சமவாய சம்பந்தத்தான் ஒரு அபாவமும இருப்பதில்லை. எங்ஙனம்: கடத்தன்மைச் சாதி கடவியக்தியில் சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. ஆண்டுக் கடத்தன்மையின் அத்தியந்தாபாவ சாமயிகாபாவங்கள் அல்லது பிராகபாவமும அங்ஙனமே துவம்ஸாபாவமும் இருப்பதில்லை. ஏனெனின், பிராகபாவப் பிரத்துவம்சாபாவங்களோ அநித்தியத்தினவாம். கடத்தன்மை நித்தி

யம்; அதற்குப் பிராகபாவப் பிரத்துவம்ஸாபாவங்கள் சம்பவியா. யாண்டுப் பிரதியோகி என்று மிராதோ, ஆண்டு அத்தியந்தாபாவ மிருக்கும். யாண்டுப் பிரதியோகி ஓர் காலத்திருந்து ஓர்காலத்திரு ப்பதில்லையோ, ஆண்டுச் சாமயிகாபாவ முளதாம. கடத்தில் கட த்தன்மை என்றும் சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. ஆத லால் கடத்தில் கடத்தன்மையின் சமவாய சம்பந்தத்தான் வரை ந்துகொள்ளப்பட்ட அத்தியந்தாபாவமும், சமவாய சம்பந்தா வச்சின்ன சாமயிகாபாவமும சம்பவியா. அங்ஙனமே கடத்தின் வேறான கடத்தன்மைக் காதாரமாகாத எல்லாப படமுதலிய வற்றிலும் கடத்தன்மைச சாதி சமவாய சம்பந்தத்தான் எப போது மிருப்பதில்லை. ஆதலால் அவற்றிலும கடத்தன்மைச் சாதியின் சமவாய சம்பந்தத்தான் வரைநது கொள்ளபபட்ட சாமயிகாபாவ மில்லை. ஆனால் சமவாய சம்பந்தத்தான் வரைநது கொள்ளப்பட்ட அததியந்தாபாவ மிருக்கின்றது. இவ்வாற்றான திரவியத்தின் வேறான பதாாத்தஙகளுககுச் சாமயிகாபாவம அப் பிரசித்தமாம்.

திரவியமும் நித்திய அநித்திய பேதத்தால் இருவகைத்தாம். பிரு திவி ஜல தேயு வாயுக்கள் துவியணுக முதலிய வடிவ அநித்திய மாம. ஆகாயம, காலம, திக்கு, ஆத்மா, மனம், பரமாணு வடிவின வாகிய பிருதிவி ஜல தேயு வாயுக்கள் என்பவை நிததியத்திரவிய ங்களாம். அந்த நித்தியத் திரவியம் சமவாய சம்பந்தத்தான் ஓர் காலத்து ஒரு பதார்த்தத்தி லிருப்பதில்லை. ஆதலால் அவற் றிற்கோ சமவாய சம்பந்தத்தான் வரைநதுகொள்ளப்பட்ட சாம யிகாபாவம் ஒரிடததுமில்லை. ஆனால் சமவாய சம்பநததான் வரைநதுகொள்ளப்பட்ட அத்தியந்தாபாவமே முழுதுமாம. அங் ஙனமே அநித்தியமான துவியணுகாதி திரவியங்கள் சமவாய சம பந்தத்தால் தமது அவயவமாகிய பரமாணு முதலியவற்றி லிருக் கின்றன. அவயவமின்றிய வேறு பதாாத்தங்களில் அநித்தியத் திரவியம் சமவாய சமபந்தத்தால் என்றும் இருப்பதில்லை. அவ யவங்களில் அவயவியின் பிராகபாவப் பிரத்துவமஸாபாவங்க ளிரு க்கின்றன. ஆதலால் சமவாய சம்பந்தததான் வரைநதுகொள்ள ப்பட்ட சாமயிகாபாவம் அவயவத்தில் காரியத் திரவியத்திற் கிருப்பதில்லை. அவயவத்தின் வேறான பதார்த்தங்களில் சமவாய சம்பந்தத்தான் அவயவமும் என்று மிருப்பதில்லை. ஆதலால் சம

வாய சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட சாமயிகாபாவம் ஆண்டில்லை. ஆனால் சமவாய சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட அத்தியந்தாபாவமுளது. இவ்வாற்றான் திரவியத்திற்கும் சமவாய சம்பந்தாவச்சின்ன சாமயிகாபாவம் அப்பிரசித்த மாம். கேவல சையோக சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட சாமயிகாபாவம் திரவியத்திற்குப் பிரசித்தமாம். அதுவும் காரியத் திரவியத்திற்காம். நித்தியத் திரவியத்திற்கோ சையோக சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட அத்தியந்தாபாவமே முழுவதுமாம். சாமயிகாபாவம் யாண்டும் நித்தியத் திரவியத்திற் கின்று. ஏனெனின் நித்தியத் திரவியத்திற்கு அவிருத்தி சுபாவமாம். ஆதலால் சையோக சம்பந்தத்தால் நித்தியத் திரவியம் ஒரு பதார்த்தத்திலும் ஒருபோது மிருப்பதில்லை. நித்தியத் திரவியத்திற்கும் மற்றைத் திரவியங்களோடு சையோக முளது. எதன் சையோகம் எதனிடத்தி லுளதாகின்றதோ, அது அதனிடத்துச் சையோக சம்பந்தத்தா லுளதாம். என்றாலும் நித்தியத் திரவியத்திற்குச * சையோகவிருத்தி நியாமகமன்று. குண்டவக்கினிகளின சையோகம் அக்கினியினது விருத்தியின் † நியாமகமாம்; குண்டத்தினது விருத்தியின் நியாமகமன்று, அங்ஙனமே நித்தியத் திரவியத்திற்குக் காரியத் திரவியத்தோடுள்ள சையோகமும் காரியத் திரவியத்தினது விருத்தியின் நியாமகமாம். நித்தியத்திரவியத்தினது விருத்தியின் நியாமகமன்று. இக்காரணத்தான் சையோக சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட சாமயிகாபாவம் நித்தியத் திரவியத்திற்கு அப்பிரசித்த மாம். சையோக சம்பந்தத்தாலாதல் சமவாய சம்பந்தத்தாலாதல் எந்தப் பதார்த்தம் ஒன்றிலு மிருப்பதில்லையோ அது அவிருத்தியெனப் படுகின்றது. நித்தியத் திரவியத்திலோ சையோக சம்பந்தத்தானும் சமவாய சம்பந்தத்தானும் பிறபொருள்களிருக்கும். பிறபதார்த்தங்களில் சையோக சம்பந்தத்தாலாதல் சமவாய சம்பந்தத்தாலாதல் நித்தியத்திரவிய மிருப்பதில்லை. ஆதலால் நித்தியத் திரவியங்களை அவிருத்தி யென்பர். இவ்வாற்றாற் சம்சர்க்காபாவம் அந்நியோந்நியாபாவ மென்னும் வேறுபாட்டால் அபாவம் இருவகைப்படும். அவற்றுள் சம்சர்க்காபாவத்திற்கு நான்கு பேதங்களுள. அந்நான்கிற்கும் ஒன்றற்கொன்று விரோதமுண்டு. அந்நான்கிற்குமே தம் பிரதியோகி

---

* சையோகத்தால் ஒன்றன்கணிருப்பது. † நியாமகம்=நியமிப்பது.

யோடு விரோத முண்டு. பிரதியோகியோடு விரோதம் இவ்வகை யாளும்:—எந்தப் பிரதியோகி எந்தச் சம்பந்தத்தான் யாண்டுளதோ, அதற்கு அச்சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட அபாவம் இருப்பதில்லை. ஒரு சம்பந்தத்தால் பிரதியோகியிருக்கும்; வேறு சம்பந்தத்தால் அதன் அபாவமு மிருக்கும். எங்ஙனம்: சையோக சம்பந்தத்தாற் பூதலத்திற் கடம் இருக்குங்காலத்துச் சமவாய சம்பந்தத்தால் கடமிருப்பதில்லை. ஆதலால சையோக சம்பந்தத்தால் கட முடைய பூதலத்திலும் கடத்தின் சமவாய சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட அத்தியந்தாபாவம் இருக்கின்றது. ஆதலால் எச்சம்பந்தத்தால் பிரதியோகி யுளதாகின்றதோ, அச்சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட சம்சாக்காபாவத்திற்குப் பிரதியோகியோடு விரோத மிருக்கின்றது. சம்சாக்கா பாவத்திற்கு ஒன்றற்கொன்றுள்ள விரோதமும் சமான சம்பந்தத்தா னுளதாம். ஒரு சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட ஒரு சம்சாக்காபாவம் யாண்டுளதோ, ஆண்டும் வேறு சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட வேறு சம்சர்க்காபாவம் உண்டு எங்ஙனம்: கடமின்றிய பூதலத்திற் கடத்தின் சையோக சம்பந்தாவச்சின்ன சாமயிகா பாவ முளது. அதே கடத்தின் சமவாய சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட அத்தியந்தாபாவம் அப்பூதலத்தின்கண்ணே யிருக்கின்றது. இவ்வாற்றான பிரதியோகியோடு சம்சாக்காபாவத்திற்கு ஒரு சம்பந்தத்தான் விரோத மிருக்கின்றது. சமான சம்பந்தத்தானே சம்சாக்கா பாவங்களுக்கு ஒன்றற்கொன்று விரோதம இருக்கின்றது. அந்நியோந்நியாபாவத்திற்கோ பிராகபாவ முதலியவற்றோடு விரோதமில்லாததுபோலத் தனது பிரதியோகியோடும் விரோதமில்லை. விசாரம் செய்யின் அந்நியோந்நியாபாவத்திற்கு அந்நிய அபாவங்களோடு விரோதமில்லையாயினும் தனது பிரதியோகியோடு அந்நியோந்நியாபாவத்திற்குத்தான் விரோதமுளது. அநேக நூல்களில் இஃதெழுதப்பட்டிருக்கின்றது:—சம்சாக்காபாவத்திற்குப் பிரதியோகியோடு விரோத முண்டு. அந்நியோந்நியாபாவத்திற்குப் பிரதியோகியோடு விரோத மில்லை. ஆனால் பிரதியோகித் தன்மையை வரைந்துகொள்ளும் தாமத்தோடு விரோதமுண்டு. எங்ஙனம: பூதலத்திற கடமிருக்கின் அக்காலத்தும கடத்தின அந்நியோந்நியாபாவமிருக்கின்றது. ஏனெனின், பேதத்தை அந்நியோந்நியாபாவ மென்பா. கடமுடைய பூதலமும் கடரூபமன்று; ஆனால் கடத்தின வேறும. கடத்தின்

22

வேறாகிய அதாவது கடத்தின் பேதமுடைய பூதலமிருக்கின்றது. பேதமுடையது, அந்நியோந்நியாபாவமுடைய தெனக் கூறுவதிற் பொருள் ஒன்றே யாம். கடமொழிந்த மற்றெல்லாப் பொருள்களும் கடத்தின்வேறாம். கடத்தில் கடத்தன்மை யிருக்கின்றது. ஆண்டுக் கடத்தின்பேதவடிவமானகடாந்நியோந்நியாபாவம் இருப்பதில்லை. கடமொழிந்த மற்றைப் பொருள்களினும் கடத்துவம் இருப்பதில்லை. ஆண்டு எல்லாக் கடத்திற்கும் அந்நியோந்நியாபாவ மிருக்கின்றது. இவ்வாற்றாற் கடாந்நியோந்நியாபாவத்திற்குக்கடத்தோடு விரோதமில்லை; ஆனால் கடத்தன்மையோடு விரோத மிருக்கின்றது. ஆண்டுக் கடாந்நியோந்நியாபாவத்திற்குப் பிரதியோகி கடம்; பிரதியோகித் தன்மையை வரைவது கடத்தன்மை. எதன் அபாவமுளதோ அது பிரதியோகியெனப்படுகின்றது. பிரதியோகியிலிருக்கும் தாம மெதுவோ, அது பிரதியோகித்தன்மையை வரைவதெ(பிரதியோகித்தன்மையவச்சேதக மெ)னப்படுகின்றது. பிரதியோகி யிலிருக்கும் தாமம் அநேகமாம். எங்ஙனம்: கடத்தில் கடத்தன்மை யிருக்கின்றது. பிருதிவித் தன்மை திரவியத் தன்மை பதார்த்தத் தன்மை முதலியனவும் கடத்திலிருக்கின்றன. அவற்றுள் பிருதிவித் தன்மை முதலியனவும் கடாந்நியோந்நியாபாவத்தின் பிரதியோகித் தன்மை யவச்சேதக மாதல்வேண்டும். பிருதிவித் தன்மை முதலியன கடாந்நியோந்நியாபாவத்தின் பிரதியோகித்தன்மை யவச்சேதக மன்று. பிருதிவி யந்நியோந்நியாபாவத்தின் பிரதியோகித் தன்மை யவச்சேதகம் பிருதிவித் தன்மையாம். திரவியாந்நியோந்நியா பாவத்தின் பிரதியோகித் தன்மை யவச்சேதகம் திரவியத் தன்மையாம். கடாந்நியோந்நியா பாவத்தின் பிரதியோகித் தன்மை யவச்சேதகம் பிருதிவித் தன்மை திரவியத் தன்மை முதலிய வன்று; கடவடிவான பிரதியோகியிலோ இருக்கின்றன. ஆகலின் கடத் தன்மையைப் போல கடாந்நியோந்நியாபாவத்திற்குப் பிருதிவித்தன்மை திரவியத்தன்மை முதலியவற்றைப் பிரதியோகித்தன்மை யவச்சேதகம் என்னல் வேண்டும். அங்ஙனமாயினும் அபாவத்தை யறிவிக்கும் பதத்தோடு பிரதியோகியை யறிவிக்கும் பதத்தை உச்சரிக்கின் எந்தத் தர்மத்தின் தோற்ற முண்டாகிறதோ, அது பிரதியோகித்தன்மை யவச்சேதக மெனப்படும். கடாந்நியோந்நியாபாவத்தினைக் கூறுவதில் பிரதியோகியை யறிவிப்பது கடபதமாம். அங்ஙனமே படம்

கடமன்று என்னுமிவ்வாற்றானும் பிரதியோகியை யறிவிப்பது கட பதமாம். அதனை யுச்சரிக்கின் கடத்தன்மையின் உணர்ச்சி யுண்டா கின்றது. பிருதிவித்தன்மை திரவியத்தன்மை முதலியவற்றின் உணர்ச்சி யுண்டாதலில்லை. ஆதலால் கடாந்நியோந்நியா பாவத்தின் பிரதியோகித் தன்மை யவச்சேதகம் கடத்தன்மையாம்; பிருதிவி த்தன்மைமுதலியனவன்று. ஜலம் பிருதிவியன்றென்று கூறி, பிரு திவி யந்நியோந்நியாபாவம் கூறின், அப்போது பிரதியோகியை யறி விப்பது பிருதிவி யென்னும் பதமாம். அதனை உச்சரிக்கின் பிருதிவி த்தன்மையின் உணர்ச்சி யுண்டாகின்றது. ஆண்டுப் பிரதியோகித் தன்மையவச்சேதகம் பிருதிவித்தன்மையாம். குணம் திரவியமன் றென்றிவ்வாறு கூறி, திரவியாந்நியோந்நியாபாவத்தைக் கூறின், அப்போது பிரதியோகியை யறிவிப்பது திரவிய பதமாம். அதனை யுச்சரிக்கின் திரவியத் தன்மையின் உணர்ச்சி யுண்டாகின்றது. ஆண்டுப் பிரதியோகித் தன்மை யவச்சேதகம் திரவியத்தன்மையாம். கடபதத்தை யுச்சரிக்கின் கடத்தன்மையி னுணர்ச்சி யுண்டாகின் றது. பிருதிவித்தன்மை முதலியவற்றி னுணர்ச்சியுண்டாவதில்லை. இதன்கண் இது ஏதுவாம்:— கடபதத்திற்குக் கடத்தன்மை விசி ஷ்டத்தில் சக்தியிருக்கின்றது. எந்தத் தாம விசிஷ்டத்தின்கண் எந்தப் பதத்தின் சக்தியுளதோ, அந்தத்தாமத்தின் உணர்ச்சி அப் பதத்தா னுண்டாகின்றது. இவ்வாற்றான் கடாந்நியோந்நியாபாவ த்தின் பிரதியோகித்தன்மை யவச்சேதகம் கடத் தன்மையாம். அது கடத்திலிருக்கும். கடாந்நியோந்நியாபாவம் கடத்தி லிருப்ப தில்லை. கடத்தின் வேறாகிய சகல பதார்த்தங்களினும் கடத்தின் அந்நியோந்நியாபாவம் இருக்கின்றது. ஆண்டுக் கடத்துவ மிருப்ப தில்லை. ஆதலால் கடத்தன்மைவடிவப் பிரதியோகித்தன்மை யவ ச்சேதகத்தோடு கடாந்நியோந்நியாபாவத்திற்கு விரோத முண்டு. கடவடிவப் பிரதியோகியோடு விரோதமில்லை. சமசர்க்காபாவத்திற் குப் பிரதியோகியோடு விரோதமுண்டு. இவ்வாறு அநேக நூலாசிரி யா எழுதியிருக்கின்றனா. சமசர்க்காபாவ அந்நியோந்நியாபாவங் களின இலக்ஷணமுமிவ்வாறத்தனை யநுசரித்தேசெய்திருக்கின்ற னா. பிரதியோகி விரோதியான அபாவமெதுவோ, அது சம்சர்க்கா பாவமெனப்படுகின்றது. பிரதியோகித்தன்மையவச்சேதகவிரோதி யபாவம் அந்நியோந்நியாபாவமெனப்படுகின்றது. இவ்வித லக்ஷண த்தைக் கூறுதலானும் அந்நியோந்நியாபாவத்திற்குப் பிரதியோகி

'யோடு அவிரோதமே சித்திக்கின்றது. நால்வகைச் சம்சர்க்காபாவங் கட்கும் பிரதியோகியோடுதான் விரோதம் சித்திக்கின்றது. ஆனால் நூலாசிரியர்களது இங்ஙனமெழுதிய எழுத்துக்கள் யாவும் தூல திருஷ்டியாலாம்; விசார திருஷ்டியாலில்லை. ஏனெனின், அத்தியந் தாபாவத்திறகு எவ்வாற்றாற் பிரதியோகியோடு விரோதமுளதோ, அவ்வாற்றால் அந்நியோந்நியா பாவத்திற்கும் பிரதியோகியோடு விரோதமுளது. எப்பூதலத்தில் சையோக சம்பந்தத்தாற் குடம் உளதோ, அப்பூதலத்தின்கண்ணே சமவாய சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட கடத்தின் அத்தியந்தா பாவத்திற்கும் பிரதியோகியோடு முற்றும் விரோத மின்று. ஆனால் எந்தச சம்பந்தத்தான் பிரதியோகி யுளதாகின்றதோ, அசசமபநதத்தான் வரைந்து கொள்ளப்பட்ட அத்தியந்தாபாவம் இருப்பதில்லை. ஆதலால் அபாவத்திற்குப் பிரதியோகித் தன்மை யவசசேதக சம்பந்த விசிஷ்டப் பிரதியோகியோடு விரோதமுளது. பிரதியோகித் தன்மை யவச்சேதக சம்பந்தத்தின் வேறாய சம்பந்த விசிஷ்டப் பிரதியோகியோடு எநத அபாவததிற்கும விரோதமின்று. எச்சம்பந்தத்தான் பதார்த்தத்தின் அபாவம் சொல்லப்படுகின்றதோ அது பிரதியோகித்தன்மை யவச்சேதக சம்பந்தமெனப்படுகின்றது. அத்தியந்தாபாவத்தின் பிரதியோகித்தன்மை யவசசேதக சம்பந்தம் அநேகமாம். ஏனெனின், எந்த அதிகரணத்தில் ஒருசம்பந்தத்தால் எந்தப்பதார்த்தமுளதாகின்றதோ, அவ்வதிகரணத்திற்றனே வேறு சமபந்தத்தான் வரைநதுகொள்ளப்பட்ட அத்தியநதா பாவம் அப்பதார்த்தத்திற் குண்டாகின்றது. எங்ஙனம்: பிருதிவியில் கந்தம் சமவாய சம்பநதத்தால் இருக்கின்றது; சையோக சமபந்தத்தால் என்று மிருப்பதில்லை. ஆதலாற் பிருதிவியில் கந்தத்தின் சையோக சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட அத்தியந்தாபாவ மிருக்கின்றது. ஆண்டுப்பிரதியோகித்தன்மையவசசேதகமசையோகசம்பந்தமாம். ஜலததில் சையோகசம்பந்தத்தானுவது சமவாய சம்பந்தத்தானுவது கந்தமின்று. ஆனால் காலத்தாறய சம்பந்தத்தான் ஜலத்தினும் கந்தமுளது. ஆதலாற் ஜலத்தில் கநதத்தின் சையோக சம்பந்தத்தான் வரைந்து கொள்ளப்பட்ட அந்தியநதா பாவமும், சமவாய சம்பநததான் வரைந்துகொள்ளப்பட்ட அந்தியந்தாபாவமுமிருக்கின்றன. ஆண்டு முதல் அபாவத்திற்குப் பிரதியோகித் தன்மை யவச்சேதகம் சையோக சம்பந்தமும், இரண்டாவது

அபாவத்திற்குப பிரதியோகித்தன்மை யவச்சேதகம் சமவாய சம்ப ந்தமுமாகின்றன. காலிக சம்பந்தத்தான் ஒவ்வொரு ஜந்யத்தி னும் சகல பதார்த்தங்களு மிருக்கும். ஆதலால் துவியணுக முத லிய வடிவினதாய ஜலத்தில் கநத மிருத்தலான் ஜலததி லிருக்கும் கந்தாபாவததின் பிரதியோகித் தன்மை யவசசேதகம் காலத்தா னுய சம்பந்தமன்று. நிததிய பதாாத்தத்தில் காலத்தானுய சம்பந்த த்தான் ஓா பதாாத்தமும் இருப்பதில்லை. ஆதலாற் பரமாணு வடிவ மாகிய ஜலத்தில் கந்தத்தின் காலிக் (காலத்தானுய) சமபந்தத் தான் வரைந்துகொள்ளப்பட்ட அத்தியநதாபாவமும் இருக்கின்ற தாகலின், பரமாணுவிலிருப்பதாகிய கந்தாபாவத்தின் பிரதியோகி த்தன்மை யவசசேதகம் காலத்தானுய சமபந்தமாம். இவ்வாற்றான் அத்தியநதாபாவத்தின் பிரதியோகித தன்மை யவசசேதக சம்ப ந்தம் அநேகமாம. அந்நிய அபாவஙகளின் பிரதியோகித்தன்மையவச் சேதகம் ஒவ்வொன்றும். எங்ஙனம் : கபாலத்தில் கடத்தின் பிரா கபாவ மிருக்கின்றது. பிறவற்றில் யாண்டும் கடத்தின் பிராகபாவ மில்லை. அக் கபாலத்தில் கடத்தின் பிராகபாவத்தின் பிரதியோகி த்தன்மையவச்சேதகம் சமவாய சம்பநதமாம். பிராகபாவத்தின் பிரதியோகித் தன்மை யவசசேதகம் வேறு சம்பந்தமன்று. எச் சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட பிராகபாவம் எதற்கு எதன்கணுளதோ, அச்சம்பந்தத்தால் அதன் உற்பத்தி அதன்கண் உளதாகின்றதென்பது நியமம். கபாலத்தில் கடத்தின் உற்பத்தி சம வாய சமபநததான் உண்டாகின்றது; வேறு சம்பந்தத்தா னுண் டாவதில்லை. ஆதலாற் கபாலததில் கடத்தின் சமவாய சம்பந்தத் தான் வரைந்துகொள்ளப்பட்ட பிராகபாவ மிருக்கின்றது. அதன் பிரதியோகித் தன்மை யவசசேதகம் ஒரே சமவாய சம்பநத மாம. அங்ஙனமே கபால சமவாயததில் கடம் நஷ்டமாக வில்லை யென்னும் உணர்வு துவம்ஸாபாவததிற்கு உண்டாகின்றது. ஆத லால் துவம்ஸத்தின் பிரதியோகித் தன்மை யவசசேதகமும ஒரே சமவாய சம்பநதமாம். அங்ஙனமே சாமயிகா பாவமும் ஜந்யத் திரவியத்திற்கே யாகின்றது. ஜந்யத் திரவியத்திற்கும் சையோக சமபந்தத்தான் வரைநது கொள்ளப்பட்ட சாமயிகா பாவமே யாகின்றது. சமவாய சம்பநதாவசசின்ன சாமயிகாபாவம் அப் பிரசித்தமாம். இது முன்னர் உரைக்கப்பட்டது. ஆதலால் சாம யிகாபாவத்திற்கும் பிரதியோகித்தன்மை யவச்சேதகம் சையோக

சம்பந்தமாம். அங்ஙனமே அந்நியோந்நியாபாவத்தின் பிரதியோகித்தன்மை யவச்சேதகம் ஒரே அபேத சம்பந்தமாம். அவ்வபேதத்தினையே நையாயிகர் தாதாத்மியசம்பந்த மென்பர். அபேத சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட அபாவத்தினையே அந்நியோந்நியாபாவ மென்பர். மற்றைச் சம்பந்தத்தான் வரைந்து கொள்ளுப்பட்ட அபாவத்தினை சம்சர்க்காபாவ மென்பர். அந்நியோந்நியாபாவமென்று கூறுவதில்லை. இவ்வாற்றான் அந்நியோந்நியாபாவத்தின் பிரதியோகித் தன்மை யவசசேதக சம்பந்தம் ஒரே தாதாத்மிய மென்னும் அபேதமாம். மற்ற எச்சம்பந்தமும் அந்நியோந்நியாபாவத்தின் பிரதியோகித்தன்மை யவச்சேதக மாகாது. பிரதியோகித் தன்மை யவச்சேதக சம்பந்த விசிஷ்டப் பிரதியோகிக்கு அபாவத்தோடு விரோத முண்டு. மற்றைச் சம்பந்த விசிஷ்ட பிரதியோகிக்கோ அத்தியந்தாபாவத்தோடும்விரோதமஇல்லை.இது நிசசயிக்கப் பட்டதேயாம். அந்நியோந்நியாபாவததின் பிரதியோகித் தன்மை யவசசேதகஅபேதசம்பநதமெதுவோ அவ்வபேதசம்பந்தத்தான் தனது சொரூபத்திலேயே கடமிருககின்றது. பூதலம் கபால முதலியவற்றில் அபேதசமபந்தத்தால் கடம என்றுமிருப்பதில்லை.யாண்டுஅபேத சமபந்தத்தால் கடமிருப்பதில்லையோ,ஆண்டு எல்லாக்கடததிற்கும் அந்நியோந்நியா பாவமிருக்கின்றது. தனது சொரூபததிலஅபேத சம்பநதத்தாற் கடம இருககின்றது, ஆண்டுக்கடததின் அந்நியோநநியாநநியாபாவமில்லை. இவ்வாற்றான் பிரதியோகித்தன்மை யவசசேதக சமபநத விசிஷ்டப் பிரதியோகிக்கு அத்தியநதாபாவததோடெங்ஙனம விரோதமஇருககின்றதோ,அங்ஙனமே அநநியோநநியாபாவத்தோடும பிரதியோகித் தன்மையவச் சேதகசமபநதவிசிஷ்டப்பிரதியோகிக்கு விரோதமவெளிப்படையாயுளது.பிரதியோகிததன்மையவச்சேதகசமபந்தவிசிஷடப்பிரதியோகியோடு அத்தியநதாபாவத்திற கிருத்தல்போல அநநியோந்நியாபாவத்திற்கும விரோதம் வெளிப்படையா யிருத்தலின் பிரதியோகியோடு விரோதமின்மையைக் கூறுதலை எலலா நூலாசிரியர்களும் விவேக நேத்திரததின் விழிப்பின்மையாற் கூறியிருக்கின்றனர். ஆதலால எல்லா அபாவங்களுக்கும் பிரதியோகியோடு விரோத முளது. முதற் பிரசங்கம இதுவாம்:—யாண்டுப் பூதல முதலியவற்றில் ஓர் காலத்துக் கடம் இருந்து ஓர் காலத்தில இருப்பதில்லையோ, ஆண்டுக் கடத்தின் சாமயிகாபாவம் இருக்கின்றது;

அத்தியந்தாபாவமின்று. ஏனெனின், அபாவத்திற்குப்பிரதியோகி யோடு விரோத முளதாகின்றது. அவ்விரோதம் முற்கூறியவாற்ருன் நிர்ணயிக்கப்பட்டுளது. ஆதலால் பூதலத்தில் சையோக சம்பந்தத்தான் கடமுளதாயின், அப்போது கடத்தின் சையோக சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட அத்தியந்தாபாவம் இன்று. கடத்தை யெடுத்துக்கொள்ளின், அப்போது கடத்தின் சையோக சம்பந்தாவசின்ன அத்தியந்தாபாவ மிருக்கின்றதெனறிவ்வாறு அங்கிகரித்தல் உண்டாகும். இதனாற் பூதலத்தில் கடத்தின் அத்தியந்தாபாவத்திற்கு உற்பத்திநாசம அங்கிகரித்தல் உண்டாகும். உற்பத்திநாசம் கொள்ளாக்கால் ஓர் காலத்திருக்கின்றது, ஓர் காலத்தில்லையென்று கூறுதல் அத்தியந்தாபாவத்திற் சம்பவியாது. அவ் வுற்பத்திநாசம் கடாத்தியந்தாபாவத்திற்குச் சம்பவியாது. ஏனெனின், யாண்டுச் சையோக சம்பந்தத்தாற் கடமில்லையோ, ஆண்டு முழுவதுமகடத்தின் சையோகசமபந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட அத்தியந்தாபாவம் இருக்கும். அக்கடத்தின் அத்தியந்தாபாவம எல்லாப்பதார்த்தங்களினும் ஒன்றும்; பலவன்று. ஏனெனின், பிரதியோகி பேதத்தால் அபாவத்திற்குப் பேத முளதாகின்றது. அதிகரணபேதத்தால் அபாவத்திற்குப் பேதமுளதாவதில்லையென்பது நாரக்கிகர் சித்தாந்தம். எங்ஙனம: கடாபாவ படாபாவங்களின் பிரதியோகி பின்னமுமட. அவ்வபாவங்களும் பின்னமாம். பூதலத்திற் சையோக சமபந்தத்தான் கடாத்தியநதாபாவ முளது. அங்ஙனமே பூதலத் தன்மையின்கண்ணும் சையோக சமபந்தத்தான் கடம் இல்லை. அங்ஙனமே கடதநன்மைச் சாதியின்கண்ணும் சையோகசமபநதத்தான் கடமின்று. ஆதலால் சையோகசமபநதத்தான் வரைநதுகொள்ளப்பட்ட கடாதநியநதா பாவமுளது. அங்ஙனமே படத்தன்மைமுதலியவற்றின் கண்ணும சையோகசமபந்தத்தான் வரைநதுகொள்ளபபட்ட கடாத்தியநதா பாவமுளது. இவ்வாற்ருன் அநந்த வதிகரணஙகளில சையோக சமபாநதத்தான் வரைநதுகொள்ளப்பட்ட கடாதநியநதா பாவமுளது. அதன் அதிகரணம் அநந்தமாயினும பிரதியோகி ஒன்ருகியகடமாம. ஆதலாற் சையோக சமபநதத்தான் வரைநதுகொள்ளப்பட்ட கடாத்தியந்தாபாவம் ஒன்ரும். ஆனல் பூதலததன்மை கடத்தன்மை முதலிய ஜாதிகளாலோ கடத்தின்சையோகசமபந்தம் என்று மிராது. ஆதலாற் பூதலத்தன்மை கடத்தன்மை முதலிய ஜாதியில் கடத்தின்

சையோக சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட அத்தியந்தா பாவம் உற்பத்தி நாசமின்றிய நித்தியமாம். பூதல முதலியவற்றில் சையோக சம்பந்தத்தால் ஒருகாலத்திற் கடமிருக்கும் ஒருகாலத் திராது. ஆதலாற் கடகாலத்தில் பூதலத்தின்கணிருக்கும் கடாத் தியந்தாபாவம் நஷ்டமாகின்றது. கடம் நீங்குங்காலத்துக் கடாத் தியந்தாபாவம் உற்பத்தியாகின்றது. இவ்வாற்றுன் கடத்துவமுத லிய ஜாதியில் கடாத்தியந்தாபாவத்தினை நித்தியமெனலும் அக் கடாத்தியந்தாபாவத்தினையே பூதலமுதலியவற்றில் உற்பத்தி நாச முடையஅநித்தியமாமென்றுகூறுதலும பொருத்தமுடையவன்று. ஆதலால் யாண்டுச் சையோகசமபநதத்தால் ஓர்காலத்துக் கடமிரு க்கின்றதோ, ஆண்டுக் கடசூனிய காலத்தில் கடத்தின் சையோக சம்பநதத்தால் வரைந்துகொள்ளப்பட்ட அபாவமென்னும்ஓர் அநி த்தியமானஅபாவததைஅங்கீகரித்தல்வேண்டும்.அதுவே சாமயிகா பாவ மெனப்படுகின்றது. அப்பூதலத்தின்கண்ணே சமவாய சம் பந்தத்தான் ஓர் காலத்தும் கடமிருப்பதில்லையாகலின் கடத்தின் சமவாய சம்பந்தத்தான் வரைந்து கொள்ளப்பட்ட அத்தியந்தா பாவம் இருக்கின்றது. அங்ஙனமே கடத்தன்மை பூதலத் தன்மை முதலியவற்றில் சையோக சம்பந்தத்தான் ஒருகாலத்தும் கடமிரு ப்பதில்லை. சமவாய சம்பநதத்தானும கபாலமின்றிய மற்றைய பதார்த்தங்களில் கடமிருப்ப தில்லை. ஆதலால் கடத்தன்மை முத லியவற்றில் சையோக சம்பநதத்தான் வரைந்துகொள்ளப் பட்ட கடாததியந்தாபாவமும், சமவாய சம்பந்தாவச்சின்ன கடாத்திய ந்தாபாவமு மிருக்கின்றன. அவ்வத்தியநதாபாவம் உற்பத்தி நாச மின்றிய நித்தியமாம். இதனுல் இந்த நிசசயம் சித்தித்தது:— யாண்டு ஒருகாலத்துச சையோக சமபந்தத்தான் பிரதியோகியிரு ந்து ஒரு காலத்தில்லையோ, ஆண்டுசசையோக சம்பந்தத்தான் வரை ந்துகொள்ளப்பட்ட சாமயிகாபாவம் சொல்லப்படுகினறது. கடத்தின் சாமயிகாபாவமஉற்பததிநாசமுடையதாமாகலினபிரதியோகிபேத மில்லாமலும் ஒரு கடததிறகுச சாமயிகாபாவம அநநத (அநேக) மாம். எசசம்பந்தததான் யாண்டுக கடவடிவப பிரதியோகி என்று மிருப்பதில்லையோ, ஆண்டு அசசமபநதததான் வரைந்துகொள்ளப் பட்ட அத்தியந்தாபாவம் சொல்லப்படுகின்றது. அவ்வததியந்தாபா வம் உற்பத்தி நாசமின்றியதா யிருத்தலின் நிததியமாம. கடத்தின் சையோக சம்பந்தத்தான் வரைநதுகொள்ளப்பட்ட அத்தியந்தா

பாவம் அநந்த அதிகரணங்களில் ஏகமாம்; அங்ஙனமே சமவாய சம்பந்தத்தான் வரைந்துகொள்ளப்பட்ட கடாத்தியந்தாபாவமும் அநந்த அதிகரணங்களில் ஏகமாம். ஓர் அதிகரணத்திற்கு அழிவு வந்ததாயினும், அவ்வத்தியந்தாபாவமே வேறு அதிகரணத்தில் இருக்கும். ஆதலால் அத்தியந்தாபாவத்திற்கு நாசம் உண்டாகிற தில்லை. எங்ஙனம்: கடத்தின் சமவாய சம்பந்தாவச்சின்ன அத்தியந்தாபாவம் தந்துவினும், தந்துத்தன்மைசாதியினும், கடத்தன்மையினும், படத்தன்மையினும், கபாலத்தன்மையினும், கபால மொன்றொழிந்த ஏனைய எல்லாப்பதார்த்தங்களினு முளது. அவற்றின்கண் சகல சமவாய சம்பந்தாவச்சின்ன கடாத்தியந்தாபாவம் ஒன்றும். தந்து முதலிய அநித்திய பதார்த்தங்களுக்கு அழிவுண்டாயகாலத்தும் தந்துத்தன்மை முதலிய நித்திய பதார்த்தங்களினும் அவ்வத்தியந்தாபாவமேயிருக்கின்றது. ஆதலால் அத்தியந்தாபாவம் நித்திய மாம். பிரதியோகியின் பேதத்தால் அத்தியந்தாபாவத்திற்குப் பேதம் உண்டாகின்றது. எங்ஙனம்: கடாத்தியந்தாபாவத்தினும் படாத்தியந்தாபாவம் வேறும். பிரதியோகித்தன்மையவச்சேதகசம்பந்தத்தின் பேதத்தால் பிரதியோகி பேதம் இல்லாமலும் அத்தியந்தா பாவத்திற்கு பேதம் உளதாகின்றது. சமவாய சம்பந்தாவச்சின்ன கந்தாத்தியந்தா பாவத்திற்கும் சையோக சம்பந்தாவச்சின்ன கந்தாத்தியந்தா பாவத்திற்கும் பிரதியோகி ஒரே கந்தமாம். ஆனால் பிரதியோகித் தன்மை யவச்சேதக சம்பந்தம் இரண்டாயிருத்தலின் இரண்டு அபாவமாம். இரண்டுமிருக்க ஒன்றையே யங்கீகரிக்கின் பிருதிவியில் சமவாய சம்பந்தாவச்சின்ன கந்தாத்தியந்தாபாவம் இல்லா திருத்தலான், சையோக சம்பந்தாவச்சின்ன கந்தாத்தியந்தாபாவமும் இராது. பிருதிவியில் சையோக சம்பந்தாவச்சின்ன அத்தியந்தாபாவமும் இல்லையெனின், பிருதிவியில் சையோகமாகக் கந்தம் இல்லையென்னும் உணர்ச்சியுண்டாகலாகாது. ஆதலால் பிருதிவியில் சையோக சம்பந்தாவச்சின்ன கந்தாத்தியந்தாபாவம் இருக்கின்றது. சமவாய சம்பந்தாவச்சின்ன கந்தாத்தியந்தா பாவம் இல்லை. ஆதலால் பிரதியோகி பேதத்தால் அத்தியந்தாபாவத்திற்குப் பேதம் உண்டாவது போலப் பிரதியோகித் தன்மை யவச்சேதக சம்பந்த பேதத்தாலும் அத்தியந்தாபாவத்திற்குப் பேத முண்டாகின்றது. சாமயிகாபாவத்திற்குப் பிரதியோகித் தன்மை யவச்சேதக சம்பந்தத்தின்

பேதமின்றியும் சமவ பேதத்தாற் பேதம் உண்டாகின்றது. எங்ஙனம்: பூதலத்தில் கடத்தின் சையோகம் எதுவரையில் உண்டாகவில்லையோ, அதுவரையில் கடத்தின் சையோக சம்பந்தாவச்சின்ன சாமயிகாபாவம் இருக்கின்றது. பூதலத்தில் கடத்தின் சையோகமுண்டாகுங்காலத்துக் கடத்தின் முதற் சாமயிகாபாவம் நாசமாய்விடுகின்றது. பூதலத்தில் கடத்தை யெடுத்துவிடின், அப்போது கடத்தின் சையோக சம்பந்தாவச்சின்ன வேறு சாமயிகாபாவம் உண்டாகிறது. அக்கடத்தையே மீண்டும் பூதலத்தில் வைத்தால் அப்போது இரண்டாவது சாமயிகாபாவம் நஷ்டமாய்விடுகின்றது. மீண்டும் அக்கடத்தை யெடுத்துவிடின், அப்போது அதே கடத்தின் மூன்றாவது சையோகசம்பந்தாவச்சின்ன சாமயிகாபாவமுண்டாகின்றது. இவ்வாற்றான் பிரதியோகி பேதமில்லாமலும், பிரதியோகித்தன்மை யவச்சேதக சம்பந்த பேதமில்லாமலும் காலபேதத்தால் சாமயிகாபாவத்திற்குப் பேதமுண்டாகின்றது. இச்சாமயிகாபாவ அத்தியந்தாபாவங்களின் வேறுபாடு வெளிப்படையாம். இவ்வாறு நியாய சம்பிரதாயத்தில் ஐவகை யபாவமுள.

## எக. நவீனதார்க்கிகர் சாமயிகாபாவஸ்தானத்தில் அநித்திய அத்தியந்தாபாவத்தை யங்கீகரித்தலும், அதிற் சங்கை சமாதானமும்.

நவீன தார்க்கிகர் சாமயிகாபாவத்தை யங்கீகரிப்ப தில்லை. பூதலமுதலியவற்றில்கடமுதலியவற்றின்சாமயிகாபாவம யாண்டுச் சொல்லப்படுகின்றதோ, ஆண்டும சகல கடங்களின் அத்தியந்தாபாவமிருக்கின்றது. சங்கை:—பூதல முதலியவற்றில் கட முதலியவற்றின் சையோக சம்பந்தத்தால் வரைந்துகொள்ளப்பட்ட அத்தியந்தாபாவத்தை யங்கீகரித்தலில் தோஷம் சொல்லப்பட்டிருக்கின்றது. ஜாதி குணமுதலியவற்றில் கடத்தின் சையோக சம்பந்தாவச்சின்ன அத்தியந்தாபாவம் நித்தியமாம். பூதல முதலியவற்றில் அதே கடத்தின் சையோக சம்பந்தாவச்சின்ன அபாவம் அநித்தியமாம். அந்த நித்திய வநித்தியங்கள் ஒன்றற்கொன்று வேறாம்; ஒன்றன்று. ஜாதி குண முதலியவற்றிலும், பூதல முதலியவற்றிலும் சையோக சம்பந்தாவச்சின்ன கடாபாவத்தின் பேதம் அங்கீகரியாவிடின், நித்தியத்தன்மை அநித்தியத்தன்மை வடிவின

வாகிய விரோதி தர்மங்கள் எவையோ, அவற்றிற்குக் கலப்புண் டாகுமென்னும் சங்கைக்குக் கங்கேசோபாத்தியாயர் முதலிய நவீனர் இவ்வாறு சமாதானம் செய்கின்றனர்:—பூதல முதலிய வற்றினும் கடத்தின் சையோக சம்பந்தாவச்சின்ன அபாவம் அநித்திய மன்று; நித்தியமாம். எப்போது பூதலத்திற் கடத்தின் சையோகமுளதாகின்றதோ, அக்காலத்தினும் கடத்தின்சையோக சம்பந்தாவச்சின்ன அத்தியந்தாபாவம் இருக்கின்றது; அதன் நாச முண்டாகிறதில்லை. ஆதலால் அத்தியந்தாபாவம் கேவலாந்நுவயி யாம். எதன் அபாவம் ஓரிடத்தும் இராமல், சகல பதார்த்தங்க ளினும் எப்போது மிருக்கின்றதோ, அது கேவலாந்நுவயியெனப் படுகின்றது.

சங்கை:—சையோக சம்பந்தத்தால் கடமிருக்கச் சையோக சம்பந்தாவச்சின்ன கடாத்தியந்தாபாவத்தை யங்கீகரிக்கின், சையோக சம்பந்தத்தால் கடமுடைய பூதலத்தில் சையோகத்தாற் கடமில்லையென்னு முணர்வு பிறத்தல்வேண்டும்.

சமாதானம்:—சையோக சம்பந்தத்தாற் கடமுடைய பூதல த்திலும் கடமின்றிய பூதலத்திற்போலக் கடத்தின் சையோக சம்பந்தாவச்சின்ன அத்தியந்தாபாவம் இருக்கின்றது. எனினும் கடமின்றிய பூதலத்திலோ சையோகத்தாற் பூதலத்திற் கடமில்லை யென்னுமுணர்வுண்டாகின்றது; கடமுடையபூதலத்தில் முற்கூறிய வுணர்வுண்டாகிறதில்லை. ஏனெனின் முற்கூறிய வுணர்ச்சிக்கு விஷ யம் கேவலகடத்தின் அத்தியந்தாபாவமன்று. ஆனால் பூதலசம்பந்த முடைய கடத்தின் ஆதாரகாலத்தினும் அதிக்கிரமித்த காலமும் சையோகசம்பந்தாவச்சின்ன கடாத்தியந்தாபாவமுமாகிய இரண் டும் யாண்டிருக்கின்றனவோ, ஆண்டுச் சையோகத்தாற் கடமில்லை யென்னு முணர்ச்சி யுண்டாகின்றது. பூதலத்திற் சையோக சம்ப ந்தத்தாற் கடமிராத காலத்துப் பூதல சம்பந்தமுடைய கடாதார காலம் இல்லை. ஆனால் பூதல சம்பந்தமில்லாக் கடத்தின் அநாதார காலம் இருக்கின்றது. ஆதலால் பூதல சம்பந்த முடைய கடத் தின் ஆதாரகாலத்தின் வேறான காலம் இருக்கின்றது. அன்றியும் சையோகசம்பந்தாவச்சின்ன கடாத்தியந்தாபாவமுமிருக்கின்றது. அதனால் சையோகத்தாற் கட முளதென்னும் உணர்வுண்டாகின் றது. யாண்டுப் பூதலத்தில் சையோகசம்பந்தத்தால் கடமுளதோ, ஆண்டும் அத்தியந்தாபாவத்திற்கு நித்தியத் தன்மை யிருத்தலால்

சையோக சம்பந்தாவச்சின்ன அத்தியந்தாபாவமோ விருக்கின்றது. ஆனல் பூதல சம்பந்தமுடைய கடமெதுவோ, அதன் ஆதார காலமிருக்கின்றதாகலின் பூதல சம்பந்தமுடைய கடாதார காலத்தின் வேறாய காலமில்லை. ஆதலால் சையோக சம்பந்தத்தால் கடமிருக்கச் சையோகத்தாற் பூதலத்திற் கட மில்லையென்னு முணர்வுண்டாகிறதில்லை. இவ்வாற்ருன் அத்தியந்தாபாவமோ எல்லாவிடத்திலும் பிரதியோகி யிருக்கினும் இல்லாவிடினும் எப்போதும் இருக்கிறது. ஆனல் அபாவத்தின் பிரதியோகியாகிய கடாதிகளின் சம்பந்தமுடைய பூதலாதி அநுயோகி யெவையோ, அவற்றின் ஆதார காலம் பிரதியோகி யிருக்க வுளதாகின்றது. பிரதியோகி சம்பந்தமுடைய அநுயோகியின் ஆதார காலத்தின் வேறாய காலம் இருப்ப தில்லை. ஆதலால் பிரதியோகி யில்லையென்னும் உணர்வு பிரதியோகி யிருக்க இருப்பதில்லை. பிரதியோகி யில்லாதிருக்கின் அப்போது பிரதியோகி சம்பந்தமுடைய அநுயோகியின் ஆதார காலத்தின் வேறாகிய காலமும் அத்தியந்தாபாவமும் இரண்டும் உள. அதனுல் பூதலத்திற் சையோகத்தாற் கடம இல்லை யென்னும் உணர்வுண்டாகின்றது. இவ்வாற்ருன் யாண்டுப் பிராசீனர் சாமயிகாபாவம் அங்கீகரித் திருக்கின்றனரோ, ஆண்டும் முழுவதும் அத்தியந்தாபாவமிருக்கின்றது. அத்தியந்தாபாவத்திற்கு அநித்தியத் தன்மை யுண்டாவ திலலை. முற்கூறிய காலத்தின் அபாவத்தால் பிரதியோகி யிருக்கினும் அத்தியந்தாபாவத்தின் உணர்வு உண்டாகிறதில்லை.

## எஉ. நவீனதார்க்கிகரது முற்கூறிய மதத்தின் கண்டனம்.

இது நவீனதார்க்கிகர மதம். அது நலமுடைய தன்று. பிராசீனர் மதமே நலமுடையதாம. ஏனெனின், பிரதியோகியிருக்க அத்தியந்தாபாவம் அங்கீகரிக்கின் பிரதியோகிக்கும் அபாவத்திற்கும் ஒன்றற்கொன்று விரோதமுண்டென்னும் கதைக்குக்கேடுண்டாதல் வேண்டும். நவீனர் இங்ஙனம் கூறுவர்:—விரோதம் இருவகையாம். ஒன்று உடனிருத்தலின்மை வடிவினது; மற்ருென்று உடன் ருேற்றுதலின்மை வடிவினது. ஒரு நிலைக்களத்து ஒருகாலத்தில் இராதவை எவையோ, அவற்றிற்கு உடனிருத்தலின்மை வடிவினதாகிய விரோதம் சொல்லப்படுகின்றது. அஃது ஆதப சீதங்களுக்

குளளவிரோதமாம. இவவித விரோதம் அபாவப பிரதியோகிக் கில்லை. ஏனெனின், பிரதியோகி யிருக்க அத்தியந்தாபாவ மிருக் கின்றது; ஆனால் அபாவப் பிரதியோகிக்கு உடன்றேற்றுதலின்மை வடிவினதாகிய விரோதமுண்டு. ஒரு காலதகில் ஒரு அதிகரணத் தில் எவற்றின் தோற்றமுண்டாகிறதில்லையோ, அவற்றிற்கு உடன் றேற்றுத லின்மைவடிவினதாகிய விரோதம் சொல்லப்படுகின்றது. பிரதியோகியிருக்குங்கால் அத்தியந்தாபாவத்தின்தோற்றமுண்டா கிறதில்லை. ஆதலால் பிரதியோகி அபாவஙகடகு உடன் றேற்றுத லின்மை வடிவினதாகிய விரோதமுளது; உடனிருத்தலின்மை வடி வினதாகிய விரோத மில்லை. இவ்வாற்றான் நவீனர்களது சமாதா னம் உலகம சாஸதிரம எல்லாவறறிற்கும விருதத மாம. ஏனெ னின், அபாவத்தின் அபாவம் பிரதியோகியெனப் படுகின்றது. யாண்டு அபாவம்இல்லையோ,ஆண்டுஅபாவத்தின் அபாவ முண்டா கின்றது. எங்ஙனமை: கடமுடைய தேசத்தில் கடத்தின் அபாவ மில்லை; ஆனால் கடாபாவத்தின் அபாவம இருக்கின்றது. அதுவே கடமாம; கடாபாவத்திற்குப பிரதியோகியுமாம. இவ்வாற்றான் அபாவத்தின் அபாவததினைச சகல சாஸதிரங்களினும பிரதியோகி யென்பர். நவீனர் கிரமப்படி கூற்று அசங்கதமாகும. ஏனெ னின், நவீன மதத்தில் கடமுடைய தேசத்தில கடததின் அபா வமும் உளதாகலின் கடாபாவத்திற்கு அபாவங்கூறுதல் பொருந் தாது. சொல்லப்படுங் கிரமமாகக் கடத்திற்கு வேறாகவே கடாபா வாபாவ மிருக்கின்றது; கடரூபமன்றெனினும, கடத்தோடு உட னுற்றித் திருப்பது கடாபாவாபாவ மாம. இவ்வாரத்தை நிர விவாதமாம. நவீனக்கிரமமாகக் கடமுடைய தேசததில் கடாபாவ மிருக்கின்றதாகலின், கடாபாவத்தின் அபாவ மிலலாதிருத்தலான் இரண்டற்கும் சமநியதத்துவம் சமபவியாது. ஆதலால் நவீனமதம் சாஸ்திர விருததமாம. பிரதியோகியும அபாவமும் சமானுதிகரண த்தி விராவென்பது சாவலோகப் பிரசித்தமாம். அவ்வுலகப் பிர சித்தமான அர்த்தததிற்கு நவீன கற்பனையால் பாதமுண்டாகும். கடத்தின் அதிகரணததில கடத்தின் அத்தியந்தாபாவத்தை யங் கீகரித்தல் பிரமாண சூனியமாம்; எப் பிரமாணத்தானும பெறப் படுவதில்லை. யாண்டுக் கடமில்லையோ, ஆண்டுக் கட மிலலையென் னும் தோற்றமாக அத்தியந்தாபாவம் பெறப்படுவ தாகின்றது. கடமுடைய தேசத்தில் கட மில்லையென்னும் தோற்ற முண்டாகிற

தில்லை. வேறு எத்தோற்றமும் கடமுடையதேசத்தில் அத்தியந்தா பாவத்திற்குச் சாதகமின்று. ஆதலால் பிரதியோகி தேசத்தில்அத்தியந்தாபாவத்தை யங்கீகரித்தல் பிரமாண சித்தமன்று. மாருன கட முடைய தேசத்தில் கடாத்தியந்தாபாவம் இல்லை யென்னும் தோற்ற முண்டாகின்றது. அத்தோற்றத்திற்கு விருத்தமான அத்தியந்தாபாவம் அங்கீகரிக்கப்படுகின்றது. கட முடைய தேசத்தில் அத்தியந்தா பாவததினை யங்கீகரிப்பவனுக்கு வட்டிக்காசைப்பட்டு முதலுமிழந்த நியாயங்கிடைக்கும். ஏனெனின், அத்தியந்தாபாவத்திற்குக் கேவலாந்நுவயியைச் சாதித்தற் பொருட்டும நித்தியத்தன்மையைச் சாதித்தற்பொருட்டும கடமுடைய தேசத்தில் கடாத்தியந்தாபாவம் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. ஆனால் கடமுடைய தேசத்தில் கடாத்தியந்தாபாவம் அங்கீகரிக்கின் அவ்வத்தியநதா பாவமே நிஷ்பலமும் நிஷ்பிரமாணமு மாய்விடும். அங்ஙனமே சகலபதார்த்தங்களின்பயனும் வியவகாரத்தாற்பெறப்படுகின்றது. கட மில்லையென்னும் வியவகார சித்தியின்றி வேறு பயனே கடாத்தியந்தாபாவததிற்கு நிகழாது. முற்கூறிய வியவகாரத்தின் சித்தியே பயனும். கடம் இல்லையென்னும் உணர்வானே கடாத்தியந்தாபாவம் பெறப்படுகின்றது; முற்கூறிய வுணர்ச்சியின்றிக் கடாத்தியந்தாபாவத்தின் இருப்பில் ஒரு பிரமாணமும் இல்லை. நவீன மதத்தில் கடாத்தியந்தாபாவத்தால் கட மில்லையென்னும் வியவகாரத்தின் சித்தி யுண்டாகிறதில்லை. ஆனால் கட சம்பநதமுடைய பூதலாதிகரணத்தின் வேருகிய காலத்தால் முற்கூறிய வியவகாரத்தின் சித்தி யுண்டாகிறது. ஏனெனின், கடசம்பந்தமுடைய பூதலாதிகரணத்தின் வேருகிய கால முளதாயின் அப்போது கட மில்லையென்னும் பிரதீதி யுண்டாகின்றது. கட சம்பந்த முடைய பூதலாதிகரண காலமுளதாயின் அப்போது கடம் இல்லையென்னும் பிரதீதி யுண்டாகிற தில்லை. இவ்வாற்ருல் கடமில்லையென்னும் உணர்வால் கட சம்பநதமுடைய பூதலாதிகரணத்தின் வேருகிய காலத்தின் சித்தி யுண்டாகின்றது; கடாத்தியந்தாபாவத்தின் சித்தி யுண்டாகிறதில்லை. பிரதீதி (உணர்ச்சி) யினைப்போலக் கடம் இல்லையென்னும் வியவகாரத்தின் சித்தி நவீனமதத்தில் கடாத்தியந்தாபாவத்தால் உண்டாகிறதில்லை ஆனல் முற்கூறியகாலத்தால் கடம் இல்லையென்னும் வியவகாரம் உண்டாகின்றது. ஆதலால் கடாத்தியந்தாபாவம் நவீனமதத்தில் பயனற்றதும் பிரமாணம் இன்றியது

மாம். சத்தப் பிரயோகத்தினை வியவகாரமென்பர்; ஞானத்தினைப் பிரதீதியென்பர். இவ்வாற்றான் நவீனமதத்தால் அத்தியந்தாபாவத்திற்கு நித்தியத்தன்மையை அங்கீகரித்தற்பொருட்டு, பிரதியோகியையுடைய தேசத்தில் அத்தியந்தாபாவத்தைக் கொள்ளின் அடியோடு அத்தியந்தாபாவத்திற்கு ஆனி யுண்டாம். ஆதலால் கடமுடைய தேசத்தில் கடாத்தியந்தாபாவம் சம்பவியாது. யாண்டுப் பூதலத்தில் ஓர் காலத்தில் கடமுளதாகின்றதோ, ஆண்டு அத்தியந்தாபாவ முளதாயின் அத்தியந்தாபாவமென்னும் பெயரும் பொருளின்றியதாகும். யாண்டு அத்தியந்தாபாவம் உளதாய் மூன்று காலத்திலும் பிரதியோகி யிலதாகின்றதோ, அஃது அத்தியந்தாபாவமென்னும் பெயரினபடி பெறப்படுவதாகின்றது. ஆதலால் யாண்டு ஓர் காலத்துப் பிரதியோகியுளதாய் ஓர் காலத்து இலதாகின்றதோ ஆண்டு முக்காலத்தினும் பிரதியோகியின் அபாவமின்று. ஆதலால் அத்தியந்தாபாவமின்று. அதனின் வேறாய வோர் அபாவம உளது; அதனைச் சமாயிகாபாவமென்பர்.

## எரு. நியாய சம்பிரதாயத்தில் கடப்பிரத்துவம்சத்தின் பிராகபாவம் கடமும் கடப்பிராகபாவமு மாமெனல்.

இவ்வாற்றான் நான்கு வகையான சம்சர்க்காபாவமும் பிராகபாவமும் சோந்து ஐவகை யபாவமாம். அவ்வபாவம் ஒவ்வொன்றும் இரண்டுவகையாம்:—ஒன்று பாவப் பிரதியோகியினை யுடையதாகின்றது; மற்றொன்று அபாவப் பிரதியோகியினை யுடையதாகின்றது. பாவத்தின் அபாவம பாவப் பிரதியோகியினையுடைய அபாவமெனப்படும். அபாவத்தின் அபாவம் அபாவப் பிரதியோகியினையுடையஅபாவமெனப்படும். எங்ஙனம்: பிராகபாவம் இருவகைத்தாம். கட முதலியவற்றிற்குக் கபால முதலியவற்றினுள்ள பிராகபாவம் பாவப் பிரதியோகியினை யுடையதாம். பாவ பதார்த்தத்திற்குப் பிராகபாவம இருத்தல்போல அபாவத்திற்கும் பிராகபாவ முண்டு. ஆனால் ஸாதி (உற்பத்தியுடைய) பதார்த்தங்களுக்குப் பிராகபாவ முண்டு; அநாதிக்குப் பிராகபாவ மிருப்பதில்லை. அத்தியந்தாபாவ அந்நியோந்நியாபாவப் பிராகபாவங்களோ அநாதியாம். ஆனால் அவற்றிற்கோ பிராகபாவம் சம்பவிப்பதில்லை. பிரத்துவம்ஸாபாவமோ அநந்தமாம்; ஆனால் ஸாதியாம். ஆதலால் பிரத்துவா

ஸ்பாவத்திற்குப் பிராகபாவம் உண்டு. அப்பிரத்தொம் ஸாபாவத்தின் பிராகபாவம் பிரதியோகி ரூபமும், பிரதியோகியின் பிராகபாவரூபமுமாம். தண்ட முதலியவற்ருன் கடத்திற்கு நாசமுண்டாயின், அதனைக் கடத்தின பிரத்தொம்ஸாபாவ மென்பர். அப்பிரத்துவம்ஸாபாவம தண்ட முதலியவற்ருற் ருேன்றியதாம. தண்ட முதலியவற்றின் வியாபாரததிற்குமுன் கடகாலத்திலும் கடத்தின் பிராகபாவ காலத்திலும் இல்லாதிருத்தலான் ஸாதியாம். ஆதலால் தண்ட முதலியவற்றின் வியாபாரத்திற்கு முன் கடத் துவம்ஸத்தின் பிராகபாவம இருக்கின்றது. அத்துவம்ஸத்தின் பிராகபாவம் கட காலத்திலும, கடததின் உறபத்திக்குமுன் கடததின் பிராகபாவ காலததிலும் உளது. ஆதலால் கடததுவமஸததின் பிராகபாவம கடகாலததிலே கடவடிவாகவும் கடத்தின் உறபத்திக்கு முன் கடததின் பிராகபாவ வடிவமாகவு மிருக்கின்றது. இவ்வாற்ருன் கடத்துவமஸத்தின் பிராகபாவம கடததினும கடததின் பிராகபாவத்தினும் அடங்கியுளது. அவற்றின் வேருகவில்லையென்பது சாமபிரதாயிகமதம்.

## எச. முற்கூறிய மதத்தின் கண்டனமும், கடப் பிரத்துவம்ஸத்தினது அபாவப் பிரதி யோகியினையுடைய பிராகபாவத்தின் சித்தியும்.

ஆனல் இம்மதம் யுக்தி விரோதமுடையதாம். ஏனெனின், கடமோ பாவரூபமும ஸாதியுமாம. கடததின் பிராகபாவம அபாவரூபமும் அநாதியுமாம். ஒரே கடததுவமஸப் பிராகபாவததினை ஒரு காலததில் பாவ வடிவினதாயும ஒரு காலத்தில் அபாவ வடிவினதாயும கூறுதல் விருததமாம; அங்ஙனமே ஓர் காலதது ஸாதி வடிவினதாயும ஓர் காலத்து அநாதி வடிவினதாயும கூறுதலும் விருத்தமாம. அன்றியும கடகாலததில கபாலததிற் சமவாயமாக ககடமிருககின்றது. கடததுவமஸமில்லையென் றிவ்வாறு விதிரூபமாகவும் நிஷேதரூபமாகவும இரண்டுணாசசிகள் விலக்ஷணமாகவுண்டாகின்றன. அவற்றின் விஷயி ஒன்றற்கொன்று விலக்ஷணமான இரண்டு பதாாத்தங்களா யங்கீகரித்தல் வேண்டும். அங்ஙனமே கடத்தின் உற்பத்திக்குமுன்னும் கபாலததிற் கடமில்லை, கடத்துவமஸ மில்லையென் றிவ்வாறு இரண்டுணர்ச்சிக ளுண்டாகின்றன. அவ்விரண்டுணர்ச்சிகளும் நிஷேத முகத்தனவாயினும வில

க்ஷணமாம். ஏனெனின், முதலுணர்ச்சியிலோ இல்லையென்று கூறுதலாலுண்டாகும அபாவம் எதுவோ, அதன் பிரதியோகியாகிய கடத்தின் வுணர் வுண்டாகின்றது. இரண்டாவ துணர்ச்சியில் இல்லையென்று கூறுதலாற் றோற்றிய அபாவத்திற்குக் கடப்பிரத்துவம்ஸமாகிய பிரதியோகியி னுணர்சசி யுண்டாகின்றது. ஆதலால் பிரதியோகியின் பேதமிருக்குங்கால் கடப் பிராகபாவத்திற்கும், கடப் பிரத்துவம்ஸப பிராகபாவததிறகும அபேதம் சம்பவியாது. ஆனால் கடத்திற்கும அதன் பிராகபாவத்திற்கும கடப்பிரததுவமஸத்தின் பிராகபாவம் வேறென மதிக்கததககதாம. அநுபவததாற் பெறப்பட்ட பொருட்கு இலாகவ பலததால் லோபம சமபவியாது. ஆதலால் சாம்பிரதாயிகர் கிரமமாகக கடப்பிரததுவம்ஸ பிராகபாவத்திற்குக் கடததிலும் அதன் பிராகபாவத்திலும அடக்கம அங்கிகரிததல், இலாகவமாயினும நலமுடையதன்று. இவ்வாற்றாற்பிரத்துவமஸாபாவததின் பிராகபாவம அபாவப் பிரதியோகியினையுடைய பிராகபாவததின் அபாவமாம.

## எரு. சாமயிகாபாவத்தின் பிராகபாவம் அபாவப் பிரதியோகியினை யுடையதாதல்.

அங்ஙனமே சாமயிகாபாவமும ஸாதியாகின்றது. அதன் பிராகபாவமும அபாவப் பிரதியோகியினையுடைய பிராகபாவ மாகின்றது.

## எசு. பிராசீனர் பிராகபாவத்தினதுபிரத்துவம்ஸம் பிரதியோகிப் பிரதியோகியிலும பிரதியோகிப் பிரதியோகியின் துவம்ஸத்திலும் அடங்குமென்றல், நவீனராற் கண்டிக்கப் படுதலும், அதன் அபாவப் பிரதி யோகித் தன்மையும்.

பிரத்துவம்ஸாபாவமும அத்தியந்தாபாவ அந்நியோந்நியாபாவங்களுக்கு இருப்பதில்லை. ஏனெனின், இரண்டு அபாவங்களும் அநாதியும அநந்தமுமாம; அங்ஙனமே• பிரத்துவம்ஸாபாவமும் அநநதமாம; அதற்கும பிரத்துவம்ஸம சம்பவியாது. ஆனால் பிராகபாவ சாமயிகாபாவங்களுக்குப் பிரத்துவம்ஸ முண்டாகின்றது. சாம்பிரதாயிகக் கிரமமாகப் பிராகபாவத் துவமஸம் பிரதி

யோகிப்பிரதியோகியிலும், பிரதியோகிப் பிரதியோகியின் துவம்ஸ த்திலும் அடங்கும்; அவற்றின் வேறாகாது. எங்ஙனம்: கடத்தின் பிராகபாவத்தினது துவம்ஸ முண்டாகின்றது. அது கடகாலத்தி லும் கடத்தின் துவம்ஸ காலத்திலுமுளது. கடகாலத்திலோ கடப் பிராகபாவத்தின் துவம்ஸம பிரதியோகி சொரூபமா யிருக்கின் றது. ஏனெனின், கடப்பிராக பாவத்தினது துவம்ஸத்தின் பிரதி யோகி கடப்பிராகபாவமாம். கடப்பிராகபாவத்தின் பிரதியோகி கடமாம். ஆதலால் கடகாலத்தில் கடப் பிராகபாவத்தின் துவம் ஸம் பிரதியோகியின் பிரதியோகி சொரூபமாம். தண்ட முதலிய வற்றான் கடத்திற்கு நாசமுண்டாயின் அக்காலத்தும் கடப்பிரா கபாவத்தின் துவமஸமிருக்கின்றது; கடமில்லை. ஆதலால் அக்கால த்தில் கடப் பிராகபாவத்தின் துவம்ஸம் பிரதியோகிப் பிரதி யோகியின் துவம்ஸ ரூபமாம். ஏனெனின் கடப்பிராகபாவத்துவ ம்ஸத்தின் பிரதியோகியாகிய கடப்பிராகபாவ மெதுவோ, அதன் பிரதியோகி கடமாம். அக்கடத்தின் துவம்ஸமே கடப்பிராகபாவ த்தின் துவம்ஸமாம். கடத்துவம்ஸத்துக்கு வேறாகக் கடப்பிரா கபாவத்துவம்ஸ மில்லை. இவ்வாற்றான் பிராகபாவத்தின் துவம் ஸம் ஒருகாலத்தில் தனது பிரதியோகியின் பிரதியோகிவடிவமாம். ஒருகாலத்தில் தனது பிரதியோகியினது பிரதியோகியின் துவம்ஸ ரூபமாம. பிராகபாவத்துவமஸம் வேறன்று.

இச்சாம்பிரதாயிகக் கிரமமும யுக்தி விருத்தமாம். ஏனெ னின், கடமோ ஸாந்தமும்பாவரூபமுமாம. கடதுவமஸம் அநந்த மும் அபாவ ரூபமுமாம். ஒரு கடப்பிராகபாவத் துவம்ஸத்திற்கே ஸாந்த அநந்தங்களோடு அபேதங் கூறுதலும், அங்ஙனமே பாவா பாவங்களோடு அபேதங் கூறுதலும விருததமாம். கடஉற்பத்தி யுண்டாயின் அப்போது 'கடமுண்டாயிற்று' 'கடப்பிராகபாவமழி ந்தது' என்றிவ்வாறு இரண்டு விலக்ஷணமான தோற்ற முண்டா கின்றன. அவற்றுள் 'கடமுண்டாயிற்று' என்னும் தோற்றத்திற்கு விஷயம் உற்பத்தியாகிய கடமாம். 'கடப்பிராகபாவம்நஷ்டமாயிற்' றென்னும் உணர்ச்சிக்கு விஷயம் கடப்பிராகபாவத்தின் துவம்ஸ மாம். அவற்றிற்கு அபேதம் (ஒற்றுமை) கூறுதல் சம்பவியாது. அங்ஙனமே தண்டமுதலியவற்றாற் கடத்தின் துவம்ஸ முண்டாக வே, 'இப்பொழுது கடத்துவம்ஸ முண்டாயிற்று' 'கடப்பிராகபா வத்துவம்ஸம் முன்கடோற்பத்தி காலத்தி லுண்டாயிற்று' என்னு

முணர்ச்சி யுண்டாகின்றது. ஆண்டு வர்த்தமான காலத்தில் கடத் துவம்ஸத்தின் உற்பத்தியும், அதீதகாலத்தில் கடப்பிராகபாவத் துவம்ஸத்தின் உற்பத்தியும் சித்தமாகின்றன. வர்த்தமான காலத்தில் உற்பத்தியுடையதனோடு அதீதகாலத்து உற்பத்திக்கு அபேதம் சம்பவியாது ஆதலால கடப் பிராகபாவத்தின் துவம்ஸம் கடத்தினும் கடத துவம்ஸத்தினும வேறாம. வேதாந்த பரிபாஷை முதலிய அத்வைத நூல்களினும் துவம்ஸப் பிராகபாவத்திற் கும பிராகபாவத்திற்கும் துவம்ஸம் வேறாக எழுதப்படவில்லை. ஆனால் முற்கூறிய நியாய சமபிரதாயத்தின்படி அநதாப் பாவமே (அடக்கமே) எழுதப்பட்டிருக்கின்றது. என்றாலும சுருதி சூத்திர பாஷியங்களோ இதனை நிரூபித்தலில் உதாசீனமா யிருக்கின்றன ஆதலால எவ்வகைப்பொருள் யுக்தி அநுபவாநுசாரமாகின்றதோ அதனை யங்கீகரித்தல் வேண்டும. யுக்தி யநுபவ விருத்தமாக இக் காலத்தைய நூலாசிரியர் எழுதுவன பிரமாணமாகா. ஆகலின் முற்கூறிய பொருள் பிரமாண விருத்த மன்று. மாறாக வேறென் றங்கீகரித்தலே யுக்தியநுபவங்களை யநுசரித்ததாம. இவ்வாற்றான் பிராகபாவத்தின் துவமஸம அபாவப் பிரதியோகியினையுடைய பிரத் துவம்ஸாபாவமாம்.

## ௭௭. கடாந்நியோந்நியாபாவந்தினத்து அந்தியந்தாபாவத்தின் கடத்தன்மை வடிவாந் தன்மையும், அதில் தோஷமும்.

சாமயிகாபாவம கேவலம திரவியத்திற்கே யாமென்னும இது முன் கூறப்பட்டிருக்கின்றது. ஆதலால அபாவப பிரதியோகி யினையுடைய சாமயிகாபாவம அப்பிரசித்தமாம். அபாவப்பிரதி யோகியினையுடைய அந்தியந்தாபாவத்திற்கோ அநேக உதாரணங்கள் உள. கபாலத்தில் கடத்தின் பிராகபாவமும பிரத்தொம்சாபாவ முமுள; தந்துவிலில்லை. ஆதலால் தந்துவில் கடப்பிராகபாவத்தின் அந்தியந்தாபாவமும், கடப்பிரத்தொம்சாபாவத்தின் அந்தியந்தாபாவமு முள. அங்ஙனமே கபாலத்தில் கடத்தின் சாமயிகா பாவமும் கடத்தின் அத்தியந்தாபாவமுமில்லை. ஆதலால் கபாலத்தில் கடத்தின் சாமயிகாபாவத்தின் அந்தியந்தாபாவமும், கடாந்தியந்தாபாவத்தின் அந்தியந்தாபாவமு முள. அங்ஙனமே கபாலத்தில் கபாலத்தின் அந்நியோந்நியா பாவமில்லை. ஆண்டுக் கபாலாந்நியோந்நியாபாவத்தின் அத்தியந்தாபாவம் இருக்கின்றது. அங்ஙனமே கடத்தில் கடத்தின் அந்

நியோந்நியாபாவம் இல்லை. ஆண்டுக் கடாந்நியோந்நியாபாவத்தின் அத்தியந்தாபாவ மிருக்கின்றது. ஆனால் அந்நியோந்நியாபாவத்தின் அத்தியந்தாபாவம் வேறில்லை; அநநியோந்நியா பாவத்தின் பிரதி யோகித்தன்மையை யவச்சேதகஞ்செய்யும் தர்மரூபமாம். எங் ஙனம்: கடாந்நியோந்நியாபாவத்தின் பிரதியோகித்தன்மையை யவச் சேதகம் செய்யும் தர்மம் கடத்தன்மையாம். அது கேவலம் கடத் தின்கண்ணே யிருக்கும். கடாந்நியோந்நியா பாவத்தின் அத்தியந் தாபாவமும் கடத்தின்கண்ணே யிருக்கும். கடத்திற்கு வேறாய சகல பதார்த்தங்களினும் கடாந்நியோந்நியா பாவமிருக்கின்றது. ஆதலால் கடாந்நியோந்நியாபாவததின் அத்தியந்தாபாவம் கடத் தின் வேறாய பதார்த்தங்களிலிராது. இவ்வாற்றாற் கடத்தன்மை யின் சமநியதம கடாநநியோந்நியாபாவத்தின்அதநியந்தாபாவமா யிருத்தலின் கடத்தன்மைவடிவமே கடாந்நியோந்நியாபாவத்தின் அத்தியந்தாபாவமாம்.

இத்தன்மைய பிராசீனர் எழுத்தும விசுவசிக்கத் தக்கதன்று. ஏனெனின், கடத்திற் சமவாயமாகக் கடத்துவமிருக்கின்றதென் னு முணர்ச்சிக்கு விஷயம் கடததன்மையாம். "கடததிற் கடாந்நி யோநநியாபாவமில்லை" என்னு முணர்ச்சிக்கு விடயமான கடாநநி யோந்நியாபாவத்தின் அத்தியநதாபாவ மிருக்கின்றது. ஆதலால் அந்நியோநநியாபாவததின் அத்தியநதாபாவம அநநியோந்நியா பாவத்தின் பிரதியோகித்தன்மையை யவச்சேதகஞ்செய்யும தர்ம ரூபமன்று. அதனின் வேறாகிய அபாவரூபமேயாம்.

## எஅ. அத்தியந்தாபாவத்தின் அத்தியந்தாபாவம் முதலத்தியந்தாபாவத்தின் பிரதியோகி வடிவினதாதலைப் பிரதிபாதித்தலும், அதன் கண்டனமும்.

அங்ஙனமே அத்தியந்தாபாவத்தின் அததியந்தாபாவத்தினை யும முதல அபாவத்தின் பிரதியோகி வடிவமாகப் பிராசீனர் அங் கீகரிக்கின்றனர். அதன கண்டனமோ நவீன நியாய நூல்களில் ஸபஷ்டமாம. அங்ஙனமன்றே, யாண்டுக் கடம் என்றும் இருப்ப திலலையோ, ஆண்டுக கடததின அத்தியநதாபாவம் இருக்கின்றது. யாண்டுக் கட முளதாகின்றதோ, ஆண்டுக் கடாத்தியநதாபாவம் இருப்பதில்லை. ஆதலால் அதன் (கடாததியந்தாபாவத்தின்) அத்தி யந்தாபாவம இருக்கின்றது. இவ்வாறறான் கடாத்தியந்தாபாவத்

தின் அத்தியந்தாபாவம் முதல்அத்தியந்தாபாவத்தின் பிரதியோகியாகிய கடமெதுவோ, அதனோடு ஒருங்கு நிற்பதாயிருத்தலின் கடசொரூபமாம். அதனின் வேறன்று. கடாத்தியந்தாபாவத்தின் அத்தியந்தாபாவத்திற்குக் கடரூபம் அங்கீகரியாது, வேறெனக் கொள்ளின் அத்தியந்தாபாவங்களுக்கு அநவஸ்தை யுண்டாகும். எங்ஙனம் கடாத்தியந்தாபாவத்தின் அத்தியந்தாபாவம் வேறோ, அங்ஙனமே இரண்டாவது அத்தியந்தாபாவத்திற்கு மூன்றாவது அத்தியந்தாபாவமும, மூன்றாவதற்கு நான்காவதும், நான்காவதற்கு ஐந்தாவதும் வேறும. இவ்வாற்றான் அத்தியந்தாபாவங்களுக்கு ஓரிடத்தும முடிவுண்டாகாமல்இங்ஙனம்அநந்த தாரையுண்டாகும். இரண்டாவது அத்தியந்தாபாவத்தினை முதல் அத்தியந்தாபாவத்தின் பிரதியோகி சொரூபமாகக் கொள்ளின், அப்போது அநவஸ்தையாகிய தோஷம இல்லை. ஏனெனின், கடாத்தியந்தாபாவத்தின் அத்தியந்தாபாவம் கடரூபமெனக் கொள்ளின் இரண்டாவது அத்தியந்தாபாவத்தின் அத்தியந்தாபாவமும கடாத்தியந்தாபாவமேயாம. ஏனெனின், இரண்டாவது அத்தியந்தாபாவம் கடரூபமாம். ஆதலால் அதன் அத்தியந்தாபாவம் கடத்தின் அத்தியந்தாபாவமேயாம். அங்ஙனமே மூன்றாவது அத்தியந்தாபாவத்தினது நான்காவது அத்தியந்தாபாவம் மீண்டும் கடரூபமாம். நான்காவதுஅத்தியந்தாபாவத்தினது ஐந்தாவது அத்தியந்தாபாவம்கடாத்தியந்தாபாவ ரூபமாம். இவ்வாற்றாற் பிரதியோகியினும ஒரு அத்தியந்தாபாவத்தினும எல்லாஅத்தியந்தாபாவங்களு மடங்கும். அநவஸ்தையாகிய தோஷமில்லை. ஆதலால் அத்தியந்தாபாவத்தின் அத்தியந்தாபாவத்தினை முதல் அத்தியந்தாபாவத்தின் பிரதியோகி சொரூபமாகப் பிராசீனா அங்கீகரிக்கின்றனா.

ஆண்டு நவ்ன கிரந்தகாரர் இத்தோஷத்தினை எழுதியிருக்கின்றனர்:—யாண்டுப் பூதலத்திற் கடமுளதாகின்றதோ, ஆண்டுப் பூதலத்திற் கடமுளது, பூதலத்திற் கடாத்தியந்தாபாவமில்லை' என்றிவ்வாறு விலக்ஷண வுணர்ச்சி யுண்டாகின்றது. விதிமுக வுணர்ச்சிக்கும நிஷேதமுக வுணர்ச்சிக்கும் ஒரே விஷயம் சமபவியாது. ஆதலால் விதிமுக வுணர்சசிக்கு விஷயம் கடமும, நிஷேதமுக வுணர்ச்சிக்கு விடயம் கடாத்தியந்தாபாவத்தின் அத்தியந்தாபாவமுமாம். அது கடரூப மன்று; அபாவரூபமாம. ஆதலால் கடத் வேறும.

இரண்டாவது 'அத்தியந்தாபாவத்தை மேமறனக் கொள்ளின் அநவஸ்தாதோஷம உண்டாமெனக் கூறியதற்குச சமாதானம வருமாறு:—இரண்டாவது அத்தியநதாபாவம் முதலத்தியந்தாபாவததின் பிரதியோகியோடு ஒருங்கு நிற்பதாம். மூன்றுவது அபாவம் முதல் அபாவத்தோடு ஒருங்கு நிற்பதாம். பிரயோகியின் சமான தேசததிலுள்ள இரண்டாவது அபாவ மெதுவோ, அதனோடு ஒருங்கு நிற்பது நான்காவது அபாவமாம். முதலாவது மூன்றுவதுஅபாவங்களுடன் ஒருங்கு நிற்பது ஐந்தாவது அபாவமாம். இவ்வாற்றுன் இரட்டைச் சங்கையின் அபாவ முழுவதும் இரண்டாவது அபாவத்தோடு ஒருங்கு நிற்பனவாம். விஷம சங்கையின் அபாவ முழுவதும் முதல் அபாவத்தோடு ஒருங்கு நிற்பனவாம். ஆண்டு இரண்டாவது அபாவம் முதல் அபாவததின் பிரதியோகியோடு ஒருங்கு நிற்பதாயினும், பாவ அபாவங்களுக்கு ஐக்கியம் பொருந்தாது. ஆதலால் கடத்தோடு ஒருங்குநிற்பதாயினும் கடாத்தியந்தாபாவாபாவம் கடத்தின் வேறும். முதல் அபாவத்தோடு ஒருங்கு நிற்கும் மூன்றுவது அபாவமோ, முதல் அபாவ சொரூபமாம்; வேறன்று. ஏனெனின், "கடம் இல்லை" என்னும் நிஷேதமுகவுணர்ச்சிக்கு விஷயம் முதல் அபாவமாம். "கடாததியந்தாபாவாபாவ மில்லை" என்னும் உணர்ச்சியின் விஷயமே மூன்றுவது அபாவமாம். ஆதலால் மூன்றுவது அபாவம் முதல் அபாவ வடிவினதாம். அங்ஙனமே கடாத்தியந்தாபாவ மில்லையென்னும் நிஷேதமுகவுணர்ச்சிக்கு விஷயம் இரண்டாவது அபாவமாம். "மூன்றுவது அபாவ மில்லை" என்றிவ்வாறு நான்காவது அபாவமும நிஷேதமுகவுணர்ச்சிக்கு விஷயமாம். ஆதலால் இரண்டாவது அபாவத்தோடு ஒருங்கு நிற்கும் நான்காவது அபாவம் இரண்டாவது அபாவரூபமாம்; ஆனுல் கடததோடு ஒருங்கு நிற்பதாயினும் இரண்டாவது அபாவாபாவரூபம் கடத்தின் வேறுய அபாவரூபமாம். இவ்வாறுன் அபாவமாலைமுழுவதுமமுதல்அபாவ இரண்டாவது அபாவங்களுள் அடங்கும். அநவஸ்தைத் தோஷமின்று.

பிராசீனா கிரமப்படி பிரதியோகியிலும் அபாவத்திலும் எல்லா அபாவங்களும அடங்குதலால் ஒரு அபாவமே அங்கீகரிக்க வேண்டியதாகின்றது. நவீனர் கிரமப்படி இரண்டபாவங்கள் அங்கீகரிக்கவேண்டியன வாகின்றன. அதனுல் நவீனமதததில் கௌரவமுளது. என்றுலும் பாவாபாவங்களுக்கு ஐக்கியம் பொருந்தா

தாகலின் பிராசீனமதம பிரமாணவிருத்தமாம். நவீனமதம் அநுபவாநுசாரியா யிருக்கின்றது. ஆதலால் பிரமாணத்தாற பெறப்படுவது கௌரவ தோஷத்தை யுண்டுபண்ணுவதன்று. இவ்வாற்றுன் கடாத்தியந்தாபாவததின் அததியநதாபாவமும அபாவப்பிரதியோகியினையுடைய அபாவமாம. இவ்வாறு அபாவப் பிரதியோகியினையுடைய சம்சர்க்காபாவத்தின் உதாரணம் சொல்லபபட்டது.

## எகூ. அபாவப்பிரதியோகியினையுடைய அந்நியோந்நியாபாவத்தின் உதாரணமும், முற்கூறிய அர்த்தத்தின் அநுவாதமும்.

அபாவப் பிரதியோகியினையுடைய அந்நியோந்நியா பாவத்தின் உதாரணம் மிக வெளிப்படையாம். எங்ஙனம்: பிராகபாவத்தின் அந்நியோந்நியாபாவம் பிராகபாவத்தி லின்று; சகல பதார்த்தங்களிலுமுண்டு. ஏனெனின், பேதத்தினை அந்நியோந்நியாபாவமென்பர். சொரூபத்திற் பேதமிராது. சொரூபத்தின் வேறாய எல்லாவற்றிலும் எல்லாவற்றின் பேதமு முளது. ஆதலால் பிராகபாவத்திற்கு வேறாய பதார்த்தங்களில் பிராகபாவத்தின் அந்நியோந்நியாபாவமிருக்கின்றது. பிரத்துவம்ஸாபாவத்தின் வேறாயவற்றில் பிரத்துவம்ஸாபாவத்தின் அந்நியோநநியாபாவம் உளது. அத்தியந்தாபாவத்தின் வேறாயவற்றில் அத்தியநதாபாவத்தின் அநநியோந்நியாபாவம் இருக்கின்றது. அந்நியோந்நியாபாவத்தின் வேறாயவற்றில் அநநியோந்நியாபாவத்தின் அந்நியோந்நியாபாவம் இருக்கின்றது. அந்நியோந்நியாபாவத்தின் வேறாயவை நால்வகைச் சமஸர்க்காபாவமும் சகல பாவபதார்த்தங்களுமாம். ஏனெனின், சமஸர்க்காபாவமும பாவ பதார்த்தமும் அந்நியோந்நியாபாவ ரூபமன்று. ஆதலால் அந்நியோந்நியாபாவத்தின் வேறும். எது எதனின் வேறாகின்றதோ, அதன்கண் அதன் அநநியோந்நியாபாவம உளதாகின்றது. ஆதலால் சம்சர்க்காபாவததிலும் சகலபாவபதார்த்தங்களிலும் அநநியோந்நியாபாவத்தின் அந்நியோந்நியாபாவ மிருக்கின்றது.

இவ்வாற்றுன் ஐவகைஅபாவங்களுள் சாம்யிகாபாவமோ கேவலம் திரவியததிற்கே யுண்டாம். ஆதலால்அது அபாவப்பிரதியோகியினை யுடையதன்று. நான்கபாவங்களும் அபாவப்பிரதியோகியை யுடையனவாமென்பதற்கு உதாரணம்சொல்லப்பட்டது. அபாவப்

பிரதியோகியினையுடைய அபாவத்தினைச் சிலவிடங்களில் பிராசீனர் பாவரூபமெனக்கொண்டிருக்கின்றனர். எங்ஙனம்: கடப்பிராகபாவத்தின் துவம்ஸத்தினைக் கடரூபமெனக் கொள்ளுகின்றனர். கடத்துவம்ஸத்தின் பிராகபாவத்தினைக் கடமெனக்கொள்ளுகின்றனர். கடான்னியோந்நியாபாவத்தின் அத்தியந்தாபாவத்தினைக் கடத்துவமெனக் கொள்ளுகின்றனர். கடாத்தியந்தாபாவத்தின் அத்தியந்தாபாவத்தினைக் கடமெனக் கொள்ளுகின்றனர். அதன் கண்டனம் செய்யப்பட்டது. ஆகலின் அபாவம் அபாவப்பிரதியோகியினையுடையதுமாம். பாவப்பிரதியோகியினையுடைய அபாவமோ மிகப் பிரசித்தமாம். இவ்வாறுன் அபாவத்தின் நிரூபணம் நியாயசாஸ்திரத்தின்படி செய்யப்பட்டது. சில விடங்களில் பிராசீன மதத்திலாதல் நவீன மதத்திலாதல் தோஷங்கூறிய தெதுவோ, அதுவும நியாய மரியாதையைக் கொண்டே தோஷங் கூறியதாம்.

## அ௰. முற்கூறிய நியாயமதத்தில் வேதாந்தத்திற்கு விருத்தமான ஆசங்கையைக் காட்டலும், அநாதிப்பிராகபாவத்தின் கண்டனமும்.

அன்றியும் முற்கூறிய வர்ணனம் அபாவத்தை நிரூபித்தல் வேதாந்த சாஸ்திரத்தினும விருத்தமன்று. எவ்வளவு அம்சம் வேதாந்த விருத்தமோ, அதனைக் காட்டுவோம். கபாலத்திலுள்ள கடத்தின் பிராகபாவத்தினை அநாதியென்பர். அது பிரமாணவிருத்தமாம். ஆதலால் வேதாந்தாநுசார முடையதன்று; ஏனெனின், கடப்பிராகபாவத்தின் அதிகரணமான கபாலமும் ஸாதி; பிரதியோகியாகிய கடமும ஸாதி. அங்ஙனமாகவே பிராகபாவத்திற்கு அநாதித்தன்மை எங்ஙனமுண்டாகும்? மாயையில் சகல காரியங்களின் பிராகபாவத்திற்கும அநாதித தன்மை கூறிற்பொருந்தும். ஏனெனின் மாயை அநாதியாம்; ஆனல் மாயையில் காரியத்தின் பிராகபாவத்தினை அங்கீகரித்தல் வியர்த்தமாம. சித்தாந்தத்தில் விரும்பப்படுவதுமன்று; ஏனெனின், கடத்தினுற்பததி கபாலத்திலுண்டாகின்றது; பிறவற்றிலுண்டாகிறதில்லை. அங்ஙனமே படத்தின் உற்பத்தி தந்துவிலுண்டாகிறது; கபாலத்தில் உண்டாகிறதில்லை. ஆதலால் கடததின் பிராகபாவம கபாலத்திலுளது; தந்துவிலின்று. படத்தின் பிராகபாவம் தந்துவிலுளது; கபாலத்திலின்று. எதற்கு எதனகண் பிராகபாவமுளதோ, அதற்கு அதன்கண் உற்பத்தியுள

தாம்; பிறவற்றிலுளதாத லில்லை. எல்லாவற்றினின்றும் எல்லாக் காரியங்களின் உற்பத்தியுமுண்டாகலாகாதென்பதற்காகவே பிராகபாவத்தின் அங்கீகாரமாம்.

அன்றியும் நையாயிகா பிராகபாவத்தின் முக்கியப் பிரயோஜனத்தை இங்ஙனம் கூறுகின்றனர்:—கபாலம் தந்து முதலியவற்றிற்குக் கடம்படமுதலிய பரிணாமமோ இல்லை. ஆனால் கபாலத்தில் கடத்தின் ஆரம்பம் உண்டாகின்றது. தந்துவில் படத்தின் ஆரம்ப முண்டாகின்றது. கடம்படமுதலியனவுண்டாயின், அப்போது முன்போலவே கபால தந்துக்களு மிருக்கின்றன. பரிணாமவாதமாயின் கடாகாரத்தை யடைந்தபின் சொரூபமாகக் கபால மிருப்பதில்லை. அங்ஙனமேபடாகாரத்தையடைந்தபின்னர்த்தந்துவுமிருப்பதில்லை. அது பரிணாமவாதமோ வன்று; ஆரம்பவாதமாம். கபாலமிருந்தபடியேயிருந்துகொண்டு, தனதுகடத்தின்உற்பத்தியைச் செய்கின்றது. எப்போது கடம் உற்பத்தியாய் விடுகின்றதோ, அப்போதும் கடத்தின் சாமக்கிரி முன்போலவே பொருந்திநிற்கும். பரிணாம வாதத்திலோ காரியத்தினுற்பத்தி யுண்டாகவே உபாதானகாரணம் இருப்பதில்லை; ஏனெனின், பரிணாம வாதத்தில் உபாதான காரணமே காரியரூபத்தை அடைகின்றது. ஆதலால் கடவடிவத்தையடைந்த கபாலம் கடத்தின் சாமக்கிரியன்று. ஆரம்பவாதத்தில் உபாதான காரணம் தனது சொரூபத்தை விடுவதில்லை. உபாதானத்தின் வேறான காரியத்தின் உற்பத்தி யுண்டாகின்றது. தனது சொரூபமாக உபாதான காரணம் பொருந்தி நிற்கும். ஆதலால் கடத்தின் உற்பத்தி யுண்டாகியும் உள்ளபடியே சாமக்கிரியிருத்தலால் மீண்டும் கடத்தி னுற்பத்தி யுண்டாதல்வேண்டும். ஒரு கடமுண்டாய் வேறு கடமுண்டாதலில் முதற் கடம் பிரதிபந்தகமாம்; கடத்தான் நிரோதிக்கப்பட்ட கபாலத்தில வேறு கடத்தினுற்பத்தியுண்டாகிறதில்லை. அங்ஙனமாயினும் முதலுண்டாகியகடத்திற்கு மீண்டும் உற்பத்தி யுண்டாதல் வேண்டும். முதலுற்பத்திக்கு மீண்டும் உற்பத்தியங்கீகரிக்கின், எங்ஙனம் உற்பத்திகாலத்தில் "கடம் உற்பத்தியாகின்றது" என்னும் வியவகாரமுண்டாகின்றதோ, அங்ஙனமே உற்பத்திகாலத்திற்குப் பிந்தியகாலத்திலும் "கடம் உற்பத்தியாகின்றது" என்னும் வியவகாரம் உண்டாதல் வேண்டும். சித்தித்த கடத்தின் ஆதாரகாலம் எதுவோ; அது கடத்தின் உற்பத்திகாலத்திற்குப் பிந்தியகாலமாம். சித்தித்த கடத்தின ஆதாரகாலத்

-தில் "உண்டாயிற்றி கடம்" என்னும் வியவகார முண்டாகின்றது. 'உண்டாகின்றது கடம்' என்னும வியவகாரம் உற்பத்திக்ஷணம் ஒன்றில் உண்டாகின்றது. கடத்தின் ஆதாரமாகிய இரண்டாவது முதலிய க்ஷணங்களில 'உண்டாகின்றது' என்னும் வியவகாரமுண் டாகிறதில்லை. ஏனெனின், வர்த்தமான வுற்பத்தியுடைய கடமுள தென்னும பொருள் 'கடம் உற்பத்தியாகின்றது' என்று கூறுத லால் தோற்றுகின்றது. 'உற்பத்தியாயிற்று கடம்' என்று கூறுத லால் சென்ற உற்பத்தியினையுடைய கடமுள்தென்னும் பொருள் தோற்றுகின்றது. உற்பத்தியானதற்கு உற்பத்தி யங்கீகரிக்கின் கடம் சித்தித்த தசையிலும் யாதேனு மோா உற்பத்தி நிகழ்வதா யிருக்கும். அதனுலுற்பத்தியான கடத்திலும் 'உற்பத்தியாகின்றது கடம' என்னும வியவகாரமுண்டாதல்வேண்டும. ஆதலானுற்பத்தி யான கடத்திற்கு மீண்டும உற்பத்தி காணப்படாமையான் கடத் தின் உற்பத்திசாமக்கிரி இருப்பதில்லையென்று அங்கீகரித்தல்வே ண்டும். ஆண்டு மறறைச சாமக்கிரிகளாகிய கபாலமுதலியனவோ விருக்கின்றன. அக்கடத்தின்பிராகபாவமிருப்பதில்லை. கடப்பிராக பாவத்தின் துவம்ஸம கட உற்பத்தி க்ஷணத்தில் உண்டாகின்றது. அக்கடத்தின் பிராகபாவம கடத்தின் உற்பத்தியிற் காரணமாம். அதன் அபாவத்தாலுண்டாகிய கடத்திற்கு மீண்டும உற்பத்தியுண் டாகிறதில்லை. இது பிராகபாவத்தின் முக்கியப் பிரயோஜனமாம்.

மாயையில்அந்தக்கடமுதலியவற்றினது பிராகபாவத்தின்முதற் பிரயோஜனமோ சமபவியாது. ஏனெனின், கட முதலியவற்றின் சாக்ஷாத் உபாதான காரணம மாயையன்று;கபாலமுதலியனவாம். மாயை சர்வ பதாாத்தங்களுக்கும சாக்ஷாத உபாதானமெனல் சித்தாந்த பக்ஷத்தில் அங்கீகரிக்கப்பட்டுளதாயினும, காரியத்தின் உற்பத்தியில் வேறு காரணத்தினஅபேக்ஷையைச செய்கிறதில்லை. அற்புதசக்தி மாயையில் இருக்கின்றது. ஆதலால் பிராகபாவ முதலிய வடிவினவாகிய அந்நிய காரணத்தின் அபேக்ஷையில்லை. ஆதலால் மாயையின்கண் எதன் பிராகபாவமுமில்லை. கபாலத்திற் கடத்தி னுற்பத்தி யுண்டாகின்றது; படத்தினுற்பத்தி யுண்டாகிற தில்லையென்பதிற் பிராகபாவம் ஏதுவெனக் கூறப்பட்டது. அது வும் பொருந்தாது. கபாலத்திற் கடத்தின்காரணத்தன்மையுளது; படத்தின் காரணத்தன்மை யில்லை. ஏனெனின், அந்நுவயவெதிரே கங்களாற காரணத்தன்மையின் ஞானமுண்டாகின்றது. கபாலத

தின் அந்நுவயம் அதாவது சததைஇயுளதாயின் கடத்தின் அநநுவயம் உளதாகின்றது. கபாலத்தின் வெதிரேகத்தால் அதாவது அபாவத்தால் கடததின் வெதிரேகம் உளதாகின்றது. இவ்வாற்ற கபாலத்தின் அநநுவய வெதிரேகங்களாற கடததின் அந்நுவய வெதிரேகம காணப்படுகின்றது. படத்தின அநநுவய வெதிரேகம் காணப்படுவதில்லை. ஆதலாற கபாலததிற கடத்தின் காரணத்தன்மையுளது; படததின நின்று. இதனுனே கபாலததினின்றும் கடமே யுண்டாகின்றது; படமுண்டாவதில்லை. படாதிகளைத் தவிரத்தற் பொருட்டுக் கடததின் பிராகபாவம கபாலத்திற் சம்பவிப்பதில்லை. கபாலததில் கடததின் உறபத்திக்குப் பின் உற்பத்தி யுண்டாகவேண்டியதாமெனற எநத முககியப் பிரயோஜனம் பிராகபாவத்திறகுச் சொல்லப்பட்டதோ, அதுவும பரிணாமவாதத்தில் தோஷமன்று. ஏனெனின், சொரூபமாக நிலைத்துள்ள கபாலம் கடததின் உறபததியைச செய்கினறது. காரியவடிவத்தையடைந்த கபாலததினின்றும கடத்தின்உறபததியுண்டாகிறதில்லை. ஆதலால் பரிணாமவாததததிற பிராகபாவம நிஷபலமாம.

விசாரிககுமிடதது ஆரமபவாததததிலும் பிராகபாவம் பயனற்றதாம. ஏனெனின், கடததின் உறபததியுண்டாகிய பின்னும் உற்பத்தி யுண்டாதல வேண்டுமெ என்று இவ்வாறு கூறின் அவனை இங்ஙனம் கேட்கவேண்டுமெ.—வேறு கடத்தின் உறபத்தியுண்டாதல் வேண்டுமோ? அல்லது எநதக் கடம எக்கபாலத்தில் உண்டாயிருக்கின்றதோ, அத னுற்பததியுண்டாதல் வேண்டுமா?வேறுகடத்தின் உற்பத்தியுண்டாகவேண்டுமெனக்கூறின்,அதுசம்பவியாது. ஏனெனின்எநதக்கபாலத்தால எநதககடமுண்டாகின்றதோஅந்தக்கபாலத்தில் அக் கடத்தின் காரணத்தன்மையே யுளது. மற்றோர் கடத்தின் காரணத்தன்மை மற்றோர கபாலத்தி னுளது. ஆதலால் வேறு கடத்தின துறபததியினடைவில்லை. கடம் முன் உண்டாயிருக்கின்றது; அதனுற்பத்தி யுண்டாகுமெனக் கூறின், அதுவும் பொருநதாது. ஏனெனின், யாண்டுக கபாலத்தினின்றும் கடத்தினுற்பத்தி யுண்டாகின்றதோ, ஆண்டு முதல் உற்பத்தி மற்றையவுற்பததியின் பிரதிபந்தகமாம. ஆதலால் மீண்டும் உற்பத்தியின் உணர்சசியில்லை. பிராகபாவம் பயனற்றதாம.

" உற்பத்தியின் சொரூபத்தைச்சூக்ஷுமமாக விசாரிக்கின், மீண்டுமே உற்பத்தியுண்டாதல் வேண்டுமென்று கூறுதலே விருத்தமாம. ஏனெனின், முதற் கணத்தோடுள்ள சம்பந்தத்தினை உற்பத்தியென்பர். கடத்தின் முதற்கணத்தோடுள்ள சமபந்தம் கடத்தின் உற்பத்தி யெனபபடுகின்றது. கடத்தின் அதிகரணத்துள்ள கணத்தின் துவமஸத்திற்கு அதிகரணமாகாத கணம் எதுவோ, அது கடத்தின் முதற்கண மெனப் படுகின்றது. கடத்தின் அதிகரணததுக்கணங்கள்அநந்தமாம்.அவற்றுள்கடத்தின் அதிகரணத்து இரண்டாவது முதலிய கணங்களெவையோ, அவற்றில் கடாதிகரணத்து முதற்கணத்தின் துவமஸ மிருக்கின்றது. முதற்கணத்தில் கடாதிகரண க்ஷணத்தின் துவம்ஸமில்லை. ஆதலால் கடாதிகரணத்துக்கணத்தின் துவமஸத்திற்கு அதிகரணமாகாதது கடத்தின் முதற்கணமாம். அக்கணததோடுள்ள சம்பந்தமே கடத்தின் உற்பத்தியெனப்படுகின்றது. இரண்டாவது முதலிய கணங்களில்முதற் கணத்தோடு சம்பந்தம் உண்டாகிறதில்லை. ஆதலால் முதற்கணத்திற்றனே 'உண்டாகின்றது' என்னும் வியவகாரமுண்டாகின்றது. இரண்டாவது முதலியகணங்களிலுண்டாகிறதில்லை. இவ்வாற்றன் முதற்கணசம்பநதமாகிய உற்பத்தி மீண்டுமஉண்டாதல்வேண்டுமென்றுகூறுதல் "என் தாய் மலடி" என்னும வாக்கியத்திற்குச்சமமாம. ஏனெனின்,கடத்தின்உற்பத்திக்குப்பிந்தியகணம் கடாதிகரணத்தினது துவம்ஸத்தின் அதிகரணமேயாகும. ஆதலால் கடாதிகரண க்ஷணத்தின் துவமஸத்திற்கு அதிகரணமாகாத க்ஷணம் மீண்டும் சமபவியாது. இதனுல் உற்பத்தியாகியதற்கு உற்பத்தியாதல் வேண்டுமென்று கூறுதல் விருத்தமாம.இவ்வாற்றுற பிராகபாவம் நிஷ்பலமாம். "கபாலத்திற் சமவாயமாகக் கடம்இல்லை" என்னும் உணர்ச்சிக்கு விஷயமான சாமயிகாபாவமே சம்பவிக்கின்றது. "கபாலத்திற் கடமுண்டாகும" எனனுமஉணாசசிக்கு விஷயமும் கடததின் வருங்காலமாம். பிராகபாவம பெறப்படாததாம்.

தமது சாஸதிரத்தின் சமஸகாரத்தான் நையாயிகர் பிராகபாவத்தினை அங்கீகரிக்கினும் ஸாதியாக (உற்பத்தியுடையதாக) அங்கீகரித்தல் வேண்டும்; அநாதியெனல் பொருந்தாது. ஏனெனின், அந்நியமதத்திலோ எல்லா அபாவங்களுக்கும் அதிகரணபேதத்தால் பேதமுண்டாகின்றது. நையாயிகமதத்தில் அதிகரணபேதத்தால் அபாவங்களின் பேதமின்று. ஆனுல் பிரதியோகியின்

பேதத்தால அபாவத்தின் பேதம் உண்டாகின்றது. ஆதலால் ஒரு பிரதியோகியினை யுடைய அபாவம் நாநா அதிகரணங்களில் ஒன்றேயாகின்றது. ஆனல் பிராகபாவமோ நையாயிக மதத்திலும் அதிகரண பேதத்தால பின்னமேயாம். ஏனெனின், கடத்தின் பிராகபாவம் கடத்தின் உபாதான காரணமான கபாலத்தின்கண்ணே யுளது. அவற்றினும் எந்தக்கடம எக்கபாலத்தின்கண்ணுளதோ, அக்கடத்தின் பிராகபாவம் அக்கபாலத்தின்கண் ணிருக்கின்றது. வேறு கடத்தின் பிராகபாவம வேறு கபாலத்தின்கணுளது. இவ்வாற்றான் ஒரு பிராகபாவம ஒரே அதிகரணத்தில் இருக்கின்றது. அக்கபால முதலிய பிராகபாவத்தின் அதிகரணம ஸாதியாம. அவற்றிலிருக்கும் பிராகபாவம் எவ்வாற்றானும் அநாதியாதல் பொருந்தாது. அநாதி அதிகரணத்திலும் ஸாதியிலும ஒரு பிராகபாவம் இருப்பதாகுமாயின் அநாதியென்றலுமபொருந்தும். ஆனல் அங்ஙனம நாநாஅதிகரணத்திற் பிராகபாவம் சம்பவியாது. ஆதலால் கபாலமாத்திரத் திருக்கும கடப்பிராகபாவத்திற்கு அநாதித் தன்மை சமபவியாது.

கபாலத்தின் உற்பத்திக்குமுன் கபாலத்தின் அவயவங்களில் கடத்தின் பிராகபாவ மிருக்கும். அதற்குமுன் அவயவத்தின் அவயவங்களிலிருக்கும். இவ்வாற்றால் அநாதி பரமாணுவிலுள்ள கடத்தின் பிராகபாவம்அநாதியாமென் றிவ்வாறு கூறின், அது பொருந்தாது. ஏனெனின்; தனது பிரதியோகியின் உபாதான காரணத்தில் பிராகபாவமிருக்கும்; பிறவற்றிலிராது. இது நையாயிகர்களது நியமமாம். கபாலத்தின் அவயவம் கபாலத்தின் உபாதான காரணமாம். கடத்தின் உபாதான காரணமன்று. ஆதலாற் கபாலாவயவத்தில் கபாலத்தின் பிராகபாவமே சமபவிக்கிறது. கடத்தின் பிராகபாவம் கபாலத்தின்கண்ணே யுளது. கபாலாவயவத்திற் சம்பவியாது. இவ்வாற்றாற் பரமாணு கேவலம் துவியணுகத்திற்கு உபாதான காரணமாம். ஆதலால் துவியணுகத்தின் பிராகபாவமே பரமாணுவின்கண் ணுளதாம். துவியணுகத்திற்கு மேல் திரியணுக முதற் கடபரியந்தமான பிராகபாவங்கள் பரமாணுவிற் சம்பவியா. பரமாணுவில் துவியணுகத்தின் வேறாய பதார்த்தங்களின் பிராகபாவத்தையும அங்கீகரிக்கின், பரமாணுவி னின்றும் கடத்தின் உற்பத்தி யுண்டாதல் வேண்டும்.

அன்றியும் பரிணாமவாதத்திலோ காரியகாரணத்திற்கு அபேதம் உண்டு. ஆதலால் துவியணுகமுதல் அந்தியாவயவியான கடபரியந்தம காரணகாரியதாரைக்குப் பேதமில்லை. அம்மதத்திலோ பரமாணுவின்கண் உள்ள துவியணுகத்தின் பிராகபாவமே கடபரியந்தமான காரியதாரையின் பிராகபாவமாம். ஆதலாற் பரமாணுவிற் கடமுதலியவற்றின் பிராகபாவத்தினைக் கூறுதல் பொருந்தும். அக்காரிய காரணத்தின் அபேதமோ ஆரம்பவாதத்தி லில்லை. காரிய காரணங்களுக்கு ஒன்றறகொன்று அத்தியந்தபேத மிருக்கின்றது. ஆதலாற் கபாலாவயவததிற் கடத்தின் பிராகபாவமில்லை. அங்ஙனமே பரமாணுவில் துவியணுகத்தினது காரியத்தின் பிராகபாவம் சம்பவியாது .இவ்வாற்றால் ஸாதி கபால முதலியவற்றிற் கட முதலியவற்றின் பிராகபாவத்திற்கு அநாதித்தன்மை கூறுதல் அஸங்கதமாம.

## அக. அநந்தப் பிரத்துவம்ஸாபாவத்தின் கண்டனம்.

அங்ஙனமே நையாயிக மதத்தில் பிரத்துவம்ஸாபாவமும் தனது பிரதியோகியின் உபாதானத்திற்றானிருக்கும். ஆதலால் கடத்தின் துவமஸம் கபால மாத்திரத்திருப்பதாம். அஃது அநந்தமாமென்று கூறுதல் அசங்கதமாம். கடத்துவம்ஸத்தின் அதிகரணமான கபால மெதுவோ, அதன் நாசததால் கடத் துவம்ஸத்தின் நாச முண்டாகின்றது.

அன்றியும் கடத்துவமஸத்தின் நாசத்தை யங்கீகரித்தலில் நையாயிகர் இத்தோஷத்தைக் கூறுகின்றனர்:-கடத்துவம்ஸத்தின் துவம்ஸம் உளதேல் கடத்தின் மீட்சியுளதாதல் வேண்டும். ஏனெனின், பிராகபாவப் பிரத்தொம்ஸாபாவங்களின் அநாதாரகாலம் பிரதியோகியின் ஆதாரமாகின்ற தென்பது நியமம. எக்காலத்தில் கடத்துவம்ஸத்தின் துவமஸ முண்டாகின்றதோ, அக்காலம் கடத்துவம்ஸத்தின் அநாதாரமும், பிராகபாவத்தின்அநாதாரமுமாகும்; ஆதலால் கடத்தின் ஆதாரமாகும். இவ்வாற்றால் துவம்ஸத்தின் துவம்ஸத்தையங்கீகரிக்கின்கடமுதலிய பிரதியோகியின் மீட்சியுண்டாகுமென்னும் தோஷம் இல்லை. ஏனெனின், பிராகபாவத்திற்கு அநாதித்தன்மையும துவம்ஸத்திற்கு அநந்தத்தன்மையும் அங்கீகரிக்கின், முற்கூறிய நியமத்தின் சிததி யுண்டாகின்றது. முற்கூறிய

நியமத்தை யங்கீகரிக்கின் பிராகபாவத்திற்கு அநாதித்தன்மையும் துவம்ஸத்திற்கு அநந்தத்தன்மையும் பெறப்படுவனவாம். சித்தாந்தபக்ஷத்தில் பிராகபாவம ஸாதியாம். ஆதலால் பிராகபாவத்தின் உற்பத்திக்கு முந்தியகாலம கடப்பிராகபாவ கடத்துவம்ஸங்களின் அநாதாரமாம; கடத்தின் ஆதாரம் அன்று. அல்லது முக்கிய சித்தாந்தத்தில் முற்றும பிராகபாவத்தின் அங்கீகாரமில்லை. ஆதலால் கடத்தின் உற்பத்திக்கு முந்தியகாலம் கடப் பிராகபாவத்தின் அநாதாரமாம்; கடத் துவம்ஸத்தின் அநாதாரமுமாம். கடரூபப் பிரதியோகியின் அநாதாரமாம்; கட ரூபப் பிரதியோகியின் ஆதார மன்று. இதனால் பிராகபாவப் பிரத்துவம்ஸங்களின் அநாதாரகாலம் பிரதியோகியின்ஆதாரமாகின்றதென்னும் நியமம சம்பவிப்பதில்லை. ஆதலால் கடத் துவம்ஸத்திற்கும் துவம்ஸம உண்டாகின்றது. முற்கூறிய நியமம சிதநியாமையான் கடத்தின் மீட்சியும் உண்டாகிறதில்லை.

## அ௨. அந்நியோந்நியாபாவத்திற்கு ஸாதி ஸாந்தத் தன்மையையும், அநாதித்தன்மையையும் அங்கீகரித்தல்.

அங்ஙனமே அந்நியோந்நியாபாவமும் ஸாதி ஸாந்த அதிகரணத்தில ஸாதி ஸாந்தமுமாம். எங்ஙனம : கடத்தில் படத்தின் அந்நியோந்நியாபாவம் இருக்கின்றது. அதன் அதிகரணம் கடமாம். அது ஸாதியும் ஸாந்தமுமாம்.ஆதலால் கடத்திலுள்ளபடாந்நியோந்நியாபாவமும ஸாதியும ஸாந்தமு மாம. அநாதி அதிகரணத்தில் அந்நியோந்நியாபாவம் அநாதியாம்; ஆனால் அநாதியும ஸாந்தமாம்; அநந்த மன்று. எங்ஙனம் : பிரஹ்மத்தில் ஜீவனது பேத மிருக்கின்றது. அது ஜீவனது அந்நியோந்நியாபாவமாம். அதன் அதிகரணம் பிரஹ்மமாம்; அது அநாதியாம். ஆதலால் பிரஹ்மத்திலுள்ள ஜீவனது பேதமாகியஅந்நியோந்நியாபாவம் அநாதியாம். பிரஹ்மஞானத்தால் அஞ்ஞான நிவிருததிவாயிலாகப் பேதத்தின் அந்தமுண்டாகின்றது; ஆதலால் ஸாந்தமாம்.

அநாதி பதார்த்தத்திற்கும் ஞானத்தால் நிவிருத்தி அத்வைதவாதத்தில் இஷ்டமாம. இதனுேன சுத்த சேதனம, ஜீவன், ஈசுவரன், அவித்தை, அவித்தை சேதனங்களின் சம்பந்தம், அநாதிகளுக்கொன்றற்கொன்றுள்ள பேதம என்னும் ஆறுபதார்த்தங்களும் அந்

வைதமதத்தில் சொரூபமாக அநாதி யெனப்படுகின்றன. சுத்தசேதன மொழிந்த ஐந்திற்கும் ஞானத்தால் நிவிருத்தி அங்கீகரித் திருக் கின்றனர்.

இதில், ஜீவேசுரர்களை அத்வைத வாதத்தில் மாயிகமென்று கூறுகின்றனர்; மாயையின் காரியம மாயிகமெனப் படுகின்றது. ஜீவேசுவரர்களை மாயையின் காரியமாகவும் அநாதியாகவும் கூறுதல் விருத்தமாம என்னும சங்கை யுண்டாகின்றது. அச்சங்கைக்குச் சமாதானம் வருமாறு:—ஜீவேசுவரர் மாயையின் காரியமென்பது மாயிக பதத்தின் பொருள் அன்று. ஆனால் மாயையினது நிலையின் வசத்ததாய் ஜீவேசுவராகளது நிலையிருக்கின்றது; மாயையின் நிலைப்பின்றி ஜீவேசுவரர்களது நிலைப்பு நிகழாது; ஆகலின் மாயிகமாம்; மாயையினைப்போலஅநாதியுமாம். இவ்வாற்றான்அநாதி அந்நியோந்நியாபாவமும ஸாநதமாம, அநந்தமன்று; அங்ஙனமே அத்தியநதாபாவமும் ஆகாய முதலியவற்றைப்போல அவித்தையின் காரியமாம்; நாசமுடையதுமாம். இவ்வாற்றான் அத்வைத வாததததில் சகல அபாவஙகளும் நாசமுடையனவாம. ஒரு அபாவமும் நித்தியமன்று. அத்வைத வாதத்தில் அநாதம பதாாததங்கள் யாவும் மாயையின் காரியமாம. ஆதலால் ஆத்மாவின் வேறாயவற்றிற்கு நித்தியத்தன்மை சம்பவியாது. கட முதலிய பாவ பதார்த்தங்கள் மாயையின் காரியமாதல்போல அபாவமும் மாயையின் காரியமாம.

அத்வைதவாதத்தில் மாயைக்குப பாவரூபம கூறுகின்றனர். ஆதலால் அபாவ பதார்த்தத்திற்கு உபாதானமாதல் மாயைக்குச் சமபவியாது. காரியத்திற்கு ஸஜாதீயமாய் உபாதானம் இருக்கும். அபாவத்திற்கு ஸஜாதீயமாய் மாயையில்லை. ஆனால் மாயையும் அபாவமும் பாவத்துவ அபாவத்துவங்களின் விஜாதீயமாம். மாயையில் பாவத்துவமும் அபாவத்தில் அபாவத்துவமும் இருக்கின்றன. அங்ஙனமாயினும் சகல அபாவங்களுக்கும் மாயையே உபாதானகாரணம். ஏனெனின், அநிர்வசநீயத்தன்மை மித்தியாத்தன்மை ஞானத்தால் நிவர்த்திக்கபபடுந்தன்மை அநாத்துமத்தன்மை முதலிய தர்மங்களால் மாயையும் அபாவமும் ஸஜாதீயமாம். சகல தர்மங்களானும் உபாதானத்திற்கும் காரியத்திற்கும் ஸஜாதீயத்தன்மை கூறின், கடகபாலங்களினும் கடத்துவ

கபாலத்துவ விஜாதீய தர்மங்களிருத்தலான் கடத்திற்குபாதானம் கபாலமாகாது. மண்மயத்தன்மை முதலிய தர்மங்களான் கடமும கபாலமும ஸஜாதீயமாதல்போல அநிர்வசனீயத்துவ முதலிய தர்மங்களான் அபாவமும மாயையும ஸஜாதீயமாம. ஆதலால் சகல அபாவங்களும மாயையின் காரியமா மாகலின் மிதவையாம்.

ஓர் நூலாசிரியராகிய அத்வைதவாதி யொருவா அத்தியந்தாபாவ மொன்றனையே அங்கீகரிக்கின்றனா. மற்ற அபாவங்களை பொய்யென்பா:— எங்ஙனம : கடத்தின் பிராகபாவத்தைக் கபாலத்திற கூறுவா. அது பொய்யாம. ஏனெனின், கடத்தின உற்பத்திக்கு முந்திய கால சம்பந்தியாகிய கபாலமே 'கட முண்டாகும்' என்னும உணாவிற்கு விடயமாம. கடத்தின் பிராகபாவம அப்பிரசித்தமாம. அங்ஙனமே தண்ட முதலியவற்றாற பொடிக்கப்பட்ட கபாலத்தின அல்லது பிரிக்கப்பட்ட கபாலத்தின் வேறாய கடத்துவம்ஸமும அப்பிரசித்தமாம. அங்ஙனமே கட சம்பந்த மின்றிய பூதலமே கடத்தின் சாமயிகாபாவமாம. கடமிருக்குங்காலத்துக் கடத்தின் சம்பந்தியாகிய பூதலம இருக்கின்றதாகலின் கட சம்பந்த மின்றிய பூதலம இன்று. இவ்வாற்றாற் சாமயிகாபாவம அதிகரணத்தின வேறன்று. அங்ஙனமே கடத்தின்கணுள்ள படத்தின் பேதத்தினைக் கடத்தில் இருப்பதாய படாந்நியோந்நியாவ மென்பர். அஃது 'இரண்டனது' அபேதத்தின் அத்தியந்தாபாவ ரூபமாம். இரண்டு பதார்த்தங்களினது அபேதாத்தியந்தாபாவத்தின் வேறாய அந்நியோந்நியாபாவம அப்பிரசித்தமாம. இவ்வாற்றான் அத்தியந்தாபாவ மொன்றேயுளது. பிறிதோா அபாவமுமின்று. இவ்வாறு அபாவ நிரூபணத்தில வெகு விசாரமுளது. நூல விரியுமென்னும அச்சத்தால் அதன் தன்மைமாத்திரம அறிவிக்கப்பட்டது.

## அரு. அபாவப்பிரமைக்கு ஏதுவாகிய பிரமாணத்தின் நிரூபணமும், அபாவ ஞானத்தின் பேதபூர்வகமாக நியாயமதத்தில் பிரமப் பிரத்தியக்ஷத்தில் விஷயாபேக்ஷயின்மையும்.

அபாவத்தின் சொரூபம நிரூபிக்கப்பட்டது. அதிறபிரமாணம நிரூபிக்கப்படுகின்றது:—அபாவத்தின் ஞானம் இருவகையாம. ஒன்று பிரம வடிவின்து. மற்றையது பிரமை வடிவினது. பிரம ஞானமும் பிரமையைப்போல் பிரத்தியக்ஷபரோக்ஷபேதத்தால் இருவகை யாம.

கடமுடைய பூதலத்தில் இந்திரிய சையோகமிருந்தும், ஒருவாற்றால் கடத்தின் உணர்ச்சியுண்டாகவில்லையாயின் ஆண்டுக் கடாபாவத்தின் பிரத்தியக்ஷப் பிரமம் உண்டாகின்றது. ஆனால் விஷயமின்றிப் பிரத்தியக்ஷ ஞானம் உண்டாகாது. அந்நியதாக்கியாதி வாதியின் மதத்திலோ பிரமப்பிரத்தியக்ஷத்தில் விஷயத்தின் அபேக்ஷையில்லை. ஆனால் அந்நிய பதார்த்தத்தின் அந்நிய வடிவமாகிய ஞானத்தை அந்நியதாக்கியாதி யென்பர். ஆகலால் எந்தப் பதார்த்தத்தின் அந்நிய வடிவமான ஞானமுண்டாகிறதோ, அதன் அபேக்ஷையுண்டு. எங்ஙனம்: பழுதையின் பாம்புத் தன்மை வடிவமான ஞானமுண்டாகிறது; அதன்கண் பழுதையின் அபேக்ஷையுளது. அங்ஙனமாயினும், எவ்விஷயத்தின் ஆகாரம் (வடிவம்) ஞானத்தில் தோற்றுகின்றதோ, அதன் அபேக்ஷை அந்நியதாக்கியாதி வாதி மதத்தில் இல்லை. அது சர்ப்பத்தின் ஆகாரம் பிரமத்தில் தோற்றியும் அதன் அபேக்ஷையில்லாததுபோலவாம்.

## அச. சித்தாந்தத்தில் பரோக்ஷப்பிரமத்தில் விஷயத்தின் அபேக்ஷையின்மையும், அபரோக்ஷப் பிரமத்தில் அதன் அபேக்ஷையுண்மையும்.

அங்ஙனமாயினும் சித்தாந்தத்தில் அநிர்வசனீயக்கியாதியுளது. யாண்டுப் பிரத்தியக்ஷப் பிரமமுண்டாகின்றதோ, ஆண்டுப் பிரம ஞானத்தைப்போல அநிர்வசனீய விஷயத்தின் உற்பத்தியுமுண்டாகின்றது. ஆதலால் வியாவகாரிக கடமுடைய பூதலத்தில் பிராதிபாஸிக கடாபாவம் அநிர்வசனீயமாயுண்டாகின்றது. வியாவகாரிக கடத்திற்கு வியாவகாரிக கடாபாவத்தோடு விரோதமுண்டு. பிராதிபாஸிக கடாபாவத்தோடு வியாவகாரிக கடத்திற்கு விரோதம் இன்று. ஆதலால் வியாவகாரிக கடமுடைய பூதலத்தில் அநிர்வசனீய கடாபாவமும் அதன் அநிர்வசனீய ஞானமுமாகிய இரண்டுமுண்டாகின்றன. ஆண்டுக் கடாபாவத்தின் பிரத்தியக்ஷப் பிரமம் சொல்லப்படுகின்றது. யாண்டு அந்தகனுக்குப் பொய்ய (வஞ்சக)னது வாக்கியத்தால் கடமுடைய பூதலத்தில் கடாபாவத்தின் ஞானமுண்டாகின்றதோ, அது அபாவத்தின் பரோக்ஷப்பிரமமாம். பரோக்ஷ ஞானத்தில் விஷயத்தின் அபேக்ஷையில்லை. ஏனெனின் கழிந்தனவும் வருவனவுமாயவற்றின் பரோக்ஷ ஞானம் உண்டாகின்றது. ஆதலால் அபாவத்தின் பரோக்ஷப்பிரமம் யாண்டு உண்டா

கின்றதோ, ஆண்டுப் பிராதிபாஸிக அபாவத்தின் உற்பத்தியுண்டா கிறதில்லை. கேவலம் அபாவாகார விருத்திவடிவினதாகிய ஞானத் தின் உற்பத்தியே யுண்டாகின்றது.

## அரு. சித்தாந்தத்தில் அபாவப்பிரம முதலிய விடங்களில் அந்நியதாக்கியாதியின் அங்கீகாரம்.

அல்லது பரோக்ஷப்பிரமத்தினைப்போல யாண்டு அபாவத்தின் பிரத்தியக்ஷப் பிரமம் உண்டாகின்றதோ, ஆண்டும் பிராதிபாஸிக அபாவத்தின் உற்பத்தி யுண்டாகிறதில்லை. ஆனால் அபாவத்தின் பிரமம் அந்நியதாக்கியாதி வடிவினதாம். ஏனெனின், இரஜ்ஜுமுத லியவற்றில் சர்ப்பமுதலிய பிரமத்தினை அந்நியதாக்கியாதி வடிவ மாகக் கொள்ளின் இத்தோஷம் உளதாகின்றது:—இரஜ்ஜுவில் சர்ப்பத்தன்மைத் தாமத்தின் தோற்றத்தினை அந்நியதாக்கியாதி யென்பர்; அது சம்பவியாது. ஏனெனின், இந்திரியத்தின் சம்பந் தம் இரஜ்ஜுவோடும் இரஜ்ஜுத்தன்மையோடும் உளது. சர்ப்பத் தன்மையோடு இந்திரியத்தின் சம்பந்தமின்று. விஷயசம்பந்தமின்றி இந்திரிய ஜந்நிய ஞானமுண்டாகிறதில்லை. ஆதலால் இரஜ்ஜுவின் சர்ப்பத்தன்மைத் தாமமாகத் தோற்றுதல் வடிவினதாகிய அந்நிய தாக்கியாதி சம்பவியாது. இவ்வாறு பிரத்தியக்ஷப் பிரம ஸ்தலத் தில் அந்நியதாக்கியாதியை நிஷேதித்து அநிர்வசனீயக் கியாதியை அங்கீகரித்திருக்கின்றனர். அதனுண்மை முன் கூறப்பட்டுளது.

ஆனால் யாண்டு அதிஷ்டானமும் ஆரோப்பியமுமாகிய இரண் டும் இந்திரிய சம்பந்தியாகின்றனவோ, ஆண்டு முற்கூறிய தோஷம் சம்பவியாது. ஆதலால் சித்தாந்தநூல்களிலும் ஆண்டு அந்நியதாக்கியாதி யே எழுதப்பட்டுளது. எங்ஙனம்? புஷ்பத்தின்மேல் வைக்கப்பட்ட ஸ்படிகத்தில் செம்மையின் பிரத்தியக்ஷப் பிரமமுண்டாகின்றது. ஆண்டுப் புஷ்பத்தின் செம்மையோடும் நேத்திரத்திற்குச் சையுக்த சமவாய சம்பந்தம் அல்லது சையுக்த தாதான்மியசம்பந்த முளது. ஸ்படிகத்தோடு நேத்திரத்திற்குச் சையோகசம்பந்தமிருக்கின்றது. ஆண்டுச் செம்மை ஆரோப்பியமும் ஸ்படிகம் அதிஷ்டானமுமாம். ஆண்டுப் புஷ்பத்தின் வியாவகாரிக செம்மை ஸ்படிகத்தில் தோற்று கின்றது; ஸ்படிகத்தில் அநிர்வசனீய செம்மையின் உற்பத்தியுண் டாகிறதில்லை. ஏனெனின், செம்மையோடு சர்ப்பத்தன்மையோடு,

போலச் செம்மையோடு நேத்திரத்தின் சம்பந்தமுண்டாகாதிருக்குமாயின், விஷயத்தோடு சம்பந்தமின்றி இந்திரிய ஜந்நியஞான முண்டாகாதென்னும் தோஷம் உண்டாம். நேத்திரத்தோடு செம்மைக்குச் சம்பந்தமிருந்தலின் முற்கூறிய தோஷம் சம்பவிப்பதில்லை. ஆதலால் ஆரோப்பியத்தின் சந்நிதான ஸ்தலத்தில் அந்நியதாக்கியாதியே சம்பவிக்கின்றது.

அங்ஙனமே கடமுடைய பூதலத்தில் கடாபாவப் பிரமமுண்டாயின், ஆண்டு ஆரோப்பிய அதிஷ்டானங்களின் சந்நிதானமிருத்தலான் ஆரோப்பியத்தோடும் இந்திரியத்திற்கு அதிஷ்டானத்தோடுபோலச் சம்பந்தம் இருக்கின்றது. ஏனெனின் அதிஷ்டானம் பூதலமாம்; ஆரோப்பியமாகிய கடாபாவம் பூதலத்திலோ இல்லை; ஆனால் பூதலத்திலிருக்கும் பூதலத்தன்மையில் கடாபாவம் இருக்கின்றது. அன்றியும் பூதலத்திலிருக்கும் உருவம் பரிசம் முதலிய குணங்களெவையோ அவற்றின்கண் கடாபாவம் இருக்கின்றது. பூதலத்தன்மையின்கண்ணும் பூதலத்தின் உருவமுதலிய குணங்களோடும் கடத்தின் சையோகம் என்றும் உண்டாகாது. ஏனெனின் இரண்டு திரவியங்களுக்குச் சையோகமுண்டாகும். கடமோ திரவியமாம்; பூதலத்தன்மை திரவியமன்று; ஜாதியாம். அதனோடு கடத்திற்குச் சையோகமுண்டாகாது. பூதலத்தின் பரிச முதலியனவும் திரவியமன்று; குணமாம். அவற்றின்கண்ணும் கடத்தின் சையோகம் சம்பவியாது. எதன்கண் எதன் சையோக சம்பந்தமுண்டாகவில்லையோ, அதன்கண் அப்பதார்த்தத்தின் சையோக சம்பந்தாவச்சின்ன அந்தியந்தாபாவமுண்டாகின்றது. இவ்வாற்றாற் பூதலத்திற் சையோக சம்பந்தத்தாற் கடமிருக்கினும் பூதலத்தன்மையிலும் பூதலத்தின் குணங்களிலும் சையோக சம்பந்தத்தாற் கடமின்மையாற் சையோக சம்பந்தாவச்சின்ன கடாத்தியந்தாபாவம் இருக்கின்றது. ஆண்டு அதிஷ்டானம் பூதலமும், ஆரோப்பியம் கடாத்தியந்தாபாவமுமாம். அதற்குப் பூதலத்தோடு சுவாதிகரண சமவாய சம்பந்தமிருக்கின்றது. சுவ என்பது கடாத்தியந்தாபாவம்; அதன் அதிகரணம் பூதலத்தன்மையும் பூதலத்தின் உருவமுதலிய குணங்களுமாம்; அவற்றின் சமவாயம் பூதலத்தின்கண்ணுளது. பூதலத்தின் கடாத்தியந்தாபாவத்தோடு சுவசமவேத விருத்தித்தன்மைச் சம்பந்தம் உளது. சுவ என்பது பூதலம்; அதன்கண் சமவேதமென்பது சமவாய சம்பந்தத்தானிருக்கும் பூதலத்தன்மையும்

குணமுமாம்; அவற்றில் விருத்தித்தன்மை யென்பது ஆதேயத்தன்மையாம். அஃது அத்தியந்தா பாவத்திற் குளது. இவ்வாறு ஆரோப்பிய அதிஷ்டானங்களுக் கொன்றற்கொன்று சம்பந்தம் இருத்தலின் சந்நிதானம் இருக்கின்றது. ஆதலால பூதலத்தன்மையினிருப்பதும உருவம பரிசமுதலியவற்றி னிருப்பதுமாகிய வியாவகாரிக கடாத்தியந்தாபாவ மெதுவோ, அது பூதலத்திற் றேற்றுதலால் அபாவத்தின் பிரமம அநியதாகக்கியாதி வடிவினதாம. பிராதிபாஸிக அபாவத்தின் உற்பத்தி நிஷ்பிரயோஜனமாம. இவ்வாற்றாற் பிரத்தியக்ஷ பரோக்ஷ வேறுபாட்டால் அபாவப்பிரமம் இருவகைத்தாம்.

## அசு. பிரத்தியக்ஷபரோக்ஷ யதார்த்தப்பிரமரூப அபாவப்பிரமைக்கு இந்திரியமும் அநுபலம்ப முதலியனவும் சாமக்கிரியாதலைக்கூறுதல்.

அங்ஙனமே அபாவத்தின் பிரமையும் ப்ரத்தியக்ஷ பரோக்ஷ பேதத்தால் இருவகைத்தாம:— நையாயிகர் மதத்திலோ இந்திரிய ஜந்திய ஞானத்தை அபரோக்ஷமென்பா; அதனின் வேறாய ஞானத்தைப் பரோக்ஷமென்பா. அபாவத்திற்றோடு இந்திரியத்தின விசேஷணத்தன்மைச் சம்பந்தமாதல், சுவசம்பந்த விசேஷணத்தன்மைச்சம்பந்தமாதல யாண்டு உளதாகின்றதோ, ஆண்டு அபாவத்தின் பிரத்தியக்ஷப்பிரமையும பரோக்ஷப்பிரமையும சொல்லப்படுகின்றன. எங்ஙனமசுரோத்திரத்தோடுசப்தாபாவத்தின் விசேஷணத்தன்மைச்சம்பந்த முள்ளவிடத்துச சப்தாபாவத்தின் சுரோத்திர ஜந்திய ப்பிரத்தியக்ஷப் பிரமை யுளதாகின்றதோ, அங்ஙனமே பூதலத்தில கடாபாவம உளதாகியவிடத்து நேத்திர சம்பந்தப்பட்ட பூதலத்தில் அபாவத்தின் விசேஷணத்தன்மைச சம்பந்தம் இருத்தலாற் கடாபாவத்தின் நேத்திர ஜந்தியப் பிரத்தியக்ஷப் பிரமையுண்டாகின்றது. ஆனல் புருஷனின்றிய பூதலத்தில யாண்டுக் கடையில் புருஷப்பிரமம உண்டாகின்றதோ, ஆண்டுப் புருஷாபாவம் இருக்கின்றது. புருஷாபாவத்தோடு நேத்திரத்தின் சுவசம்பந்தமுடைய விசேஷணத்தன்மைச சம்பந்தமு மிருக்கின்றது. அங்ஙனமாயினும புருஷாபாவத்தின் பிரத்தியக்ஷம் உண்டாகிற தில்லை. ஆதலால் அபாவத்தின் பிரத்தியக்ஷத்தில இந்திரியம கரணம, பிரதியோகியின் அநுபலம்பம்(உணர்ச்சியின்மை)சககாரி. யாண்டு

த்தானுவில் புருஷப்பிரமம உண்டாகின்றதோ, ஆண்டுப் பிரதி யோகியின் அநுபலம்பம உண்டாகிறதில்லை. ஆனால் புருஷப்பிரதி யோகியின் உபலம்பம் அதாவது ஞானமிருக்கின்றது. எங்ஙனம: கடமுதலிய திரவியங்களின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தில நேத் திரம் கரணமாம. அந்தகாரத்தில் கடத்தின் சாக்ஷுஷப் பிரத்தி யக்ஷ முண்டாகிறதில்லை. ஆதலால் நேத்திரஜந்ய சாக்ஷுஷப் பிர த்தியக்ஷத்தில் ஆலோக (பிரகாச) சையோகம சககாரியாம. ஆந லால் அந்தகாரத்துள்ள கட மாகுமாயின் ஆண்டு நேத்திரேந்திரிய மிருக்கின்றது; நேத்திரேந்திரியத்திற்குக் கடத்தோடு சையோகமு மிருக்கின்றது. அங்ஙனமாயினும கடத்திற்கு ஆலோகத்தோடு சையோகவடிவ சககாரியில்லை. ஆதலால் அந்தகாரத்துள்ள கடத் தின சாக்ஷுஷப பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. சாக்ஷுஷப் பிர த்தியக்ஷத்தில ஆலோகசையோகம சககாரியாம. ஆண்டு இந்திரிய த்தோடுள்ள ஆலோகத்தின சையோகம ஏதுவன்று; ஆனால் விஷயத் தோடுள்ள ஆலோக சையோகம ஏதுவாம. ஆதலால பிரகாசத்தி லுள்ள புருஷனுக் கந்தகாரத்திலுள்ள கடத்தின் பிரத்தியக்ஷமுண் டாகிறதில்லை. ஆண்டிந்திரியத்தூடனே ஆலோகத்தின் சையோக மிருக்கின்றது; விஷயமாகிய கடத்தோடு ஆலோகத்தின் சையோக மில்லை. அந்தகாரத்திலுள்ள புருடனுக்குப் பிரகாசத்திலுள்ள கட த்தின் பிரத்தியக்ஷம உண்டாகின்றது. ஆண்டு இந்திரியத்தூடனே ஆலோகத்தின் சையோகம இல்லை; விஷயத்தோடு ஆலோகத்தின் சையோகம இருக்கின்றது. ஆதலால விஷய ஆலோகங்களின் சையோகம நேத்திரஜந்ய ஞானத்தில சககாரியாம. அங்ஙனமா யினும், கடத்தின பூர்வதேச (முன்னிட) த்தில ஆலோகத்தின் சையோகமுண்டாய்ப் பசிமதேச(பின்னிட)த்தில், நேத்திரத்தின சையோக முண்டாகுமிடத்துக் கடத்தின் சாக்ஷுஷப்பிரத்தியக்ஷ முண்டாகிற திலலை; உண்டாதல வேண்டும. ஏனெனின, விஷயத் தோடு ஆலோகத்தின் சையோக வடிவ சககாரி யிருக்கின்றது. சையோகவடிவ வியாபாரமுடைய நேத்திரேந்திரிய கரணமும் உளது. ஆதலால் எந்தக் கடத்தின் தேசத்தில் நேத்திரத்தின் சையோக முண்டாகின்றதோ, அதே தேசத்தில் ஆலோகத்தின் சையோகம சககாரியாகின்றதென்று கொள்ளலவேண்டும. தீபம் சூரியன்முதலியவற்றின்பிரபையை ஆலோகமெனபா. எங்ஙனம திர வியத்தின சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தில ஆலோகத்தின் சையோ

கம் சககாரியாகின்றதோ, அங்ஙனமே அபாவத்தின் பிரத்தியக்ஷத்தில் இந்திரியம் கரணமும், பிரதியோகியின் அநுபலம்பம் சககாரியுமாம். ஆதலால் தாணுவில் புருஷப்பிரம முண்டாகுமிடத்து, புருஷாபாவத்தின் பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. அங்ஙனமே யாண்டு பூதலத்தில் கடமில்லாமல், கடத்திற்குச் சமானமான வேறு பதார்த்தம் வைக்கப்பட்டிருக்கின்றதோ, ஆண்டு கடப்பிரம முண்டாய்விடுகின்றது. அப்பூதலத்தில் கடாபாவமிருக்கின்றது. கடாபாவத்தோடு இந்திரியத்தின் சுவசம்பந்தமுடைய விசேஷணத்தன்மைச் சம்பந்தமுமிருக்கின்றது. ஏனெனின் கடத்தின் பிரமமோ உண்டாயிருக்கின்றது; கடமில்லை. ஆனால் கடாபாவம் இருக்கின்றது. அதற்குப் பூதலத்தில் விசேஷணத்தன்மைச் சம்பந்தமிருக்கின்றது. அப்பூதலத்தோ டிந்திரியத்திற்குச் சையோகம் இருத்தலின் இந்திரிய சம்பந்தமுடையதெனப்படுகின்றது. இந்திரியத்தோடு சம்பந்தமுடையதாகிய பூதலத்தில் அபாவத்தின் விசேஷணத்தன்மைச் சம்பந்தம் இருக்கின்றது. ஆதலால் சம்பந்த வடிவ வியாபாரமுடைய இந்திரியம் கரணமாம். பிரதியோகியின் அநுபலம்பம் சககாரியன்று. ஏனெனின் ஞானத்தை உபலம்பமென்பர். அந்த ஞானம் பிரமமாகுக, அல்லது பிரமையாகுக. இதில் விசேஷமின்று. யாண்டு கடத்தின் பிரமம் உண்டாகின்றதோ, ஆண்டுக் கடாபாவத்தின் பிரதியோகியாகிய கடமேதுவோ அதன் அநுபலம்பம் இன்று. ஆனால் பிரமரூப உபலம்ப (ஞான) மிருக்கின்றது. இவ்வாறாயின் அபாவத்தின் பிரத்தியக்ஷத்தில் இந்திரியம் கரணமும், பிரதியோகியின் அநுபலம்பம் சககாரியுமாம். பிரதியோகியின் அநுபலம்பத்தை மாத்திரம் சககாரியெனினும் நிர்வாகமுண்டாவதில்லை. ஏனெனின், ஸ்தம்பத்தில் பிசாசின் பேதமோ பிரத்தியக்ஷமாம். ஸ்தம்பத்தில் பிசாசின் அத்தியந்தாபாவம் பிரத்தியக்ஷமன்று. இத்தம்பம் பிசாசனன்றென்னும் அநுபவம் எல்லாஜனங்களுக்குமுண்டு. ஆனால் ஸ்தம்பத்தில் பிசாசில்லையென்னும் நிசசயமுண்டாகிறதில்லை. ஆண்டு முதல் அநுபவத்திற்கு விஷயம் ஸ்தம்பத்திலுள்ள பிசாசின் அந்நியோந்நியாபாவமும்; இரண்டாவது அநுபவத்திற்கு விஷயம் பிசாசின் அத்தியந்தாபாவமுமாம். இரண்டபாவங்களுக்கும் பிரதியோகி பிசாசாம். அதன் அநுபலம்பமிருக்கின்றது. இந்திரிய சம்பந்தமுடையது ஸ்தம்பமாம். அதிற் பிசாசின் அந்நியோந்நியாபாவமும் பிசாசின் அத்தியந்தாபாவமுமாகிய

இரண்டும் விசேஷணத்தன்மைச் சம்பந்தத்தாலிருக்கின்றன. ஆதலால் பிசாசின் அந்நியோந்நியாபாவத்தினைப்போலப் பிசாசின் அத்தியந்தாபாவத்தினது பிரத்தியக்ஷ முண்டாதல்வேண்டும். அங்ஙனமே ஆத்மாவினிடத்துச் சுகாபாவ துக்காபாவங்களினது பிரத்தியக்ஷம் உண்டாகின்றது; தர்மாபாவ அதர்மாபாவங்களின் பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. இவ்வாறதை எல்லோருடைய அநுபவத்தாலும் பெறப்பட்டதாம். 'இப்போது என்னிடத்துச் சுகமில்லை, இப்போது என்னிடத்துத் துக்கமில்லை' என்னு மிவ்வித அநுபவம் எல்லோருக்கும் உண்டாகின்றது. அவ்வநுபவம் நியாயமதத்தில் மானஸப் பிரத்தியக்ஷ வடிவினதாம். மனதின் சுகாபாவத்தாலும் துக்காபாவத்தாலும் சுவசையுத்த விசேஷணத்தன்மைச் சம்பந்தமிருக்கின்றது. ஏனெனின், சுவ என்பது மனம்; அதனோடு சையுக்தமென்பது சையோகமுடைய ஆத்மா; அதனிடத்து விசேஷணத்தன்மைச் சம்பந்தத்தால் சுகாபாவமும் துக்காபாவமும் இருக்கின்றன. அங்ஙனமே தர்மாபாவ அதர்மாபாவங்களோடு மனத்திற்குச் சுவசையுத்த விசேஷணத்தன்மைச்சம்பந்தமிருக்கின்றது. அங்ஙனமாயினும் பிரத்தியக்ஷமாகிறதில்லை. 'என்னிடத்துத் தர்மமில்லை, என்னிடத்து அதர்மமில்லை' என்னும் பிரத்தியக்ஷ அநுபவமொருவருக்கு முண்டாகிறதில்லை. சுகாபாவ துக்காபாவங்களின் பிரதியோகிகளாகிய சுக துக்கங்களின் அநுபலம்பம் எங்ஙனம் அபாவகாலத்தி லுண்டாகின்றதோ, அங்ஙனமே தர்மாபாவ அதர்மாபாவங்களின் பிரதியோகிகளாகிய தர்மாதர்மங்களின் அநுபலம்பமும் உண்டாகின்றது. ஆதலால் பிரதியோகியின் அநுபலம்ப வடிவமான சககாரியோடுகூடிய மனதினால் சுகாபாவ துக்காபாவங்களின் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. அங்ஙனமே தர்மாதர்மரூப பிரதியோகியின் அநுபலம்பவடிவ சககாரியோடுகூடிய மனதினால் தர்மாதர்மங்களினது அபாவத்தின் பிரத்தியக்ஷமும் உண்டாதல் வேண்டும். அங்ஙனமே வாயுவில் உருவத்தின் அபாவப் பிரத்தியக்ஷமிருக்கின்றது; குருத்துவாபாவப் பிரத்தியக்ஷமில்லை. உருவாபாவத்தின் பிரதியோகி உருவமும், குருத்துவாபாவத்தின் பிரதியோகி குருத்துவமுமாம். அவ்விரண்டின் அநுபலம்பமும் வாயுவிலிருக்கின்றது. நேத்திரத்திற்கு வாயுவோடு சையோக சம்பந்தம் உண்டாகின்றது. நேத்திரசையுக்தவாயுவில் உருவாபாவமும் குருத்துவாபாவமும் விசேஷணத்தன்மைச் சம்பந்தத்தால் இருக்கின்

றன. ஆதலால் சுவசம்பந்தமுடைய விசேஷணத்தன்மைச் சம்பந்தத்தால் எங்ஙனம் வாயுவில் உருவாபாவத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமுண்டாகின்றதோ, அங்ஙனமே சுவசம்பந்தமுடைய விசேஷணத்தன்மைச் சம்பந்தம் குருத்துவாபாவத்தோடும் நேத்திரத்திற்கிருக்கின்றது. அதனால் "வாயுவில் உருவம் இல்லை" என்னும் சாக்ஷுஷ ஞானத்தைப்போல் "வாயுவில் குருத்துவம் இல்லை" என்னும் சாக்ஷுஷ ஞானமு முண்டாதல்வேண்டும். ஆதலால் இந்திரிய ஜந்நிய அபாவத்தின் பிரத்தியக்ஷத்தில் கேவல அநுபலம்பம் சககாரியன்று; ஆனால் யோக்கியாநுபலம்பம் சககாரியாம். வாயுவில் எங்ஙனம் உருவத்தின் அநுபலம்பம் இருக்கின்றதோ, அங்ஙனமே குருத்துவத்தின் அநுபலம்பமும் இருக்கின்றது. ஆனால் யோக்கியாநுபலம்பம் உருவத்திற்குளது; குருத்துவத்திற்கு யோக்கியாநுபலம்பமின்று. ஏனெனின், பிரத்தியக்ஷமாகத்தக்கதின் அப்பிரதீதியை யோக்கியாநுபலம்பமென்பர். உருவமோ பிரத்தியக்ஷயோக்கியமாம்; குருத்துவம் பிரத்தியக்ஷ யோக்கியமன்று. ஏனெனின் தாரசின ஊர்த்துவமுதலிய தன்மையால் குருத்துவத்தின் அநுமிதியுண்டாகின்றது. எவ்விந்திரியத்தாலும் குருத்துவத்தின் ஞானம் உண்டாகிறதில்லை ஆதலால் பிரத்தியக்ஷயோக்கிய குருத்துவமில்லாதிருத்தலின் அதன் அநுபலம்பம் யோக்கியாநுபலம்பம் அன்று. அங்ஙனமே ஆத்மாவினிடத்துச் சுகாபாவ துக்காபாவங்களின் மானஸப் பிரத்தியக்ஷ முண்டாகிறது. ஏனெனின் பிரத்தியக்ஷயோக்கிய சுகத்தின் அநுபலம்பமும், பிரத்தியக்ஷயோக்கிய துக்கத்தின் அநுபலம்பமும் இருத்தலான் சககாரிக்கு யோக்கியாநுபலம்பம் சம்பவிக்கின்றது. தர்மாபாவ அதர்மாபாவங்களின் மானஸப் பிரத்தியக்ஷம் ஆத்மாவினிடத்து உண்டாகிறதில்லை. ஏனெனின் தர்மாதர்ம வடிவமான பிரதியோகியின் அநுபலம்பமோ இருக்கின்றது. ஆனால் தர்மாதர்மம் கேவலம் சாஸ்திரவேத்தியமாம்; பிரத்தியக்ஷ யோக்கிய மன்று. ஆதலால் தர்மாதர்மங்களுக்கு யோக்கியாநுபலம்பமில்லை. அவற்றின் இன்மையால் தர்மாபாவ அதர்மாபாவங்களின் மானஸப்பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை.

## அஎ. ஸ்தம்பத்தில் பிசாசின் திருஷ்டாந்தத்தால் சங்கை சமாதான பூர்வகமான அநுபலம்பத்தின் நிர்ணயம்.

அங்ஙனமே ஸ்தம்பத்தில் பிசாசினது அத்தியந்தாபாவத்தின் பிரத்தியக்ஷமுண்டாகிறதில்லை. ஏனெனின் பிசாசு வடிவமான

பிரதியோகியின் அநுபலம்பமோவிருக்கின்றது; ஆனால் பிரத்தியக்ஷ யோக்கியமான பிசாசில்லை. ஆதலால் யோக்கியாநுபலம்ப மில்லை. பிரத்தியக்ஷ யோக்கியமான பிரதியோகியின் அநுபலம்பத்தினை **யோக்கியாநுபலம்ப** மென்பர். பிசாசினது அத்தியந்தாபாவத்தின் பிரதியோகியாகிய பிசாசு எதுவோ, அது பிரத்தியக்ஷ யோக்கிய மன்று. ஆதலால் பிசாசின் அநுபலம்பம் யோக்கியாநுபலம்ப மன்று.

இதில் இச்சங்கையுளது:—ஸ்தம்பத்தில் பிசாசின் பேதமும் பிரத்தியக்ஷ மாகலாகாது. ஏனெனின் பிசாசின் அந்நியோந்நியா பாவத்தினைப் பிசாசின் பேத மென்பர். அதன் பிரதியோகியும் பிசாசாம்; அது பிரத்தியக்ஷ யோக்கிய மன்று. ஆதலால் யோக்கியாநுபலம்பத்தின் அபாவத்தால் பிசாசின் அத்தியந்தாபாவத்தைப்போலப் பிசாசின் அந்நியோந்நியாபாவமும் அப்பிரத்தியக்ஷ மாதல்வேண்டும். சித்தாந்தியானவர் "முற்கூறிய வடிவம் யோக்கியாநுபலம்பமன்று; ஆனால் பிரத்தியக்ஷ யோக்கிய அதிகரணத்தி லுள்ள பிரதியோகியின் அநுபலம்பத்தினை **யோக்கியாநுபலம்ப** மென்பர். பிரதியோகி வேண்டுமானால் பிரத்தியக்ஷ யோக்கியமாயிருக்குக, அல்லது அப்பிரத்தியக்ஷமாயிருக்குக. அபாவத்தின் அதிகரணம் பிரத்தியக்ஷயோக்கியமா யிருத்தல்வேண்டும். ஸ்தம்பத்தி லுள்ள பிசாசின் அந்நியோந்நியாபாவம் எதுவோ அதன் பிரதியோகி பிசாசாம்; அதுவோ பிரத்தியக்ஷ யோக்கியமன்று. அதில் பிரத்தியக்ஷ யோக்கியதையின் அபேக்ஷையும் இல்லை. என்றாலும் பிசாசின் அந்நியோந்நியாபாவத்தின் அதிகரணம் ஸ்தம்பமாம். அது பிரத்தியக்ஷ யோக்கியமாயிருத்தலால் யோக்கியாநுபலம்பத்தின் சற்பாவம் (இருப்பு) உளது. ஆதலால் பேயின் அந்நியோந்நியாபாவம் ஸ்தம்பத்திற்பிரத்தியக்ஷமாதல் சம்பவிக்கின்றது" என்பாராயின் சித்தாந்தியின் இச்சமாதானம் சம்பவியாது. ஏனெனின் முற்கூறிய தன்மையால் இச்சித்தாந்தமுண்டாகின்றது:—அபாவத்தின் பிரதியோகி பிரத்தியக்ஷ யோக்கியமா யிருக்குக; அல்லது பிரத்தியக்ஷஅயோக்கியமாயிருக்குக. யாண்டு அபாவத்தின் அதிகரணம் பிரத்தியக்ஷயோக்கியமாயிருக்கின்றதோ ஆண்டுப்பிரதியோகியினநுபலம்பமுண்டாகின்றது. அந்த **யோக்கியாநுபலம்பம்** அபாவத்தின் பிரத்தியக்ஷத்தில் சககாரியாம். இத்தன்மையான அர்த்தத்தை அங்கீகரிக்கின், ஸ்தம்பத்தில் பேயின் அத்தியந்தாபாவமும்

பிரத்தியக்ஷமாதல் வேண்டும். அங்ஙனமே ஆத்மாவினிடத்துள்ள தாமாபாவ அதாமாபாவங்களும் பிரத்தியக்ஷ மாதல் வேண்டும். ஏனெனின் ஸ்தம்பத்தின்கண்ணுள்ள பேயின் அத்தியந்தாபாவத்தின் அதிகரணம் ஸ்தம்பமாம். அது பிரத்தியக்ஷ யோக்கியமாம். ஆத்மாவின்கண்ணுள்ள தாமாபாவ அதாமாபாவங்களின் அதிகரணமாகிய ஆத்மாபிரத்தியக்ஷ யோக்கியமாம். ஆனால் இவ்வளவு பேதமுண்டு. ஸ்தம்பமோ பாகியேந்திரியத்தாற் றோன்றிய பிரத்தியக்ஷ யோக்கியமாம். ஆதலால் ஸ்தம்பத்துள்ள பேயின் அத்தியந்தாபாவம் பாகியேந்திரியத்தால் தோன்றிய பிரத்தியக்ஷமாதல் வேண்டும். ஆத்மா மானசப் பிரத்தியக்ஷ யோக்கியமாம். ஆதலின் ஆத்மாவினிடத்துள்ள தாமாபாவ அதாமாபாவங்களின் மானசப் பிரத்தியக்ஷமுண்டாதல் வேண்டும். வாயுவிற்குப் பிரத்தியக்ஷ யோக்கியத்தன்மை அங்கீகரிக்கின், வாயுவின்கண்ணுள்ள குருத்துவ (கனத்தன்மை) அபாவத்தின் பிரத்தியக்ஷமுண்டாதல்வேண்டும். வாயுவிற்குப் பிரத்தியக்ஷ யோக்கியத்தன்மை அங்கீகரியாவிடின், வாயுவின்கண்ணுள்ள உருவத்தினது அபாவத்தின் பிரத்தியக்ஷமும் உண்டாகலாகாது; வாயுவில் உருவத்தின் அபாவம் பிரத்தியக்ஷமாமென்பது சித்தாந்தமும் அநுபவசித்தமுமாம். இப்பொருள் மேல் விளக்கமாகும். சித்தாந்தி இவ்வாறு சமாதானஞ்செய்வாராயின் அதாவது:—யோக்கியாநுபலம்பம் இருவகைத்தாம். ஒன்று பிரத்தியக்ஷ யோக்கியப் பிரதியோகியின் அநுபலம்ப மாகிய யோக்கியாநுபலம்பமாம்; இரண்டாவது பிரத்தியக்ஷயோக்கிய அதிகரணத்தில் பிரதியோகியின் அநுபலம்பமாகிய யோக்கியாநுபலம்பமாம். அத்தியந்தாபாவத்தின் பிரத்தியக்ஷத்தில் முதல்யோக்கியாநுபலம்பம் சககாரியாம். ஆதலால் அதிகரணமோ பிரத்தியக்ஷ யோக்கியமாகுக, அல்லது அயோக்கியமாகுக. எந்த அத்தியந்தாபாவத்தின் பிரதியோகி பிரத்தியக்ஷ யோக்கியமாகின்றதோ, அதன் அநுபலம்பம் அத்தியந்தாபாவத்தின் பிரத்தியக்ஷத்தில் சககாரியாம். அந்நியோந்நியாபாவத்தின் பிரத்தியக்ஷத்தில் இரண்டாவது அயோக்கியாநுபலம்பம் சககாரியாம். ஆதலால் அந்நியோந்நியாபாவத்தின் பிரதியோகி பிரத்தியக்ஷ யோக்கியமாகுக, அல்லது அயோக்கியமாகுக. பிரத்தியக்ஷ யோக்கிய அதிகரணத்தில் பிரதியோகியின் அநுபலம்பம் அந்நியோந்நியாபாவத்தின் பிரத்தியக்ஷத்தில் சககாரியாம். ஆதலால் ஓரிடத்தும் தோஷமில்லை. ஸ்தம்பத்தில் பேயின

அத்தியந்தாபாவத்தின் பிரதியோகியாகிய பேயானது பிரத்தியக்ஷயோக்கியமன்று. ஆதலால் ஸ்தம்பத்தின்கண்ணுள்ள பேயின் அத்தியந்தாபாவம அப்பிரத்தியக்ஷமாம. ஸ்தம்பத்தின்கண்ணுள்ள பேயின் அந்நியோந்நியாபாவத்தின் அதிகரணம் ஸ்தம்பம; அது பிரத்தியக்ஷமாம. ஆதலால் ஸ்தம்பத்தின்கண்ணுள்ள பேயின் அந்நியோந்நியாபாவம பிரத்தியக்ஷமாம. ஆத்மாவினகண்ணுள்ள சுகாத்தியந்தாபாவ துக்காத்தியந்தாபாவங்களின் பிரதியோகியாகிய சுகதுக்கங்கள் மானசப் பிரத்தியக்ஷ யோக்கியமாம் அவற்றின் அத்தியந்தாபாவங்களினது மானசப் பிரத்தியக்ஷம் உண்டாகின்றது. தாம அதாமங்கள் பிரத்தியக்ஷயோக்கியமன்று. ஆதலால் அவற்றின் அத்தியந்தாபாவங்களினது பிரத்தியக்ஷம உண்டாகிறதில்லை. உருவ குணமோ பிரத்தியக்ஷ யோக்கியமாம. ஆதலால வாயுவில உருவத்தின் அத்தியந்தாபாவத்தினது பிரத்தியக்ஷமுண்டாகின்றது. குருத்துவகுணம பிரத்தியக்ஷ யோக்கியமன்று. ஆதலால வாயுவிலுள்ள குருத்துவத்தின் அத்தியந்தாபாவம பிரத்தியக்ஷமன்று. இவ்வாறாக இப்பொருள் பெறப்பட்டதாயிற்று:— அதிகரணத்துள்ள பிரத்தியக்ஷயோக்கியத்தன்மையும பிரதியோகியின அநுபலமபமும அந்நியோந்நியாபாவத்தின பிரத்தியக்ஷத்தில சககாரியாம; பிரதியோகியின்கண்ணுள்ள பிரத்தியக்ஷ யோக்கியத்தன்மையும, பிரதியோகியின் அநுபலமபமும அத்தியந்தாபாவத்தின பிரத்தியக்ஷத்தில் சககாரியாம எனனும இத்தகைய நியமத்தைச சித்தாந்தி கூறின அதுவும சமபவியாது. ஏனெனின அந்நியோந்நியா பாவத்தின பிரத்தியக்ஷத்தில அதிகரணத்தின் யோக்கியத்தன்மை ஹேது வாகுமாயின், வாயுவில உருவமுடையதின் பேதத்தினது பிரத்தியக்ஷம உண்டாகின்றது. அது உண்டாகலாகாது. "வாயு உருவம் உடையதன்று" எனனும பிரத்தியக்ஷம எல்லோருக்கு முண்டாகின்றது. சொல்லப்படுகின்ற கிரமமாக இத்தன்மைப் பிரத்தியக்ஷம சமபவிக்கின்றது. ஆண்டு அந்நியோந்நியாபாவத்தின அதிகரணம வாயுவாம் அது பிரத்தியக்ஷ யோக்கியமன்று. வாயுவிற்கு ஆக்கிரகத்தால் பிரத்தியக்ஷ யோக்கியத்தன்மை அங்கீகரிக்கின், வாயுவில் குருத்துவ முடையதின் பேதமும பிரத்தியக்ஷமாதல வேண்டும. "வாயு குருத்துவ முடையதன்று" என்னும பிரத்தியக்ஷம ஒருவருக்கு முண்டாகிறதில்லை. சொல்லப்படுகின்ற கிரமத்தால சமபவிக்கிறதில்லை. ஸ்தம்பத்தில்

பேயுடையதின் பேதம் அப்பிரத்தியக்ஷமாம். அநந்யோந்யாபாவத்தின் பிரத்தியக்ஷத்தில் அதிகரணத்தின் யோக்கியதை ஏதுவாயின் பேயுடையதின் பேதத்தினது அதிகரணம் ஸ்தம்பமாம். அது பிரத்தியக்ஷ யோக்கியமா யிருத்தலின் பேயுடையதின் அநந்யோந்யாபாவ வடிவமாகிய பேயுடையதின் பேதம் பிரத்தியக்ஷமாதல்வேண்டும். 'ஸ்தம்பம் பேயுடையதன்று' என்னும் பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. ஆதலால் பிரத்தியக்ஷ யோக்கிய அதிகரணத்தில்பிரதியோகியின் அநுபலம்பரூப யோக்கியாநுபலம்பம் அந்நியோந்யாபாவத்தின் பிரத்தியக்ஷத்தில சககாரியாமென்னுநியமம் சம்பவியாது. அங்ஙனமே அத்தியந்தாபாவத்தின் பிரத்தியக்ஷத்தில்பிரதியோகியின் யோக்கியதையைச்சககாரியென்று அங்கீகரிக்கின், ஜலபரமாணுவில் பிருதிவித்தன்மை அத்தியந்தாபாவத்தின் பிரத்தியக்ஷம் உண்டாதல் வேண்டும். ஏனெனின், ஜல பரமாணுவின்கண்ணுள்ள பிருதிவித் தன்மையினது அத்தியந்தாபாவத்தின் பிரதியோகி பிருதிவித் தன்மையாம். அதன் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷம் கட முதலியவற்றின்கண் உண்டாகின்றதாகலின் பிரத்தியக்ஷயோக்கியம் பிரதியோகியாம். ஜலபரமாணுவில் அதன் உபலம்பம் (உணர்ச்சி) உண்டாகிறதில்லை; ஆதலால் அநுபலம்பமாம். ஜலபரமாணுவோடு நேத்திரத்திற்குச் சையோகமுண்டாகின்றது. ஆதலால் ஜல பரமாணுவின்கண்ணுள்ள பிருதிவித்தன்மை அத்தியந்தாபாவத்தோடு நேத்திரத்திற்குச் சுவசையுக்த விசேஷணத் தன்மைச் சம்பந்தமு முளது. "பரமாணு நிரவயவமாம். அதனோடு நேத்திரத்திற்குச் சையோகம் சம்பவியாது. ஏனெனின் பதார்த்தத்தின் ஏகதேசத்தில் சையோக முண்டாகின்றது. அவயவத்தைத் தேசமெனபர். பரமாணுவிற்கு அவயவ வடிவமாகிய தேசம் சம்பவியாது. சகல பரமாணுக்களிலும் சையோகத்தைக் கூறின், அவ்வியாப்பியவிருத்தி சையோகத்தின் சுபாவமாகாது. ஓரிடத்திருந்து ஓரிடத்தில்லாதிருப்பதுஅவ்வியாப்பியவிருத்தியெனப்படும். ஆதலால் பரமாணுவோடு நேத்திரத்திற்குச் சையோகம் உண்டாகிறதில்லை" என்றிவ்வாறுகூறின், அது பொருந்தாது. ஏனெனின், பரமாணுவிற்குச் சையோகம் இல்லையாயின் துவியணுக முண்டாகாது. பரமாணுவில் மகத்துவாத்தியந்தாபாவத்தின் நேத்திர சம்பந்தமான பிரத்தியக்ஷம் உண்டாகின்றது. அது உண்டாகாது. பரமாணுவில் மகத்துவாபாவத்தின் பிரத்தியக்ஷம் உண்டாகின்றதென்பது,

மேல விளக்கமாகும். ஆதலால் நேத்திரசையுக்த விசேஷணத் தன்மைச சமபந்தத்தால் எங்ஙனம் பரமாணுவில் மகத்துவாபாவ த்தின பிரத்தியக்ஷம் உண்டாகின்றதோ, அங்ஙனமே நேத்திர சையுக்த விசேஷணத் தன்மைச சமபந்தத்தால் பிருதிவித்தன்மை அபாவத்தின் பிரததியக்ஷமுமுண்டாதல வேண்டும். நேத்திர சையு க்தபரமாணுவிலமகததுவாபாவத்தைப்போலப் பிருதிவிததன்மை அபாவத்தின் விசேஷணத்தன்மைச சமபந்தமுண்டு. பரமாணுவின் சையோகம் வியாப்பிய விருததியாகின்றது. அது மஞ்சூஷையின் உரையில் எழுதப்பட்டுளது. ஆதலால் ஜல பரமாணுவில பிருதிவி த்தன்மை அத்தியந்தாபாவததினது பிரததியக்ஷததின சாமககிரி இருத்தலால் அதன் பிரத்தியக்ஷமு மாதல் வேண்டும். சொல்லப் படும கிரமத்தால் ஜலபரமாணுவில் பிருதிவித்தன்மை அத்தியந்தா பாவத்தின் பிரத்தியக்ஷமுணடாகிறதில்லை. இவ்வாற்றாற் சகலஅபா வங்களின் பிரததியக்ஷததிலும ஒரு வடிவினதாகிய யோக்கியாநு பலமபம சம்பவியாது. அநநியோநநியாபாவ அத்தியந்தாபாவங்க ளின பிரததியக்ஷததில் வேறு வேறு வடிவுடைய யோக்கியாநுபல ம்பம சககாரியாமென்பதும் பொருநதாது.

இச்சங்கைக்கு இதுசமாதானமாம்:—

யோக்கியத்தில் அநுபலமபம யோககியாநுபலமபம் என ஏழாம வேற்றுமைத தொகை யாக்கின, அதிகரணததில் பிரத்தி யக்ஷ யோக்கியத்தன்மை உண்டாகுங்கால, ஆண்டு யோக்கியாநு பலமபம் பெறப்படுவ தாகின்றது. யோக்கியததின் அநுபலம்பம் யோக்கியாநுபலமபமென்று ஆறுமவேற்றுமைததொகையாக்கின், பிரதியோகியின்கண் பிரததியக்ஷயோக்கியதை யுண்டாகுங்காலத் தில், ஆண்டு யோக்கியாநுபலமபம பெறபபடுவதாகின்றது. ஆண்டு ஒவ்வொரு வகையாக யோக்கியாநுபலமபம அங்கீகரித்தலில் தோஷம் கூறப்பட்டது. அங்ஙனமே அந்நியோநநியாபாவததின் பிரத்தியக்ஷத்தில் அதிகரண யோக்கியத்தன்மையைச் சாதிக்கும் ஏழாம்வேறறுத் தொகையினையுடைய யோக்கியாநுபலம்பததை அங்கீகரித்து,அத்தியந்தாபாவத்தின் பிரத்தியக்ஷத்தில் பிரதியோகி யின் யோக்கியதையைச் சாதிக்கும ஆறுமவேற்றுமைத் தொகை யினையுடைய யோக்கியாநுபலம்பத்தைச் சககாரியாக அங்கீகரிக் கின், அபாவபேதத்தால் இரண்டின் அங்கீகாரமும் உண்டாகின் றது. அதன்கண்ணுந் தோஷங்கூறப்பட்டது. ஆதலால் வேறுவகை

யோக்கியாநுபலம்பம் சககாரியாம். யோக்கியாநுபலம்ப மென்னும் சொல்லில் ஏழாம் வேற்றுமைத் தொகையும் ஆறும்வேற்றுமைத் தொகையும் இல்லை; ஆனால் 'நீலக்குடம்' என்னும் சொல்லிற்போல முதல்வேற்றுமைத் தொகையிருக்கின்றது. அஃதிவ்வாறிருக்கின்றது:—எங்ஙனம்: 'நீலம் குடம் நீலக்குடம்' என்னுஞ் சொல்லில் முதல் வேற்றுமையிருக்கின்றது. அதனை வியாகரணத்தில் கர்ம தாரயன் (பண்புத்தொகை) என்பர். யாண்டு பண்புத்தொகையுளதோ, ஆண்டுப் பூர்வ பதார்த்தத்திற்கு உத்தரபதார்த்தத்தோடு அபேதவுணர்ச்சியுண்டாகின்றது. எங்ஙனம் 'நீலக்குடம்' என்னுஞ் சொல்லில் பண்புத் தொகையாக்கின் நீலபதார்த்தத்திற்குக் கட பதார்த்தத்தோடு அபேதவுணர்ச்சி யுண்டாகின்றதோ, அங்ஙனமே 'யோக்கியமாகிய அநுபலம்பம் யோக்கியாநுபலம்பம்' எனப் பண்புத்தொகை யாக்கின், யோக்கியாநுபலம்ப மென்னுஞ் சொல்லினால் யோக்கிய பதார்த்தத்திற்கு அநுபலம்ப பதார்த்தத்தோடு அபேதவுணர்ச்சியுண்டாகின்றது. ஆதலால் அபாவத்தின் பிரதியோகியும் அதிகரணமும்வேண்டுமாயிருக்குக. அவற்றின் யோக்கியத்தன்மையினாற் பிரயோசனம் இல்லை. அநுபலம்பத்தில் யோக்கியதைவேண்டும். யாண்டுப் பிரதியோகியின் அநுபலம்பம் யோக்கியமாகின்றதோ, ஆண்டு அபாவத்தின் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. யாண்டுப்பிரதியோகியின் அநுபலம்பம் அயோக்கியமாகின்றதோ, ஆண்டு அபாவத்தின் பிரத்தியக்ஷம் உண்டாகிறதில்லை. அநுபலம்பத்தில் யோக்கியதை அயோக்கியதைகள் இவ்வாறிருக்கின்றன:— உபலம்ப அபாவத்தினை அநுபலம்பமென்பர். பிரதீதி, ஞானம், உபலம்பம் என்பன பரியாயசொற்கள். பிரதியோகியினது பிரதீதியின் அபாவம் அநுபலம்பமென்னுஞ்சொல்லின் பொருளாம். ஆதலால் இந்திரியத்தால் கடாபாவத்தின் பிரத்தியக்ஷத்தில் கடத்தினது பிரதீதியின் அபாவம் சககாரியாம். ஆண்டுக் கடாபாவத்தின் ஞானம் பிரமை வடிவினதாகியபயனும். கடஞானத்தின் அபாவம் கடாபாவப் பிரமையின்சககாரி காரணமாம். அக்கடஞானத்தின் அபாவம் யோக்கியமாதல் வேண்டும். கடஞான அபாவத்தினையே கடாநுபலம்பமென்பர். அவ்வபாவவடிவினதாகிய அநுபலம்பத்தில் வேறுவகை யோக்கியதையோ சம்பவியாது. ஆனால் எந்த அநுபலம்பத்தின் உபலம்பமாகிய பிரதியோகி யோக்கியமாகின்றதோ, அவ்வநுபலம்பம் யோக்கியமெனப் படுகின்றது. எவ் வநுபலம்பத்தின பிரதி

யோகியாகிய உபலம்பம் அயோக்கியமாகின்றதோ, அவ் வநுபலம்பம் அயோக்கிய மெனப்படுகின்றது. இதனால் இது பெறப்பட்டதாயிற்று :— யோக்கிய உபலம்பத்தின் அபாவ வடிவ யோக்கியாநுபலம்பம சககாரியாம். இவ்வாற்றால் அநுபலம்பத்தின் யோக்கியதையைக் கூறுதலின் முடிவு உபலம்பத்தின் யோக்கியதையில் உண்டாகின்றது. ஆதலால் உபலம்பத்தில் யோக்கியதைவேண்டும். யோக்கிய உபலம்பத்தின் அபாவம் யோக்கியாநுபலம்ப மெனபபடுகின்றது. உபலம்பத்தின் யோக்கியதைக்கு அநுபலம்பத்தில் விவகாரம உண்டாகின்றது. முன்னரே, யோக்கிய உபலம்பத்தின் அபாவத்தினையோக்கியாநுபலம்பமெனின் இலாகவமும், உபலம்பமாகிய பிரதியோகியின் வாயிலாக அநுபலம்பத்திற்கு யோக்கியங்கூறுதல் பயனின்மையுமா மெனப்பட்டது. என்றாலும் யோக்கியாநுபலம்ப மென்னுஞ் சொல்லிற்கு வியாகரண மரியாதையின்படி பொருளசெய்யின் அப்போதுஅநுபலம்பத்தில்யோககியதைகாணப்படுகின்றது. ஆதலால் உபலம்பத்தின்கண்ணுள்ள முக்கியயோககியதைக்கு அநுபலம்பத்தோடு ஆரோபஞ்சொல்லப்பட்டிருக்கின்றது. இதனால் இதுபெறப்பட்டபொருளாம. யாண்டுப பிரதியோகியினதுயோககிய உபலம்பத்தின் அபாவம உண்டாகிறதோ,ஆண்டு அபாவத்தின் பிரத்தியக்ஷமுண்டாகின்றது. யாண்டுப் பிரதியோகினது சத்தையினால் நியமமாகப பிரதியோகியினது உபலம்பத்தின் சத்தை உண்டாகிறதோ, அவ்வுபலம்பம் யோக்கியமாம். அதன் அபாவமாகியஅநுபலம்பமும யோக்கியமெனப்படுகின்றது. யாண்டுப் பிரதியோகியிருந்தும நியமமாகப் பிரதியோகியின் உபலம்பம் உண்டாகவில்லையோ, அவ்வுபலம்பம் அயோக்கியமாம. அதன் அபாவமாகிய அநுபலம்பமும அயோக்கிய மெனப்படுகின்றது. பிரகாசத்தில குடத்தின் இருப்பு உளதாயின், அப்போது நியமமாகக் குடத்தின் உபலம்பமுண்டாகின்றது. ஆண்டுக் குடத்தின் உபலம்பம யோக்கியமாம, அதன் அநுபலம்பம் யோக்கியமெனபபடுகின்றது.அங்ஙனமே சையோகசம்பந்தத்தால் யாண்டுப் பேயுளதோ, ஆண்டுப் பேயின் சத்தையினால நியமமாகப் பேயின் உபலம்பம உண்டாகிறதில்லை. ஆதலாற் பேயின் உபலம்பம அயோக்கியமாம. அதன் அபாவமாகிய பேயின் அநுபலம்பமும் அயோக்கிய மெனப்படுகின்றது. இவ்வாற்றாற் கடாநுபலம்பம யோக்கியமாம். அது கடாபாவத்தின் பிரத்தியக்ஷத்தில் ஏதுவாம். பேயின் அநுப

லம்பம் யோக்கியமன்று. ஆதலால் பேயின் அநுபலம்பத்தால் பேயினது அத்தியந்தாபாவத்தின் பிரத்தியக்ஷமுண்டாகிறதில்லை. கடத்தின் அபாவாதிகரணத்தில் கடத்தின் சத்தையும் கடவுபலம்பத்தின் சத்தையும் சம்பவிக்கிறதில்லை. என்றாலும் கடத்திற்கும் கடவுபலம்பத்திற்கும் "பூதலத்திற் கடமுளதாயின், அப்போது கடவுபலம்பம் உளதாகின்றது" என்று இவ்வாறு ஆரோபமுண்டாகின்றது. ஆதலால் அபாவ அதிகரணத்திலும் ஆரோபிக்கப்பட்ட கடத்தின் சத்தையும், கடஅநுபலம்பம் இருக்கினும் ஆரோபிக்கப்பட்ட கடவுபலம்பத்தின் சத்தையும் சம்பவிக்கின்றன. இதனால் இது நிச்சயிக்கப்பட்ட பொருளாம்:-எவ்வபாவத்தின் அதிகரணத்தில் பிரதியோகியின் ஆரோபஞ்செய்யப் பிரதியோகியின் உபலம்பத்தினது ஆரோபம் நியமமாக வுண்டாகின்றதோ அவ்வுபலம்பம் யோக்கியமாம். அதன் அநுபலம்பமும் யோக்கியமெனப்படுகின்றது. அன்றியும் அவ்வதிகரணத்தில் அவ்வபாவம் பிரத்தியக்ஷமாம். எவ்வபாவத்தின் அதிகரணத்தில் எவ்வபாவத்தினது பிரதியோகியை ஆரோபிக்கப் பிரதியோகியினது உபலம்பத்தின் ஆரோபமுண்டாகிறதில்லையோ அவ்வபாவம் அப்பிரத்தியக்ஷமாம். எங்ஙனம்: அந்தகாரத்தில் கடாபாவம் பிரத்தியக்ஷமன்று. ஏனெனின், அந்தகாரத்தில் "ஈண்டுக் கடம் உளதாயின் அப்போது அதன் உபலம்பமுளதாம்" என்றிவ்வாறு கடத்தின் ஆரோபத்தால் கடத்தினது உபலம்பத்தின் ஆரோபம் நியமமாகச் சம்பவிப்பதில்லை. இதனால் அந்தகாரத்திற் கடத்தின் பிரத்தியக்ஷம் உண்டாகிறதில்லை. ஸ்தம்பத்திற் பேயின் பேதம் பிரத்தியக்ஷமாம். ஏனெனின் "தாதான்மியமாகப் பேய் ஸ்தம்பத்தி லுளதாயின் அப்போது உபலம்பிக்க (அறிய)ப்படும்" என்று இவ்வாறு ஸ்தம்பத்திலுள்ள தாதான்மிய சம்பந்தத்தால் பேயை ஆரோபித்தலாற் பேயினது உபலம்பத்தின் ஆரோபம் நியமமாக வுண்டாகிறது. ஏனெனின் ஸ்தம்பத்தில் தாதான்மிய சம்பந்தத்தால் ஸ்தம்பம் இருக்கின்றது. அதன் உபலம்பம் நியமமாக வுண்டாகின்றது. அங்ஙனமே பேயும் தாதான்மிய சம்பந்தத்தால் ஸ்தம்பத்திலுளதாயின் ஸ்தம்பத்தைப்போல அதன் உபலம்பமும் நியமமாக வுண்டாகும். அவ்வுபலம்பத்தின் இன்மையால் ஸ்தம்பத்தில் தாதான்மிய சம்பந்தத்தால் பேயில்லை. ஆதலால் பேயின் தாதான்மிய சம்பந்த அவச்சின்ன அபாவம் ஸ்தம்பத்தில் இருக்கின்றது. தாதான்மிய சம்பந்த அவச்சின்ன அபாவத்தினையே

அந்நியோந்நியாபாவமென்பர். ஸதம்பத்தில் சையோக சம்பந்தாவச்சின்னபேயின் அத்தியந்தாபாவமும், அங்ஙனமே சமவாயசம்பந்தாவச்சின்ன பேயின் அததியந்தாபாவமும் பிரத்தியக்ஷமன்று. ஏனெனின் "ஸதமபத்தில் சையோகத்தினலாவது, சமவாயத்தினலாவது பேயுளதாயின் அப்போது அதன் உபலம்பமுளதாம" என்றிவ்வாறு சையோகசம்பநதத்தினலாவது சமவாயசமபநதத்தினலாவது ஸ்தம்பத்தில்பேயினை ஆரோபிக்கிற் பேயின் உபலம்பத்தினது ஆரோபமுண்டாகிறதில்லை. ஏனெனின் யாண்டு மயானத்தின் மரமுதலியவற்றில் சையோகசமபந்தத்தாற் பேயிருக்கிறதோ, அன்றியும் தனது அவயவங்களிற சமவாயசமபநதத்தாறபேயுளதாகிறதோ, ஆண்டும் பேயின் உபலமபமுண்டாகிறதில்லை. எவை ஸ்தமபத்தில் சையோக சம்பந்தத்தினலாவது சமவாயசமபந்தத்தினலா வது இருக்கின்றனவோ, அவ்வெல்லாவற்றின் உபலம்பமு முளதாயின், ஸதம்பத்தில் சையோகசம்பந்தத்தாலாவது சமவாயசமபநதத்தாலாவது பேயை ஆரோபித்தலால் பேயினது உபலமபத்தின் ஆரோபமுண்டாம். ஸ்தமபத்திற்றுனே துவியணுகமுதலியவற்றின் சையோகமும் வாயுவின் சையோகமும இருக்கினறன; ஆதலால் துவியணுகமும் வாயுவும் சையோக சமபநதத்தால் ஸதமபததின்கண் ணுள்ளனவாம்; அவற்றின் உபலமபமுண்டாகிறதில்லை. சமவாய சமபந்தத்தால் குருத்துவமுதலிய அப்பிரத்தியக்ஷ குணஙக ளிருக்கின்றன. அவற்றின் உபலமபமும ஸதமபத்தில் உண்டாகிறதில்லை; ஆதலால் ஸ்தம்பத்தில சையோக சம்பநதத்தினலாவது சமவாய சமபந்தத்தினலாவது பேயை ஆரோபித்தலால் அதன் உபலம்பத்தின் ஆரோபம் உண்டாகிறதில்லை. ஆதலால் ஸதம்பததில் சையோக சம்பந்தாவச்சின்ன பேயின் அத்தியந்தாபாவமும, சமவாய சம்பந்தாவசசின்ன பேயின் அத்தியநதாபாவமும அபபிரத்தியக்ஷமாம். யாண்டுத் தாதான்மிய சமபநதத்தாற பேயுளதாகின்றதோ, ஆண்டுப் பேயின் உபலம்பம நியமமாக வுண்டாகிறதில்லை. ஏனெனின் தாதான்மிய சமபந்தத்தால் பேயில பேயிருக்கின்றது; உபலம்பம் உண்டாகிறதில்லை. ஆதலால் தாதான்மிய சம்பந்தத்தால் பேயை ஆரோபித்தலாலும் நியமமாகப் பேயினது உபலம்பத்தின் ஆரோபம் சம்பவிப்ப தில்லை. அத்தியந்தாபாவத்தின் தன்மையே அந்நியோந்நியாபாவத்தின்கண் ணிருக்கின்றது. என்றாலும் வேறு வகையாற் பேதமுண்டு. ஸதம்பத்தில் தாதான்மிய சம்பந்தத்தா லுள்ளது எது

வோ அதன் உபலம்பம் நியமமாக வுண்டாகின்றது. ஸ்தம்பத்தில் தாதான்மிய சம்பந்தத்தால் ஸ்தம்பமிருக்கின்றது; வேறில்லை. ஸ்தம்பத்தின் உபலம்பம் நியமமாகவுண்டாகின்றது. வேறோர் பொருள் ஸ்தம்பத்தில் தாதான்மிய சம்பந்தத்தால் இருக்கின், ஸ்தம்பத்தைப்போல அதன் உபலம்பமும் வேண்டும். ஆதலால் தாதான்மிய சம்பந்தத்தால் பேயை ஆரோபித்தலால் அதன் உபலம்பத்தின் ஆரோபம் நியமமாக வுண்டாகின்றது. "தாதான்மியத்தால் பேய் ஸ்தம்பமாயின் அப்போது அந்த ஸ்தம்பத்தின் உபலம்பமே யுண்டாம்" என்று இவ்வாறு ஸ்தம்பத்தில் தாதான்மியத்தால் பேயை ஆரோபித்தலால் பேயினது உபலம்பத்தின் ஆரோபம் உண்டாகின்றது. ஆதலால் ஸ்தம்பத்தில்பேயின்பேதம் பிரத்தியக்ஷமாகின்றது. அதே ஸ்தம்பத்தில் பேயுடையதன் பேதம் அப்பிரத்தியக்ஷமாயிருக்கின்றது. ஏனெனின் "தாதான்மியத்தால் ஸ்தம்பம் பேயுடையதாமாயின் அப்போது பேயுடைமையாக ஸ்தம்பத்தின் உபலம்பமுண்டாம்" என்று இவ்வாறு ஸ்தம்பத்தில் தாதான்மியத்தால் பேயுடையதின் ஆரோபத்தால் பேயுடையதின் உபலம்பத்தினது ஆரோபம் சம்பவிக்கிறதில்லை. ஏனெனின் பேயினையுடைய மரமுதலியவற்றில் பேயுடைமையின் உபலம்பம் உண்டாகிறதில்லை. ஆதலால் ஸ்தம்பத்தில் பேயுடைமையின் பேதம் அப்பிரத்தியக்ஷமாம். பேயின் பேதத்தினைப்போலப்பிரத்தியக்ஷமன்று. இவ்வாறு அறிவுடையோர் அநுபவத்தாற் கண்டு கொள்க. பிரதியோகியினது உபலம்பத்தின் ஆரோபம் யாண்டுச் சம்பவிக்கிறதோ ஆண்டு அவ்வபாவம் பிரத்தியக்ஷமாம்.

## ௮௮. உபலம்பத்தை ஆரோபித்தலாலும் ஆரோபியாமையாலும் அபாவத்தின் பிரத்தியக்ஷமும் அப்பிரத்தியக்ஷமு முண்டாமென்பதில் உதாரணம்.

அங்ஙனமே "ஆத்மாவினிடத்துச் சுகமாவது துக்கமாவது இருக்குமாயின், அப்போது சுகத்தின் அல்லது துக்கத்தின் உபலம்ப முளதாகும்" என்று இவ்வாறு ஆத்மாவினிடத்துச் சுகதுக்கங்களை ஆரோபித்தலால்அவற்றின் உபலம்பத்தினது ஆரோபமும் நியமமாகவுண்டாகின்றது. ஏனெனின், என்றும் அறியப்படாத சுகதுக்கங்கள் உண்டாகிறதில்லை; அறியப்பட்டனவே யுண்டாம்;

ஆதலால் சுகதுக்கங்களின் ஆரோபமுண்டாகவே, அவற்றின் உபலம்பத்தினது ஆரோபம நியமமாக வுண்டாகிறது. இதனால் ஆத்மாவிலுள்ள சுகாபாவ துக்காபாவங்கள் பிரத்தியக்ஷமாம. "ஆத்மாவினிடத்தத தாமமாவது அதாமமாவது உளதாயின் அப்போது அதன் உபலமபமுளதாம" என்றிவ்வாறு தாமாதர்மங்களை ஆரோபித்தலால, அவற்றின் உபலமபத்தினது ஆரோபமுண்டாகிறதில்லை. ஏனெனின், பிரத்தியக்ஷ ஞானத்தை உபலம்ப மெனபா. ஞானம் பிரதீதி உபலமப மென்னுஞ் சொற்கள் பரியாயமா யிருத்தலின் ஞானமாத்திரத்திற்குப் பெயா உபலமபமாமாயினும, இப்பிரசங்கத்தில எவ்விந்திரியத்தால் அபாவத்தின் பிரத்தியக்ஷ முண்டாகிறதோ, அவ்விந்திரிய ஜந்நியஞானம் உபலம்பமென்னுஞ் சொல்லாற் கொள்ளப்படுமென் றறிக. ஈங்ஙனம சுகாபாவத்தின் பிரத்தியக்ஷம் மனதினால உண்டாகு மிடத்துச சுகத்தை ஆரோபித்தலால் சுகத்தின் உபலம்பத்தினது ஆரோபம் அதாவது மானசப் பிரத்தியக்ஷத்தினது ஆரோபம உணடாகிறதோ, அங்ஙனமே வாயுவில் உருவமின்மையின் சாக்ஷுஷப்பிரத்தியக்ஷமுண்டாகின்றது. ஆண்டு உருவத்தை ஆரோபித்தலால அதன் உபலமபத்தினது ஆரோபம் அதாவது சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தின ஆரோபமுண்டாகின்றது. இவ்வாறு அந்நிய விந்திரியத்தால் யாண்டு அபாவத்தின் பிரத்தியக்ஷ முண்டாகின்றதோ, ஆண்டு அந்நிய விந்திரியத்தால் தோன்றிய பிரத்தியக்ஷமே உபலம்பமெனனுஞ் சொல்லிறகுப் பொருளென அறிக. அன்றியும் தாமா தாமங்கள் கேவலஞ் சாஸ்திரத்தினால் அறியப்படுவனவாம. அவற்றின் உபலம்பம என்றும இந்திரிய ஜந்நிய ஞானமாகாது. ஆதலால் தாமாதாமங்களை ஆரோபித்தலால அவற்றின உபலமபத்தினது ஆரோபம் உண்டாகின்றதில்லையாகலின், தர்மாபாவ அதர்மா பாவங்கள் பிரத்தியக்ஷம் அன்று. அங்ஙனமே வாயுவில் குருத்துவ அத்தியந்தாபாவம் பிரத்தியக்ஷ மன்று. வாயுவில் உருவத்தின் அத்தியந்தாபாவம் பிரத்தியக்ஷமாம. ஏனெனின் "வாயுவில குருத்துவமுளதாயின் அதன் உபலமபமுளதாம" என்றிவ்வாறு குருத்துவத்தை ஆரோபித்தலால குருத்துவத்தினது உபலமபத்தின் ஆரோபமுண்டாகிறதிலலை. ஏனெனின் யாண்டுப் பிருதிவி ஜலங்களில குருத்துவமுண்டோ, ஆண்டும குருத்துவத்தின் பிரத்தியக்ஷமாகிய உபலமபமுண்டாகிறதில்லை. ஆனால் குருத்துவத்தின் அநுமிதி ஞானம உண்டா

கின்றது. ஆதலால் குருத்துவத்தை ஆரோபித்தலால் உபலம்பத்தின் ஆரோபமுண்டாகிறதில்லை. இக்காரணத்தால் வாயுவில் குருத்துவாபாவம் பிரத்தியக்ஷமன்று. வாயுவில் உருவம் உளதாயின் கட வுருவத்தினைப்போல் வாயுவுருவத்தின் உபலம்பம் உண்டாம். உருவமாத்திரத்தின் உபலம்பமே உண்டாகாது; வாயுவின் உபலம்பமுமுண்டாகும். ஏனெனின் எந்தத் திரவியத்தில் மகத்துவகுணமிருந்து உற்பூத உருவமிருக்கின்றதோ, அந்தத் திரவியம்பிரத்தியக்ஷமாம். எந்தத் திரவியத்தில் மகத்துவம் இருக்கின்றதோ அதன் உருவம் பிரத்தியக்ஷமாம். பரமாணு துவியணுகங்களில் மகத்துவமில்லை. அவற்றின் உருவம் பிரத்தியக்ஷமன்று. ஆதலால் திரியணுக முதலியவாயுவில் மகத்துவமுண்டு. அதிலுருவமுளதாயின் அத்திரியணுகமுதலிய வடிவினதாகிய வாயுவின் பிரத்தியக்ஷமுண்டாம்; அதனுருவத்தின் பிரத்தியக்ஷமு முண்டாம். இவ்வாறு பரமாணு துவியணுக வடிவினதாகிய வாயுவை விட்டுத் திரியணுக முதலிய வடிவினதாகிய வாயுவில் உருவத்தை ஆரோபித்தலால் உருவத்தினது உபலம்பத்தின்ஆரோபமுண்டாகின்றது. ஆதலால் திரியணுக முதலிய வடிவினதாகிய வாயுவில் உருவத்தின் அபாவம் பிரத்தியக்ஷமாம். பரமாணு துவியணுக வடிவ வாயுவில் உருவத்தின் ஆரோபமுண்டாகியும் மகத்துவமின்மையால் உருவத்தினது உபலம்பத்தின் ஆரோபம் உண்டாகாமையின பரமாணுதுவியணுக வடிவினதாகிய வாயுவில் உருவத்தின் அபாவம் பிரத்தியக்ஷமன்று. அங்ஙனமே ஜலபரமாணுவில் பிருதிவித்தன்மையின் அபாவம் பிரத்தியக்ஷமன்று. ஏனெனின் "ஜலபரமாணுவில் பிருதிவித்தன்மையுளதாயின் அதன உபலம்பமுண்டாகின்றது" என்று இவ்வாறு பிருதிவித் தன்மையின ஆரோபத்தால் பிருதிவித் தன்மையினது உபலம்பத்தின் ஆரோப முண்டாகிறதில்லை. ஏனெனின் ஆசிரயம் பிரத்தியக்ஷமாயின ஜாதியின பிரத்தியக்ஷம் உண்டாம். ஆதலால் ஜல பரமாணுவில ஜலத்துவம் இருக்கின்றது. எங்ஙனம் அந்த ஜலத்துவத்தின் பிரத்தியக்ஷ மில்லையோ, அங்ஙனமே ஆரோபிக்கப்பட்ட பிருதிவித்தன்மையினது உபலம்பத்தின் ஆரோபம் சம்பவிக்கிற தில்லை. ஆதலால் ஜல பரமாணுவில் பிருதிவித் தன்மையினது அபாவம் பிரத்தியக்ஷ மன்று. பரமாணுவில் மகத்துவத்தின் அபாவம் பிரதியக்ஷமாம்.ஏனெனின்பரமாணுவில் சாக்ஷாத்ப் பிரத்தியக்ஷத்தின் சாமக்கிரி உற்பூத வுருவமும், துவக்கிந்திரிய

ப் பிரத்தியக்ஷத்தின் சாமக்கிரியாகிய உற்பூத பரிசமும் இருக்கின்றன; ஆனல் மகத்துவம் இல்லை. அதனல் பரமாணுவின் பிரத்தியக்ஷம் உண்டாகிறதில்லை. பரமாணுவின் பிரத்தியக்ஷ யோக்கிய உருவமுதலிய குணங்களின் பிரத்தியக்ஷமும் மகத்துவமின்மையால் உண்டாகிற தில்லை. மகத்துவமுடைய திரவியத்தின் உருவமுதலிய குணங்கள் பிரத்தியக்ஷமாம். பரமாணுவில் மகத்துவம் உளதாயின், பரமாணுவின் பிரத்தியக்ஷமுண்டாம்; பரமாணுவின் பிரத்தியக்ஷ யோக்கிய குணங்களின் பிரத்தியக்ஷமும் உண்டாம். கடமுதலியவற்றின் மகத்துவம் பிரத்தியக்ஷமாம். ஆதலால் உருவமுதலியவற்றினைப்போல மகத்துவ குணமும் பிரத்தியக்ஷ யோக்கியமாம். ஆகாச முதலியவற்றில் மகத்துவமோ விருக்கின்றது. ஆனல் உற்பூதவுருவ சமானதிகரண மகத்துவத்தின் பிரத்தியக்ஷமுண்டாம். ஆகாச முதலியவற்றில் உற்பூதவுருவ மில்லை. ஆதலால் அவற்றின் மகத்துவத்தினது பிரத்தியக்ஷமுண்டாகிறதில்லை. என்றாலும் மகத்துவகுணம் பிரத்தியக்ஷ யோக்கியமாம. இவ்வாற்றாற் பரமாணுவில் மகத்துவமின்றிப் பிரத்தியக்ஷத்தின் வேறு சாமக்கிரியிருக்கின்றது. மகத்துவமுளதாயின் பரமாணுவின்பிரத்தியக்ஷமும், அதன் குணங்களின் பிரத்தியக்ஷமும உண்டாம. ஆதலால் பரமாணுவில் மகத்துவத்தை ஆரோபித்தலால் அதன் உபலம்பத்தின் ஆரோபம் சமபவிக்கின்றது. மகத்துவத்தை ஆரோபித்தலால் கேவல மகத்துவத்தினது உபலமபத்தின் ஆரோபம் உண்டாகிறதில்லை; ஆனல் பரமாணுவினது உபலம்பத்தின் ஆரோபமும், பரமாணுவில் சமவேதமான பிரதத்தியக்ஷ யோககியகுணமுதலியவற்றினது உபலமபததின் ஆரோபமு முண்டாகின்றன; பரமாணுவில் மகத்துவ முளதாயின் பரமாணுவின் உபலமபமுண்டாம்; பரமாணுவிற் சமவேதித்துள்ள பிரதத்தியக்ஷ யோக்கிய குணங்களின் உபலம்பமு முண்டாம. பிரத்தியக்ஷயோககிய ஜாதியின், அங்ஙனமே தொழிலின் உபலமபமும் உண்டாம. அப்பரமாணு முதலியவற்றின் உபலமபமில்லை. ஆதலால பரமாணுவில் மகத்துவ மில்லை. இவ்வாற்றான் பரமாணுவில மகததுவாபாவம பிரத்தியக்ஷமாம். இவ்வாறு எந்த அதிகரணத்தில எவவபாவததின் பிரதியோகியை ஆரோபிததலால் உபலம்பததின் ஆரோபமுண்டாகின்றதோ, அவ்வதிகரணத்தில் அவ்வபாவம பிரததியக்ஷமாம்.

---

## த்தின் ஆரோபமுண்டாகின்றதோ அவ்விந்திரியத்தி ஞல் உபலம்பத்தை ஆரோபித்தலால் அபாவம் பிரத்தியக்ஷமாமெனல்.

ஆனல் எவ்விந்திரியத்தாற் றோன்றிய உபலம்பத்தின் ஆரோபமுண்டாகின்றதோ, அவ்விந்திரியத்தால் அபாவத்தின் பிரத்தியக்ஷமுண்டாகின்றது. எங்ஙனம்: "பூதலத்திற் கடம் உளதாயின் கண்ணாற் கடத்தின் உபலம்பம் உண்டாதல் வேண்டும்; உபலம்பம் உண்டாகிறதில்லை. அதலால் கடமில்லை" என்று இவ்வாறு யாண்டு நேத்திரஜந்நிய உபலம்பத்தின் ஆரோபமுண்டாகின்றதோ, ஆண்டுக் கடாபாவத்தின் சாக்ஷாத் பிரத்தியக்ஷமுண்டாகின்றது. பூதலத்திற் கடமுளதாயின் துவக்கிந்திரியத்தால் கடத்தின் உபலம்பம் உண்டாதல்வேண்டும். இவ்வாற்றாற் குருடனுக்காவது இருளிலாவது துவக்கிந்திரிய ஜந்நிய உபலம்பத்தின் ஆரோபம் உண்டாகுங்கால் ஆண்டுக் கடாபாவத்தின் துவக்கிந்திரியப் பிரத்தியக்ஷமுண்டாகின்றது. இவ்வாறு எவ்விந்திரியத்தினது உபலம்பத்தின் ஆரோபம் உண்டாகின்றதோ, அவ்விந்திரியத்தானே அபாவத்தின் பிரத்தியக்ஷமுண்டாகின்றது. வாயுவில் உருவமின்மையின் நேத்திரேந்திரியப்பிரத்தியக்ஷமுண்டாகின்றது. துவக்கிந்திரியப்பிரத்தியக்ஷமுண்டாகிறதில்லை. ஏனெனின் "வாயுவில் உருவமிருக்குமாயின் உருவத்தின் நேத்திரேந்திரிய ஜந்நிய உபலம்பமுண்டாம்; உபலம்பமோ உண்டாகிறதில்லை. அதலால் வாயுவில் உருவமின்று" என்றிவ்வாறு நேத்திரேந்திரிய ஜந்நிய உருவ உபலம்பத்தின் ஆரோபம் உண்டாகிறது. "வாயுவில் உருவமுளதாயின் துவக்கால் அதன் உபலம்பமுண்டாகும்" என்பதாகத் துவக்கிந்திரிய ஜந்நிய உருவ உபலம்பத்தின் ஆரோபமுண்டாகிறதில்லை. ஏனெனின் உருவ சாக்ஷாத்காரத்திற்கு ஏது கேவலம் நேத்திரமாம்; துவக்கன்று. அங்ஙனமே இரசனை முதலிய இந்திரிய ஜந்நிய உருவ உபலம்பத்தின் ஆரோபமுமுண்டாகிறதில்லை. ஆதலால் உருவ அபாவத்திற்கு நேத்திரேந்திரியப் பிரத்தியக்ஷமேயுண்டாம். அங்ஙனமே மதுரதிரவியத்தில் கைப்புச்சுவையின்மையின் இரசனேந்திரியப் பிரத்தியக்ஷமேயுண்டாகின்றது. ஏனெனின் "கற்கண்டில் கைப்பிரசமுளதாயின், அதன் உபலம்பம் இரசனேந்திரியத்தா லுண்டாகும்; உபலம்பமுண்டாகிறதில்லை. ஆதலால் கற்கண்டில் கைப்பிரசமில்லை" என்று இவ்வாறு கற்கண்டில் கைப்பிரசத்தை ஆரோபித்தலால் இரசனையாற் றோன்

றிய கைப்பிரசவுபலம்பத்தின் ஆரோபமுண்டாகிறது. மற்றை இந்திரியங்களாற் றோன்றிய உபலம்பத்தின் ஆரோபமுண்டாகிறதில்லை. ஆதலால் இரசனேந்திரியஜந்நியமே இரசாபாவத்தின் பிரத்தியக்ஷமாம். அங்ஙனமே பரிசம இன்மையின் பிரத்தியக்ஷம் துவக்கிந்திரிய ஜந்நியமேயாம். ஏனெனின் "அக்கினியில் சீத ஸ்பரிசமுளதாயின் துவக்கிந்திரியத்தால் அதன் உபலம்பமுண்டாம. அக்கினியில் துவக்கினால் சீதஸ்பரிசத்தின் உபலம்பம உண்டாகிறதில்லை" என்று இவ்வாறு அக்கினியில் சீத ஸ்பரிசத்தை ஆரோபித்தலால் துவக்கிந்திரியஜந்நிய உபலம்பத்தின் ஆரோபமுண்டாகின்றது. ஆதலால் பரிசாபாவத்தின் பிரத்தியக்ஷம கேவலம துவக்கிந்திரிய ஜந்நியமாம். அங்ஙனமே பரமாணுவில் மகத்துவாபாவத்தின் நேத்திரேந்திரியப் பிரத்தியக்ஷமே யுண்டாகின்றது. ஏனெனின் பரமாணுவின்பேதம் மகத்துவமாம. பரிமாணகுணத்தின் ஞானம் நேத்திரம் துவக்கென்னு மிரண்டினாலுமுண்டாம. இது அநுபவசித்தம. குடத்தின் சிறுமையும பெருமையும் நேத்திரத்தினாலும் துவக்கினாலும் அறியப்படுகின்றன. ஆதலால் இரண்டிந்திரியங்களுக்கும் விஷயம் மகத்துவமாம். என்றாலும மிகத் தாழ்வான மகத்துவத்தின் ஞானம துவக்கினாலுண்டாகுமாயின், திரியணுகத்தின் மகத்துவத்தினது ஞானம் துவக்கினாலுண்டாதல்வேண்டும். ஆதலால் மிகத தாழ்ந்த மகத்துவத்தின் ஞானம் நேத்திரமாத்திரத்தால் உண்டாகும. பரமாணுவிலும மிகத்தாழ்வான மகத்துவத்தின் ஆரோபமஉண்டாம. அந்த மிகத்தாழ்வான மகத்துவத்தின் துவக்கிந்திரியப் பிரத்தியக்ஷமோ உண்டாகிறதில்லை; நேத்திரேந்திரியப் பிரத்தியக்ஷமுண்டாகின்றது; ஆதலால் பரமாணுவில் மகத்துவத்தைஆரோபித்தலால் நேத்திரஜந்நிய உபலம்பத்தின்ஆரோபமே யுண்டாய்ப் பரமாணுவில மகத்துவாபாவத்தின் நேத்திரேந்திரியப் பிரத்தியக்ஷ முண்டாகின்றது; துவக்கிந்திரியப் பிரத்தியக்ஷமுண்டாகிறதில்லை. பரமாணுவில் மகத்துவமுளதாயின திரியணுகமகத்துவத்தினைப்போல நேத்திரத்தால் அதன் உபலமபமுண்டாகும. இவ்வாற்றால் நேத்திரேந்திரிய உபலமபத்தின் ஆரோபமுண்டாகின்றது; துவக்கிந்திரிய உபலம்பத்தின் ஆரோபமுண்டாகிறதில்லை; ஆத்மாவினிடத்துச சுகாபாவ முதலியவற்றின் மானசப் பிரத்தியக்ஷமே யுண்டாகின்றது. ஏனெனின் ஆத்மாவினிடத்துச் சுகமுண்டாகுமாயின் மனதினால் சுகத்தின் உபலம பமுண்டாகின்

றது; இக்காலத்தில் சுகத்தின் உபலம்பம் உண்டாகிற தில்லை; ஆதலால் இக்காலத்தில் என்னிடத்தில் சுகம இல்லையென்று இவ்வாறு ஆத்மாவினிடத்துச் சுகத்தை ஆரோபித்தலால் அதன் மானச வுபலம்பத்தின் ஆரோபம உண்டாகின்றது. அதனுல் சுகாபாவத்தின் மானசப் பிரத்தியக்ஷம் உண்டாகின்றது. அங்ஙன மே துக்காபாவ இச்சாபாவ துவேஷாபாவங்களின் மானசப் பிரத்தியக்ஷமும் உண்டாகின்றது ஆனுல் தனது சுகமுதலியவற் றின் அபாவம் பிரத்தியக்ஷமாம. பிறர் சுக முதலியவற்றின அபா வம் பிரத்தியக்ஷமன்று. ஆனுல் சந்த முதலியவற்றினுல் அவற்றின் அபரோக்ஷ ஞானம் உண்டாகின்றது. ஏனெனின் ஒருவனுக்குச சுகமுதலியன உண்டாகியும அவற்றின உபலம்பம பிறனுக்குண் டாகிறதில்லை; ஆதலால் அந்நியரிடத்துச் சுகமுண்டாயின் எனக்கு உபலம்ப முண்டாமென்பதாக அந்நியரிடத்துள்ள சுகமுதலியவற றின் உபலம்பத்தின் ஆரோபம் தனக்குண்டாகிறதில்லை. ஆதலால அந்நியரிடத்துள்ள சுக முதலியவற்றின அபாவம் பிரததியக்ஷம அன்று. இவ்வாறு பிரதியோகியை ஆரோபித்தலால் எங்கே உப லம்பத்தின் ஆரோபமுண்டாகின்றதோ அவ்வபாவம பிரத்தியக்ஷ மாம். இவ்வாறருல்உபலம்பத்தின அபாவமாகியஅநுபலம்பததினை யோக்கியாநுபலம்பமென்பர். ஆதலால பிரதியோகியின் ஆரோப த்தால் எவ்வுபலம்பத்தின் ஆரோபம் உண்டாகின்றதோ, அவ்வுப லம்பம் எதறகுப் பிரதியோகியாகின்றதோ, அதனை யோக்கியா நுபலம்பமென்பர். இவ்வர்த்தததில ஒரு தோஷமும் இல்லை. இவ் வாற்றுல் எந்த அதிகரணத்தில் எநதப் பதார்த்தத்தின் இநதிரிய ஜந்நிய ஆரோபித உபலம்பம சம்பவிக்கின்றதோ, அவ்வதிகரண த்தில் அதன் அபாவம பிரத்தியக்ஷமாம. ஒரே பேயின்பேதம ஸ்தம்பத்தில் பிரத்தியக்ஷமாம்; பரமாணுவில் அப்பிரததியக்ஷ மாம். ஆதலால் எவ்வதிகரணத்தி லென்று சொல்லப்பட்டது. எப்பதார்த்தத்தின் இநதிரியஜந்நிய ஆரோபித உபலம்பம சம்ப விக்கின்றதோ, அதன் அபாவத்தினைப் பிரத்தியக்ஷ மெனக் கூறின், பேயின் இநதிரியஜந்நிய ஆரோபித உபலம்பமும ஸ்த ம்பத்தில் உண்டாகின்றது. பரமாணுவிலும பேயின் பேதம பிரத தியக்ஷ மாகும. அதனுல் அதிகரணத்தின பெயரைக் கொண்டு சொல்லப்பட்டிருக்கின்றது. ஸ்தம்ப அதிகரணத்தில் உபலம்பத தின் ஆரோபமோ வுண்டாகின்றது. ஸ்தம்பததிறருனே பேயின்

பேதம் பிரத்தியக்ஷமாம். பரமாணுவில் தாதான்மிய சம்பந்தத்தால் பேயிருந்தும் பரமாணுவினைப்போல அதன் உபலம்பம் சம்பவிக்கிறதில்லை. ஆதலாற் பரமாணுவில் பேயின் பேதம் பிரத்தியக்ஷமன்று. "எப்பதார்த்தத்தின்" என்று கூறுதலால் வாயுவில் உருவத்தின் அத்தியந்தாபாவத்தினைப்போல் குருத்துவ அத்தியந்தாபாவம பிரத்தியக்ஷமாகிறதில்லை; எந்த அதிகரணத்தில் இந்திரிய ஜந்நிய ஆரோபித உபலமபம் சம்பவிக்கிறதோ அவ்வதிகரணத்தில் அபாவம பிரததியக்ஷம மென்று இவ்வாவே கூறின், வாயுவதிகரணததில் உருவததின் இநதிரிய ஜநநிய ஆரோபித உபலம்பம் சமபவிக்கின்றது; குருததுவாபாவமும் பிரததியக்ஷமாகும். ஆதலால் எப்பதாாத்தத்தின் உபலம்பமசமபவிக்கினறதோ அதன் அபாவம் பிரத்தியக்ஷமாமெனப்பட்டது. ஆதலால் உருவத்தின் ஆரோபித உபலமபத்தால் வாயுவில் குருத்துவத்தின் அபாவம் பிரத்தியக்ஷமாகிறதில்லை. இவ்வாற்றால் எஙகே பிரதியோகியின் எவ்விநதிரியஜநநிய ஆரோபித உபலமப முண்டாகின்றதோ, அவ்விந்திரியத்தால் அபாவததின்பிரத்தியக்ஷமுண்டாகின்றது. எங்கே முற்கூறிய விதமாக உபலம்பம சமபவிக்கவில்லையோ, அங்கே அபாவத்தின்பரோக்ஷஞானமுண்டாகின்றது. இதுநையாயிகமதம்.

முற்கூறியபடி நியாயமதத்தில் அபாவத்தின் பிரத்தியக்ஷத்தில் இந்திரியம் கரணமாம். இநதிரியத்தில் விசேஷணத்தன்மையும், இநதிரிய சம்பநத முடையதில் விசேஷணத்தன்மையும அபாவததில் இநதிரியததின் சம்பநதமாம்; அது வியாபாரமாம. அபாவத்தின் பிரத்தியக்ஷப்பிரமை பயனும. யோக்கியாநுபலம்பம் இந்திரியத்திற்குச் சககாரிகாரணமாம்; கரணமன்று.

## கo. நியாயமதத்தில் சாமக்கிரியையோடு கூடிய அபாவப்பிரமையைக் கூறுதல்.

கட முதலியவற்றின் நேத்திரேநதிரியப் பிரத்தியக்ஷத்தில் ஒளியின் சையோகம சககாரி காரணமாம; நேத்திரேந்திரியம் கரணமாம். அங்ஙனமே அபாவததின் பிரத்தியக்ஷததினும யோக்கியாநுபலம்பம் சககாரியாம. அபாவததின நேத்திரேந்திரியப் பிரததியக்ஷத்திலும் ஒளியின் சையோகம சககாரி யன்று. இருளில் கடாபாவததின் துவக்கிநதிரியப பிரத்தியக்ஷம உண்டாகின்றது; நேத்திரேநதிரியப் பிரத்தியக்ஷம் உண்டாகின்ற தில்லை. ஒளியில் கடாபாவத்தின் நேத்திரேந்திரியப் பிரததியக்ஷம்

உண்டாகின்றது. ஆதலால் அபாவத்தின் நேத்திரேந்திரியப் பிரத்தியக்ஷத்தில் அந்நுவய வெதிரேகத்தால் ஆலோக சையோகமும் சககாரியெனல் வேண்டும். என்றாலும் கடத்தில் குலாலன் பிதாவைப்போல் அபாவத்தின் நேத்திரேந்திரியப் பிரத்தியக்ஷத்தில் ஒளியின் சையோகம அந்நியதா சித்தமாம் (பிறிதோராற்றாற் பெறப்படுவதாம). கடத்திறகுக் காரணமாகிய குலாலனது சித்தியால் குலாலன் பிதா காரண சாமக்கிரியின் புறத்தே யுளன்; கடத்திற்குக் காரணமெனப்படான். ஆனால் கடத்தின காரணத்துக்குக் காரணமாவன. அங்ஙனமே அபாவத்தின் பிரத்தியக்ஷத்திற்குச சககாரிகாரணம யோக்கியாநுபலம்பமாம. அதன் சித்தியினால் அபாவப் பிரத்தியக்ஷத்தின் காரண சாமக்கிரியினும் ஒளியின் சையோகம புறமபே யிருக்கின்றது. ஏனெனின், அநுபலம்பத்தின் பிரதியோகியாகிய உபலம்பத்தின் ஆரோபம யாண்டு சம்பவிக்கிறதோ, ஆண்டு அவ்வநுபலம்பம் யோக்கிய மெனபபடுகின்றது. கடத்தின் நேத்திரேந்திரிய உபலம்பத்தின் ஆரோபம ஒளியிலுண்டாகின்றது; அந்தகாரத்தில நேத்திரேந்திரிய உபலம்பத்தின் ஆரோபம் உண்டாகிறதில்லை. ஆதலால் கடாபாவத்தின் நேத்திரேந்திரியப் பிரத்தியக்ஷத்திற்குச சககாரிகாரணமாகிய யோக்கியாநுபலம்ப மெதுவோ அதற்குச் சாதகம் ஒளியாம். அது கடாபாவத்தின் நேத்திரேந்திரியப் பிரத்தியக்ஷத்திற்குச சாக்ஷாத் (நேர்) காரணமன்றாகலின் காரண சாமக்கிரியின் புறம்பாயிருக்கின்றது; ஆதலால் குலாலபிதாவைப்போலப் பிறிதோராற்றாற பெறப்படுவதாம். குலாலபிதா கடத்திற்குக் காரணமல்லன். அங்ஙனமே ஒளியின சையோகமும் அபாவத்தின் நேத்திரேந்திரியப் பிரத்தியக்ஷத்திற்குக் காரணமன்று. ஆனால் சாக்ஷாத்ப் பிரத்தியக்ஷத்திறகுக் காரணமாகிய யோக்கியாநுபலம்ப மெதுவோ அதற்கு முற்கூறியபடி சாதகமாம.

முன்னோர் நூல்களிலோ யோக்கியாநுபலம்பம் இவ்வாறு சொல்லப்பட்டிருக்கின்றது:—யாண்டுப்பிரதியோகியினறிப் பிரதியோகியின் உபலம்பத்தினது சகல சாமக்கிரிகளு மிருக்கின்றனவோ, உபலம்பமுண்டாகிறதில்லையோ, ஆண்டு யோக்கியாநுபலம்பமிருக்கின்றது., எங்ஙனம்: ஒளியில் கடம இல்லாதிருக்க ஆண்டு யோக்கியாநுபலம்பம் இருக்கின்றது. ஏனெனின் கடாபாவத்தின் பிரதியோகியாகிய கடம் இல்லை. அஃதின்றி ஒளியின் சையோகம்

திருஷ்டாவின் நேத்திரமென்னும் கட சாக்ஷுஷ உபலம்பத்தின் சாமக்கிரி யிருத்தலால் யோக்கியாநுபலம்பமாம். அந்தகாரத்தில் யாண்டுக்கடமில்லையோ ஆண்டுயோக்கியாநுபலம்பம் இல்லை. ஏனெனின் பிரதியோகியின் சாக்ஷுஷ உபலம்பத்தின் சாமக்கிரியில் ஆலோக சையோகம் உளது; ஆண்டு அதன் அபாவம் இருக்கின்றது. அங்ஙனமே ஸ்தம்பத்தில் தாதான்மியசம்பந்தத்தால் இருப்பது எதுவோ அதன் உபலம்பத்தின சாமக்கிரி ஸ்தம்பத்தின்கண்ணுள்ள உற்பூத வடிவமும் மகத்துவமாம். ஆதலால் ஸ்தம்பத்தில தாதான்மிய சம்பந்தத்தால பேயின் அநுபலம்பம யோக்கியமாகும். சையோக சம்பந்தத்தால் எது ஸ்தம்பத்தின்கண்ணுள தாகின்றதோ, அதனது உபலம்பத்தின சாமக்கிரி ஸ்தம்பத்தின் உற்பூதவுருவமும மகத்துவமுமன்று. ஆனால் சையோக சம்பந்தத்தால் இருப்பதன்கண் உற்பூதவுருவமும மகத்துவமு மிருத்தல் வேண்டும்; அது பேயினிடத்திலலை. ஆதலால் சையோக சம்பந்தாவச்சின்னபேயின அத்தியந்தாபாவத்தின் பிரதியோகியாகியபேய் எதுவோ, அதன் உபலம்பத்தின சாமக்கிரியாகிய பேயின்கண்ணுள்ள உற்பூதவுருவ மில்லாமையால சையோக சம்பந்தத்தால் பேயின அநுபலம்பம யோக்கியமன்று. இவ்வாறுபிரதியோகியின்றிப் பிரதியோகியினது உபலம்பத்தின் சகலசாமக்கிரிகளு மிருந்தும உபலம்பம் உண்டாகிறதில்லை. அந்த யோக்கியாநுபலம்பம் அபாவத்தின பிரத்தியக்ஷத்திற்குச சககாரிகாரணமாம். இவ்வாறு யாண்டு யோக்கியாநுபலம்பம் உளதாய் இந்திரியத்திற்கு அபாவத்தோடு சம்பந்தமுண்டாகின்றதோ, ஆண்டு இந்திரியஜந்யப் பிரத்தியக்ஷப்பிரமை அபாவத்திற்கு உண்டாகின்றது. யாண்டு யோக்கியாநுபலம்பமில்லையோ, ஆண்டு அபாவத்தின் பிரத்தியக்ஷ ஞானமுண்டாகிறதில்லை. ஆனால அநுமானமுதலிய கிரமத்தால பரோக்ஷஞானமுண்டாகிறது. நையாயிகா கிரமப்படி அபாவப் பிரத்தியக்ஷத்தில் யோக்கியாநுபலம்பம சககாரியாம்; இந்திரியம் கரணமாம்.

## கக. பட்டவேதாந்த மதங்களில் நியாயமதத்தினும் அபாவப்பிரமையின் சாமக்கிரியிலுள்ள வேறுபாடு.

பட்டமதத்திலும் அங்ஙனமே அத்வைதமதத்திலும் யோக்கியாநுபலம்பமே கரணமாம். அபாவஞானத்தில் இந்திரியத்திற்கு

க்கரணத்தன்மை யின்று. இதனுனே அநுபலப்தியென்னும் பின்னப் பிரமாணத்தைப் பட்டர் ஒப்பியிருக்கின்றார். அதனை அநுசரித்ததாக வே அத்வைத கிரந்தங்களிலும் அபாவப் பிரத்தியக்ஷத்திற் கேது வாக அநுபலப்தி யென்னும் வேறு பிரமாணமே எழுதப்பட்டிரு க்கின்றது. அநுபலம்பத்தினையே அநுபலப்தியென்பா. எப்படி யோக் கியாநுபலம்பத்தினை நையாயிகர் சககாரியெனக்கொண்டிருக்கின் றனரோ, அங்ஙனமே யோக்கியாநுபலம்பம் பட்டமத அத்துவித மதங்களிற் பிரமாணமாம். நையாயிக மதத்தில் அபாவப் பிரத்தி யக்ஷத்திற்குக்காரணம் இந்திரியமும் யோக்கியாநுபலம்பமுமாகிய இரண்டுமாம. அவற்றுள் இந்திரியம் கரணமாமாகலின் அபாவப் பிரமையிற் பிரமாணமாம். அநுபலம்பத்திற்கு அபாவப் பிரமை யின் சககாரி காரணத்தன்மை அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது; கரணத்தன்மை அங்கீகரிக்கப்படவில்லை. ஆதலால் அநுபலம்பம் பிரமாணம் அன்று. பட்டர் முதலியோர் மதத்தில அநுபலப்தியே பிரமாணமாம.

அபாவப் பிரமையின் உற்பத்தியில் அநுபலப்தியின் வியா பாரமொன்றுஞ் சம்பவிக்கிற தில்லை. வியாபாரமுடைய பிரமைக் காரணம யாதோ அது பிரமாணமெனப்படுகின்றது. ஆகலின் அநு பலப்திக்குப் பிரமாணத்தன்மை சமபவியாது. என்றாலும வியா பாரமுடைய பிரமையின் காரணத்திற்கே பிரமாணத்தன்மையுண் டென்னும நியமமும நையாயிக மதத்தில் உள்ளது. பட்டாமுதலி யோர் மதத்திலோ எல்லாப் பிரமாணங்களுக்கும வேறு வேறு இலக்கணமுண்டு. சில பிரமாணஙகளின் இலக்கணத்தில் வியாபார த்தின் பிரவேசம உண்டு; சிலவற்றின இலக்கணத்தில் வியாபார த்தின் பிரவேசமில்லை. எஙஙனம: பிரத்தியக்ஷபிரமையின வியா பாரமுடைய அசாதாரண காரணம பிரத்தியக்ஷப் பிரமாண மென் றும, அநுமிதிப் பிரமையின் வியாபாரமுடைய அசாதாரண கார ணம அநுமானப்பிரமாணமென்றும, சாபதிப் பிரமையின் வியாபார முடையஅசாதாரணகாரணம சத்தப்பிரமாணமென்றும சொலலப் படுகின்றன. இவ்வாறு மூன்றுபிரமாணங்களின் இலக்கணத்திலோ வியாபாரத்தின் பிரவேசமிருக்கின்றது. அநதப் பிரமாணங்களின் நிரூபணத்தில்மூன்றிடங்களிலும்வியாபாரத்தின் சமபவமசொல்லி வநதோம; உவமானம் அர்த்தாபத்தி உபலப்தி என்பவற்றின் இலக்கணத்தில் வியாபாரத்தின் பிரவேசமில்லை. உவமிதியின் அசா

தாரண காரணத்தை உவமானப் பிரமாண மென்பர். உபபாதக கற்பனையின் அசாதாரண காரணமாகிய உபபாத்தியத்தினது அநுப பத்தியின் ஞானம அர்த்தாபத்திப் பிரமாண மெனப்படுகின்றது. அபாவத்தினது பிரமையின் அசாதாரண காரணத்தை அநுபலப்திப் பிரமாணமென்பர். அபாவத்தின்பரோக்ஷஞானமும் அநுமானமுத லியவற்று னுண்டாகின்றதென்பது முன்னாக் கூறப்பட்டிருக்கின் றது. ஆதலால் அநுபலப்தியின இலக்ஷணத்திறகு அபாவ ஞான த்தை உண்டுபண்ணுவனவாகிய அநுமான முதலியவற்றில் அதி வியாப்தி யுண்டாகின்றது. என்றாலும் அநுமானமுதலிய பிரமாண ங்கள் பாவததின் பிரமைக்கும, அபாவத்தின் பிரமைக்கும் சாதா ரணகாரணங்களாம. அபாவததின் பிரமைக்கு அசாதாரணகாரண மன்று. அநுபலப்தியினல் கேவலம் அபாவத்தின் ஞானமே உண் டாகின்றது. ஆதலால் அபாவப் பிரமையின் அசாதாரண காரணம் அநுபலப்திப பிரமாணமாம்; அநநிய மன்று. இவ்வாறு மூன்று பிரமாணங்களினது இலக்கணததில வியாபாரத்தின் பிரவேசம் இல்லை. ஆதலால் வியாபாரததின் அபேக்ஷை மூன்று பிரமாணங் களிலு மிலலை. அநுபலப்திப் பிரமாணததால் அபாவத்தின் ஞான முண்டாகிறது; அதுவோ பிரத்தியக்ஷமாம. அநுமானததாலும், அங்ஙனமே சத்ததததாலுமுண்டாகும் அபாவத்தின் ஞானம எது வோ, அது பரோக்ஷ மாகின்றது. சிலவிடங்களில் நையாயிகர் அபாவத்தின் ஞானததை இநதிரியஜநநியமெனக் கூறுவா. அவ் வளவு ஞானமே அநுபலப்திப் பிரமாண ஜநநியமாம. ஏனெனின், நையாயிக மதததிலும அபாவஞானததின சககாரிகாரணம் அநு பலபதியாம. எததன்மையயோக்கியாநுபலப்தியை நையாயிகா இந் திரியததின் சககாரியாகக் கொண்டிருக்கின்றனரோ, அநத யோக் கியாநுபலப்தியே படடாமுதலியோர மதததில் சுதநதிரம் பிரமாண மின்றியே பேதமாம. நையாயிக மதததிலோ அபாவபபிரமைக்கு ப்பிரமாணம இநதிரியமாம்; வேதாந்த மதத்தில் பிரமாணம் அநு பலப்தியாம. வேதாநத மதத்தில் அநுபலபதிப் பிரமாணத்தால் பெறப்படுவதாகிய அபாவததின் ஞானமும் நையாயிக மதததிற் போல பிரத்தியக்ஷமாம; பரோக்ஷமனறு.

---

## இந்திரியத்தாற் பெறப்படாத் பிரத்தியக்ஷ லக்ஷணத்தின் நிர்ணயம்.

ஈண்டு இந்திரியஜந்நிய ஞானமே பிரத்தியக்ஷமாம்; அபாவ ஞானத்திற்கு இந்திரிய ஜந்நியத் தன்மையை நிஷேதித்துப் பிரத்தியக்ஷத்தன்மை கூறுதல்பொருந்தாது எனறிவ்வாறுகூறும சங்கைக்கு இது சமாதானமாம:—இந்திரியஜந்நிய ஞானமே பிரத்தியக்ஷமாகுமாயின் ஈசுவரஞானம பிரத்தியக்ஷமாகலாகாது. ஏனெனின், நியாய மதத்திலோ ஈசுவரனது ஞானம நித்தியமாகலின் இந்திரிய ஜந்நியமன்று. வேதாந்தமதத்தில் ஈசுவரனது ஞானம மாயையின் விருத்தி வடிவமாம; இந்திரிய ஜந்நியம அன்று. வேறு நூல்களில் இந்திரிய ஜந்நிய ஞானத்திற்குப் பிரத்தியக்ஷத் தன்மையைக் கூறுதலில் அநேக தூஷணம எழுதப்பட்டிருக்கின்றது. ஆதலால் இந்திரிய ஜந்நிய ஞானமே பிரத்தியக்ஷமா மென்னும் நியமம் இல்லை. ஆனல் பிரமாண சேதனத்தோடு விஷய சேதனத்திற்கு அபேதமுண்டாயின் அந்த ஞானம் பிரத்தியக்ஷமாம். யாண்டு விஷயம் எதிர்ப்படுகின்றதோ, ஆண்டுச் சிலவிடத்திலோ இந்திரிய விஷயங்களின் சம்பந்தத்தால் இந்திரியவாயிலாக அந்தக்கரணத்தின் விருத்தி கடதேசத்திற் செல்லுகின்றது; சென்று கடத்தின்சமான வடிவமாய்க் கடத்தோடு விருத்தி சேருகின்றது. ஆண்டு விருத்தி அவச்சின்ன சேதனம பிரமாண சேதன மெனப்படுகின்றது. விஷயத்தில் வந்த சேதனம் விஷய சேதன மெனப்படுகின்றது. பிரமாண சேதனமும் விஷய சேதனமும் சொரூபமாகவோ எப்போதும் ஒன்றேயாம். உபாதி பேதத்தால் சேதனத்திற்குப் பேதமுண்டாகின்றது. உபாதியும் வேறிடங்களி லிருக்குமாயின் உபஹிதத்திற்குப் பேதமுண்டாம் ஓரிடத்தில் இருக்குமாயின் உபஹிதத்திறகுப் பேதம உண்டாகாது. எங்ஙனம :கடத்தின் உருவமும் கடமும ஓரிடத்தி லிருக்கின்றன. ஆண்டுக் கடத்தின் உருவ உபஹித ஆகாயமும் கட உபஹித ஆகாயமும ஒன்றேயாம. மடத்தினுட் கடம் இருக்குமாயின், ஆண்டுக் கட உபஹித ஆகாயம மடாகாயத்தின் வேறன்று. கடசூனிய தேசத்திலும் மட மிருத்தலால் மடாகாயமோ கடாகாயத்தினவேறுமாம. என்றாலும் மடசூனிய தேசத்திற் கடமில்லை யாகலின் மடாகாயத்தினும் கடாகாயம் வேறன்று. இவ்வாற்றால் விருத்தியும் விஷயமும பின்னதேசத்தில் இருக்கின்றன. இவ்வள்வான் விருத்தி உபஹித சேதனமும் விஷய உபஹித

சேதனமும் பின்னமாம். விருத்தி விஷய தேசத்தி லிருக்குமாயின் அப்போது விஷய சேதனமும் விருத்தி சேதனமாகின்றது. ஆதலால் விஷய சேதனத்திற்கு விருத்தி சேதனத்தோடு பேதம் இருப்பதில்லை; ஆனால் அபேதம் உண்டாகின்றது. விஷய தேசத்தில் விருத்தி செல்லுமாயின், அப்போது திருஷ்டாவின் சரீரத்தினுள் அந்தக்கரணமுதல் விஷயபரியந்தம் விருத்தியின் ஆகாரம உண்டாகின்றது. ஆதலால் விஷய தேசத்திற்குப் புறத்திலும் விருத்தியின் சொரூபம் இருத்தலால் விஷய சேதனத்தின் வேறாயும் விருத்தி சேதன மிருக்கிறது. என்றாலும் அக்காலத்தில் விருத்தியின் வேறாகிய விடத்தில் விஷய மில்லை. ஆதலால் விஷயசேதனத்திற்கு விருத்தி சேதனத்தோடு அபேதங் கூறுகின்றனர். இரண்டிற்கும் ஒன்றற்கொன்று அபேதம்யாண்டேனும் எழுதப்பட்டுளதாயின் அதன் அபிப்பிராயம இதுவாம்:— எவ்வளவு விருத்தி பாகம் கடதேசத்தில் இருக்கின்றதோ, அவ்வளவு விருத்தி பாகத்தால் உபகித சேதனம் கடசேதனத்தின்வேறன்று. இவ்வாற்றால் யாண்டு விஷய சேதனத்திற்கு விருத்தி சேதனத்தோடு அபேதம் உண்டாகின்றதோ ஆண்டு அந்த ஞானம் பிரத்தியக்ஷ மெனப்படுகின்றது.

## ௬௩. பிரத்தியபிஞ்ஞைப் பிரத்தியக்ஷ ஞானம், அபிஞ்ஞைப் பிரத்தியக்ஷ ஞானம், ஸ்மிருதி முதலிய பரோக்ஷ ஞானம் என்பவற்றைச் சாமக்கிரியோடு நிர்ணயித்தல்.

யாண்டு விஷய சேதனத்துக்கு விருத்தி சேதனத்தோடு அபேத ஞானம் உண்டாகவில்லையோ, அந்த ஞானம் பரோக்ஷ மெனப்படுகின்றது. சமஸ்கார ஜநிய ஸ்மரணரூப அந்தக்கரணத்தின் விருத்தி சரீரத்தி னுள்ளேயே இருக்கின்றது. அதன் விஷயம் தேசாந்தரத்தில் இருக்கின்றது; அல்லது நஷ்டமா யிருக்கின்றது. ஆகலின் விஷய சேதனத்துக்கு விருத்தி சேதனத்தோடு அபேத மில்லா திருத்தலின் ஸ்மிருதி ஞானம பரோட்சமாம். எப்பதார்த்தத்திற்குப் பூர்வ அநுபவத்தின் சம்ஸ்காரமும் இந்திரியத்தின்சையோகமு முண்டாகின்றனவோ, ஆண்டு "அதுவே இது" என்னும் ஞான முண்டாகின்றது. அதனை அபிஞ்ஞை ஞானமென்

பர். ஆண்டும் இந்திரிய ஜந்திய விருத்தி விஷய தேசத்திற் செல்லு கின்றது. ஆதலால் விஷய சேதனத்திற்கு விருத்தி சேதனத்தோடு அபேத மிருத்தலின் பிரத்தியபிஞ்ஞை ஞானமும பிரத்தியக்ஷமே யாகின்றது. கேவல இந்திரிய ஜந்திய விருத்தி யுளதாயின், ஆண்டு "இது" என்னும பிரத்தியக்ஷம உண்டாகின்றது. அதனை அபிஞ் ஞைப் பிரத்தியக்ஷ மென்பர். முக்கிய சித்தாந்தத்திலோ முன் அநு பவிக்கப்பட்டதின் 'அதுவே இது', எனனும ஞானமும 'அது' என்னும அமசத்தில் ஸமிருதி ரூபமா யிருத்தலால பரோக்ஷமும, 'இது' என்னும் அமசததில்பிரத்தியக்ஷமுமாம. ஆதலால 'அதுவே இது' என்னும ஞானத்தில் கேவலம பிரத்தியக்ஷத் தன்மை யில்லை. அம்சபேதத்தால் பரோக்ஷத்தன்மை பிரத்தியக்ஷத்தன்மை களாகிய இரண்டு தாமங்க ளிருக்கின்றன.

கேவலம சமஸ்கார ஜந்திய விருத்தி யுளதாயின், அதற்கு 'அது' என்னும வடிவம உண்டாகின்றது. அதனை ஸ்மிருதி யென் பர். பூர்வம இந்திரியத்தால அல்லது அநுமான முதலியவற்றால் எந்தப் பதார்த்தத்தின் ஞானமுண்டாயிருக்குமோ அதன் ஸமிருதி யுண்டாகின்றது. ஆதலால ஸமிருதி ஞானத்தில பூர்வ அநுபவம காரணமாம்; அநுபவஜந்திய சமஸ்காரம வியாபாரமாம். ஏனெனின், எந்தப பதார்த்தத்தின ஞானம முன் உண்டாயிருக்கிறதோ அதன் ஸமிருதி வருஷங்கள் கழிந்தும உண்டாகும. ஆண்டு ஸமிருதிக்கு அவ்வியவகித (மறைப் பின்றிய) பூர்வ காலத்தில அநுபவமோ இல்லை. மறைப்பின்றிய பூர்வகாலத்தில உண்டாவது எதுவோ அது ஏதுவாம. ஆதலால பூர்வ அநுபவம ஸமிருதிக்கு நேரே காரணமாகாது. ஒன்றன் வாயிலாகக காரணமா மெனனல் வேண் டும. ஆதலால் இங்ஙனம மதித்தல தகுதியாம. எப்பதார்த்தத் தின் பூர்வ அநுபவம உண்டாக வில்லையோ, அதன் ஸமிருதியோ உண்டாகிறதில்லை. பூர்வ அநுபவம் ஸமிருதிக்குக் காரண மன் றெனின், எதன் அநுபவ முண்டாகவில்லையோ அதன் ஸமிருதியு முண்டாதல் வேண்டும; அங்ஙனம உண்டாகிற தில்லை. இவ்வாற் றால பூர்வ அநுபவத்தோடு ஸமிருதிக்கு அந்வயவெதிரேக முண்டு. பூர்வ அநுபவ மிருந்தால ஸமிருதி யுண்டாகுமென்பது அந்வயம; பூர்வ அநுபவ மில்லையாயின ஸமிருதி யுண்டாகாதென்பது வெதி ரேகம. ஒன்றிருத்தலால மற்றொன்றிருத்தல அந்வயமெனப்படு கின்றது. ஒன்றினின்மையால மற்றைய தில்லாதிருத்தல வெதி

ரேக மெனப்படுகின்றது. அந்வய வெதிரேகத்தால் காரண காரிய த்தன்மை அறியப்படுகின்றது. பூர்வ அநுபவத்திற்கும் ஸ்மிருதி க்கும் அந்வய வெதிரேகத்தைக் காணுதலால் அவற்றினுக்குக் காரண காரியத்தன்மையோ அவசிய மிருக்கின்றது. ஆனால் மறை ப்பின்றிய பூர்வகாலத்தில் பூரவ அநுபவம் சேருகிறதில்லை. ஆத லால் ஸ்மிருதியின் உற்பத்திக்கு முன் அநுபவததிற்கு ஓர் வியா பாரமங்கீகரிததல் வேண்டும். யாண்டுப் பிரமாணவலியால் காரண த் தன்மையின் நிசசயம் உண்டாகின்றதோ, மறைப்பின்றிய பூர்வகாலத்தில் காரணத்தின் சத்தை சமபவிக்கிற தில்லையோ, ஆண்டு வியாபாரததின் கற்பனை யுண்டாகின்றது. எங்ஙனம்: சாஸ் திரமாகிய பிரமாணத்தால யாகத்தில் சுவர்க்கத்துக்குச் சாதன மாகுந் தன்மையின் நிசசய முண்டாகின்றது. ஏற்ருகுதியை யாக மென்பர். அநத யாகம் நாசமாய் வெகு காலத்திற்குப் பின் சுவர் க்க முண்டாகின்றது. சுக விசேஷத்தினைச் சுவர்க்க மென்பர். சுவ ர்க்கத்தின் மறைப்பின்றிய முற்காலததில் யாகமின்மையால் யாக த்திற்குக் காரணத்தன்மை சமபவியாது. அதலால் சாஸதிரததால் நிா ணயிக்கப்பட்ட காரணத்தனமையின் நிாவாகததின் பொருட்டு யாகத்தின் வியாபாரமாகிய அபூாவததினை அங்கீகரித்திருக்கின்ற னர். எப்போது அபூாவம அங்கீகரிக்கப்படடதோ, அப்போது தோஷமிலலை. ஏனெனின் காரியத்திறகுமுநத முற்காலததில் காரண மாவது வியாபாரமாவது ஒன்றிருத்தல் வேண்டும. சில விடதது இரண்டு மிருக்கும்; ஆனால் ஒன்று அவசியமா யிருத்தல் வேண் டும. எதனைத நாமமென்பரோ அது யாகத்தாற்றோன்றிய அபூ ர்வமாம. யாகததால் அபூாவ முண்டாய், யாகததாற் ரேன் றும சுவாக்க மெதுவோ அதனை உண்டாக்குவதாயும இருக்கின் றது. ஆதலால் அது (அபூர்வம) வியாபாரமாம. யாகம் சுவர்க்க ததிற்குச சாதனமாந தன்மையை நிாவகித்தற்பொருடடு அபூர் வம் வியாபாரமெனா அங்கீகரிக்கப்படுகின்றது. அவ்வபூாவம் எப் போதும் பரோக்ஷமாம. அங்ஙனமே அநவய வெதிரேக வலியால் பெறபபட்டதாகிய பூாவ அநுபவம் ஸமிருதிக்குக் காரணமாதலை நிர்வகிததற்பொருட்டுச சமஸகாரத்தினை (வாசனையை) அங்கீ கரித்திருக்கின்றனா. அநதச சமஸகாரம என்றும பரோக்ஷ மாம. எநத அநதக்கரணத்தில் பூாவ அநுபவமுளதாய் ஸமிருதி யுண்டாகுமோ அவ்வநதககரணத்தின் தா்மம சமஸகாரமாம்.

நையாயிக மதத்தில் அநுபவம் சம்ஸ்காரம் ஸ்மிருதி என்பன ஆத்மாவின் தர்மமாம். அநுபவ ஜந்ய சம்ஸ்காரத்தினை நையாயிகா பாவனை யென்பர். அந்தச் சம்ஸ்காரம் பூர்வ அநுபவத்தாற் றோன்றியதும், பூர்வ அநுபவத்தாற் றோன்றும் ஸ்மிருதியை யுண்டாக்குவதுமா யிருத்தலின், வியாபார மெனப்படுகின்றது. இவ்வாற்றாற் பூர்வ அநுபவம் ஸ்மிருதிக்குக் கரணமாம்; சம்ஸ்காரம் வியாபாரமாம். ஸ்மிருதியின் உற்பத்திக்கடுத்த பூர்வகாலத்தில் பூர்வ அநுபவமோ நாசமாகுதலான அபாவமாம். என்றாலும் அதன் வியாபாரமாகிய சம்ஸ்காரம் இருக்கின்றது. ஆதலால் பூர்வ அநுபவம் நாசமாகியும் ஸ்மிருதி யுண்டாகின்றது. அந்தச் சம்ஸ்காரமோ பிரத்தியக்ஷம் அன்று. அநுமானத்தினாலாவது அர்த்தாபத்தியினாலாவது சம்ஸ்காரத்தின் சித்தி யுண்டாகின்றது. ஆதலால் எவ்வளவு காலம் முன் அநுபவிக்கப்பட்டதின ஸ்மிருதி யுண்டாகின்றதோ அவ்வளவு காலம் சம்ஸ்காரமிருக்கின்றது. எந்த ஸ்மிருதிக்குப் பின் ஸ்மிருதி யுண்டாகிறதில்லையோ, அது சரம ஸ்மிருதி யெனப்படுகின்றது. சரம ஸ்மிருதியால் சம்ஸ்காரத்திற்கு நாச முண்டாகின்றது. ஆதலால் மீண்டும் அப்பதார்த்தத்தின் ஸ்மிருதி யுண்டாகிறதில்லை. இவ்வாற்றாற் பூர்வ அநுபவஜந்ய சம்ஸ்காரத்தால் அநேக ஸ்மிருதி யுண்டாகிறது. சரம ஸ்மிருதி யுண்டாகும் வரையில் ஒரே சம்ஸ்காரமிருக்கிறது. ஸ்மிருதியில் சரமத்தன்மை காரியத்தினால் அறியப்படுகின்றது. எந்த ஸ்மிருதி யுண்டாகிய பின் சஜாதீய ஸ்மிருதி யுண்டாவதில்லையோ, அந்த ஸ்மிருதியில் சரமத்தன்மையின் ஞானம் அநுமானத்தால் உண்டாகின்றது. அந்தியத்தை (கடைசியை) ச் சரம மென்பர். சிலர் இங்ஙனம் கூறுகின்றனர் :— பூர்வ அநுபவ ஜந்ய சம்ஸ்காரத்தால் முதல் ஸ்மிருதி யுண்டாகின்றது. முதல் ஸ்மிருதியின் உற்பத்தியினால் முன் சம்ஸ்காரத்திற்கு நாசமுண்டாகின்றது. ஸ்மிருதியினால் வேறு சம்ஸ்காரமுண்டாகின்றது. அதனினின்றும் மீண்டும் சஜாதீய ஸ்மிருதி யுண்டாகின்றது. அந்த ஸ்மிருதியினால் அதனை உண்டாக்கிய சம்ஸ்காரத்திற்கு நாசம் உண்டாகின்றது. அந்நிய சம்ஸ்காரம் உற்பத்தியாகின்றது. அதனினின்றும் மூன்றாவது ஸ்மிருதியுண்டாகின்றது. இவ்வாற்றால் ஸ்மிருதியினின்றும் சம்ஸ்காரத்தின் உற்பத்தியுண்டாகின்றது. எந்த ஸ்மிருதிக்குப்பின் சஜாதீய ஸ்மிருதி யுண்டாகிறதில்லையோ, அந்த ஸ்மிருதி சம்ஸ்காரத்திற் கேது வன்று. இம்மதத்தில்

சம்ஸ்காரவாயிலாக ஸ்மிருதி ஞானமும் உத்தரஸ்மிருதிக்குக் கரணமாம். முதல் ஸ்மிருதிக்குக் கரணம் அநுபவமாம். இரண்டிடங்களிலும் சம்ஸ்காரம் வியாபாரமாம். முதல் மதத்தில் ஸ்மிருதி ஞானத்துக்குக் கரணம் ஸ்மிருதியன்று. ஆனால் பூர்வ அநுபவத்தால் சம்ஸ்காரம் உண்டாகின்றது. அந்த ஒரே சம்ஸ்காரம் சரம ஸ்மிருதிபரியந்தம் இருக்கின்றது. ஆதலால் பூர்வ அநுபவமே ஸ்மிருதிக்குக் கரணமாம். பூர்வ அநுபவ ஜந்ய சம்ஸ்காரமே சகல சஜாதீய ஸ்மிருதிகளிலும் வியாபாரமாம். இரண்டு பக்ஷங்களிலும் ஸ்மிருதி ஞானம் பிரமையன்று. ஏனெனின், முதற்பக்ஷத்திலோ ஸ்மிருதி ஞானத்திற்குக்கரணம் பூர்வ அநுபவமாம். அது ஆறு பிரமாணங்களின் வேறாம். பிரமாண ஜந்ய ஞானத்தினைப் பிரமையென்பர். பூர்வ அநுபவம் பிரமாணமன்று. இரண்டாவதுபக்ஷத்தில் முதல் ஸ்மிருதியின் கரணமோ பூர்வாநுபவமாம். இரண்டாவது ஸ்மிருதியின் கரணம் ஸ்மிருதியாம். அந்த ஸ்மிருதியும் ஆறு பிரமாணங்களிலும் இல்லை; ஆகலால் ஸ்மிருதியைப் பிரமையெனக் கூறுவதில்லை. என்றாலும் யதார்த்தம் அயதார்த்தம் என்னும் பேதத்தால் ஸ்மிருதி இருவகைத்தாம். மயக்க வடிவினதாகிய அநுபவத்தின் சம்ஸ்காரத்தாற் றோன்றிய தெதுவோ அது அயதார்த்தமாம். பிரமை வடிவினதாகிய அநுபவத்தின் சம்ஸ்காரத்தாலுண்டாகிய தெதுவோ அது யதார்த்தமாம். இவ்வாறு இரண்டு பக்ஷங்கள் நூல்களிலெழுதப்பட்டிருக்கின்றன. அவற்றில் தூஷணமும் பூஷணமும் அநேகமுண்டு. நூல் விரியுமென்னும் பயத்தால் உபரதியடைந்து பிரசங்கத்தினை எழுதுகின்றோம்.

எங்ஙனம் பூர்வ அநுபவ ஜந்ய ஸ்மிருதி ஞானம் பரோக்ஷமோ, அங்ஙனமே அநுமான முதலிய பிரமாணத்தாற் றோன்றிய ஞானமும் பரோக்ஷமாம். ஏனெனின், எங்ஙனம் ஸ்மிருதியின் விஷயம் விருத்தியினின்றும் விலகியிருக்கின்றதோ, அங்ஙனமே அநுமான முதலியவற்றாற் றோன்றும் ஞானத்தின் விஷயமும் விருத்தி தேசத்திலில்லை; ஆனால் விலகியுள்ள பர்வதமுதலிய தேசங்களிலிருக்கின்றது. சென்றனவும் வருவனவுமாகிய பதார்த்தங்களுக்கும் அநுமானமுதலியவற்றால் அநுமிதி முதலியனவாகிய வாத்தமான ஞானங்கள் உண்டாகின்றன. ஆதலால் அநுமான முதலியவற்றாற் றோன்றும் ஞானத்தின்தேசத்திலும் விஷயமிருக்கிறதில்லை. ஆனால் அநுமிதி முதலிய ஞானத்தின் தேசகாலங்களுக்கு வேறாகிய தேசத்திலும் காலத்திலும் அவற்றின் விஷயமிருக்கும்.

## நியமமின்றிய பிரத்தியக்ஷஞானத்தின் அநுசந்தானம்.

இந்திரியஜந்நிய ஞானத்தின் விஷயம் ஞானத்தின் தேசகால ங்களுக்கு வேறாகிய தேசகாலங்களிலிருப்பதில்லை; ஆனால் ஞானத் தின் தேசகாலங்களிலேயேயிருக்கின்றது ஆதலால்இந்திரிய ஜந்நிய ஞானம முழுவதும பிரத்தியக்ஷமேயாகின்றது. அத்துவைத மத த்தில் அந்தக்கரணத்தின் பரிணாமமாகிய விருத்தி யாதோ அதனை ஞானமென்பர். ஆதலால் ஞானமும விஷயமும ஓரிடத்திருக்கும, அல்லதுவிருத்தியும விஷயமுமோரிடத்திருக்குமென்று கூறுவதிற் பொருளொன்றேயாம். இந்திரியஜந்நிய ஞானமே பிரத்தியக்ஷமா மென்னும் நியம மில்லை. யாண்டு அந்நிய பிரமாணத்தாற் றோன் றிய விருத்திதேசத்திலும விஷய மிருக்கின்றதோ, ஆண்டுப்பிரத்தி யக்ஷஞானமே யுண்டாகின்றது. எங்ஙனம "பத்தாமவன்நீ" என் னுஞ் சொல்லால உற்பத்தியாகிய விருத்தியின் தேசத்தில விஷயம் இருக்கின்றது. இதனாற் சப்தப பிரமாண ஜந்நிய ஞானமும சில விடத்துப் பிரத்தியக்ஷமாகின்றது. மகாவாக்கியத்தாற் றோன்றிய பிரஹ்மாகார விருத்தியும பிரஹ்மான்மாவுமாகிய இரண்டும ஓரிட த்தில் இருக்கின்றன; ஆதலால மகாவாக்கியந்தாற் றோன்றிய பிரஹ் மாத்ம ஞானம் பிரத்தியக்ஷமாம. அங்ஙனமே ஈசுவர ஞானத்திற்கு உபாதானகாரணமான மாயையின் தேசத்தில சாவ பதார்த்தங்களு மிருக்கின்றன. ஆதலால் இந்திரிய ஜந்நிய ஞானமன்றாயினும ஈசு வரனது ஞானம பிரத்தியக்ஷ மாம். அங்ஙனமே அநுபலப்திப் பிரமாணத்தாற் றோன்றிய அபாவத்தின் ஞானமும பிரத்தியக்ஷ மாம. ஏனெனின யாண்டுப் பூதலத்திற கடாபாவத்தின் ஞானம உண்டாகின்றதோ, ஆண்டுப் பூதலத்தோடு நேத்திரத்திற்குச சம பந்தமுண்டாய்ப பூதல தேசத்தில் அந்தக் கரணத்தின விருத்தி செல்லுகின்றது. "பூதலத்திற கடமில்லை" என்பது விருத்தியின் ஆகாரமாம. ஆண்டுப் பூதலஅம்சத்திலோ விருத்தி நேத்திரஜந்நிய மாம். கடாபாவ அம்சத்தில அநுபலப்தி ஜந்நியமாம. எங்ஙனம "பர்வதம தீயுடைத்து" என்னும விருத்தி பர்வதஅம்சத்தில் நேத் திர ஜந்நியமும, வந்நி அம்சத்தில் அநுமான ஜந்நியமு மாமோ, அங்ஙனமே ஒரே விருத்தி அம்சபேதத்தால இந்திரியமும அநுபல ப்தியுமாகிய இரண்டு பிரமாணங்களால் உற்பத்தி யாகின்றது. ஆண்டுப் பூதலாவச்சின்ன சேதனத்திற்கு விருத்தி அவச்சின்ன

சேதனத்தோடு அபேதம் உண்டாகின்றது. பூதலாவச்சின்ன சேதனமே கடாபூர்வ அவச்சின்ன சேதனமாம். ஆதலால் கடாபாவ அவசசின்ன சேதனத்திற்கும் விருத்திஅவசசின்னசேதனத்தோடு அபேதமுண்டாகின்றது. ஆதலால் அநுபலப்திப் பிரமாணத்தாற்றோன்றிய கடாபாவத்தின் ஞானமும் பிரதத்தியக்ஷமாம். ஆனால் யாண்டு அபாவத்தின் அதிகரணம் பிரத்தியக்ஷ யோக்கியமாய் அதிகரணததின் பிரதத்தியக்ஷத்தில் இநதிரியததின் வியாபாரமிருக்கின்றதோ, ஆண்டு முற்கூறியபடி சமபவிக்கினறது.

யாண்டு அதிகரணத்தின் பிரதத்தியக்ஷத்தில் இநதிரியததின் வியாபார முண்டாகிறதில்லையோ, ஆண்டு அநுபலப்திப் பிரமாண ஜந்ய அபாவததின் ஞானம் பிரத்தியக்ஷமன்று; ஆனாற் பரோக்ஷமாம். எங்ஙனம்: வாயுவி லுருவமின்மையின் ஞானம் யோக்கியாநுபலப்தியால் மூடிய கண்ணுடையவனுக்கும உண்டாகின்றது. பரமாணுவில் யோக்கியாநுபலப்தியினுல் நேததிரத்தின் விழித்தல் வியாபாரமின்றியே மகத்துவா பாவததின் ஞானம உண்டாகின்றது. ஆண்டு விஷய தேசததில் விருததி செல்லுகிற தில்லை. ஆதலால் அநுபலப்திப் பிரமாணத்தாற றோன்றிய வாயுவிலுருவ மின்மையின் ஞானமும் அங்ஙனமே பரமாணுவில் மகத்துவாபாவத்தின் ஞானமும் பிரத்தியக்ஷமன்று; பரோக்ஷமாம். இவ்வாற்றால் அநுபலப்திப் பிரமாண ஜந்ய அபாவத்தின் ஞானம் சிலவிடதது ப் பிரத்தியக்ஷமும் சில விடத்துப் பரோக்ஷமுமாம். வேதாந்த பரிபாஷை முதலிய நூல்களில அநுபலப்திப் பிரமாண ஜந்ய அபாவததின் பிரதத்தியக்ஷம எழுதப்பட்டிருக்கின்றது. அநுபலப்தி ஜந்ய பரோக்ஷஞானததின் உதாரண மெழுதப்படவில்லை; அது அவற்றிற குறையாம்; எழுதுதல்வேண்டும். பரோக்ஷத்திற்கு உதாரணம எழுதாவிடின் அநுபலப்தி ஜந்யஞானம பரோக்ஷமாகாதென்னும் மயக்கமுண்டாம.

## ௬௫. அபாவத்தின் ஞானம் யாண்டும் பரோக்ஷமாமென்பதின் நிர்ணயம்.

சூக்ஷுமமாய் விசாரிக்குமிடத்து அநுபலப்திப் பிரமாணத்தாற்றோன்றிய அபாவத்தின் ஞானம யாண்டும பரோக்ஷமாம; ஓரிடத்தும் பிரத்தியக்ஷ மன்று. ஏனெனின் பிரமாண சேதனத்தோடு விஷய சேதனத்திற்கு அபேதம் உண்டாகியும், யாது பிரத்தியக்ஷ

யோக்கிய விஷயமன்றோ, அதன் பரோக்ஷ ஞானமே உண்டாகின்றது. எங்ஙனம் சத்த முதலிய பிரமாணங்களால் தர்மாதர்மங்களின் ஞானம் உண்டாகுங்கால் பிரமாண சேதனத்தோடு விஷய சேதனத்திற்குப் பேதமில்லை. ஏனெனின் அந்தக்கரண தேசத்தில் தர்மாதாமமிருக்கின்றன. ஆதலால் அந்தக்கரணமும் தாமாதாமமுமாகியவுபாதிகள்வேறுவேறிடங்களிலில்லாதிருத்தலால், தாமாதர்மாவச்சின்னசேதனமும்பிரமாணசேதனத்தோடுபின்னமன்று. என்றுமும தாமாதாமம பிரத்தியக்ஷ யோக்கியமன்று. ஆதலால் சத்த முதலியவற்றாற் றோன்றிய தாமாதாமங்களின் ஞானம என்றும பிரத்தியக்ஷ மன்று. அநுபவத்தை யொட்டி விஷயங்களில் யோக்கியதை அயோகியதைகளை அறிதல் வேண்டும். எங்ஙனம தர்மாதர்மங்கள் பிரத்தியக்ஷயோக்கியமன்றோ,அங்ஙனமேஅபாவ பதார்த்தமும பிரததியக்ஷ யோக்கியமன்று. அபாவபதார்த்தம பிரத்தியக்ஷமாமாயின, வாதிகளின் விவாதமுண்டாதல் வேண்டியதில்லை. மீமாமஸகா அபாவததினை அதிகரணவடிவமாகக் கொண்டிருக்கின்றனா. நையாயிகா முதலியோா அதிகரணத்தின் வேறாகக்கொண்டிருக்கின்றனா. அங்ஙனமே நாஸதிகா அபாவததினை வெறுமையென்றும் பொய்யென்றும் கொள்ளுகின்றனா. ஆஸதிகா அபாவத்தினைப் பதாாததமெனக் கொள்ளுகின்றனர். இவ்வாறு அபாவத்தின் சொரூபத்தில் விவாதமுளது. பிரத்தியக்ஷ யோக்கியமாகிய கட முதலியவற்றின் சொரூபத்தில் அதிகரணத்தின் வேறு, வேறன்று எனறல முதலிய விவாத முண்டாகிறதில்லை. ஆதலால் அபாவபதார்த்தம பிரததியக்ஷ யோககியம் அன்று. இககாரணததால் யாண்டுப் பூதலததில் கடாபாவததின் ஞானம் உண்டாகின்றதோ, ஆண்டுப் பிரமாண சேதனத்தோடு கடாபாவ அவச்சின்ன சேதனத்திற்கு அபேத முளதாயினும அபாவாமிசத்தில் இந்த ஞானம பரோக்ஷமாம்; பூதலாம்சததில் அபரோக்ஷமாம. எங்ஙனம: பர்வதம் வந்நியுடைதது என்னும் ஞானம பாவத அமசததில் அபரோக்ஷமும் வநநி அம்சத்தில பரோக்ஷமு மாம். இவ்வாற்றால் அநுபலப்திப் பிரமாண ஜந்நிய அபாவத்தின் ஞானத்தினை யாண்டும பரோக்ஷமாகக்கொள்ளின் பட்டரோடும் விரோத மின்று. பட்டமதத்தில் அநுபலப்தி ஜநநிய அபாவத்தின் ஞானம பரோக்ஷமேயாம்.

அபாவத்தின் ஞானத்தினை நையாயிகர் இந்திரிய ஜந்நியமென மதித்து அதறகுப் பிரத்தியக்ஷங் கூறுகின்றனர். அது எவ்வாற்றோ

னும் அசங்கதமாம். ஏனெனின் வாயுவில்உருவமின்மையின் நேத்திரேந்திரியப் பிரத்தியக்ஷம் உண்டாகின்றது, பரமாணுவில் மகத்துவாபாவத்தின் நேத்திரேந்திரியப் பிரத்தியக்ஷம உண்டாகின்றது என்பது நையாயிகாகளது சித்தாந்தம்; அது பொருந்தாது. ஏனெனின் வாயுவில் உருவம இன்மையை அறிதற்பொருட்டு ஒருவரும் நேத்திரத்தை விழித்தலாகிய வியாபாரத்தைச செய்கிற தில்லை. ஆனால் மூடிய விழிக்கும் வாயுவில் உருவ மின்மையின் ஞானம யோக்கியாநுபலப்தியால் உண்டாகின்றது. அங்ஙனமே பரமாணுவில் மகத்துவாபாவத்தின் ஞானமும விழித்த விழிக்குண்டாவது போல மூடிய விழிக்கும உண்டாகின்றது மூடிய விழிக்குக் கட முதலியவற்றின் நேத்திரேந்திரிய ஞானம் என்றும உண்டாகிற தில்லை. ஆதலால் வாயுவில் உருவமின்மையின் நேத்திரேந்திரியப் பிரத்தியக்ஷமும, பரமாணுவில மகத்துவாபாவத்தின் நேத்திரேந்திரியப் பிரத்தியக்ஷமும் பொருந்தா. ஆனால் யோக்கிய அநுபலப்தியினால் அவற்றின் பரோக்ஷ ஞானம் உண்டாகிறது.

அபாவஞானத்தில இந்திரியங்களின் அந்வயவெதிரேகத்தைக் காணுதலால அபாவஞானத்தில் இந்திரியம ஏதுவாமென நையாயிகா கூறுகின்றனா. இதற்குச் சமாதானம போநதிக்காரமுதலிய நூல்களில் எழுதப்பட்டிருக்கிறது:—இந்திரியங்களின் அந்வயவெதிரேகம அதிகரணத்தின ஞானத்தில் ஸபலமாம். எங்ஙனம் : பூதலத்திற் கடாபாவத்தின் ஞானம் உண்டாகிறது, ஆண்டு நேத்திரேந்திரியத்தால அபாவத்தின் அதிகரணமாகிய பூதலத்தின் ஞானமுண்டாகின்றது. அந்த நேத்திரத்தால் அறியப்பட்ட பூதலத்தில கடாபாவத்தின் ஞானம யோக்கியாநுபலப்தியினால உண்டாகின்றது. இவ்வாற்றால் கடாபாவத்தின் அதிகரணமாகிய பூதலம் யாதோ, அதன் ஞானத்தில் இந்திரியம ஸபலமாம. இச்சங்கைசமாதான மிரண்டும பொருத்த முடையனவன்று. ஏனெனின், வாயுவில் உருவமின்மையின் ஞானமும் பரமாணுவில் மகத்துவாபாவத்தின் ஞானமும நேத்திர வியாபாரமின்றியு முண்டாகின்றன. ஆதலால் எந்த அபாவஞானத்திலும இந்திரியத்தின் அந்வயவெதிரேகமிருக்கினும் இந்திரியத்திற்குக் காரணத்தன்மை சித்திக்கிறதில்லை. சகல அபாவஞானத்திலும இந்திரியத்தின் அந்வயவெதிரேகம பெறப்படுவதில்லை. இவ்வாற்றால் தளாவுடைய மூலசங்கைக்குச் சமாதானங் கூறுதலும அசங்கதமாம்.

நையாயிகர் "கட அநுபலப்தியினால் இந்திரியத்தால் அபாவத்தை நிச்சயிக்கின்றேன்" என்னும் உணர்ச்சி யுண்டாகின்றது; ஆதலால் அநுபலப்தி இந்திரியமென்னும் இரண்டும் கட முதலியவற்றின் அபாவ ஞானத்திற்கு ஏதுவாம என்று இவ்வாறு சங்கிக்கின்றனர். இச்சங்கைக்குக் "கடாபாவத்தினது அதிகரணத்தின் ஞானம் இந்திரியத்தால் உண்டாகின்றது, கடாபாவத்தின் ஞானம் அநுபலப்தியினு லுண்டாகின்றது" என்னும் முற்கூறிய சமாதானம் சம்பவியாது. ஏனெனின் யாண்டு இந்திரிய யோக்கிய அதிகரணம் இருக்கின்றதோ, ஆண்டு முற்கூறிய சமாதானம் சம்பவிக்கின்றது. யாண்டு அதிகரணம் இந்திரிய யோக்கியமன்றோ ஆண்டு முற்கூறிய சமாதானம் சம்பவியாது. எங்ஙனம்: "வாயுவில் உருவ அநுபலப்தியினால் நேத்திரத்தினால் உருவத்தின் அபாவத்தை நிச்சயிக்கின்றேன்" என்பதாக வாயுவில் உருவ அபாவத்தின் அநுபலப்தி ஜந்நியஞானமும் நேத்திர ஜந்நியஞானமும் விளங்குகின்றன. ஆண்டு வாயுவின் ஞானம் நேத்திரஜந்நியமும உருவ அபாவத்தின் ஞானம் அநுபலப்தி ஜந்நியமுமாமெனக் கூறுதல் சம்பவியாது. ஏனெனின், வாயுவில் உருவத்தின் அபாவத்தோடு நேத்திரத்திற்கு யோக்கியதை யின்று.

ஆதலால் அபாவ ஞானத்தினைக் கேவலம் அநுபலப்தி ஜந்நியமெனக் கொள்ளின் இரண்டினாலும் ஆகப்படுந்தன்மை தோற்றுதலாலுண்டாகும் விரோதத்திற்கு அந்நைநவாதியின் சமாதான மீதுவாம்:— "பூதலத்தில் அநுபலப்தியினால் நேத்திரத்தால் கடாபாவத்தினை நிச்சயிக்கின்றேன்" என்று கூறுதற்கு அநுபலப்தியோடு கூடிய நேத்திரத்தினால் பூதலத்தில கடாபாவத்தின் நிச்சயமுடையன் யான் என்பது அபிப்பிராயம் அன்று. ஆனால் பூதலத்தில் இந்திரியஜந்நிய கடத்தினது உபலப்தியின் இன்மையால் கடாபாவத்தின நிச்சயமுடையன் யான் என்பது தாற்பரியம. அபாவத்தின் நிச்சயத்திற் கேது அநுபலப்தியாம. அநுபலப்தியின் பிரதியோகியாகிய வுபலப்தி யாதோ, அதனிடத்து இந்திரிய ஜந்நியத்துவம் தோற்றுகின்றது. இதனால நிஷேதிக்கத்தக்க உபலப்தியில் இந்திரிய ஜந்நியத்தன்மை தோற்றுதலால் இந்திரிய ஜந்நிய உபலப்தியின் அபாவத்தால் கடாபாவத்தின் நிச்சயம் உண்டாகின்றதென்பது பெறப்பட்டது. அங்ஙனமே "வாயுவில் உருவத்தின் அநுபலப்தியால் நேத்திரத்தால உருவம் இன்மையை நிச்சயிக்கின்றேன்"

என்று சொல்லுதற்கும் உருவத்தின் அநுபலப்தியோடு கூடிய நேத்திரத்தால் உருவமின்மையின் நிச்சயமுடையன் யான் என்பது தாற்பரிய மன்று. ஏனெனின், நேத்திரத்தின் வியாபாரமின்றியும் உருவமின்மையின் நிச்சயம் உண்டாகின்றது. ஆனல் நேத்திரஜந்நிய உருவத்தினது உபலப்தியின் அபாவத்தால் வாயுவில் உருவம் இன்மையின் நிச்சயமுடையன் யான் என்பது தாற்பரியம். ஆதலால் எந்த உபலப்தியின் அபாவம் உருவம் இன்மையின் நிச்சயத்திற்கு ஏதுவோ அவ்வுபலப்தியில நேத்திரஜந்நியத்தன்மை தோற்றுகின்றது. இவ்வாற்றுல் சகல அபாவ நிச்சயத்திற்கும் ஏதுவாகிய அநுபலப்தி யாதோ அதன் பிரதியோகியாகிய உபலப்தியில் இந்திரிய ஜந்நியத்தன்மை சொல்லப்படுகின்றது. விவேகமின்றி அபாவ நிச்சயத்தில் இந்திரிய ஜந்நியத்துவம் தோற்றுகின்றது. நையாயிகாகளது சங்கையின் இச்சமாதானம யாண்டும் வியாபகமாம. அதிகரண ஞானத்தின் இந்திரிய ஜந்நியத்துவம அபாவ ஞானத்திற் றேற்றுகின்றது என்னும பேததிக்கார வேதாந்த பரிபாஷை முதலியவற்றின் சமாதானம யாண்டும வியாபகம் அன்று. ஆனல் யாண்டுப் பிரத்தியக்ஷ யோக்கிய பூதல முதலியன அபாவத்தின் அதிகரணமாமோ; ஆண்டு இச சமாதானஞ் சம்பவிக்கின்றது. யாண்டுப் பிரத்தியக்ஷ அயோக்கியமான வாயு முதலியன அபாவத்தின் அதிகரணமோ ஆண்டு முற்கூறிய சமாதானஞ் சம்பவிக்கிற தில்லை. "அநுபலப்தியினல இரசனேந்திரியத்தால் புளிப்பிரசத்தின் இன்மையை மாம்பழத்தில அறிகின்றேன்" என்னுமிடத்தும அதிகரணத்தின் ஞானம இரசனேந்திரியத்தினற் றேன்றிய தெனல் சம்பவியாது. ஏனெனின் புளிப்பிரசத்தின் அபாவத்தினது அதிகரணம் மாம்பழமாம. அதனை அறியுஞ் சாமாத்தியம் இரசனேந்திரியத்தி லின்று. இரசனேந்திரியத்தில் இரசமாத்திரத்தை அறியும சாமாத்தியம் உண்டு; திரவியத்தை அறியும் சாமாத்தியம் இல்லை. ஆதலால இரசனேந்திரிய ஜந்நிய புளிப்பிரசத்தினது உபலப்தியின் இன்மையால் மாம்பழத்தில் இரசத்தினது இன்மையின் நிச்சயமுடையன் யான் எனனும் தாற்பரியத்தால் முற்கூறிய வியவகாரம் உண்டாகின்றது. முற் கூறிய வாக்கியத்தின் அக்ஷர மரியாதையால் கூறிய அர்த்தம கிலேசமுடையதாயினும், வேறொன்றிற் செலலுதல் சம்பவியாமையின், கூறிய பொருளையே அங்கீகரித்தல வேண்டும. ஆதலால் நையாயிகாகளது சங்கைக்கு யாம்

கூறியதே சமாதானமாம். இவ்வாற்றால் அநுபலப்திப் பிரமாணத்தால் அபாவத்தின் நிச்சயம் உண்டாகின்றது என்னும் பக்ஷம் தோஷமின்றியதாம்.

## ௯௯. அநுபலப்திப் பிரமாணத்தை அங்கீகரித்தலில் நையாயிகர் சங்கையும் சித்தாந்தியின் சமாதானமும்.

அபாவப் பிரமையை வேறு பிரமாணமாகக் கொள்ளுதலில் கௌரவமிருக்கின்றது. குடமுதலியவற்றின் பிரத்தியக்ஷபிரமையில் இந்திரியத்திற்குப் பிரமாணத்தன்மை நிச்சயிக்கப்பட்டிருக்கின்றது. அந்த நிச்சயிக்கப்பட்ட பிரமாணத்தால் அபாவப் பிரமையின் உற்பத்தியைக் கொள்ளுதலில் இலாகவம் இருக்கிறது என்று நையாயிகர் சங்கிக்கின்றனர்.

அச்சங்கைக்கு இது சமாதானமாம்:— இந்திரியத்திற்குப் பிரமாணத் தன்மையைக் கூறும் நையாயிகரும் அநுபலப்திக்குக் காரணத்தன்மையோ அங்கீகரித்திருக்கின்றனர். அநுபலப்திக்குக் கரணத்தன்மை கூறுவதில்லை. அத்வைதவாதி இந்திரியம் அபாவத்திற்குக் கரணமாதலை அங்கீகரிப்பதில்லை. ஆதலால் இந்திரியத்திற்கு அபாவத்தோடு சுவசம்பந்த விசேஷணத் தன்மைச் சம்பந்தமும் அங்கீகரிக்கப்படுவதில்லை. நையாயிகருக்கு அப்பிரசித்த சம்பந்தத்தின் கற்பனை கௌரவமாம். அநுபலப்தியில் சககாரி காரணத்தன்மையோ நையாயிகரும் அங்கீகரிக்கின்றனர். அதற்கு அத்வைதவாதிகள் காரணத்தன்மை யென்னும் பெயர் வைத்துப் பிரமாணத்தன்மை கூறுகின்றார். ஆதலால் நையாயிகர் மதத்திற்கௌரவமுண்டு; அத்வைத மதத்திலில்லை.

மேலும் வேதாந்த பரிபாஷையின் உரையாசிரியர் நூலாசிரியரின் புத்திரராவர். அவருக்கு அத்வைத சாஸ்திரத்தின் சமஸ்காரம் குறைவாயும், நியாய சாஸ்திரத்தின் சமஸ்காரம் அதிகமாயும் இருந்திருக்கின்றன. ஆதலால் மூலத்திற்கு வியாக்கியானஞ்செய்து நையாயிகர் மதத்திற்கு அவர் இவ்வாறு உஜ்ஜீவனம் எழுதியிருக்கின்றார்:— அநுபலப்தி வேறு பிரமாணமன்று. அபாவத்தின் ஞானம் இந்திரியத்தினாலே யுண்டாகின்றது. அபாவத்தோடு இந்திரியத்திற்குச் சம்பந்தமில்லை; விஷயத்தோடு சம்பந்தமின்றி இந்திரிய ஜந்நிய ஞான முண்டாகாது. விசேஷணத் தன்மைச் சம்பந்த

மும், சுவ சம்பந்த விசேஷணத் தன்மைச் சம்பநதமும நையாயி கா அங்கீகரித்திருக்கின்றனர். அது அப்பிரசித்தமாம். ஆதலால் அப்பிரசித்தத்தின் கற்பனை கௌரவமா மெனக்கூறின், அது அசஙகதமாம். ஏனெனின் 'கடமின்மை யுடையது பூதலம்' என் னும உணர்வு எல்லோருக்கும சம்மதமாம். இவ்வுணர்ச்சியால் கடாபாவத்தில் ஆதேயததன்மை விளங்குகின்றது. பூதலததில் அதிகரணத்தன்மை விளங்குகின்றது. பரஸபர சமபநதமின்றி ஆதார ஆதேயத்தன்மை யுண்டாகிறதில்லை. ஆதலால் பூதல முத லிய அதிகரணத்தில் அபாவததின் சம்பந்தம எல்லோருக்கும இஷ்டமாம். அபாவததிற்குப் பிரத்தியக்ஷம் அங்கீகரியாதவாகள் எவர்களோ அவர்களுக்கும அபாவத்தின் அங்கீகார முண்டு. ஆத லால் அதிகரணத்தோடு அபாவத்திற்குச சமபநதம் எலலோருக் கும் இஷ்டமாம். அசசமபநதத்திற்கு வியவகாரத்தின் பொருட்டு ஒரு பெயா சொல்லுதல் வேண்டும. ஆதலால் அதிகரணத்தில அபாவத்தின் சம்பநதத்தினை விசேஷணத தன்மை யென்று கூறு கின்றனர். இவ்வாறுல் விசேஷணத் தன்மைச சம்பந்தம அப்பிர சிததம் அன்று. ஆதலால் அப்பிரசித்த கற்பனையாகிய கௌரவம் நையாயிக மதத்திலில்லை. அபாவததிற்கு அதிகரணததோடு சம்ப ந்தம எல்லா மதத்திறும பெறப்பட்டதாயிருத்தலின் விசேஷணத தன்மை, சுவ சமபநத விசேஷணத் தன்மை என்னு மிரண்டு சம்ப ந்தமும் அப்பிரசிதத மன்று. "கடமின்றிய பூதலத்தைக் காண்கின் றேன்" என்னும் அநுவியவசாயமுண்டாகின்றது. ஆதலால் பூதல முதலியவற்றில் அபாவத்தின் ஞானம நேத்திர முதலியவற்றுற் றேன்றியதாம. யாண்டு நேத்திர ஜநிய ஞான முண்டாகின்றதோ, ஆண்டுக் "காண்கின்றேன்" என்னும அநுவியவசாயம் உண்டா கின்றது. அத்வைத மதத்தில் பூதலத்தின் ஞானம நேததிர ஜந்நிய மாம; கடாபாவததின் ஞானம அநுபலப்தி ஜநநியமாம; நேத்திர ஜநநியமன்று. ஆதலால் அநுவியவசாய ஞானத்தில் தனது விஷய மான வியவசாயத்தின் விலக்ஷணததன்மை விளங்கவேண்டும். எஙஙனம் "பாவதம வந்நியுடைத்து" என்னும ஞானம் பர்வத அம்சத்தில் பிரத்தியக்ஷமும, வநநி யம்சத்தில் அநுமிதியு மாம். "பாவதத்தைப் பார்க்கின்றேன்" "வந்நியை அநுமிக்கின்றேன்" என்று அநுவியவசாயம் உண்டாகின்றது. அதில் வியவசாயத்தின் விலக்ஷணத் தன்மை விளங்குகின்றது. அந்த விலக்ஷணத்தன்மை

ஈண்டு நேத்திரஜந்நியத் தன்மையும் அநுமான ஜந்நியத்தன்மையு மாம். அங்ஙனமே அபாவ ஞானத்தில் நேத்திர ஜந்நியத்துவமும அநுபலப்தி ஜநநியத்துவமு மாகிய விலக்ஷணத் தன்மையுண்டாகு மாயின் அநுவியவசாயத்தில் விளங்கல் வேண்டும. ஆதலால் அபாவத்தின் ஞானமும் இநதிரிய ஜநநியமாம; வேறு பிரமாண ஜந்நியம் அன்று. அபாவ ஞானத்தினை இநதிரிய ஜநநியமெனக்கொள்ளாவிடினும அத்வைதவாதிகள் அநுபலப்தி ஜநநியமெனக் கொண்டு பிரததியக்ஷ வடிவமாகக் கூறுகின்றனா. அதுவும அசங்கதமாம். ஏனெனின் பிரததியக்ஷ ஞானமாவது யாதோ அது இந்திரிய ஜந்நியமாமெனனும நியமத்திற்குப் பாதம் உண்டாகும. ஆதலால் அபாவத்தின் ஞானம இந்திரிய ஜநநியமாம. இவ்வாறு வேதாநத பரிபாஷையின் உரையில் நையாயிகர் மததததின் உஜ்ஜீவனம சகல அத்வைத நூலகளுக்கும விரோதமாக எழுதப் பட்டிருக்கின்றது; அது யுக்திககு விரோதமாம. ஏனெனின்,

அபாவததிறகு அதிகரணத்தோடு சம்பந்தம் எல்லோருக்கு மிஷ்டமாம். ஆகலின் அப்பிரசித்த கற்பனை யில்லையென்று முதலில கூறியது யாதோ அது அசங்கதமாம். ஏனெனின் அபாவ அதி கரணங்களின் சமபநதமோ இஷ்டமாம. ஆனால் விசேஷணத் தன் மைச சமபநததததில் பிரததியக்ஷ ஞானததின காரணத் தன்மை அப்பிரசித்தமாம. ஏனெனின் அபாவ ஞானத்திற்கு இநதிரிய ஜந்நியத் தன்மையை அங்கிகரிப்பவர் யாரோ அவா மதத்தில் விசேஷணத் தன்மைச் சம்பநதம இநதிரியஜநநிய ஞானததிற்குக் காரணமென மதிக்கப்படுகின்றது. அநநியமதத்தில் விசேஷணத் தன்மைச் சம்பநததததில் இநதிரிய ஜநநிய ஞானத்தின் காரணத தன்மை அங்கிகரிப்பதில்லை. ஆதலால் அப்பிரசித்த கற்பனையின் பரிகாரம் நையாயிக மதத்தி லுண்டாகாது. அபாவ ஞானத்திற்கு வேறு பிரமாண ஜநநியத்தன்மை அங்கிகரித்தலில், கடமின்றிய பூதலத்தைக் காண்கின்றேன் என்னும அநுவியவசாயஞான முண் டாகாதென்று எந்தத் தோஷஞ் சொல்லப்பட்டதோ அதுவுஞ் சம்பவியாது. ஏனெனின் கடாபாவ விசிஷ்ட பூதலத்தின் நேத்தி ரேந்திரிய ஞான முடையவன் யான் என்னும அநுவியவசாய முண்டாகின்றது, முற்கூறிய வாக்கியத்திற்கும பொருள் இதுவே. இந்த அநுவியவசாயத்தில் கடாபாவம் விசேஷணமும பூதலம் விசேஷியமுமாம். அந்த விசேஷியமாகிய பூதலத்தில் நேத்திரேந

திரிய ஞானத்திற்கு விஷயமாத லிருக்கின்றது; கடாபாவ விசேஷணத்தில் இல்லையாயினும், கடாபாவ விசிஷ்ட பூதலத்திற் றோற்றுகின்றன. சிலவிடத்து விசேஷண மாத்திரத்தின் தர்மமும், சிலவிடத்து விசேஷிய மாத்திரத்தின் தர்மமும், சிலவிடத்து விசேஷண விசேஷியமாகிய இரண்டின் தர்மமும விசிஷ்டத்திற் றோற்றுகின்றன. எங்ஙனம் : தண்டி புருஷன் என்னும் ஞானத்தில் தண்டம் விசேஷணமுமு, புருஷன் விசேஷியமுமாம். யாண்டுத் தண்டமின்றிப் புருஷன் இருக்கின்ருனே, ஆண்டு "தண்டி புருஷன் இல்லை" என்னும் உணர்ச்சி யுண்டாகின்றது. ஆதலால் தண்டமாகிய விசேஷணத்தின் அபாவ மிருக்கிறது ; புருஷனுகிய விசேஷியத்தின் அபாவமில்லை. என்ருலும விசேஷண மாத்திரத்தி லிருக்கும் அபாவம் தண்ட விசிஷ்ட புருஷனிடத்தும் இருக்கின்றது. யாண்டுத் தண்டமிருந்து புருஷன் இல்லையோ ஆண்டு விசேஷிய மாத்திரத்தின் அபாவ மிருக்கிறது. 'தண்டி புருஷன் இல்லை' என்பதாகத் தண்ட விசிஷ்ட புருஷனிடத்திற றோற்றுகின்றது. யாண்டுத் தண்டமும் புருஷனும் இல்லையோ, ஆண்டு விசேஷண விசேஷியங்கள் இரண்டின் அபாவமும் விசிஷ்டத்திற் றோற்றுகின்றது. அங்ஙனமே விசேஷியமாகிய பூதலத்தில் நேத்திரேந்திரிய ஞானத்திற்கு விஷயமாதல் இருக்கின்றது; விசேஷணமாகிய கடாபாவத்தின்கண் இல்லை; என்ருலும கடாபாவ விசிஷ்ட பூதலத்திற் றோன்றுகின்றது. எங்ஙனம் : "வந்நியுடைய பர்வதத்தைக் காண்கின்றேன்" என்பதாகப் பர்வததினது பிரத்தியக்ஷத்தின் அநுவியவசாயம் உண்டாகின்றது. ஆண்டு நேத்திரேந்திரிய ஞானத்திற்கு விஷயமாதல் விசேஷியமாகிய பர்வதத்திலுளது; விசேஷணமாகிய வந்நியிலில்லை. என்ருலும் வந்நி விசிஷ்ட பர்வதத்தில் நேத்திரேந்திரிய ஞானத்திறகு விஷயமாதற் றன்மை தோற்றுகின்றது. கடாபாவமும் பூதலமும் விஜாதீய ஞானத்திற்கு விஷயமாமாயின், "பர்வதத்தைப்பார்க்கின்றேன்; வந்நியை அநுமிக்கின்றேன்" என்பதாக விலக்ஷண வியவசாய ஞானத்தை விஷயஞ் செய்வதாகிய அநுவியவசாயம் உண்டாதல் வேண்டும என எந்தத் தோஷம் சொல்லப்பட்டதோ, அதுவும அத்துவைத நூல்களின் தளர்ந்த சம்ஸ்கார முடையோர் கூற்ரும. வினையின் அபாவததின் ஞானம் அநுபலப்திப பிரமாண ஜந்நியமாமென்னும் அர்த்தத்தை அங்கீகரிப்பவாகள் எவர்களோ, அவாகளுக்குக் "கட அநுபலப்தியினல்

கடாபாவத்தினை நிச்சயிக்கின்றேன், நேத்திரத்தினால் பூதலத்தைக் காண்கின்றேன்" என்னும் அநுவியவசாயம் வார்த்திக்கப்படாததாயுண்டாகின்றது. அதனால் வியவசாய ஞானத்திற்கு விஷயமாதற்றன்மையைக் கடாபாவத்திலும் பூதலத்திலும் விலக்ஷணமாகக் கொண்டிருக்கின்றனா. அன்றியும் "அநுபலப்தியினாற் றோன்றிய தன்மையை அங்கீகரித்து அதநுவைத வாதிகள் அபாவ ஞானத்திற்குப் பிரத்தியக்ஷமஅங்கீகரித்திருக்கின்றனர்.பிரத்தியக்ஷ ஞானம் யாதோ அது இந்திரிய ஜந்யமாகின்றது. ஆதலால் முறகூறிய நியமததிற்கு அநுபலப்திவாதியின் மதத்தில் பாத முண்டாகும்" என்று தோஷம கூறபபடடது. அதுவும சித்தாநததததினை அறியாததினால் கூறியதாகலின் அசங்கதமாம. ஏனெனின் அநுபலப்திப் பிரமாண ஜந்ய அபாவஞான முழுவதும பிரத்தியக்ஷம அன்று. ஆனால் சில ஞானம பிரததியக்ஷமாம். வாயுவில்உருவம் இன்மையின் ஞானமும பரமாணுவில் மகத்துவம் இன்மையின் ஞானமுமாகிய இவை முதலியன அநுபலப்தி ஜநநியமாம்; என்றாலும பரோக்ஷமாம. அலலது அநுபலப்திப் பிரமாண ஜநநியமாயினும் அபாவத்தின் ஞான முழுவதும் பரோக்ஷமாம். இதனை முன் கூறிவநதிருக்கின்றோம். ஆதலால் அநுபலப்திவாதி அபாவ ஞானத்தினைப் பிரத்தியக்ஷமெனக் கொண்டிருக்கின்றனர் என்று தர்மராஜர்புத்திரர் கூறுதல சித்தாந்தத்தை அறியாததினாலாம். வேதாநத பரிபாஷைமுதலியநூலகளிற் சிலவிடதது அபாவஞானத்திற்குப் பிரததியக்ஷத் தன்மை கூறி யிருப்பது பிரௌடி வாதத்தினாற் கூறியதாம. அநுபலப்திப் பிரமாண ஜந்ந்ய அபாவ ஞானத்திற்குப் பிரததியக்ஷத தன்மை ஒப்புக்கொள்ளினும, சொல்லப்படும் கிரமத்தால் அபாவ ஞானத்தில் இநதிரிய ஜநநியத்தன்மை பெறப்படுவதில்லை என்பது நூலாசிரியரது பிரௌடி வந்தமாம். பிரதிவாதியின் வார்த்தையை அங்கீகரித்துப் பின் தனது மதத்தில் தோஷத்தைப் பரிகரித்தல் எதுவோ அதனைப் பிரௌடிவாதமென்பர். அன்றியும அபாவஞானத்திற்குப் பிரத்தியக்ஷத்தன்மை அங்கீகரித்து இநதிரிய ஜநநியத்துவம் அங்கீகரியாவிடின், பிரத்தியக்ஷ ஞானம இநதிரிய ஜந்நியமா மென்னும் நியமத்திற்குப் பாதமுண்டாகும் என்னும் இக்கூற்றும அசங்கதமாம். ஏனெனின் அவனை இது கேட்போம்:—யாது பிரததியக்ஷ ஞானமாமோ, அது இந்திரிய ஜந்நியமாம், இநதிரியஜந்நியத்தின் வேறாய்ப் பிரத்தியக்ஷ முண்

டாகிறதில்லை என்று நியமம் உளதா? அல்லது யாது இந்திரிய ஜந்நிய ஞானமுமோ அது பிரத்தியக்ஷமாம்; பிரத்தியக்ஷத்திற்கு வேறாக இந்திரிய ஜந்நிய முண்டாகிறதில்லை என்று நியமமுளதா? அவற்றுள் முதற்பக்ஷத்தைக் கூறின் அசங்கதமாம்:—ஈசுவரனது ஞானம பிரத்தியக்ஷமாம; இந்திரிய ஜந்நியமன்று. நியாயமதத்தில் நித்தியமும், சித்தாந்த மதததில் மாயாஜந்நியமுமாம். ஈசுவரனுக்கு இந்திரிய மின்மையால் அவரது ஞானம் இந்திரியஜந்நிய மன்று. "பத்தாமவன் நீ" என்னும வாக்கியத்தால் உண்டாகிய ஞானம் பிரத்தியக்ஷமாம்; இந்திரியஜந்நிய மன்று. "பத்தாவது புருஷனுக்குத் தனது சரீரத்தில் பத்தாமவனென்னுந் தன்மையின் ஞான முண்டாகின்றது. அச்சரீரம் நேத்திர யோக்கியமாம. ஆதலால் பத்தாமவனது ஞானமும நேத்திரேந்திரிய ஜந்நியமாம" என்றிவ்வாறுகூறின் அது சம்பவியாது. ஏனெனின் மூடியகண்ணுடையவனுக்கும வாக்கியத்தைக் கேட்டுப் பததாமவனது ஞானம் உண்டாகின்றது. நேத்திரஜந்நியமாயின் நேததிர வியாபாரமின்றியுண்டாக லாகாது. ஆதலால் பத்தாமவனது ஞானம நேததிரஜந்நியமன்று; பததாமவனது ஞானம் மனோஜந்நியமா மாகலின் இந்திரிய ஜந்நியமாமெனக் கூறின் அதுவும சம்பவியாது. ஏனெனின் தேவதத்தன் யஞ்ஞதத்தன முதலிய பெயா ஆத்மாவின தன்று; ஆனால்நியாயமதத்தில்சரீரவிசிஷ்ட ஆத்மாவினதாம; வேதாந்த மதத்தில சூக்ஷ்ம விசிஷ்ட ஸ்தூலசரீரத்தினதாம். அங்ஙனமே நீ நான் என்னும் வியவகாரமும் சூக்ஷ்மவிசிஷ்ட ஸதூல சரீரததி லுண்டாகின்றது. அநத ஸதூலசரீரத்தின் ஞானம் மனதினற சம்பவிக்கிறதில்லை. பாகியபதார்த்தத்தினது ஞானத்தின் சாமர்த்தியம மனதிலில்லை. "மனதின் அவதானம் உண்டாகுமாயின் வாக்கியததினல் தசமனது ஞானமுண்டாகும். விக்ஷேபமடைநத மனமுடையவர்களுக்குண்டாகிறதில்லை. ஆதலால் அநவய வெதிரேகததால் தசமனது ஞானத்திற கேது மனமாகலின் தசமனது ஞானம மானதமாம்; ஆதலால் இந்திரியஜநநியமாம" என்று கூறின் அதுவும் பொருநதாது. ஏனெனின் இத்தன்மைய அநவயவெதிரேகததால் சகல ஞானங்களுக்கும ஏது மனமாம. விக்ஷேபப்பட்ட மனம் உடையவாகளுககு எநதப் பிரமாணங்களினலும ஞான முண்டாகிறதில்லை. சாவதானமுடையவர்களுக்குச் சகல ஞானமுமுண்டாகும; அதனல் சகல ஞானங்களையும் மானதமென்னல் வேண்டும்.

ஆதலால் மனம் சகல ஞானங்களுக்கும் சாதாரண காரணமாம்; இந்திரியம் அநுமானமுதலிய சகல பிரமாணங்களுக்கும் சககாரியாம். மனதோடுகூடிய நேத்திரத்தால் எந்த ஞானமுண்டாகின்றதோ அது சாக்ஷுஷ ஞானமெனப்படுகின்றது. மனதோடு கூடிய அநுமானப் பிரமாணத்தினால் உண்டாவது எதுவோ அது அநுமிதி ஞானமெனப்படுகின்றது. மனதோடுகூடிய சப்தப் பிரமாணத்தாலுண்டாவது யாதோ அது சாப்தஞானமெனப்படுகின்றது. வேறு பிரமாணமின்றி மனமாத்திரத்தினாலுண்டாகும் ஞானமெதுவோ அது மானஸ ஞானமெனப் படுகின்றது. அது மனமாத்திரத்தினால் உட்பதார்த்தங்களாகிய சுகமுதலியவற்றின் ஞானமுண்டாவதாம். ஆதலால் உட்பதார்த்தங்களின் ஞானமே மானஸமாம். புறபபதார்த்தங்களின் ஞானம இந்திரியம் அநுமானம முதலியவை யின்றி மனோமாத்திரத்தால் உண்டாகிறதில்லை. ஆதலால பத்தாமவனது ஞானம் மானஸமாமென்று கூறுதல் சமபவியாது. உடபொருள்களின் ஞானம் மானஸமாமென்பதும் நையாயிகா முறைப்படி சொல்லப்பட்டிருக்கின்றது. சித்தாந்தத்திலோ எந்த ஞானமும மானஸம அன்று. ஏனெனின் சுத்த ஆன்மாவோ ஸ்வயம்பிரகாசமாம. அதன் பிரகாசத்தில் (அதனை விளக்குவதில) எந்தப் பிரமாணத்தின் அபேக்ஷையும் இல்லை. ஆதலால் ஆன்மாவின் ஞானம் மானஸமன்று. சுகமுதலியன சாக்ஷிபாஸ்யமாம. எந்தக் காலத்தில் இஷ்ட பதார்த்தத்தின் சம்பந்தத்தால் சுக வடிவினதாகிய அந்தக்கரணத்தின் பரிணாமமுண்டாகின்றதோ, அநிஷ்ட பதார்த்தத்தின் சமபந்தத்தால துக்க வடிவினதாகிய அந்தக்கரணத்தின் பரிணாமமுண்டாகின்றதோ, அதே சமயத்தில் சுக துக்கங்களை விஷயஞ்செய்வதாகிய அந்தக்கரணத்தினது சத்துவகுணத்தின் பரிணாமமாகிய விருத்தி யுண்டாகின்றது. அந்த விருத்தியில் ஆரூடமான சாட்சி சுக துக்கங்களை விளக்குகின்றது. சுக துக்கங்களின் உற்பத்தியில் இஷ்ட சமபந்த அநிஷ்ட சமபந்தங்கள் நிமித்தமாம. அந் நிமித்தத்தானே சுகதுக்கங்களை விஷயஞ்செய்வதாகிய அந்தக்கரணத்தின் விருத்தியுண்டாகின்றது. அதன உற்பத்தியில் எந்த பிரமாணத்தின அபேக்ஷையும இல்லை. ஆதலால சுக துக்கங்கள் சாக்ஷிபாஸ்யமாம். குடமுதலியவற்றின் பிரகாசமும விருத்திமாத்திரத்தால் உண்டாகிறதில்லை. ஆனால விருத்தியில் ஆரூடசேதனத்தானே எல்லாவற்றின் பிரகாசமுமுண்டாகின்றது. ஆதலால் சகல

பதார்த்தங்களையும் சாக்ஷிபாஸ்யமென்னல்வேண்டும். என்றாலும் கடமுதலியவற்றின் ஞானமாகிய அந்தக்கரணவிருத்தியுண்டாயின், அதில் இந்திரியம் அநுமானமுதலிய பிரமாணங்களின் அபேக்ஷையில்லை. சுகமுதலியவற்றின் ஞானமாகிய விருத்தியின் உற்பத்தியில் எந்தப் பிரமாணத்தின் அபேக்ஷையும் இல்லை. இவ்வளவு பேதமுண்டு. எந்த விருத்தியில் ஆரூடசாக்ஷி விஷயத்தைப் பிரகாசிக்கின்றதோ, அந்த விருத்தி யாண்டு இந்திரியம் அநுமானமுதலிய பிரமாணங்களால் உண்டாகின்றதோ, ஆண்டு விஷயத்தினைச் சாக்ஷிபாஸ்யமெனக் கூறுவதில்லை; ஆனால் பிரமாணஜந்ய ஞானத்திற்கு விஷயமெனக் கூறுவர். யாண்டுப் பிரமாணத்தின் வியாபாரமின்றி விருத்தியின் உற்பத்தியுண்டாகின்றதோ, அந்தவிருத்தியில் ஆரூட சாக்ஷி எதனை விளக்குகின்றதோ அது சாக்ஷிபாஸ்யமெனப்படுகின்றது. கடமுதலியவற்றைக் கோசரிக்கும் அந்தக்கரணத்தின் விருத்தி இந்திரியம் அநுமான முதலிய பிரமாணங்களானுண்டாகின்றது; அந்தவிருத்தியில ஆரூடசாக்ஷி அவற்றை விளக்குகின்றது. அங்ஙனமாயினும் கடமுதலியன பிரமாணகோசரமெனப்படுகின்றன; சாக்ஷிபாஸ்யமன்று. சுகமுதலியவற்றைக் கோசரிக்கும் விருத்தி பிரமாண ஜந்யமன்று; ஆனால் சுகமுதலியவற்றையுண்டுபண்ணுமதாமுதலியவற்றாற்பெறப்படுவதாம்; ஆதலாற் சுகமுதலியன சாக்ஷிபாஸ்யமாம். இவ்வாற்றாற் சுகமுதலியனவும் அவற்றின் ஞானமும் சமான சாமக்கிரியினாலுண்டாகின்றன; ஆதலால் அறியப்படாத சுகமுதலியன உண்டாகா; அறியப்பட்டனவே உண்டாம். சுகமுதலியவற்றின் பிரத்தியக்ஷத்திற்குச் சுகமுதலியன ஏதுவன்று. சுகமுதலியன பூர்வகாலத்தில் இருக்குமாயின் தமது ஞானத்திற்கேதுவாகும். சுகமுதலியனவும் அவற்றின் ஞானமும் சமானகாலத்தில் சமான சாமக்கிரியினால் உண்டாகின்றன. ஆதலால் ஒன்றற்கொன்று காரிய காரணத்தன்மையோ இல்லை. கடமுதலியவற்றின் பிரத்தியக்ஷஞானத்தில் கடமுதலியன ஏதுவாம். ஏனெனின் பிரத்தியக்ஷ ஞானத்திற்குமுன் கடமுதலியன வுண்டாயிருக்கின்றன. ஆதலால் தம்மைக் கோசரிக்கும் பிரத்தியக்ஷத்திற்குக் கடமுதலியன ஏதுவாம். கடமுதலியவற்றிற்கு யாண்டு அநுமிதிமுதலிய ஞானங்களுண்டாகின்றனவோ, அவற்றிற்கேது கடமுதலியனவன்று. அநுமிதி ஞானத்திலும் அங்ஙனமே சப்த ஞானத்திலும் விஷயமும் காரணமாகுமாயின், கடந்தனவும் வரா

தனவுமாகிய பதார்த்தங்களின் அநுமிதிமுதலிய ஞானம் உண்டாகலாகாது. ஆதலால் அநுமிதிஞானம் சாப்தஞான முதலியவற்றில் விஷயமகாரணமன்று. அங்ஙனமே சுகமுதலியனவும தம்மைக்கோசரிக்கும் ஞானத்திறகுக் காரணமன்று. முற்பிரசங்கம் இதுவாம்:—சுகமுதலியவற்றின் ஞானம் மானஸம் அன்று. ஆனால் சுகமுதலியன சாடசி பாஸ்யமாம. ஆதலால் மனதிற்கு அசாதாரண விஷயங்கிடைப்பதில்லை. இக்காரணத்தால் சாவஞானங்களுக்கும் உபாதானமாகிய அந்தக்கரணமோ இருக்கின்றது. ஞானத்திறகுச் சுதந்தர கரணவடிவ இநதிரியமாக மனதை நையாயிகா கூறுகின்றனர். அது அசங்கதமாம். ஆதலால் பதகாமவனது ஞானம் மானஸம் அன்று; ஆனல் வாக்கியஜந்நியமும் பிரதத்தியக்ஷமுமாம.* இவ்வாற்றுல் பிரதத்தியக்ஷ ஞானமாவது யாதோ, அது இந்திரிய ஜந்நியமா மென்னும் நியமம் சம்பவியாது. அன்றியும இந்திரிய ஜந்நிய ஞான மெதுவோ அது பிரதத்தியக்ஷமாம; இநதிரிய ஜந்நிய ஞானமெதுவும் அப்பிரதத்தியக்ஷ மாகாது என்னும் நியமத்தால் சித்தாநதத்திறகுக் கேடு இல்லை. ஏனெனின இநதிரியஜநநியஞானத்திறகு அப்பிரதத்தியக்ஷத்துவம் யாரும் கூறுவதில்லை. இநதிரிய ஜநநிய ஞானமோ முழுவதும் பிரதத்தியக்ஷமாம். சிலவிட ததுச சத்தமுதலியவற்றுனும் பிரத்தியக்ஷம உண்டாகின்றதென்பது சித்தாந்தமாம். ஆதலால முற்கூறிய நியமத்திற்கு விரோதம இல்லை. இவ்வாற்றுல் நையாயிகரை அநுசரித்தவராகிய தாமராஜர் புத்திரரது கூற்று அசங்கதமாம்.

ஆதலால் அபாவஞானம் இந்திரியஜந்நியமன்று. ஆனல் யோக்கியாநுபலப்தியென்னும வேறு பிரமாணத்தினுற் றோன்றியதாம். யாண்டுப "பிரதியோகி யுளதாயின் அதன் உபலம்பமுண்டாகும்" என்பதாகப்பிரதியோகியின்ஆரோபத்தால்உபலம்பத்தின்ஆரோபமுண்டாகின்றதோ, ஆண்டு அபாவத்தின் ஞானம் யோக்கியாநுபலப்திப் பிரமாண ஜநநியமாம. அநதகாரததில கடாபாவத்தின் ஞானம் அநுமான முதலியவற்றுற் றோன்றியதாம். ஏனெனின் "அநதகாரத்தில் கடமுளதாயின அதனுபலமப முண்டாம" என்பதாகக் கடமாகிய பிரதியோகியின் ஆரோபத்தால் கடத்தினது உபலம்பத்தின் ஆரோபம சம்பவிப்பதில்லை. இவ்வாற்றுல் அந்நிய மதததில் எவ்வளவு அபாவங்களின் ஞானம இந்திரியஜந்நியமோ அவ்வளவே ஞானமும் வேதாநத மதத்தில் கேவலம் அநுபலப்தி ஜந்நியமாம். நையாயிக மதததில் இந்திரியம கரணமும அநுபல

பதி சககாரி காரணமுமாம். அதனால் இந்திரியத்தில் பிரமாணத் தன்மையிருக்கின்றது; அநுபலப்தியில் பிரமாணத்தன்மையில்லை. வேதாந்தமதத்தில் அநுபலப்தியில் பிரமாணததன்மை அதிகமாய் அங்கீகரிக்கப்படுகின்றது. அநுபலப்தி சொரூபமாக இரண்டு மதத்திலும் பெறப்பட்டதாகின்றது. அங்ஙனமே நியாய மதத்தில் விசேஷணததன்மைச் சம்பந்தம் ஞானத்திற்குக் கரணமாதல் அதிகமாய்க் கொள்ளப்படுகின்றது; விசேஷணத்தன்மைச சம்பந்தம சொரூபமாக அதிகரண அபாவங்கட்கு இரண்டு மதத்திலும் பெறப்பட்ட தாகின்றது. இவ்வாற்றால் வேதாநதிக்கு அநுபலப்தியில் பிரமாணத்தன்மை அதிகமாக அங்கீகரிக்கப்படுகின்றது. நையாயிகருக்கு விசேஷணத் தன்மைச் சம்பநதத்தில் ஞானததின் காரணததன்மை அதிகமாக அங்கீகரிக்கப் படுகின்றது. ஆதலால் இலாகவ கௌரவங்கள் யாருக்கு மில்லை. இருவருக்கும் சமானகற்பனை யிருக்கின்றது. என்றாலும அபாவ ஞானததிற்குக் கரணமாதற் றன்மையை இநதிரியத்தில் நையாயிகர் அதிகமாய்க் கூறுகின்றனா. இது அவர்கள் மதத்தில் கௌரவமாம். வாயுவில் உருவமின்மையின் ஞானம் நேத்திர வியாபாரமின்றி யுண்டாகின்றது. அதனை நையாயிகர் நேத்திரேநதிரிய ஞான மென்பர். அங்ஙனமே பரமாணுவில் மகத்துவமின்மையின் ஞானமும் நேத்திர வியாபாரமின்றி யுண்டாகின்றது. அதனையும் நையாயிகா நேத்திரேந்திரிய ஞானமென்பர். இவ்வாறு அநேக விடங்களில் எவ்விந்திரியததின் வியாபார மின்றி எவ்வபாவத்தின் ஞானம் உண்டாகின்றதோ, அதனை அவ்விந்திரிய ஜந்நிய மென்பர். அது அநுபவ விரோதமானதாம. எவ்விநதிரிய வியாபாரததால் எநத ஞானம் உண்டாகின்றதோ அநத ஞானம் அவ்விந்திரிய ஜந்நியமாகின்றது. எவ்விநதிரிய வியாபாரமின்றி எந்தஞானமுண்டாகின்றதோ, அவ் விநதிரிய ஜந்நியத்தன்மை அந்த ஞானத்திற்கு அங்கீகரிக்கின், சகல ஞானமும் சகல இந்திரியங்களின் ஜநநியமாதல் வேண்டும். ஆதலால் அபாவத்தின் ஞானம் இநதிரிய ஜநநியமாமென்னும் நையாயிகர் மதம நலமுடைய தன்று. இவ்வாற்றால் அபாவத்தின் ஞானம் அநுபலப்திப் பிரமாண ஜநநியமாம. ஆனால் அபாவஞானத்தின் உற்பததியில் வியாபாரமின்றிய அசாதாரண காரணம் அநுபலப்தியாம. ஆதலால் அபாவ ஞானத்தின் அசாதாரண காரணத் தன்மை அநுபலப்திப்பிரமாணத்தின் இலக்கணமாம்.

## நிரூபணம் ஜிஞ்ஞாசுவுக்கு உபயோகமாமாறு.

அநுபலப்தியை நிரூபித்தலில் ஜிஞ்ஞாசுவுக்கு உபயோகமாமாறு இதுவாம்:— "ஈண்டு நாநாவென்பது சிறிது மில்லை" என்றல் முதலிய சுருதி பிரபஞ்சத்தின் முக்காலத்தின்மையைக் கூறுகின்றது. அநுபவ சித்தமாகப் பிரபஞ்சத்திற்கு முக்காலத்தைய நிஷேதம் பொருந்தாது. ஆதலால் பிரபஞ்சத்தைச் சொரூபமாக நிஷேதிப்ப தில்லை; ஆனால் பிரபஞ்சம் பாரமார்த்திக மன்று. ஆதலால் பாரமார்த்திகத்தன்மை விசிஷ்டப் பிரபஞ்சத்தின் முக்காலத்தின்மையைச சுருதி கூறுகின்றது. இவ்வாற்றால் பாரமார்த்திகத் தன்மை விசிஷ்டப் பிரபஞ்சத்தின் அபாவம சுருதி சித்தமாம்; அநுபலப்திப் பிரமாணததாலும சித்தமாம. பாரமாாததிகத் தன்மை விசிஷ்டப் பிரபஞசம் உளதாயின், எங்ஙனம சொரூபமாகப் பிரபஞசத்தின் உபலப்தி யுண்டாகின்றதோ அங்ஙனமே பாரமார்த்திகப் பிரபஞசத்தின் உபலப்தியு முண்டாம. சொரூபமாகவோ பிரபஞ்சத்தின் உபலப்தி யுண்டாகின்றது. பாரமாாததிக வடிவமாகப் பிரபஞ்சத்தின் உபலப்தி யுண்டாகிறதில்லை. ஆதலால் பாரமார்த்திகத்தன்மை விசிஷ்டப் பிரபஞசத்தின் அபாவமிருக்கிறது. இவ்வாற்றால் பிரபஞ்சாபாவத்தின் ஞானம அநுபலபதியினால் உண்டாகின்றது. மற்றும் அநேக அபாவங்களின் ஞானம ஜிஞ்ஞாசுவுக்கு இஷ்டமாம். அவற்றிற்கேதீ அநுபலப்திப் பிரமாணமாம்.

ஆறாவது பிரகாசம்
அநுபலப்திப்பிரமாண நிரூபணம்
முடிந்தது.

ஓம்.

தத்ஸத் பிரஹ்மணேநம:.

# ஏழாவது பிரகாசம்

## விருத்திபேதமும் அநிர்வசனீயக்கியாதியின் மண்டனமும், கியாதி கண்டனமும், தானே பிரமாணமாந் தன்மைப் பிரமாண நிரூபணமும்.

### கூஅ. உபாதானம்(சமவாயி), அசமவாயி, நிமித்த காரணம், சையோகம் என்பவற்றின் இலக்கணம்.

நூலின் ஆரம்பத்தில் விருத்தியென்பது யாது என்னும் வாக்கியம், விருத்தியின் லக்ஷணமும் பேதமும் ஆகிய இவற்றின் வினவாம். விருத்தியின் காரணம் யாது என்றது விருத்தியினது சாமக்கிரியின் வினவாம். மூன்றாவது வினா விருத்தியின் பிரயோஜனத்தினதாம். அவற்றுள் விருத்தியினது பிரயோஜனத்தின் நிரூபணத்தை எட்டாவது பிரகாசத்தில் செய்வாம். காரண சமுதாயத்தினைச் சாமக்கிரி யென்பர். காரணம் இரண்டுவகையினதாகின்றது. ஒன்று உபாதான காரணம், மற்றையது நிமித்த காரணம். எதன் சொரூபத்தில் காரியத்தின் ஸ்திதி யுண்டாகின்றதோ அக் காரணத்தை உபாதான காரணமென்பர். உபாதான காரணத்தினையே சமவாயி காரண மென்பர். அது கடத்திற்கு உபாதானகாரணம் கபாலமாவதுபோலவாம். காரியத்தினுமதடஸ்தமாய்க்காரியத்தைஉண்டு பண்ணுவது யாதோ அது நிமித்த காரணமெனப்படும். அது கடத்திற்கு நிமித்த காரணம குலாலன் சக்கரம் தண்டம முதலியன ஆதல் போலவாம. நியாய வைசேஷிக மதத்தில் சமவாயி அசமவாயி நிமித்தபேதத்தால் காரணம் மூன்றுவகைத்தாமென்பர். காரியத்தின் சமவாயிகாரணத்தோடு சமபந்த முடையதாய்க் காரியத்தை யுண்டுபண்ணுவது யாதோ அதனை அசமவாயி காரணமென்பர். அது கடத்தின் அசமவாயிகாரணம் கபால சையோகமும், படத்தின் அசமவாயிகாரணம தந்து சையோகமும் ஆவது போல

வாம். கடத்தின் சமவாயி காரணமாகிய கபாலத்தோடு சம்பந்த முடையதாய்க் கடத்தை யுண்டு பண்ணுவது கபால சையோக மாம். அங்ஙனமே படத்தின் சமவாயி காரணமாகிய தந்துவோடு சம்பந்தமுடையதாய்ப்படத்தையுண்டுபண்ணுவது தந்துசையோக மாம். சமவாயி காரணத்தின் சையோகத்தைக் காரியத்தை யுண்டு பண்ணுவதெனக் கொள்ளாவிடின், பிரிபட்ட கபாலங்களால் கடத்தின் உற்பத்தியும், பிரிபட்ட தந்துக்களால் படத்தின் உற் பத்தியும் உண்டாதல் வேண்டும். இவ்வாறு திரவியத்தின் உற் பத்தியில் அவயவங்களின் சையோகம் காரணமாம. அந்த அவயவ சையோகத்தில் காரியத்தின் ஸ்திதி இல்லை. ஆனால் அவயவங்களில் காரியத் திரவியததின் ஸ்திதி யுண்டாகின்றது. ஆதலால் அவயவ சையோகத்தில் சமவாயி காரணத்தன்மை சமபவிக்கிற தில்லை. காரியத்திலும் தடஸ்தமாயும் இருப்பதில்லை. ஆனால் அவயவ சையோகமும், காரியத்திரவியமும் அவயவத்தில் சமானுதி கரண மாய் இருக்கும். ஆதலால் நிமித்த காரணததன்மையும் அவயவ சையோகததில் சமபவிப்பதில்லை. ஆதலால் சமவாயி காரணத்திற் கும் நிமித்த காரணததிற்கும் வேறாய் அசமவாயி காரண மிருத்த லால், காரணம் மூவகையினதாகின்றது. எங்ஙனம் திரவியததின உற்பத்தியில் அவயவ சையோகம் அசமவாயி காரணமாகின்றதோ, அங்ஙனமே குணததின் உற்பத்தியில் சில விடத்தில் குணம் அசம வாயி காரணமாகின்றது; சில விடத்தில் கிரியை அசமவாயி காரண மாகின்றது. அங்ஙனமன்றோ? நீல தநதுவால் நீல படததின் உற் பத்தியுண்டாகின்றது; பீததததின் உற்பததியுண்டாகிறதில்லை. ஆத லால் படத்தின் நீலரூபததில் தநதுவின நீலரூபம காரணமாம. அப்படததின் நீலரூபததின சமவாயிகாரணம் படமாம. தநது வின் நீலரூபம அதன் சமவாயி காரணமன்று. அதுபோலத தந்து வின் நீலரூபம படததின் நீலரூபததிலும தடஸதம அன்று. ஆனால் தந்துவின் நீலரூபம் தநதுவில இருக்கினறது. படததின நீல ரூப மும தநதுவில் இருக்கின்றது. ஆதலால இரண்டும சமானுதி கரண மாய் இருத்தலின் சமபநதிகளாம. சமபநதியலலாததனைத் தடஸ்த மென்பர். படததின் நீலரூபம் சமவாயி சமபந்தத்தால் படத்தில் உளதாயினும், சுவசமவாயி சமவாய சம்பநதத்தால படத்தின் நீல உருவம் தந்துவின்கண்ணே இருக்கின்றது. சுவ என்பது படத் தின் நீலரூபம்; அதன் சமவாயியாகிய படம் எதுவோ அதன் சம

வாயம் தந்துவில் இருக்கின்றது. இவ்வாற்றால் படத்தின் நீலரூப த்தோடு தந்துவின் நீல ரூபம் சமானாதிகரணமாம். தந்துவின் நீல ரூபம் சாட்சாத் சமபந்தத்தால் தந்துவில் இருக்கின்றது. அதன் கண்ணே படவாயிலாகப் பரம்பரைச் சம்பந்தத்தால் படத்தின் நீலரூபம் இருக்கின்றது. ஆதலால் படத்தின நீல ரூபத்தினும் தந்துவின் நீலரூபம தடஸ்தமாகாதிருத்தலின் அதற்கு நிமித்த காரணம சம்பவியாது. ஆனால் படததினது நீலரூபத்தின் சமவாயி காரணமாகிய படம் யாதோ அதன் சமபந்தி தநதுவின்நீலரூபமாம். படத்தின் நீலரூபத்தினை யுண்டுபண்ணுவதா யிருததலின், அதன் அசமவாயி காரணம தந்துவின் நீலரூபமாம். தந்துவின் நீலரூபமும் படமுமாகிய இரண்டும் தநதுவில் சமவாய சமபநதத்தால் இருக் கின்றன. ஆதலால் சமானாதிகரண சமபந்தத்தால் தந்துவின் நீல ரூபம் படததின் சம்பநதியாம. எங்ஙனம: காரியத்தினது உருவ த்தின் அசமவாயிகாரணம உபாதானத்தின் உருவமாம். அங்ஙன மே இரச கந்த பரிசங்களினும் அறிநதுகொள்ளுக. சகல குணங் களின் உற்பத்தியினும் எவ்வாற்றால் குணத்தின் கிரியை அசமவாயி காரணமாமோ, அது நியாய வைசேஷிய நூல்களில் விளக்கமா யுளது. உபயோகமில்லாமை கண்டு விரிவஞ்சி விடுததனம.

சையோகத்தின் பிரசங்கம் அநேக இடங்களில வருகின்றது. ஆதலால் குணததின் உற்பத்தியில் கிரியை அசமவாயி காரணமா தற்கு உதாரணம சொல்லுதற்பொருட்டுச சையோகத்தின் உற் பத்தியைக்கூறுவாம:—சையோகம் இருவகைத்தாம. ஒன்று கர்மஜ சையோகமும், மற்றொன்று சையோகஜ சையோகமுமாம். எதன் உற்பத்தியில கிரியை அசமவாயி காரண மாகின்றதோ அது கர்மஜ சையோகமெனப்படுகின்றது. சையோகமாகிய அசமவாயி காரண த்தால் உண்டாவது எதுவோ அது சையோகஜ சையோகமென ப்படுகின்றது. கர்மஜ சையோகமும் அந்நியதர கர்மஜம், உபயதர கர்மஜமென்னும் பேதத்தால் இருவகையினதாம. சையோகத்தின் ஆசிரயமும இரண்டாம். அவற்றுள் ஒன்றன் தொழிலால் எச சையோகமுண்டாகின்றதோ அது அந்நியதரகர்மஜசையோகமெனப் படுகின்றது. பறவையின் தொழிலால் விருக்ஷததிற்கும பறவைக் கும் உண்டாகும சையோகம் அந்நியதரகர்மஜசையோக மெனப்படு கின்றது. ஆண்டு விருக்ஷமும் பட்சியும சமவாயிகாரணமாம. சை யோகத்தின் சமவாயிகாரணமாகிய பட்சியினிடத்து அதன் கிரியை

க்குச் சமவாயசமபந்தமிருத்தலின் பட்சிவடிவமாகிய சமவாயிகாரணத்தின் சம்பந்தமுடையதாய்ப் பட்சி விருட்சங்களின் சையோகத்தை யுண்டுபண்ணுவது பட்சியின் தொழிலாம. ஆதலால் பக்ஷி விருக்ஷங்களினது சையோகத்தின் அசமவாயிகாரணம் பட்சியின் தொழிலாம. இது அந்நியதர கர்மஜ சையோகத்துக்கு உதாரணம். ஆட்டுக்கடாக்கள் இரண்டன் தொழிலால் அக்கடாக்கள் இரண்டற்கும உண்டாகும சையோகம எதுவோ அது உபய கர்மஜ சையோகமாம. ஆட்டுக்கடாக்களிரண்டின்சையோகத்தில் இரண்டு கடாக்களும சமவாயி காரணமாம. அவற்றின் தொழில் அசமவாயி காரணமாம. யாண்டுக் கையின் தொழிலால் கைக்கும விருக்ஷத்திற்கும சையோகம உண்டாகின்றதோ, ஆண்டுக் கையும விருக்ஷமும ஒன்றற்கொன்று சையுக்தமாம. இந்த விவகாரத்தைப்போல காயமும் விருக்ஷமும சையுக்தமாம. இவ்விதவிவகாரமும உண்டாகின்றது. சையுக்தமென்பது சையோகமுடையதாம. அந்த ஸ்தானத்தில் கை விருக்ஷங்களினது சையோகத்திலோ கையினதொழில் அசமவாயி காரணமாம. காயத்தினிடத்திலாவது விருக்ஷத்தினிடத்திலாவது கிரியை உண்டாகுமாயின, காய விருக்ஷங்களின் சையோகமும கிரியா ஜந்யமாதல் சமபவிக்கும. தருவிற்போலக் காயத்திலும கிரியை இல்லை. ஏனெனின் சகல அவயவங்களிலும் தொழில உண்டாகுமாயின, ஆண்டு அவயவிக்குந் தொழில் உண்டாகும. கையிற்கு அந்நியமாகிய சகல அவயவங்களும நிச்சலமாய் இருத்தலால் காயத்திற்குத் தொழில் கூறுதல் சமபவியாது. ஆதலால் காயதருக்களின் சையோகத்தில் கிரியை அசமவாயிகாரணமாமென்று கூறுதல் சம்பவியாது. ஆனால் அந்நியதர காமஜமாகிய அஸ்ததரு சையோகமே காயதரு சையோகத்தின் அசமவாயி காரணமாம. ஏனெனின் காய தரு சையோகத்தின் சமவாயி காரணமாகிய காயம் எதுவோ, அதனிடத்தும சுவசமவாயிசமவேதத்தன்மைச் சம்பந்தத்தால் சம்பந்தமுடையது அஸ்ததரு சையோகமாம். காயதரு சையோகத்தை உண்டுபண்ணுவதுமாம; ஆதலால் அசமவாயி காரணமாம. சுவ என்பது அஸ்ததரு சையோகம், அதன் சமவாயி அஸ்தம், அதனிடத்துச சமவேதமாகிய காயம எதுவோ அதன் சமவேதத் தன்மைத் தர்மமே சம்பந்தமாம. இவ்வகைப் பரம்பரைச சம்பந்தம சாமாநாதிகரணிய சம்பந்தத்தில பரியவசானமா (முடிவுபெறு) கின்றது. ஒரு அதிகரணத்தில் இருத்தலைச் சாமாநாதிகரணியமென்பர்.

எவற்றிற்கு ஒரு அதிகரணத்தில் இருப்பு உளதாகின்றதோ அவற்றைச் சமாநாதிகரணமென்பர். ஈண்டு அஸ்த தரு சையோகம் சமவாய சம்பந்தத்தால் அஸ்தத்தில் இருக்கின்றது; காயமும் சமவாய சம்பந்தத்தால் அஸ்தத்தில் இருக்கின்றது. ஆதலாலிரண்டும் சமாநாதிகரணமாம். அவற்றிற்கும் சாமாநாதிகரணிய சம்பந்த மிருக்கின்றது. ஈண்டுக் காயமும் சையோகமும் அஸ்தத்தில் சாக்ஷாத் சம்பந்தத்தால் இருக்கின்றன; ஆதலால் சமாநாதிகரணமாம். அங்ஙனமே ஒன்று சாக்ஷாத் சம்பந்தத்தாலும் மற்றையது பரம்பரைச் சம்பந்தத்தாலும் இருக்கின், அவையும் சமாநாதிகரணமெனப்படும்; அவற்றிற்குச் சாமாநாதிகரணிய சம்பந்தம் சொல்லப்படுகின்றது. இது பிரத்தியக்ஷப் பிரமாணத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது. அஸ்ததரு சையோகத்தின் உணர்ச்சி யுண்டாகவே காய தரு சையோகத்தின் உணர்ச்சி யுண்டாகின்றது. அஸ்த தருக்களின் சையோகத்தைக் காணுறுயின் அவனுக்குக் காயதரு சையோகத்தின் உணர்ச்சி யுண்டாவதில்லை. ஆதலால் காயதரு சையோகத்திற்கு அஸ்த தரு சையோகம் காரண மாம். இது சையோகஜசையோகத்திற்கு உதாரணமாம். இச்சையோகத்தினையே காரணாகாரண சையோக ஜந்திய காரியாகாரிய சையோக மென்பர். ஈண்டு இரண்டு சையோகமுண்டு. ஒன்று அஸ்ததருக்களின் சையோகம்; அது ஹேதுசையோகமாம். மற்றையது காயதருக்களின் சையோகமாகிய பல சையோகமாம். இவ்விடத்துக் காரணமென்னும் சொல்லால் பல சையோகத்தினது ஆசிரயத்தின சமவாயிகாரணம் கொள்ளப்படுகின்றது. ஆதலால் பல சையோகத்தின் ஆசிரயம் காயம தருவென்னுமிரண்டுமாம். அவற்றுள் காயத்தின் சமவாயி காரணம அஸ்தமாம். ஆதலால காரணமெனுமசொல்லால் அஸ்தம் (கை) கொள்ளப்படுகின்றது. அகாரணமென்னும் சொல்லால் தரு கொள்ளப்படுகின்றது. ஏனெனின் காயத்திற்காவது தருவிற்காவது சமவாயி காரணம் தருவாகாதிருத்தலின் அகாரணமாம். அங்ஙனமே ஹேதுசையோகத்தின் ஆசிரயத்தால உண்டாகியது காரியம் என்னும் சொல்லாற் கொள்ளப்படுகின்றது. ஹேது சையோகத்தின் ஆசிரயத்தால உண்டாகாதது அகாரியமென்னும சொல்லால் கொள்ளப்படுகிறது. ஹேது சையோகத்தின் ஆசிரயம ஹஸ்தமும் தருவுமாம. அவற்றுள் அஸ்த ஜந்நியமாகிய காயமெதுவோ அது காரியமாம். ஹஸ்தத்தினாலும் அங்ஙனமே தருவினாலும் ஆக்கப்

படாத தரு எதுவோ அது அகாரியமாம. இவ்வாற்றாற் காரண மாகிய ஹஸ்தம அகாரணமாகிய தரு என்பவற்றின் சையோகத தால் காரியமாகிய காயம அகாரியமாகிய தரு என்பவற்றின் சையோக முண்டாகின்றது. ஆதலால இச்சையோகத்தினைக் காரண காரணசையோகஜந்நிய காரியகாரியாசையோகமென்பர். சையோகஜ சையோகம் இவ்வகையினதேயாம். பிறவகையாற் காமஜசையோக மேயாம. யாண்டுக் கபாலத்தின் தொழிலால் கபாலம் இரண்டின் சையோகம் உண்டாகின்றதோ, கபால ஸசயோகத்தால் கபாலா காயங்களின் சையோகம உண்டாகின்றதோ, ஆண்டும அது கர்மஜ சையோகமேயாம்; சையோகஜசையோகமன்று. ஏனெனின் ஏககபால த்தின் தொழிலால கபாலம் இரண்டின் சையோகம உண்டாகின்று தோ, அக்கபால காமத்தினுனே கபால ஆகாயங்களின் சையோ கமும உண்டாகின்றது. கபாலம இரண்டின் சையோகமும் கபால ஆகாயங்களின் சையோகமுமாகிய இரண்டும ஒரு க்ஷணத்தில உண்டாகின்றன. அவற்றிற் கொன்றறகொன்று காரிய காரணத் தன்மை சமபவியாது; ஆதலால கபாலம இரண்டின் சையோகத் தைப்போலக் கபால ஆகாயங்களின் சையோகமும கபாலத்தின் தொழிலானே உண்டாகுதலான் கர்மஜ சையோகமேயாம. முற கூறிய பிரகாரத்தாற் காரணகாரண சையோக ஜந்நிய காரியாகாரிய சையோகம், அந்நியதா கர்ம ஜசையோகம், அங்ஙனமே உபயகர்மஜ சையோகம் என்னும பேதததால மூவகைச் சையோகமேயுளது. சில நூலாசிரியர் சகஜ சையோகத்தினையும் அங்கீகரித்திருக்கின்றனர். எங்ஙனம்: பொன்னில மஞ்சள் நிறத்திற்கும குருத்துவத்திற்கும் ஆசிரயமான பார்த்திவ பாகத்திற்கும, அக்கினி சையோகததால் நாசமாகாத திரவியத்தன்மையின ஆசிரயத்தால் தைஜச பாகத்திற் கும் சகஜ சையோகம் உண்டு. சையோகமுடையதின் பிறப்போடு உண்டாவதனைச் சகஜசையோகமென்பர. சுவர்ணத்தைக் கேவலம பார்த்திவமெனின் நிறைமுதலிய பார்த்திவத்தின் திரவியத்தன்மை க்கு அக்கினி சையோகத்தால் நாச முண்டாகுதலான்; சுவர்ணத் தின் திரவியத்தன்மைக்கும் அக்கினி சையோகத்தால் நாசம் உண் டாகுதல்வேண்டும். கேவலம் தைஜசமெனக் கொள்ளின் பொன் மையுருவம் குருத்துவமென்பவற்றின் அபாவ முண்டாதல்வேண் டும். ஆதலால சுவர்ணத்தில் தைஜசபார்த்திவ பாகங்கள் சையுக்த மாம். மீமாம்ஸகர் நித்தியசையோகமும் அங்கீகரித்திருக்கின்றனர்.

இவ்வாற்றான் திரவியத்தின் உற்பத்தியில் அசமவாயி காரணம் அவயவ சையோகமாம். குணத்தின் உற்பத்தியில் சிலவிடத்துக் குணமும் சிலவிடத்துக் கிரியையும அசமவாயி காரணமாம். சமவாயிகாரண நிமித்த காரணங்களின் இலக்ஷணம் அதனிடத்துப் பொருந்தாது; ஆனால் சமவாயிகாரணத்தில் சம்பந்தமுடையதாய்க் காரியத்தை உண்டுபண்ணுவது யாதோ,அதுமூன்றாவதாகிய அசமவாயி காரணமா யிருத்தலின், சமவாயி அசமவாயி நிமித்தமென்னும் பேதத்தால் காரணம் மூன்று வகைப்படும. இது நையாயிக வைசேஷிகரை அநுசரித்த நூல்களில் எழுதப்பட்டுளது.

## ௬௬. இரண்டு காரணங்களை அங்கீகரித்தலோடு மூன்றாவது அசமவாயிகாரணத்தைக் கண்டித்தல்.

அங்ஙனமாயினும நியாயவைசேஷிகங்களுக்கு வேறான மதங்களில் உபாதானகாரண நிமித்தகாரண பேதத்தால இருவகைக் காரணமே அங்கீகரிக்கப்பட்டுளது. எதனை நையாயிகர் அசமவாயி காரணமென்பரோ அதனையும நிமித்தகாரணமென்றே கூறுவர். நிமித்தகாரணத்தின் இலக்ஷணம் அசமவாயிகாரணத்தில் இல்லையென்று முற்கூறியது யாதோ அதற்குச் சமாதானம் இதுவாம்:— காரியத்தின் தடஸ்தமாய்க் காரியத்தை உண்டுபண்ணுவது யாதோ அது நிமித்தகாரணத்தின் இலக்ஷணமாமென்பது மூவகைக் காரியவாதிகளின் கிரமப்படி சொல்லப்பட்டது. இருவகைக் காரணவாதிகளின் கிரமப்படியோ உபாதான காரணத்தின் வேறாய காரணம யாதோ அது நிமித்தகாரணமெனபபடுகின்றது. அநநிமித்தகாரணம அநேகவிதமாம். சிலவோ காரியத்தின் உபாதானத்திற சமவேத மாம. எங்ஙனம்: கடத்தின் நிமித்தகாரணம் கபால சையோகமாம் அது கடத்தின் உபாதானகாரணமாகிய கபாலத்திற் சமவேதமாம். சில நிமித்தகாரணமோ காரியத்தின் உபாதானத்தினது உபாதானத்திற் சமவேதமாம். எங்ஙனம்: படத்தினது உருவத்தின் நிமித்தகாரணம் தந்துவின் உருவமாம்; அது பட வுருவத்தின் உபாதானமாகிய படமெதுவோ அதன் உபாதானமாகிய தந்துவிற் சமவேதமாம். அங்ஙனமே சில நிமித்த காரணம் கர்த்தா வடிவமாகிய சேதனமாம். அது சுவதந்திரமாம். அது கடத்தின் நிமித்தகாரணம் குலாலனாவதாம. சில நிமித்தகாரணம ஜடமாம். அது கர்த்தாவினது வியாபாரத்தின் அதீனமாம். அது கடத்திற்குக் காரணம்

தண்ட முதலியவைகளாதல் போலவாம். இவ்வாற்றான் நிமித்த காரணத்துக்கு அனேக பேதங்களுண்டு. சிறிது வேற்றுமையினால அசமவாயி காரணத்தன்மையை வேறாய் அங்கீகரிக்கின், கடத்தின் காரணமாகிய கபால சையோகத்திலும் கட உருவத்தின் காரண மாகிய கபால வுருவத்திலும் காரணத் தனமையின் பேதம் அங்கீ கரித்தல் வேண்டும். ஏனெனின் கடத்தின் காரணமாகிய கபால சையோகமோ காரியத்தின் உபாதானததில் சமவேத மாம. கட உருவத்தின் காரணமாகிய கபால உருவம காரியத்தின துபாதான ததின் உபாதானத்திற சமவேதமாம. இவ்வாற்றான் விலக்ஷண காரணங்கள் உளவேனும, அவ்விரண்டினையும அசமவாயி காரணம் என்றே நையாயிகாகூறுவர். அவற்றுள்ஒன்றற்கொன்று விலக்ஷண காரணமாதல் அங்கீகரிக்கப் படுவதில்லை. அங்ஙனமே சேதன ஜட பேதததால் வேற்றுமை உண்டு. என்றாலும அவற்றை நிமித்தகாரண மென்றே கூறுவர். ஒன்றறகொன்று விலக்ஷணகாரணமாதல் அவர் களினும அஙகீகரிக்கப்படுவதில்லை. மற்றும் நிமிதத காரணத்தில் அநேக வேறுபாடுகள் உள. சில காரியகாலததது உள்ளனவாம; சில காரியகாலததின் முற்காலத்துள்ளனவாம. எங்ஙனம்: ஜலபாத்திர த்தின் சந்நிதானததால் சுவரில் சூரியப் பிரபையின் பிரதிபிமபம உண்டாகின்றது. அதில் சந்நிதானததிலுள்ள ஜலபாத்திரம நிமித்த காரணமாம். அதனை நீக்குதலால் பிரதிபிம்பததின் அபாவம் உண் டாகுதலான், சந்நிதியிலுள்ள ஜலபாத்திரம் காரியகாலத்திலிருக் கும் நிமித்த காரணமாம. பிரத்தியக்ஷ ஞானத்தில் விஷயம் நிமித்த காரணமாகின்றது. அதுவும காரியகாலத்துள்ளதாம். தண்டமுதலி யன கடத்தின் நிமித்த காரணமாம. அவை காரிய காலத்தின் முற் காலத்துள்ள நிமித்தகாரணமாம். இவ்வாறு நிமித்த காரணத்திலும் அசமவாயிகாரணத்திலும் அவாந்தரமான அனேக பேதங்கள் இரு த்தலாலும் சமவாயிகாரணத்தின் வேறாயவற்றி லிருவகைக்காரண த்தன்மையே அங்கீகரிக்கப் பட்டுளது. சில விடத்து அசமவாயி காரணத்தன்மை யுளது. சிலவிடத்து நிமித்தகாரணத் தனமை யுளது. அங்ஙனமே சமவாயகாரணத்தின் வேறாய சகல காரணங்க ளினும் ஒருவித காரணத்தன்மையினையே அங்கீகரித்தல்வேண்டும். அச்சமவாய காரணத்தின் வேறாய காரணத்தை அசமவாயி காரண மென்க, அல்லது நிமித்தகாரணமென்க. சமவாயிகாரண சம்பந்த முடைமை, சம்பந்தமின்மையென்னும்அவாந்தரபேதத்தால் வேறு

பெயரிடல் பயனற்றதாம். ஆதலால் சமவாயிகாரண நிமித்தகாரண பேதத்தால் காரணம் இருவகைத்தாம.

எங்ஙனம் அசமவாயிகாரணம் நிமித்தகாரணங்களுக்கு வெவ்வேறு பெயரினல் பிரயோஜனம் இல்லையோ, அங்ஙனமே சமவாயிகாரண நிமித்தகாரணங்களுக்கு ஒன்றற்கொன்றுள்ள வேற்றுமை உணர்ச்சியினுலும புருஷார்த்தத்தின் அடைவு உண்டாத தில்லை. உலகத்திலும காரணத்தன்மை மாத்திரமே பிரசித்தமாம். சமவாயி காரணத் தன்மை நிமித்த காரணத் தன்மைகள் பிரசித்தம் அன்று. ஆதலால் உலக வியவகாரத்தின் ஞானமுமிருவகைக்காரணத்தன்மையை நிரூபித்தற்குப் பயனுவதில்லை. ஆனல காரிய காரணத்தன்மையின் வியவகாரம உலகத்தில் உண்டாகின்றது. ஆதலால் எதன் இருப்பால் காரியத்தின்உற்பத்தி உண்டாகின்றதோ, எதன் இன்மையினுல் காரியத்தின் உற்பத்தி உண்டாகிறதில்லையோ, அப்படிப்பட்ட காரியத்திற்கு மறைப்பின்றிய முற்காலத் திருப்பது எதுவோ அது காரணமெனப்படுகின்றது. இவ்வாற்ருற் காரணத்திற்குச சாதாரண இலக்ஷணமே சொல்லுதல் வேண்டும. அதன் பேதம இரண்டை நிரூபித்தலும் நிஷ்பிரயோஜனமாம என்று ஒருவன கூறின, அச்சங்கைக்குச் சமாதானம் வருமாறு:—காரணத்தின் பேதமிரண்டினையும நிரூபித்தலால்புருஷார்த்தசித்தி அல்லது லோக வியவகாரசித்தி என்னும பிரயோஜனம இல்லையாயினும், புருஷார்த்தத்திற்கு ஏது அத்வைத ஞானமாம். அதன் உபயோகி இருவகைக்காரண நிரூபணமாம. அங்ஙனமன்ருே? சர்வஜகத்திற்கும் காரணம் பிரஹ்மமாம. காரணத்திற்கு அபின்னமாய்க் காரிய மிருத்தலால் சகல ஜகத்தும பிரஹ்மமாம; அதனின் வேறன்று. இதனைக் கேட்டு ஞான விருப்புடையோனுக்கு இத்தன்மைச்சங்கை யுண்டாகின்றது:—காரணத்திற்கு வேருய்க் காரியம இராதாயின் தண்டம் குலாலன் முதலியவற்றினின்றும கடம வேருகலாகாது என்பதாம்.

அதற்கு இது சமாதானமாம:—உபாதான நிமித்தபேதத்தால் காரணம் இரண்டுவகையினதாகின்றது. அவற்றுள் உபாதானகாரணத்திற்கு அபின்னமாய்க காரியமுண்டாகின்றது. அது மண்திரளிற்கு அபின்னமாய்க் கடமும, சுவர்ணத்திற்கு அபின்னமாய்க் கடக குண்டலாதிகளும், இரும்பிற்கு அபின்னமாய்க் கத்தி முதலியனவும்

இருத்தல்போலவாம். நிமித்தகாரணத்திற்கு அபிநநமாய்க் காரியமிராது; பிநநமாகவே இருக்கும். அங்ஙனமே பிரஹ்மமும் ஜகத்திற்கு உபாதானகாரணமாம. ஆதலால் சகல ஜகததும பிரஹ்மமேயாம்; அதனின் வேறன்று. இவ்வாறு காரணத்தினது பேதம் இரண்டின் நிரூபணம அத்வைத ஞானத்திற்கு உபயோகியாம். வேறு வகையாகக் காரணங்களுக்கு ஒன்றறகொன்று விலக்ஷணத் தன்மையை நிரூபிததல பயனிலதாம. ஆதலால தததுவஞான உபயோகியான பதாாத்ததகை நிரூபிக்கும நாலகளில காரணததின் மூன்ருவ்து பேதததை நிரூபிததல் அசங்கதமாம.

நியாய வைசேஷிகததை அநுசரிதத நூலகளில் தததுவ ஞான உபயோகியான பதார்த்தங்களைநிரூபிப்பதாகப் பிரதிஞ்ஞை செய்து, தத்துவஞானத்தில் அத்தியநதம உபயோகமிலலாதனவாகிய பதாாத்தங்களை விஸ்தாரமாக நிரூபித்தலால் பிரதிஞ்ஞா பங்கம் உண்டாகின்றது. "தததுவ ஞானத்திறகு ஏது மனனமாம; ஆத்மா பிற பதாாத்ததகின் பின்னமாம; ஆதமத தன்மையால், எது பிறிதின் பின்னமாகாது பிறிதாகுமோ அது ஆத்மாவன்று, கடமபோல என்னும வெதிரேகி அநுமானத்தால் ஆத்மாவினிடத்துப் பிறிதின் பேததகின் அநுமிதி ஞானம உண்டாகின்றது. அது மனனமெனபபடுகின்றது. பிற பதாாததங்களின் ஞானம் இன்றி ஆத்மாவினிடத்துப் பிறபேதத்தின் ஞானம் சமபவியாது. ஏனெனின பிரதியோகி ஞானமின்றிப் பேத ஞானமுண்டாகாது. ஆதலால் ஆத்மாவினிடததுப் பிற பேதத்தின் அநுமிதி வடிவமாகிய மநநததிறகு உபயோகியான பிற பதார்த்தங்களின் நிரூபணமும தததுவஞானததிற்கு உபயோகியாம" என்று தாாக்கிகர் கூறுகின்றனர். அது சமபவியாது. ஏனெனின், கேட்ட அர்த்ததகினை நிச்சயித்தற்கு அநுகூலமான பிரமேய சந்தேகத்தை நிவாத்திககும யுக்தியைச சிநதித்தலே மனனமென்பர். பேத ஞானததால் அனாத்தம உண்டாகின்றது. "ஸவ-ஂ௦வ௵கிஂ ஸூ-நிசசயமாக இவை யாவும பிரஹ்மம" என்றன் முதலிய வாககியங்களால் அபேதததில் சகல வேதங்களுக்கும் தாற்பரியமாம். "த்வீதீயாத்வை பயம்பவதி- இரணடாவதனுல் பயமுண்டாகின்றது, ம்ருத்யோஸ்ஸ ம்ருத்யுமாப்நோதிய இஹ நாநேவ பச்யதி- எவன் ஈண்டுநாநாவைப்போலக் காண்கிருனே, அவன் மிருத்தியுவி

ஷின்றும் பிருத்தியுவை அடைகின்றான்" என்றன் முதலிய வேத வாக்கியங்களால் பேத ஞானம் நிந்திக்கப்பட்டுளது. ஆதலால் பேதஞானத்திற்கு நேராகவாவது தத்துவ ஞானவாயிலாகவாவது புருஷார்த்தத்தை உண்டுபண்ணுந் தன்மை சம்பவியாது. மனன பதத்தாலும் ஆத்மாவினின்றும் பிற பதார்த்தங்களினது பேதத்தின் உணர்ச்சி உண்டாகாது. மனனபதத்திற்குச் சிந்தித்தன்மாத்திரம பொருளாம. வாக்கியாந்தரத்தின் அநுரோதத்தால் அபேத சிந்தனத்தில் மனன சப்தத்திற்குப் பரியவசானம் (முடிவு) உண்டாகின்றது. எவ்வாற்றானும் ஆத்மாவினின்றும் பிற பதார்த்தங்களின் வேற்றுமை மனன சப்தத்திற்குப் பொருளாகாது. ஆனால் பிற பொருட்களின் ஞானத்தினாலேயே புருஷார்த்த சாதனமாகிய தத்துவ ஞானத்தின் அடைவு உண்டாகுமாயின், சகல புருஷர்களுக்கும தத்துவ ஞானத்தின் அடைவு உண்டாதல் வேண்டும், அல்லது ஒருவருக்கும தத்துவ ஞானத்தின் அடைவுண்டாகாது. அஃது எங்ஙன மெனின்:— பிற பொருட்களின் சாமானிய ஞானம் அபேக்ஷிக்கப் படுவதாயின், சாமானிய ஞானம எல்லாப் புருஷர்களுக்கு மிருத்தலால, பிறபதார்த்தங்களின் ஞான பூர்வகமான பிறவற்றின் பேதஞானத்தால் சகலருக்கும தத்துவ ஞானமுண்டாதல் வேண்டும. சகல பதார்த்தங்களுக்கும அசாதாரண தர்ம சுவரூபமான விசேஷ ரூபத்தால் பிறவற்றின ஞானம் அபேக்ஷிக்கப் படுவதாமெனின், சாவஞ்ஞனாகிய ஈசுவரனன்றி மற்றெவருக்கும் அசாதாரண தாமத்தால் எல்லாப் பிற பதார்த்தங்களின் ஞானமும் நிகழாது. ஆதலின் பிறவற்றின் உணர்ச்சி சம்பவியாமையால் பிறபேத உணர்ச்சி உண்டாகாமையின் ஒருவருக்கும் தத்துவஞான முண்டாகாது. இதனால் பிரமாண முதலியவற்றின் நிரூபணமின்றி அநேக பதார்த்தங்களை நிரூபித்தல் பயனில்லாததாதலால் காரணத்தில மூன்றாவது பேதத்தை நிரூபித்தல் அபேக்ஷிக்கப்படாததாம்.

"பாவகாரியத்தின் உற்பத்தி மூவகைக்காரணத்தா லுண்டாகின்றது. ஐவகை அபாவமுண்டு. அவற்றுள் பிராகபாவமோ அநாதி சாந்தமாம். ஆதலால் அதற்கு நாசம உண்டாகின்றது; உற்பத்தி உண்டாகிறதில்லை. அந்நியோந்நியாபாவமும் அத்தியந்தாபாவமும் அநாதி அநந்தமாம. ஆதலால் அவற்றிற்கும உற்பத்தி உண்டாகிறதில்லை. சாமயிகாபாவம் சாதி சாந்தமாம். அதற்கு உற்பத்தி நாசம்

இரண்டுமுண்டு. பிரத்துவம்சாபாவம் அநந்த சாதியாம். ஆதலால் அதற்கு நாசமில்லை; உற்பத்தியுண்டு. இவ்வாற்றான் இரண்டு அபாவங்களுக்கும் உற்பத்தி உண்டாகுதலான் இரண்டும் காரியமாம். அவற்றிற்குச் சமவாயி காரண அசமவாயி காரணங்களோ சம்பவியா. ஏனெனின் எதனிடத்துச் சமவாய சம்பந்தத்தால் காரியமுண்டாகின்றதோ அது சமவாயிகாரணமெனப் படுகின்றது. எதனிடத்தும் சமவாயசம்பந்தத்தால் அபாவமிராது. ஆதலால்அதற்குச்சமவாயிகாரணம் சம்பவியாது. அசமவாயிகாரணத்தில் சம்பந்தமுடையதாய்க் காரியத்தை உண்டுபண்ணுவதெதுவோ அது அசமவாயிகாரணமெனப் படுகின்றது. சமவாயி காரணம இன்மையால் அதனிடத்துச் சம்பந்தித்துள்ளதாய்க்காரியத்தை யுண்டுபண்ணுவதொன்று சம்பவியாமையின், அபாவத்திற்கு அசமவாயி காரணமும் சம்பவியாது. ஆதலால் கேவல நிமித்தகாரணத்தால் சாமயிகாபாவமும் பிரத்துவம்சாபாவமும் உண்டாகின்றன. பூதல முதலிய தேசத்தில் கடத்தின் சாமயிகாபாவத்திற்குப் பூதலமுதலிய தேசத்தினின்றும் கடத்தை நகாத்துதல் நிமித்த காரணமாம். கடத்தின் பிரத்துவம்ஸாபாவத்திற்கு நிமித்த காரணம் கடமாம். அங்ஙனமே கடத்தோடு தண்டு முதலியவற்றின் சையோகமும் [illegible]த்துவம்சத்திற்கு நிமித்தகாரணமாம். இவ்வாற்றான் அபாவ காரியமோ நிமித்த காரணமாத்திரத்தால் பெறப்படுவதாம். அங்ஙனமாயினும் எல்லாப் பாவகாரியங்களும் மூவகைக் காரணத்தாற் பெறப்படுவனவா மென்பது நியமம்'' என்று இவ்வாறு தார்க்கிகர் கூறுகின்றனர். இத்தார்க்கிகரது வசனத்திற்குச் சிருஷ்டியின் ஆதி காலத்தில் செய்யவேண்டுமெனனும ஈசுவரனது விருப்பத்தால் பரமாணுவில் எந்தத்தொழில் உண்டாகின்றதோ அதன்கண் விசாரமுண்டு. ஏனெனின் அப்பரமாணுவின் தொழிலுக்குப் பரமாணு சமவாயி காரணமாம். ஈசுவர இச்சை முதலியன நிமித்த காரணமாம். பரமாணுவில சம்பந்தமுள்ள தொன்று கிரியையையுண்டு பண்ணுவ தாமாயின் அசமவாயி காரணமாம். அப் பரமாணுவின்கண்ணே சம்பந்த முள்ளதாய் அத்தொழிலை உண்டுபண்ணுவதொன்று இல்லையாகலின், சிருஷ்டியின் ஆரம்பத்தில பரமாணுவின் கிரியை காரணமிரண்டினுல் ஆக்கப்படுவதாம. காரண மூன்றினுல் ஆக்கப்படுவ தன்று. ஆதலால் தார்க்கிகா கூறிய நியமம் பொருந்தாது. சித்தாந்த மதத்திலோ எல்லாப் பாவகாரியங்க

ளூம் உபாதான நிமித்த காரணங்களால் ஆக்கப் படுவனவாமென் பது நியமம். அதற்கு எவ்விடத்தும் வியபிசாரம் இல்லை. யாண்டுக் காரணம் மூன்றினால் ஆக்கப்பட்ட காரியத்தினைக் கூறுகின்றார்க ளோ, ஆண்டும் தார்க்கிகரால் கொள்ளப்பட்ட அசமவாயி காரண மும் நிமித்தகாரணமேயாம். ஆதலால் சகல பாவ காரியங்களுக் கும இருவகைக் காரணத்தால் பெறப்படுந தன்மையுளது. இவ் வாற்றான் உபாதானம் நிமித்தமென்னும் வேறுபாட்டாற் காரணம் இருவகையின தாகின்றது. சாதாரணம் அசாதாரணம் என்னும் பேதத்தாலும் காரணத்திற்கு இரண்டு பேதம் கூறுவர். ஈசுவரன் முதலிய ஒன்பதும் சாதாரண காரணங்களாம். அவற்றிற்கு வேறாகிய கட முதலியவற்றின் கபாலமுதலியன அசாதாரண காரணங்களாம. அவற்றுள்ளும சில நிமித்த காரணமும சில உபாதான காரணமு மாம். உபாதானகாரண நிமித்த காரணங்களுககு வேறாகிய கார ணம் அப்பிரசித்தமாம்.

## கoo. விருத்திஞானத்தின் உபாதான நிமித்த காரணங்களும், சாமானிய லக்ஷணமும்.

அந்தக்கரணத்தின் ஞான வடிவ விருததிககு உபாதான கார ணம் அந்தக்கரணமாம். பிரததியக்ஷ முதலிய பிரமாணங்களும் அங்ஙனமே இந்திரிய சையோகமுதலிய வியாபாரங்களும் நிமித்த காரணமாம். ஈசுவரனது ஞான வடிவவிருத்திக்கு உபாதான கார ணம் மாயையாம்; அதிருஷ்ட முதலியன நிமித்தகாரணமாம். பிரம விருத்திக்கு (மயக்கவுணாசசிக்கு) உபாதான காரணம அவித்தை யும், நிமித்தகாரணம் தோஷமுமாம். இவ்வார்த்தை கியாதி நிரூ பணத்தில் விளக்கமாகும். இவ்வாறு விருத்தியின் காரணத்தை அறிந்துகொள்க.

விருத்தியின் இலக்ஷணம் நூலின் ஆரமபத்திற் கூறப்பட் டிருக்கின்றது. விஷயத்தைப் பிரகாசிப்பிததற்கு ஏதுவாகிய அந்தக் கரண அவிததைகளின் பரிணாமம் விருத்தியெனப்படும் என்று விரு த்தியின் இலக்ஷணம் சொல்லப்பட் டிருக்கின்றது. சில நூல்களில் அஞ்ஞானத்தைக் கெடுக்கும பரிணாமம் விருத்தி எனப்படுகின்றது. பரோக்ஷ ஞானததினாலும் அசத்துவா பாதக அஞ்ஞானமசத்தின் நாசம் உண்டாகின்றது. அல்லது விஷய சேதநத் துள்ள அஞ்

ஞானத்தின் நாசமோ அபரோக்ஷ ஞானமின்றி உண்டாகிறதில்லை. பிரமாததிரு சேதநத்துள்ள அஞ்ஞானத்தின் நாசம் பரோக்ஷ ஞானததினுலும்உண்டாகிறது. ஆதலால் பரோக்ஷவிருத்தியில் முற் கூறிய லக்ஷணததின் வியாப்தி இல்லை. அங்ஙனமாயினும் சுகதுக் கங்களின் ஞான வடிவமாகிய விருத்தியிலும, மாயாவிருததி வடி வினதாகிய ஈசுவரஞானததிலும், அங்ஙனமே கிளிஞ்சில வெள்ளி முதலியவற்றை விஷயிக்கும் பிரம ரூப அவித்தியா விருததியிலும் முற்கூறிய லக்ஷணத்தின் வியாப்தி இருக்கினறது. ஏனெனின் முத லில் அறியப்படாத சுக துக்காதிகள் உண்டாகிப் பின்னர் அவற் றின் ஞானம் உண்டாகுமாயின் சுக முதலியவற்றின் ஞானத்தால் அவற்றின் அஞ்ஞானததிற்கு நாசம சமபவிக்கும; அறியப்படாத சுகதுக்காதிகளில்லை. ஆனுல் சுகதுக்காதிகளும் அவற்றின் ஞான மும் ஒரேகாலததில் உண்டாகின்றன. ஆதலாலறியப்படாத சுகதுக் காதிக ளிலலாமையின்சுகதுககாதிகோசரவிருததியால் அஞ்ஞான த்தின்நாசம சமபவியாது. அங்ஙனமே ஈசுவரனுக்கு அசாதாரண வடிவத்தாற்சகலபதாாததங்களும் எப்போதும பிரததியக்ஷமாய்க் காணப்படுகினறன. ஆதலால் அஞ்ஞானத்தி னின்மையால் மாயை யின் விருத்திவடிவமாகிய ஞானத்தினுலும் அஞ்ஞானத்தின் நாசம் சம்பவியாது. கிளிஞ்சில் வெள்ளி முதலிய மித்தியா பதார்த்தங்க ளும அவற்றின் ஞானமும் ஒரே காலத்தில் உண்டாகின்றன. ஆத லால் பிரமவிருத்தியி (மயக்க ஞானத்தி) னுலும் அஞ்ஞானத்தின் நாசம் உண்டாகாது. அங்ஙனமே தாரையாய்ச செல்லும விருத்தி உண்டாகுமாயின் ஆண்டும் முற்கூறிய லக்ஷணத்திற்கு இரண்டா வது முதலிய விருத்திகளில் அவ்வியாப்தி இருக்கின்றது. ஏனெ னின் ஞானதாரை உண்டாகுமாயின், ஆண்டு முதல் ஞானத்தால் அஞ்ஞானததின்நாசம் உண்டாகவே இரண்டாவது முதலியஞான த்திறகு அஞ்ஞானததைக் கெடுக்குந் தன்மை சம்பவிக்கிறதில்லை. ஆதலால் பிரகாசிப்பிக்கும் பரிணுமத்தைவிருத்திஎன்பர் என்பதன் தாற்பரியமிதுவாம்:—இருக்கிறது என்னும் வியவகாரத்திற்கு ஏது வாகிய அவித்தை அந்தக்கரணங்களின் பரிணுமம் யாதோ அதுவிரு த்திஎனப்படுகின்றது.பிரகாசிப்பிக்கும் பரிணுமத்தினைவிருத்திஎனி னும, அறியப்படாத பதார்த்தங்களைக் கோசரம் செய்யும் விருத்தி யிற்றான் பிரகாசிப்பிக்குந் தன்மை உண்டு. மறைக்கப்படாத தைக் கோசரிக்கும் விருத்தியில் பிரகாசிப்பிக்குநதன்மை இல்லை.

ஏனெனின் மறைக்கபபடாத சேதனத்தின் சம்பந்தத்தினாற்றானே விஷயத்தைப் பிரகாசிப்பித்தல் சம்பவித்தலால் விருத்தியில் பிரகாசிப்பிக்குந் தன்மைக் கற்பனை அயோக்கியமாம். ஆதலால் அஞ்ஞானத்தினைக் கெடுக்குந்தன்மையின்றி வேறுவித பிரகாசிப்பிக்குந்தன்மை சமபவியாமையால், இரண்டாவது லக்ஷணத்திற்கும் முதல் லக்ஷணத்திற் குண்டானது போல சுக முதலியவற்றைக் கோசரிக்கும விருத்தியில் அவ்வியாப்தி உண்டாகும். ஆதலால் இருக்கிறதென்னும வியவகாரத்திற்கு ஏதுவான அவித்தை அந்தக்கரணங்களின் பரிணாமம் விருத்தி எனப்படுகின்றது. பரோக்ஷ விருததியிலும் இருக்கிறதென்னும் வியவகாரத்திற்கு ஏதுவாந் தன்மை வெளிப்படையாம். கடமுதலியவற்றை விஷயிக்கும் அந்தக்கரண விருத்தியினைக் கட முதலியவற்றின் ஞான மென்பர். அத்வைத சித்தாந்ததில் விருத்தி யவச்சின்ன சேதநத்தை ஞானமென்பா. அபாதித(வாதிக்கப்படாத)விருத்தி யவச்சின்ன சேதநத்தைப் பிரமாஞானமென்பர். பாதிக்கப்படுவனவாகிய ரஜ்ஜுசர்ப்ப முதலியவற்றைக் கோசரிக்கும விருத்தி யவச்சின்ன சேதநத்தை அப்பிரமாஞானமென்பா. அங்ஙனமாயினுமசேதநத்தில்ஞானமென்னும் சொல்லின் பிரயோகமும், அங்ஙனமே பிரமை அப்பிரமை என்னும் சொற்களின் பிரயோகமும் விருத்திசம்பநதத்தால் உண்டாகின்றன. ஆதலால் விருத்தியினையும் அநேக இடங்களில் ஞானமென்பர். இவ்வாற்றாற் பிரமை அப்பிரமை என்னும் பேதத்தால் இருவகை விருத்தி சொல்லப்பட்டது.

## கoக. பிரத்தியக்ஷத்தினது இலக்ஷணத்தோடு பிரமை அப்பிரமை வடிவினதாகிய விருத்தி ஞானத்தின் பேதம்.

அப்பிரமையும் யதார்த்தம், அயதார்த்தம் என்னும் பேதத்தால் இருவகையாகச் சொல்லப்பட்டது. ஈசுவரனது ஞானமும் சுகதுக்க முதலியவற்றை விஷயஞ்செய்யும் ஞானமும் யதார்த்த அப்பிரமையாம். சுத்திவெள்ளி முதலிய பிரமம் அயதார்த்த அப்பிரமையாம். யாது பிரமாணஜந்நிய யதார்த்த ஞானமாகின்றதோ அது பிரமையாம். ஈசுவரஞான முதலியன பிரமாண ஜந்நியமன்று; ஆகலின் பிரமை அன்று. தோஷஜந்நியமன்றாகலின் பிரமமு (பிராந்தியு) மன்று. அநேக நூல்களிலோ பிரமைக்கு வேறு இலக்கணமே சொல்லப்பட் டிருக்கின்றது. அதன் அநுசாரமாகவோ ஈசுவர

ஞானமுதலியனவும் யதார்த்த ஞானமாகிய பிரமையாம். ஆனால் யதார்த்த அயதார்த்தபேதத்தால் ஸ்மிருதி இருவகையினதாம். அவ்விரண்டுவகைப் பிரமையும் இல்லாதவர்களது மதத்தில் பிரமையின் இலக்ஷணமிதுவாம். பாதிக்கப்படாத அர்த்தத்தை விஷயஞ்செய்வதாகிய ஸ்மிருதியின் வேறாகிய ஞானம் எதுவோ அது பிரமை எனப்படுகின்றது. இப்பி வெள்ளி முதலியவற்றின் ஞானம் ஸ்மிருதியின் வேறாம். அபாதித அர்த்தத்தை விஷயஞ்செய்யாது பாதிக்கப்படும் பொருளை விஷயஞ் செய்கின்றதாகலின் பிரமை அன்று. பாதிக்கப்படாத பொருளை விஷயஞ் செய்வது ஸ்மிருதி ஞானமுமாம். ஸ்மிருதி ஞானத்தில் பிரமை வியவகாரம் இல்லை. ஆதலால ஸ்மிருதிக்கு வேறாய்ப் பாதிக்கப்படாதபொருளை விஷயஞ்செய்யும ஞானம் எதுவோ அது பிரமை எனப்படும். அநுபவ யதார்த்த ஞானத்தைப்போல யதார்த்த ஸ்மிருதியும் சம்வாதிப் பிரவிருத்தியை உண்டுபண்ணுவதாயிருத்தலின் ஸ்மிருதி சாதாரணமே பிரமையின் இலக்ஷண மாதல்வேண்டும். அங்ஙனமாயினும் சம்வாதிப் பிரவிருத்திக்கு உபயோகியாகிய பிரமாதன்மை ஸ்மிருதியினும உளது. அந்தப் பிரவிருத்திக்கு உபயோகியாகிய பிரமாத்தன்மையோ பாதிக்கப்படாதபொருளைக்கோசரிக்குந்தன்மை வடிவினதாயினது. பிரமாவியவகாரத்திற்கு உபயோகியாகிய பிரமாத்தன்மை ஸ்மிருதியில் இல்லை. ஏனெனின் இலௌகிக சாஸ்திரீய பேதத்தால் வியவகாரத்திற்கு இரண்டு பேதமுண்டு. சாஸ்திரத்திற்குப் புறம்பாக உலகினர் எந்தச் சொற்பிரயோகம் செய்கின்றனரோ, அது இலௌகிக வியவகாரமெனப்படுகின்றது. சாஸ்திரத்தின்பரிபாஷையால் எந்தச் சப்தப் பிரயோகம் செய்யப் படுகின்றதோ, அது சாஸ்திரீய வியவகாரமெனப்படுகின்றது. சாஸ்திரத்திற்குப் புறம்பாகவோ யாரும் பிரமாவியவகாரம் செய்வதில்லை. ஓர் பண்டிதன் அங்ஙனமே சப்தப்பிரயோகஞ் செய்வானாயின், சாஸ்திரத்தின் பரிபாஷையின் சமஸ்காரத்தால் செய்கின்றான். ஆதலால் கேவலம் சாஸ்திரீயம் பிரமாவியவகாரமாம். பிராசீன நூலாசிரியர் ஸ்மிருதிக்கு வேறாய யதார்த்த ஞானத்தின் கண்ணேயே பிரமா வியவகாரம் செய்திருக்கின்றனர். ஆதலால் ஸ்மிருதியின் வேறுபட்டதாகவே பிரமையின் இலக்ஷணமும் சொல்லுதல் வேண்டும். "யதார்த்தாநுபவம் பிரமை" எனப் பிரமையின் இலக்ஷணத்தைப் பிராசீன ஆசாரியர்கள் எழுதி இருக்கின்றனர். ஸ்மிருதிக்கு வேறாகிய

ஞானத்தை அநுபவமென்பர். ஆதலால் ஸ்மிருதியில் பிரமா வியவகாரம் இஷ்டமன்று. பிரத்தியக்ஷ முதலிய ஞானங்களுக்கு விலக்ஷணம் ஸ்மிருதி ஞானமாம. பிரத்தியக்ஷமுதலிய சகல ஞானங்களினும் அநுபவத்தன்மை யுண்டு; ஸ்மிருதியில் இல்லை. ஆதலால் அநுபவத் தன்மையின் உண்மை இன்மைகளால் பிரத்தியக்ஷமுதலியனவும ஸ்மிருதியும ஒன்றற் கொன்று விஜாதீயமாம். எங்ஙனம: பிரத்தியக்ஷ அநுமிதி சாப்தமுதலிய ஞானங்களில் பிரத்தியக்ஷத்தன்மை அநுமிதித் தன்மை சாப்தத் தன்மை முதலிய விலக்ஷணதாமமிருத்தலால் பிரத்தியக்ஷமுதலியஞானங்கள்ஒன்றற்கொன்று விஜாதீயமாம். விஜாதீயப் பிரமைகளுக்குக் கரணங்களாகிய பிரமாணங்களும் பிரத்தியக்ஷம் அனுமானம சப்தம் முதலியனவாகவே வேறுபட்டிருக்கின்றன. அங்ஙனமே சகல அநுபவத்திற்கும் விஜாதீயமாய் ஸ்மிருதி இருக்கின்றது. அதற்குக் காரணம அநுபவமாம். அது எப்பிரமைக்கும் கரணம் அன்று; ஆகலின் பிரமாணமன்று. "வியாப்தியின் பிரத்தியக்ஷம் அநுமிதிக்குக் கரணமாயிருத்தலின், அநுமானப் பிரமாணமாம். அங்ஙனமே பதத்தின் பிரத்தியக்ஷம் சபதப் பிரமாணமும கவயத்தில் கோவினது ஒப்புமையின் பிரத்தியக்ஷம் உவமானப் பிரமாணமுமாம. பிரத்தியக்ஷ ஞானமும் அநுபவத்தின்விசேஷமே யாகலின் அநுபவம் பிரமாணமன்று" எனக் கூறுதல் அசங்கதமாம:— அங்ஙனமாயினும் வியாப்தி ஞானத்தன்மை வடிவததான் வியாப்திஞானம் அநுமிதிக்கு ஏதுவாம். அநுபவத்தன்மை வடிவத்தான்வியாப்திஞானமஅநுமிதிக்கு ஏதுவன்று. அங்ஙனமே பதப்பிரத்தியக்ஷமும்சாதிருசிய ஞானமும் அநுபவத்தன்மைவடிவத்தான் சாப்தப் பிரமை உவமிதிப்பிரமைகளுக்கு ஏது வன்று. ஸ்மிருதிஞானத்தில் அநுபவத்தன்மை வடிவத்தான் பூர்வ அநுபவம ஸ்மிருதிக்கு ஏதுவாம; ஆதலால் பிரமாணமன்று. ஸ்மிருதி ஞானத்தையும பிரமையெனின் விஜாதீயப் பிரமைக்குக் கரணம் வேறு பிரமாணமாகின்றது. ஆதலால் நியாய சாஸ்திரத்திலோ அநுபவமென்பதனைப் பஞ்சப் பிரமாணமாகச சொல்லுதல் வேண்டும. பட்டவேதாந்த மதங்களில் ஏழாவது பிரமாணமாகச சொல்லுதல்வேண்டும. ஆதலால் எல்லாநூலாசிரியர்களுக்கும் ஸ்மிருதியில் பிரமா வியவகாரம் இஷ்டம் இன்று. எவரேனும் யதார்த்த ஞானமாத்திரத்தில் பிரமா வியவகாரம் அங்கீகரிக்கின், அதை அநுசரித்துப் பிரமையின் இலக்ஷணத்தில் ஸ்மிருதி

க்கு வேறுயவென்று புகுத்தல்வேண்டா. பாதிக்கப்படாத பொருளினை விஷயஞ்செய்யும்ஞானம் பிரமை எனப்படுகின்றது. பிராந்தி அநுபவத்தால் தோன்றிய அயதார்த்த ஸ்மிருதியோ பாதிக்கப் படும் பொருளினை விஷயஞ்செய்கிறது; ஆதலால் அதில் அதிவியாப்தியின்று. யதார்த்தஅநுபவத்தால் தோன்றிய ஸ்மிருதியில் லக்ஷணம செல்லுமாயின், ஆண்டுப் பிரமா வியவகாரம் இஷ்டமாகலின் அதிவியாப்தியின்று. இலக்ஷியமல்லாததன்கண் இலக்ஷணம்சென்றால் அதிவியாப்தி ஆகின்றது. யதாரத்த ஸ்மிருதியும இலக்ஷியமாகலின் அதிவியாபதி இன்று. இமமதாநுசாரமாக யதாரத்த அயதார்த்த பேதத்தால் விருத்தி இருவகையாம். யதாரத்தத்தினைப் பிரமை என்பர்; அயதார்ததததினை அப்பிரமை என்பர். இமமதத்தில் பிரமைக்கு ஏழுபேதமுண்டு:—பிரத்தியக்ஷம, அநுமிதி, சாப்தி, உபமிதி, அநுபலப்தி என்பன ஆறுபேதமாம. அங்ஙனமே யதார்த்த ஸமிருதியும் பிரமையின் ஏழாவது பேதமாம். ஆனால் எல்லா நூல்களுக்கும இம்மரியாதை உண்டு; ஸ்மிருதியில் பிரமாவியவகாரமில்லை. ஆதலால் பிரததியக்ஷமுதலிய வேறுபாட்டால் பிரமை வடிவினதாகிய விருத்தி அறுவகையினதாம். பாகியம் ஆந்தரம என்னும பேதத்தால் பிரத்தியக்ஷப்பிரமை இரண்டுவகையினதாம. பாதிக்கப் படாத பாகிய பதார்த்தத்தைக்கோசரிக்கும் விருத்தி பாகியப்பிரத்தியக்ஷபிரமை எனப்படுகின்றது. சுரோத்திரமுதலிய பஞ்சேந்திரியங்களால் ஐவகைப் பாகியப் பிரத்தியக்ஷப் பிரமை யுண்டாகின்றது. சிலவிடததுச சப்தத்தினாலும் பாகிய கோசர அபரோக்ஷவிருத்தி யுண்டாகின்றது. எங்ஙனம் "பத்தாமவன் நீ" என்னும சப்ததால் ஸ்தூலசரீரததின் அபரோக்ஷ ஞானம் உண்டாகின்றது. இவ்வாறு காரணபேதத்தால் பாகியப் பிரததியக்ஷப் பிரமைக்கு ஆறுபேதம் உண்டு. சில நூலாசிரியா அநுபலப்திப் பிரமாணததால் உண்டாகிய அபாவகோசர விருத்தியினையும் அபரோக்ஷ விருத்தி என்பர். அவாகள்மதத்தில் சுரோத்திரேநதிரியமுதலிய ஐந்து இநதிரியங்களும், சப்தமும், அங்ஙனமே அநுபலப்தியும் ஆகிய ஏழும பாகியப் பிரததியக்ஷப் பிரமைக்குக் காரணமாம. ஆதலால் பாகியப்பிரத்தியக்ஷப்பிரமை ஏழுவிதமாம். ஆனால் இவ்வாததம முன் எழுதப்பட்டிருக்கின்றது. தர்மாதாமங்களைபபோலப்பிரததியக்ஷயோக்கியதை அபாவததின்கண்ணில்லை. ஆதலால் விருத்தி அவசின்னசேதநத்தோடு அபாவ அவச்சின்ன சேதநத்திற்கு அபேதம் உண்டாயி

·னும் அபாவகோசர விருத்தி அபரோக்ஷம் அன்று. ஆனால்அநுமிதி முதலியவற்றைப்போல அநுபலப்திப் பிரமாணத்தினாலுண்டாகிய அபாவகோசர விருத்தி பிரத்தியக்ஷ விருத்தியின் விலக்ஷணமாம். ஆதலால் பாகியப் பிரத்தியக்ஷப் பிரமைக்கு ஆறு பேதம் உண்டு; ஏழு இல்லை. ஆந்தரப் பிரத்தியக்ஷப் பிரமையும் இருவகையினதாம். ஒன்று ஆத்மகோசரம்; மற்றது அநாதமகோசரம். ஆத்மகோசரமும் இருவகையினதாம். ஒன்று சுத்தாததுமகோசரம்; மற்றையது விசிஷ்டாத்துமகோசரம. சுத்தாத்மகோசரமும் இருவகைததாம். ஒன்று பிரஹ்ம அகோசரம்; மற்றொன்று பிரஹ்மகோசரம். துவம்பதார்த்தத்தை அறிவிக்கும வேதாந்த வாக்கியத்தால் "சுத்தன் பிரகாசன் யான்" என்று அந்தக்கரண விருத்தி உண்டாகின்றது. அந்த விருத்திதேசத்திற்றானே அந்தக்கரண உபஹித சுத்தசேதநமிருக்கின்றது. ஆதலால் விருத்தியவச்சின்ன சேதந விஷயாவச சின்ன சேதநங்களுக்கு அபேத மிருத்தலின் அவ்விருத்தி அபரோக்ஷமாம். அவ்விருததிக்கு விஷயமாகிய சுத்த சேதநத்தில் பிரஹ்மத் தன்மையும இருககினறது; ஆனால் பிரஹ்மாகாரவிருத்தி உண்டாக வில்லை. ஏனெனில் அவாநதர வாக்கியத்தால் விருத்தி உண்டாயிருக்கிறது. மகாவாக்கியததால் உண்டாகுமாயின் பிரஹ்மாகாரமும் உண்டாகும். ஏனெனின், சத்தத்தால் உண்டாகிய ஞானத்தின் இது சுபாவமாம் :—சந்நிதிப்பட்ட பதார்த்தத்தினை எவ்வடிவத்தான் சப்தம் அறிவிக்கின்றதோ, அவ்வடிவத்தினையே விஷயஞ் செய்கின்றது. எவ்வடிவத்தான் சப்தம் உசசரிக்கப்படவில்லையோ, அவ்வடிவத்தால் சப்தத்தாற் றோன்றும் ஞானம விஷயஞ்செய்கிற தில்லை. எங்ஙனம:பத்தாமவனைநோக்கி "தசமன் இருக்கின்றான்" னென்பதாகக் கூறுமிடததுத் "தசமன்யான்" என்றிவ்வாறுசுரோதாவுக்கு ஞானம் உண்டாகிறதில்லை. தசமனிடத்து ஆத்மத் தன்மையை அறிவிக்கும சப்தமின்மையால் ஆதமத்தன்மையின் ஞானம் உண்டாகாததுபோல ஆத்மாவினிடத்தும் பிரஹ்மத்தன்மை எப்போது மிருக்கினும, பிரஹ்மத்தன்மையை அறிவிக்கும் சத்தமின்மையால் ஞானம் உண்டாகிறதில்லை. ஆதலால் முற்கூறிய விருத்தி பிரஹ்ம அகோசர சுத்தாத்மகோசர ஆந்தரப் பிரத்தியக்ஷப்பிரமையாம்.

பிரத்தியக்ஷப் பிரசங்கத்தால் இச்சங்கையுண்டாகின்றது:— சித்தாந்தத்தில் இந்திரியஜந்நியஞானம் பிரததியக்ஷமாகின்றதென்பதன் அங்கீகாரம இல்லை. ஆனால் விருத்தி அவச்சின்ன சேதநத்

தோடு விஷயாவச்சின்ன சேதனத்தின் அபேதம் ஞானத்தின் பிரத்தியக்ஷத்தன்மைக்கு ஏதுவாம். யாண்டு இந்திரிய சம்பந்தம் கடாதிகளுக்கு உண்டாகின்றதோ, ஆண்டு இந்திரிய வாயிலாக அந்தக்கரணத்தின் விருத்தி வெளியிற்சென்று விஷயாகாரத்தின் சமானாகாரமாய் விஷயத்தோடு சம்பந்தம் உடையதாகின்றது. ஆதலால் விஷயசேதன விருத்தி சேதநங்களின் உபாதி ஓரிடத்திருத்தலால் உபஹிதசேதநத்திற்கும் அபேதமுண்டாகின்றது. அங்ஙனமே சுகமுதலியவற்றின ஞானமும் இந்திரியஜந்யமன்று; சுத்தாத்மஞானமும் சப்தஜந்யமாம்; இந்திரியஜந்யமன்று. என்றாலும் விஷயசேதநத்திற்கும் விருத்திசேதநத்திற்கும் பேதமில்லை. ஏனெனின்சுகாகாரவிருத்தி அந்தக்கரணதேசத்திலிருக்கின்றது;சுகமும் அந்தக்கரணத்தி லிருக்கின்றது. ஆதலால் விருத்தி உபஹிதசேதந விஷய உபஹிதசேதநங்களுக்கு அபேதமுண்டு.அங்ஙனமே ஆத்மாகாரவிருத்திக்கு உபாதானகாரணம் அந்தக்கரணமாம். அந்தக்கரண உபஹிதசேதநத்திற்கு எதிர்முகமாயிருக்கின்றது; ஆதலால் ஆத்மாகார விருத்தியும் அந்தக்கரண தேசத்தி லுண்டாகின்றது. அவ்வந்தக்கரணமே சுத்தாத்மாவுக்கு உபாதியாம். இவ்வாற்றான் இரண்டுபாதிகளும் ஓரிடத்திருத்தலால் விருத்திசேதந விஷயசேதநங்களுக்கு அபேத முண்டாகின்றது. ஆதலால் சுகாதிஞானமும் சுத்தாத்மஞானமும் பிரத்தியக்ஷ ரூபமாம். ஈண்டு இதுநிச்சயம்:— யாண்டு விஷயத்திற்குப் பிரமாதாவோடு விருத்திவாயிலாகவாதல் நேராகவாதலசம்பந்தமுண்டாகின்றதோ, ஆண்டு அவ்விஷயத்தின் ஞானம்பிரத்தியக்ஷமாம்.அவ்விஷயமும் பிரத்தியக்ஷமெனப்படுகின்றது. எங்ஙனம்: கடத்தின பிரத்தியக்ஷஞானம் உண்டாகும்போது "கடம் பிரத்தியக்ஷம்" என்னும் வியவகாரம் உண்டாகின்றது. வெளிப்பொருள்களுக்கு விருத்தியின் வழியாய்ப் பிரமாதாவோடு சம்பந்தமுண்டாகிறது. சுகாதிகளுக்குப்பிரமாதாவோடு சாக்ஷாத் சம்பந்தம் இருக்கின்றது. அதீத (கழிந்த) சுகமுதலியவற்றிற்குப் பிரமாதாவோடு வர்த்தமான சம்பந்தமில்லை. ஆதலால் அதீத சுகமுதலியவற்றின் ஞானம் ஸ்மிருதிரூபமாம்; பிரத்தியக்ஷரூபமன்று. அதீதசுக முதலியவற்றிற்கும் பிரமாதாவோடு சம்பந்தமோ உண்டாயிருக்கின்றது. என்றாலும் பிரத்தியக்ஷ லக்ஷணத்தில் வர்த்தமானத்தின் பிரவேசம் இருக்கின்றது.பிரமாதாவோடுவர்த்தமான சம்பந்தமுடையதாகிய யோக்கிய விஷயம் பிரத்தியக்ஷ மெனப்படு

35

கின்றது. பிரமாதாவோடுவர்த்தமானசம்பந்தமுடையதாகிய யோக்கிய விஷயத்தின் ஞானம பிரத்தியக்ஷ ஞானமெனப்படுகின்றது. யோக்கியமென்று சொல்லாவிடின் தாமமுதலியன எப்போதும் பிரமாதாவோடு சமபநத முள்ளனவாய் இருத்தலால் அவை எப்பொழுதுமே பிரத்தியக்ஷமாதல் வேண்டும; அன்றியும் அவற்றின் ஞானம் சத்தமுதலியவற்றால்உண்டாகின்றது; அதனைப்பிரத்தியக்ஷ ஞானமென்னல் வேண்டும. தர்மமுதலியன பிரத்தியக்ஷ யோக்கியமன்றுகலின் இலக்ஷணத்தில்யோக்கியமென்னும்பதத்தின்பிரவேசத்தால்தோஷமில்லை. யோக்கியதன்மை அயோக்கியத்தன்மைகள் அநுபவாநுசாரமாக அநுமிக்கத்தக்கனவாம். எந்தவஸ்துவில் பிரத்தியக்ஷத தன்மையின அநுபவம உண்டாகின்றதோ, அதனிடத்து யோக்கியத்தன்மையும, எதனிடத்தில்பிரத்தியக்ஷத்தன்மையின்அநுபவம்உண்டாகிறதில்லையோ, அதனிடத்தில் அயோக்கியத்தன்மையுமாகிய இவ்வுணாசுசிஅநுமானத்தாலாதல் அாததாபத்தியினலாதல் உண்டாகின்றது. யோக்கியத் தன்மை அயோக்கியத் தன்மைகள் இவ்வாறு நையாயிகர்களுக்கும ஒப்பத்தக்கனவாதல் வேண்டும். அவர்கள் மதத்தில் சுகாதிகளும் தாமாதிகளும ஆத்மாவின் தர்மமாம். அவற்றில் மனசையுக்த சமவாயசமபநதம எல்லாவற்றோடும மனதுக்கு இருக்கின்றது. என்றுலும் யோக்கியத்தன்மை இருததலால் சுகமுதலியவறறின் மானச சாக்ஷாத்காரம உண்டாகின்றது. யோக்கியத்தன்மை இன்மையால் தர்மாதிகளின் சாக்ஷாத்காரம் உண்டாகிறதில்லை. ஆதலால் யோக்கியத்தன்மை அயோக்கியததன்மைகள் சாவமதங்களிலும அங்கீகரிக்கத் தக்கனவாம். இவ்வாற்றால் பிரத்தியக்ஷயோக்கிய வஸ்துவுககுப் பிரமாதாவோடு வர்த்தமான சமபநதம உண்டாகுமபோது பிரததியக்ஷ ஞானம் உண்டாகின்றது.

இவ்வர்த்ததத்தில் இச்சங்கையுளது:—பிரஹ்ம கோசர ஞானம பரோக்ஷமாகலாகாது. ஏனெனின், பிரஹ்மத்துக்குப் பிரமாதாவோடு சம்பநதமின்மையுளதாயின புறபபொருள் முதலியவற்றின் ஞானத்தைப்போல பிரஹ்மஞானமும பரோக்ஷமாம. எப்போது அவாந்தரவாக்கியத்தால சததியசொரூபம ஞானசொரூபம் அநந்த சொரூபம் பிரஹ்மமாமென்னும விருததி யுண்டாகின்றதோ, அக்காலததிலும பிரஹ்மததுக்குப் பிரமாதாவோடு சம்பநதம இருக்கின்றது. ஆதலால் அவாந்தர வாக்கியத்தால் உண்டாகும பிரஹ்ம

ஞானமும் பிரத்தியக்ஷமேயாதலவேண்டும். சித்தாந்தத்தில் அவா ந்தரவாக்கியத்தாலுண்டாகும் பிரஹ்மஞானம் பிரத்தியக்ஷமன்று; பரோக்ஷமாம். அது முற்கூறியவிதத்தால் சமபவியாது.

இச்சங்கைக்கு இது சமாதானமாம:—பிரத்தியக்ஷ லக்ஷணத் தில் விஷயத்திற்கு யோக்கியதையென்னும் விசேஷணம் சொல்லப் பட்டிருக்கின்றது. அங்ஙனமே யோக்கிய பிரமாணத்தால் உண் டாகுந்தன்மை ஞானத்துக்கு விசேஷணமாம்; ஆதலால் முற்கூறிய தோஷமின்று. ஏனெனின் பிரமாதாவோடு வாத்தமான சமபந்த முடைய யோக்கியவிஷயம் யாதோ அதனை யோக்கிய பிரமாணத் தால் உண்டாகுமஞானம பிரத்தியக்ஷஞானமெனப்படுகின்றது. இவ் விலக்கணத்தில முற்கூறிய தோஷமின்று. ஏனெனின வாக்கியத்தி ற்கு இது சுபாவமாம:—சுரோதாவின் சொரூபத்தை அறிவிக்கும் பதம வாய்ந்த வாக்கியத்தால அபரோக்ஷஞான முண்டாகின்றது. சுரோதாவின் சொரூபத்தை அறிவிக்கும பதமின்றிய வாக்கியத் தால் பரோக்ஷஞானமுண்டாகின்றது. விஷயம எதிர்முகப்பட்டுப் பிரத்தியக்ஷ யோக்கியமாய் இருக்கினும சொரூபத்தை அறிவிக் கும பதமின்றிய வாக்கியத்தால அபரோக்ஷ ஞானமுண்டாகின்ற தில்லை. எங்ஙனம : தசமனை அறிவிக்கும இருவகை வாக்கியங்க ளுள் ஒன்று "தசமனிருக்கின்றான்" எனனும வாக்கியம்; மற்றை யது "தசமன் நீ" என்னும் வாக்கியம். அவற்றுள் முதல் வாக்கிய மோ சுரோதாவின் சொரூபத்தை அறிவிக்கும் பதம் இன்றியதாம். இரண்டாவது வாக்கியம் சுரோதாவின் சொரூபத்தை அறிவிக்கும் நீ யென்னும பதத்தோடு கூடியதாம. அவற்றுள் முதல்வாக்கிய த்தால் சுரோதாவுக்குத் தசமனது பரோக்ஷ ஞானமே உண்டாகி ன்றது; வாக்கியத்தால தோன்றும ஞானத்துக்கு விஷயம தசம புருஷன். அவன் இரண்டு இடங்களிலும அதிசந்நிஹிதனாய் இருக் கின்றான். அதாவது சொரூபத்துக்குப் பின்னமாய்ச சம்பந்தம் உடையது யாதோ அது சந்நிஹிதமாம. தசம புருஷன் சுரோதா வின் சொரூபத்துக்கு வேறல்லன்; சுரோதாவின் சொரூபமே யாவன; ஆதலால அதிசந்நிஹிதனாவன்; பிரத்தியக்ஷ யோக்கியனும் ஆவன். பிரத்தியக்ஷ யோக்கியமாகாவிடின் இரண்டாவது வாக்கிய த்தாலும தசமனது பிரத்தியக்ஷ ஞானம உண்டாகலாகாது. இர ண்டாவது வாக்கியத்தால பிரத்தியக்ஷ ஞானம் உண்டாகின்றது; ஆதலால் பிரத்தியக்ஷ யோக்கிய மாம். இவ்வாற்றால் அதிசந்நிஹித

(மிகசசமீபித்தல)னும்வாக்கியஜநகியபிரத்தியக்ஷயோக்கியனுமான தசமனது பிரத்தியக்ஷஞானம் எந்த வாக்கியத்தினுலுண்டாகிறதில்லையோ, அந்தவாக்கியம் அயோக்கியமாம. இரண்டாவதுவாக்கியத்தினுல் அதே தசமனது அபரோக்ஷ ஞானம் உண்டாகின்றது. ஆதலால் இரண்டாவது வாக்கியம் யோக்கியமாம. வாக்கியங்களின் யோக்கியதை அயோக்கியதைகளில் வேருேர் ஏதுவோ இல்லை; சொரூபத்தை அறிவிக்கும பதத்தோடுகூடிய தன்மையும், சொரூபத்தை அறிவிக்கும் பதம் இன்றிய தன்மையுமே யோக்கியதை அயோக்கியதைகளை சமபாதிப்பனவாம. இவ்வாறுல் "தசமன் நீ" என் னுமவாக்கியமோயோக்கியப்பிரமாணமாம். அதனுற்ருேன்றுவது "தசமன் யான்"என் னும் பிரத்தியக்ஷ ஞானமாம. அங்ஙனமே "தசமன் இருக்கின்ருன" என் னும வாக்கியம் அயோக்கியப் பிரமாணமாம். அதனுற்ருேன்றும் "தசமன்யாண்டோ இருக்கின்ருன்" என்னும தசமனது ஞானம பரோக்ஷமாம். அங்ஙனமே பிரஹ்மத்தை யறிவிக்கும் வாக்கியமும் இருவகையினதாம். "சத்திய ஞானனந்தம பிரஹ்மம்" என் னுமியல்பினது அவாந்தர வாக்கியம்; "தத்துவமஸி" என்னும் இயல்பினது மகாவாக்கியம். அவாந்தர வாக்கியங்களில் கேட்பவனது சொரூபத்தை அறிவிக்கும பதம் இல்லை. ஆதலால் பிரத்தியக்ஷ ஞானத்தை யுண்டுபண்ணுதல் யோக்கியமாவது அவாந்தர வாக்கியமன்று. மகா வாக்கியங்களில் சுரோதாவின் சொரூபத்தை அறிவிக்கும் நீ யென்றல்முதலிய பதங்க ளிருக்கின்றன. ஆதலால் பிரத்தியக்ஷ ஞானத்தை யுண்டுபண்ணுவதில யோக்கியமாவது மகாவாக்கியமாம். இவ்வாற்ருன்யோக்கியப் பிரமாணம மகாவாக்கியமாம. அதனுலுண்டாகும ஞானம் பிரத்தியக்ஷமாம். அயோக்கியப் பிரமாணம் "சததிய ஞானனந்தம் பிரஹ்மம்"என்றல் முதலிய வாக்கியங்களாம. அவற்றினுலுண்டாகும் பிரஹ்மத்தின் ஞானம் பரோக்ஷமாம். அவாந்தர வாக்கியமும் இருவகையினதாம். தத்பதார்த்தத்தை அறிவிப்பதொன்று; துவம் பதார்த்தத்தை அறிவிப்பதொன்று. அவற்றுள் தத்பதார்த்தத்தை அறிவிக்கும் வாக்கியமோ அயோக்கியமாம. "யாதொரு இந்த அந்தர் ஜோதிபுருஷன்" என்றல் முதலிய துவம பதார்த்தத்தை அறிவிக்கும் அவாந்தர வாக்கியமும் மகா வாக்கியங்களைப் போல யோக்கியமாம்; அயோக்கியமன்று. ஏனெனின் கேட்பவனது சொரூபத்தை அறிவிக்கும் பதம் அவற்றில் இருக்கின்றது.

ஆதலால் துவம்பதார்த்தத்தை அறிவிக்கும் அவாந்தர வாக்கியங்களினாலும் அபரோக்ஷ ஞானம் உண்டாகின்றது. ஆனால் அந்த அபரோக்ஷ ஞானம் பிரஹ்ம அபேதத்தைக் கோசரிப்பதனாலின் பரம புருஷார்த்தத்தைச் சாதிப்பதன்று; ஆனால் பரம புருஷார்த்தத்தைச் சாதிப்பதாகிய அபேத ஞானமெதுவோ அதனிடத்துப் பதார்த்தத்தைச் சோதித்தல் வாயிலாக உபயோகமுள்ளதாம். இவ்வாறானால் பிரஹ்மம் பிரமாதாவோடு சம்பந்தமுடையதுமாம்; யோக்கியமுமாம். என்றாலும் அயோக்கியமாகிய அவாந்தர வாக்கியங்களெவையோ அவற்றால்பிரஹ்மத்தின் பரோக்ஷ ஞானம் சம்பவிக்கின்றது.

இங்ஙனம் கூறுவதில் வேறு சங்கை யுண்டாகின்றது:— பிரமாதாவோடு வர்த்தமான சம்பந்தமுடைய யோக்கிய விஷயம் யாதோ அதன் யோக்கியப்பிரமாண ஜந்நிய ஞானம் பிரத்தியக்ஷ ஞானமெனப்படுகின்றது. இங்ஙனம் கூறுவதில் சுகமுதலியவற்றின் பிரத்தியக்ஷத்தில் முற்கூறிய இலக்ஷணத்தின் அவ்யாப்தி இருக்கின்றது. ஏனெனின் சுகமுதலியவற்றின் பிரத்தியக்ஷத்தில் பிரமாணத்தால் ஆக்கப்படுந்தன்மையின்மையால் யோக்கியப்பிரமாணத்தால் ஆக்கப்படுந்தன்மை எவ்வாற்றானும் சம்பவியாது. ஆதலால் முற்கூறிய இலக்ஷணத்தில் அவ்வியாப்திதோஷ மிருக்கின்றது.

இச்சங்கைக்கு இதுசமாதானமாம்:—யோக்கியப்பிரமாண ஜந்நியத்தன்மைக்கு இலக்ஷணத்திற் பிரவேசமின்று; ஆனால் அயோக்கியப்பிரமாண அஜந்நியத்தன்மைக்குப் பிரவேசமுண்டு; ஆதலால் அவ்வியாப்தி யின்று. ஏனெனின் பிரமாதாவோடு வர்த்தமான சம்பந்தமுடைய யோக்கியவிஷயம் யாதோ அதன் அயோக்கியப் பிரமாணத்தாலுண்டாகும் அஜந்நியஞானம் பிரத்தியக்ஷஞானமெனப்படுகின்றது. இவ்வாறானால் கூறிய அவாந்தர வாக்கிய ஜந்நிய பிரஹ்ம ஞானத்தின் நீக்கம் உண்டாகின்றது. முற்கூறியவாற்றால் பிரஹ்ம மாத்திரத்தை அறிவிக்கும் அவாந்தர வாக்கியம் அயோக்கியப்பிரமாணமாம். பிரஹ்மமிருக்கின்றதென்னும் பரோக்ஷஞானம் அவற்றால்(அவாந்தரவாக்கியங்களால்)தோன்றுவதாம்; அஜந்நியமன்று. ஆதலாற் பரோக்ஷஞானத்தில் இலக்ஷணஞ் செல்லுவதில்லை. சுகமுதலியவற்றைக் கோசரிக்கும் ஞானத்தின் சங்கிரகம் உண்டாகின்றது. ஏனெனின் சுகமுதலியவற்றைக் கோசரிக்

கும் ஞானம் எப்பிரமாணத்தாலும் ஜந்நியமன்று; ஆதலால்அயோக்கியப் பிரமாணத்தால் அஜந்நியமாம். இந்திரிய ஜந்நிய கடாதி ஞானமும, அங்ஙனமே மகாவாக்கிய ஜந்நியப் பிரஹ்மஞானமும் யோக்கியப்பிரமாண ஜந்நியமாயிருத்தலின் அயோக்கியபிரமாணத்தால் அஜந்நியமாம. ஆதலால் பிரத்தியக்ஷ ஞானத்திற்கு முற்கூறிய இலக்ஷணம் தோஷமின்றியதாம.

முற்பிரசங்கமிதுவாம:—சுத்தாத்மகோசரப் பிரத்தியக்ஷப் பிரமை இருவகைத்தாம. ஒன்று பிரஹ்ம அகோசரம; மற்றொன்று பிரஹ்மகோசரம. பிரஹ்ம அகோசரத்தைச்சொல்லிவந்தோம. மகாவாக்கிய ஜந்நியமாய் "யான் பிரஹ்மம்" என்பதாகப பிரஹ்மத்தோடு அபின்னமான ஆத்மாவை விஷயஞ்செய்வது யாதோ, அது பிரஹ்மத்தைக் கோசரிக்தும் சுத்தாத்மகோசரப் பிரத்தியக்ஷப் பிரமையாம்.

"யான் பிரஹ்மம" என்னும ஞானத்தினை வாசஸ்பதி மஞ்ஜரி ஜந்நியமென்பர். பிறர மதத்தில் இந்தஞானம வாக்கியஜந்நியமாம. அதனிலும இருதுணைப பேதமுண்டு. சம்க்ஷேப சாரீரகத்தின் சித்தாந்த மிதுவாம:—மகாவாக்கியத்தினால் பிரஹ்மத்தின் பிரத்தியக்ஷ ஞானமே யுண்டாகின்றது. என்றும பரோக்ஷஞானம மகாவாக்கியத்தி லுண்டாகிறதில்லை. பிறநூலாசிரியா மதம் இதுவாம்:—விசாரத்தோடுகூடிய மகாவாக்கியத்தினால் அபரோக்ஷஞான முண்டாகின்றது. விசாரமின்றிய வாக்கிய மாத்திரத்தினால் பரோக்ஷ ஞானமுண்டாகின்றது. எல்லோா மதத்தினும "யான் பிரஹ்மம்" என்னும ஞானம சுத்தாத்ம கோசரமும பிரஹ்ம கோசரமுமாம; அங்ஙனமே பிரத்தியக்ஷமுமாம. இவ்வாததத்தில் ஒருவருக்கும் விவாதமின்று. சுத்தாத்ம கோசரப்பிரமைக்கு இரண்டுபேதம கூறுவர். விசிஷ்டாத்ம கோசரப் பிரத்தியக்ஷப்பிரமைக்கு அநந்தபேத முண்டு. யானஅஞ்ஞன்,யான் கர்த்தா,யான் சுகி,யான் துக்கி,யான் மனிதன் என்றல் முதலிய அநந்த பேதமுண்டு. வாதிக்கப்படாத அர்த்தத்தை விஷயஞ் செய்யும ஞானம பிரமை யெனப்படும; "யான் கர்த்தா" என்றல் முதலிய ஞானத்திற்கு "யான் கர்த்தா வல்லன்" என்றல் முதலிய ஞானத்தால் பாத முண்டாகின்றது. அதனைப் பிரமையென்று கூறுதல் பொருந்தாது. என்றாலும் சம்சாரதசையில் வாதிக்கப்படாத அர்த்தத்தினை விஷயஞ்செய்யும ஞானம் யாதோ அது பிரமையெனப்படும. சம்சாரதசையில் முற்கூறியஞானத்திற்கு

ப் பாதம் உண்டாகிறதில்லை; ஆதலால் பிரமையாம். இவ்வாற்றால் ஆத்மகோசர ஆந்தரப் பிரத்தியக்ஷப் பிரமைத்துப் பேதம் கூறுவா. "என்னிடத்திற் சுகமுளது, என்னிடத்திற் துக்கமுளது" என்றல் முதலியசுகாதிகோசரஞானமும் ஆத்மகோசரப்பிரத்தியக்ஷப் பிரமையாம். ஆனால் "யான் சுகி, யான் துக்கி" என்றல்முதலியபிரமையிலோ யானென்னும் பதத்திற்குப் பொருளாகிய ஆத்மா விசேஷியமாம்; சுக துக்க முதலியன விசேஷணமாம். "என்னிடத்துச் சுகமுளது, என்னிடத்துத்துக்கமுளது" என்றல் முதலிய பிரமையில் சுகதுக்க முதலியன விசேஷியமாம்; ஆத்மா விசேஷணமாம். ஆதலால் "என்னிடத்துச் சுகமுளது, என்னிடத்துத் துக்கமுளது" என்றல் முதலியஞானத்தினை ஆத்மகோசரப்பிரத்தியக்ஷப்பிரமையென்றுகூறுவதில்லை; ஆனால் சுகமுதலியன விசேஷியமாயிருத்தலின் அநாத்மகோசர ஆந்தரப் பிரத்தியக்ஷப் பிரமையென்பா. வாசஸ்பதியின் மதத்தில் விசிஷ்டாத்ம ஞானமும், சுகாதி ஞானமும் மனோ ஜந்யமாம். சித்தாந்தத்தில் அந்தக்கரண விசிஷ்டாத்மாவில் அந்தக்கரண பாகம் சாக்ஷிபாஸியமாம்; சேதனபாகம் சுயம்பிரகாசமாம். அங்ஙனமே சுகமுதலியனவும் சாக்ஷிபாஸியமாம். எந்தஞானமும்மனோ ஜந்யமன்று; ஆதலால் மனம் இந்திரியமன்று. இவ்வாற்றால் ஸ்மிருதிக்கு வேறாகிய யதார்த்த விருத்தியைப் பிரமையென்பா. அதன் பேதத்தைக் கூறுவாம். ஸ்மிருதி வடிவமாகிய அந்தக்கரணத்தின் விருத்தியும் யதார்த்தம் அயதார்த்தமென்னும் பேதத்தால் இருவகைத்தாம். அவற்றுள் யதார்த்த ஸ்மிருதி இருவகையினதாம். ஒன்று ஆத்மஸ்மிருதி; மற்றொன்று அநாத்மஸ்மிருதி. தத்துவமஸிமுதலிய வாக்கிய ஜந்ய அநுபவத்தால் உண்டாகும் ஆத்ம தத்துவத்தின் ஸ்மிருதி யதார்த்த ஆத்மஸ்மிருதியாம். வியாவகாரிகப் பிரபஞ்சத்தின் மித்தியாத்துவ அநுபவமுண்டாய் அதன் சம்ஸ்காரத்தால் மித்தியாத்துவரூபமாக உண்டாகும் பிரபஞ்சத்தின் ஸ்மிருதி யதார்த்த அநாத்ம ஸ்மிருதியாம். அங்ஙனமே அயதார்த்தஸ்மிருதியும் இருவகையினதாம். ஒன்று ஆத்மகோசர அயதார்த்தஸ்மிருதி, மற்றையது அநாத்மகோசர அயதார்த்தஸ்மிருதி. அகங்காரமுதலியவற்றில் ஆத்மத்தன்மைப் பிரம வடிவமாகிய அநுபவத்தின் சம்ஸ்காரத்தால் அகங்காரமுதலியவற்றில் உண்டாகும் ஆத்மத்தன்மையின் ஸ்மிருதி ஆத்மகோசர அயதார்த்த ஸ்மிருதியாம். அங்ஙனமே ஆத்மாவினிடத்துக் கர்த்திருத்துவ அநுபவசம்ஸ்காரத்தால் உண்டாகும் "ஆத்மா கர்த்தா" என்னும்

ஸ்மிருதியும் ஆத்மகோசர அயதார்த்தஸ்மிருதியாம். பிரபஞ்சத்தில் ஸத்தியத்தன்மைப் பிராந்தியின் சம்ஸ்காரத்தால் உண்டாகும் "பிரபஞ்சமசத்திய" மென்னும் ஸ்மிருதியும் அநாத்மகோசர அயதார்த்த ஸ்மிருதியாம். யதார்த்தம அயதார்த்தமென்னும் பேதத்தால் விருத்தி இருவகையாகச் சொல்லப்பட்டது. ஸ்மிருதிக்கு வேருகிய யதார்த்த விருத்தி பிரமையெனப்பட்டது. யதார்த்த அநுபவஜந்நிய ஸ்மிருதி யதார்த்தமெனப்பட்டது. அயதார்த்த அநுபவஜந்நியஸ்மிருதி அயதார்த்தமெனப்பட்டது. அநுபவத்தில் யதார்த்தத்தன்மை பாதிக்கப்படாத பொருளாலாகியதாம். பாதிக்கப்படாத பொருளை விஷயஞ் செய்யும அநுபவம யதார்த்த மெனப்படுகின்றது; அதுவே பிரமையெனப்படுகின்றது. ஆதலால் பாதிக்கப்படாத பொருளின் அதீனமாகிய அநுபவத்தில் யதார்த்தத்தன்மை யிருக்கின்றது. ஸ்மிருதியில் யதார்த்தத்தன்மையும அயதார்த்தத்தன்மையும் அநுபவத்தின் அதீனமாம. ஸ்மிருதிக்கு வேருகிய ஞானத்தினை அநுபவமென்பா. அதுவும யதார்த்தம அயதார்த்தமென்னும் பேதத்தால் இருவகையாம. யதார்த்த அநுபவமோ முன் கூறப்பட்டது. அயதார்த்த அநுபவத்தை நிருபிப்பாம் அயதார்த்த ஸ்மிருதியின் நிருபணமோ முன் சொல்லப்பட்டது. அதுவும் அநுபவத்தின அயதார்த்தத்தன்மையின் அதீனமாம. ஆதலால் அயதார்த்த அநுபவத்தின் நிருபணத்தைச சொல்லுதல வேண்டும.

## ௧௦௨. சம்சயவடிவமான பிரமத்தின் இலக்ஷணமும் பேதமும்.

அயதார்த்த அநுபவம் இருவகைத்தாம்:—ஒன்று சம்சயவடிவம், மற்றொன்று நிச்சயவடிவம். அயதார்த்தத்தினையே பிரமமென்பா. சம்சயஞானமும பிரமமாம். ஏனெனின், சுவ (தனது) அபாவாதிகரணத்தில் தோற்று (அவபாஸமா) வதைப் பிரமமென்பர். சம்சய ஞானமும ஒன்றற்கொன்று விரோதமுள்ள இரண்டினை விஷயிப்பதாகின்றது. அவற்றுள் ஒன்றற்கபாவமுண்டாகுதலால் சம்சயத்தில் பிரமத்தினிலக்ஷணமிருக்கின்றது. ஒருவிசேஷியத்திலுள்ளவிரோதமான இரண்டுவிசேஷணங்களின் ஞானம்சம்சயமெனப்படுகின்றது. எங்ஙனம்: ஸ்தாணுவில் "ஸ்தாணுவோ, அன்றோ?" என்னும் ஞானமுண்டாகின்றது; அல்லது "ஸ்தாணுவோ, புருஷனோ?" என்னும் ஞானம் உண்டாகிறது. அவ்விரண்டினையும் சம்சயமென்பா. ஆண்டு

ஸ்தாணு விசேஷ்யம்;ஸ்தாணுத்தன்மையும் ஸ்தாணுத்தன்மையபாவமும் விசேஷணங்கள். இரண்டும் விரோதமுடையனவாம்;ஓரதிகரணத்தில்உடனிருக்கமாட்டா. ஆதலால ஸ்தாணுவாகிய ஒருவிசேஷியத்தில் ஸ்தாணுத்தன்மை ஸ்தாணுத்தன்மையபாவ மெனனும்வடிவினவாய விரோதமுள்ள இரண்டு விசேஷணங்களின ஞானமிருத்தலால் முதற்சமயத்தில இலக்ஷணம சமபவிக்கின்றது. அங்ஙனமே இரண்டாவது சமயத்திலும இலக்ஷணம சமபவிக்கின்றது. ஏனெனின் ஸ்தாணு வடிவமான ஒரு விசேஷியத்தில ஸ்தாணுத்தன்மை புருஷத்தன்மை வடிவினவாகிய விருத்தமான இரண்டு விசேஷணங்களின் ஞானமிருக்கின்றது. தாணுத்தன்மைக்கும தாணுத்தன்மை அபாவத்திற்கும ஒன்றற்கொன்று விரோதமிருத்தல்போல, தாணுத்தன்மை புருஷத்தன்மைகளுக்கும விரோதம அநுபவசித்தமாம். ஆதலால முதற சமயமோ விருத்தமான பாவாபாவமிரண்டினை விஷயிப்பது. அங்ஙனமே இரண்டாவது சமயம விருத்தமான இரண்டு பாவங்களைக் கோசரிப்பதாம. நியாயநூல்களிலோ எழுதப்பட்டிருக்கின்றது:—பாவா பாவங்களைக் கோசரிப்பதே சம்சயஞானமாம. கேவலம பாவத்தைக் கோசரிப்பது சம்சயமாகாது. யாண்டு "ஸ்தாணுவோ, புருஷனோ" வெனச் சமசயமுண்டாகின்றதோ, ஆண்டும் தாணுத்தன்மை, தாணுத்தன்மையபாவம், புருஷத்தன்மை, புருஷத்தன்மையபாவம் என நான்குகோடி (பக்ஷங்)க ளிருக்கின்றன. ஆதலால இருகோடியினது நாற்கோடியினது என இருவகைச் சமசயமுளது. "தாணுவோ, அன்றோ" வென்பது இரு கோடியினதாகிய சமசயமாம. "தாணுவோ,புருடனோ" வென்பது நாற்கோடியினதாகிய சம்சயமாம. ஒரு தர்மியிலதோற்றுகின்றதாமதத்தினைக்கோடியென்பர். ஆதலாற்கேவலபாவத்தைக் கோசரிக்கும சமசயம நியாயமதத்தில அப்பிரசித்தமாம. எவ்வாற்றானும சமசஞானம் பிரமவடிவமாம். இரண்டு விரோதமான விசேஷணங்கள் ஒன்றனகண் இரா; ஒன்றற்கு அபாவமே உண்டாகும. எங்ஙனம: ஸ்தாணுவில ஸ்தாணுத்தன்மையும ஸ்தாணுத்தன்மையி னின்மையும இரா. ஆகலின் ஸ்தாணுத்தன்மையபாவமின்றிய தாணுவில் தாணுத்தன்மையின் அபாவஞானம பிரமவடிவாம்.ஆனால் ஒருஅமசத்தில் சமசயஞானம பிரமமாகின்றது. சகல அமசங்களினும் பிரமமாகிறதில்லை. யாண்டு ஸ்தாணுவில் "ஸ்தாணுவோ,அன்றோ" வென்னுஞ சம்சயமுண்டா

கின்றதோ ஆண்டு அபாவ அம்சத்திற்பிரமமாம். யாண்டுப்புருஷனிடத்து "ஸ்தாணுவோ, அன்றோ" வென்னும்சம்சயமுண்டாகின்றதோ, ஆண்டு அபாவ அம்சமோ புருஷனிடத்திருக்கின்றது; ஸ்தாணுத்தனமை அம்சமில்லை. ஆதலால் பாவ அம்சத்தில் பிரமமிருக்கின்றது. இவ்வாற்றால் பாவா பாவகோசர சம்சயமுண்டாகின்றது. அன்றின் ஒன்று அவசியமிருக்கும். ஆதலாற் சம்சய ஞானம் ஒரு அமசத்தில் பிரமமாகின்றது. அன்றியும் விரோதமுள்ள உபய பாவகோசரத்தினையுடை சம்சயமெனக்கொள்ளின் சகல அம்சங்களிலும் சம்சயத்திற்குப்பிரமத்துவம் சம்பவிக்கின்றது. எங்ஙனம்: "தாணுவா, புருடனா" வென்னும் சமசயத்தினை நாற்கோடிகளுடையதாகக் கொள்ளாது, இருகோடிகளுடையதாகவேகொள்ளல் வேண்டும். தாணுவுக்கும புருடனுக்கும வேறாகிய எப்பதார்த்தத்திலேனும் "தாணுவா, புருடனா" வென்னும சம்சயமுண்டாயின், ஆண்டச் சமசயத்தின் தாமியிலலைதாணுத்தன்மை புருஷத்தன்மையிரண்டும இல்லை. ஆதலாலிரண்டின் ஞானமும பிரமமாம. சம்சயத்தில் எதுவிசேஷியமாகின்றதோ அது சம்சயத்தில் தர்மியெனப்படுகின்றது. விசேஷணத்தினைத் தர்மமென்பா. ஆதலால ஒரு தர்மியில் விருத்தமாகிய நாநாதர்மங்களின் ஞானம சம்சய மெனப்படுகின்றது. இநத இலக்ஷணத்தோடு முற்கூறிய இலக்ஷணத்திற்குப் பேதமில்லை. ஆனால் இவ்வளவு பேதமுண்டு:—முற்கூறிய இலக்ஷணத்தில் உபயபத மிருக்கின்றது ஆதலால நாற்கோடிகளையுடைய சம்சயத்தில முற்கூறிய இலக்ஷணத்தின் அவ்வியாப்தியிருக்கின்றது. ஏனெனின நாற் கோடிகளையுடைய சமசயத்தில் ஒரு விசேஷியத்தில நான்கு விசேஷணங்கள் தோற்றுகின்றன. இரண்டு விசேஷணங்களிலலை. யாண்டு நான்கு உளதோ ஆண்டு மூன்றும் இரண்டும அங்ஙனமே ஒன்று மிருக்கின்றன; அங்ஙனமாயினும அதிக எண்ணால் குறைந்த எண்ணுக்குப் பாதமுண்டாகின்றது. இகழுறுவென ஓரிடத்து ஐந்து பிராஹ்மணரிருக்க, ஒருவன் நான்கு பிராஹ்மணரெனக் கூறின் அவனை மித்தியாவாதி (பொய்சொலவோன) எனபா. ஆதலால் குறைந்த எண் அதிக எண்ணி லடங்கியதாயினும குறைந்தஎண்ணின் வியவகாரமுண்டாகிறதில்லை. ஆதலால் இரண்டெனுததால் நிதமுமமு இலக்கணத்திற்கு நாற்கோடியினையுடைய சமசயத்தில் அவ்வியாப்தி யுண்டாகுதலான நாநாவென்னும பதம சொல்லப்பட்டிருக்கின்றது

ஒன்றின் வேருகியவற்றை நாநா வென்பர். இரண்டு கோடிகளுடைய சமசயத்தினைப்போல நான்கு கோடிகளுடைய சமசயமும நான்கு தர்மங்களைக் கோசரிப்பதா யிருத்தலின் நாநார்தாம கோசரமாம; ஆதலால் அவ்வியாப்தியில்லை. இவ்வாறுல சமசயமும பிரமமாம.

பிரமத்தின் பேத நிரூபணத்திற்குப் பின் நிச்சயப் பிரமத்தின் இலக்கணத்தை விஸ்தாரமாய்க் கூறுவாம. சமசய நிச்சய வடிவமாகிய பிரமம் அநர்த்தத்திற் கேதுவாமாதலின் நிவர்த்திக்கத் தக்கதாம. ஜிஞ்ஞாஸுவுக்கு நிவர்த்திக்கத்தக்க பிரமம யாதோ அதன் பேதத்தைக் கூறுவாம :—சமசய வடிவ பிரமம் இருவகைத்ததாம். ஒன்று பிரமாண சமசயம; மற்ருென்று பிரமேய சமசயம. பிரமாணகோசர சந்தேகம பிரமாண சம்சய மெனப்படுகின்றது. அதனையே பிரமாணாசம்பாவனையென்பர். "வேதாந்தவாக்கியம அத்துவிதீயபிரஹ்மத்தில பிரமாணமா, அன்று" என்பது பிரமாண சம்சயம். அதன நிவிருத்தி சாரீரகத்தின முதலத்தியாயத்தைப் படித்தலாலேனும கேட்டலாலேனு முண்டாகின்றது. பிரமேயசம்சயமும் ஆத்மசம்சயம் அநாத்ம சம்சயமென்னும் பேதத்தால் இருவகைத்தாம. அநாத்மசம்சயம் அநந்தவிதமாம. அதனைச் சொல்லுதலால் உபயோகமில்லை. ஆத்மசம்சயமும் அநேகவகைத்தாம்.

ஆத்மா பிரஹ்மத்தோடு அபின்னமா? அல்லது பின்னமா? அபின்னமாயினும எப்போதும அபின்னமா? அல்லது மோக்ஷ காலத்தின மாத்திரமே அபின்னமா? எப்போதும அபின்னமன்று. எப்போதுமஅபின்னமாயினும ஆநந்தமுதலிய ஐசுவரியமுடையதா? அல்லது ஆநந்தாதிகளின்றியதா? ஆநந்தமுதலிய ஐசுவரியமுடையதாயினும ஆநந்தமுதலியன குணங்களா? அல்லது பிரஹ்மாத்மாவின் சொரூபமா? இவை முதலியனவாக தத்பதார்த்தாபின்ன துவம்பதார்த்தத்தில் அநேகவித சமசயங்க ளிருக்கின்றன.

அங்ஙனமே கேவல துவமபதார்த்த கோசர சம்சயமும ஆத்மகோசரசம்சயமாம. ஆத்மா தேகாதிகளின் வேறு? அன்று? வேறெனினும் அணுபரிமாணமா? மத்திமபரிமாணமா? அல்லது விபுபரிமாணமா? விபுவெனினும கருத்தாவா? அகர்த்தாவா? அகர்த்தாவெனினும ஒன்றற்கொன்று பின்னமாகிய அநேகமா? அல்லது ஏகமா? இவ்வாறு அநேக சம்சயம் கேவல துவம்பதார்த்த கோசரமாம்.

அங்ஙனமே கேவலம் தத்பதார்த்த கோசரமும் அநேகவகைச் சம்சயமாம். வைகுண்டமுதலிய உலக விசேஷங்களில் வசிக்கும் ஈசுவரன் பரிச்சின்னமான கைகால்முதலிய அவயவங்களோடு கூடிய சரீரியா? அல்லது சரீரமின்றிய விபுவா? சரீரமின்றிய விபுவெனினும் பரமாணு முதலியவற்றை அபேக்ஷித்த ஜகத் கருத்தாவா? அல்லது நிரபேக்ஷ கருத்தாவா? பரமாணு முதலியவற்றின் அபேக்ஷையின்றிய கருத்தாவெனினும் கேவல கருத்தாவா? அல்லது அபின்ன நிமித்தோபாதான வடிவ கருத்தாவா? அபின்ன நிமித்தோபாதான கருத்தாவெனினும் ஜீவர்கள் கருமத்தின் அபேக்ஷையின்றிய கருத்தாவாயிருத்தலின் விஷமமாகச் செய்தற்றன்மைமுதலிய தோஷமுடையவரா? அல்லது ஜீவர்களது கருமத்தின் அபேக்ஷையுடைய கருத்தாவாயிருத்தலின் விஷமமாகச் செய்தற்றன்மைமுதலிய தோஷமின்றியவரா? என்றல்முதலிய அநேகவித தத்பதார்த்த கோசர சம்சயங்களிருக்கின்றன. அவ்வெல்லாச் சம்சயமும் பிரமேயசம்சயமெனப்படும். அவற்றின் நிவிருத்தி மனனத்தாலுண்டாகின்றது. சாரீரகத்தினது இரண்டாவது அத்தியாயத்தின் அத்தியயனத்தினாலேனும் சிரவணத்தினாலேனும் மனனம் சித்திக்கின்றது. அதனால் பிரமேயசம்சயத்தின் நிவிருத்தியுண்டாகின்றது.

ஞான சாதனத்தின் சம்சயமும் மோக்ஷ சாதனத்தின் சம்சயமும் பிரமேயசம்சயமாம். ஏனெனின் பிரமையின் விஷயத்தினைப் பிரமேயமென்பர். ஞானசாதனமும் மோக்ஷசாதனமும் பிரமையின் விஷயமாயிருத்தலின் பிரமேயமாம். ஆதலால் ஞான சாதனத்தின் சம்சயமும் மோக்ஷ சாதனத்தின் சம்சயமும் பிரமேயசம்சயமாம். அதன் நிவிருத்தி சாரீரகத்தின் மூன்றாவது அத்தியாயத்தாலுண்டாகின்றது.

அங்ஙனமே மோக்ஷத்தின் சொரூபத்தினது சம்சயமும் பிரமேய சம்சயமாம். அதன் நிவிருத்தி சாரீரகத்தின் நான்காவது அத்தியாயத்தாலுண்டாகின்றது. சாரீரகத்தின் நான்காவது அத்தியாயத்தில் முதலில் சாதன விசாரமே இருக்கின்றது; பின் பல விசாரமிருக்கின்றது. மோக்ஷத்தினைப் பலமென்பர். என்றாலும் நான்காவது அத்தியாயத்தில் சாதனவிசாரம் எவ்வளவிலிருக்கின்றதோ, அவ்வளவு நான்காவது அத்தியாயத்தோடு கூடிய மூன்றாவது அத்தியாயத்தால் சாதன சம்சயத்தின் நிவிருத்தியுண்டாகின்றது. எஞ்சிய நான்காவது அத்தியாயத்தால் பல சம்சயத்தின் நிவிருத்தியுண்டாகின்றது.

 *நிச்சய வடிவமான பிரமஞான உஅரு த்தின் இலக்ஷணம்.*

சம்சய நிச்சயபேதத்தால் பிரமஞானம் இருவகைத்தாம். சம்சயப் பிரமத்தின் நிரூபணஞ் செய்யப்பட்டது. நிச்சயப் பிரமத்தினைக் கூறுவாம்:—சமசயத்தின் வேருய ஞானத்தினை நிச்சயமெனபா. சுத்திதன்மைவடிவத்தால் சுததியின் யதார்த்தஞானமும், இரஜததன்மை வடிவத்தால் சுத்தியின பிரமஞானமுமாகிய இரண்டும் சமசயததின் வேருகிய ஞானமா யிருததலின் நிச்சய வடிவமாம. வாதிக்கப்படுமஅாத்ததனை விஷயமாக வுடையதாய்ச் சம்சயததின் வேருகிய ஞானம் எதுவோ அது நிசசயமாம். சுத்தியில் இரஜத நிச்சயததின் விஷயம இரஜதமாம; அது பாதிதமாம். ஏனெனின், சமசாரதசையிற்ருனே சுததியின் ஞானததால் இரஜதத்தின் பாத முண்டாகினறது. பிரஹ்மஞானமின்றி எதற்குப் பாத முண்டாகிறதில்லையோ அது அபாதித மெனப்படுகின்றது. பிரஹ்மஞான மின்றியே சுத்தி முதலியவற்றின ஞானததால் எதற்குப் பாத முண்டாகின்றதோ அது பாதித மெனப்படுகின்றது. அல்லது பிரமாதாவின பாதமின்றி எதற்குப் பாத முண்டாகிற தில்லையோ அது அபாதித மெனப்படுகினறது, பிரமாதாவிருக்க எதற்குப் பாத முண்டாகின்றதோ அது பாதித மெனப்படுகின்றது. அபாதிதம் இருவகைத்தாம. ஒன்ரு என்றும் அபாதிதமாம்; மற்றையது வியாவகாரிக அபாதிதமாம். எதறகு எப்போதும் பாத முண்டாகிற தில்லையோ அததன்மையது சேதனமாம். எவற்றிற்கு வியவகாரதசையில் பாத முண்டாகிறதில்லையோ அத் தன்மையன அஞ்ஞானமும், மகாபூதமும், அங்ஙனமே பௌதிகப் பிரபஞ்சமுமாம். சுக முதலியன பிராதிபாஸிகமாம். என்ருலும் பிரஹ்ம ஞானமின்றிச சுக முதலியவற்றின் பாத முண்டாகிறதில்லை; ஆதலால் அபாதிதமாம். அவற்றின் ஞானம் பிரம மன்று. அங்ஙனமே பாதித அர்த்தமும் இருவகைத்தாம். ஒன்ரு வியாவகாரிக பதார்த்தாவச்சின்ன சேதனததின் விவர்ததம; மற்றையது பிராதிபாஸிக பதார்த்தாவச்சின்னசேதனத்தின் விவாததம. சுத்தியில் இரஜதம் வியாவகாரிக பதாாத்தாவச்சின்ன சேதனத்தின் விவாததமாம். ஏனெனின் சுத்திரஜதத்தின் அதிஷ்டானம சுத்தி அவசசின்ன சேதனமாம். சுத்தி வியாவகாரிகமாம். சொப்பனத்தில் சுத்தி தோற்றி அதனிடத்து இரஜதப் பிரம முண்டாகுமாயின், அவ்விரஜதத்திற்குச் சொப்பனத்திற்ரு

னே சுத்திஞானத்தால் பாதமுண்டாயின், அந்த இரஜதத்திற்குச் சொப்பன சுத்தியவச்சின்ன சேதனம் அதிஷ்டானமாம். சொப்பனத்தின் சுத்தி பிராதிபாஸிகமாம். இவ்வாற்றால் பாதிதபதார்த்தம் இருவகைத்தாம். அவற்றின்நிச்சயம் பிரமநிச்சயமெனப்படுகின்றது.

## கoச. அத்தியாசத்தின் இலக்ஷணமும் பேதமும்.

'பிரமஞானத்தில் நூலாசிரியர்களது அநேகவித வாதங்களுள. அவர்கள் மதத்திற்கு விலக்ஷணமாகப் பாஷியகாரர் பிரமத்திற்கு அசாதாரண லக்ஷணம் கூறியிருக்கின்றனர்:— எத்தன்மைய பிரமத்தின் சொரூபத்தை அநநிய சாஸ்திரமுடையோர் மதித்திருக்கின்றார்களோ, அதனிடத்துக் கூறப்படும் இவ்விலக்கணம் சம்பவியாததலின் அசாதாரணமாம். பிறரினும அசாதாரண லக்ஷணத்தைக் கூறுதலால் பாஷியகாரருக்குப் பிறரான் மதிக்கப்பட்ட பிரமத்தின் சொரூபத்தோடு அபிப்பிராயமின்மை யிருக்கின்றது. அதிஷ்டானத்தினும் விஷம சத்தை யுடைய அவபாசம் அத்தியாசமெனப்படும். யாண்டுச்சுத்தியில் இரஜதப்பிரமமுண்டாகின்றதோ, ஆண்டுச்சுத்தி தேசத்தில் இரஜதம் உற்பத்தியாகின்றது. அதன் ஞானமும் தற்காலத்தைய இரஜதமுமாகிய இவ்விரண்டினையும சித்தாந்தத்தில் அவபாசமென்றும், அத்தியாசமென்றும கூறுவர். மற்றைய சாஸ்திரங்களால் இரஜதத்தின் உற்பத்தி அங்கீகரிக்கப்படுவதில்லை. இஃது எல்லோரினும விலக்ஷணத் தன்மையாம. சத்கியாதிவாதமொன்றில் இரஜதத்தின் உற்பத்தி அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. அவர்கள் மதத்தினும் விலக்ஷணமாதலை மேற்கூறுவாம. வியாகரணத்தின்படி அத்தியாசபதத்திற்கும் அவபாசபதத்திற்கும் விஷயமும்ஞானமுமாகிய இரண்டும வாச்சியமாம.

ஆதலால் அர்த்தாத்தியாச ஞானாத்தியாசங்களின் பேதத்தால் அத்தியாச மிருவகைத்தாம். அர்த்தாத்தியாசம் அநேக விதமாம். சிலவிடத்துக் கேவலசம்பந்த மாத்திரத்தின் அத்தியாசமும், சிலவிடத்துச் சம்பந்த விசிஷ்ட சம்பந்தியின் அத்தியாசமும, சிலவிடத்துக்கேவல தர்மத்தின் அத்தியாசமும், சிலவிடத்துத் தாம விசிஷ்டதாமியின் அத்தியாசமும், சிலவிடத்து அநியோந்நியாத்தியாசமும், சிலவிடத்து அந்நியதராத்தியாசமு மிருக்கின்றன. அந்நியதராத்தியாசமும் இருவகைத்தாம். ஒன்று ஆத்மாவில் அநாத்மாத்தியாசம்; மற்றையது அநாத்மாவில்ஆத்மாத்தியாசமாம். இவ்வாறு

அர்த்தாத்தியாசம் அநேகவகைத்தாம். முற்கூறிய லக்ஷணத்திற்கு யாண்டும் பொருத்தமுண்டு. அங்ஙனமே முக்கிய சித்தாந்தத்திலோ சகல அத்தியாசத்திற்கும் அதிஷ்டானம் சேதநமாம். இரஜ்ஜுவில் சர்ப்பம் தோற்றுமாயின், ஆண்டும் இதுவென்னும் வடிவினதாகிய விருத்தியவச்சின்ன சேதநத்தோடு அபின்னமான இரஜ்ஜு அவச்சின்ன சேதநமே சர்ப்பத்தின் அதிஷ்டானமாம்; இரஜ்ஜு அதிஷ்டானமன்று. இவ்வர்த்தம் விசாரசாகரத்திற் றெளிவாயுளது. ஆண்டு சேதநத்தின் பரமார்த்த சத்தையிருக்கின்றது. அல்லது அதன் உபாதியாகிய இரஜ்ஜு வியாவகாரிகமாயிருத்தலின் இரஜ்ஜு அவச்சின்ன சேதநத்தின் வியாவகாரிக சத்தையிருக்கின்றது. இருவகையானும் சர்ப்பத்திற்கும் அதன் ஞானத்திற்கும் பிராதிபாஸிக சத்தையிருத்தலின் அதிஷ்டானத்தின் சத்தையினும் விஷம சத்தையுடைய அவபாசம் சர்ப்பமும் அதன் ஞானமுமாம். ஆதலால் இரண்டனையும் அத்தியாசமென்றும், அவபாசமென்றும் கூறுவர். ஞானத்தினையும் ஞானத்தின் விஷயத்தினையும் அவபாசமென்பர். இவ்வாறு யாண்டும் அத்தியாசத்திற்கு அதிஷ்டானம் சேதநமெனக் கூறின், அப்பொழுதோ அதிஷ்டானத்திற்குப் பரமார்த்த சத்தையும் அத்தியாசத்திற்குப் பிராதிபாஸிக சத்தையுமிருத்தலின், அதிஷ்டானத்தின் விஷம சத்தையுடையது அவபாசம் (ஞானமும் அதன் விஷயமும்) என்பது ஸ்பஷ்டமேயாம். இரஜதத்தின் அதிஷ்டானம் சுத்தியாம். இவ்வியவகாரம் உலகத்திலுண்டாகின்றது. ஆதலால் அவச்சேதகத் தன்மைச் சம்பந்தத்தால் சுத்தியும் இரஜதத்தின் ஆசிரயமாம். ஏனெனின் சேதநத்தில் இரஜதத்தின் அதிஷ்டானத்தன்மையை அவச்சேதகம் செய்வது சுத்தியாயிருத்தலின், அதனிடத்து இரஜதத்தின் அவச்சேதகத்தன்மைச் சம்பந்தமிருக்கின்றது. அவச்சேதகத் தன்மைச் சம்பந்தத்தால் சுத்தியினை இரஜதத்தின் அதிஷ்டானமெனக் கூறின், சுத்திக்கு வியாவகாரிக சத்தை யிருக்கின்றது; இரஜதத்திற்குப் பிராதிபாஸிக சத்தை யிருக்கின்றது. இதனாலும் அதிஷ்டானத்தினும் விஷம சத்தையிருக்கின்றது. இவ்வாற்றால் சர்வ அத்தியாசங்களினும் ஆரோபிதத்தினும் அதிஷ்டானத்திற்கு விஷமசத்தையிருக்கின்றது. எந்தப் பதார்த்தத்தில் ஆதாரத்தன்மை தோற்றுகின்றதோ அது அதிஷ்டானமெனப்படுகின்றது. இவ்வாதாரத்தன்மை பரமார்த்தமாயிருக்குக; அல்லது ஆரோபிதமாயிருக்குக. பரமார்

த்தமாய் ஆதாரம் உளதாயின் அது அதிஷ்டானமெனப்படுமென் னும ஆக்கிரசம் இப்பிரசங்கத்தில் இல்லை. ஏனெனின், எங்ஙனம் ஆத்மாவினிடத்து அநாத்மாவின் அத்தியாச மிருக்கின்றதோ, அங் ஙனமே அநாத்மாவில் ஆத்மாவின் அத்தியாச மிருக்கின்றது. அநாத்மாவில் ஆத்மாவின் பரமார்த்தமான ஆதாரத்தன்மையில்லை. ஆனல் ஆரோபித ஆதாரத்தன்மையிருக்கின்றது. ஆதலால் ஆதார மாத்திரத்தினை இப்பிரசங்கத்தில் அதிஷ்டானமெனக் கூறினேம். யாண்டு அநாத்மாவில் ஆத்மாவின் அத்தியாச மிருக்கின்றதோ ஆண்டுஅதிஷ்டானம் அநாத்மாவாம்.அதற்கு வியாவகாரிக சத்தை யும்; ஆத்மாவுக்குப் பாரமார்த்திக சத்தையு மிருக்கின்றனவாக லின் அதிஷ்டானத்தினும் விஷமசத்தை யுடையது அவபாசமாம்.

## கoரு. அந்நியோந்நியாத்தியாசத்திற் சங்கை சமாதானம்.

ஆத்மாவிற் கதிஷ்டானம் அநாத்மாவெனக் கூறுதலால், ஆத்மா ஆரோபிதமென்பது பெறப்படுகின்றது. எது ஆரோபித மாகின்றதோ அது கற்பிதமாகின்றது. அதனல் ஆத்மாவும் கற் பிதமாகும். ஆதலால் அநாத்மாவில் ஆத்மாவின அத்தியாசம் இருக்கின்றதெனக் கூறுதல்பொருந்தாது. என்றலும் பாஷியகாரர் சாரீரகத்தின் ஆரம்பத்தில் ஆத்மாநாத்மாக்களுக்கு அந்நியோந்நி யாத்தியாசம் கூறி யிருக்கின்றனர். ஆதலால் அநாத்மாவில் ஆத் மாவினது அத்தியாசத்தின் நிஷேதமோ பொருந்தாது. பரஸ்பர அத்தியாசத்தினை அந்நியோந்நியாத்தியாச மென்பர். ஆதலால் அநாத்மாவில ஆத்மாவின் அத்தியாசத்தை அங்கீகரித்துமுற்கூறிய சங்கைக்குச சமாதானம கூறுதல் வேண்டும்.

அச்சமாதானம் இவ்வாறும். அத்தியாசம் இருவகைத்தாம். ஒன்று சொரூபாத்தியாசம; மற்றையது சமசர்க்காத்தியாசம் எப்பதார்த் தத்தின் சொரூபம அநிர்வசனீயமாக உண்டாகின்றதோ அதனைச் சொருபாத்தியாசமென்பர். அது சுத்தியில இரஜதத்தின் சொருபாத் தியாசமும ஆத்மாவில் அகங்காரமுதலிய அநாத்மாக்களின் சொரு பாத்தியாசமு மிருத்தல் போலவாம. அங்ஙனமே எப்பதார்த்தத் தின் சொரூபமோ வியாவகாரிகமாகவாவது பாரமார்த்திகமாக வாவது முதலிற சித்தித்திருக்க, அநிர்வசநீய சமபந்தம் உற்பத்தி யாகின்றதோ அது சம்சர்க்காத்தியாச மெனப்படுகின்றது. எங்ங

ணம்: முகத்தோடு கண்ணாடிக்கு முற்கூறிய விதமாக ஓர் சம்பந்தமுமில்லை. இரண்டு பதார்த்தங்களும் வியாவகாரிகமாம். ஆண்டுக் கண்ணாடியில் முகத்தின் சம்பந்தம் தோற்றுகின்றது. ஆதலால் அநிர்வசநீய சம்பந்தம் உற்பத்தியாகின்றது. அங்ஙனமே இரக்த வஸ்திரத்தில் இரக்த படமென்னும் உணர்ச்சி யுண்டாகின்றது. இரக்த நிறமுடையது படமென்னும் உணர்ச்சியால் இரக்த நிறமுடைய பதார்த்தத்தின் தாதாத்மிய சம்பந்தம் படத்திற் காணுகின்றது. இரக்த நிறமுடையது குசும்பாத் திரவியமாகலின் இரக்த நிறமுடையதின் தாதான்மியம் குசும்பாத்திரவியத்திலிருக்கின்றது; படத்திலில்லை. இவ்வாறனால் இரக்த நிறமுடைய குசும்பாத்திரவியமும் படமுமோ வியாவகாரிகமாம். அவற்றின் தாதான்மிய சம்பந்தம் அநிர்வசநீயமாக உண்டாகின்றது. அங்ஙனமே சிவப்புப் படிகமென்னும் உணர்ச்சியால் சிவப்பின் தாதான்மிய சம்பந்தம் படிகத்திற் காணுகின்றது. சிவப்பின் தாதான்மியம் புஷ்பத்திலிருக்கின்றது; படிகத்திலில்லை. இரக்த நிறமுடையதனைச் சிவப்பென்பர். இரக்த நிறமுடையது புஷ்பமாம்; ஸ்படிகமன்று. ஆதலால் ஸ்படிகத்தில் சிவப்பின அநிர்வசநீய தாதான்மிய சம்பந்தம் உற்பத்தியாகின்றது. இவ்வாறு அநேக இடங்களில் சம்பந்தியோ வியவகாரிகமாக இருக்கின்றது. அவற்றின் சம்பந்தங்களின் ஞானம் அநிர்வசநீயமாக உற்பத்தியாகின்றது. அவற்றைச் சம்சர்க்காத்தியாசமென்பர். அங்ஙனமே சேதநத்திற்கு அகங்காரத்தில் அத்தியாசமில்லை. ஆனால் சேதநமோ பாரமார்த்திகமாம். அதன் சம்பந்தத்தின் அத்தியாசம் அகங்காரத்திலிருக்கின்றது. ஆத்மத்தன்மை சேதநத்திலிருந்து, அகங்காரத்திற் றோற்றுகின்றது. ஆதலால் ஆத்மாவின் தாதான்மியம் சேதநத்திலிருந்துகொண்டு அகங்காரத்திற்றோற்றுகின்றதாகலின ஆத்மசேதநத்தின் தாதான்மிய சம்பந்தம் அகங்காரத்தில் அநிர்வசநீயமாம். அல்லது ஆத்மாவின் கண்ணுள்ள தாதான்மியத்தின் அநிர்வசநீய சம்பந்தம் அகங்காரத்திலிருக்கின்றது. ஆதலாற் சேதநம் கற்பிதமன்று. ஆனால் சேதநத்தின் தாதான்மிய சம்பந்தம் அகங்காரத்திற் கற்பிதமாம். அல்லது ஆத்மசேதநத்தினது தான்மியத்தின் சம்பந்தம் கற்பிதமாம். அத்வைத நூல்களிற் கூறிய உதாரணங்களில் அந்நியதாக்கியாதி சொல்லப்பட்டிருக்கினும், பிரஹ்மவித்தியாபரணத்திற்கூறிய படி முழுவதும் அநிர்வசநீயக்கியாதியாகக் கொண்டு நிர்வாகம்

செய்யப்பட்டிருக்கின்றது. அந்நியதாக்கியாதி பிரசித்த மன்று. விசாரசாகரத்திலும் அங்ஙனமே இந்நூலிலும் முன் இது எழுதப் பட்டிருக்கின்றது. யாண்டு அதிஷ்டானத்தோடு ஆரோப்பியத்திற் குச சம்பந்த முண்டாகின்றதோ ஆண்டு அந்நியதாக்கியாதியாம். அது வேறு நூலின்படி எழுதப்பட்டிருக்கின்றது. அதிஷ்டானத் தோடு ஆரோபத்தின் சம்பந்தமுண்டாகுமிடத்து அந்நியதாக்கி யாதியின் அங்கீகாரமே உண்டாகுமாயின், அகங்காரத்திலும் சேத நத்தின் தாதான்மியம் அந்நியதாக்கியாதியாகத் தோற்றுகின்றது என்று கூறுதலில ஓர் பாதகமுமின்று. இவ்வாறன்றால் யாண்டுப் பாரமார்த்திக பதார்த்தத்தின் அபாவம் உளதாக அதன் தோற் றம் யாண்டு உண்டாகின்றதோ, ஆண்டுப் பாரமார்த்திக பதார்த்த த்தின் அநிர்வசநீய சம்பந்தமோ வியாவகாரிக பதார்த்தத்தில் உற்பத்தியாகின்றது. அதன் ஞானமும் அநிர்வசநீயமாகவே உண் டாகின்றது. வியாவகாரிக பதார்த்தத்தின் அபாவம் உளதாகத் தோற்றம் யாண்டு உண்டாகின்றதோ, ஆண்டு அநிர்வசநீயமாகவே வேறு சம்பந்தி உற்பத்தியாகின்றது. சம்பந்தியின் ஞானமும் அநிர் வசநீயமாக உற்பத்தியாகின்றது. சிலவிடத்துச சம்பந்தமாத்திர மும் சம்பந்தத்தின ஞானமும் அநிர்வசநீயமாக உற்பத்தியாகின் றன. முழுவதுமே அத்தியஸ்தத்தின அதிஷ்டானத்திலும விஷம சத்தை அநிர்வசநீயசத்தையாம். ஆத்மாவின் அத்தியாசம் அநாத்மா விலஉண்டாகின்றது.ஆண்டும அதிஷ்டானமாகிய அநாத்மா வியாவ காரிகமாம. அத்தியஸ்தம் ஆத்மாவன்று.ஆனால் ஆத்மாவின் சம்பந் தம அநாத்மாவில் அத்தியஸ்தமாம்; ஆதலால் அநிர்வசநீயமாம்.

## ௧௦௬. அநாத்மாவில் அத்தியஸ்தமாகிய ஆத்மா விற்குப் பரமார்த்த சத்தையில் தாற்பரியம்.

முன் இது கூறப்பட்டது. அநாத்மாவில் ஆத்மாவின் அத்தியா சம் உண்டாகின்றது. ஆண்டு அத்தியஸ்தத்திற்குப் பரமார்த்த சத்தையிருத்தலால் விஷமசத்தையாம. பிரஹ்ம வித்தியாபரணத் திலும முற்கூறியவிடத்தில அத்தியஸ்தத்திற்குப் பரமார்த்தசத்தை யே கூறப்பட்டிருக்கின்றது. அதன் தாற்பரியம இதுவாம:—சுத்த பதார்த்தத்திலும் விசிஷ்டம் பின்னமாம. ஆதலால அநாத்மாவில் ஆத்மாவினது சம்பந்தத்தின் அத்தியாசம் சொல்லப் பட்டது. ஆண்டுச சம்பந்த விசிஷ்ட ஆத்மாவிற்கே அத்தியாசமாம். சொரூ பமாக ஆத்மா சத்தியமாமாகலின் அத்தியஸ்தத்திற்குப் பரமார்த்த

சத்தை சொரூப திருஷ்டியாகக் கூறுகின்றார். அத்தியஸ்தம் கற்பிதமாகின்றது. ஆதலால் அநாத்மா சம்பந்த விசிஷ்டம் கற்பிதமாயினும் சுத்தம் கற்பிதமாகாது. ஏனெனின் சுத்தத்தினும் விசிஷ்டம் பின்னமாயிருத்தலின் விசிஷ்டத்தின் கற்பிதத்தன்மை சுத்தத்தில் உண்டாகிறதில்லை. கேவல ஆத்ம சம்பந்தத்திற்கு அத்தியாசத்தைக் கூறுதலினும் சம்பந்த விசிஷ்ட ஆத்மாவிற்கு அத்தியாசம் கூறுதலும், அத்தியஸ்தத்திற்குப் பரமார்த்த சத்தைக் கூறுதலுமே சிரேஷ்டமாம். ஏனெனின் கேவல சம்பந்தத்திற்கு அத்தியாசம் கூறின் அதிஷ்டானத்திற்கு ஆரோபத்திலும் விஷமத்தைச் சம்பவியாது. ஏனெனின் ஆத்மாவின் சம்பந்தம் அந்தக்கரணத்தில் அத்தியஸ்தமாம். ஸ்புரணவடிவ சேதநத்தின் தாதான்மிய சம்பந்தம் கடமுதலியவற்றில் அத்தியஸ்தமாம்; கடம் ஸ்புரிக் (விளங்கு) கின்றது என்னும் வியவகாரம் கடத்தில் ஸ்புரணசம்பந்தத்தால் நேருகின்றதாதலின் சேதநத்தின் அதிஷ்டானமாகிய அந்தக்கரணமும் கடமுதலியனவும் வியாவகாரிகமாம். அவற்றுள் சேதநத்தின் சம்பந்தமும் வியாவகாரிகமாம்; பிராதிபாசிகமன்று. சேதநத்தின் சம்பந்தம் பிராதிபாசிகமாமாயின் பிரஹ்ம ஞானமின்றிப் பாதம் உண்டாதல் வேண்டும்; பாதம் உண்டாகிறதில்லை. ஆதலால் ஆத்ம சம்பந்தத்திற்கும் அதிஷ்டான அநாத்மாவிற்கும் வியாவகாரிக சத்தையிருத்தலின் விஷமசத்தை யின்மையால் அத்தியாசத்தின் லக்ஷணம் சம்பவியாது. ஆதலால் சம்பந்த விசிஷ்ட ஆத்மாவிற்கு அநாத்மாவில் அத்தியாஸமுளது. விசேஷியபாகத்திற்குப் பரமார்த்த சத்தையிருத்தலால் விசிஷ்டத்திற்குப் பரமார்த்த சத்தை உண்டு. அதிஷ்டானத்திற்கு வியாவகாரிகசத்தை இருக்கின்றது. இங்ஙனம் இரண்டற்கும் விஷமசத்தை இருத்தலின் அத்தியாசத்தின் லக்ஷணம் சம்பவிக்கின்றது. சொப்பனத்திற்கு அதிஷ்டானம் சாக்ஷியாம். அதற்குச் சொரூபமாகப் பாரமார்த்திக சத்தை உண்டு. பதார்த்தங்களுக்குப் பிராதிபாசிக சத்தை இருக்கின்றது ஆதலால் அதிஷ்டானத்தின் விஷமசத்தை இருத்தலின் அத்தியாசத்தின் லக்ஷணம் சம்பவிக்கின்றது.

சத்தா சொரூபம் சேதநமாம். அதற்குப் பேதங் கூறுதல் சம்பவியாதெனினும் சேதந சொரூப சத்தையினும் சத்தை என்பது பின்னபதார்த்தமாம். அதனிடத்து உத்கர்ஷ அபகர்ஷங்கள் (உயர்வு, தாழ்வுகள்) உண்டு. அதற்குப் பாரமார்த்திக வியாவகா

ரிகப் பிராதிபாஸிகமென மூன்று பேதங்கள் உண்டு. பிராதிபாஸிகத்திலும் உத்காஷாபகாஷங்களுண்டு. சொப்பனத்திற் சிலபதார்த்தங்கள் தோற்றுகின்றன; அவற்றிற்குச் சொப்பனத்திற்றானே பாதம் உண்டாகின்றது. எவற்றிற்கு ஜாக்கிரத்தில் பாதம் உண்டாகின்றதோ, அவற்றினும் சொப்பனத்தில் பாதிக்கப்படும் பதார்த்தங்களுக்கு அபகிருஷ்டசத்தை இருக்கின்றது. இவ்வாறு சேதன சொரூப சத்தைக்கும் பின்னமான சத்தையின் சொரூபம் "ஸத்யஸ்ய ஸத்யம் ப்ராணா வை ஸத்யம் தேஷாமேஷ ஸத்யம்-சத்தியத்திற்குச் சத்தியம், பிராணன்கள் சத்தியம், அவற்றிற்கு இது சத்தியம்" என்று சுருதியில் எழுதப்பட்டிருக்கின்றது. இரஜதத்தின் சத்தியிலும் சுத்தியின் சத்தை உத்கிருஷ்டமாம். இது எல்லோருக்கும் அநுபவமாம். ஆதலால் உத்காஷ அபகாஷமுடைய சத்தை சேதனத்தினும் பின்னமாம். இவ்வாறு அத்தியாசத்தின் இலக்கணம் சொல்லப்பட்டது.

## ௧௦௭. அத்தியாசத்தின் வேறு இலக்கணம்.

அத்தியாசத்தின் வேறு இலக்கணம் இதுவாம்:— தனது அபாவத்தின் அதிகரணத்தில் அவபாசமாதலே அத்தியாச மென்பர். சுத்தியில் இரஜதத்தின் பாரமார்த்திக வியாவகாரிக அபாவ மிருக்கின்றது. இரஜதம் அநிர்வசநீயமாம். ஆதலால் இரஜதாபாவத்தின் அதிகரணமாகிய சுத்தி எதுவோ அதனிடத்து இரஜதத்தின் பிரதீதியும் அதன் விஷயமு மிருத்தலான் இரஜதாவபாச மிருக்கின்றது; ஆதலால் அத்தியாசமாம். இவ்வாறு கற்பிதத்தின் அதிகரணத்தில் கற்பிதத்தின் அபாவ மிருத்தலின் சகல அத்தியாசங்களினும் இவ் விலக்கணம் பொருந்துகின்றது.

## ௧௦௮. ஒரு அதிகரணத்தில் பாவாபாவங்கட்கு விரோதமுளதெனும் சங்கையும் சமாதானமும்.

ஒரு அதிகரணத்தில் பாவ அபாவங்களுக்கு விரோத முண்டாகின்றது. சையோகமும் அதன் அபாவமும் ஒரு அதிகரணத்தில் மூலமுதலிய இட வேறுபாட்டா லிருக்கின்றன; ஓரிடத்தி லிருப்பதில்லை. ஆதலால் ஒரு அதிகரணத்தில் பாவாபாவங்கள் சம்பவியா. என்றாலும் பதார்த்தங்களின் விரோதம் அநுபவாநுசாரமாகச் சொல்லப்படுகின்றது. கேவல பாவாபாவங்களுக்கு விரோதமில்லை. அன்றி கடத்துவ படத்துவ மிரண்டும் பாவமாம்; ஓர்

அதிகரணத்திலிரா; அவற்றிற்கு விரோதமுண்டு. திரவியத்தன்மைக்கும் கடத்தன்மைக்கும் விரோதமில்லை. அங்ஙனமே கடத்தின் அதிகரணமாகிய பூதலத்தில் சென்றகாலவிசிஷ்ட கடத்தின் அபாவமிருக்கின்றது. ஆதலால் சுத்தமாகிய கடாபாவத்தோடு கடத்திற்கு விரோத மிருக்கின்றது. விசிஷ்ட கடாபாவத்தோடு கடத்திற்கு விரோதமில்லை. அங்ஙனமே சையோக சம்பந்தத்தாற் கடமுடைய பூதலத்தில் சமவாய சம்பந்தாவச்சின்ன கடாபாவ மிருக்கின்றது; அதனோடு கடத்திற்கு விரோதமில்லை. அங்ஙனமே சமானசத்தையுடைய பிரதியோகியபாவம் ஒரு அதிகரணத்தி லிருப்பதில்லை. விஷம சத்தையுடைய பிரதியோகிக்கு அபாவத்தோடு விரோதமில்லை கற்பிதத்தின் அபாவத்திற்குப் பாரமார்த்திக சத்தை இருக்கின்றது. அல்லது வியாவகாரிகசத்தை இருக்கின்றது. கற்பிதத்திற்குப் பிராதிபாஸிகசத்தை இருக்கின்றது; ஆதலால் விரோதமில்லை. யாண்டு சுத்தியில் ரஜதப்பிரம முண்டாகின்றதோ ஆண்டு வியாவகாரிக ரஜதமில்லை. ஆதலால் இரஜதத்தில் வியாவகாரிக அபாவ மிருக்கின்றது. பாரமார்த்திக ரஜதமோ ஓரிடத்தும் இல்லாதிருத்தலின் இரஜதத்தின் பாரமார்த்திக அபாவம் கேவலாந்வயியாம். ஆதலால் சுத்தியில் ரஜதத்தின் பாரமார்த்திக அபாவமு மிருக்கின்றது. அநிர்வசநீய இரஜதமும் அதன் ஞானமும் ஏககாலத்தில் உற்பத்தியாகின்றன. ஒரேகாலத்தில் இரண்டற்கும் நாச முண்டாகின்றது. ஆதலால் இரஜதம் பிராதிபாஸிகமாம். பிரதீதிகாலத்தில் சாதனசத்தை இருந்து, பிரதீதி சூனியகாலத்தில் உண்டாகிற தில்லையோ, அதனைப் பிராதிபாஸிக மென்பர். இவ்வாற்றாற் பிரமஞானமும் அதன் விஷயமும் அநிர்வசநீயமாக உற்பத்தியாகின்றன. சத்தசத்துகளுக்கு விலக்ஷணமானதை அநிர்வசநீய மென்பர். அதன் அபாவத்தினை வியாவகாரிக மென்பர். ஆதலால் பிரதியோகியபாவங்கட்குப் பரஸ்பரவிரோதமில்லை. வியாவகாரிக அபாவத்திற்கு வியாவகாரிகப் பிரதியோகியோடு விரோதமுண்டு.

## ௧0௯. அத்தியாசப் பிரசங்கத்திலுண்டாம் நான்கு சங்கைகள்.

இப்பிரசங்கத்தில் நான்கு சங்கைகள் உண்டாகின்றன. முதற்சங்கை:—சொப்பனப் பிரபஞ்சத்திற்கு அதிஷ்டானம் சாக்ஷியா மென்பது முற்கூறப்பட்டது; அது சம்பவியாது. ஏனெனின் எவ்வதிஷ

டானத்தில் எது ஆரோபிதமாகின்றதோ, அவ்வதிஷ்டானத்தோடு அது சம்பந்த முடையதாகக் காணப்படுகின்றது. எங்ஙனம்: சுத்தியில் ஆரோபிதம் இரஜதமாம். அது "இதுஇரஜத" மென்பதாகச் சுத்தியின் இதந்தையோடு சம்பந்தப்பட்டதாகக்காணப்படுகின்றது. ஆத்மாவினிடத்துக் கர்த்திருத்துவ முதலியன ஆரோபிதமாம். அவை "யான் கர்த்தா" என்று சம்பந்தப்பட்டனவாகக் காணப்படுகின்றன. அங்ஙனமே சொப்பனத்தின் யானை முதலியன சாக்ஷியில் ஆரோபிதமாயின, அவை "யானையானை,' என்னிடத்துயானை" என இவ்வாறு சாக்ஷியோடு சம்பந்தப்பட்டனவாகத் தோற்றுதல் வேண்டும்.

இரண்டாவது சங்கை இதுவாம்:— சுத்தியில் இரஜதாபாவம் வியாவகாரிகமும்,பாரமார்த்திகமுமாமென்று முற்கூறியது பொருந்தாது. ஏனெனின் அத்வைத வாதத்தில் ஒரு சேதனமே பாரமார்த்திகமாம். அதனின் வேறாகியதைப் பாரமார்த்திகமெனக்கொள்ளின் அத்வைதவாதத்திற்கு ஆனி யுண்டாகும். பாரமார்த்திக இரஜதமில்லை. யாகலின் பாரமார்த்திக இரஜதத்தின் அபாவ மிருக்கின்றதெனக் கூறுதலோ சம்பவிக்கும்; பாரமார்த்திக அபாவ மிருக்கின்றதெனக் கூறுதல் சம்பவியாது.

மூன்றாவது சங்கை யிதுவாம்:—சுத்தியில் அநிர்வசநீய இரஜதத்தின் உற்பத்தி நாச முண்டாகின்றனவென முற்கூறியது பொருந்தாது. ஏனெனின் இரஜதத்திற்கு உற்பத்தி நாசம் உளவெனின் கடத்தின் உற்பத்தி நாசங்களைப்போல இரஜதத்தின் உற்பத்தி நாசம் தோற்றுதல் வேண்டும். எங்ஙனம் கடத்தின் உற்பத்தி உண்டாகுங்காலத்துக் கடம் உண்டாகின்றதெனபதாகக் கடத்தின் உற்பத்தி தோற்றுகின்றதோ, கடத்தின் நாசம் உண்டாகும் காலத்துக் கடமழிந்தது என்பதாகக் கடத்தின் நாசம் தோற்றுகின்றதோ, அங்ஙனமே சுத்தியில் இரஜதத்தின் உற்பத்தி உண்டாகுங் காலத்து, இரஜதத்தின் உற்பத்தி உண்டாயிற் றெனபதாக உற்பத்தி தோற்றுதல் வேண்டும்; இரஜதத்திற்கு ஞானத்தால் நாசமுண்டாயின, அப்போது இரஜதத்திற்குச் சுத்தி தேசத்தில நாச முண்டாயிற்று என்பதாக நாசம் தோற்றுதல் வேண்டும். சுத்தியில் கேவல இரஜதம் தோற்றுகின்றது. அதன் உற்பத்தி நாசங்கள் தோற்றுவ தில்லை. ஆகலால் பிற நூல்களின்படி அநியதா

க்கியாதி முதலியனவே நல்லனவாம். அநிர்வசநீயக்கியாதி சமப வியாது.

நான்காவது சங்கை இதுவாம்:— சத்தசத்திற்கு விலக்ஷண மான அநிர்வசநீய இரஜத முதலியன உற்பத்தியாகின்றன என்று முன் சொல்லப்பட்டது. அது முற்றும் அசங்கதமாம். சத்திற்கு விலக்ஷணம் அசத்தாம். அசத்திற்கு விலக்ஷணம் சத்தாம். சத்தின் விலக்ஷணமாம், அசத்தன்று என்று கூறுதல் விருத்தமாம். அங்ஙனமே அசத்தின் விலக்ஷணமாம், சத்தன்று என்று கூறுதலும் விருத்தமாம்.

## ககo. முற்கூறிய நான்கு சங்கைகளின் சமாதானம்.

அவற்றிற்கு முறையே இவை சமாதானமாம். முதற்சங்கையின் சமா தானம்:—சாக்ஷியில் சொப்பன அத்தியாச முண்டாகுமாயின், "யான் யானை, என்னிடத்து யானை" என்னும் உணர்ச்சி உண்டாதல் வேண்டுமே எனனும் சங்கைக்கு இது சமாதானமாம்:—பூர்வ அநுப வத்தாற் றோன்றிய சம்ஸ்காரத்தினால் அத்தியாச முண்டாகின்றது. எங்ஙனம் பூர்வஅநுபவ முளதாகின்றதோ அங்ஙனமே சம்ஸ்கார முண்டாகின்றது. சம்ஸ்காரத்திற்குச் சமானமாக அத்தியாச முண் டாகின்றது. சகல அத்தியாசங்களுக்கும் உபாதான காரணமாகிய அவித்தையோ சமானமாம். ஆனால் நிமித்தகாரணம் பூர்வ அநுபவ த்தாற் றோன்றிய சம்ஸ்காரமாம்; அது விலக்ஷணமாம். எங்ஙனம் அநுபவ ஜநியசம்ஸ்காரமுளதாகின்றதோ, அங்ஙனமே அவித்தை யின் பரிணாம முண்டாகின்றது. எப்பதார்த்தத்தின் யானெனும் வடிவ ஞானத்தாற் றோன்றிய சம்ஸ்காரத்தோடு கூடிய அவித்தை உளதாகின்றதோ, அப்பதார்த்தத்தின் யானெனும் வடிவ அவித் தையின் பரிணாமவடிவ அத்தியாச முண்டாகின்றது. எப்பதார்த் தத்தின் எனதென்னும் வடிவ அநுபவ ஜநிய சம்ஸ்காரத்தோடு கூடிய அவித்தை உளதாகின்றதோ, அப்பதார்த்தத்தின் என தென்னும் வடிவ அவித்தையின் பரிணாமமாகிய அத்தியாசம் உண் டாகின்றது. எப்பதார்த்தத்தின் இதுவெனும் வடிவ அநுபவ ஜந நிய சம்ஸ்காரத்தோடு கூடிய அவித்தை உளதாகின்றதோ, அப் பதார்த்தத்தின் இதுவெனும் வடிவ அவித்தையின் பரிணாமமாகிய அத்தியாச முண்டாகின்றது. சொப்பனத்தின் யானை முதலியவற்றி

னது பூர்வ அநுபவம் இதுவெனும் வடிவினதாகவே உண்டாயிருக்கின்றது; யானெனும் வடிவமுதலிய அநுபவம் உண்டாகவில்லை. இதனால் அநுபவ ஜந்ய சம்ஸ்காரமும் யானை முதலியவற்றைக் கோசரிக்கும இதுவெனும் வடிவினதாகவே உண்டாகின்றது. ஆதலால் இது யானையென்னும உணாச்சி உண்டாகின்றது; "என்னிடத்து யானை, யான்யானை" என்னும் உணாச்சி உண்டாகிற தில்லை. சம்ஸ்காரம அநுமேயமாம். காரியத்திற் கநுகூலமான சம்ஸ்காரத்தின் அநுமிதி உண்டாகின்றது. சம்ஸ்காரத்தை உண்டுபண்ணுவதாகிய முன் அநுபவமும அத்தியாச வடிவமாம. அதை உண்டுபண்ணும் சம்ஸ்காரமும் இதுவெனும வடிவினதாகவே உண்டாகின்றது. அத்தியாசம பிரவாக அநாதியாம. ஆதலால் முதல் அநுபவத்தின் இதுவெனும் வடிவத்தன்மையில் ஓர ஏதுவு மிலலை என்னும் சங்கை சம்பவியாது. ஏனெனின் அநாதி பக்ஷத்தில் ஓர் அநுபவமும முதலிலில்லை. பூர்வ பூர்வங்களினும உத்தரம் யாவும் அநுபவமாம்.

அபாவத்தைப் பாரமார்த்திகமெனக் கொள்ளின் அத்துவைதத்திற்கு ஹானி யுண்டாகுமென்னும் இரண்டாவது சங்கைக்கு இது சமாதானமாம:—சகல பதார்த்தங்களும சித்தாநந்தத்திற் கற்பிதமாம. அவற்றின் அபாவம் பாரமார்த்திகமாம. அது பிரஹ்ம வடிவமாம். இது பாஷியகாரருக்குச் சம்மதம. இதில் யுக்தி மேற் கூறுவாம்; இக்காரணத்தால் அத்வைதத்திற்கு ஹானியிலலை.

மூன்றாவது சங்கையின் சமாதானம்:— சுத்தியில் இரஜதத்தின் உற்பத்தி அங்கீகரிக்கின், உற்பத்தியின் உணர்ச்சி உண்டாதல் வேண்டு மென்பதற்கு இது சமாதானமாம:—சுத்தியில் தாதான்மிய சம்பந்தத்தால் இரஜதம அத்தியஸ்தமாம். சுத்தியினது இதுவெனுந் தன்மையின் சம்பந்தம இரஜதத்தில் அத்தியஸ்தமாம். ஆதலால "இது இரஜதம" என்பதாக இரஜத உணர்ச்சி உண்டாகின்றது. எங்ஙனம சுத்தியினது இதுவெனுந் தன்மையின் சம்பந்தம் இரஜதத்தில அத்தியஸ்தமோ, அங்ஙனமே சுத்தியில் முன் பெறப்பட்ட தன்மைத் தர்ம மிருக்கின்றது. இரஜதம தோற்றுங் காலத்திற்கு முன் பெறப்பட்டுள்ளதைப் பிராக்சித்த மென்று (முன்பெறப்பட்டதெனக்), கூறுவர். இரஜத உணர்ச்சி காலத்திற்கு முன்னாப் பெறப்பட்டுள்ளது சுத்தியாம. இவ்வாற்றால் சுத்தியில் முன்பெறப்பட்ட தன்மைத் தருமமிருக்

கின்றது. அதன்சம்பந்தத்தின் அத்தியாசமும் இரஜதத்திலுண்டாகின்றது. இதனாற்றான் "இப்போதைய இரஜதம்" என்னும் உணர்ச்சி உண்டாகிறதில்லை. "முன் உண்டாகிய இரஜதத்தைப் பார்க்கின்றேன்" என்னும் உணர்ச்சி உண்டாகின்றது. இவ்வுணர்ச்சிக்கு விஷயம் முன் உண்டாகிய தன்மையாம். அது இரஜதத்தில் இல்லை. ஆனால் இரஜதத்தில் இப்போதுண்டாகிய தன்மை இருக்கின்றது. முன் உண்டாகியதன்மை இரஜதத்தில் தோற்றுகின்றது. ஆண்டு இரஜதத்தில் அநிர்வசநீயமான முன் உண்டாகியதன்மையின் உற்பத்தி அங்கீகரிக்கின் கௌரவமுண்டாகின்றது. சுத்தியினது முன் உண்டாகிய தன்மையின் உணர்ச்சி இரஜதத்தில் அங்கீகரிக்கின் அந்நியதாக்கியாதி அங்கீகரிக்கப்படுகின்றது. இத்தன்மையான இடத்தில் அந்நியதாக்கியாதியினை அங்கீகரித்திருக்கின்றார்கள். என்றாலும் சுத்தியின் முற்பெறப்பட்டதன்மைத் தாமத்தின் அநிர்வசநீய சம்பந்தம் இரஜதத்தில் உண்டாகின்றதென்னும் பக்ஷம் நலமுடையதாம். இவ்வாற்றால் சுத்தியின் முற்பெறப்பட்ட தன்மையினது சம்பந்தத்தின் உணர்ச்சியால் உற்பத்தி உணர்ச்சிக்குப் பிரதிபந்தம் உண்டாகின்றது. ஏனெனின் முற்பெறப்பட்ட தன்மை வர்த்தமான உற்பத்தி என்னுமிரண்டும் ஒன்றற்கொன்று விரோதிகளாம். யாண்டு முற்பெறப்பட்ட தன்மை உளதாகின்றதோ ஆண்டு அதீத உற்பத்தி உளதாகின்றது. யாண்டு வர்த்தமான உற்பத்தி உளதாகின்றதோ ஆண்டு முற்பெறப்பட்ட தன்மை இருப்பதில்லை. இவ்வாற்றாற் சுத்தியிலுள்ள முற்பெறப்பட்ட தன்மையினது சம்பந்தத்தின் உணர்ச்சியால் உற்பத்தியின் உணர்ச்சிக்குப் பிரதிபந்த மிருத்தலின், இரஜதத்தின் உற்பத்தி உண்டாகியும் உற்பத்தியின் உணர்ச்சி உண்டாகிறதில்லை. இரஜதத்தின் நாச முண்டாகுமாயின், அதன் உணர்ச்சி உண்டாதல் வேண்டும் என்றதற்கு இது சமாதானமாம். அதிஷ்டானத்தின் ஞானம் உண்டாகுமாயின் அப்போது இரஜதத்தின் நாசம் உண்டாகின்றது. அவ்வதிஷ்டான ஞானத்தால் இரஜதத்தின் பாதநிச்சயம் உண்டாகின்றது. சுத்தியில் மூன்று காலத்திலும் இரஜதமில்லை யென்னும் நிச்சயத்தினைப் பாதமெனபர். இத்தன்மைய நிச்சயம் நாச உணர்ச்சிக்கு விரோதியாம். ஏனெனின் நாசத்திற் பிரதியோகி காரணமாகின்றது. பாதத்தினால் பிரதியோகியின் என்றுமின்மை தோற்றுகின்றது. எதன் என்றும் இல்லையென்னும்

உணர்சசி உண்டாகின்றதோ அதன் நாச உணர்ச்சி சம்பவியாது. அல்லது எவ்வாறு கடமுதலியவற்றிற்குத் தண்ட முதலியவற்றாற் பொடியாதல் வடிவினதாகிய நாசம் உண்டாகின்றதோ அவ்வாறு கற்பிதத்திற்கு நாச முண்டாகிறதில்லை. ஆனால் அதிஷ்டானத்தின் ஞானத்தினல் அஞ்ஞான வடிவ உபாதானத்தோடு கூடிய கற்பிதத்திற்கு நிவிருத்தி உண்டாகின்றது. அதிஷ்டான மாத்திரத்தின் எஞ்சுதலே அஞ்ஞானத்தோடுகூடிய கற்பிதத்தின் நிவிருத்தியாகின்றது. அவ்வதிஷ்டானம சத்தியாம. அதன அவசேஷ (எஞ்சுதல்) வடிவ இரஜதத்தின் நாசம அநுபவ சித்தமாம். ஆதலால் இரஜதத்தினது நாசத்தின் உணாச்சி உண்டாகிறதிலலே என்று கூறுதல் சாகசத்தினலாம.

சத்தசத்திற்கு விலக்ஷண மென்று கூறுதல் விருத்தமாமென்னும நான்காவது சங்கைக்கு இது சமாதானம்:— சொரூப மின்றியதனை சத்து விலக்ஷணமென்றும், இருக்கின்ற சொரூபத்தினே அசத்து விலக்ஷணமென்றும கூறின் விரோத முண்டாகின்றது. ஏனெனின் ஒரே பதார்த்தத்தில் சொரூபமின்றிய தன்மையும் சொரூபத்தோடுகூடிய தன்மையும் சமபவியா. ஆதலால் சத்தசத்து விலக்ஷணத்திறகு முற்கூறியது பொருளன்று. ஆனல் காலத்திரயத்திலும் எதற்குப் பாதமுண்டாகிறதிலலேயோ அதனேசத்தென்பர். எதற்குப் பாதமுண்டாகின்றதோ அது சத்துவிலக்ஷணமெனப்படுகின்றது. முயறகோடு மலடிமைந்தன்போல சொரூபமில்லாததனே அசத்தென்பா. அதற்கு விலக்ஷணமானது சொரூபமுடையதாகின்றது. இவ்வாற்றல் பாதிக்கத்தக்க சொரூபமுடையது சத்தசத்துவிலக்ஷண மென்னும சொலலிற்குப் பொருளாம. சத்துவிலக்ஷணமெனனும சொலலிற்கு பாதயோக்கியமென்பது பொருள். சொரூபமுடையதென்னும இத்துணைப்பொருள் அசத்துவிலக்ஷணமென்னும சொல்லிற்காம.

## ககக. முற்கூறிய அத்தியாசத்தினது பேதத்தின் அநுவாதமும் அதில் உதாரணமும்.

இவ்வாறு யாண்டுப் பிரமஞான முண்டாகின்றதோ, ஆண்டு முழுவதுமஅநிர்வசநீய பதார்த்தங்களின்உற்பத்திஉண்டாகின்றது. சிலவிடத்துச் சம்பந்தியின் உற்பத்தி உண்டாகின்றது. எங்ஙனம்: சுத்தியில் இரஜதத்தின் உற்பத்தி இருக்கின்றது. இரஜதத்தில் சுத்

தியின்கண்ணுள்ள தாதான்மியத்தினது சம்பந்தத்தின் உற்பத்தி உண்டாகின்றது. சுத்தியின்கண்ணுள்ள சுவதாதான்மியத்திற்கு இரஜதத்தில் அந்நியதாக்கியாதியில்லை. அங்ஙனமே சுத்தியில் முன் பெறப்பட்ட தன்மைத் தாம மிருக்கின்றது. அதன் அநிர்வசநீய சம்பந்தத்தின் உற்பத்தி இரஜதத்தில் உண்டாகின்றது. அதற்கும் அந்நியதாக்கியாதி யில்லை.

இவ்வாற்றால் அந்நியோந்நியாத்தியாசத்திற்கும் இது உதாரணமாம். சம்பந்தாத்தியாசத்திற்கும் இது உதாரணமாம். சம்பந்தி அத்தியாசத்திற்கும் இது உதாரணமாம். அநிர்வசநீய வஸ்துவின் உணர்ச்சியை ஞானாத்தியாச மென்பர். ஞானத்தின் அநிர்வசநீய விஷயத்தை அர்த்தாத்தியாசமென்பர். ஆதலால் ஞானாத்தியாச அர்த்தாத்தியாசங்களுக்கும் இது உதாரணமாம். இரஜதத்துவ தர்ம விசிஷ்ட இரஜதத்தின் அத்தியாசம் சுத்தியிலிருக்கின்றது. ஆதலால் தாமி அத்தியாசத்திற்கும் இது உதாரணமாம். யாண்டு அந்நியோந்நியாத்தியாச முண்டாகின்றதோ, ஆண்டு இரண்டற்கும் ஒன்றற்கொன்று சொரூபமாக அத்தியாச முண்டாகிறதில்லை. ஆனால் ஆரோபிதத்தின் அத்தியாசம் சொரூபமாக உண்டாகின்றது. சத்திய வஸ்துவின் தாமம் அல்லது சம்பந்தம் அத்தியஸ்தமாகின்றது. சம்பந்தாத்தியாசமும் இருவகைத்தாம். சில்விடத்துத் தர்மத்தினது சம்பந்தத்தின் அத்தியாச முண்டாகின்றது. எங்ஙனம்: முற்கூறிய உதாரணத்தில் சுத்தியின்கண்ணுள்ள இதுவென்னுந் தன்மை வடிவினதாய தாமத்தினது சம்பந்தத்தின் அத்தியாசம் இரஜதத்திலிருக்கின்றது. “இரக்தபட” மென்னுமிடத்தில் குசும்பாவின்கண்ணுள்ள இரக்த வடிவமாகிய தாமத்தினது சம்பந்தத்தின் அத்தியாசம் படத்திலிருக்கின்றது. கண்ணாடியில் முகத்தினது சம்பந்தத்தின் அத்தியாச முண்டாகின்றது: அந்தக்கரணத்திற்கு ஆத்மாவினிடத்துச் சொரூபமாக அத்தியாச மிருக்கின்றது அந்தக்கரணத்தில் ஆத்மாவின் அத்தியாசம் சொரூபமாக இல்லை. ஆனால் ஆத்ம சம்பந்தத்தின் அத்தியாச மிருத்தலால் ஆத்மாவின் சம்சர்க்காத்தியாச மிருக்கின்றது. ஞானசொரூபம் ஆத்மாவாம்; அந்தக்கரண மன்று. ஞானத்தின் சம்பந்தம் அந்தக்கரணத்தில் தோற்றுகின்றது. ஆதலால், ஆத்மாவினதுசம்பந்தத்தின் அத்தியாசம் அந்தக்கரணத்திலிருக்கின்றது. அங்ஙனமே “கடம் விளங்குகின்றது, படம் விளங்குகின்ற” தென்பதாக ஸ்புரண சம

பந்தம் எல்லாப் பதார்த்தங்களினும் தோற்றுகின்றது. ஆதலால், அந்த சம்பந்தத்தின் அத்தியாசம் சகல பதார்த்தங்களினு மிருக்கின்றது. ஆத்மாவில் ஒற்றைக்கண்ணுடைமை முதலிய இந்திரிய தர்மங்கள்தோற்றுகின்றன. ஆதலாலஒற்றைக்கண்ணுடைமைமுதலிய தர்மங்களின் அத்தியாசம் ஆத்மாவில இருக்கின்றது. இந்திரியங்களின் தாதான்மிய அத்தியாசம ஆத்மாவினிடத்திலில்லை. ஏனெனின் "யான் ஒற்றைக்கண்ணன்" என்னும உணர்ச்சி உண்டாகின்றது. "யான் நேத்திர"மெனனும உணர்ச்சி உண்டாகிறதில்லை. ஆதலால் நேத்திரத்தின் தர்மமாகிய ஒற்றைக்கண்ணுடைமையின் அத்தியாசம ஆத்மாவிலிருக்கின்றது; நேத்திரத்தின் அத்தியாசமில்லை. இது தர்மாத்தியாசத்திற் குதாரணமாம. நேத்திர முதலிய சகல பிரபஞ்சத்தின் அத்தியாசமும் ஆத்மாவிலிருக்கின்றது. என்றும பிரஹ்ம சேதனத்தில சகல பிரபஞ்சத்தின் அத்தியாசமுமிருக்கின்றது. துவமபதார்த்தத்தில் சகல பிரபஞ்சத்தின அத்தியாசமு மில்லை. அவித்தைக்கு இத்தனமைய அற்புத மகிமையுண்டு. ஒரே பதார்த்தத்திற்கு ஒரு தர்ம விசிஷ்டத்தின் அத்தியாச முண்டாகின்றது. மற்றைய தர்ம விசிஷ்டத்தின் அத்தியாசமுண்டாகிறதில்லை. எங்ஙனம: பிராஹ்மணத்தன்மை முதலிய தர்ம விசிஷ்ட சரீரத்தின் தாதான்மியாத்தியாசம ஆத்மாவில் உண்டாகின்றது. சரீரத்தனமை விசிஷ்ட சரீரத்தின் அத்தியாச முண்டாகிறதில்லை. இதனுற்றான விவேகியும "பிராஹ்மணன் யான், மனிதன் யான்" என்று வியவகரிக்கின்றான். "சரீரம யான்" என்னும வியவகாரம விவேகிக குண்டாகிறதில்லை. ஆதலால் அவித்தைக்கு அற்புத மகிமை இருத்தலின் இந்திரியங்களின் அத்தியாசமின்றி ஆத்மாவினிடத்து ஒற்றைக்கண்ணுடைமை முதலிய தர்மங்களினத்தியாசம் சம்பவிக்கின்றது. இது தர்மாத்தியாசத்திற்கு உதாரணமாம. வேறொன்றை ஆசிரயித்ததாயச சுதந்திர மின்றி இருப்பதனைத தர்மமென்பர். ஆதலால்சம்பந்தமும தர்மமேயாம. அதன் அத்தியாசமும தர்மாத்தியாசமேயாம. ஆனால் தர்மம் இருவகையாம்:— ஒன்றோ பிரதியோகி அநுயோகிகளது உணர்ச்சியின் அதீனமாகிய உணர்ச்சிக்கு விஷயமாகின்றது. சில தர்மம அநுயோகி மாத்திரத்தினது உணர்ச்சியின் அதீனமாகிய உணர்ச்சிக்கு விஷயமாகின்றது. ஒருகால்அநுயோகியின் உணர்ச்சியின்றிக் கேவலதர்மத்தின் உணர்ச்சியும உண்டாகின்றது. எங்ஙனம: கடத்தன்மைமுதலியவற்றின்

உணர்ச்சியில் அநுயோகிமாத்திரத்தினது உணர்ச்சியின் அபேக்ஷை இருக்கின்றது. கடத்தன்மை நித்தியமாமென்றல் முதலிய வாக்கிய ஜந்நிய உணர்ச்சியில் அநுயோகிப் பிரதியோகிகளின் அபேக்ஷையுமில்லை. இவ்வாற்றால் இரண்டுவகைத் தாமமுளது. அநுயோகிப் பிரதியோகிகளின் உணர்ச்சியின்றி எதன் உணர்ச்சி உண்டாகிறதில்லையோ, அத்தன்மைய தாமத்தினைச் சம்பந்தமென்பர். கடத்தன்மை முதலியவற்றைக் கேவலதர்மமென்பர்; சம்பந்தமென்று சொல்லுவதில்லை. இவ்வாற்றால் சம்பந்தாத்தியாசமும் தாமாத்தியாசமேயாம். முற்கூறிய விதத்தால் சகல பிரமத்திலும் இரண்டு இலக்கணங்கள் சமபவிக்கின்றன. அதிஷ்டானத்தினும் விஷமசத்தையுடைய அவபாசம் அத்தியாசமெனப்படும். அல்லது தனது அபாவாதிகரணத்தில் தனது அவபாசம் அத்தியாசமெனப் படுகின்றது. பிராதிகாலத்தில் அநிர்வசநீய விஷயமும் அதன் ஞானமும் உற்பத்தியாகின்றன. ஆதலால் அத்தியாசத்திற்கு இரண்டு லக்ஷணங்களும் சமபவிக்கின்றன. ஆனால் பரோக்ஷம் அபரோக்ஷமென்னும் பேதத்தால் பிரமம் (பிராந்தி) இருவகைத்தாம். அபரோக்ஷப்பிரமத்தின் உதாரணமோ சொல்லப்பட்டது. யாண்டு வந்நி இல்லாத இடத்தில் வந்நியின் அநுமிதிஞானமுண்டாகின்றதோ அது பரோக்ஷப்பிரமமாம். அது இவ்வாறுண்டாகின்றது:— மஹானஸத்துவம (அடுக்களைத்தன்மை) வந்நியின் வியாப்பியமன்று. மஹானஸத்தில் அடிக்கடி வந்நிதேசத்தின் மஹானஸத்தன்மையின் வியாப்பியத்தன்மைப்பிரமமுண்டாய்விடுகின்றது. ஆண்டு வந்நியின் நியகாலத்தில இவ்வாறு அநுமானம் உண்டாகின்றது. “இந்த மஹானஸம் வந்நியுடைத்து, மஹானஸத்தன்மையால், முன்கண்ட மஹானஸம்போல” என்று இவ்வாறு மஹானஸத்தில் வந்நியின் அநுமிதி வடிவப் பிரமஞானமுண்டாகின்றது. வஞ்சகன்கூறு வாக்கியத்தால் வந்நியின் சப்தப்பிரமமுண்டாகின்றது. அவ்விரண்டும் பரோக்ஷஞானமாம். யாண்டுப் பரோக்ஷப்பிரமமுண்டாகின்றதோ, ஆண்டு அநிர்வசநீய விஷயத்தின் உற்பத்தி அங்கீகரிக்கப்படுகிறதில்லை. ஆனால் அத்தேசத்தில் அசத்தாகிய வந்நியின் உணர்ச்சி உண்டாகின்றது. ஆதலால அத்தியாசலக்ஷணத்தின இலக்ஷியமோ பரோக்ஷப்பிரமமன்று. வந்நியின் அபாவாதிகரணத்தில் வந்நியின் உணர்ச்சி இருத்தலால் சுவ அபாவாதிகரணத்தில் அவபாசமாம். விஷயத்தினையும ஞானத்தினையும் அவபாசமென்பர். வந்நியின்

அபாவாதிகரணத்தில் வஹ்நியின் பரோக்ஷஞான வடிவ அவபாச மிருத்தலால் முற்கூறிய இலக்ஷணத்திற்கு அதிவியாப்தி உண்டா கின்றதெனினும் இலக்ஷணத்தில் அவபாச பதத்தால் அபரோக்ஷ ஞானத்தின் கிரகணமிருக்கின்றது. ஆதலால் பரோக்ஷப் பிரமத் தில் அத்தியாச லக்ஷணத்தின் அதிவியாப்தியில்லை. யாண்டுப் பரோ க்ஷப்பிரம முண்டாகின்றதோ, அந்த ஸ்தானத்தில் எவ்வாறு நை யாயிகா முதலியோர் அந்நியதாக்கியாதி முதலியவற்றால் நிர்வாகஞ் செய்கின்றனரோ, அதனின் விலக்ஷணமாகக் கூறுதலில் அத்வைத வாதிக்கு ஆக்கிரகமில்லை; அபரோக்ஷப்பிரமத்திற்றான் பாரிபாஷிக அத்தியாசம விலக்ஷணமாகக் கொண்டிருக்கின்றனர். ஏனெனின் கர்த்திருத்வமுதலிய அநாத்தப் பிரமம அபரோக்ஷமாம. அதனது சொரூபத்தில் ஞானத்தால் நிவர்த்திக்கப்படுந்தன்மையின் பொ ருட்டு அத்தியாசம நிரூபிக்கப்படுகின்றது. ஆதலால் அபரோக்ஷ ப்பிரமத்திற்கே திருஷ்டாந்தத்தன்மையின்பொருட்டு அத்தியாச த்தன்மையைப் பிரதிபாதித்தலில ஆக்கிரகமாம. பரோக்ஷப் பிர மத்தில் பிறநூலினும வேற்றுமை கூறுதலிற் பிரயோஜனமின்று. அபரோக்ஷப்பிரமத்தில முற்கூறியபடி இலக்ஷணத்தின் பொருத்த முண்டாகின்றது.

## ௧௧௨-௧௩௬. சித்தாந்தசம்மதமான அநிர்வசநீயக் கியாதியின் கிரமம்.

### ௧௧௨. சாம்பிரதாயிக மதம்.

சித்தாந்தத்தில் அநிர்வசநீயக்கியாதி யுளது. அதன் கிரமம் இது வாம்:— யாண்டு இரஜ்ஜு முதலியவற்றில் சர்ப்பமுதலியவற்றின் பிரமமுண்டாகின்றதோ, ஆண்டு அதிஷ்டானத்தின் சாமானிய ஞானம் அத்தியாசத்திற்கு ஏதுவாம். ஆதலால் இரஜ்ஜுவின் இது வெனுமவடிவம சாமானியஞானமாம். அச்சாமாந்யஞானம்தோஷ த்தோடு கூடிய நேத்திரமாகிய பிரமாணத்தால் உற்பத்தியாகின்ற தாகலின் பிரமையாம். அந்தத் தோஷத்தோடுகூடிய நேத்திரஜந் நிய இதுவெனும் வடிவ விருத்தி அவச்சின்ன சேதனத்தின்கண் ணுள்ள அவித்தையின் பரிணாமம் சர்ப்பஞானமாகின்றது. அதனை ஞானாபாசமென்பர். தோஷத்தோடுகூடிய நேத்திரத்திற்கு இரஜ் ஜுவோடு சம்பந்தமுண்டாகவே அந்தக்கரணத்தின் இதுவெனும் வடிவ விருத்தியோ இரஜ்ஜு தேசத்திற் சென்றது. அதனால்

பிரமாத்திருசேதனம் இதுவென்பதின் அவச்சின்ன சேதனம் என்பவற்றின் உபாதி ஓரிடத்திருத்தலால் பிரமாத்திருசேதனத்தோடு இதுவெனும் விருத்தி அவச்சின்ன சேதனத்திற்குப் பேதமிருப்பதில்லை. ஆதலால் இரசகுவின் சாமானிய இதுவெனும் வடிவம் பிரத்தியக்ஷமாம். பிரத்தியக்ஷ விஷயத்தின இதுவெனும வடிவ ஞானமும பிரத்தியக்ஷமாம். எந்த விஷயத்திற்குப் பிரமாத்திருசேதனத்தோடு அபேதமுண்டாகின்றதோ அவ்விஷயம் பிரத்தியக்ஷமெனப்படுகின்றது. பிரத்தியக்ஷ விஷயத்தின் ஞானம் பிரத்தியக்ஷமெனப்படுகின்றது. அல்லதுபிரமாணசேதனத்தோடு விஷய சேதனத்திற்குள்ள அபேதமே ஞானத்தின் பிரத்தியக்ஷத் தன்மைக்குப் பிரயோஜனமெனின், முற்கூறிய ஸ்தலத்தில பிரமாத்திரு சேதனத்தின் அபேதமும விருத்தி வாயிலாக உண்டாயிருக்கின்றது. ஆதலால் விருத்திரூப பிரமாண சேதனத்திற்கு விஷய சேதனத்தோடுள்ள அபேதமும அபாதிதமாம. எங்ஙனம தடாக ஜலத்திற்கு வாய்க்காலின்வழியாய் வயலஜலத்தோடு அபேதமுண்டாகின்றது; வாய்க்கால் ஜலத்திற்கும் வயல்ஜலத்தோடு அபேதமுண்டாகின்றது. ஈண்டு தடாகஜலத்திற்குச் சமானம பிரமாத்திரு சேதனம். வாய்க்காலுக்கொத்தது விருத்தி. வாய்க்கால ஜலத்திற்கு ஒத்தது விருத்திசேதனம். வயலுக்கொத்தது விஷயம. வயலின்கண்ணுள்ள ஜலத்திற்கொத்தது விஷயசேதனம். முற்கூறிய திருஷ்டாந்தத்தால் விஷய சேதனத்திற்கோ பிரமாத்திரு சேதனத்தோடு அபேதம் சம்பவிக்கின்றது. ஆனால் பிரமாத்திருசேதனத்தோடு கடமுதலிய விஷயங்களுக்கு அபேதம் சம்பவிக்கிறதில்லை. எங்ஙனம: தடாக ஜலத்தோடு வாய்க்கால வழியாய் வயல் ஜலத்திற்கு அபேதம உண்டாகின்றது. பாத்திவமாகிய வயலுக்குத் தடாக ஜலத்தோடு அபேதமுண்டாகிறதில்லை; ஆதலால் கடமுதலியவிஷயங்களின் பிரத்தியக்ஷத்தில பிரமாத்திரு சேதனத்தோடு அபேதமாதல் ஏதுவாமென்று கூறியது சம்பவியாது. என்றாலும பிரமாத்திரு சேதனத்தோடு அபேதமாதல் விஷயத்தின பிரத்தியக்ஷத் தன்மைக்கு ஏதுவாமென்று கூறுதலால் பிரமாத்திரு சேதனத்திற்கும விஷயத்திற்குமஏகத்துவமசொல்லக் கருதியதன்று. ஆனால் பிரமாத்திரு சேதனத்தின் சத்தையினும் விஷயத்திற்கு வேறு சத்தையில்லை; பிரமாத்திருசேதனத்தின் சத்தையே எந்த விஷயத்திற்குச் சத்தை ஆகின்றதோ அவ்விஷயம் பிரத்தியக்ஷமாகின்ற

மென்னும் பொருள் சொல்லக் கருதியதாம. கடத்தின் அதிஷ்டானம கடாவச்சின்ன சேதனமாம. இரஜ்ஜுவின் அதிஷ்டானம் இரஜ்ஜு அவச்சின்ன சேதனமாம். இவ்வாறாற் சகல விஷயங்களுக்கும அதிஷ்டானம விஷயாவச்சின்ன சேதனமாம். அதிஷ்டானத்தின் சத்தைக்கு வேறாக அந்நியஸ்தததிறகுச சத்தை இல்லை. ஆனால் அதிஷ்டானத்தின் சத்தையே அநநியஸ்தத்தின் சத்தையாகின்றது. ஆதலால விஷயாவசசின்ன சேதனததின் சத்தையினும் வேறாகிய சத்தை விஷயத்திறகிலலை. அநதக்கரணத்தின் விருத்தி வாயிலாகப் பிரமாத்திரு சேதனத்திற்கு விஷய சேதனத்தோடு அபேதமுண்டாயின் அப்போதும பிரமாததிருசேதனமும் விஷய சேதனத்தோடு அபின்னமாய் விஷயததிற்கு அதிஷ்டானமாகின்றது. ஆதலால் அபரோக்ஷவிருததியின் விஷயத்திறகு அதிஷ்டானமாகிய பிரமாததிருசேதனம எதுவோ அதன் சததையினும் விஷயத்திற்கு வேறு சத்தை இல்லாமையே பிரமாத்திருசேதனத்தோடு விஷயததிற்கு அபேதம என்று சொலலைப்படுகின்றது. அது முற்கூறியபடி சமபவிக்கின்றது. இதனாற்றான் அபரோக்ஷ ஸதலத்தில் விஷயமாகிய இடத்தில் விருததியின் போக்குச் சொல்லப்பட்டது. எங்ஙனம வாய்க்காலின் சமபநதமின்றித் தடாக ஜலததிற்கும் வயல் ஜலததிற்கும ஏகததுவ முண்டாகிறதிலலையோ, அங்ஙனமே விருத்தி சமபநதமின்றிப் பிரமாத்திருசேதனததிற்கும் விஷயசேதனததிற்கும ஏகததுவமுண்டாகிறதிலலை. ஆதலால் பரோக்ஷஞான காலத்தில பிரமாததிரு சேதன விஷயசேதனங்களின் பேதத்தால் பிரமாத்திரு சேதனத்தின் பின்னசததையுடையது விஷயமாயிருததலின பிரமாததிரு சேதனததின் அபின்ன சததையுடையது விஷயமாகாது. அங்ஙனமே விருததி வெளிப்படுதலின்றி அபரோக்ஷ ஞான காலததிலும் பின்னசததையுடையது விஷயமாகும். ஆதலால் விஷயதேசததில விருததியின் வெளிப்படுதல் அங்கீகரிக்கப் பட்டிருக்கின்றது. இவ்வாற்றால் "இது சாப்பம் இது இரஜதம்" என்றல் முதலிய அபரோக்ஷப் பிரமஞானததின் உற்பத்தியுண்டாகின்றது. ஆண்டுப் பிரமததினும் அவ்வியவகித பூர்வ காலத்தில் பிரமத்திற்கு ஹேது அதிஷ்டானததின் சாமானிய ஞானமாகின்றது. அது பிரத்தியக்ஷரூபப்பிரமையாகின்றது. அதனால சாப்பமுதலிய விஷயமும அதன் ஞானமும் உற்பததியாகின்றன வென்பது சாமபிரதாயிகமதமாம்.

## பிரகாசம்.] ககசு. முற்கூறிய அநிர்வசநீயக்கியாதி கூ0ரு வடிவமாகிய அர்த்தத்தில் சங்கையும், சம்க்ஷேப சாரீரகத்தின் சமாதானமும்.

சங்கை:- ஆனால் அபரோக்ஷப் பிரமையினால் அஞ்ஞானத்தின் நிவிருத்தி நியமமாக உண்டாகின்றது. இவ்வர்த்தத்தை எட்டாவது பிரகாசத்தில் பிரதிபாதனம் செய்யப்படும். ஆதலால் இரஜ்ஜு சுத்தி முதலியவற்றின் இதுவெனும் வடிவ அபரோக்ஷப் பிரமையினாலும், விஷய சேதனத்தினது அஞ்ஞானத்தின் நிவிருத்தி உண்டாயின், உபாதானத்தின் அபாவத்தால் சர்ப்ப முதலியன அவற்றின் ஞானமென்பவற்றின் உற்பத்தி சம்பவியாது.

இதற்குச் சமாதானம் சம்க்ஷேபசாரீரகத்தை அநுசரித்தவர்கள் இவ்வாறு கூறுகின்றனர்:—இதுவெனும் வடிவவிருத்தியினால் விஷயத்தின் இதுவெனும் அம்சத்தினது அஞ்ஞானத்தின் நிவிருத்தி உண்டாகின்றது. இரஜ்ஜுத்தன்மை சுத்தித்தன்மை முதலிய விசேஷ அம்சங்களினது அஞ்ஞானத்தின் நிவிருத்தி உண்டாகிறதில்லை. இரஜ்ஜுத்தன்மை சுத்தித்தன்மை முதலிய விசேஷ அம்சங்களின் ஞானத்தினாலேயே அத்தியாசத்தின் நிவிருத்தி உண்டாகுதலால் விசேஷ அம்சத்தின் அஞ்ஞானமே அத்தியாசத்திற்கு ஏதுவாம். சாமாநிய அம்சத்தின் அஞ்ஞானம் அத்தியாசத்திற்கு ஏதுவன்று. சாமாநிய அம்சத்தின் அஞ்ஞானமும் அத்தியாசத்திற்கு ஏதுவாகுமாயின், இதுவெனும் வடிவ சாமாநிய ஞானத்தினாலும் அத்தியாசத்திற்கு நிவிருத்தி உண்டாதல் வேண்டும். ஏனெனின், எதன் அஞ்ஞானத்தினால் பிரமம் உண்டாகின்றதோ அதன் ஞானத்தால் நஷ்டமாமென்பது நியமம். ஆதலால் இதுவெனும் அம்சத்தினது அஞ்ஞானத்தின் அபேக்ஷை அத்தியாசத்திலில்லை. ஆனாலும் இதுவெனும் வடிவ நேத்திரப் பிரமையின் அபேக்ஷை அபரோக்ஷ அத்தியாசத்திலிருக்கின்றது. ஏனெனின், இரஜ்ஜு முதலியவற்றோடு நேத்திரத்தின் சையோகமுண்டாகுமாயின் சர்ப்பமுதலியவற்றின் அபரோக்ஷப் பிரமமுண்டாகின்றது. நேத்திரத்தின் சையோகமின்றி உண்டாகிறதில்லை. ஆதலால் நேத்திர ஜந்நிய அபரோக்ஷப் பிரமைவடிவமாகிய அதிஷ்டானத்தின் சாமாநிய ஞானமே அத்தியாசத்திற்கு ஏதுவாம். ஆண்டு வேறு விதமாகவோ சாமாநிய ஞானத்தின் உபயோகம் அத்தியாசத்திற் சம்பவிக்கிறதில்லை. அத்தியாசத்தின் உபாதானமாகிய அஞ்ஞானத்

தின் க்ஷோபம் சாமானிய ஞானத்தினால் உண்டாகின்றதென்று மதித்தல் வேண்டும். இவ்வாற்றால் அதிஷ்டானத்தின் சாமாநிய ஞானம் அத்தியாசத்திற் காரணமாயிருத்தலின், இதுவெனும் தன்மை அம்சத்தின் அஞ்ஞானம் அத்தியாசத்திற்கு ஏதுவன்று.

## ௧௧௪. கவிதார்க்கிக சக்கரவர்த்தி நிருசிம்ஹ பட்டோபாத்தியாயரதுமதத்தின் அநுவாதமும் அநாதரமும்.

கவிதார்க்கிக சக்கரவர்த்தி நிருசிம்ஹபட்டோபாத்தியாயர் அதிஷ்டானத்தின் சாமாநிய ஞானம் அத்தியாசத்தில் ஏதுவாதலை நிஷேதித்திருக்கின்றனர். அதிஷ்டானத்தோடு நேத்திர சையோகமுண்டாகுமாயின் சர்ப்பாதிகளின் அத்தியாசமுண்டாகின்றது. நேத்திரசையோகமுண்டாகாவிடின் சர்ப்பாதிகளின் அத்தியாசமுண்டாகிறதில்லை. இவ்வாற்றால் இந்திரிய அதிஷ்டானங்களினது சையோகத்தின அந்வயவெதிரேகங்களால் எந்தச் சாமாநிய ஞானம் அத்தியாசத்திற்குக்காரணமாதல் முன் சொல்லப்பட்டிருக்கிறதோ, அவ்வந்வய வெதிரேகங்களாலும் இந்திரியஅதிஷ்டானங்களின் சையோகமே அத்தியாசத்திற்குக் காரணமாதல் பெறப்படுவதாகின்றது. இந்திரிய சையோகஜந்நிய சாமாநிய ஞானம் அத்தியாசத்திற்குக் காரணமாதல் பெறப்படுவதில்லை. ஏனெனின் அந்வயவெதிரேகங்களால் காரணத்தன்மையின் நிச்சயமுண்டாகின்றது. நேரே காரணத்தன்மை சம்பவிக்குமிடத்துப் பரம்பரையாகக் காரணத்தன்மை கற்பித்தல் அயோக்கியமாம். ஆதலால் இந்திரிய சையோகத்தின் அந்வயவெதிரேகங்களால் அத்தியாசத்தில் இந்திரிய அதிஷ்டானங்களின் சையோகத்திற்கே நேர் காரணத்தன்மை உசிதமாம். அதிஷ்டானத்தின் சாமாநிய ஞானவாயிலாக இந்திரிய சையோகத்திற்குக் காரணத்தன்மை கூறுதல் உசிதமன்று. அதிஷ்டானத்தின் சாமாநிய ஞானத்தால் அவித்தையில் க்ஷோபம் அங்கீகரிக்கப்பட்டிருப்பதுபோல அதிஷ்டான இந்திரியங்களின் சையோகத்தினாலேயே க்ஷோபம் அங்கீகரித்தல்வேண்டும். அதிஷ்டானத்தின் சாமாநிய ஞானத்தினை அத்தியாசத்தில் ஏதுவன்றெனக் கொள்ளின், அத்தியாசத்திற்குமுன் இதுவெனும் வடிவ அபரோக்ஷப் பிரமை இருத்தலால் அஞ்ஞான நிவிருத்தியின் எச்சங்கை சமாதானங்கள் உளவோ அவையும் நிர்மூலமாகின்றன.

இதுவும் அநுகூல இலாகவமாம். இவ்வாற்றால் அதிஷ்டானத்தின் சாமாந்யஞானம் அத்தியாசத்திற் காரணமாதலின் நிஷேதத்தைக் கவிதார்க்கிக சக்கரவர்த்தி நிருசிம்ஹபட்டோபாத்தியாயர் கூறியிருக்கின்றனர். அவரும் அத்வைத வாதியே. என்றாலும் சாம்பிரதாயிக வசனத்திலும் அவர் வார்த்தை விருத்தமாம். ஆதலால் அவர் வார்த்தையின் கண்டனத்தை இப்பிரசங்கத்திற்றானே விஸ்தாரமாகக் கூறுவாம்.

ஆதலால் அதிஷ்டானத்தின் சாமாந்ய ஞானம் அத்தியாசத்திற்கு ஏதுவாயிருத்தலின் இதுவென்ற தன்மை அம்சத்தினது அஞ்ஞானத்தின் அபேக்ஷை அத்தியாசத்திலில்லை. இதனாற்றான் சம்க்ஷேப சாரீரகத்தில் அதிஷ்டான ஆதாரங்களுக்குப் பேதம் கூறப்பட்டிருக்கின்றது. விலாசத்தோடு கூடிய அஞ்ஞானத்தின் விஷயம் அதிஷ்டானமெனப்படுகின்றது. காரியத்தினை விலாசமென்பர். சர்ப்பமுதலியவிலாசத்தோடு கூடிய அஞ்ஞானத்தின் விஷயம் இரஜ்ஜு முதலிய விசேஷ வடிவமாயிருத்தலின் சர்ப்பமுதலியவற்றின் அதிஷ்டானம் இரஜ்ஜுமுதலியவிசேஷவடிவமாம். அத்தியஸ்தத்தில் அபிந்நமாய்த் தன் ஸ்புரணமுண்டாகின்றதோ அது ஆதாரமெனப்படுகின்றது. "இது சர்ப்பம் இது வெள்ளி" என்றல் முதலிய பிரம உணர்ச்சியில் அத்தியஸ்தமாகிய சர்ப்பம் இரஜதம் முதலியவற்றின் அபின்னமாய்ச் சாமாந்ய இதுவெனும் அம்சத்தின் ஸ்புரணமுண்டாகுதலால் சாமாந்ய அம்சம் ஆதாரமாம். இம்மதத்தில் அதிஷ்டான அத்தியஸ்தங்களுக்கு ஒரு ஞானத்திற்கு விஷயமாந்தன்மை உண்டாகின்றது. இந்நியமத்தின ஸ்தானத்தில் ஆதார அத்தியஸ்தங்களுக்கு ஒரு ஞானத்திற்கு விஷயமாந்தன்மை உண்டாகின்றதென்பது நியமம். அதிஷ்டான அத்தியஸ்தங்களுக்கு ஒரு ஞானத்திற்கு விஷயமாந் தன்மை அங்கீகரிக்கின், இரஜ்ஜு முதலிய விசேஷ வடிவத்திற்கு அதிஷ்டானத்தன்மையிருத்தலால் இரஜ்ஜு சர்ப்பம் சுத்தி வெள்ளி என்னும் பிரமமுண்டாதல் வேண்டும். சாமாந்ய இதுவெனும் அம்சத்திற்கு ஆதாரத் தன்மை இருக்கின்றது; அதிஷ்டானத்தன்மை இல்லை. ஆகலின் "இது சர்ப்பம் இது வெள்ளி" என்னும் பிரமம் உண்டாகலாகாது. இதனால் விசேஷ அம்சத்தின் அஞ்ஞானமே அத்தியாசத்திற்கு ஏதுவாம். இம்மதத்தில் ஆதார அத்தியஸ்தங்களுக்கே ஒரு ஞானத்திற்கு விஷயமாந்தன்மை அங்கீகரித்தல் வேண்டும்.

## ௧௧௫. அத்தியாசத்தின் காரணத்தன்மையில் பஞ்சபாதிகை விவரணங்களின் மதம்.

பஞ்சபாதிகை விவரணகாரர்களின் மதத்தின் அநுசாரிகள் இங்ஙனம் கூறுகின்றனர்:— ஆவரணம் விக்ஷேபமென்னும் பேதத்தால் அஞ்ஞானத்திற்கு இரண்டு சக்திகள் உண்டு. ஆவரண விசிஷ்ட அஞ்ஞான அம்சத்திற்கு ஞானத்தோடு விரோதமிருத்தலின் நாசமுண்டாகின்றது. விக்ஷேபசக்தி விசிஷ்ட அஞ்ஞான அம்சத்திற்கு ஞானத்தோடு விரோதமில்லை ஆதலால் ஞானத்தினால் அதற்கு நாசமுண்டாகிறதில்லை. இவ்வாறாதலை அவசியம் அங்கீகரிக்கத்தக்கதாம். அங்ஙனமில்லையாயின், ஜலத்திற்பிரதிபிம்பித்த விருக்ஷத்தின் மேற்பாகத்தில் கீழிடத்தி லிருத்தற்றன்மைப் பிரமமுண்டாகின்றது. ஆண்டு விருக்ஷத்தின் விசேஷ வடிவ ஞானமுண்டாயினும் மேற்பாகத்தில் கீழிடத்திருத்தற் றன்மை அத்தியாசத்தின் நிவிருத்தி உண்டாகிறதில்லை. அங்ஙனமே ஜீவன்முக்தனாகிய வித்வானுக்குப் பிரஹ்மாத்மாவின் விசேஷ வடிவ ஞானமுண்டாகியும் அந்தக்கரணமுதலிய வடிவினதாகிய விக்ஷேபத்தின் நிவிருத்தி உண்டாகிறதில்லை. ஆண்டு முற்கூறியஸ்தலத்தைப்போல சாமானிய வடிவமாக ஞானமும் விசேஷவடிவமாக அஞ்ஞானமுமோ சொல்லுதல் பொருந்தாது. விக்ஷேபசக்தி விசிஷ்ட அஞ்ஞான அம்சத்திற்கு ஞானத்தினால் நிவிருத்தி உண்டாகிறதில்லை. ஆவரணசக்தி விசிஷ்ட அஞ்ஞானாம்சத்திற்கே ஞானத்தினால் நிவிருத்தி உண்டாகின்றதென்பதே சமாதானமாம். அங்ஙனமே இரஜ்ஜுசுத்திமுதலியவற்றின் சாமானியஞானத்தால் இதுவெனும் அம்சத்தின் ஆவரணத்திற் கேதுவாகிய அஞ்ஞானாம்சத்தின் நாசமுண்டாகின்றது. சர்ப்பம் இரஜதமுதலிய விக்ஷேபத்திற் கேதுவாகிய அஞ்ஞானாம்சத்தின் நாசமுண்டாகிறதில்லை. ஆதலால் இதுவெனும் வடிவ சாமானியஞான முண்டாகியும் சர்ப்பமுதலிய விக்ஷேபத்திற்கு ஏதுவாகிய இதுவென்னும் அம்சத்தின் அஞ்ஞானமும் சம்பவிக்கின்றது. இவ்வாறானால் இதுவெனும் வடிவ சாமானியஞான முண்டாகியும் விலக்ஷணத்தோடு கூடிய அஞ்ஞானத்தின் விஷயமாகிய இரஜ்ஜு முதலிய சாமானிய அம்சம் சம்பவிக்கின்றது. ஆதலால் அதிஷ்டானத் தன்மைக்கு இதுவெனு மம்சத்திற் சம்பவமிருத்தலின், அதிஷ்டான அத்தியஸ்தங்களுக்கு ஒரு ஞானத்திற்கு விஷய

மாந்தன்மை சம்பிரதாயத்தினால் அடையப்பட்டதாயிருக்கின்றது. அதற்குப் விரோதமில்லை.

## ௧௧௬. பஞ்சபாதிகை சங்க்ஷேபசாரீரகங்களினது மதத்தின் விலக்ஷணத்தன்மையும், அதில் இரகசியமும்.

சங்க்ஷேபசாரீரகத்தின்படி விசேஷ அம்சத்தில் அதிஷ்டானத்தன்மை இருக்கின்றது. சாமானிய அம்சத்தில் அதிஷ்டானத் தன்மை இல்லை. விசேஷ அம்சத்தில் ஆதாரத்தன்மையில்லை. இம்மதத்தில் சாமானிய அம்சத்தில் அதிஷ்டானத்தன்மை இருக்கின்றது. இத்துணைப் பேதமாம். விசேஷ அம்சத்தில் ஆதாரத்தன்மையின் அபாவம் இம்மதத்திலும் சமானமாம். ஏனெனின் அத்தியஸ்தத்தோடு அபின்னமாய்த் தோற்றுவது எதுவோ அது ஆதாரமெனப்படுகின்றது. "இரஜ்ஜு சர்ப்பமாம்" எனஇவ்வாறு உணர்ச்சி உண்டாகுமாயின், அத்தியஸ்தத்தோடு அபின்னமாய் விசேஷ அம்சம் தோற்றும். முற்கூறியபடி தோற்றுகிறதில்லை. ஆதலால் விசேஷ வடிவமாக இரஜ்ஜு ஆதாரமன்று. இவ்வாறன்றால் முதற் பக்ஷத்தில் இதுவென்னுந் தன்மை வடிவமாக இரஜ்ஜுவினும் சுத்தியினும் பிரமாணஜந்நிய ஞானத்தின் பிரமேயத்தன்மை இருக்கின்றது. இரஜ்ஜுத்தன்மைவடிவமாகவும், அங்ஙனமே சுத்தித்தன்மை வடிவமாகவும் பிரமேயத்தன்மையின் அபாவத்தால் அஞ்ஞாதத் தன்மையிருத்தலின் சர்ப்ப இரஜதங்களுக்கு அதிஷ்டானத்தன்மையிருக்கின்றது. இரண்டாவது பக்ஷத்தில் ஆவரணசக்தி விரோதிப்பிரமைக்குவிஷயமாந்தன்மைவடிவினதாகிய பிரமேயத்தன்மை இதுவென்னுந் தன்மை வடிவத்தா னிருக்கின்றது. என்றாலும் விக்ஷேபசக்தியுடைய அஞ்ஞானத்திற்கு விஷயமாந்தன்மை அறியப்பட்டதின்கண்ணும் சம்பவிக்கிறது. ஆதலால் இதுவென்னுந்தன்மை வடிவினதாகவே இரஜதமுதலியவற்றின் அதிஷ்டானத் தன்மையிருக்கின்றது.

இவ்விடத்து இது இரகசியமாம்:— அஞ்ஞானத்தாலாகிய ஆவரணம் சேதனத்திலுண்டாகின்றது. சுபாவமாக ஆவரிக்கப்பட்ட வடிவினவாகிய பிறவிக்குருடனுக்குச் சமானமான ஜடபதார்த்தங்களில் அஞ்ஞானத்தினாலாகிய ஆவரணத்தின் அங்கீகாரமில்லை. அங்ஙனமே பிரமாணஜந்நியஞானத்திற்குவிஷயமாந்தன்மைவடிவி

னதாகிய பிரமேயத்தன்மையும் சேதனத்திலிருக்கின்றது. கடமுத லிய ஜடபதார்த்தங்களில் ஆவரணமிருக்குமாயின், அதன் நிவிருத் தியினபொருட்டுப பிரமேயத தன்மையின அங்கீகார முண்டா கிறது. சேதனத்தில அஞ்ஞானத்திற்குவிஷயமாந்தன்மை வடிவின தாகிய அஞ்ஞாதத்தன்மையிருத்தலால சேதனத்தினகண்ணே ஞா தத்தன்மையுமபிரமேயத்தன்மையுமிருக்கின்றன. அங்ஙனமேசகல அத்தியாசங்களின் அதிஷ்டானமும சேதனமாம். ஜடபதார்த்தம் தான் அத்தியஸ்தமாம; பிறவற்றிற்கு அதிஷ்டானமாகாது. ஆத லால இரஜ்ஜு சுத்திமுதலியவற்றில அஞ்ஞாதத் தன்மையும, அங் ஙனமே ஞாதத்தன்மையும, அதிஷ்டானத்தன்மையும எவ்வாற் றானும சமபவியா. என்றாலும மூலாஞ்ஞானத்திற்கு விஷயமாந்தன் மைவடிவினதாகிய அஞ்ஞாதத்தன்மையோ நிரவயவாவச்சின்ன விபுசேதனத்திலிருக்கின்றது. ஆனால தூலாஞ்ஞானத்திற்கு விஷய மாந்தன்மை வடிவினதாகிய அஞ்ஞாதத்தன்மை அந்தந்த விஷயா வச்சின்ன சேதனத்தி லிருக்கின்றது. இவ்வாற்றத்தை எட்டா வது பிரகாசத்திற கூறுவோம. அங்ஙனமே பிரஹ்மஞானத்திற்கு விஷயமாந்தன்மை வடிவினதாகிய ஞாதத்தன்மையோ நிரவய வாவச்சின்ன சேதனத்திலிருக்கின்றது. கடாதிஞானத்திற்குவிஷய மாந்தன்மை வடிவினதாகிய ஞாதத்தன்மை கடாதியவச்சின்ன சேதனத்தி லிருக்கின்றது. அங்ஙனமே அவித்தைக்கு அதிஷ்டான மாந்தன்மைநிரவயவாவச்சின்னசேதனத்தின் கண்ணிருக்கின்றது. பூதபௌதிக பிரபஞ்சத்திற்கு அதிஷ்டானமாந்தன்மை அஞ்ஞான அவச்சின்னசேதனத்தின்கண்ணிருக்கின்றது. பிராதிபாஸிகசர்ப்ப பிரஜதமுதலியவற்றிற்கு அதிஷ்டானமாந்தன்மை இரஜ்ஜு அவச்சி ன்ன சுத்திஅவச்சின்னமுதலியசேதனங்களிலிருக்கின்றது. இவ்வா ற்றால சேதனத்தில அஞ்ஞாதத்தன்மை ஞாதத்தன்மை அதிஷ்டா னத்தன்மை முதலியவற்றின் அவச்சேதகம ஜடபதார்த்தமாம். ஆதலால அவச்சேதகத்தன்மைச் சம்பந்தத்தால ஜடபதார்த்தங்க ளினும அஞ்ஞாதத்தன்மை முதலியவற்றின் சம்பவ மிருத்தலின் இரஜ்ஜு அஞ்ஞாதமாம, ஞாதமாம, சர்ப்பத்தின் அதிஷ்டானமாம, என்றிவ்வாறும் வியவகாரம சம்பவிக்கின்றது. இவ்வாற்றால் சர்ப்ப முதலிய பிரமத்திற்கு ஏதுவாகிய இரஜ்ஜு முதலியவற்றோடு இந்தி ரியங்களின் சையோகத்தால் இதுவெனும வடிவ சாமானிய ஞான ப்பிரமை வடிவமாகிய அந்தக்கரணத்தின் விருத்தி உண்டாகின்

றது. அச்சாமாகிய ஞானத்தால் ஆகாரமுடையதாகிய அவித்தையின் சர்ப்பாதி வடிவ பரிணாமமும் சர்ப்பமுதலியவற்றின் ஞான வடிவ பரிணாமமுமுண்டாகின்றன. இரஜ்ஜு முதலிய விஷய உபகித சேதனத்தின்கணுள்ள அவித்தையினது அம்சத்தின் சர்ப்பமுதலிய விஷயாகார பரிணாமமுண்டாகின்றது. இதுவெனும் வடிவ விருத்தியுபகித சேதனத்தின்கணுள்ள அவித்தையினது அம்சத்தின் ஞானாகார பரிணாமமுண்டாகின்றது. இரஜ்ஜு அவச்சின்ன சேதனம் சர்ப்பத்தின் அதிஷ்டானமாம். இதுவெனும் வடிவவிருத்தியவச்சின்ன சேதனம் சர்ப்பஞானத்தின் அதிஷ்டானமாம்.

## ககஎ. விஷய வுபகித விருத்தி யுபகித சேதனங்களின் அபேதத்தில் சங்கை சமாதானம்.

இதுவெனும் வடிவப் பிரத்தியக்ஷவிருத்தி உண்டாகும் காலத்து, விஷய உபகித சேதனத்திற்கும் விருத்தி உபகித சேதனத்திற்கும் அபேதமுண்டாகின்றது. ஆதலால் முற்கூறியபடி விஷய ஞானங்களினது உபாதானத்தின் பேதத்தைக் கூறுதலும் அதிஷ்டானத்தின் பேதத்தைக் கூறுதலும் சம்பவியா. சர்ப்பமுதலியவிஷயங்களின் அதிஷ்டானத்தினும் ஞானத்தின் அதிஷ்டானத்தினை வேறாகக்கொள்ளுவோமாயின், சர்ப்பமுதலியவற்றின் அதிஷ்டான ஞானத்தால் சர்ப்பமுதலியவற்றின் ஞானத்தின் நிவிருத்தி உண்டாகாது. ஏனெனின் தனது அதிஷ்டானத்தின் ஞானத்தால் அத்தியஸ்தத்தின் நிவிருத்தி உண்டாகின்றது. அந்நியத்தின் அதிஷ்டான ஞானத்தால் அத்தியஸ்தத்தின் நிவிருத்தி உண்டாகுமாயின், சர்ப்பத்தின் அதிஷ்டான ஞானமாகிய இரஜ்ஜுவின் ஞானத்தால் அத்தியஸ்த சம்சாரத்தின் நிவிருத்தி உண்டாதல் வேண்டும். ஆதலால் ஒன்றன் ஞானத்தால் சர்ப்பமுதலிய விஷயம் அவற்றின் ஞானமென்பவற்றின் நிவிருத்தியின் பொருட்டு இரண்டற்கும் அதிஷ்டானம் ஒன்றென்றே கொள்ளுதல் தகுதியாம்.

இச்சங்கைக்கு இதுசமாதானமாம்:— யாண்டு ஒரு வஸ்துவிற்கு உபாதியினாலாய பேதமுளதாகின்றதோ, ஆண்டு உபாதியின் நிவிருத்தியினால் அபேதமுண்டாகின்றது. அன்றியும் இரண்டு உபாதிகளும் ஓரிடத்திருக்குமாயின் ஆண்டுமஉபகிதத்திற்கு அபேத முண்டாகின்றது. ஆனால் உபாதிகளின் ஏகதேசத்திருத்தற்றன்மையினால்யாண்டு

உபகிதத்திற்கு அபேத முண்டாகின்றதோ, ஆண்டு ஒரு தர்மியிற்றானே அவ்வவ்வுபகிதத்தன்மைகளாகிய இரண்டு தர்மங்க ளிருக்கின்றன. எங்ஙனம்: ஒரு ஆகாசத்திற்குக் கடமடவுபாதி பேதத்தால் பேதமுண்டாகின்றது. ஆண்டுக்கடமடங்களின் நாசத்தால் அபேத முண்டாகின்றது. மடமாகிய இடத்தில் கடத்தை ஸ்தாபித்தலாலும் கடாகாசத்திற்கு மடாகாசத்தோடு பேத மிருப்பதில்லை. என்றாலும் கடாகாசத்தில் கட உபகிதத்தன்மையும் மட உபகிதத்தன்மையுமாகிய இரண்டு தர்மங்களிருக்கின்றன; தர்மி ஒன்றும். அங்ஙனமாயினும் எதுவரையில் கடமடங்க ளிரண்டு மிருக்கின்றனவோ, அதுவரையில் கடாகாச மடாகாசமென இரண்டுவியவகாரமுண்டாகின்றது. அங்ஙனமே இரஜ்ஜுமுதலிய விஷயதேசத்தில் விருத்தி செல்லுங்காலத்தில் விருத்தி உபகித சேதனத்தோடு விஷய சேதனத்திற்கு அபேத முண்டாயினும், இரண்டு உபாதிகள் இருத்தலால் விருத்தி உபகிதத்தன்மை இரஜ்ஜு உபகிதத்தன்மை என்றிரண்டு தர்மங்க ளிருக்கின்றன. அவற்றுள் சர்ப்பமுதலிய விஷயங்களுக்கு அதிஷ்டானமாந்தன்மையை அவச்சேதகம் செய்யும் தர்மம் இரஜ்ஜு உபகிதத்தன்மையாம். இரஜ்ஜுமுதலியவற்றின் ஞானத்திற்கு அதிஷ்டானமாந்தன்மையை அவச்சேதகஞ்செய்யும் தர்மம் விருத்தி உபகிதத்தன்மையாம். இவ்வாற்றால் சர்ப்பமுதலியவிஷயங்களுக்கு உபாதானமாகிய அஞ்ஞானாம்சத்திற்குச் சேதனத்தில் அதிகரணத்தன்மையை அவச்சேதகஞ்செய்வது இரஜ்ஜு உபகிதத்தன்மையாம். பிராந்தி ஞானத்திற்கு உபாதானமாகிய அஞ்ஞானாம்சத்தின் சேதனத்தில் அதிகரணத்தன்மையை அவச்சேதகஞ் செய்வது விருத்தி யுபகிதத்தன்மையாம். இவ்வாற்றால் ஓரிடத்தில் உபாதிகளிருக்க உபகிதங்களுக்கு அபேத முண்டாகியும் தர்மங்களுக்குப் பேத மிருக்கின்றது. ஆதலால் விருத்தி உபகிதத்தன்மை அவச்சின்ன சேதனத்துள்ள அஞ்ஞானாம்சத்தில் பிராந்திஞானத்திற்கு உபாதானமாதற்றன்மை யிருக்கின்றது. இரஜ்ஜு முதலிய விஷய உபகிதத்தன்மை அவச்சின்ன அதே சேதனத்தின்கண்ணுள்ள அஞ்ஞானாம்சத்தில் பிரமத்தினது விஷயத்திற்கு உபாதான மாதற்றன்மை இருக்கின்றது. அங்ஙனமே விருத்தி உபகிதத்தன்மை அவச்சின்ன சேதனத்தில் பிராந்திஞானத்திற்கு அதிஷ்டான மாதற்றன்மை இருக்கின்றது. இரஜ்ஜு முதலிய விஷய உபகிதத்தன்மை அவச்சின்ன அதே சேதனத்தில் சர்ப்பமுத

லிய விஷயங்களுக்கு அதிஷ்டானமாந்தன்மையிருக்கின்றது. இவ்வாறாக உபாதிகள் இருக்குங்காலத்திலும் ஓரிடத்து உபாதிகளிருத்தலால் உபகிதத்திற்கு அபேதமுண்டாயினும், உபாதியைமுன்னிட்டுப் பேத வியவகாரமு முண்டாகின்றது. பின்னதேசத்தில் உபாதி இருக்குமாயின் அப்போது கேவலபேத வியவகாரமுண்டாகின்றது. உபாதி நிவிருத்தியாயின் அப்போது பேத வியவகாரமுண்டாகிறதில்லை. கேவல அபேதவியவகாரமுண்டாகின்றது. இவ்வாறு நிவிருத்தியும் விஷயமுமாகிய இரண்டும் ஓரிடத்து இருப்பனவாயின், அப்போது சேதனத்திற்கு அபேத முண்டாகியும் உபாதியை முன்னிட்டு உபாதானத்திற்கும் அதிஷ்டானத்திற்கும் பேதங் கூறுதல் அசங்கதமன்று. சொரூபமாக உபகிதத்திற்கு அபேதமிருக்கின்றது. ஆதலால் ஒரு அதிஷ்டானத்தின் ஞானத்தால் சர்ப்பாதி விஷயங்களுக்கும் அவற்றின் ஞானத்திற்கும் நிவிருத்தியும் சம்பவிக்கின்றது

## ௧௧அ. இரஜ்ஜு முதலியவற்றின் இதுவெனும் வடிவப்பிரமையினால் சர்ப்ப முதலியவற்றின் பிரம ஞான முண்டாவதிலுள்ள இரண்டு பக்ஷம்.

இரஜ்ஜு முதலியவற்றின் இதுவெனும் வடிவப்பிரமையினால் சர்ப்ப முதலியவற்றின் பிரமஞானம் (மயக்கவுணர்ச்சி) உண்டாகுமிடத்து இரண்டுபக்ஷங்களுள. சிலர் இதுகூறுகின்றனர்:—இது சர்ப்பம், இது இரஜதமென்றிவ்வாறு அதிஷ்டானத்தின் கண்ணுள்ள இதுவெனுந்தன்மையையும் சர்ப்பம் இரஜதமுதலியவற்றில் அதன் சம்பந்தத்தையும் விஷயஞ் செய்வதாய்ச் சர்ப்பம் இரஜதம் முதலியவற்றைக் கோசரிக்கும் பிரம முண்டாகின்றது. அதிஷ்டானத்தின் இதுவெனுந் தன்மையினையும் இதுவெனுந் தன்மையின் சம்பந்தத்தினையும் விட்டுக் கேவல சர்ப்பம் இரஜத முதலியவற்றைக் கோசரிக்கும் அபரோக்ஷப் பிரம முண்டாகிறதில்லை. கேவல அத்தியஸ்தகோசரமே பிராந்தி ஆகுமாயினும் சர்ப்பம் இரஜதம் என்னும் வடிவப்பிராந்தி உண்டாதல் வேண்டும். "இச்சர்ப்பத்தை அறிகின்றேன், இவ்விரஜதத்தை அறிகின்றேன்" என்னும் பிரமத்தின் அநுவியவசாயமும் இதுவெனும் பதார்த்தத்தோடு தாதான்மியமாகப் பொருந்திய சர்ப்பம் இரஜதமுதலியவற்றைக் கோசரிக்கும் வியவசாயத்தினை விஷயஞ் செய்கின்றது. கற்பிதசர்ப்ப முதலியவற்றில்

இதுவெனும் தன்மையில்லை. ஏனெனின் வர்த்தமானகால எதிரிடங்களின் சம்பந்தம் இதுவெனும தன்மையாகின்றது. வியாவகாரிக தேசகாலங்களுக்குப் பிராதிபாஸிகத்தோடு வியாவகாரிக சம்பந்தம் சமபவிக்கிறதில்லை. அதிஷ்டானத்தின் இதுவெனுந் தன்மை கற்பிதத்திற் றேற்றுதலால், வியாவகாரிகத்தின் நிர்வாகம் உள்தாகக் கற்பித்தத்தில் இதுவெனும தன்மையை அங்கீகரித்தல் பயனின்மையாம். அநநியதாககியாதியோடு விரோத முளதாயின், அதிஷ்டானத்தின் இதுவெனும தன்மையின் அநிர்வசநீய சம்பந்தம் இதுவெனுந் தன்மையின் கற்பிதத்தில் உற்பத்தியாகின்றது. கற்பிதத்தில் இதுவெனுந் தன்மையின அங்கீகாரமில்லை. என்றுலும சம்பநதியை விட்டுக் கேவல சமபநதத்தின் ஞானம உண்டாகிறதில்லை. ஆதலால் அதிஷ்டானத்தின் இதுவெனுந் தன்மையை விட்டுக் கேவலம அத்தியஸ்த கோசரமான அபரோக்ஷப் பிரம முண்டாகிறதில்லை. இவ்வாற்றுல் இதுவெனும் பதார்த்தத்திற்கு இருவகை உணர்ச்சி உண்டாகின்றது. ஒன்றே இநதிரிய அதிஷ்டானங்களின் சையோகத்தால் இதுவெனும் வடிவப் பிரமையாகிய அநதக்கரண விருத்தி வடிவ உணர்ச்சியாம. மற்றையது விருத்தி உபகிதசேதனத்தின் கண்ணுள்ள அவித்தையின பரிணமமாகிய சர்ப்பமிரஜத முதலியவற்றைக் கோசரிக்கும மயக்க உணர்ச்சியாம். அதுவும அத்தியஸ்தத்தில் இதுவெனும பதார்த்தத்தின் தாதான்மியத்தை விஷயஞ் செய்வதாய் இதுவென்பதைக் கோசரிப்பதாகின்றது. இவ்வாற்றுல் சகல அபரோக்ஷப் பிராந்தியும இதுவெனும வடிவினதாய் அத்தியஸ்த வடிவமாகின்றது. சில ஆசிரியா இங்ஙனம் மதித்திருக்கின்றனர்.

அநேக நூலாசிரியா இவ்வாறு கூறுகின்றனா:—அதிஷ்டான இந்திரியங்களின் சையோகத்தால் இதுவெனும் வடிவ அந்தக்கரண விருத்தியாகிய பிரமையினுல் க்ஷோபமுடைய அவித்தையின் கேவல அத்தியஸ்த வடிவ பரிணம முண்டாகின்றது. அவித்தையின் இதுவெனும் வடிவ பரிணம முண்டாகிறதில்லை. ஏனெனின் வியாவகாரிக பதார்த்த வடிவமாக அவித்தையின் பரிணமம் சம்பவியாது. சாக்ஷாத் அவித்தையினுற் றேன்றிய பிராதிபாஸிக பதார்த்த வடிவமாகவே அவித்தையின் பரிணமமாகிய பிரமஞான முண்டாகின்றது. ஆதலால் அதிஷ்டானத்தின் இதுவெனுந் தன்மையில் பிராந்தி ஞானத்திற்குவிஷயமாந்தன்மை யில்லை கேவலம

அத்தியஸ்தத்திற்குன் பிரமத்திற்கு விஷயமாந்தன்மை யிருக்கின்றது.

"இது சர்ப்பம இது இரஜதம" என்பதாகப் பிராந்தியின் ஆகார முண்டாகின்றது. அங்ஙனமே "இவ்விரஜதததை அறிகின்றேன்" என்று பிராநதியின அநுவியவசாய முண்டாகின்றது. அதகியஸ்த மாததிரததைக் கோசரிபபது மக்கமாகுமாயின் "சர்ப்பமிரஜத" மென்பதாகப் பிரமததின் ஆகார முண்டாதல் வேண்டும். "இரஜதத்தை அறிகின்றேற" னென்பதாகவே அநுவியவசாய முண்டாதல வேண்டும. இவ்வாறு முன்மததஙிற கூறபபட் டிருக்கின்றது.

அந்நற்கு இது சமாதானமாம்.—ஙங்ஙனம் சாபப மிரஜத முதலியவற்றின அதிஷ்டானததின்கண்ணுள்ள இதுவெனுந தன்மையின விளக்கம அததியஸ்ததஙில் உண்டாகின்றதோ, அலலது அதிஷ்டானததின்கண்ணுள்ள இதுவெனுந தனமையின அநிர்வசநீய சம்பநதம அததியஸ்தசாபபமுதலியவற்றிலஉறபததியாகின்றதோ, அஙஙனமே சாபப முதலிய ஞானுபாசததின அதிஷ்டானம் இதுவெனும் வடிவப பிரமா விருததியாம. அநதப பிரமாவிருததியில் இதுவெனும பதார்ததத்தை விஷயிக்குந் தனமை யுளது. அதன் உணாசசி சாப்பமுதலிய பிரமததில் உண்டாகின்றது. அல்லது பிரமாவிருத்தியாகிய அதிஷ்டானததிலுள்ள இதுவெனுமபதார்ததத்தை விஷயிக்குநதன்மை எதுவோ, அதன் அநிர்வசநீய சம்பந்தம சாப்பமுதலிய ஞானஙகளில் உறபததியாகினறது. ஆதலால் இதுவெனும வடிவததன்மைச சூனியப பிரமஞானததில் இதுவெனும் வடிவததனமையின் உணாசசி உணடாகின்றது. அலலது இதுவெனும வடிவ விருததி உபகித சேதனமே சாபப முதலிய ஞானுபாசததிற்கு அதிஷடானமாம. முறகூறிய விருததி உபலக்ஷிதம அதிஷடானமாகுமாயின், முற்கூறியவிருததியினல இரண்டு நான்கு கடிகைகள் நீஙகிய பின்னும் சாப்பமுதலிய பிராநதி உணடாதல் வேண்டும. ஏனெனின் உபலக்ஷணமுடையதனை உபலக்ஷிதமென்பர். உபலக்ஷணததில் வாததமானததன்மையின் அபேக்ஷையில்லை. இபபொருளை மேறகூறுவாம். சொல்லபபடும கிரமமாக உபாதியில் வாததமானத்தன்மையின அபேக்ஷை உளது. இதுவெனும் வடிவ விருததி எதற்கு உபாதியாகின்றதோ, அது இதுவெனும் விருத்தியுபகித மெனபபடுகின்றது. ஆதலால் சாப்பம

இரஜத முதலியவற்றின் பிரமஞான முண்டாயின், அக்காலத்தில் அந்தக்கரணத்தின் இதுவெனும் வடிவ விருத்தியும இருக்கின்றதென்பதனை அவசியம் அங்கிகரித்தல் வேண்டும். ஏனெனின் அதிஷ்டானத்தின் சத்தா (இருப்புக) காலத்திற்கு அதிக்கிரமித்த காலத்தில் அத்தியஸ்த முண்டாகிறதில்லை. ஆதலால் பிரம ஞானத்தின் சமயத்தில் விருத்தி உபகித சேதனத்தின் அதிஷ்டானத தன்மைக்கு உபயோகமுள்ளதாகிய இதுவெனும் வடிவ அநதக்கரணத்தின் விருத்தி இருக்கின்றது; இரஜத வடிவ அவித்தியாவிருத்தியும இருக்கின்றது. இவ்வாற்றால் இது சாப்பம் இது இரஜதம என இரண்டு ஞானமுள. இதுவெனும வடிவினது பிரமா விருத்தியாம. சாப்பம் இரஜத முதலிய வடிவினது பிரம விருத்தியாம். அவச்சேதகத்தன்மைச சம்பந்தத்தால் பிரம விருத்திக்கு இதுவெனும வடிவப் பிரமா விருத்தி அதிஷ்டானமாம. அத்தியஸ்தத்திற்கு அபேத சம்பந்தமுண்டாகின்றது. எங்ஙனம: பிரஹ்மப் பிரபஞ்சங்களின் "இவ்வெல்லாம பிரஹ்மம்" என்னும உணர்ச்சிக்கு விஷயம அபேதமாம. ஆதலால் "இது சாப்பம்,இது இரஜதம" என்பதாக உபய விருத்தியின அபேத உணர்ச்சி உண்டாகின்றது. முற்கூறியபடி விருத்தி இரண்டெனினும் "அதிஷ்டானம் அத்தியஸ்தமென்னு மிரண்டும ஒரு ஞானத்திற்கு விஷயமாம" என்னும பழமையான வசனம அசங்கதமாகும. என்றாலும ஒரு ஞானத்திற்கு விஷயமாமென்பதற்கு இது பொருளன்று. ஒரு விருத்திக்கு விஷயமாம்; ஆனால் அதிஷ்டான அத்தியஸ்தங்கள் ஒரு சாக்ஷிக்கு விஷயமாகாவெனபது பிராசீன வசனத்திற்குப பொருளாம். இரஜ்ஜு சுத்தி முதலியவற்றின தேசத்திலேயே சாப்பம் இரஜத முதலியன உண்டாகின்றன. இதுவெனும வடிவ விருத்தியும இரஜ்ஜு சுத்தி முதலிய தேசங்களிற் செல்லுகின்றது. ஆதலால இதுவெனும வடிவவிருத்தி யுபகித சாக்ஷிக்கு அதிஷ்டானமும அத்தியஸ்தமும் விஷயமாம். இவ்வாற்றால் அதிஷ்டானமும அத்தியஸ்தமும ஒரு ஞானத்திற்கு விஷயமாமென்னும பிராசீன வசனத்தில ஞானபதத்திற்குச் சாக்ஷி பொருளாம்; விருத்தியன்று. ஆதலால் பிரம விருத்திக்கு அத்தியஸ்த மாத்திரத்தைக் கோசரிக்குந் தன்மையை அங்கீகரித்தலில அநேக ஆசிரியர்களுக்குச் சம்மதி இருக்கின்றது.

---

## நிருசிம்ஹபட்டோபாத்தியாயர் மதம்.

கவிதார்க்கிக சக்கரவர்த்தி நிருசிம்ஹ பட்டோபாத்தியாயரோ இங்ஙனம் கூறுகின்றார்:—பிராந்தி ஞானமின்றிப் பிரமை வடிவமாகிய இதுவெனும் வடிவ ஞானம பிரமததிற்கு ஏதுவன்று. ஆனால் இது பாமபு இது இரஜதம என்பதாகப் பிரமவடிவ ஒரே ஞானமுண்டாகின்றது. ஏனெனின் பிரமததிற்கு முன் இது வெனும பதாாதத வடிவப பிரமாரூப சாமாநிய ஞானம இரஜ்ஜு முதலியவற்றிறகு அங்கீகரிக்கின், அவரை இது கேட்பாம:—அநுபவாநுசாரமாக ஞானமிரண்டின் அங்கீகாரமா? அல்லது பிரமவடிவ காரியததின அநுபபததியினுல் பிரமத்திற்கு பினனமான சாமாநிய ஞானததின் அங்கீகாரமா? அநுபவத்தை அநுசரிதது ஞானமிரணடாமெனின் அது பொருநதாது. ஏனெனின் முதல் மததடுலோ இதுவெனும பதார்த்த கோசரமாக இரண்டு விருததி சொல்லபபட்டிருக்கின்றது. ஒன்றோ பிரமை வடிவ அர்தககரணததின் இதுவெனும வடிவ விருததியாகச சொல்லப் பட்டது. மற்றையது அவிததையின் பிரம வடிவவிருத்தி இது வெனும பதாாததினை விஷயஞ் செய்வதாய் இது இரஜதமென இரஜததததைக கோசரிப்பதா மென்றிவ்வாறு சொல்லப்பட்டது. இமமததில இதுவெனும பதாாதததிற்கு இருவகை உணர்ச்சி சொல்லப்பட்டது. அது எவருடைய அநுபவததிலும் ஏறுவதில்லை. சாபப மிரஜத முதலிய ஞானததைப்போல இதுவென்பதைத் கோசரிக்கும் ஞானமுமம ஒரே அநுபவத்தாற் பெறபபடுவதாம். ஆதலால் முதல மதம அநுபவத்தை அநுசரிதததன்று. இரண்டாவது மததில் இதுவெனுமபதார்த்தத்திறகு இரண்டுஞானத்தை அங்கீகரிகக விலலை. ஆனால "இது பாமபு இது இரஜதம்" என்றல் முதலிய இரண்டு ஞானத்தை அங்கீகரிததிருக்கின்றனர். இதுவெனும் வடிவப் பிரமையோ அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. சாப்பம் இரஜத முதலியவற்றைக் கோசரிக்கும பிரமம் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. அதுவும் அநுபவ விருத்தமாம. ஏனெனின் இரஜ்ஜு சுத்திகளின் ஞானததால் சர்ப்ப இரஜதங்களின் பாதமுண்டாகிய பின்னா, ஒருவன் உனக்கு எப்படிப் பிரமை உண்டாயிற்றென்று கேட்பானுயின், அதற்கு "இது சர்ப்பம்இது இரஜதம்" என்னும் பிரமம எனக்குண்டாயிற்று என்று உத்தரம கூறுவான். இது வெனும் வடிவப் பிரமை யுண்டாயிற்று, சர்ப்ப வடிவ இரஜத

வடிவப் பிரம முண்டாயிற்று என்று ஒருவனும் விடை கூறுவ தில்லை. ஆதலால இரண்டாவது மதத்தின்படியும ஞான பிரண் டின் அங்கீகாரமும அநுபவ விருத்தமாம. ஆதலால இந்திரிய ஜந நிய அந்தக்கரணத்தின விருத்தியாகிய இதுவெனும வடிவஞானம் பிரமையாம. இதுவெனுமவடிவ ஞானஜந்நிய சாபபம் இரஜமுத லியவற்றைக் கோசரிககும் இதுவெனும பதார்த்தத்தை விஷயிப் பது, அல்லது இதுவெனும பதார்த்தத்தை விஷயிப்பது அவித் தையின் விருத்திவடிவமாகிய ஞானுபாசமாம. இவ்வாற்ருல் ஞான பிரண்டின் அங்கீகாரம் அநுபவத்தை அநுசரித்ததன்று.

### ௧௨௦. உபாத்தியாயரது மதத்தில் சாமாநியஞான (தர்மிஞான) வாதியின் சங்கையும் சமாதானமும்.

சாமாநிய ஞானவாதி இங்ஙனம் கூறுகின்ருர்:—இரஜ்ஜு முத லியவற்ருேடு இந்திரிய சையோக முண்டாகுமாயின் சாபப முத லிய அத்தியாச முண்டாகின்றது. இந்திரிய சையோகமுண்டாகா விடின் அத்தியாச முண்டாகிறதில்லை; இத்தன்மைய அந்வயவெதி ரேகங்களால் இந்திரியத்திற்கு அதிஷ்டானத்தோடுள்ள சையோ கத்திற்கு அத்தியாசத்திற்குக் காரணமாந்தன்மை பெறப்பட்டதாகின் றது. அதிஷ்டான இந்திரியங்களின் சையோகத்திற்கு அதிஷ்டா னத்தின் ஞானவாயிலாகவே காரணத்தன்மை சம்பவிக்கின்றது. வேறு வகையாய் அதிஷ்டான இந்திரியங்களின் சையோகத்தின் உபயோகம அத்தியாசத்திற் சம்பவிக்கிறதில்லை. அத்தியாசத்திற் குக் காரணத்தன்மை கூறின் சமபவியாது. ஏனெனின அதிஷ் டான இந்திரியங்களின் சையோக மின்றியும் அகங்கார முதலிய வற்றின் அத்தியாச முண்டாகின்றது. ஆதலால அத்தியாசமாத்தி ரத்தில் அதிஷ்டான ஞானத்தின் சாமாநிய ஞானம ஏதுவாம். அகங்கார முதலிய அத்தியாசத்திற்கு அதிஷ்டானம பிரத்தியக்கு சொரூபமாகிய ஆத்மாவாம. அது ஸ்வயம பிரகாசமாம. சர்ப்ப முதலிய அத்தியாசத்தினது அதிஷ்டானத்தின் சாமாநிய ஞானம் இந்திரிய சையோகத்தால் உண்டாகின்றது. இவ்வாறு நிஜப்பிர காச சூந்ய அதிஷ்டானத்தின் சாமாநிய ஞானவாயிலாகவே இந் திரிய சையோகத்திற்கு அத்தியாசத்தில் உபயோக மிருக்கின்றது; நேரே உபயோகமில்லை. ஆதலால் அதிஷ்டானத்தின் சாமாநிய

ஞானமே அத்தியாசத்திற்குக் காரணமாம். அத்தியாசம் காரியமாம். யாண்டுக் காரியம் தோற்றிக் காரணம் தோற்றாதிருக்கின்றதோ, ஆண்டுக் காரியம் வேறுவகையாற் சம்பவியாமையின் காரணத்தின் கற்பனை உண்டாகின்றது. பிரமஸ்தலத்தில இதுவெனும் வடிவப் பிரமை அநுபவ சித்தமன்று. என்றாலும் பிரம வடிவ காரியத்தின் சாமாந்ய ஞானமாகிய காரணமின்றிச் சம்பவியாமையின் சாமாந்ய ஞானத்தின் கற்பனை உண்டாகின்றது.

இவ்வாறு தர்மி ஞானவாதிகூறின் அது பொருந்தாது. அத்தியாசத்திற்கு ஏதுவாகிய சாமாந்ய ஞானத்தினைத் தர்மிஞானமென்பர். இப்பிரசங்கத்தில சாமாந்யஞானத்தினை அத்தியாசத்திற்குக் காரணமெனக் கொள்வோர் பூர்வபக்ஷிகள். சாமாந்ய ஞானத்தைக் கூறாத உபாத்தியாயர் சித்தாந்தியாவர். அவர் வார்த்தையினைக் கூறுவாம்:—சாமாந்யஞானமின்றி ஓர் அத்தியாசமும் உண்டாகாவிடின் அத்தியாசத்திற்கு காரணமாந் தன்மை சாமாந்யஞானத்திற்பொருந்தும். அதிஷ்டானத்தின சாமாந்ய ஞானமின்றிக் கடாதிகளின் அத்தியாசமுண்டாகின்றது. ஆதலால் அத்தியாச மாத்திரத்தில் அதிஷ்டானத்தின் சாமாந்ய ஞானத்திற்குக் காரணத்தன்மையில்லை. தர்மிஞானவாதி கடமுதலிய அத்தியாசத்திற்குமுன் சாமாந்யஞானத்தைக்கூறுகின்றார். அவரை இதுகேட்கவேண்டும்:—கடமுதலிய அத்தியாசத்திற்கு ஏது அதிஷ்டானத்தோடு நேத்திரசையோகத்தாற்றோன்றிய அந்தக்கரணத்தின விருத்தியாகிய சாமாந்ய ஞானமா? அல்லது சேதனசொரூபப்பிரகாசமேசாமாந்யஞானமா? முதற் பக்ஷத்தைக்கூறின் அது பொருந்தாது. ஏனெனின் கடமுதலிய அத்தியாசத்திற்கு அதிஷ்டானமாகிய அஞ்ஞானவசின்ன பிரஹ்மம உருவமின்றியதாம். ஆதலால்பிரஹ்மகோசரம அந்தக்கரணத்தின்சாக்ஷுஷவிருத்தியெனல்சம்பவியாது. இரண்டாவதுபக்ஷத்தைக் கூறுமிடத்துச சொரூபப் பிரகாசம ஆவரிக்கப்பட்டதாம். அவ்வாவரிக்கப்பட்ட பிரகாச வடிவ சாமாந்ய ஞானத்தினையும் அத்தியாசத்திற்கு ஏதுவெனக் கொள்ளின், இரஜ்ஜு முதலியவற்றோடு இந்திரிய சையோகமில்லாமலும சாப்பு முதலிய அத்தியாசமுண்டாதல் வேண்டும. ஆதலால் ஆவரிக்கப்பட்ட பிரகாச வடிவ சாமாந்யஞானம் அத்தியாசத்திற்கு ஏதுவன்று; இவ்வாறாறல் கடமுதலிய அத்தியாசத்திற்குமுன் சாமாந்யஞானமின்மையால்அத்தியாசமாத்திரத்தில் சாமாந்யஞானத்திற்குக் காரணமாதற்றன்மை

யின்மையால் அத்தியாசரூபகாரியத்தின் அநுபபத்தியினால் சாமா ந்யஞானமாகிய இதுவெனும் வடிவ விருத்தியின் கற்பனை உண் டாகிறதில்லை.

தாமிஞானவாதி இது கூறுகின்றார்:—சகல அத்தியாசத்தி லும ஆவரிக்கப்படாத பிரகாச வடிவ சாமாந்யஞானத்தினை ஏது வென்க்கூறின் கடமுதலிய அத்தியாசததில வியபிசாரம கூறுதல் பொருநதும். அத்தியாச மாத்திரததிலோ ஆவரிக்கப்படட அல் லது ஆவரிக்கப்படாத சாதாரணப் பிரகாசம ஏதுவாம. பிராதி பாஸிக அத்தியாசத்தில ஆவரிக்கப்படாத பிரகாசம ஏதுவாம். எங்ஙனம: உபாததியாயரது மததகில் சாப்பமுதலிய அத்தியாசத திற்கேதுவாகிய இநதிரிய சையோகம அங்கீகரிககப்பட்டிருக்கின் றது. கடமுதலிய அத்தியாசத்திறகேதுவாகிய இநதிரிய சையோ கம் அங்கீகரிக்கப்படவில்லை; சமபவிக்கிறதுமில்லை. ஆதலால இந் திரிய சையோகததின் அபாவகாலததைய சாப்பமுதலிய அத்தி யாசமுண்டாகிறதில்லை. கடமுதலிய அததியாசம இநதிரியசை யோகமினறியும உண்டாகின்றது. இவ்வியவஸ்தை சமபவிக்கின் றது. அங்ஙனமே எங்கள் மததகிலும பிராதிபாஸிக சாப்பமுத லிய அத்தியாசத்திற்கேது அநாவிருதப் பிரகாசமாம. ஆதலால் ஆவரண பங்கததின்பொருட்டுச சாப்பமுதலிய அத்தியாசததிற்கு முன் இதுவெனுமவடிவ சாமாந்யஞானமாகிய பிரமையின் அபே க்ஷை இருக்கின்றது. கடமுதலிய அததியாசததிற்கு ஏது சாதா ரணப்பிரகாசமாம. ஆதலால் ஆவரிக்கப்படாத பிரகாசததின் சற் பாவத்தால் கடமுதலிய அத்தியாசததில் விருத்தியின் அபேக்ஷை யில்லை. ஆதலால் சாமாந்ய ஞானவடிவ விருததியின் அபாவகால த்தில் சாப்பாதி அத்தியாசமுண்டாகிறதிலலை. கடமுதலிய அத்தி யாசம் விருத்தியின்றி உண்டாகின்றதென்னும வியவஸ்தை சமப விக்கினறது. தாமிஞானவாதியின் இக்கூற்றும அசங்கதமாம். ஏனெனின், பிராதிபாஸிக அததியாசததிற்கு முன் இநதிரிய ஜந்ய பிரமைவடிவ அந்தக்கரணத்தின் விருத்தி நியமமாக உண்டாகின் றது. இதறகும் சங்கின் பொன்மை அததியாசத்திலும கிணற்று நீரின் கருமை அததியாசததிலும் வியபிசார முண்டு. ஏனெனின் பிரஹ்மஞான மின்றி எதற்குப் பாதமுண்டாகின்றதோ அது பிராதிபாஸிக அத்தியாச மெனப்படுகின்றது. சங்கிற்பொன்மையின் பாதமும, கிணற்று நீரிற் கருமையின் பாதமும் பிரஹ்ம ஞானத்

திற்கு முன்னரே சங்கின் வெண்மை ஞானத்தாலும் நீரின் வெண்மைஞானத்தாலுமுண்டாகின்றன. ஆதலால் இதுவும் பிராதிபாஸிக அந்நியாசமாம். இவ்விடத்தில் தாமிஞான வாதியின் பிரக்கிரியை பிராதிபாஸிக அத்தியாசத்தில் ஆவரிக்கப்படாத பிரகாசத்திற்குக் காரணத்தன்மையின் நியமத்தால் சங்கினோடும் ஜலத்தினோடும் நேத்திரத்தின் சையோகத்தால் இதுவெனும்வடிவ அந்தக்கரண விருத்தியினால் வெளிப்பட்ட சங்கின் அவச்சின்ன சேதனத்திலும் ஜலாவச்சின்னசேதனத்திலும் பொன்மை கருமைகளின் அத்தியாசமுண்டாகின்றது. உபாத்தியாயரது மதத்திலோ சங்கினோடும் ஜலத்தினோடும் நேத்திரத்தின் சையோகமுண்டாகப் பொன்மைநிற கருமைநிறங்களின் அத்தியாசமுண்டாகின்றது. இதுவெனும்வடிவ விருத்தியின் அபேக்ஷையில்லை. ஆதலால் தாமிஞானவாதியை இதுகேட்கவேண்டும்:—இதுவெனும் வடிவ விருத்திக்கு விஷயம் உருவமின்றிய கேவல சங்கு முதலிய திரவியமா? அல்லது உருவ விசிஷ்ட சங்கும் உருவ விசிஷ்ட ஜலமும் இதுவெனும் வடிவ விருத்திக்கு விஷயமா? உருவத்தை விட்டுக் கேவல திரவியத்தினை விருத்தி விஷயஞ்செய்கின்றதெனக் கூறின் அது பொருந்தாது. ஏனெனின் நேத்திர ஜந்நிய விருத்திக்கு இது சுபாவமாம் உருவத்தினை விஷயஞ்செய்கின்றது. உருவ விசிஷ்டதிரவியத்தினையும் விஷயஞ்செய்கின்றது. கேவல திரவியத்தை நேத்திர ஜந்நியவிருத்தி விஷயஞ்செய்கிறதில்லை. உருவத்தைவிட்டுக் கேவல திரவியத்தை விஷயஞ்செய்யின் கடத்தின சாக்ஷாத் இந்திரியஜந்நிய ஞானமுடையவனுக்குக் கடத்தின் நீலத்தன்மை முதலியவற்றில் சந்தேகமுண்டாதல் வேண்டும். உருவமின்றிய காற்று முதலிய திரவியங்களின் சாக்ஷாத் ஞானமும் உண்டாதல் வேண்டும். ஆதலால் கேவலம் திரவியகோசர இதுவெனும் வடிவ சாக்ஷாத் விருத்தி சங்குமுதலியவற்றின் சாமாந்யஞானரூபமாகாது. உருவ விசிஷ்ட சங்கை கோசரிப்பதாம். அங்ஙனமே உருவ விசிஷ்ட ஜலத்தைக் கோசரிப்பதும் விருத்தி எனின், இது கேட்கத்தக்கதாம்:—வெண்மை உருவ விசிஷ்ட சங்கினையும் வெண்மை உருவ விசிஷ்ட ஜலத்தினையும் அவ்விருத்தி விஷயஞ்செய்கின்றதா? அல்லது அந்நியவுருப விசிஷ்டத்தை விஷயஞ்செய்கின்றதா? முதற் பக்ஷத்தைக் கூறுமிடத்து வெண்மை உருவினை விஷயஞ்செய்வதாய் இதுவெனும் வடிவ விருத்திக்குப் பிற்காலத்தில் முன்விருத்

திகரு விரோதியாகிய பொன்மைப் பிரமமும் நீலப்பிரமமும் உண்டாகா. ஆதலால் பொன்மைப பிரமத்திற்கும நீலப்பிரம ததிறகும முன வெண்ணிற விசிஷ்டசங்கு ஜலங்களின் இதுவெ னும்வடிவ ஞானம சமபவியாது. அங்ஙனமே அத்தியஸ்தரூப விசி ஷ்டகோசர இதுவெனும வடிவ விருததியினை அங்கீகரிக்கின்,சங்கி னிடத்து அததியஸதமான பொன்மை நிறமும ஜலததிலததியஸத மானநீலநிறமு மிருககின்றன.அதன் விசிஷ்டஞானமே பிரமமாம. அதனைப் பிரமததிறகு ஏதுவ குந தனமையிட கூறுதலில் ஆதமா சிரயமுண்டாகுதலால சமபவியாது. அன்றியும தாமி ஞானவாதி இதுவெனும வடிவ ஞானமாகிய பிரமை வடிவமே அததியாசத திற்கு ஏதுவாமென்று கொண்டிருக்கின்றனா. அததியஸத ரூப விசிஷ்டத்தின் ஞானததிற்குப பிரமததன்மையிருததலால பிரமை வடிவ தாமிஞானம அத்தியாசததிற்கு ஏதுவாமென்னும் தாமி ஞானவாதியின் கூற்றிற்குப பங்கமுண்டாகும. இவ்வாறுால சங்கிற்பொன்மைப பிரமததிறகும ஜலததில நீலத்தன்மைப் பிரம த்திற்கும முன அதிஷ்டானத்தின சாமாநிய ஞானம பொருநது கிறதில்லை. அதிஷடான இநதிரியஙகளின சையோகததினது சம பவமிருக்கின்றது.ஆதலால சாமாநிய ஞானததிறகு வியபிசாரமும இநதிரியசையோகததிறகு வியபிசாரமினமையு மிருததலால் அத்தி யாசத்திற்கு ஏது அதிஷடானததிற்கும இநதிரியததிறகும உள்ள சையோகமாம; சாமாநிய ஞானமஏதுவன்று. இது உபாததியாயா மதமாம்.

## ௩௨௧. பிராசீன ஆசாரியராகிய தர்மி ஞானவாதியின் மதம்.

பிராசீன ஆசாரியா தாமிஞான வாதியாம. தாமி ஞானத திற்குச சஙகின் பொனமை முதலிய அததியாசத்தில் எநத வியபி சாரம சொலலபபட்டதோ,அதறகுச் சமாதானம் இஙஙனம கூறுகி ன்றுா:—அததியாசமாததிரததில சாமாநிய ஞானம ஏது வன்று. ஆனல் அததியாச விசேஷததில சாதிருசிய ஞானததனமை வடி வமாகச சாமாநிய ஞானததிறகுக் காரணத்தனமை சொல்லுதற்கு அத்தியாசங்களின்பேத ததைக கூறுகின்றுா:—பிராதிபாஸிக அத்தி யாசம இருவகையினதாம. ஒன்றோ தாமியின் விசேஷ ஞானத் தால பிரதிபநதிக்கப்பட்டதாம். மற்றையது விசேஷ ஞானத்தால் பிரதிபந்திக்கப்படாததாம. கரிய முதுகுடைமை முக்கோணததன்

மை முதலிய விசேஷ தாமங்களின் ஞான முண்டாயின் இரஜத அத்தியாச முண்டாகிறதில்லை. ஆதலால் இரஜத அத்தியாசமோ விசேஷ ஞானததால் பிரதிபந்திக்கப்படுவதாம். அங்ஙனமே சாப பமுதலிய அத்தியாசத்தினையும் அறிந்துகொள்க. வெண்மை வடி வவிசேஷ தர்மத்தின் ஞானமுண்டாகியும், சங்கில் பீததன்மை (பொன்மை) அத்தியாசமும் ஜலத்தில்நீலத்தன்மை அத்தியாசமும் உண்டாகின்றன; ஆதலால் முற்கூறிய அத்தியாசம் விசேஷ ஞான த்தால பிரதிபந்திக்கப் படாததாம்: அங்ஙனமே உருவமின்மை யாகிய விசேஷ தாமத்தின் ஞானமுண்டாயினும், ஆகாயத்தில் நீலத் தன்மை அத்தியாசமும் விசேஷ ஞானத்தால் பிரதிபந்திக்கப்படா ததாம். கறகண்டில் கைப்பத்தியாசமும் விசேஷ ஞானத்தால பிரதிபந்திக்கப் படாததாம். ஏனெனின ஆகாயம் நீலநிறம என் னும நிச்சயமுடையவனுக்கும், அநேகமுறை கறகண்டில் மதுரத் தன்மையின் நிச்சய முடையவனுக்கும் ஆகாயத்தில நீலத்தன்மை அத்தியாசமும பித்த தோஷத்தால கறகண்டில கைப்பத்தியாசமு முண்டாகின்றன. இவ்வாறுல் இருவகை யத்தியாசங்க ளிருக்கின் றன. அவற்றில அந்நிய அத்தியாசமோ அதிஷ்டான அத்தியஸ் தங்களின் சாதிருசிய ஞானமின்றியே உண்டாகின்றது. அதிஷ் டானத்திலும் அத்தியஸ்தத்திலும் விரோதி தாமங்க ளிருக்கின் றன. ஆண்டுச சாதிருசியத்தின சம்பந்தமில்லை. ஒன்றறகொன்று வைதாமிய ஞானம் இருக்கினும முற்கூறிய அத்தியாச முண்டா கின்றது. ஆதலால் பிரம வடிவ சாதிருசிய ஞானமும அவ்வத்தி யாசத்திறகு ஏதுவன்று. அனுல விசேஷ ஞானத்தால எதறகுப் பிரதிபந்த முண்டாகின்றதோ, அப்படிப்பட்ட இரஜதம் சாப்ப முதலிய அத்தியாசத்தில் அதிஷ்டானத்திற்கு அத்தியஸ்தத்தோ டுள்ள சாதிருசிய ஞானம ஏதுவாம. விசேஷ ஞானத்தால பிரதி பந்திக்கப்பட்ட அத்தியாசத்தினையும சாதிருசியஞான ஜந்நியமென க்கொள்ளாது துஷ்ட இந்திரிய சையோக ஜந்நியமாகவே கொள்ளு மிடத்து, சுத்தியில இரஜதாத்தியாசத்தினைப்போலத் துஷ்ட நேத் திரத்தின் சையோகத்தால கரியிலும இரஜதாத்தியாச முண்டாதல் வேண்டும். நெருப்பினுல எரிக்கப்பட்ட கரிய கட்டையினைக் கரி என்பா. இரசசுவில் சாப்பாத்தியாசத்தினைப்போலத் துஷ்ட நேத் திர சையோகத்தால் கடத்திலும சாப்பாத்தியாசம் உண்டாதல் வேண்டும். இவ்வாறுல் விசேஷ ஞானத்தால் எதறகுப் பிரதிபந்த

முண்டாகின்றதோ, அப்படிப்பட்ட பிராதிபாஸிக அத்தியாசத்திலும சாதிருசிய ஞானம் ஏதுவாம். சாதிருசிய ஞானமும் சாமாநிய ஞான வடிவ தர்மிஞானமேயாம. சுத்தியிலும் வெள்ளியிலும் வெண் பளபளப்பு வடிவ சாதிருசிய மிருக்கின்றது. இரஜ்ஜுவிலும் சர்ப்பத்திலும பூமியின சம்பந்தம நீட்சி என்னும் சாதிருசிய மிருக்கின்றது. புருஷனிடத்தும தாணுவிலும உயர்ச்சியாகிய சாதிருசிய மிருக்கின்றது. இவ்வாறு அதிஷ்டான அத்தியஸ்தங்களில சமான தாமமே சாதிருசிய பதார்த்தமாம. அவற்றின் ஞானத்தினைச சாமாநிய ஞானமென்றும, தர்மிஞானமென்றும கூறுதல சம்பவிக்கின்றது. இவ்வாற்றால் விசேஷ ஞானத்தால் பிரதிபந்திக்கப்படும் பிராதிபாஸிக அத்தியாசம் எதுவோ, அதனிடத்துச்சாதிருசிய ஞானவடிவ தாமிஞானமே ஏதுவாம. துஷ்ட இந்திரிய சையோகத்திறகுச சாதிருசிய ஞான வாயிலாக முறகூறிய அத்தியாசத்தில் உபயோகமாம.

## ௧௨௨. தர்மி ஞானவாதியின் மதத்தில் உபாத்தியாயரது சங்கையும் சமாதானமும்.

உபாத்தியாயரை அநுசரித்தவா இவ்வாறு கூறுகின்றனர்:—பிரமாத்திருதோஷ பிரமாணதோஷப்ரமேய தோஷங்களால தர்மி ஞானம் பிரதிபந்திக்கப்படும அத்தியாச முண்டாகின்றது. சாதிருசிய ஞானத்தினை முறகூறிய அத்தியாசத்திற்கு ஏதுவெனக் கூறின் பிரமாதாவின தாமம ஞானமாகின்றது. ஆதலால் பிரமாத்திரு தோஷத்தால அத்தியாசத்தின ஹேது உண்டாகின்றது. சாதிருசியத்தினை அத்தியாசத்திறகு ஏதுவெனக் கூறின் விஷயதோஷம உண்டாய் அத்தியாசத்திறகு ஏதுவாகின்றது. எங்ஙனம் பிரமாத்திரு தோஷமாகிய சாதிருசிய ஞானத்தினை அத்தியாசத்திற்கு ஏதுவெனக் கூறின் கரியில உருவ அத்தியாசத்தின ஆபத்திக(அடைறவி)குப பரிகார முண்டாகின்றதோ, அங்ஙனமே விஷய தோஷமாகிய சாதிருசியத்தினை அத்தியாச ஹேதுவெனக் கொள்ளினும முறகூறிய ஆபத்தியின் பரிகார முண்டாகின்றது. ஆதலால் சாதிருசிய ஞானமாகிய தாமிஞானத்தினை முறகூறிய அத்தியாசத்திற்கு ஏதுவெனக் கொள்ளுதல் பயனின்மையாம' என்றிவ்வாறு உபாத்தியாயரை அநுசரித்தவா கூறின் அதறகுத் தாமிஞானவாதியின சமாதானமிதுவாம. தூரதேசத்தினின்றும் சமுத்

திர ஜலத்தில் நீலக்கல்லின் பிரமமுண்டாகின்றது. அதுவும விசேஷ ஞானத்தால் பிரதிபந்திக்கப்பட்ட அத்தியாசமாம். ஏனெனின் ஜலத்தில் வெண்ணிறம் ஜலத்தன்மை என்பவற்றின் ஞானத்தால நீலக்கற் பிரமத்திற்குப் பிரதிபந்த முண்டாகின்றது. ஜலத்தில் நீலக்கல்லின் சாதிருசிய மில்லை. ஆனால சமுத்திர ஜலத்தால் நீல நிறத்தின் பிரமமுண்டாய் நீலக்கல்லின் பிரம முண்டாகின்றது. ஆண்டு நீல உருவத்தின் ஞானமே பிரம வடிவ சாதிருசிய ஞானமாம். ஆதலால் பிரமப் பிரமைகளின் சாதாரணமான சாதிருசிய ஞானமே முற்கூறிய அத்தியாசத்திற்கு ஏதுவாம். சொரூபமாகச் சாதிருசியம் ஏது வன்று. அன்றியும உபாத்தியாயரை அநுசரித்தவா இங்ஙனம கூறுகின்றனா:—கரி முதலியவற்றில வெள்ளி முதலிய அத்தியாசத்தின் ஆபத்தியைப பரிகரித்தற பொருட்டுச் சாதிருசிய ஞானத்தின் சாமக்கிரியினை முற்கூறிய அத்தியாசத்திற்குக் காரணமாகக் கொண்டிருக்கின்றனா. அதிஷ்டான அத்தியஸ்தங்களில சமான தாம வடிவ சாதிருசிய மெதுவோ அதனோடு இந்திரியத்திற்குள்ள சுவரையுக்த தாதான்மிய வடிவ சம்பந்தமே சாதிருசிய ஞானத்தின் சாமக்கிரியாம. சமுத்திர ஜலத்தில நீலக் கல்லின அத்தியாசத்திற்கு ஏதுவாகிய பிரம சொரூப சாதிருசிய ஞானமிருக்கின்றது. அதன் சாமக்கிரி தோஷமுடைய இந்திரியத்திற்கு ஜலத்திலுள்ள சையோகமாம. இவ்வாற்றால சாதிருசிய ஞானத்தின் சாமக்கிரி எதுவோ அதுவே முறகூறிய அத்தியாசத்திற் கேதுவாம். சாதிருசிய ஞானத்தினை அத்தியாசத்திற் கேது வெனக் கொள்ளினும சாதிருசிய ஞானத்தில இந்திரிய சம்பந்தத்திற்குக் காரணத்தன்மை அவசியம அங்கீகரிக்கப படுகின்றது. ஆதலால, சாதிருசிய ஞானத்தின காரணத்திறகே அத்தியாசத் திற் காரணத்தன்மை உசிதமாம. அவ்விரண்டற்கும இடையில் சாதிருசிய ஞானத்தை அங்கீகரித்தல பயனின்மையாம. சங்கின் பீதத்தன்மை முதலிய அத்தியாசத்தில இந்திரிய சம்பந்தத்திறகே காரணத்தன்மை இருக்கின்றது. அந்த ஸ்தானத்தில சாதிருசிய ஞானம் சமபவிக்கிறதில்லை. ஆதலால யாண்டுச்சாதிருசிய ஞானத்தின் அபேக்ஷை இருக்கின்றதோ, ஆண்டும சாதிருசிய ஞானத்தின் சாமக்கிரி அத்தியாசத்திற்குக் காரணமாம. சாதிருசிய ஞானத்திற்குக் காரணத்தன்மை யில்லை. சாதிருசிய ஞானத்தின் சாமக்கிரிக்கு அத்தியாசத்தின் காரணத்தன்மை அங்கீகரிக்கின், சகல

அத்தியாசத்திலும ஒரு இநதிரிய சையோகத்திற்கே காரணத் தன்மை பெறறபபடுவதா யிருததலின் இலாகவமாம. சாதிருசிய ஞானத்திறகுக் காரணததன்மை அங்கீகரிக்கின், விரூப அத்தியா சத்தில இநதிரிய சையோகத்திற்கு ஏதுத்தன்மையை அஙகீகரி த்து, சாதிருசிய அததியாசததில சாதிருசிய ஞானத்திற்கு ஏதுத் தன்மையை அங்கீகரிததலில அத்தியாசத்திறகுக் காரண மிரண் டினைக் கற்பித்தலால் கௌரவமாம. ஆதலால் யாண்டுச் சாதிரு சிய ஞானத்திற்கு ஏது கூறுகின்றரோ, ஆண்டும சாதிருசிய ஞான த்தின் சாமககிரியாகிய, இநதிரிய சமபநதமே அததியாசததிற்கு ஏதுவாம.

இவ்வாறு உபாததியாயரது சங்கைக்குத் தாமிஞானவாதி இச் சமாதானம் செய்கின்றர்:—இநதிரிய சமபநதத்தால ஞானத்தின உறபத்தியே கண்டிருக்கின்றேம. ஆதலால இரஜத முதலிய விஷ யங்களின் உறபததி இநதிரிய சம்பநததால் சமபவிக்கிறதில்லை. சாதிருசிய ஞானத்தினை அததியாசத்திறகு ஏதுவெனக்கொள்ளின் காரண மிரண்டின் கறபனம கௌரவமெனப்படடது; அது அச ங்கதமாம. ஏனெனின் தாமிஞான வாதிகருக் காரண மிரண்டைக் கற்பிததலில் எபபடி இருமைச சங்கையின் கறபனமிருக்கின்ற தோ, அப்படியே உபாத்தியாயரது மதத்தில் சாதிருசிய ஞானத் தின் சாமககிரியினை அததியாசததின் காரணமெனக் கறபிததலில் காரணததிற்கு அதிக சரீர கறபனமாம. சாதிருசிய ஞானசாமக் கிரியின் சொரூபததில அடஙகியது சாதிருசிய ஞானமாம. ஆத லால் உபாத்தியாயரது மததில் சாதிருசிய ஞானசாமக்கிரி அதிக சரீரமுடைய அத்தியாசததின் ஏதுவென்று கொள்ளப்படுகின்றது. இவ்வாறுல் இலாகவகௌரவங்களோ இரண்டு மதஙகளிலும சமமாம. ஞானத்தின சாமக்கிரியினல விஷயத்தினது உற்பததி யின் அசம்பவ வடிவ யுகதியின் விரோதம உபாத்தியாயரது மதத தில அதிக தோஷமாம. ஆதலால சாதிருசிய ஞானமே முற்கூறிய அத்தியாசத்திற் கேதுவாம. சாதிருசிய ஞானத்தின் சாமக்கிரி ஏதுவன்று.

## ௧௨௬. உபாத்தியாயர் சாதிருசியஞானம் அத்தியாசத்திற்குக் காரணமாதலை கண்டித்தல்.

இவ்வாறு தாமி ஞானவாதிகள் சாதிருசிய ஞானத்தன்மை வடிவாகச சாமாநிய ஞானத்திற்கு விசேஷஞானத்தால் பிரதிபந்தி

க்கப்படும் அத்தியாசத்தில் காரணத்தன்மை கூறுவாராயின், இவ்வாறு உபாத்தியாயர் மதத்திற் சமாதானமுளது:—விரூபத்திலும் அத்தியாசமிருத்தலால் சகல அத்தியாசங்களிலுமே சாதிருசிய ஞானத்திற்குக் காரணத்தன்மை சம்பவியாது. ஆனால் கரிமுதலியவற்றில் வெள்ளிமுதலிய அத்தியாசத்தைப் பரிகரித்தற்பொருட்டு விசேஷஞானத்தால் பிரதிபந்திக்கப்படும் அத்தியாசத்திற்றானே சாதிருசிய ஞானத்திற்கு ஏதுத்தன்மை அங்கீகரித்திருக்கின்றனர். ஆண்டும் வெள்ளிமுதலிய அத்தியாசத்தில் எங்ஙனம் கரியமுதுகு முக்கோணத்தன்மை முதலிய விசேஷ தாமங்களின் ஞானம் அத்தியாசத்திற்குப் பிரதிபந்தகமோ, அங்ஙனமே விசேஷ தாமஞானத்தின் சாமக்கிரியும் அத்தியாசத்திற்குப் பிரதிபந்தகமாயிருத்தலின், கரிமுதலியவற்றில் வெள்ளிமுதலிய அத்தியாசத்தின் ஆபத்தி உண்டாகிறதில்லை. ஆதலால் சாதிருசிய ஞானத்திற்கு அத்தியாசத்தின் ஏதுத்தன்மை அங்கீகரித்தல் பயனிலதாம். அங்ஙனமன்றே:—எப்பதார்த்தத்தின் ஞானம் எதில் பிரதிபந்தகமாகின்றதோ, அப்பதார்த்தத்தினது ஞானத்தின் சாமக்கிரியும் அதற்குப்பிரதிபந்தகமாம் என்பது நியமம். எங்ஙனம்: பாவத்தில் வந்நியினது அநுமிதியின் பிரதிபந்தகம் வந்நியபாவத்தின் ஞானமாம். அதன் சாமக்கிரி வந்நியபாவ வியாப்பியத்தின் ஞானமாம். ஏனெனின் வியாப்பியத்தின் ஞானத்தால் வியாபகத்தின் ஞானமுண்டாகின்றது. எங்ஙனம் வந்நி வியாப்பியம் தூமமோ, அதன் ஞானத்தால் வியாபக வந்நியின் ஞானமுண்டாகின்றதோ, அங்ஙனமே வந்நியபாவத்தின் வியாப்பியம் ஜலமுதலியனவாம். அவற்றின் ஞானத்தால் வந்நியின் அபாவத்தினது ஞானமுண்டாகின்றது. ஆதலால் வந்நியபாவத்தினது ஞானத்தின் சாமக்கிரி வந்நியபாவத்தினது வியாப்பியத்தின் ஞானமாம். வந்நியினது அநுமிதியினது பிரதிபந்தகம் வந்நியபாவத்தின் ஞானமாம். அவ்வந்நியபாவ ஞானத்தின் சாமக்கிரியாகிய வந்நியபாவத்தினது வியாப்பியத்தின் ஞானமும் வந்நியநுமிதியின் பிரதிபந்தகமாம். இவ்வாற்றால் பிரதிபந்தக ஞானத்தின் சாமக்கிரியும் பிரதிபந்தகமாகின்றது. பிரதிபந்தகத்தின் சாமக்கிரியினைப் பிரதிபந்தகமெனின், தாகத்தின் பிரதிபந்தகமாகிய மணி எதுவோ, அதன் சாமக்கிரிக்குத் தாகத்தின் பிரதிபந்தகத்தன்மையின் வியபிசாரமிருக்கின்றது. அங்ஙனமாயினும் பிரதிபந்தகஞானத்தின் சாமக்கிரிக்குப் பிரதிபந்தகத்தன்மையை அங்கீகரித்தலில்

வியபிசாரமில்லை. இவ்வாற்றால் அத்தியாசத்தின் பிரதிபந்தக மாகிய விசேஷ ஞானம எதுவோ அதன் சாமக்கிரியும் அத்தியா சத்தின பிரதிபந்தகமாம. சுத்தியில் வெள்ளி யத்தியாசத்தின் பிர திபந்தகம நீலத்தன்மை உருவ விசேஷதாமத்தின் ஞானமாம். அதன சாமக்கிரி நீலபாகத்தை வியாபித்த நேத்திர சையோக மாம். அதுவும வெள்ளி அத்தியாசத்தின் பிரதிபந்தகமாம். ஏனெனின் நீலபாகத்தில் சுத்தியோடு நேத்திர சையோகமுண்டாகச் சுத்திஞானமே உண்டாகின்றது; வெள்ளிப்பிரமமுண்டாகிறதில்லை. சுத்தியின் கருமைக்கு வேறான பாகமாகிய வெண் பளபளப்புத் தன்மையுள்ள இடம எதுவோ அதனோடு நேத்திரத்தின் சையோக முண்டாக வெள்ளிப் பிரமமுண்டாகின்றது. இவ்வாற்றால நீல உருவமுடைய தாமிரின் ஞானம வெள்ளி அத்தியாசத்தின் பிரதி பந்தகமாம். நீல உருவத்தின ஆசிரயத்தோடு நேத்திரத்தின் சை யோகசமபந்தமும, அங்ஙனமே நீல உருவத்தோடு நேத்திரத்தின் சையுக்த தாதான்மிய சம்பந்தமும் பிரதிபந்தகஞானத்தின சாமக் கிரியாம. அதுவும வெள்ளி அத்தியாசத்தின பிரதிபந்தகமாம. சுரியினோடு நேத்திரத்தின் சமபந்தமுண்டாயின் அப்போது நீல உருவ விசிஷ்டத்தினோடுதான உண்டாகின்றது. ஆதலால் சுரியி னோடு நேத்திரத்தின் சையோகமும அதன் நீல உருவத்தோடு சையுக்த தாதான்மிய சம்பந்தமும, வெள்ளிப் பிரதிபந்தக ஞானத் தின் சாமக்கிரியாயிருக்க, சுரியில வெள்ளி அத்தியாசத்தின பிரா ப்தியே யில்லை. அதனைப பரிகரித்தறபொருட்டுச சாதிருசிய ஞான த்திற்கு அத்தியாசத்தின் ஏதுத்தன்மையை அங்கீகரித்தல பய னின்மையாம.

## கஉச. தார்மி ஞானவாதியினால் உபாத்தியாயரது மதத்தில் தோஷமும் அதன் பரிகாரமும்.

புண்டரீக (தாமரை) வடிவமாக சித்தரிக்கப்பட்ட படத்தில் புண்டரீகப் பிரமம உண்டாகின்றது. விலக்ஷரிக்கப்பட்ட படத்தில புண்டரீகப்பிரமம் உண்டாகிறதில்லை, ஆதலால் சாதிருசிய ஞானம் அத்தியாசத்திற்கு ஏதுவாம என்னும இத்தோஷத்தை உபாத்தி யாயா மதத்தில் தாமி ஞானவாதி கூறுகின்றார். அதற்கும் அத்தி யாசப் பிரதிபந்தக விசேஷ ஞானத்தின் சாமக்கிரியினை அத்தியாச த்தின் பிரதிபந்தகமாகக் கொள்ளுதலால் சமாதான முண்டாகின்

றது:—விஸ்தார விசிஷ்ட படத்தோடுண்டாம் நேத்திரத்தின் சம்பர் தம் படத்தின் விசேஷ ஞானத்தின் சாமக்கிரியாம். யாண்டு விஸ்தரிக்கப்பட்ட படத்தோடு நேத்திரத்தின் சம்பந்த முண்டாகின்றதோ, ஆண்டுப் புண்டரீக அத்தியாசமுண்டாகிறதில்லை. யாண்டுப் புண்டரீக வடிவ படத்தோடு நேத்திரத்தின் சம்பந்தமுண்டாகின்றதோ, ஆண்டுப் படத்தின் விசேஷ ஞானத்தினது சாமக்கிரியின் அபாவமிருத்தலால் புண்டரீகாத்தியாச முண்டாகின்றது.

யாண்டுச சமுத்திரஜலத்தின் சமுதாயத்தில் நீலக் கற்றலத்தின் அத்தியாசமுண்டாகின்றதோ, ஆண்டு விசேஷ ஞானத்தின் சாமக்கிரி யிருக்கின்றது. ஏனெனின நேத்திர சையுக்த தாதான்மிய சம்பந்தம வெண்மைக்குண சொரூப விசேஷஞானத்திற்கு ஏதுவாம. சாக்ஷாச ஞானத்திற்கு ஏது ஜலத்தோடு ஆலோக சையோகமுமாம். அங்ஙனமே ஜலராசித்தன்மை வடிவ விசேஷத்தின் வியஞ்சகமான தரங்கமுதலியவற்றின் பிரத்தியக்ஷமு முண்டாகின்றது. இவ்வாற்ருல் சமுத்திரத்தினது ஜலசமுதாயத்தின் விசேஷ ஞானத்தினது சாமக்கிரியில் மூன்று பதார்த்தங்க ளிருக்கின்றன. க. வெண்மை உருவத்தோடு நேத்திர சையுக்த தாதான்மியம், உ. ஆலோக சையோகம, ௩. ஜலராசித்தன்மையின வியஞ்சகமான தரங்கமுதலியவற்றின் பிரத்தியக்ஷம் என்னும இம்மூன்று மிருந்தும, சமுத்திரத்தின் ஜலசமுதாயத்தில் நீலக் கற்றலத்தின் பிரமமுண்டாகின்றது. ஆதலால விசேஷ தரிசனத்தின் சாமக்கிரிக்கு அத்தியாசத்தினது பிரதிபந்தகத் தன்மையின் வியபிசாரமிருக்கின்றது.

அங்ஙனமாயினும் பிரதிபந்தகமின்றிய விசேஷ தரிசனத்தின் சாமக்கிரி அத்தியாசத்தின் பிரதிபந்தகமாம. பிரதிபந்தகத்தோடு கூடிய விசேஷ தரிசனத்தின் சாமக்கிரி அத்தியாசத்தின் பிரதிபந்தகமன்று. யாண்டுச் சமுத்திரத்தின் ஜலசமுதாயத்தில நீலக் கற்றலத்தின் அத்தியாசமுண்டாகின்றதோ, ஆண்டுச சமுத்திர ஜலத்தில் நீல உருவத்தின பிரமமுண்டாய் நீலச்சிலையின அத்தியாசமுண்டாகின்றது. நீல உருவத்தின் பிரமஞானமிருக்க, ஜலத்தில் வெண்மை உருவத்தின் ஞானம் உண்டாகிறதில்லை. ஆதலால் ஜலத்தின் விசேஷ தர்மமாகிய வெண்மை உருவம் எதுவோ அதன் ஞானத்தைப் பிரதிபந்திப்பது நீல உருவத்தின் பிரமமாம். அங்ஙனமே தூரத்தன்மைத் தோஷத்தினுல் ஜலராசித்தன்மையும் வியஞ்

சகமான அலைமுதலியவற்றின் பிரத்தியக்ஷமு முண்டாகிறதில்லை. ஆதலால் ஜலராசிதத்தன்மை வடிவ விசேஷஞானத்தின் பிரதிபந்தகம் தூரதத்தன்மைத தோஷமாம. ஆதலால் பிரதிபந்தகத்தோடு கூடிய விசேஷ ஞானத்தின் சாமக்கிரி அத்தியாசத்திற்கு விரோதியா யிருத்தலால் சமுத்திரஜல சமுதாயத்தில் நீலக்கற்றலத்தின் அத்தியாசமுண்டாகின்றது; அதன் பிரதிபந்தமுண்டாகிறதில்லை. விரிவாய்ச சொல்வதிலென்? சகல காரணங்களினின்றும தமது காரியோற்பத்தி பிரதிபந்தக மின்றியதனாலேயே உண்டாகின்றது. பிரதிபந்தகமிருக்க எந்தக் காரணத்தினாலும காரியமுண்டாகிறதில்லை. ஆதலால் பிரதிபந்தகத்தின்அபாவமும் சகல காரியங்களின் சாதாரண காரணமா யிருத்தலால் பிரதிபந்தமிருக்க நேத்திர சையோகமுதலிய சகல அசாதாரண காரணங்களின் சற்பாவத்திலும் விசேஷஞானத்தின் சாமக்கிரியில்லை. ஏனெனின் சகல காரணங்களோடுங் கூடிய காரணத்தினைச் சாமக்கிரி என்பர். யாண்டு அநேக காரணமிருந்தும ஒன்றில்லையோ, ஆண்டுச் சாமக்கிரி உண்டாகிறதில்லை. இவ்வாற்றால் ஜலத்தில் நீலத்தன்மைப் பிரமத்திற்கு வெண்மை யுருவத்தின் ஞானத்திலும, தூரதத்தன்மைத தோஷத்திற்கு ஜலராசித்தன்மை ஞானத்திலும பிரதிபந்தகத் தன்மை இருக்கின்றது. அந்தப்பிரதிபந்தகமிருக்க, பிரதிபந்தக மின்மையினால் நிகழும விசேஷஞானத்தின் சாமக்கிரியின்மையால் நீலக்கற்றலத்தின் பிரமம சமபவிக்கின்றது. ஈண்டு இப்பொருள் அறியத்தக்கதாம:—சமீபத்திலுள்ள புருஷனுக்குப் பிரகாசமுடைய தேசத்தில நேத்திர சையோக முண்டாகியும் நீல உருவத்தின் பிரமம் உண்டாகின்றது. ஆதலால் ஜலத்தில் நீல உருவத்தினது பிரமத்திற்கு விசேஷ ஞானத்தினாலாவது அதன் சாமக்கிரியினாலாவது பிரதிபந்த முண்டாகிறதில்லை. ஆதலால் விசேஷஞானத்தால் பிரதிபந்திக்கப்படாததா யிருத்தலின் ஜலத்தின் வெண்மை யுருவத்தோடு நேத்திரத்தின் சையுகத்-தாதான்மிய சமபந்தமுண்டாகியும் ஜலத்தில் நீல உருவத்தின் பிரமம் சம்பவிக்கின்றது. தாமிஞானவாதியின் மதத்தில முற்கூறிய பிரமமே சாமாநியஞானத்தன்மை வடிவத்தால் சமுத்திர ஜலத்தில் நீலக்கற்றல அத்தியாசத்திற்கு ஏதுவாம; உபாத்தியாயரது மதத்தில் தோஷத்தன்மை வடிவத்தால் விசேஷ ஞானத்தின் பிரதிபந்தகமாம, அல்லது பிரதிபந்தத்தின் பாவமின்றிய விசேஷ ஞானத்தினது சாமக்கிரியின்

அபாவத்தைச் சம்பாதித்தல் வாயிலாகச் சிலாதல அத்தியாசத்தி ற்கு ஏதுவாம். இவ்வாறுல் உபாத்தியாயரது மதத்தில்'சாமாநிய ஞானமாகிய தாமி ஞானத்திற்கு அத்தியாசத்திற்குக் காரணமா தற் றன்மையில்லை. என்றுலும் கரிமுதலியவற்றில் வெள்ளி யத்தி யாசத்தின் அபாவம் சமபவிக்கின்றது. ஆதலால அததியாசத்தில் தர்மி ஞானத்தினது காரியததன்மையின் அபாவத்தால் காரியம் சம்பவியாமையின் தர்மி ஞானமாகிய இதுவெனும் வடிவப்பிரமா விருத்தியைக் கற்பித்தல் சமபவியாது. இவ்வாற்றுல் அநுபவாநு சாரமாகவாவது காரியஅநுபபததியிலுலாவது இதுவெனுமவடிவ விருத்தி அங்கிகரிக்கப்படடிருநததனை விலக்கினுர.

## ௧௨௫. உபாத்தியாயரது மதத்தில் தர்மிஞானவாதியின் சங்கையும் சமாதானமும்.

அங்ஙனமாயினும் தர்மிஞானவாதி இது கூறுகின்றுர்:—விஷ யத்தோடு இந்திரியத்தின் சமபநதமே அந்தக்கரணத்தின் விஷயா கார விருத்திக்கு ஏதுவாம். சுத்தி முதலிய விஷயங்களோடு நேத் திரத்தின் சையோக முண்டாக இதுவெனும வடிவ விருத்தி செவ் வையாக உண்டாகாது. வேறிடத்துப் பொருந்துதல் உண்டாயின் விஷயத்தோடு இநதிரியத்தின் சையோகமுண்டாகியும் அவ்விஷ யத்தின் ஞான வடிவ விருததி உண்டாகிறதில்லை. வேறிடத்துப் பொருநதுதலின்றியதற்கு விஷயத்தோடு இநதிரிய சையோக முண்டாயின் அவ்விஷய வடிவ விருததி அவசிய முண்டாகின்றது. ஆதலால் வேறிடத்துப் பொருநதுதல் வடிவப் பிரதிபந்தகத்தின் இன்மையோடு கூடிய நேத்திர சையோகததால் இரஜ்ஜு சுத்தி முதலியவற்றை விஷயஞ செய்வதாய் அநதக்கரணத்தின் இதுவெ னும வடிவ விருத்தி உண்டாகின்றது. அவ்விருத்தி நேத்திர முத லிய பிரமாண ஜந்நியமாயிருததலாலும் சுத்தி முதலியவற்றின் பாதிககப்படாத இதுவெனுந் தன்மையைக் கோசரிப்பதாயிருத் தலாலும் பிரமை வடிவமாகின்றது. இவ்வாற்றுல் காரண சற்பா வத்தால் இதுவெனும வடிவப் பிரமையின் உற்பனம் அங்கிகரிக் கின், உபாத்தியாயரது சமாதானம் இங்ஙனமாகின்றது:—

நேத்திர சையோகமுதலியவற்றுல் இதுவெனும் வடிவ விரு த்தி உண்டாகின்றது. ஆனுல் தோஷத்தோடுகூடிய நேத்திரஜந்நிய மாகின்றது. இது இரஜதம் என்பதாகத் தனது காலத்தில் உற்பத்

தியாகிய மிதந்ியாரஜதத்தினை விஷயஞ்செய்வதாய் உண்டாகின்றது. ஆதலால் அவ்விருத்தி பிரமவடிவமாகின்றது; பிரமையாகிற தில்லை. உபாத்தியாயரது மதத்தின் நிச்சயம் இதுவாம:—தோஷத் தோடுகூடிய இந்திரியத்தின் சம்பந்தத்தில் விஷயசேதனத்தின்கண்ணுள்ள அவித்தையில் காரியத்திற்கு எதிர்முகமாகுந தன்மை வடிவினதாகியக்ஷோபமுண்டாய்ச் சாப்பமிரஜதமுதலியவடிவ அவித்தையின் பரிணமமுண்ட ாகின்றது. நேத்திரசையோகததின் பிற்கணத்தில் அவித்தையில் க்ஷோபமுண்டாகின்றது. அதன் பிற்கணத்தில அவித்தையின் சர்பபமிரஜத முதலிய பரிணமமுண்டாகின்றது. எந்தக்ஷணததில் சர்ப்பம் இரஜதமுதலிய அவித்தையின் பரிணமமுண்டாகின்றனவோ, அதே க்ஷணததில் அசசர்ப்பமிரஜதமுதலியவற்றினை விஷயஞ் செய்வதாகிய இது இரஜதமென்னும் அந்தக்கரணத்தின் விருததி வடிவ ஞானமுண்டாகின்றது. எநதத் துஷ்ட நேத்திர சையோகத்தால் அவித்தையில க்ஷோபவாயிலாக சர்ப்பமிரஜத முதலியவற்றின உற்பததி உண்டாகின்றதோ, அதே சையோகத்தால் அந்தககரணத்தின் பரிணமவடிவ விருத்தியாகிய ஞானததின் உற்பத்தி உண்டாகின்றது.

இந்திரிய சையோகததிற்கு மறைப்பின்றிய பிற்கணத்தில் ஞானததின உற்பததி அங்கீகரித்திருக்கின்றனா. நேத்திரசையோகத்தால் ஒரு கணததின் மறைப்பிஞல் சாப்பமிரஜத முதலியவற்றின் உற்பததி சொல்லப்பட்டது. ஏனெனின் நேத்திர சையோகத்திற்குப் பிற்கணத்தில் அவிதனதயின் க்ஷோபம சொல்லப்பட்டது. அதன்பிற்கணத்தில் சாப்பமிரஜதமுதலியவற்றின் உற்பத்தி சொல்லப்பட்டது. ஆதலால் அவித்தையின் க்ஷோப காலத்தில் விருத்தி ஞானததின் உற்பத்தி சமபவிக்கின்றது. அதன் பிற்கணத்தில் ஆவனவாகிய இரஜதமுதலியவற்றிற்கு ஞானகாலத்தில் உற்பத்தி கூறுதலில் விரோதந தோற்றுகின்றது. அங்ஙனமாயினும விரோதமில்லை. ஏனெனின் காரியத்திற்கு எதிர்முகமாகும் அவித்தையின் அவஸ்தையினை க்ஷோபமென்பா. எங்ஙனம் காரியத்திற்கெதிர்முகமாய் அவித்தைதனது காரியமாகிய சர்ப்பம் இரஜதமுதலியவற்றை ஆக்குகின்றதோ, அங்ஙனமே அந்தக்கரணமும் நேத்திர சையோகததால் ஞானவடிவ காரியத்தின் அபிமுகமாய் ஞானத்தினை ஆக்குகின்றது. ஆதலால் அவித்தைக்கும் அந்தக்கரணத்திற்கும் தமது காரியாபிமுக அவஸ்தைக்கு மறைப்பின்றியபின் ஒரு

க்ஷணமிருக்கின்றது. அதனின் இரண்டாவது க்ஷணத்தில் அவித்தையின் சாப்பம இரஜத முதலிய பரிணாமமுணடாகின்றது. அதே க்ஷணத்தில் அநதக்கரணததின் ஞானரூப பரிணாமமுண்டாகின்றது. நேத்திர சையோகத்திற்கு மறைப்பின்றிய பிற்கணத்தில் எந்த ஞானத்தின் உற்பத்தியைக் கூறுகின்றனரோ அது க்ஷண காலம் அதிசூக்ஷமமாம். ஆதலால் காரியாபிமுக அவஸ்தையின் க்ஷணமும் காரியத்தினது உறபததியின் க்ஷணமும் ஒரேகாலமாம் என்னும் அபிப்பிராயத்தாற் கூறுகின்றனா. இவ்வாற்றால் இரஜ்ஜு சுத்தி முதலியவற்றோடு துஷ்ட இந்திரியத்தின் சையோகததால் அந்தக்கரணத்தின் பரிணாமமாகிய ஞானமும் விஷயாவசசின்ன சேதனத்தின்கண்ணுள்ள அவிததையின் பரிணாமமாகிய சர்ப்பமிரஜதமுதலியனவும் ஏககாலத்தில் உண்டாகின்றன. அவற்றிற்கு விஷய விஷயித்தன்மையுண்டு. ஆதலால் அநதக்கரணத்தின் பரிணாமமாகிய விருததி ஞானமும் துஷ்ட இந்திரிய சையோகஜந்யமாம்;மிததியா பதார்ததகோசரமுமாம்.ஆதலால்அதுபிரமமாம;பிரமையன்று. தாமிஞானவாதியின் மததகில் அவித்தையின் க்ஷோபத்திற்கு ஏது சாமாநிய ஞானமாம். ஆதலால் தர்மிஞானவாதியின் மதத்தில் இதுவெனும் வடிவ விருத்திக்குப் பிற்காலத்தில்க்ஷோபமுடைய அவித்தையின் பரிணாமமாகிய சர்ப்பமிரஜத முதலியன உண்டாகின்றன. பிற்காலத்து உண்டாகும் பதார்த்தம்,பிரத்தியக்ஷ ஞானத்திற்கு விஷயமாகாது. ஆதலால் இதுவெனும் வடிவ விருத்திக்கு விஷயம் சாபபம் இரஜதமுதலிய மிததியாபதாாத்தங்களாகாது ;சுத்தி இரஜ்ஜு முதலியனவாயிருத்தலின் இதுவெனும் வடிவவிருத்தி பிரமையாம. சாப்பமிரஜதமுதலியவற்றை விஷயஞசெய்வது அவித்தையின் பரிணாமமாகிய பிரமவிருத்தியாம். இக்காரணத்தால் தாமிஞானவாதியின் மததில் பிரமவிருத்திஐநதிரியகமன்று. நேரே இநதிரிய சமபந்தத்தால் உண்டாவது எதுவோ அது ஐந்திரியகமெனப்படுகினறது. பிரமவிருத்தியின் அதிஷ்டானமாகிய இதுவெனும் வடிவவிருததி யாதோ,அதன்உற்பத்தி வாயிலாகப் பரம்பரையாய்இந்திரியசமபநதத்திற்குப் பிரமவிருததியில உபயோகமிருக்கின்றது; நேரே இலலை. உபாத்தியாயரது மதத்தில் சாப்பமிரஜத முதலியவற்றின் உபாதான வடிவ அவித்தையில் க்ஷோபத்திற்கு நிமித்தம் தோஷமுடைய இநதிரிய சையோகமாம்; ஆதலால் ஒரே இநதிரிய சையோகததால் அவித்தையின் பரிணாமமாகிய சர்ப்ப

பிரஜத முதலியனவும், அவற்றை விஷயஞ்செய்யும் அந்தக்கரணத்தின் பரிணாமமாகிய இதுவெனும் வடிவ விருத்தியும் ஏககாலத்தில் உண்டாகின்றன. இவ்வாற்றால் உபாத்தியாயரது மதத்தில் இதுவெனும் வடிவ விருத்தி பிரமரூபமாகவோ உண்டாகின்றது. சாக்ஷாத் இந்திரிய சம்பந்தத்தால் உற்பத்தியாகின்றதாகலின் ஐந்திரியகமெனப்படுகின்றது. இந்திரிய சம்பந்தத்தால் எந்த இதுவெனும் வடிவவிருத்தி உண்டாகின்றதோ, அது தனது காலத்தில் உற்பத்தியாகிய சர்ப்பம் இரஜதமுதலியவற்றை விஷயஞ்செய்வதாகின்றது. ஆதலால் இது சர்ப்பம் இது இரஜதம் என்றிவ்வாறுண்டாகின்றது. கேவலம இதுவெனும பதார்த்தத்தைக் கோசரிப்பதாகிறதில்லை.

## ௧௨௬. உபாத்தியாயரது மதத்தில் சங்கையும் சமாதானமும்.

உபாத்தியாயரது மதத்தில் இச்சங்கை உண்டாகின்றது :—எப்பதார்த்தத்தோடு இந்திரியத்தின் சம்பந்தமுண்டாகின்றதோ, அதனைக் கோசரிப்பதாகவே விருத்தி உண்டாகின்றதென்பது நியமம். அந்நியத்தோடு இந்திரியத்தின் சம்பந்தத்தால் அந்நிய கோசர விருத்தி உண்டாகுமாயின், கடத்தோடு இந்திரியத்தின் சம்பந்தத்தால் படகோசர விருத்தியும உண்டாதல்வேண்டும். வெகுவாய்ச் சொல்லுவதிலென்ன? ஒரு பதார்த்தத்தோடு இந்திரியத்தின் சம்பந்தமுண்டாயின் சகல பதார்த்த கோசர விருத்தியின் ஆபத்தியால் சகலபுருஷர்களும அநாயாசமாக சர்வஞ்ஞர்களாதல்வேண்டும். ஆதலால் அந்நிய பதார்த்தத்தோடு இந்திரியத்தின் சம்பந்தத்தால் அந்நியகோசர விருத்தி சம்பவியாது. ஆனால் எதனோடு இந்திரியத்தின் சம்பந்தமுண்டாகின்றதோ, அதனைக் கோசரிக்கும விருத்தியே உண்டாகின்றது. உபாத்தியாயரது மதத்தில் இரஜ்ஜு சுத்திமுதலியவற்றோடு நேத்திர சையோகத்தால் உற்பத்தியாகிய விருத்தி சர்ப்ப ரஜதாதிகோசரமென்று கொள்ளப்பட்டிருக்கின்றது. அது சம்பவியாது.

இச்சங்கைக்கு இது சமாதானமாம் :—சுவசம்பந்தத்தோடும் தனது தாதான்மிய முடையதனோடும இந்திரிய சம்பந்தத்தால் சுவகோசர விருத்தி உண்டாகின்றது. விருத்தியின் விஷயம் சுவ பதத்தின அர்த்தமாம். எந்தப் பதார்த்தத்தினை விஷயஞ்செய்யும் விருத்தி உண்டாகின்றதோ, அந்தப் பதார்த்தத்தோடு இந்திரியத்

தின் சம்பந்தம், அல்லது அப்பதார்த்தத்தின் தாதான்மிய முடையதனோடு இந்திரியத்தின் சம்பந்த முண்டாதல்வேண்டும். பிரமவிருத்தியின் விஷயம் சர்ப்பமிரஜத முதலியனவாம். ஆண்டு விருத்தியின் விஷயத்தினோடு நேத்திரத்தின் சம்பந்தமுண்டாகவில்லை. ஆனால் சர்ப்பமிரஜதமுதலியவற்றின் தாதான்மியமுடைய இரஜ்ஜு சுத்தி முதலியவற்றோடு நேத்திரத்தின் சம்பந்தமுண்டாயிருக்கின்றது. ஏனெனின் அத்தியஸ்தத்திற்கு அதிஷ்டானத்தோடு தாதான்மிய சம்பந்த முண்டாகின்றது. சர்ப்ப மிரஜதமுதலியவற்றின் அதிஷ்டானத் தன்மையை அவச்சேதகஞ் செய்வனவா யிருத்தலின் இரஜ்ஜு சுத்தி முதலியனவும் சர்ப்ப மிரஜதமுதலியவற்றின் அதிஷ்டான மெனப்படுகின்றன. ஆதலால் சர்ப்பமிரஜத முதலியவற்றின் தாதான்மியமுடைய இரஜ்ஜு சுத்தி முதலியவற்றின் சம்பந்தத்தால் உற்பத்தியாகிய விருத்திக்குச் சர்ப்பமிரஜத முதலியனவும் விஷயங்களெனல் பொருந்தும். கடத்தில் படத்தின் தாதான்மிய மில்லை. ஆதலால்கட இந்திரியங்களின் சம்பந்தத்தால் உற்பத்தியாகிய விருத்தி படகோசரமாகாது. இவ்வாறனால் ஒரு பதார்த்தத்தின் சம்பந்தத்தால் உற்பத்தியாகிய விருத்தி சகல பதார்த்தங்களையும் கோசரிப்பதாகாது. பிரஹ்மத்திற்குப் பின்னமான எப்பதார்த்தத்திலும் எல்லாவற்றின் தாதான்மியமு மில்லை. பிரஹ்மத்தில் சகல பதார்த்தங்களின் தாதான்மியமு மிருக்கின்றது. ஆனால் பிரஹ்மம் அசங்கமாம். அதனோடு இந்திரியத்திற்குச்சம்பந்த முண்டாவியாது. ஆதலால் ஒரு பதார்த்தத்தோடு இந்திரியத்தின் சம்பந்தத்தால் விருத்தி உண்டாகவே சர்வஞ்ஞத்தன்மையின் ஆபத்தி இல்லை. தார்க்கிஞான வாதியின் மதத்தில் சர்ப்பம் இரஜத முதலிய ஞேயமும், அவற்றின் ஞானமுமாகிய இரண்டும் அவித்தையின் பரிணாமமாம். உபாத்தியாயரது மதத்தில் சர்ப்பம் இரஜதம் முதலியனவோ அவித்தையின் பரிணாமமாம். அவற்றின் ஞானம் முற்கூறியபடி அந்தக்கரணத்தின் பரிணாமமாம். அவ்வந்தக்கரணத்தின் பரிணாமம் இந்திரிய சம்பந்தத்தால் உண்டாகின்றது; ஆதலால் ஐந்திரியக மென்பர். இவ்வாற்றால் சர்ப்ப மிரஜத முதலியவற்றோடு நேத்திரசையோகத்தின் அபாவமுண்டாகியும், இரஜ்ஜு சுத்தி முதலியவற்றோடு துஷ்ட நேத்திரசையோகத்தாற் றோன்றிய சாக்ஷாத்காரப்பிரமவிருத்திக்கு விஷயம் சர்ப்ப மிரஜத முதலியனவா மென்பது உபாத்தியாயரது மதம். "சக்ஷுவினால் சர்ப்பத்தைப் பார்க்கின்

றேன், சக்ஷுஸ்ஸினால் இரஜதத்தைக் காண்கின்றேன்" என்னும் அநுவியவசாயத்தினாலும் சர்ப்ப ரஜத முதலியவற்றைக் கோசரிக்கும் பிரமவடிவ சாக்ஷுஷ விருத்தியே சித்தமாகின்றது. இரஜ்ஜு சுக்தி முதலியவற்றைக் கோசரிக்கும் இதுவெனும் வடிவப்பிரமாவிருத்தியில் அபிவியக்தமான (வெளிப்பட்ட) சாக்ஷி கோசரத்தன்மை சர்ப்பரஜதாதிகளுக்குத் தாமிஞானவாதிகள் அங்கீகரித்திருக்கின்றனர். அவர்கள் மதத்தில் முற்கூறிய அநுவியவசாயத்தின் விரோத மிருக்கின்றது.

## ௩௨௭. தர்மிஞானவாதி அத்தியாசத்தில் பரம்பரையாக நேத்திரத்தின் உபயோகமுளதெனலும், உபாத்தியாயர் சங்கின் பீதத்தன்மை அத்தியாசத்தில் நேத்திரத்தின் சாக்ஷாத் உபயோகமுளதெனலும்.

தர்மிஞானவாதி இங்ஙனம் கூறுகின்றார் :—சர்ப்ப ரஜத முதலியவற்றின் பிரகாசமோ சாக்ஷிவடிவமாம். ஆனால் அபிவியக்த சாக்ஷியினாலேயே அவற்றின் பிரகாச முண்டாகின்றது. ஆதலால் சாக்ஷியின் அபிவியஞ்சகமாகிய இதுவெனும்வடிவவிருத்தி நேத்திர ஜந்நியமா யிருத்தலால் பரம்பரையாகச் சர்ப்ப ரஜத முதலியவற்றின் சாக்ஷி வடிவப் பிரகாசத்திலும் நேத்திரத்தின் உபயோக மிருக்கின்றது. ஆதலால் சர்ப்ப ரஜத முதலியவற்றின் ஞானத்தில் சாக்ஷுஷத்தன்மை வியவகார முண்டாகின்றது. ஆதலால் தாமிஞானவாதியின் மதத்தில் சர்ப்ப ரஜத முதலியவற்றிற்குச் சாக்ஷிபாஸ்யத்தன்மை அங்கீகரிக்கினும், முறகூறிய அநுவியவசாயத்திற்கு விரோதமில்லை. இங்ஙனம கூறுதலும அசங்கதமாம். ஏனெனின் முற்கூறியஸ்தலத்திலோ பரம்பரையாக நேத்திரத்தின் உபயோகமிருத்தலால் சாக்ஷுஷத்தன்மை வியவகாரத்தின் நிர்வாகம் சொல்லப்பட்டது. அங்ஙனமாயினும சங்கில பீதப் பிரமமுண்டாகின்றது. ஆண்டுப் பரமபரையாகவும நேத்திரத்தின் உபயோகம் சம்பவிக்கிறதில்லை. ஏனெனின் உருவமின்றிய கேவல சங்கிலோ நேத்திரத்திற்கு யோக்கியதை யில்லை. ஆதலால் உருவ விசிஷ்டத்திற கூறுமிடத்துச் சங்கின் வெண்மை உருவம கிரகிக்கப்படுமாயின் பீதத்தன்மையின் அத்தியாசம உண்டாகாது. இக்காரணத்தால் அத்தியஸ்த பீதஉருவ விசிஷ்டத்தில் நேத்திரத்தின் யோக்கியதை அங்கீகரிக்கவேண்டியதாகும். அது தாமிஞானவாதியின்

மதத்திற்சம்பவியாது. ஏனெனின் அத்தியஸ்த பதார்த்தத்தில் ஐந்திரியகத்துவம இல்லையென்பது தர்மிஞானவாதியின் மதம். இவ்வாறு உருவமின்றிய கேவல சங்கு ஞானத்திலேனும் உருவ விசிஷ்ட சங்கு ஞானத்திலேனும் நேத்திரத்தின் உபயோகம் சம்பவிக்கிறதில்லை. உபாத்தியாயரது மதத்தில் சங்கினோடு நேத்திரத்தின் சம்பந்தமே பீதவடிவ அத்தியாசத்திற்கு ஏதுவாம். அந்த நேத்திரத்தின் சம்பந்தம உருவமின்றிய கேவல சங்கினிலேனும வெண்மை உருவ விசிஷ்டத்தினிலேனும் சம்பவிக்கின்றது.

## ௧௨அ. தர்மிஞானவாதிகூறும் சங்குப் பொன்மையின் அத்தியாச அபாவமும், உபாத்தியாயர் கூறும் அதன் அநுவாதமும், தோஷமும்.

இத்தலத்திலும தர்மிஞானவாதி இங்ஙனம கூறுகின்றார் :—யாண்டுச் சங்கில் பீத உருவத்தின் அத்தியாசமுண்டாகின்றதோ, ஆண்டுச் சாப்ப மிரஜத முதலியவற்றினைப்போல, பொன்மையின் அத்தியாசமும் சொரூபமாக உண்டாகிறதில்லை. ஆனால் எப்படி ஸ்படிகத்தில செம்பரத்தம புஷ்பத்தின் கணணுள்ள செம்மையின் சம்சர்க்கத்தின் அத்தியாச மிருக்கின்றதோ, அங்ஙனமே நேத்திரத்தின் கண்ணுள்ள பீத சம்பந்தியாகிய பொன்மையினது சம்பந்தத்தின் அத்தியாசம சங்கிலிருக்கின்றது. பீதமாகிய பித்தத்தின் ஞானமின்றி அதன் சம்பந்தத்தின் அத்தியாசம சம்பவியாது. ஆதலால் பீதமாகிய பித்தத்தின ஞானத்தில் நேத்திரத்தின் உபயோகமிருத்தலால் சங்க பீதத்தின அத்தியாசத்திலும பரம்பரையாக நேத்திரத்தின் உபயோகமிருக்கின்றது. ஆதலால பீதமாகிய சங்கினைக் கண்ணாற் காணகின்றேன் எனனும அநுவியவசாயம் சம்பவிக்கின்றது. சங்கில பீத உருவத்தின் சம்பந்தம் அநிர்வசநீயமாக உற்பத்தியாகின்றது. ஆதலால் அந்யதாக்கியாதி வாதத்தின் ஆபத்தியுமில்லை.

இவ்வாறு தர்மிஞானவாதி கூறுவாராயின அவர் வார்த்தையில் இது கேட்கவேண்டியதாம:—சங்கினிடத்துப் பீத உருவத்தின் சமசர்க்காத்தியாசத்திற்கு ஏது பித்தத்தினது பீதத்தன்மையின் ஞானமாம. அது நேத்திரதேசத்திலுள்ள பித்தத்தினது பீதத்தன்மையின் பிரத்தியக்ஷ ஞான முண்டாகின்றதா? அல்லது சங்கு தேசத்தில் பீதத்திரவியம் அடையப்பட்டதாய் அதனது பீதத் தன்

மையின் பிரத்தியக்ஷ ஞானமுண்டாகின்றதா? முதற் பக்ஷத்தைக் கூறின் நேத்திரஸ்தானத்திலுள்ள பீதத்திரவியத்தோடு நேத்திரத்தி லுள்ள அஞ்சனத்தினோடு நேத்திரசையோகம் பொருந்தாதது போல, நேத்திரத்தின் சையோகம சம்பவியாமையால் அதன் சாக்ஷாஷப் பிரத்தியக்ஷமோ உண்டாகாது. ஆதலால் நேத்திரத்தின் கண் ணுள்ள பீதமாகிய பித்தத்தினைக கோசரிப்பது பரோக்ஷவிருத்தி யாகும். அந்தப் பரோக்ஷவிருத்தியின்கண்ணுள்ள சாக்ஷியினால் சங் கின்பீதத்தன்மையினது அபரோக்ஷப்பிரகாசம் உண்டாகாது. எவ் வாற்றாலும் நேத்திரத்தின கண்ணுள்ள பித்தத்தினது பீதத்தன் மையைக் கோசரிக்கும சாக்ஷாஷ விருத்தியை அங்கீகரிக்கி னும், அவ்விருத்தியினகண் அபிவியக்த சாக்ஷியோடு நயனதே சத்திலுள்ள பித்தத்தினது பீதத்தன்மை மாத்திரத்தின் சம் பந்த மிருக்கின்றது. சங்கினோடும சங்கினிடத்துப் பீதத்தன்மை யின் சம்பந்தத்தினோடும சாக்ஷிக்குச சம்பந்தமில்லை. ஆதலால் சங்கிற்கும் சங்கினிடத்துப் பொன்மையின் சம்பந்தத்திற்கும் சாக்ஷியினோடு சம்பந்தமின்மை யிருத்தலின் பிரகாசமுண்டாக லாகாது. தாற்பரிய மிதுவாம:—ஜபாகுசும (செவ்வரத்தம்பூ) சம்பந்தமுள்ளதாகிய இரக்தத்தன்மையின் அநிர்வசநீய சம்பந்த த்தின் உற்பத்தி ஸ்படிகத்தில் உண்டாகுங்கால், அவ்விடத்திலோ இரக்தத்தன்மை, ஸ்படிகத்தன்மை, அஙஙனமே இரக்தத்தன்மை யின் சம்பந்த மென்னு மூன்று பதார்த்தங்களும் முன் இடத் தில் இருத்தலால் ஒரு விருத்தியில் அபிவியக்தமான சாக்ஷிக்கு விஷயமாகின்றன. பீத சங்கின் அத்தியாசத்தில பீதத்துவம் (பொன்மை) நேத்திரதேசத்தி லிருக்கின்றது. பொன்மையின் சம்பந்தத்தோடுகூடிய சங்கு முன் இடத்தி லிருக்கின்றது. ஆத லால் ஒருவிருத்தியில் அபிவியக்த சாக்ஷியினால் மூன்றினது பிர காசம சம்பவியாது. ஆதலால் நயனதேசத்திலுள்ள பித்தத்தி னது பொன்மையின் ஞானத்தில நேத்திரத்தின் உபயோக மிரு க்கின்றதென்னும முதற்பக்ஷம சம்பவியாது. ஆதலால் சங்குதேச த்தில அடையப்பட்ட பித்தத் திரவியத்தினது பீதத்தன்மையின் அபரோக்ஷஞானம நேத்திரத்தினால் உண்டாகின்றது. அதன்பின் சங்கிற் பீதத்தன்மையின் அநிர்வசநீய சம்பந்தத்தின் உற்பத்தி உண்டாகின்றது. எங்ஙனம: குசும்பாவில சம்பந்தமுள்ளதாகிய படத்தில் குசும்பாத திரவியத்தினது உருவத்தின் உணர்ச்சி உண்

டாகின்றது. ஆண்டு ஒரு விருத்தியில் அபிவியக்த சாக்ஷியினால் குசும்பாத்திரவியமும், இரக்த நிறமும், அங்ஙனமே அதன் சம்ப ந்தியான படமுமாகிய இவற்றின் பிரகாசமுண்டாகின்றது. ஸ்ப டிகத்தில் செம்மைப்பிரம முண்டாகின்றது. ஆண்டும ஒரு விரு த்தியில் அபிவியக்தமான சாக்ஷியினாலேயே எல்லாவற்றின் பிரகா சமு முண்டாகின்றது. அங்ஙனமே சங்குப்பொன்மைப் பிரமத்தி னும் நயனதேசத்தினின்றும வெளிப்பட்ட பொன்மைப்பித்தமும் சங்குதேசத்திற்சென் றடைகின்றது. அதன் அநிர்வசநீய சம்பந் தத்தின் உற்பத்தி சங்கினிடத்து உண்டாகின்றதென்னும் இரண் டாவது பக்ஷத்தை அங்கீகரிக்கின் முற்கூறிய தோஷமில்லை. ஏனெனின், மஞ்சள் நிறப்பித்தமும சங்கமும் ஓரிடத்திருப்ப னவா யிருத்தலின் மஞ்சள் நிறப பித்தத்தைக் கோசரிக்கும் சா க்ஷ்யாக்ஷ விருத்தியில அபிவியக்தமான சாக்ஷியினால் சங்கு, சங்கினி டத்துள்ள பொன்மையின் ஸம்ஸர்க்கம் எனபவற்றின பிரகாசத் தை அங்கீகரித்தலில் ஓர பாதகமுமில்லை. இவ்வாற்றால் சங்குதே சத்திற்சென்றபீதமாகிய பித்தமயாதோ, அதன் பீதத்தன்மையின் அநிர்வசநீய சம்சர்க்கத்தின் உற்பத்தி சங்கினிடத்து உண்டாகின் றது. சங்குதேசத்திலுள்ள பித்தத்தின் பிரத்தியக்ஷம் நேத்திரஜந் நியமாகின்றது. அங்ஙனமே சங்கினிடத்துச் சம்சர்க்காத்தியாச முண்டாகின்றது. ஆதலால் பரம்பரையாகச் சங்குப் பொன்மை அத்தியாசத்திலும நேத்திரத்தின் உபயோகமிருத்தலால் சாக்ஷா ஷத்தன்மைப் பிரதீதி சம்பவிக்கின்றதென்னும் தர்மிஞானவாதி யின் வார்த்தையும் சம்பவியாது. ஏனெனின் சங்குதேசத்தில் பீத உருவமுடைய பித்தத்தின் செல்லுதல உண்டாமாயின், பீதத்தன் மையின் உணர்ச்சி சங்கினிடத்துச சகல திருஷ்டாக்களுக்கும் உண்டாதல் வேண்டும்.

## கஉக. முற்கூறிய தோஷத்திற்குத் தர்மிஞானவாதி யினாற் சொல்லப்படும் (இருமுறை) சமாதானமும், உபாத்தியாயரால் சொல்லப்படும் (இருமுறை) தோஷமும்.

தர்மிஞானவாதி இங்ஙனம் கூறுகின்றார்:—தோஷமுடைய நேத்திரத்தால் பித்தம வெளிப்படுதலை எந்தப் புருஷன் காண் கின்றானோ, அவனுக்கே சங்கிற் பூசப்பட்ட பித்தத்தினது பொன் மையின் உணர்ச்சி உண்டாகின்றது. எவனுடைய நேத்திரத்திற்

பித்த தோஷமில்லையோ, அவனுக்கு நேத்திரத்தினின்றும் வெளிப்படும் பித்தம் காணப்படுகிறதில்லை. ஆதலால் பித்தத்தினது பொன்மையின் உணர்ச்சி சங்கினிடத் துண்டாகிறதில்லை. எங்ஙனம் பூமியில் எழும்புதலைச் செய்கின்ற பட்சியினது ஆதி எழும்புதற் கிரியையினைக் கண்டு இடைத்தொழிலையும் காண்கின்றவனுக்கே மிக வுயர்ந்தவிடத்தில் பக்ஷியின் உணர்ச்சி உண்டாகின்றதோ, கீழ் இடத்தில் எழும்புதலைச் செய்வதனைக் காணாதவனுக்கு மிக வுயர்ந்தவிடத்துள்ள பக்ஷியின் உணர்ச்சி உண்டாகாதோ, அங்ஙனமே எவனது நேத்திரத்தினின்றும் பீதமாகிய பித்தம் வெளிப்படுகின்றதோ, அவனுக்குமாத்திரம் வெளிப்படுதலின் உணர்ச்சி இருத்தலால சங்குதேசத்தில் அதன் உணர்ச்சி உண்டாகின்றது; அந்நியனுக்கில்லையென்னும் இத்திருஷ்டாந்தத்தினால் அந்நிய புருஷனுக்குப் பொன்மை ஞானத்தினது ஆபத்தியின் பரிகாரம் கூறின் அது பொருந்தாது. ஏனெனின் எவனுக்கு உயர்ந்த இடத்திலிருக்கும் பக்ஷி காணப்படுகின்றதோ, அவன் அந்நியபுருஷனுக்கு எனனுடைய நேத்திரத்திற்குச் சமீபமாக உன்னேத்திரத்தை வைத்துப்பார் என்று உபதேசஞ் செய்கிறான். அல்லது விரலைச் சுட்டினாலும் அந்நிய புருஷனுக்கும் உயரிடத்திலுள்ள பக்ஷியின் உணர்ச்சி உண்டாகின்றது. சங்கிற்பற்றியுள்ள பித்தத்தினது பீதத்தன்மையின் உணர்ச்சி எவ்விதத்தினாலும் அந்நியனுக்கு உண்டாகாமையின் திருஷ்டாந்தம் விஷமமாம். ஆதலால் சங்கு தேசத்தில் பித்தத்தினை செல்லுகை சம்பவியாது.

தார்மி ஞானவாதி இவ்வாறு கூறுகின்றார்:— தோஷமுடைய நேத்திரத்தால் வெளிப்பட்ட பீத பித்தத்தின் பொன்மையின் அபரோக்ஷம் தோஷமுடைய நேத்திரத்தினாலேயே உண்டாகின்றது. ஆதலால் அந்நிய புருஷர்களுக்குச் சங்கிற் பொன்மையின் அத்தியாசம் உண்டாகிறதில்லை. இவ்வாறாதல் சங்குதேசத்திலுள்ள பித்தத்தினது பொன்மையின் அபரோக்ஷ அநுபவம் நேத்திரேந்திரியத்தினால உண்டாகின்றது. நேத்திரத்தினால் அநுபவிக்கப்பட்ட பொன்மையின் அநிர்வசநீய சம்பந்தம் சங்கினிடத்து உற்பத்தியாகின்றது. அதனைச் சாக்ஷி பிரகாசிக்கின்றது. சங்கினிடத்துப் பொன்மைச் சம்பந்தத்தின் உணர்ச்சியில் பரம்பரையாக நேத்திரத்தின் உபயோக மிருத்தலால், சாக்ஷுஷத்தன்மை வியவகாரமும் சம்பவிக்கின்றது.

இவ்வாறு தர்மி ஞானவாதியின் சமாதானமும் அநுபூய மான ஆரோபத்திலேயே சம்பவிக்கின்றது. ஸ்மரிக்கப்படும் ஆரோபத்திற் சமபவியாது. வேறிடத்து அநுபவிக்கப்பட்ட தின் வேறிடத் துணர்ச்சியினை அநுபூயமான (அநுபவிக்கப்பட்ட) ஆரோப மென்பர். எங்ஙனம்: சங்காகிய இடத்தின் கண்ணுள்ள நேத்திரத்தின் பித்தத்தில் அநுபவிக்கப்பட்ட பொன்மையின் சம்பந்தம் எதுவோ, அதன் உணர்ச்சி சங்கினிடத்து உண்டாகின் றது. இது அநுபவிக்கப்பட்டதின் ஆரோபமாம். இவ்வாற்றால் சந் நிதிப்பட்ட பதார்த்தத்தினது நாமத்தின் உணர்ச்சி அந்நியத்தி லுண்டாகின்றது. ஆண்டு முழுவதும அநுபூயமான ஆரோப மாம். பிரத்தியக்ஷ அநுபவத்தினது விஷயத்தின் ஆரோப முண் டாயின் அது அநுபவிக்கப்பட்ட ஆரோப மெனப்படுகின்றது. சந் நிதிப்பட்ட உபாதியின் கண்ணேயே பிரத்தியக்ஷ அநுபவத்தின் விஷயத்தன்மை உண்டாகின்றது.ஜலத்தில் நீலத்தன்மையின் அத்தி யாசமுண்டாகின்றது. அது ஸ்மர்யமாண (ஸ்மரிக்கப்படும்) ஆரோப மாம் ஸ்மிருதியின்விஷயத்தினை ஸ்மரிக்கப்படுவதென்பர்.ஜலத்திற்கு ஆதாரமான பூமி நீலமாயிருக்கின், அல்லது நீலமண்ணால் கலக்கப் பட்ட ஜலமாயிருக்கின், ஆண்டு ஜலத்தின் நீலத்தன்மை அத்தியா சம் அநுபவிக்கப்பட்ட ஆரோபமாகச சமபவிக்கின்றது. ஆனால் வெண்பூமியிலுள்ள நிர்மல ஜலத்திலும் ஆகாயத்திலும நீலத்தன் மையின் ஸ்மரிக்கப்படு மாரோப மிருக்கின்றது. அந்த ஸ்தானத் தில் நீலஉருவ சமசாக்கமுடையதாகிய அதிஷ்டானத்தை் கோச ரிக்கும சாக்ஷாத்கார விருத்தியின் அங்கீகாரம இன்மையால் பரம் பரையாகவும நேத்திரத்தின் உபயோகம் சமபவிக்கிறதில்லை. ஆத லால் முற்கூறிய அத்தியாசத்தில் சாக்ஷாத்காரத்தன்மை உணர்ச்சி தர்மி ஞானவாதியின் மதத்திற் சம்பவியாது. ஏனெனின் அத்தி யஸ்த பதார்த்தத்தினைத் தர்மி ஞானவாதியின மதத்தில் சாக்ஷி பாஸ்யமெனக் கொண்டிருக்கின்றனர். உபாத்தியாயரது மதத்தில் அத்தியஸ்த பதார்த்தத்தின் இந்திரியக விருத்தி உண்டாகின்றது. ஆதலால் முற்கூறிய அத்தியாசத்திலும் சாக்ஷாத்காரத் தன்மையின் உணர்ச்சி சமபவிக்கின்றது. ஸ்தனத்தின மதுரமான பாலில் யாண் டுக் கைப்பிரசத்தின் பிரம முண்டாகின்றதோ, அந்த ஸ்தானத் தில் மதுரமான பால் அதிஷ்டானமாம். திரவியக் கிரகணத்தில் இரஸேந்திரியத்திற்கு யோக்கியதை இல்லாமையால் மதுரமான

பாலின் உணர்ச்சியிலோ இரஸனேந்திரியத்தின் உபயோகம் சம்ப விக்கிறதில்லை. தர்மி ஞானவாததில் அத்தியஸ்த கோசர ஐந் திரியக விருத்தி உண்டாகிறதில்லை. ஆதலால் மதுரமாகிய பாலில் கைப்புப பிரமத்திற்கு இராஸனத்தன்மை (ரஸனேந்திரியத்தால் அறியுந்தன்மை) சொல்லலாகாது. உபாத்தியாயரது மதத்திலோ கைப்பைக் கோசரிக்கும இராஸன(ரஸனேந்திரிய) விருத்தி உண் டாகின்றது. ஆதலால் கைப்புப் பிரமத்தில் இராஸனத்தன்மை வியவகாரம் சம்பவிக்கின்றது.

## கூ௰. மதுரமாகிய பாலில் கைப்பிரசாத்தி யாசத்தின் இரஸனையால் கோசரிக்குந் தன்மை பூர்வகமான உபாத்தியாயரது மதத்தின் நிச்சயம்.

ஆனல் இவ்வளவு பேதமுண்டு:—சர்ப்பமிரஜத முதலிய அத் தியாசத்தில் அதிஷ்டானத்தோடு நேத்திரத்தின் சம்பநதத்தால் அதிஷ்டான கோசர சாக்ஷுஷ விருத்தி உண்டாகின்றது. அவ் விருத்தியின் சமகாலத்தில் உண்டாகிய சர்ப்பமிரஜத முதலியன வும் அதற்கே விஷயமாம். மதுரமாகிய பாலில் அநதக் கைப்பிரசத் தின் அத்தியாசமுண்டாயின் ஆண்டுப் பால் வடிவ இராசன விரு த்தி சம்பவிக்கிறதில்லை. ஆனல் சரீரத்தில் வியாபித்திருபபது துவ க்காம. ஆதலால் துவாச (தொக்கிநதிரிய) விருத்தி மதுரமான பால்வடிவமாகின்றது. அதனுல் மதுரமான பாலின் பிரகாசமுண் டாகினறது. எந்தக்காலத்தில் மதுரமாகிய பாலினேடு சையோக முண்டாகின்றதோ, அதே காலத்தில் தோஷத்தினல் தூஷிக்கப் பட்ட இரசனைக்குப் பாலினேடு சையோகமுண்டாகின்றது. இர சனையின் சையோகத்தால பாலவசசின்னசேதநத்தின்கண்ணுள்ள அவித்தையில் க்ஷோபமுண்டாய், அவித்தையின் பரிணுமமாகிய கைப்பிரச வடிவமும கைப்பிரசத்தைக் கோசரிக்கும இராசன விருத்தியும் ஏககாலததில் உண்டாகின்றன. இவ்வாறு மதுரமா கிய பாலில் கைப்பிரசாத்தியாச முண்டாயின், ஆண்டு மதுரத்திர வியத்தின் பிரகாசமோ துவாச விருத்தி அவசசின்ன சேதனத தால் உண்டாகின்றது. கைப்பிரசவடிவ இராசன விருத்தி உண் டாகுதலால், இராசன விருத்தி அவச்சின்ன சேதனத்தால் கைப் பிரசததின் பிரகாசமுண்டாகின்றது, துவாசவிருத்தியும இராசன

விருத்தியும் பாலாகிய இடத்திற் செல்லுகின்றன. ஆதலால் ஓரிடத்துள்ளனவா யிருத்தலின் இரண்டு விருத்தி யுபகித சேதனத்திற்கும் பேதமில்லை. இதனால் அதிஷ்டான அத்தியஸ்தங்களுக்கு ஒரு ஞானத்திற்கு விஷயமாகுந் தன்மையும் சம்பவிக்கின்றது. கைப்பிரசத்தைக் கோசரிக்கும் இராசன விருத்தியை அங்கீகரியாமல், துவாச விருத்தியில் அபிவியக்தமான சேதனத்தினாலேயே கைப்பிரசத்தின் பிரகாசத்தை அங்கீகரிக்கின், கைப்பிரசத்தின் ஞானத்தில் இராசனத்தன்மை உணர்ச்சி உண்டாகாது. தாமி ஞானவாதியின் மதத்தில் சர்ப்பமிரஜதமுதலிய அத்தியாசத்திலோ, அத்தியாசத்திற்குக் காரணமான அதிஷ்டானத்தின் ஞானத்தில் நேத்திரத்தின் உபயோகமிருத்தலால் பரமபரையாக அத்தியஸ்தஞான த்திற்கும் நேத்திர ஜநகியத்துவம் உண்டு. கைப்பிரசத்தின் அத்தியாசத்திலோ அதிஷ்டானம் மதுரமான பால். அது திரவியரூபமாயிருத்தலின், அதன் ஞானத்திலும் ரசனேந்திரியத்தின் உபயோகமின்மையால் பரம்பரையாகக் கைப்பிரச ஞானத்திற்கு இரசன ஜநகியத்துவம் சம்பவியாது. ஆதலால் கைப்பிரசாத்தியாசத்தில் இராசனத்தன்மை உணர்ச்சியின் நிர்வாகத்தின்பொருட்டுத் தாமி ஞானவாதிக்கும் இராசனவிருத்தி அவசியம் அங்கீகரிக்கவேண்டியதாம். அங்ஙனமே சர்ப்பமிரஜத முதலிய அத்தியாசத்திலும் அத்தியஸ்த கோசர இந்திரியகவிருத்தியே உண்டாகின்றது. அதற்குப் பின்னமான, அத்தியஸ்தகோசர அவித்தையின் பரிணாமமாகிய அநிர்வசநீய விருத்தியினைக் கற்பித்தல் பயனின்மையாம். இம்மதத்தில் அவித்தையின் பரிணாமம் கேவலம் விஷயாகாரமேயாகின்றது.

அவ்வநிர்வசநீய விஷயத்தின் ஞானரூப விருத்தி அந்தக்கரணத்தினதாகின்றது. துஷ்ட (தோஷமுடைய) இந்திரியத்தின் சையோகத்தால் அவ்விருத்தி உண்டாகின்றது. ஆதலாற் பிரமவடிவமாகின்றது. அதிஷ்டானத்தோடு துஷ்ட இந்திரியத்தின் சம்பந்தமே அவித்தையில் க்ஷோபவாயிலாக அத்தியாசத்திற்கு ஏதுவாம். அதிஷ்டானத்தின் சாமாநியஞானம் அத்தியாசத்திற்கு ஏதுவன்று.

---

## ௧௩௧. ஆசாரியரது வாக்கியத்திற்கும் உபாத்தியாயரது மதம் விரோதப்படுதலும், தர்மிஞானவாதியின் மதத்திற் கூறிய தோஷத்திற்குச் சமாதானமும்.

இது கவிதார்க்கிக சக்கரவர்த்தி நிருசிம்ஹ பட்டோபாத்தியாயரது மதமாம். அது சகல பிராசீன ஆசாரியர்களது வார்த்தைக்கும் விருத்தமாம். அங்ஙனமன்றே:— அதிஷ்டானத்தின் சாமாந்ய ஞானம், தோஷம், பூர்வாநுபவஜநிய சம்ஸ்காரம் என்பவற்றால் அத்தியாச முண்டாகின்ற தென்பது பிராசீன மதம். உபாத்தியாயரது மதத்தில் அதிஷ்டானத்தோடு இந்திரியத்தின் சையோகம் அத்தியாசத்திற்கு ஏதுவெனக்கொள்ளப்பட் டிருக்கின்றது. அதிஷ்டானத்தின் சாமாந்ய ஞானத்தினைக் கொள்ளவில்லை. ஆதலால் பிராசீன வசனத்திற்கு விருத்தமாம். அர்த்தாத்தியாச ஞானாத்தியாசபேதத்தால் இருவகை அத்தியாசங்களுள. இது சகல அத்வைதிகளாலும் கொள்ளப்பட்டிருக்கின்றது. உபாத்தியாயரது மதத்தில் ஞானாத்தியாசம் அப்பிரசித்தமாம். ஏனெனின் அநிர்வசநீய சர்ப்பம் இரஜத முதலியவற்றைக் கோசரிக்கும் அவித்தையின் பரிணாமத்தினை ஞானாத்தியாச மென்பர். உபாத்தியாயரது மதத்தில் ஐந்திரியகப் பிரம விருத்தியினை அங்கீகரித்து அதன் லோப மிருக்கின்றது. இவ்வாறன்றால பிராசீன வசனத்தோடு விருத்தமாம். அங்ஙனமே சொல்லப்படும கிரமத்தால் யுக்தி விருத்தமுமாம்:—அதிஷ்டான இந்திரியங்களின் சம்பந்தத்தினைச் சகல அத்தியாசங்களினும் காரணமாகக் கொள்ளின் அகங்கார முதலிய அத்தியாசத்தின அநுபபத்தி உண்டாகும். ஏனெனின், அகங்கார முதலியவற்றிற் கதிஷ்டானம் பிரஹ்மம் அல்லது சாக்ஷி சேதனமாம். அது உருவ மின்றியதாம. அதனோடு ஞானத்திற் கேதுவாகிய இந்திரிய சம்பந்தத்தின சம்பவமில்லை. பிராதிபாஸிக அத்தியாசத்திலேயே இந்திரிய சம்பந்தத்திற்குக் காரணத்தன்மை அங்கீகரிக்கினும் அகங்கார முதலியவற்றின் அத்தியாசமும பிராதிபாஸிகமாம். இம்மதத்தில இந்திரிய சம்பந்தத்தின் அபாவத்தால் அகங்கார முதலிய அத்தியாசத்தின அநுபபத்தியே உண்டாகும். அகங்கார முதலிய அத்தியாசம வியாவகாரிகமா யிருத்தலின் பிராதிபாஸிகத்தினும விலக்ஷணமாம். இம்மதத்திலும சொப்ப

ஞாத்தியாசத்தின் அநுபபத்தி உண்டாகும். ஏனெனின் சர்வ மதத்திலும் சோபபஞாத்தியாசம் பிராதிபாஸிகமாம்.* அதன் அதிஷ்டானம் சாக்ஷிசேதனமாம். அதனோடு இந்திரிய சம்பந்தம் சம்பவியாமையால் பிராதிபாஸிக அத்தியாசத்திலும் அதிஷ்டானத்தோடு இந்திரிய சம்பந்தத்திற்குக் காரணத்தன்மை சம்பவியாது. இவ்வாற்றால் உபாத்தியாயரது மதம் நலமுடையதன்று. தார்மிஞானவாதத்தில் உபாத்தியாயர் தோஷம் கூறியிருக்கின்றனர்:—அதிஷ்டான ஞானத்தில் இந்திரிய சம்பந்தத்தின் உபயோகம் அங்கீகரிக்கின் சங்கிற் பீதத்தன்மை அத்தியாசம் உண்டாகுங்கால், ஆண்டு உருவமின்றி கேவலம் சங்கின் சாக்ஷுஷம் அங்கீகரிக்கின், உருவமின்றிய வாயுவின் பிரத்தியக்ஷமுண்டாதல் வேண்டும். சுக்கில உருவ விசிஷ்ட சங்கின் சாக்ஷுஷம் அங்கீகரிக்கின், பொன்மை உருவஞானத்திற்கு விரோதியாகிய வெண்மை உருவஞானமிருக்கப் பொன்மை உருவத்தின் அத்தியாசம் உண்டாகாது. இக்கூற்றும் உபாத்தியாயரது அவிவேகத்தாலாம். ஏனெனின் உருவமுடைய திரவியத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமுண்டாகின்றதென்பது நியமம். சிலவிடத்துத் தோஷபலத்தால் உருவபாகத்தைவிட்டுக் கேவலம் ஆசிரயத்தின் சாக்ஷுஷம் உண்டாகின்றது. தோஷமின்றிய நேத்திரத்தால் உருவ விசிஷ்டத்தின் சாக்ஷுஷம் உண்டாகின்றது. ஆனால் உருவமின்றியதின் சாக்ஷுஷம் உண்டாகிறதில்லை. ஆதலால் உருவமின்றிய வாயுவின் சாக்ஷுஷஞானத்தின் ஆபத்தியில்லை. உருவமுடைய சங்கின் உருவபாகத்தினைவிட்டுத் துஷ்ட நேத்திரத்தினால் சாக்ஷுஷம் உண்டாகின்றது. அல்லது வெண்மை உருவ விசிஷ்ட சங்கின் சாக்ஷுஷம் உண்டாகின்றது. அங்ஙனமாயினும் வெண்மை உருவத்தில் வெண்மைத்தன்மை ஞானத்தின் பிரதிபந்தகம் நயனத்திற் றோஷமாம். இதனால் பீத உருவத்தின் அத்தியாசமும் சம்பவிக்கின்றது. ஏனெனின் சுக்கிலத்தன்மை விசிஷ்ட சுக்கில உருவத்தின் ஞானமே பீத உருவத்தின் ஞானத்திற்கு விரோதியாம். கேவலம் சுக்கில உருவ வியக்தியின் ஞானம் பிறிதோர் உருவ ஞானத்திற்கு விரோதியன்று. இவ்வாற்றைப் பிரதிபந்தியப் பிரதிபந்தகத் தன்மையை நிர்ணயிக்கும் நூல்களிற் பிரசித்தமாம். இவ்வாற்றால் சங்கினிடத்துப் பீதத்தன்மையின் அத்தியாசத்திற்கு ஹேதுவாகச் சங்குவடிவ அதிஷ்டானத்தின் இதுவெனும் வடிவ சாக்ஷுஷஞானம் சம்பவிக்கின்றது.

அது கேவலம் சங்கைக் கோசரிப்பதாகின்றது. அல்லது தோஷபலத்தால் சுக்கிலத்தன்மையை விட்டுச் சுக்கில உருவ விசிஷ்டசங்கைக் கோசரிப்பதாகின்றது. பரம்பரையாகப் பீதத்தன்மை ஞானத்தில் நேத்திரத்தின் உபயோகமிருத்தலால் பீதத்தன்மை அத்தியாசத்தில் சாக்ஷுஷத்தன்மை உணர்ச்சியின் நிர்வாகமும் தாமி ஞானவாதத்தில் உண்டாகின்றது. மதுரமாகிய பாலில் கைப்பிரச அத்தியாச முண்டாகுங்கால், ஆண்டுத் தாமி ஞானவாதத்திலும் இராசனவிருத்தி அவசியமாமெனல் கூறப்பட்டது. ஏனெனின் கைப்பிரசத்தின் அதிஷ்டானமாகிய மதுரமான பால் எதுவோ, அதன் சாமாந்ய ஞானமாகிய விருத்தி இராசனமாகாது. ஆனால் துவாச விருத்தியே அதிஷ்டான கோசரமாம். அந்தத் துவக்கிந்திரிய விருத்தியில் அபிவியக்தசாக்ஷியினால் கைப்பிரசத்தின் பிரகாசம் அங்கீகரிக்கின், கைப்பிரசத்தின் உணர்ச்சியில் இராசனத்துவ வியவகாரம் சம்பவியாது. ஆதலால் தாமி ஞானவாதிக்குக் கைப்பிரசத்தில் பிரமவடிவ உணர்ச்சியும் இராசன ஜந்நியமாகவே அங்கீகரிக்கவேண்டியதா யிருக்கின்றது. அங்ஙனமே இரஜதமுதலிய பிரமஞானமும் இந்திரிய ஜந்நியமாம். இவ்வாற்றால் உபாத்தியாயரது வசனம் மதுரமாகிய பாலிற்கு அதிஷ்டானத்தன்மையை அங்கீகரிக்கின் பொருத்தமுடைத்தாம். அந்த மதுர ரசமுடைய பால்வடிவத்திரவியம் அதிஷ்டானமன்று. ஆனால் கைப்பிரச அத்தியாசத்தின் அதிஷ்டானம் பாலின் மதுர ரசமாம். அதன் ஞானத்தில் ரசனேந்திரியத்தின் உபயோகமிருத்தலால் கைப்பிரசத்தின் உணர்ச்சியில் இராசனத்தன்மையின் உணர்ச்சியும் வியவகாரமும் சம்பவிக்கின்றன. மதுர ரசத்தின் ஞானமுண்டாயின் அதற்கு விரோதியாகிய கைப்பிரசத்தின் அத்தியாசம் சம்பவியாது. அங்ஙனமாயினும் மதுரத்தன்மைத் தாமவிசிஷ்ட மதுர ரசத்தின் ஞானமே கைப்பிரச ஞானத்திற்கு விரோதியாம். மதுரத்தன்மைத் தாமத்தினை விட்டுக் கேவல மதுரரசவியக்தியின் சாமாந்யஞானம் கைப்பிரசாத்தியாசத்தின் விரோதியன்று. எங்ஙனம்: சுத்தித்தன்மை வடிவத்தால் சுத்தியின் ஞானம் இரஜதாத்தியாசத்திற்கு விரோதியாமெனினும், சுத்தியின் சாமாந்யஞானம் அத்தியாசத்திற்கு விரோதியன்று; மாறுதலாகிய சுத்தியின் சாமாந்யஞானம் இரஜதாத்தியாசத்திற்கு ஏதுவாம். அங்ஙனமே மதுரரசத்தின் சாமாந்ய ஞானமும் கைப்பிரசாத்தியாசத்திற்கு ஏதுவாம். இவ்வாற்றால்

தர்மி ஞானவாதத்திலும் கைப்பிரசத்திற்கு அதிஷ்டானமாகிய மதுர ரசமயாதோ, அதன் சாமாந்யஞானம் இரசனத்தால் உண்டாய்க் கைப்பிரசத்தின் அத்தியாசம உண்டாகுதலால், பரம்பரையாக ரசனேந்திரியத்திற்குக் கைப்பிரசாத்தியாசத்தில் உபயோகமிருக்கின்றது. ஆதலால கைப்பிரசத்தின் உணர்ச்சியில் இராசனத்தன்மை வியவகாரம சம்பவிக்கின்றது.

## க௩௨. கைப்பிரசாத்தியாசத்தில் சிலரது வேறு வார்த்தையும் கண்டனமும்.

அன்றியும மதுரமாகிய பாலினையே கைப்பிரசத்தின அதிஷ்டானமாகக் கொள்ளினும் கைப்பிரசாத்தியாசத்தில ரசனையின் அபேக்ஷையில்லை. ஆனால பாலைக கோசரிக்கும் துவகிந்திரியவிருத்தி உண்டாகின்றது. அந்தத்வகிந்திரியவிருத்தி கைப்பிரச வடிவமன்றாயினும, துவகிந்திரிய விருத்தியில அபிவியக்தசாக்ஷி மறைபமின்றியதாம. அதன் சம்பந்தத்தால் கைப்பிரசத்தின் பிரகாசமுண்டாகின்றது. கைப்பிரசத்தின் உணர்ச்சியில் இரசனத்தின் வியாபாரம் தோற்றுகிறதில்லை. ஆதலால கைப்பிரசாத்தியாசத்தில ராசனத்தன்மைவியவகாரம அப்பிரமாணிகமாம. இப்பக்ஷத்தில் கைப்பிரசாத்தியாசம கேவல அர்த்தாத்தியாசமாம. கைப்பிரச வடிவ அவித்தையின் விருத்தி நிஷ்பலத்தன்மையினால அங்கீகரிக்கப்படவில்லை. இவ்வாறு சில நூலாசிரியர் மதுரமாகிய பாலினைக் கைப்பிரசாத்தியாசத்திற்கு அதிஷ்டானமாகக் கொண்டு மதுரமாகிய பாலைக் கோசரிக்கும துவக்கிந்திரிய விருத்தியில அபிவியக்தசாக்ஷியினால் கைப்பிரசத்தின பிரகாசம அங்கீகரிக்கின்றனர். கைப்பிரசத்தைக் கோசரிக்கும விருத்தியின அபாவத்தையும அங்கீகரித்திருக்கின்றனர்.

இவ்வெழுத்து அசங்கதமாம:— ஏனெனின் தனது வடிவ விருத்தியில அபிவியக்தசேதனத்தினால் விஷயத்தின் பிரகாசமுண்டாகின்றது. அந்நிய வடிவ விருத்தியில அபிவியக்த சேதனத்தினால் தனது சம்பந்தமுள்ள விஷயத்தின பிரகாசம் அங்கீகரிக்கின், உருவமுடைய கடாகார விருத்தியில் அபிவியக்த சேதனத்தால கடத்தின்கண்ணுள்ள பரிமாணம சங்கைமுதலியவற்றின் உணர்ச்சி உண்டாதல வேண்டும. "உருவமுடையது கடம்" எனனும் ஞானம உண்டாகியும, கடத்தின் தூலத்தன்மை முதலியவற்றின்

பிரகாசமுண்டாகிறதில்லை. மதுரமாகிய பால்வடிவ துவக்கிந்திரிய விருத்தியில் அபிவியக்த சேதனத்தினால் கைப்பிரசத்தின் பிரகாசம் சம்பவிக்கிறதில்லை. ஆனால் தோஷத்திற்கு அற்புத மகிமை அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. ஆதலால் தோஷத்தினால்துஷ்டமாகிய இந்திரியஜந்ய விருத்தியில் அபிவியக்தமான சாக்ஷியினால் விருத்தியின் கோசரமின்றியதற்கும் சிலவிடத்துச் சேதன சம்பந்தியின் பிரகாசம் அங்கீகரிக்கின், ஒருவாறு முற்கூறிய எழுத்தும் சம்பவிக்கும். உருவமுடைய கடாகார விருத்தி தோஷஜந்யமன்று. ஆதலால் அவ்விருத்திக்கு அகோசரமான பரிமாணாதிகளின் பிரகாசம் அவ்விருத்தியில் அபிவியக்தசேதனத்தினால் உண்டாகிறதில்லை.

## ௧௩௩. முக்கிய சித்தாந்தத்தைக் கூறுதல்.

முக்கிய சித்தாந்தமோ இதுவாம்:— சொப்பனாவஸ்தையில் சகல பதார்த்தங்களும் சாக்ஷிபாஸ்யமாம். அவற்றில் சாக்ஷாத்தன்மை இராசனத்தன்மை முதலிய உணர்ச்சி உண்டாகின்றது. அவ்வாறு சர்ப்பமிரஜதமுதலிய அநிர்வசநீய பதார்த்தம் சாக்ஷி பாஸ்யமாம். அவற்றில் சாக்ஷாத்தன்மை முதலிய உணர்ச்சி பிரமமாம். கேவல சர்ப்பமிரஜத முதலியவைமாத்திரம் சாக்ஷிபாஸ்யமன்று; சகல அநாத்ம பதார்த்தங்களும் சாக்ஷி பாஸ்யமாம். சொப்பனத்தினைப்போலக்கடமுதலிய பிரமேயத்தினாலும் நேத்திர முதலிய பிரமாணத்தினாலும் நேத்திராதிகளுக்குக் கடமுதலியவற்றோடு சம்பந்தம் ஏககாலத்தில் உற்பத்தியாகின்றது. ஆதலால் அவற்றிற்கு ஒன்றற்கொன்று பிரமாணப் பிரமேயத்தன்மை சம்பவியாது; தோற்றுகின்றது; ஆதலால் அநிர்வசநீயமாமென்பது சித்தாந்தம். வியாவகாரிகப் பிரபஞ்சத்தின் மித்தியாத்தன்மைச் சித்திக்கு உபயோகியான சாக்ஷிபாஸ்யத்தன்மையைச் சாதிக்கும் மித்தியா சர்ப்பம் இரஜதமுதலியன திருஷ்டாந்தமாம். அவற்றிற்கு ஐந்திரியகத்தன்மை அங்கீகரிக்கின், சித்தாந்தத்திற்குச் சாதகமான திருஷ்டாந்தம் பிரதிகூலமாகின்றது. ஆதலால் உபாத்தியாயரது மதம் சித்தாந்த விரோதியாம்.

அத்தியஸ்த பதார்த்தத்திற்கு ஐந்திரியகத்தன்மை அங்கீகரிக்காவிடின், ஆகாயத்தில் நீலத்தன்மை அத்தியாசத்தின் அநுபபத்தி இருக்கின்றது. தர்மிஞானவாதத்தில் இத்தோஷம் நிராகரிக்கத்தக்கதாம். ஏனெனின் ஆகாயம் உருவமின்றியதாம். ஆதலால்

ஆகாயத்தின சாமாந்ய ஞானம் நேத்திரத்தினுல் சம்பவிக்கிற தில்லை. சாமாந்ய ஞானம் சம்பவிக்கின் நீலத்தன்மை அத்தியா சம் உண்டாகும். உபாத்தியாயரது மதத்திலோ ஆகாயத்தோடு நேத்திரத்தின சையோகமுண்டாகவே, ஆகாய அவச்சின்ன சேத னத்தின்கண்ணுள்ள அவித்தையில க்ஷோபவாயிலாக நீல உருவத் தின் உற்பத்தியும் நீல உருவ விசிஷ்ட ஆகாயத்தைக் கோசரிக் கும் நேத்திர சையோக ஜந்ய அந்தக்கரணத்தின் சாக்ஷாத்விரு த்தியும் ஏககாலத்தில் உண்டாகின்றன. இதனுல ஆகாயத்தில் நீல த்தன்மை அத்தியாசத்தின் சம்பவமாம்.

## ௧௩௪. தர்மிஞானவாதத்தில் ஆகாயத்தில் நீலத் தன்மை யத்தியாசத்தின் அசம்பவமும் அதன் பரிகாரமும்.

அங்ஙனமாயினும் தர்மிஞானவாதத்திலும் இவ்வத்தியாசத் தின் அநுபபத்தி இல்லை. ஏனெனின் ஆகாயம் உருவ மின்றியதா யினும் பிரகாசத் திரவியம் ரூபமுடையதாம். ஆதலால் பிரகாசத்தி னோடு துஷ்டநேத்திரத்தின சையோக முண்டாகியும், பிரகாசத் தைக் கோசரிக்கும் பிரகாச வியாபியான ஆகாச வடிவ பிரமை யாகிய சாமாந்ய ஞானம் உண்டாகின்றது. அதன்பின் ஆகாய அவச்சின்ன சேதனத்தின் கண்ணுள்ள அவித்தையில் க்ஷோபவா யிலாக நீல உருவ-வடிவ அவித்தையின் பரிணாமமுண்டாகின்றது. அங்ஙனமே இதுவெனும் வடிவ விருத்தி அவச்சின்ன சேதனத் தின் கண்ணுள்ள அவித்தையின் நீல உருவத்தைக் கோசரிக்கும் ஞானவடிவ பரிணாம முண்டாகின்றது. ஆகாயத்தைக் கோசரி க்கும் பிரமாவிருத்தியும் நீல உருவத்தைக் கோசரிக்கும் அவித் தியா விருத்தியும் ஏகதேசத்திருத்தலால் உபய விருத்தி உபகித சாக்ஷி ஏகமாம். ஆதலால் அதிஷ்டான அத்தியஸ்தங்களின் பிர காசம் ஒரு சாக்ஷியினுல உண்டாகின்றது. விசேஷவடிவமாக அதிஷ்டானத்தின ஞானமுண்டாகியும் அத்தியாசம் சம்பவியாது. ஆகாய வடிவப் பிரமாவிருத்திக்குப்பின அத்தியாசம் சொல்லப் பட்டது. ஆண்டு ஆகாயத்தன்மை வடிவமாக ஆகாயத்தின் ஞா னம் அத்தியாசத்திற்கு ஏதுவெனக் கூறுதலால விசேஷ வடிவத் தின் ஞானம் அத்தியாசத்திற்கு ஏதுவெனத் தோற்றுகின்றது. அது அசங்கதமாம். அங்ஙனமாயினும் ஆகாயத்தன்மை வடிவ

ஆகாயத்தின் ஞானமும் சாமாநிய ஞானமாம்; விசேஷ ஞான மன்று. உருவ மின்றியது ஆகாயம் என்பதாக உருவ மின்றிய தனமை விசிஷ்ட ஆகாயத்தின் ஞானமே விசேஷ ஞானமாம். ஏனெனின் அத்தியாசகாலத்திற றோற்றாத அமசத்தினை விசேஷ அம்ச மென்பா. அதனையே அதிஷ்டான மென்றுங் கூறுவர். அத்தியாசகாலத்தில தோறறுமு அமசத்தினைச் சாமாநிய அம்ச மென்பர். அதனையே ஆதார மென்றுங் கூறுவர். ஆகாயம நீலம் என்பதாகப் பிராநதிகாலததில் ஆகாயத்தன்மை வடிவமாக ஆகாயததின் உணர்சசி உண்டாகின்றது. உருவமின்றியது ஆகாய மென்பதாக உருவ மின்மைத தனமைத தாமத்தினால் ஆகாயத்தின் உணாசசி பிராநதி காலத்தில் உண்டாகிறதில்லை. ஆதலால் ஆகாயத்தன்மை வடிவ ஆகாயததின் ஞானமும சாமாநிய ஞானமா யிருத்தலின், அதன் பின் நீல உருவததின அதநியாசம சமபவிக்கிறதில்லை.

## ௧௱௫ சர்ப்பமுதலிய பிரமஸ்தலத்தில் நான்கு மதங்களும், நான்காவது மதத்தில் உள்ள தோஷமும்.

இவ்வாறு சாப்ப மிரஜத முதலியவற்றின் பிரம முண்டாகு மிடத்து மூன்று மதஙகளைக் கூறுகின்றனர். ஒன்று உபாத்தியா யரது மதம். அது சொல்லப்பட்டது. அவா ம்தத்தில் ஒரே ஞானம் துஷ்ட இநதிரிய விஷயங்களின் சமபநதத்தால் அநதக்கரணத் தின் பரிணாமவடிவமாகின்றது. இந்த ஞானம் அதிஷ்டானத் தின் சாமாநிய அமசத்தினையும் அத்தியஸதத்தினையும விஷயஞ் செய்வதாய்ப் பிரம வடிவமாம. இதற்கு வேறாக அதிஷ்டானத் தின் சாமாநிய அமச மாததிரத்தைக் கோசரிககும பிரமைஞானத தின் அங்கீகாரம் அவா மதத்தி லில்லை. தர்மிஞான வாதந்தில் இர ண்டு மதங்கள் கூறபபட்டன. ஒருமதத்திலோ இதுவெனும வடிவ சாமாநிய ஞானமாகிய பிரமைவடிவத்திற்குப் பின் இது சாப்பம இது இரஜதம என்பதாகப் பிரமஞான முண்டாகின்றது. அது அவித்தையின் பரிணாமவடிவமாம. அதிஷ்டானத்தின் சாமாநிய அமசத்தை விஷயஞ்செய்வதாய் அத்தியஸ்தத்தை விஷயஞ்செய் கின்றது. ஆதலால் இதுவெனும் வடிவமும் அத்தியஸத வடிவமும உண்டாகின்றன. தர்மிஞான வாதத்தில் இரண்டாவதுமதம் இது வாம:—இதுவெனும் வடிவ சாமாநிய ஞானம அத்தியாசத்திற்

கேதுவாகிய பிரமை வடிவமாம. அதன் பிற்கணத்தில் சர்ப்ப மிரஜத முதலியவற்றைக் கோசரிக்கும அவித்தையின் பரிணும மாகிய ஞானம உண்டாகின்றது; அது பிரமவடிவமாம்; ஆதலால அதிஷ்டான கோசரமாகாது. ஆனல் கேவலம அததியஸதகோச ரமாகின்றது. அநதப் பிரமஞானததில இதுவெனும பதாரததத் தை விஷயிக்குந தன்மையில்லை. அங்ஙனமாயினும அதன அதிஷ் டான ஞானததில் இது வெனும பதாரததததை விஷயிககுநதன் மை இருக்கின்றது. அதன் அநிர்வசநீய சமபநதம் பிரமஞானத் தில் உற்பததியாகின்றது. இவ்வாற்ருல் கேவல அததியஸதபதார் த்தவடிவ பிரமஞானம் உண்டாகின்றது. இமமதமே நலமுடைய தாம்.

தர்மிஞானவாதத்திலேயே ஓர்நூலாசிரியர் மூன்ருவதுபக்ஷம அங்கீகரிததிருக்கின்றனர். அது வருமாறு :— அததியாசததிற் கேதுஅதிஷ்டானத்தின் சாமாநிய ஞானமாகின்றது. அதற்குவேரு கிய சர்ப்பம் இரஜத முதலியவற்றைக் கோசரிககும அவித்தையின விருததி நிஷ்பலமாம. ஏனெனின் அதிஷ்டானததைக் கோசரிக் கும் அந்தக்கரணத்தின் எநத இதுவெனும வடிவ விருத்தி அத்தி யாசத்திற்கு ஏதுவாக அங்கீகரிக்கப்பட் டிருக்கின்றதோ, அநத விருத்தியிலஅபிவியக்தமான சேதனததினுலேயேசாப்பமிரஜதமுத லியவற்றின் பிரகாசம் உண்டாகின்றது. ஆதலால் சாப்பமிரஜத முதலிய ஞேயவடிவமோ அவிததையின்பரிணுமமாகின்றது. ஞான ரூப பரிணுமம அவிததைக் குண்டாகிறதில்லை. இநத் மததததி லும் உபாத்தியாயரது மதத்தைப்போலச சுத்தி இரஜதமுதலியவற் றில் கேவல அாததாததியாச மிருக்கின்றது; ஞானுததியாசத்தின் அங்கீகாரமில்லை. இமமதமும் உபாத்தியாயரது மததததைப்போலச சகல ஆசாரிய வசனங்களுக்கும் யுகதிககும விருத்தமாம. ஏனெ னின் இநத மதத்தில பிரம ஞானததிறகு லோபமுண்டாகின் றது. இதுவெனும வடிவ எநத ஞானம உண்டாகினறதோ, அது அதிஷ்டானத்தோடு இநதிரியத்தின் சையோகத்தால் அநதக்கர ணத்தின் விருத்தி வடிவமாக உண்டாகின்றது; அதிஷ்டானகோச ரமுமாகினறது; ஆதலால் பிரமையாம. அதறகுப் பின்னமான ஞானத்தை அங்கீகரிககவில்லை யாகலின் பிரம ஞானம அப்பிர சித்தமாகும. அதிஷ்டான கோசர இதுவெனும வடிவ ஞானமே சர்ப்பமிரஜத முதலியவற்றை விஷயஞ் செய்தலால் பாதிக்கப்

படும் பதார்த்தத்தைக் கோசரிப்பதா யிருத்தலின் பிரமமெனப் படுகின்றதெனக் கூறுவராயினும், இம்மதத்தில் அந்த ஞானத்திற்கே பாதிக்கப்படாத அதிஷ்டானத்தைக் கோசரிக்குந்தன்மை இருத்தலின் பிரமாததன்மையும் உண்டாதல்வேண்டும். ஆதலால் ஒரு ஞானத்தில் பிரமத்தன்மை பிரமாத் தன்மைகளின் சங்கரம் (கலப்பு) உண்டாகும்.

சத்தியமான இரஜதத்தைக் கோசரிப்பதும் சுத்தி இரஜதத்தைக் கோசரிப்பதும் ஒரு ஞானமாயின், ஆண்டுப் பிரமத்தன்மை பிரமாத்தன்மைகளின் சங்கரம் பிரசித்தமாம். ஆதலால் அவச்சேதக பேதத்தால் எங்ஙனம் சையோகமும் சையோகத்தின் அபாவமுமாகிய விரோதி பதார்த்தங்க ளிருக்கின்றனவோ, அங்ஙனமே ஒரு ஞானத்திலும் அவச்சேதக பேதத்தால் பிரமத்தன்மை பிரமாத்தன்மையாகிய விரோதமுடைய தர்மங்கள் சம்பவிக்கின்றன. திருஷ்டாந்தத்தில் விருக்ஷத்தின்கண்ணுள்ள சையோகாபாவத்தின் அவச்சேதகம் மூலதேசமாம் (அடிப்புறமாம்); சையோகத்தின் அவச்சேதகம் கிளையாகிய இடமாம். அங்ஙனமே ஞானத்திலும் பாதிக்கப்பட்டதனை விஷயிக்குந்தன்மையே பிரமத்தன்மையின் அவச்சேதகதாமமாம். பாதிக்கப்படாததனை விஷயிக்குந்தன்மை பிரமாத்தன்மையின் அவச்சேதகதாமமாம். ஆதலால் ஒரே ஞானத்தில் பாதிக்கப்பட்டதனை விஷயிக்குந்தன்மை அவச்சின்ன பிரமத்தன்மையும், பாதிக்கப்படாததனை விஷயிக்குந்தன்மை அவச்சின்ன பிரமாத்தன்மையும் இருத்தலின் பிரமத்தன்மை பிரமாத்தன்மைகளின் சங்கரதோஷமில்லை. அங்ஙனமாயினும் பிரமத்தன்மை பிரமாத்தன்மைகளைப்போலப் பாதிக்கப்பட்டதனை விஷயிக்குந் தன்மையும் பாதிக்கப்படாததனை விஷயிக்குந்தன்மையும் ஒன்றற்கொன்று பாவாபாவ ரூபமாயிருத்தலின் விரோதிகளாம். அவற்றின் அவச்சேதகமும் பேதமின்றி ஒருஞானத்தில் பிரவேசித்தல் பொருந்தாது. அவற்றின் அந்நியமான அவச்சேதகம் அறியப்படுகிறதில்லை. ஏதேனும் வேறொன்றின் கற்பனையைக் கற்பிக்கின், ஒன்றற்கொன்று விரோதமுள்ளதாகவே ஓர் அவச்சேதகம் அங்கீகரிக்கவரும். ஆதலால் அவற்றின் அவச்சேதகத்தை அங்கீகரித்தலில் அநவஸ்தைக் குற்றமுண்டாகும். இவ்வாற்றால், ஒரு ஞானத்தில் பிரமத்தன்மை பிரமாத்தன்மைகளின் சம்சயம் சம்பவியாது.

சத்திய ரஜத கோசரமும் சுததிரஜத கோசரமுமாகிய ஒரு ஞானத்தில் பிரமததன்மை பிரமைத்தன்மைகளின் சங்கரம செய்யப்பட்டது. அதுவும சித்தாநதததை அறியாததனுல் சொல்லப்பட்டிருக்கின்றது. ஏனெனின் சததிய ரஜதகோசரம அந்தக்கரணததின் விருததி ஆகின்றது. சுததிரஜதகோசரம் அவிததையின் விருததி ஆகின்றது. இதனுல் சத்திய இரஜதகோசரமும் சுததி ரஜத கோசரமுமாகிய இரண்டு ஞானங்கள் உண்டாகின்றன. இரண்டு ஞானஙகளும சமானகாலததில உண்டாகின்றன; சஜாதீயகோசரமுமாகின்றன. ஆதலால அவறறின் ஒன்றற்கொன்றுள்ள பேதம தோற்றுகிறதில்லை; ஆனுல அவற்றில் ஏகததுவப் பிரமமுண்டாகின்றது. ஆதலால பிரமததன்மை பிரமாததன்மைகளின் சஙகரம அதிருஷட கோசரமாயிருததலின், இதுவெனும வடிவப் பிரமாவிருததியில அபிவியக்தமான சாக்ஷியினுல் அத்தியஸ்தத்தின் பிரகாசம சமபவிககிறதில்லை. அதிஷடானகோசரவிருததியில அபிவியகதமான சாக்ஷியினுலேயே அததியஸ்தததின் பிரகாசததை அஙகீகரிதது, அததியஸதகோசர அவிததையின் விருததியை அங்கீகரியாவிடின் அதநியஸ்தபதாாததத்தினஸமிருதி உண்டாகலாகாது. ஏனெனின் அநுபவததின் நாசத்தால சமஸகாரமுண்டாகினறது. பிறிதொன்றைக கோசரிக்கும அநுபவத்தால பிறிதொன்றைக் கோசரிககும சமஸகாரமும ஸமிருதியும் உணடாகுமாயின், படததைக கோசரிககும அநுபவததால கடததைக்கோசரிக்கும சமஸகாரமும ஸமிருதியும உண்டாதலவேண்டும. ஆதலால் சமானகோசர அநுபவததால் சமஸகாரவாயிலாக ஸமிருதியின உற்பததி உண்டாகுமென்பது நியமமாகலின், அதிஷடானகோசர விருததி வடிவ அநுபவததால் அததியஸதகோசர சமஸகார வாயிலாக ஸமிருதியின உறபததி சம்பவிக்கிற தில்லை. அததியஸதகோசர சாக்ஷிவடிவஅநுபவததால்சமஸகார வாயிலாக ஸமிருதியின் உற்பததிகூறின் முறறும அசங்கதமாம. ஏனெனின் அநுபவததின் நாசததால சமஸகாரமுணடாகின்றது; சாக்ஷி நித்தியமாம.அதறகுச சமஸகாரததை உண்டுபண்ணுந தன்மை சம்பவியாது. "எநத விருததியினுல் சேதனததின் அபிவியகதி வாயிலாக எப்பதாாததததின் பிரகாசமுண்டாகின்றதோ, அவ்விருததியினுல் அப்பதாாத்த கோசர சம்ஸகாரவாயிலாக ஸமிருதி உண்டாகின்றது. படகோசரவிருததியில அபிவியக்த சேதனத்தினுல்

கடத்தின் பிரகாசம் உண்டாகிறதில்லை. ஆதலால் படகோசர அநுபவத்தால் கடகோசர சம்ஸ்காரவாயிலாக ஸ்மிருதியின் ஆபத்தியில்லை. அதிஷ்டானகோசர அந்தக்கரணத்தின் இதுவெனும் வடிவ விருத்தியில் அபிவியக்த சேதனத்தினால் அத்தியஸ்தத்தின் பிரகாசம் உண்டாகின்றது. ஆதலால் அதிஷ்டானகோசர இதுவெனும் வடிவப் பிரமையினாலே அத்தியஸ்த கோசர சம்ஸ்காரவாயிலாக ஸ்மிருதியின் சம்பவமிருத்தலின், அத்தியஸ்தகோசர அவித்தியா விருத்தியின் அங்கீகாரம் நிஷ்பலமாம்." என்று இங்ஙனம் கூறுவராயின், அதுவும் அசங்கதமாம். ஏனெனின் அதிஷ்டானகோசர இதுவெனும் வடிவ ஞானத்தாற் அத்தியஸ்தத்தின் பிரகாசத்தைத் அங்கீகரிக்கின், அவரை இது கேட்கவேண்டும்:— இதுவெனும் வடிவ ஞானமுண்டாயின் அது அத்தியஸ்த வடிவமுமாகின்றதா? அல்லது இல்லையா? அத்தியஸ்த வடிவமும் ஆகின்றதெனக் கூறுவாராயின் அது பொருந்தாது. ஏனெனின் பிரத்தியக்ஷ ஞானத்தில் வடிவத்தைச் சமர்ப்பித்தற்கு ஏது விஷயமாம். இதுவெனும்வடிவ ஞானத்திற்குப் பிறகணத்தில் அத்தியஸ்த பதார்த்தத்தின் உற்பத்தி உண்டாகுதலால், இனி வரும் விஷயத்தோடு பிரத்தியக்ஷ ஞானத்தில் தனது வடிவத்தைச் சமர்ப்பித்தல் சம்பவியாது. ஆதலால் இதுவெனும் வடிவ ஞானத்திற்கு அத்தியஸ்த வடிவத்தன்மை உண்டாகிறதில்லை என்னும் இரண்டாவது பக்ஷத்தைக் கூறினும் பொருந்தாது. ஏனெனின் அந்நிய வடிவ விருத்தியில் அபிவியக்த சாக்ஷியினால் அந்நிய விஷயத்தின் பிரகாசம் உண்டாகிறதில்லை என்பது முன் சொல்லப்பட்டிருக்கின்றது. இதுவெனும் வடிவ விருத்தியில் அபிவியக்த சாக்ஷியின் சம்பந்தத்தினால் வடிவத்தைச் சமர்ப்பித்தல் அகாத்தாவிற்கும் பிரகாசம் அங்கீகரிக்கின், இதுவெனும் வடிவ விருத்தியில் அபிவியக்த சாக்ஷியின் சம்பந்தியாகிய அதிஷ்டானத்தின் விசேஷ அம்சம் எதுவோ அதன் பிரகாசமும் உண்டாதல் வேண்டும். ஆதலால் இதுவெனும் வடிவ சாமானிய ஞானத்திற்குப் பின்னமான அவித்தையின் பரிணாமமாகிய அத்தியஸ்த வடிவவிருத்திரூப ஞானம் அவசியம் அங்கீகரிக்கத்தக்கதாம். அதனிடத்தும் இரண்டு பக்ஷங்களைக் கூறுகின்றார். அவற்றுள் அதிஷ்டானகோசரமும் அத்தியஸ்தகோசரமும் அநிர்வசநீய ஞானமாகின்றனவென்னும் முதற் பக்ஷமோ நலமுடையதன்றென முற்கூறப்பட்டது. அநிர்வசநீய மித்தியா ஞானத்தை உபய

கோசரமெனக் கொள்ளின் பிரமைத்தன்மை பிரமத் தன்மைக ளின் சங்கர தோஷமுண்டாகும். ஆதலால் இதுவெனும் வடிவ சாமாந்ய ஞானத்திற்குப் பிற்கணத்தில் கேவல அத்தியஸ்த கோ சர அவித்தையின் விருத்தி உண்டாகின்றது. எங்ஙனம் சர்ப்பம இரஜத முதலியன மித்தையாகின்றனவோ, அங்ஙனமே அவற்றின் ஞானமும மித்தையாகின்றன. இதனாற்றான் சர்ப்ப மிரஜத முதலி யவற்றிற்குப் பாதமுண்டாகிறதுபோல அவற்றின்ஞானத்திற்கும பாதமுண்டாகிறது. இதுவெனும வடிவ பிரமாவிருத்தியில் அபி வியக்த சாக்ஷியினாலேயே அத்தியஸ்தத்தின் பிரகாசம் அங்கீகரிக் கின் சாக்ஷியோ எப்போதுமே பாதிக்கப்படாததாம. இதுவெனும் வடிவ விருத்தியும அந்தக்கரணத்தின் பரிணாமமாயிருத்தலின் கடமுதலிய ஞானத்தினைப்போல வியவகார காலத்தில பாதிக்கப படாததாம. ஆதலால் பிரஹ்மஞானமின்றி அத்தியஸ்தத்தினது ஞானத்திற்குப் பாதமுண்டாகலாகாது.

## ௧௩௯. அநிர்வசநீயக்கியாதியில் முற்கூறிய நான்கு மதங்களின் அநுவாதமும், அதன் சமாப்திச் செய்யுளும்.

இவ்வாறு இரஜத முதலியவற்றைக் கோசரிக்கும பிரமமுண் டாகுமிடத்துச்சித்தாந்தத்தில் அநிர்வசநீயக்கியாதி சொல்லப்பட்டிருக் கின்றது. அதன்கண் நான்கு பக்ஷங்கள் உள. ஒன்று கவிதார்க்கிக சிரோமணி பட்டோபாத்தியாயரது மதமாம. அதில அதிஷ்டானத் தோடு இந்திரியத்தின் சம்பந்தமே அத்தியாசத்திற்கு ஹேதுவாம். அதிஷ்டானத்தின் சாமாந்ய ஞானம ஹேதுவன்று. மற்றைய ஆசா ரியர்களது மதத்தில அதிஷ்டானத்தின் சாமாந்ய ஞானம அத்தி யாசத்திற்கு ஹேதுவாம. சாமாந்ய ஞானத்தினைத் தர்மிஞானமென் பர். உபாத்தியாயரது மதத்திற்கு வேறான மூன்று மதங்களிலும் சாமாந்ய ஞானம அத்தியாசத்திற்குக் காரணமாதல் கொள்ளப் பட்டிருக்கின்றது. ஆதலால் மூன்று மதத்தினர் தர்மிஞானவாதி கள். அவர்களுள்ளும் அத்தியஸ்த பதார்த்த வடிவமேயாகிய அவி த்தையின் விருத்திரூபப பிரமஞானமுண்டாகின்றதென்பவர் பக்ஷ மே நன்முடையதாம். அதிஷ்டான கோசர இதுவெனும் வடிவ மும், அங்ஙனமே அத்தியஸ்த வடிவமும அவித்தையின் விருத்தி யாகின்றனவென்பவர்பக்ஷமும; இதுவெனும் வடிவ விருத்தியாகிய

எந்தச் சாமாநிய ஞானம அத்தியாசத்திற்கு ஏதுவோ, அதனு லேயே நிர்வாகமாகின்றது, அத்தியஸத கோசர அவித்தையினது விருத்தியின் அங்கீகார மில்லையென்பவா பக்ஷமும் நலமுடைய தன்று. அங்ஙனமே அத்தியாசத்திற்கு ஏதுவாகச சாமாநிய ஞான த்தினை அங்கீகரியாத உபாததியாயரது பக்ஷமும நலமுடைய தன்று. இவ்வாற்றல் பிராசீன நூலாசிரியா எழுதியிருப்பது எது வோ, அதனை அநுசரிததே யாம் தூஷணமும பூஷணமும எழுதி யிருக்கின்றேம. தனது புததியின் பலத்தால் விசாரிக்கின் இந்நான்கு மதங்களிலும் தூஷண பூஷணங்கள் சமானமாம். பிர பஞசத்தினது மிததியாத்தன்மையைச சாதித்தலில் அதவைத வாததிற்கு அபிநிவேசமாம். அவாநதர மதபேததகைப் பிரதிபா தித்தலிலேனும கண்டித்தலிலேனும் அபிநிவேசமின்று. ஆதலால் எநத ஜிஞாசுக்காவது கண்டிக்கப்பட்ட பக்ஷமே புத்தியில் ஆரூ டமாகுமாயின ஓா கெடுதியுமிலலை. ஒரே மதத்திற்கு அநுகூலமாக யாம யுக்தி எழுதி இருக்கின்றேம.—அது பிராசீன ஆசாரியா களதுமாாக்கததினின்றும குறுக்காகச செல்லுதலை நிரோதித்தற் பொருட டெழுதப்பட்டது.

நிசசல னன்றி யாரு நிகழ்த்தின ரில்லை யிநத
மெச்சரிா வசனக யாதி மெய்மமையாய்ப் பாஷை தன்னில்
சற்சன ராவா ரிதனைத் தக்கவா ருய்ந்து மேலாரு
சசசிதா நநத வாழ்வைச சார்நதிடற கைய மின்றே.

## ௧௩௪. பிறநூல்களிற்கூறிய ஐந்து கியாதிகளின் பெயர்.

பிறநூல்களில் பிரமததிறகு எநத இலக்ஷணமும சொரூப மும் சொல்லப்பட்டிருக்கின்றனவோ, அவறறிறகு விலக்ஷணமா கவே பிரமத்தின் இலக்ஷணமும் சொருபமுமாமென்னும் பொருளை அறிவித்தற்பொருட்டுச சாஸதிராநதரங்களினது பிரமததின் சொ ரூபம பாஷியததில் கூறப்பட்டிருக்கின்றது. அவற்றின் நிரூபண மும் கண்டனமும செய்வாம். சுத்தியில இரஜத முதலிய பிரமமு ண்டாகுமிடத்துச சிததாநத பக்ஷமின்றி ஐநது மதங்களிருக்கின் றன:—௧. சத்கியாதி ௨. அசதகியாதி ௩. ஆத்மக்கியாதி. ௪. அநிர் யதாக்கியாதி. ௫. அக்கியாதி என்று பிரமத்திற்கு இப்பெயர் கூறு வர். எல்லோா மததிலும் ஐந்து பெயர்களில் ஐநதில் ஒரு பிர மததின் நாமம பிரசிததமாம.

## கடஅ.—கசச சத்தியாதியின் கிரமம்.

அவற்றுள் சத்தியாதிவாதியின் சித்தாந்தம் இதுவாம்:—சுத்தியின் அவயவங்களோடு இரஜதத்தின் அவயவம் எப்போது மிருக்கின்றது. எங்ஙனம் சுத்தியின் அவயவம் சத்தியமோ, அங்ஙனமே இரஜதத்தின அவயவமுமாம; மிதனையன்று. எங்ஙனம தோஷத்தோடுகூடிய நேத்திரத்தின் சம்பந்தத்தால் சித்தாந்தத்தில் அவித்தையின் பரிணாமமாகிய அநிர்வசநீய ரஜதம உற்பத்தியாகின்றதோ, அங்ஙனமே தோஷத்தோடுகூடிய நேத்திர சம்பந்தத்தால் இரஜதாவயவங்களி னின்றும சத்திய ரஜதம் உற்பத்தியாகின்றது. அதிஷ்டான ஞானத்தினுல் எங்ஙனம் அநிர்வசநீய இரஜதத்தின் நிவிருத்தி சித்தாந்தத்தில் உண்டாகின்றதோ, அஙஙனமே சுத்திஞானத்தினுல் சத்திய ரஜதத்தின் துவம்ஸம தனது அவயவங்களில் உண்டாகின்றது.

## கடக. சத்தியாதி வாதத்தின் கண்டனம்.

இது சத்தியாதிவாதியின் மதமாம். அது நிராகரிக்கத்தக்கதாம. ஏனெனின் சுத்திரஜத திருஷ்டாந்தத்தால் பிரபஞ்சத்திற்கு மித்தியாத்தன்மையின் அநுமிதி உண்டாகின்றது. சத்தியாதி வாதத்தில் சுத்தியில இரஜதம சத்தியமாம. அதனை திருஷ்டாந்தமாகக் கொண்டு பிரபஞ்சத்தில மித்தியாத்தன்மையின் சித்தி உண்டாகாது. ஆதலால் இப்பக்ஷம் நிராகரிக்கத் தக்கதாம. இப்பக்ஷத்தில் இது தோஷமாம:—சுத்தி ஞானத்திற்குப்பின் காலத்திரயத்திலும் சுத்தியில் வெள்ளி இல்லை என்பதாகச் சுத்தியில் முக்காலத்தைய வெள்ளி அபாவ உணர்ச்சி உண்டாகின்றது. சித்தாந்த மதத்தில் அநிர்வசநீய ரஜதமோ மத்தியகாலத்தில் உண்டாகின்றது. வியாவகாரிக இரஜதாபாவம முக்காலத்தையதாம. சத்தியாதிவாதியின் மதத்தில் வியாவகாரிக இரஜத முண்டாகின்றது. அக்காலத்தில் வியாவகாரிக இரஜதாபாவம சம்பவிக்கிற தில்லை. ஆதலால் முக்காலத்தைய இரஜதாபாவத்தின் உணர்ச்சியால் வியாவகாரிக ரஜதத்தைக் கூறுதல் விருத்தமாம. அநிர்வசநீய ரஜதத்தின் உற்பத்தியிலோ பிரசித்த ரஜதத்தின் சாமக்கிரி வேண்டியதில்லை. தோஷத்தோடுகூடிய அவித்தையினுல் அதன் உற்பத்தி சம்பவிக்கின்றது. வியாவகாரிகரஜதத்தின் உற்பத்தியோ ரஜதத்தின் பிரசித்த சாமக்கிரியின்றிச் சம்பவிக்கிறதில்லை. சுத்தி தேசத்தில்

இரஜதத்தின் பிரசித்த சாமக்கிரி இல்லை. ஆதலால் சத்திய ரஜதத்தின் உற்பத்தி சுத்திதேசத்திற் சம்பவிக்கிறதில்லை.

## ௧௪௦. சுத்தியில் சத்திய ரஜதத்தினது சாமக்கிரியின் அங்கீகாரமும் கண்டனமும்.

சுத்தி தேசத்தில்இரஜதத்தின் அவயவமிருக்கின்றது. அதுவே சத்தியரஜதத்தின்சாமக்கிரியாம்என்றுகூறின், அவனை இதுகேட்பாம்:—இரஜதாவயவங்களுக்குஉற்பூதஉருவமிருக்கின்றதா? அநுற்பூத உருவமிருக்கின்றதா? உற்பூத உருவமெனின் இரஜதத்தின்உற்பத்திக்குமுன் இரஜதாவயவங்களின்பிரத்தியக்ஷமுமுண்டாதல்வேண்டும். அநுற்பூத உருவமெனின் அநுற்பூத உருவமுடைய அவயவங்களினின்றும இரஜதமும் அநுற்பூத உருவமுடையதாகும். அதனால இரஜதத்தின் பிரத்தியக்ஷ முண்டாகாது. உற்பூத உருவமுடைய திரியணுகத்தின் ஆரம்பகமாகிய துவியணுகததிலோ அநுற்பூத உருவமில்லை; உற்பூத உருவமிருக்கின்றது. துவியணுகததில் மகதத்துவமில்லை யாகலின, உற்பூத உருவமிருநதும துவியணுகததின் பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. துவியணுகத்தில் மாத்திரம உற்பூத உருவமன்று; பரமாணுவினும நையாயிகா உறபூத உருவம அங்கீகரிக்கின்றனா.

துவியணுகததினைப்போல இரஜதாவயவமும உற்பூத உருவமுடையதாம. ஆனால மகதது‌வ சூனியமாம. ஆதலால இரஜதாவயததின் பிரததியக்ஷ முண்டாகிறதிலலையெனக் கூறின் அது சம்பவியாது. ஏனெனின் மகத் பரிமாணத்திற்கு நான்குபேதமுண்டு. ஆகாயமுதலியவற்றில் பரம (மேலான) மகத்பரிமாணமிருக்கின்றது. மேலான மகதபரிமாணத்தினையே நையாயிகா விபு என்பா. விபுவிற்கு வேருன படமுதலியவற்றில் அபகிருஷ்ட (தாழ்ந்த) மகத்பரிமாணமிருக்கின்றது. கடுகு முதலியவற்றில் அபகிருஷ்டதர (அதனினும் தாழ்ந்த) மகத்பரிமாணமிருக்கின்றது. திரியணுகத்தில் அபகிருஷ்டதம (எல்லாவற்றினும் தாழ்ந்த) மகத்பரிமாணமிருக்கின்றது. இரஜதத்தின் அவயவமும மகத் பரிமாண சூனியமாயின், துவியணுகத்தினின்றும் ஆரமபிக்கப்பட்ட திரியணுகத்தினைப்போல மகதது‌வ சூனிய அவயவங்களினின்றும் ஆரமபிக்கப்பட்ட இரஜத முதலியனவும் அபகிருஷ்டதம மகத பரிமாண முடையனவே யாதல்வேண்டும. ஆதலால் இரஜதாவயவம் மகத்துவ சூனியமாம. இங்ஙனம் கூறுதல்

சம்பவியாது. இரஜதாவயவத்திலோ மகத்துவத்தின் அபாவத்தைக் கூறின் எவ்வாற்றானும் சம்பவிக்கும். ஆனால் யாண்டுப் புற்றில கடத்தின் பிரமம் உண்டாகின்றதோ, ஆண்டே கடாவயவமாகிய கபாலம அங்கீகரிக்கவரும். யாண்டுத் தாணுவில் புருஷபிரமம உண்டாகின்றதோ, ஆண்டுத தாணுவில புருஷனது அவயவங்களாகிய கைகால் முதலியன அங்கீகரிகக வேண்டியதாகும். கபாலமும் கைகால முதலியனவுமோ மகத்வ சூனியமாதல சம்பவியாது. இரஜதத்தன்மை ஜாதியோ அணுசாதாரணமாம. ஆதலால் சூக்ஷ்ம அவயவஙகளிலும இரஜத வியவகாரம சம்பவிக்கின்றது. கடத்தன்மை கபாலத்தன்மை கைகாற்றன்மை புருஷத்தன்மைமுதலிய ஜாதியோ மகத்தவயவிமாத்திரத் திருப்பதாம. அவற்றின் சூக்ஷ்ம அவயவங்களில் கபாலததன்மை முதலிய ஜாதி சம்பவிக்கிறதிலலை. ஆதலால பிரமததின அதிஷ்டான தேசததில ஆரோபிதத்தின் வியாவகாரிக அவயவ மிருக்குமாயின், அவற்றின் உணாசசி உண்டாதல வேண்டும. ஆதலால் வியாவகாரிக அவயவங்களினின்றும இரஜத முதலியவற்றின் உற்பததி கூறுதல் அப்ரசங்கதமாம.

## கசுக. சத்கியாதிவாதியினால் முற்கூறிய தோஷத்தின் பரிகாரமும் அதன் கண்டனமும்.

சக்தியாதிவாதி இங்ஙனம கூறுகின்றார்:—சுத்தி தேசத்தில் இரஜதததின சாக்ஷாத அவயவமில்லை. ஆனால் அவயவங்களுக்கு அவயவமாகிய பரமமூல துவியணுககள அல்லது பரமாணுக்கள் இருக்கின்றன. அஙஙனமே புற்றிடத்தில் கடம, ஸ்தாணுதேசததில் புருஷன் என்பவற்றின் சாக்ஷாத் அவயவங்களின் அவயவமாகிய பரமமூல துவியணுகங்கள் அல்லது பரமாணுக்கள் இருககின்றன. தோஷததோடு கூடிய நேத்திரத்தின் சம்பநதத்தால் சுத்தியில் அவயவிதாரை உற்பததியாய், இரஜதம கடம புருஷன் எனபவற்றின் உற்பத்தி உண்டாகின்றது. தோஷததின் அற்புத மகிமையினால இவ்வாறு வேகமாகத் திரியணுக முதலியவற்றின் தாரை உற்பததியாகின்றது. எதனால் இடை அவயவிகளாகிய கபாலம கை கால் முதலியன தோற்றுவதிலலையோ, அந்திய அவயவியாகிய கடமுதலியவற்றின் உற்பத்தி உண்டாயின் கபாலமுதலியன ஓரிடத்தும் தோற்றுவதில்லையோ, அதனால் பிரமத்தின்

அதிஷ்டானத்தில் ஆரோபிதத்தின் அவயவம் தோற்றுகிறதில்லை. வியாவகாரிக அவயவம் இரஜத முதலியவற்றினதாம். அல்லது சுத்தி தேசத்தில இரஜதத்தின மகத்தவயவமிருக்கின்றது. புற்றிடத்தில கடத்தின் அவயவம் கபாலமாம. ஸ்தாணுதேசத்தில புருஷனது அவயவம கைகால முதலியனவாம. இவ்வாறுல் பிரமத்தின அதிஷ்டானத்தில் ஆரோபிதத்தின் சகல அவயவங்களு மிருக்கின்றன. எனறுலும அதிஷ்டானத்தின் விசேஷ வடிவமான உணர்ச்சிஅவ்வவயவங்களில் உணாசசிக்குப்பிரதிபந்தகமாம்.ஆதலால் இருபபனவாகிய மகத் அவயவங்களின் பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. இவ்வாறுல் சத்கியாதிவாதியின் சமாதானமும் நலமுடையதன்று. ஏனெனின் சுத்தி தேசத்தில வியாவகாரிக ரஜதத்தின் உற்பத்தி அங்கீகரிககினும, அநுபவத்தை யொட்டி இரஜதத்தின் நிவிருத்தி சுத்தி ஞானத்தினுலேயே அங்கீகரித்தல்வேண்டும.

## ௧௪௨. இரஜதஞானத்தின் நிவிருத்தியினுல் பிராதிபாஸிக்முயம் வியாவகாரிகமுமாகிய இரஜதத்தின் நிவிருத்தியும் அதன் கண்டனமும்.

சத்கியாதிவாதி இங்ஙனம் கூறுகின்றுர்:—இரஜதத்தின நிவிருத்தியில் சுத்தி ஞானத்தின் அபேக்ஷயில்லை. ஆனுல இரஜத ஞானுபாவத்தினுல் இரஜதத்தின் நிவிருத்தி உண்டாகின்றது. எவ்வளவு காலம இரஜதத்தின ஞானம இருக்கின்றதோ, அவ்வளவு காலம் இரஜத மிருக்கின்றது. இரஜத ஞானத்தின் அபாவ முண்டாயின, அப்போது இரஜதத்தின் நிவிருத்தி உணடாகின்றது. சுத்திஞானமும சிலவிடத்து இரஜதஞானத்தின் நிவிருத்திக்கு ஏதுவாம. சிலவிடத்துச சுத்திஞானமின்றி அந்நிய பதார்த்தங்களின் ஞானத்தால இரஜதஞானத்தின் நிவிருத்தி உண்டாகினறது. அந்த இரஜதஞானத்தின் நிவிருத்திக்குப் பிற்கணத்தில இரஜதத்தின் நிவிருத்தி உண்டாகின்றது. அல்லது இரஜதஞானத்தின் நிவிருத்தி எதனுல உண்டாகின்றதோ, அதனுலேயே இரஜதஞானத்தின் நிவிருத்தி க்ஷணத்தில் இரஜதத்தின நிவிருத்தி உண்டாகின்றது. இவ்வாறு ஞானகாலத்திலேயே இரஜதத்தின் ஸ்திதி இருத்தலால் பிராதிபாஸிகமாகவே இரஜதாதிகளிருககினும அநிர்வசநீயமன்று; ஆனுல் வியாவகாரிக சத்தியமாம். எங்ஙனம சித்தாந்தத்தில சுகமுதலியன பிராதிபாஸிகமாயினும் சொப்பனசுகமுதலியவற்றினும் விலக்ஷண

வியாவகாரிகமாகக் கொள்ளப்படுகின்றனவோ, நியாய மதத்தில் இருமை முதலியன பிராதிபாஸிகமாகக் கொண்டு வியாவகாரிக சத்தியமாக மதிக்கப்படுகின்றனவோ, அங்ஙனமே இரஜதமுதலியன பிராதிபாஸிகமாயினும் வியாவகாரிக சத்தியமாம். இவ்வாற்றால் இரஜதஞானத்தின் நிவிருத்திக்குப் பிரதிய க்ஷணத்தில் இரஜத முதலியவற்றின் நிவிருத்தி உண்டாகின்றது. அல்லது இரஜதஞானத்தின் நிவிருத்திக்கு ஏதுவாகிய சுத்தியின் ஞானம், அல்லது வேறு பதார்த்தத்தின் ஞானம் எதுவோ, அதனாலேயே இரஜதஞானத்தின் நிவிருத்தி க்ஷணத்தில இரஜதத்தின நிவிருத்தி உண்டாகின்றது. சுத்தி ஞானத்தினாலேயே இரஜதத்தின் நிவிருத்தி உண்டாகுமென்னும நியமமில்லை.

இவ்வாறு கூறின் உலக அநுபவத்திற்கு விரோதமுண்டாகும்; சகல சாஸ்திரங்களுக்கும் விரோதமுண்டாகும்; சித்தாந்தத்தின விடுபாடுண்டாகும்; யுக்திக்கும விரோதமாகும். ஏனெனின சுத்தி ஞானத்தினால இரஜதப பிரமத்தின நிவிருத்தி உண்டாகின்றதென்பது சகல லோகத்திலும பிரசித்தமாம். சகல சாஸ்திரங்களிலும பிரசித்தமாம். சத்கியாதிவாதிக்கும இதுவே சித்தாந்தமாம். சத்கியாதிவாதியின் மதத்தில விசேஷ ரூபமாகச சுத்தியின ஞானம இரஜதாவயவத்தின ஞானத்திற்குப் பிரதிபந்தகமாம். ஆதலால இரஜதாவயவத்தின் ஞானத்திற்கு விரோதி சுத்தியின ஞானமென்பது நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. இரஜதாவயவத்தின உணர்ச்சிக்கு விரோதியாகிய சுத்திஞானமே இரஜதஞானத்திற்கு விரோதமெனக் கொள்ளுதல லிலுபதகற்பனையாம. நிர்ணயிக்கப்பட்டதனைக் கிலுப்த மெனபர். சுத்திஞானமின்றிப பிறிதினால இரஜத ஞானத்தின நிவிருத்தி அங்கீகரிக்கின் கிலுப்தமின்றிய கற்பனையாகும். இவ்வாற்றால கிலுப்தகற்பனை யோக்கியமாம். இந்த யுக்தியினாலும விரோதமுண்டாகும். ஆதலால் சுத்திஞானத்தினாலேயே இரஜதத்தின் நிவிருத்தியும அதன ஞானத்தின நிவிருத்தியும அங்கீகரிக்கத்தக்கனவாம்.

## கசங. சத்கியாதிவாதத்துள்ள பிரபலதோஷம்.

முற்கூறிய வண்ணம இரஜதஞானபாதத்தால் இரஜதத்தின் நிவிருத்தியை அங்கீகரித்து, இரஜதஞானத்தின நிவிருத்திக்கு அநேக சாதனங்களை அங்கீகரிக்கினும, சொல்லப்படும தோஷத்தி

ளுல் சத்கியாதிவாதிக்கு மீட்சிஉண்டாகிறதில்லை. அந்தோஷம இது வாம:—யாண்டுச சுத்தியில் எந்த க்ஷணத்தில் இரஜதப்பிரம முண்டாகின்றதோ, அதேக்ஷணத்தில்சுத்தியினோடுஅக்கினியின்சையோகமுண்டாய், அடுத்தக்ஷணத்தில் சுத்தியின் துவம்சமும் பஸ்மத்தின் உற்பத்தியும்உண்டாயின், ஆண்டு இரஜதஞானத்தினிவிருத்திக்குச் சாதனம ஒன்றும உண்டாகவில்லை. ஆதலால சுத்தியின் துவம்சத்திற்கும் பஸ்மத்தின் உற்பத்திக்கும முன் இரஜதத்தின் நிவிருத்தி உண்டாகாமையால பஸ்மதேசத்தில் இரஜதத்தின் இலாபமுண்டாதல்வேண்டும. ஏனெனின் இரஜதத் திரவியம தேஜசாம். அதன் துவம்சம கந்தமுதலியவற்றின் சமபந்தமின்றி உண்டாகிறதில்லை. ஆதலால் பிரமஸ்தானத்தில் வியாவகாரிக இரஜதமாகிய சத்பதார்த்தத்தின் கியாதி உண்டாகின்றது. இந்தச சத்கியாதிவாதம் அசங்கதமாம். ஒரு இரஜ்ஜுவில பத்துப புருஷர்களுக்கு ஒருவனுக்குத் தண்டமும, ஒருவனுக்கு மாலையும, ஒருவனுக்குச் சாப்பமும, அங்ஙனமே ஒருவனுக்கு ஜலதாரையுமாக வேறு வேறு பதார்த்தங்களின் பிரம முண்டாகுமாயின், இப்பதார்த்தங்களின் அவயவம சொற்ப இரஜ்ஜு தேசத்திற சமபவியாது. ஏனெனின் மூர்த்தத்திரவியம் ஸ்தானத்தை நிரோதிக்கும. ஆதலால சொற்ப தேசத்தில இத்தனை பதார்த்தங்களின் அவயவங்கள் சமபவியா. பிரமகாலத்தில் தண்டமுதலிய அவயவிகள் எவ்வாற்றானும்சொற்ப தேசத்திற் சமபவியா. சித்தாந்தத்திலோ தண்டாதிகள் அநிர்வசநீயமாம. அவை வியாவகாரிக தேசத்தை நிரோதியா. சத்கியாதிவாதியும அத்தண்டமுதலியவற்றில் ஸ்தானநிரோதமுதலிய பயனை அங்கீகரியாவிடின், தணடமுதலியவற்றைச சத்தென்று கூறுதல் விருத்தமும பயனின்மையுமாம. தண்டமுதலியவற்றின் உணர்ச்சி மாத்திரம் உண்டாகின்றது. வேறு காரியம அவற்றால் உண்டாகிறதில்லை. இவ்வாறு கூறின் அநிர்வசநீயவாதமே சித்தமாகின்றது.

அன்றியும பிரமஸ்தலத்தில சத்பதார்த்தத்தின் உற்பத்திஅங்கீகரிக்கின், நெருப்போடுகூடிய ஊஷர பூமியில் ஜலப்பிரமம உண்டாயின், ஆண்டு ஜலத்தினால் அக்கினி சாந்தமாதல்வேணடும். பஞ்சின்மேரில் வைக்கப்பட்ட குன்றிமணிக்கொத்தில் அக்கினிப்பிரம முண்டாயின்ஆண்டுப் பஞ்சினை எரித்தல்வேண்டும. தோஷத்தோடு கூடிய காரணத்தால் உற்பத்தியாகிய பதார்த்தத்தின் உணர்ச்சி அந்நியருக்குத் தோற்றாது. எவனுடைய தோஷத்தினால் உற்பத்தி

யாயினதோ அவனுக்கே தோற்றமென்று கூறின், தோஷத்தின காரியமாகிய ஜலஅக்கினிகளால் ஈரமும் தாகமுமுண்டாகாவிடின், அவற்றைச் சத்தியமென்று கூறுதல் கேவலம் சிரிப்பிற்குக் காரணமாம். ஏனெனின் அவயவமோ ஸந்தானநிரோத முதலியவற்றிற்கு ஏதுவன்று. அவயவியினால் ஒருகாரியமும் உண்டாகிறதில்லை. இங்ஙனம் பதார்த்தத்தினை சத்தென்று கூறுதலைக்கேட்டுப் புத்திமான்களுக்கு நகையுண்டாகின்றது. ஆதலால் சத்கியாதிவாதியின் வார்த்தை சப்பவியாத்தியோடு, இப்பக்ஷம் முற்றும் யுக்தியில்லாததாம். இதனாற்றான் விசாரசாகரத்தில் சத்கியாதி இல்லை. எந்தப் பக்ஷத்திற்கு ஒருவாறு பொருத்தமிருக்க, மீண்டும் தாகமுதலிய பலத்தால் கண்டனமுண்டாகின்றதோ அந்தப்பக்ஷம் எழுதப்பட வேண்டும். சத்கியாதி வாதத்தின யுக்தி (பொருத்தம்) சம்பவிக்கிறதில்லையாகலின இந்நூலிலும் எழுதத்தக்கதன்று. என்றாலும் முற்றும் எழுதாவிடின், இதனைப் படிக்கின்றவர்களுக்கு நூலாசிரியருக்குச் சத்கியாதி வாதத்தின் ஞானம் இருந்திராது என்னும் பிரமம் உண்டாய்விடும். அந்தப் பிரமத்தை நிவர்த்திக்கும்பொருட்டு ஈண்டு எழுதப்பட்டிருக்கின்றது.

## கசச—க்சஅ. மூவகை அசத்கியாதியின் கிரமம்.

## கசச. சூனியவாதியின் கிரமமாக அசத்கியாதி வாதத்தின் கண்டனம்.

அங்ஙனமே அசத்கியாதி வாதமும் முற்றும் யுக்தி அநுபவ சூனியமாம். நிராகரணமின்றியும் அது எவனுடைய புத்தியிலும் ஆரூடமாகா (ஏறா) தாகலின் நிராகரிக்கத்தக்கதன்று. என்றாலும் அசத்கியாதிவாதி வேதமார்க்கத்திற்கு விரோதியாதல் பிரசித்தமாம். சூத்திரங்களாலும் அவரது மதத்தின் கண்டனம் சொல்லப் பட்டிருக்கின்றது; ஆதலால கண்டிக்கத்தக்கதாம. அசத்கியாதிவாதி இருவர்:—ஒருவரோ சூனியவாதியாகிய நாஸ்திகர்; அசத்கியாதியை அங்கீகரித்திருக்கின்றனர். அவர்மதத்திலோ சகல பதார்த்தங்களும் அசத்து வடிவமாம். ஆதலால் சுத்தியில் இரஜதமும் அசத்தாம். சூனிய வாதியின் மதத்திலோ அசத்தாகிய அதிஷ்டானத்தில் இரஜதம் அசத்தாம. ஆதலால் பிரமம் நிரதிஷ்டானமாம். அங்ஙனமே ஞாதாஞானமும் அசத்தாம். இம்மதத்தின் கண்டனம் சாரீரகத்தினது இரண்டாவது அத்தியாயத்தின் இரண்டாம் பாதத்தில் விஸ்தா

ரமாகச் செய்யப்பட் டிருக்கின்றது; அநுபவ விருத்தமுமாம். ஏனெனில் சூநியவாதத்தில் எல்லா இடங்களிலும் சூநியமிருக்கின்றதாகலின், எதன் வியவகாரமும் பிரசித்தமாக உண்டாகலாகாது. சூநியத்தினால் வியவகார முண்டாகுமாயின், ஜலத்தின் பிரயோஜனம் அக்கினியினாலும் அக்கினியின் பிரயோஜனம் ஜலத்தினாலும் உண்டாதல் வேண்டும். அக்கினியும் ஜலமுமோ சத்தியமாகவாவது மித்தையாகவாவது ஓரிடத்து மில்லை. கேவலம் சூநிய தத்துவ மிருக்கின்றது. அது முழுவதும் ஆகாசமாம். அதனிடத்து ஓர் விசேஷமுமில்லை. சூநியத்தில் விசேஷம் அங்கீகரிக்கின் சூநிய வாதிக்கு ஹானி உண்டாகும்; அவ்விசேஷமே சூநியத்திற்குப் பின்னமாயிருத்தலின். அன்றியும் சூநியத்தில் விசேஷமிருக்கின்றது. எதற்கு விலக்ஷணத்தன்மை கூறுகின்றனரோ, அதனால் வியவகாரபேத முண்டாகின்றது. அவ்விசேஷமும், வியவகாரமும், அங்ஙனமே வியவகாரத்தின் காத்தாவும் பரமார்த்தமாகச் சூநியமாம். ஆதலால் சூநியத்தன்மைக்கு ஹானியில்லை என்று கூறின் அதுவும் பொருந்தாது. ஏனெனின் சூநியத்தில் விசேஷ மிருக்கின்றதென்னும் இவ்வார்த்தையும் விருத்தமாம். விசேஷமுடையதெனக் கூறின், சூநியத்தன்மைக்கு ஹானி உண்டாகின்றது. சூநியமெனக் கூறின் விசேஷ முடையதின் ஹானியினால் வியவகார பேதம் சமபவிக்கிறதில்லை. இவ்வாற்றால் சூநியவாதம் சமபவியாது.

## ௧௪௫. ஓர் தாந்திரிகாது கிரமமாக அசத்கியாதி வாதம்.

ஓர் தாந்திரிக அசத்கியாதிவாதி உளன். அவன் மதத்தில் சுத்தி முதலிய வியவகாரத்தின் பதார்த்தங்களோ அசத்தன்று. ஆனால் பிரம ஞானத்தின் விஷயமாகிய எந்த அநிர்வசநீய ரஜத முதலியன சித்தாந்தத்தில் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றனவோ அவை அசத்தாம். ஆதலால் வியாவகாரிக ரஜத முதலியன தனது தேசத்திலிருக்கின்றன. அவற்றிற்குச் சுத்தியில் சம்பந்தமில்லை. அந்நியதாக்கியாதி வாதியினைப்போல சுத்தியில் ரஜதத்தன்மையின் உணர்ச்சி உண்டாகிறதில்லை. அநிர்வசநீய ரஜதம் உற்பத்தியாகிறதில்லை. அக்கியாதி வாதியினைப்போல இரண்டு ஞானமுண்டாகிறதில்லை. சூநியவாதியினைப்போல்சுத்திஅசத்தன்று; ஞாதாவும் ஞானமும் அசத்தன்று. ஆனால் சுத்தி ஞானம் ஞாதா சத்தாம்.

தோஷத்தோடுகூடிய நேத்திரத்திற்குச் சுத்தியினோடு சம்பந்தமுண்டாயின், அப்போது சுத்தியின் ஞானமுண்டாகிறதில்லை. ஆனால் சுத்திதேசத்தில் அசத்திரஜதத்தின் பிரதீதி உண்டாகின்றது. அந்நியதாக்கியாதி வாதத்தில் சுத்தி தேசத்தில் இரஜதம் அசத்தாம். காநதையின் கரத்திலும் அங்ஙனமே கடையிலும் சத்திய ரஜதம் இரண்டு மதங்களிலு மிருக்கிறது. அங்ஙனமாயினும் அந்நியதாக்கியாதி வாதத்திலோ தேசாந்தரத்துள்ள சத்திய ரஜதத்திலிருக்கும் ரஜதத்தன்மையின் ஞானம் சுத்தியில் உண்டாகின்றது. அசத்கியாதி வாதத்தில் தேசாந்தர்த்தில இரஜதமோ இருக்கின்றது. அதன் தாமமாகிய ரஜதத்தன்மையின் ஞானம் சுத்தியினிடத்து உண்டாகிறதில்லை. ஆனால் அசத்தைக் கோசரிக்கும் இரஜத ஞானமிருக்கின்றது. சுத்தியினோடு தோஷத்தோடுகூடிய நேத்திரத்தின சம்பந்தத்தால் இரஜதப் பிரமமுண்டாகின்றது. அதன விஷயம் சுத்தியன்று. இரஜதப பிரமத்தின் விஷயம சுத்தி ஆகுமாயின், "இது சுத்தி" என்னும ஞானம உண்டாதல வேண்டும. சுத்திதன்மை வடிவ விசேஷ தாமத்தின் தோஷ பலத்தால் பானமுண்டாகாவிடின், சாமாநிய அம்சத்தின் "இது" வெனும் இவ்வளவே ஞான முண்டாதல வேண்டும. ஆதலால் பிரமத்தின் விஷயம சுத்தியன்று. அங்ஙனமே பிரமத்தின் விஷயம இரஜதமுமன்று. ஏனெனின் முன் உள்ள இடத்திலோ இரஜதமில்லை; வேறிடத்தில் இரஜதமிருக்கின்றது. அதனோடு நேத்திரத்தின் சம்பந்தமில்லை. இவ்வாற்றால் இரஜதப் பிரமத்தின விஷயம ஒன்றுமில்லை. சுத்திஞானத்திற்குப் பிற்காலத்தில் "மூன்றுக் காலத்திரயத்திலும இரஜதமில்லை" எனனும உணர்ச்சி உண்டாகின்றது. ஆதலால இரஜதப் பிரமம் நிர்விஷயமாயிருத்தலின் அசத்கோசரமெனப்படுகின்றது. அசத்கோசர ஞானத்தினையே அசத்கியாதியென்பா

## ௧௪௯. நியாயவாசஸ்பதிகாரர் கிரமப்படி அசத்கியாதி வாதம்.

ஒருவர் அசத்கியாதியை இவ்வாறு கூறுகின்றார்:—சுத்தியினோடு நேத்திரத்தின சம்பந்தத்தால இரஜதப்பிரமமுண்டாகின்றது. ஆதலால இரஜதப் பிரமத்தின் விஷயம சுத்தியாம. ஆனால சுத்தியில் சுத்திதன்மையும் சுத்தியின் சமவாயமுமாகிய இரண்டும தோஷத்தினால் தோற்றுகிறதில்லை. ஆனால் சுத்தியில் இரஜதத்தன்மையின் சமவாயம தோற்றுகின்றது. இரஜதத்தன்மையின் சமவாயம

சுத்தியில் இல்லை; ஆகலின் அசத்கியாதியாம். இரஜதத்தன்மைப் பிரதியோகியினது சுத்தி அநுயோகினையுடைய சமவாயம் அசத்தாம். அதன்கியாதி அதாவது உணாசசி அசத்கியாதி எனப்படுகின்றது. இரஜதத்தன்மைப் பிரதியோகிக சமவாயம் இரஜதத்தில் இரஜதத்தன்மைக்குப் பிரசித்தமாம். சுத்தி அநுயோகிக சமவாயம் சுத்தியில் சுத்தித்தன்மைக்குப் பிரசித்தமாம. ஆனால் இரஜதத்தன்மைக்குப் பிரதியோகியினை யுடைய சமவாயம் இரஜத அநுயோகியினையுடையதாதல் பிரசித்தம; சுத்தியினை அநுயோகியாக வுடையதன்று. சுத்தியினை அநுயோகியாகவுடைய எச்சமவாயம் பிரசித்தமோ அது சுத்தித்தன்மைப் பிரதியோகியினை யுடையதாம. இரஜதத்தன்மைப் பிரதியோகியினையுடையதன்று. இவ்வாற்றால் இரஜதத்தன்மைப் பிரதியோகியினையுடையதும் சுத்தி அநுயோகியினையுடையதுமாகிய சமவாயம் அப்பிரசித்தமாயிருத்தலின் அசத்தாம். அதன பிரதீதியை அசத்கியாதியென்பர். சுத்தி எதன் அநுயோகி அதாவது தர்மி யாகின்றதோ, அது சுத்தி அநுயோகிகமெனப்படுகின்றது. இரஜதத்தன்மை எதன் பிரதியோகியாகின்றதோ, அது இரஜதத்தன்மைப் பிரதியோகிகமெனப்படுகின்றது. தாற்பரியம் இதுவாம:—கேவல சமவாயம் பிரசித்தம். இரஜதத்தன்மைப் பிரதியோகிக சமவாயமும இரஜதத்தாற் பிரசித்தம. சுத்தி அநுயோகிக சமவாயமும் சுத்தி தாமங்களும் சுத்தியிற்பிரசித்தமாம.பிரசித்த சமவாயத்தில சமவாயத்தன்மைத் தாமமிருக்கின்றது.இரஜதத்தன்மைப்பிரதியோகித்தன்மையும் சமவாயத்திற்பிரசித்தமாம்.அங்ஙனமேசுத்திஅநுயோகிகத்தன்மையும் சமவாயத்திற்பிரசித்தமாம். ஆனால் இரஜதத்தன்மைப் பிரதியோகிகத்தன்மையும் சுத்தி அநுயோகிகத்தன்மையுமாகிய இரண்டு தர்மங்களுமொரிடத்துசசமவாயத்தில் அப்பிரசித்தமாயிருத்தலின்,சுத்தி அநுயோகிகத்தன்மை விசிஷ்ட இரஜதத்தன்மைப் பிரதியோகிகத்தன்மை விசிஷ்டசமவாயம் அப்பிரசித்தமாயிருத்தலின் அசத்தாம். அதன்கியாதி அசத்கியாதி எனப்படுகின்றது. இது நியாயவாசஸ்பதிகாரர்மதம். இவ்வாறு அதிஷ்டானத்தை அங்கீகரித்து, அசத்கியாதியை இருவகையாகக் கொண்டிருக்கின்றனர். ஒன்றே சுத்தி அதிஷ்டானத்தில் அசத்தாகிய இரஜதத்தின் பிரதீதி வடிவம்; மற்றையது சுத்தியில் அசத்தாகிய இரஜதத்தன்மைச சமவாயத்தின் பிரதீதிவடிவமாம.

## கசஎ. இருவகை அசத்கியாதிவாதத்தின் கண்டனம்.

அவ்விரண்டும் அசங்கதமாம். ஏனெனின் அசத்கியாதியை அங்கீகரிப்பவன் எவனோ அவனை இது கேட்குதும:—அசத்கியாதி என்னும் வாக்கியத்தில் பாதிக்கப்படாததின் விலக்ஷணமென்பது அசத்சப்தத்தின் பொருளா? அல்லது அசதெனும் சொற்பொருள் சொரூபமின்மையா? அசத்தென்பதின் பொருள் சொரூபமின்றியதென்பதாமெனின், "வாயில் எனக்கு நாவில்லை" என்னும வாக்கியம்போல அசத்கியாதி வாதநதின் அங்கீகாரம நாணமின்றியதாம். ஏனெனின் சத்தாஸ்பூர்த்தியின்றியதனை சொரூபமின்றியதென்பர். ஆதலால சத்தாஸ்பூர்த்தி சூநியமும தோற்றுகின்றதென்னும் அசத்கியாதிவாதம் சொல்லியபடி சித்தமாகின்றது. சத்தாஸ்பூர்த்தி சூநியத்தின் பிரதீதியைக் கூறுதல் விருத்தமாம். ஆதலால் பாதிக்கப்படாததின் விலக்ஷணம் அசதென்னும் சொற்பொருளாமெனின், பாதிக்கப்படாததின் விலக்ஷணம் பாதிக்கப்படுவதாகின்றது. பாதிக்கப்படுவதற்குரியதனைப் பாத்தியமென்பர். இவ்வாற்றால் பாதத்திற்கு உரியதின் பிரதீதி அசத்கியாதியெனப் படுகின்றதென்பது சித்தமாயிறறு. அதுவே சித்தாந்தியின் மதமாம. ஏனெனின அநிர்வசநீயக்கியாதி சித்தாநதத்தில் உண்டு. பாதயோக்கியமே அநிர்வசநீயமாகின்றது. இவ்வாற்றால் சித்தாநதததிற்கு விலக்ஷணமாக அசதகியாதிவாதம உளதென்று கூறுதல் சம்பவியாது.

## கசஅ—கருச. ஆத்மக்யாதியின் நிரூபமும் கண்டனமும்

### கசஅ. ஆந்தரபதார்த்தங்களை அங்கீகரிக்கும் ஆத்மக்யாதிவாதியின் அபிப்பிராயம்.

அங்ஙனமே ஆதமகயாதி வாதமும் அசஙகதமாம். ஏனெனின் விஞ்ஞானவாதியின் மததநில் ஆத்மக்யாதி யுளது. க்ஷணிக விஞ்ஞானததினை விஞ்ஞானவாதி ஆத்மா வென்பர். அவர் மததநில பாகியரஜதமில்லை. ஆனல் ஆந்தரவிஞ்ஞான வடிவ ஆத்மாவிருக்கின்றது. அதன் தர்மம் இரஜதமாம. தோஷபலத்தால் வெளியிற் றோற்றுகின்றது. சூநியவாதியின் மதமின்றி ஆநதரபதார்த்தத்தின்சத்தையில் சுகதருடையசிஷ்யாகள் எவருக்கும

விவாத மில்லை. புறப்பதார்த்தத்தினையோ ஒருவர் அங்கீகரித்திருக்கின்றனர்; ஒருவர் அங்கீகரிக்கவில்லை. ஆதலால் புறப்பதார்த்தின் சத்தையிலோ அவர்களுக்கு விவாதமுண்டு. சூந்யவாதியின் ஓர் நாஸ்திகனும் ஆந்தர (உள்) விஞ்ஞானத்தின் நிஷேதத்தினைச் செய்கிறதில்லை. ஆதலால உள் இரஜதத்தின் விஞ்ஞான வடிவ ஆத்மா அதிஷ்டானம். அதன் தாமமாகிய இரஜதம உள்ளிருப்பதாம். தோஷவலியால் புறத்ததுபோலத் தோற்றுகின்றது. ஞானத்தினல் இரஜதத்தின் பாதம சொரூபமாக உண்டாகிறதில்லை. ஆனல் இரஜதத்தினது புறத்திருத்தற்றன்மையின் பாத முண்டாகின்றது. அநிர்வசநீயக்கியாதி வாதத்தில் இரஜத தாமியின பாதமும், இது வெளுந தன்மை வடிவ பாகிய விருத்தியின் பாதமும அங்கீகரிக்கப்படுகின்றன. ஆத்மக்யாதி மதத்தில இரஜதத்தின் பாதமோ அங்கீகரிக்கப்படுகிறதில்லை. ஏனெனின் சூந்யவாதிகரு வேறான சகல சௌகதர்கள (சுகதர்வழி வந்தோர்) மதத்திலும பதார்த்தங்களின் ஆந்தர சத்தையில விவாதமில்லை. ஆதலால் சொரூபமாக இரஜதத்தின் பாதம அங்கீகரிக்கப்படுகிறதில்லை. கேவலம் பாகியத்தன்மை வடிவ இதந்தையின் பாதம அங்கீகரிக்கப்படுகின்றது. ஆதலால் அநிர்வசநீய வாதம அங்கீகரிக்கின், தர்ம தாமிகளின் பாதம கற்பித்தல் கௌரவமாம். 'ஆத்மக்யாதியை 'அங்கீகரிக்கின் தாமியின் பாதமின்றி இதந்தைவடிவ தாமமாத்திரத்தின் பாதம கற்பித்தலில் இலாகவமாம. இது ஆத்மக்யாதி வாதியின் அபிப்பிராயம்.' இம்மதத்தில் இரஜதம ஆந்தர சத்தியமாம, அது வெளி தேசத்தில தோற்றுதல் பிரமமாம. ஆதலால இரஜத ஞானத்தில் இரஜதகோசரத்தன்மை அம்சம பிரமமன்று. ஆனல் இரஜதத்தின் பாகியதேசத திருக்குந்தன்மை புணாசசி அம்சத்தில பிரமம் உண்டு.

## ௧௪௩. ஆந்தர பதார்த்தத்தை அங்கீகரிக்கும் ஆத்மக்யாதி வாதியினது மதத்தின் கண்டனம்.

இம்மதமும் நலமுடையதன்று:— இரஜதம உள்ளிருப்பதாமென்னும அநுபவம ஒருவருக்கும உண்டாகிறதில்லை. பிரம ஸ்தலத்திலேனும யதார்த்த ஸ்தலத்திலேனும் இரஜத முதலியவற்றின் ஆந்தரத்தன்மை எப்பிரமாணத்தாலும் பெறப்படுவதில்லை, சுக

முதலியன ஆந்தரமும், இரஜதமுதலியன பாகியமுமா மென்னும் அநுபவம எல்லோருக்கு முண்டாகின்றது. இரஜதத்தை ஆந்தர மெனக்கொள்ளின் அநுபவத்திற்கு விரோதமாம. ஆந்தரத்தன் மையைச சாதிக்கும பிரமாண யுக்திகளுமிலலை. ஆதலால் ஆந்தர இரஜதத்திற்குப் பாகியப் பிரதீதியை அங்கீகரித்தல் அசங்கத மாம.

## ௧௫௦. சௌகதர்களது இரண்டு பேதங்களில் பாகிய பதார்த்தவாதிகளது ஆத்மக்கி யாதியின் அநுவாதம்.

சௌகதர்களில் இரண்டு பேதமுண்டு — ஒன்றே விஞ்ஞான வாதம்; மற்றையது பாகியவாதம. பாகியவாதத்திலும் இரண்டுபேத முண்டு. ஒன்றே பாகிய பதார்த்தம அநுமேயமாம; பிரத்தியக்ஷ மன்று; ஞானத்தின் பிரத்தியக்ஷமுண்டாகின்றது; ஞானத்தினல் ஞேயத்தின அநுமிதி உண்டாகினறது; இவ்வாறுல் பாகியபதார்த்தங்களுக்குப பரோக்ஷவாத மிருக்கின்றது. பாகிய பதார்த்தமும் பிரத்தியக்ஷ ஞானத்தின் விஷயமாம. இவ்வாறுல் பாகிய பதார்த்தங்களுக்கு அபரோக்ஷ வாதமுண்டு; இவற்றில விஞ்ஞானவாதியின் மதத்திலோ வியாவகாரிக இரஜதமும் பாகியமன்று. பாகிய பதார்த்தவாதியின் மதத்தில யதார்த்த ஞானத்தின் விஷயமாகிய இரஜதமோ பாகியமாம. ஆதலால் முற்கூறிய அநுபவத்திற்கு விரோதமிலலை. பிரமஸ்தலத்தில பாகிய இரஜதத்தை அங்கீகரித்தற்குப பிரயோஜனமின்று. ஏனெனின் கடகமுதலியவற்றின் சித்தியோ அவ்விரஜதத்தால் உண்டாகிறதில்லை; கேவலம பிரதீதிமாத்திரமாகின்றது. விஷயமின்றிப பிரதீதி உண்டாகாதாகலின், பிரமப் பிரதீதிக்கு விஷயத்தோடு கூடியதன்மை சித்தித்தலே அவ்விரஜதத்தின் பயனும. அதனை ஆந்தரமாகவே அங்கீகரிக்கினும, பிரமப்பிரதீதி விஷயத்தோடு கூடியதாய் விடுகின்றது. பாகியமெனக்கொண்டு பிரதீதிக்கு விஷயத்தோடுகூடியதன்மை சித்திக்கச் செய்யின், அவர் மதத்தில் முற்கூறியபடி தர்ம தர்மிகளுக்குப் பாதம் அங்கீகரித்தலால் கௌரவமிருக்கின்றது. ஆந்தரரஜதத்திற்குத் தோஷபலத்தால் வெளிப் பிரதீதியை அங்கீகரிக்கின், கேவலம் இதந்தையின் பாதம அங்கீகரித்தலால லாகவ முண்டாகின்றது. யதார்த்தஞானத்தின் விஷயமாகிய இரஜதம முன்னிருக்குமிடத்

தில் உளதாகின்றது. பிரமஞானத்தின் விஷயமாகிய இரஜதமும் முனனிருக்குமிடத்தில் உளதாயின், யதார்த்தஞானத்திற்கும் பிரம ஞானத்திற்கும் விலக்ஷணத்தன்மை உண்டாகாது. ஆத்மக்கியாதி மதத்திலோ யதார்த்தஞானத்தின் விஷயமாகிய இரஜதமும் முன் னிருக்குமிடத்தி லிருக்கின்றது. பிரமஞானததின் விஷயமாகிய இர ஜதம் ஆந்தரமாம. ஆதலால் பாகியத்தன்மை ஆநதரத் தன்மை வடிவ விஷயத்தின் விலக்ஷணத்தன்மையினுல் யதார்த்தத்தன்மை அயதார்த்தத்தன்மைப்பேதம் ஞானத்திற்குண்டாகின்றது. பாகிய தேசத்தில் பிரமத்தினது விஷயத்தின் உற்பத்தி அங்கீகரிக்கின், சுத்திதேசத்தில் உற்பத்தியாகிய இரஜதத்தின் பிரதீதி எல்லோரு க்கும் உண்டாதல் வேண்டும. ஒரு அதிஷ்டானத்தில் பத்துப்புரு ஷாகளுக்கு வேறு வேறு பதாாததங்களின் பிரமம உண்டாயின், ஆண்டு ஒவ்வொரு புருஷனுக்கும் எல்லாப் பதாாத்தங்களின் பிர தீதியும் உண்டாதல்வேண்டும். ஆத்மக்கியாதி மதத்திலோ எவனு ள்ளே எப்பதார்த்தம் உறபத்தியாகின்றதோ, அவனுக்கு முன்னி ருக்குமிடததில் அபபதார்த்தம தோற்றுகின்றது. ஆதலால் அந் நியபுருஷனுக்கு அதனது தோறறத்தின் சங்கையே உண்டாகிற தில்லே. பிரமத்தின் விஷயத்திற்குப் பாகிய உற்பத்திஅங்கீகரிக்கின், அவர் மத்ததில் அநநிய புருஷாகளுக்குத் தோற்றுமையில் சமாதா னத்தைத் தேடுதலாகிய கிலேசமே பயனும. இவ்வாறு பாகிய பதார்த்தவாதி சௌகதமதததில் ஆதமக்கியாதியின் வார்த்தை சம்பவிக்கின்றது. வியாவகாரிக பதாாததமே அவாகள் மததததில் பாகியமாம். பிராதிபாஸிக ரஜதமுதலியன பாகியமன்று; கேவலம் ஆந்தரமேயாம.

## ௧௫௪. பாகிய பதார்த்தத்தை அங்கீகரிக்கும் ஆத்மக்கியாதி வாதியினது மதத்தின் கண்டனம்

அஙஙனமாயினும ஆதமக்கியாதி வாதம அசங்கதமேயாம். ஏனெனின் இரஜத முதலிய பதாாத்தம் சொப்பனமின்றி ஜாக்கிரத் தில ஆந்தரமென்பது அப்பிரசித்தமாம். பாகிய சுபாவத்திற்குப் பிரமஸ்தலத்தில் ஆநதரம கற்பித்தல் அப்பிரசித்த கற்பனையாகிய தோஷமாம். ஆநதரமாயின், "என்னிடத்து இரஜதம், யான் இரஜதம"

என்னும் உணர்ச்சி உண்டாதல்வேண்டும். "இது இரஜதம்" மென்பதாக இரஜதத்தின் பாகிய உணர்ச்சி உண்டாகின்றது.

இரஜதம் ஆந்தரமாய்ப் பாகியதேசத்தில் இல்லாதிருக்கினும், தோஷமகாத்மியத்தால் ஆந்தர பதார்த்தத்தின் பிரதீதி பாகியத்தில் உண்டாகின்றது. பாகியத்தன்மை வடிவ இதந்தை (இதுவென்னுந்தன்மை) சுத்தியிலிருக்கின்றது. தோஷத்தின் மகாத்மியத்தால் சுத்தியின் இதந்தை இரஜதத்தில் தோற்றுகின்றது. எத்தோஷத்தினால் ஆந்தர ரஜதம் உற்பத்தியாயிருக்கின்றதோ, அத்தோஷத்தினாலேயே ஆந்தரத்தில் உற்பத்தியாகிய இரஜதத்தில் சுத்தியின் இதந்தை உணர்ச்சி உண்டாகின்றது. இரஜதத்திற்குப் பாகிய தேசத்தில் உற்பத்தி அங்கீகரிக்கின், பாகியதேசத்திற் சத்திய ரஜதமே சம்பவியாது; அநிர்வசநீயம் மதிக்கப்படும். அவ்வநிர்வசநீய வஸ்து உலகத்தில் அப்பிரசித்தமாம். ஆதலால் அப்பிரசித்த கற்பனை தோஷமாகும். ஆந்தரத்திலோ சத்திய ரஜதம் உற்பத்தியாகின்றது. ஆந்தரமாயிருத்தலின் அதன் சேடும் உபாதானமும் அசக்கியமாம். ஆதலால் சத்தியமாயினும் கடமுதலிய சித்தித்த வடிவப் பயனின் அபாவம் சம்பவிக்கின்றது. ஆதலால் அநிர்வசநீய வஸ்துவின் கற்பனை உண்டாகிறதில்லை. அநிர்வசநீயக் கியாதியினால் ஆத்மக்கியாதியினும் இவ்விலாகவமிருக்கின்றதென்று இவ்வாறு கூறின், அதுவும் அசங்கதமாம்:—சுத்தியின் இதந்தை ரஜதத்தில் தோற்றுகின்றதென்று கூறுதலால் அந்நியதாக்கியாதியின் அங்கீகார முண்டாகின்றது. இதந்தைத் தோற்றத்தில் அந்நியதாக்கியாதி அங்கீகரிக்கின், சுத்தியில இரஜதத்தன்மைத் தாமியின் பிரதீதியினையும் அந்நியதாக்கியாதியென்றே கொள்ளவேண்டும். ஆந்தரரஜதத்தின் உற்பத்தி அங்கீகரித்தல் நிஷ்பலமாம். எங்ஙனம்: இரஜதபதார்த்தம் சுத்தியினால் வியவகிதமாயிருக்கின்றது; அதனது தாமத்தின் பிரதீதி சுத்தியிற் சம்பவியாதெனக் கூறின், உன்னுடைய மதத்திலும் சுத்தியினால் வியவகித உள்ளிடத்தில இரஜதமிருக்கின்றது. அதனிடத்துச் சுத்தியின் தர்மமாகிய இதந்தையின் பிரதீதி சம்பவியாமை சமமாம்.

---

## ௧௫௨. ஆத்மக்கியாதி வாதத்தின் விலக்ஷணமான அத்வைத வாதத்தின் சித்தாந்தம்.

சித்தாந்தத்திலோ சுத்தியிலிருப்பதாகிய தாதான்மியத்தின் அநிர்வசநீயசம்பந்தம் இரஜதத்தில் உற்பத்தியாகின்றது. அதனை சம்சர்க்கார்த்தியாச மென்பர். அதிஷ்டானத்தின் சம்பந்தம் ஆரோபிதத்தில் யாண்டுத் தோற்றுகின்றதோ, ஆண்டு சகலஅதிஷ்டானத்தின் சம்சர்க்காத்தியாசமு முண்டாகின்றது. சம்சர்க்காத்தியாசமின்றி அந்நிய தாமத்தின் பிரதீதி அந்நியத்தில் உண்டாகிறதில்லை. இவ்வாற்றால் அத்தியாசமின்றிச் சுத்தியிலிருக்கும் இதந்தையின் பிரதீதி ஆந்தர இரஜதத்திற் சம்பவியாமையால், ஆத்மக்கியாதி வாதம் அசங்கதமாம். அநிர்வசநீயவஸ்துவின் அப்பிரசித்த கற்பனையாகிய தோஷம் சொல்லப்பட்டது. அதுவும் அஞ்ஞானத்தாற் சொல்லப்பட்டதாம். ஏனெனின்,

அத்வைத வாதத்தின் முக்கிய சித்தாந்தம் இதுவாம்:—சேதனம் சத்தியம்; அதற்கு வேறாகிய யாவும் மித்தையாம். அநிர்வசநீயத்தினை மித்தையென்பர். ஆதலால் சேதனத்திற்குப் பின்னமான பதார்த்தத்தினைச் சத்தியமென்று கூறுதலிலேயே அப்பிரசித்த கற்பனை இருக்கின்றது. சேதனத்திற்குப் பின்னமான பதார்த்தங்களில் அநிர்வசநீயத்தன்மையோ அதிப்பிரசித்தமாம். யுக்தியினால் விசாரிக்கின் அப்போது எவ்வநாத்மபதார்த்தங்களின் சொரூபமும் சித்தியாது; ஆனால் தோற்றுகின்றது. ஆதலால் சகல அநாத்மபதார்த்தங்களும் அநிர்வசநீயமாம். சித்தாந்தத்தில் அநாத்ம பதார்த்தம் எதுவும் சத்தியமன்று. கந்தருவ நகரத்தினைப்போல சகலப் பிரபஞ்சமும் திருஷ்டநஷ்ட சுபாவமாம். சொப்பனத்தினும் ஜாக்கிர பதார்த்தங்களில் சிறிதும் விலக்ஷணத்தன்மையில்லை. சுத்தி ரஜதம் பிராதிபாஸிகமாம். காந்தை (ஸ்திரீ)யின் கை முதலியவற்றிலுள்ள இரஜதம் வியாவகாரிகமாம். இவ்வாற்றால் அநாத்ம பதார்த்தங்களில் மித்தியாத்தன்மை சத்தியத்தன்மையான விலக்ஷணத்துவம் ஒன்றற்கொன்று சொல்லப்பட்டிருக்கின்றது. அது ஸ்தூலபுத்தியுடையவர்களுக்கு அத்வைத போதத்தில் பிரவேசித்தற் பொருட்டு அருந்ததி நியாயத்தாற் சொல்லப்பட்டிருக்கின்றது. ஸ்தூல புத்தியுடைய புருஷனுக்கு முதலிலேயே முக்கிய சித்தாந்தத்தின் கிரமத்தைச் சொல்லுமிடத்து, அற்புதமான அர்த்தத்தைக்கேட்டு

அநாத்ம சத்தியத்தன்மைப் பாவனையுடைய புருஷன் சாஸ்திரத்தின் விமுகனாய்ப் புருஷார்த்தத்தினின்றும் பிரஷ்டனாய் விடுவான். இதன்பொருட்டே அநாத்ம பதார்த்தங்களுக்கு வியாவகாரிக பிராதிபாஸிக பேதத்தால் இருவகைச் சத்தை சொல்லப்பட்டது. சேதனத்திற்குப் பாரமார்த்திக சத்தை சொல்லப்பட்டது. பிரபஞ்சத்தின் சேதனத்தினும் நியூன (குறைந்த) சத்தை யுக்தியில் ஆரூடமாய், சகல அநாத்ம பதார்த்தங்களுக்கும் சொப்பன முதலிய திருஷ்டாந்தத்தால் பிராதிபாஸிகத் தன்மையை அறிந்து, நிஷேத வாக்கியத்தினால் சகல அநாத்மாக்களையும் சத்தாஸ்பூர்த்தி சூநியமே (சத்தையின் விளக்கமின்றியதே) என்று அறிந்துகொள்ள வேண்டும். இதனாற்றான் சத்தாபேதம் கூறப்பட்டது. அநாத்ம பதார்த்தங்களுக்கு ஒன்றற்கொன்று சத்தையின் வேறுபாட்டில் அதனைச் சாஸ்திரத்திற்குத் தாற்பரிய மில்லை. ஆதலால் அத்வைத வாதிக்கு அநிர்வசநீய பதார்த்தம் அப்பிரசித்தமா மென்று கூறுதல் விருத்தமாம்; வேறு வகையான சம்பவமில்லை. ஆகலால் இலாகவ கௌரவம் கூறுதல் முற்றும் அசம்பவமாம். அநிர்வசநீயக்கியாதி யின்றி வேறு விதமாகவும் சம்பவிக்கின், கௌரவ தோஷத்தைக் கண்டு இப்பக்ஷத்தின் நியமகம் சம்பவிக்கும். முற்கூறிய கிரமமாக சத்கியாதிமுதலிய எந்தப் பக்ஷமும் சம்பவியாது. ஆதலால் கௌரவ இலாகவ விசாரமே பயனின்றியதாம்.

## கருரு. சித்தாந்தத்திற்கூறிய கௌரவ தோஷத்தின் பரிகார பூர்வகமாக இருவகை விஞ்ஞான வாதத்தின் அசம்பவம்.

ஆத்மக்கியாதியின் நிரூபணத்தின் ஆரம்பத்தில், "பாகிய ரஜத உற்பத்தி அங்கீகரிக்கின் இரஜத தாமியும் இதந்தைத் தருமமாகிய இவ்விரண்டற்கும் பாதத்தை அங்கீகரித்தலில் கௌரவமுண்டு. ஆத்மக்கியாதியை அங்கீகரிக்கின் இதந்தை மாத்திரத்திற்குப் பாதமுண்டாகுதலால் தாமியின் பாதத்தை அங்கீகரியாமையில் இலாகவமுண்டென்று கூறி இருக்கின்றது.

இக்கூற்றும் நலமுடையதன்று. ஏனெனின், சுத்தியின் ஞானமுண்டாக "மித்தையாகிய இரஜதம் எனக்குத் தோற்றியது" என்றிவ்வாறு இரஜதத்தின் பாதம் எல்லோருக்கும் அநுபவசித்த

மாயுளது. ஆத்மக்யாதியின்படி இரஜதத்தில் மித்தையாகிய பாகியத் தன்மைத் தோற்றமுண்டாய் இவ்வாறு பாத முண்டாதல் வேண்டும். ஆதலால் தாமியினது பாதத்தை இலாகவபலத்தால் கெடுக்கின், பாக முதலிய பயனைச் சாதிக்கும் வியாபார சமூகத்தில் ஒரு வியாபாரத்தைச் செய்து இலாகவபலத்தால் அதிக வியாபாரத்தை விடுதல் வேண்டும். பிரமமுடைய புருஷனுக்கு ஆப்தன் உபதேசஞ் செய்யின், அப்போது "இது இரஜத மன்று; இது சுத்தியா"மென்றிவ்வாறு இரஜதத்தினைச சொரூபமாக நிஷேதஞ் செய்கின்றான். ஆத்மக்கியாதியின்படி "ஈண்டு இரஜத மில்லை" ஆனால் "ஆத்மாவினிடத்தில் இரஜதமிருக்கின்றது" என்றிவ்வாறு இரஜதத்தினது தேசமாத்திரத்தின் நிஷேதஞ் செய்தல்வேண்டும். ஆதலால் ஆத்மாவினிடத்து உற்பத்தியானதற்குப் பாகியதேசத்திற கியாதி யிருக்கின்றது. இவ்வாத்தத்தில் தாற்பரியத்தினால் பாகிய பதார்த்தவாதி சௌகதரது ஆத்மக்கியாதி வாதம் அசங்கதமாம். விஞ்ஞானத்திற்கு வேறாக ஓர் பாகிய பதார்த்தமும் ஆந்தர பதார்த்தமு மில்லை. ஆனால் விஞ்ஞான வடிவ ஆத்மாவின் ஆகாரம் சகல பதார்த்தங்களுமாம். இவ்வாற்றால் விஞ்ஞான வாதிக்கு விஞ்ஞான வடிவ ஆத்மாவின் இரஜத வடிவமான கியாதி இருக்கின்றது என்னும் தாற்பரியத்தினாலும் ஆத்மக்கியாதி வாதம அசங்கதமாம். விஞ்ஞானத்திற்கு வேறாக இரஜத மிருக்கின்றது. அது ஞானத்திற்கு விஷயமாம். அதனை விஞ்ஞானவடிவ ஆத்மாவிற்கு அபின்னமாகக் கூறுதல் சம்பவியாது. விஞ்ஞான வாதியின் மதத்தில் சகல பதார்த்தங்களும் க்ஷணிகவிஞ்ஞான வடிவமாம். அதனிடத்துப் பிரத்தியபிஞ்ஞையசம்பவமுதலிய அநேக தூஷணங்கள் இருக்கின்றன. ஆதலால் ஆத்மக்யாதி சம்பவியாது.

## ௧௫௪-௧௬௧. அந்நியதாக்கியாதியின் கிரமமும் கண்டனமும்.

### ௧௫௪. அந்நியதாக்கியாதிவாதியின் தாற்பரியம்.

அந்நியதாக்கியாதி வாதமும் அசங்கதமாம். இது அந்நியதாக்கியாதி வாதியின் தாற்பரியமாம்:—எந்தப் புருஷனுக்குச் சத்திய பதார்த்தத்தின் அநுபவ ஜந்நிய சமஸ்காரம் இருக்கின்றதோ, அவனது தோஷத்தோடு கூடிய நேத்திரத்திற்கு முன் கண்ட சமான பதார்த்தத்தோடு சம்பந்த முண்டாயின், ஆண்டு

எதிரிலுள்ள சமான பதார்த்தத்தின் சாமாநிய ஞானத்தால்முன் கண்டதின் ஸ்மிருதி உண்டாகின்றது. அல்லது ஸ்மிருதி உண்டாகிறதில்லை; சமானமானதின் உணர்ச்சியால் சம்ஸ்காரம் உற்பூதமாகின்றது. எந்தப்பதார்த்தத்தின் ஸமிருதி உண்டாகின்றதோ, அல்லது எதன் உற்பூதசமஸ்கார முண்டாகின்றதோ, அப்பதார்த்தத்தின் தர்மம் எதிரிலுள்ள பதார்த்தத்தில் தோற்றுகின்றது. எங்ஙனம: சத்தியஇரஜதத்தின் அநுபவஜநிய சம்ஸ்காரத்தோடுகூடிய புருஷனுக்கு இரஜத சமானமான சுத்தியோடு தோஷத்தோடு கூடிய நேத்திரத்திற்குச் சம்பந்தமுண்டாயின் இரஜதத்தின் ஸமிருதி உண்டாகின்றது. அதனை ஸமரிக்கவே இரஜதத்தின் இரஜதத்தன்மைத் தர்மம் சுத்தியிற் காண்கின்றது. அல்லது நேத்திரததின் சம்பந்தமுண்டாய் இரஜதப் பிரமததில் விலம்பம்உண்டாகிறதில்லை. ஆதலால் நேத்திர சம்பந்தத்திற்கும் இரஜதத்தின் பிரததியக்ஷப் பிரமத்திற்கும் இடையில் இரஜதத்தின் ஸமிருதி உண்டாகிறதில்லை. ஆனுல் இரஜதாநுபவத்தின் சம்ஸ்காரம உற்பூதமாக, ஸமிருதியின் வியவதான மின்றி விரைவாகவே சுத்தியில் இரஜதத்தன்மைத் தருமத்தின் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. ஸ்மிருதி ஸ்தலத்தில் எங்ஙனம் முன் கண்டதற்கொப்பானதின் ஞானத்தினுல் சம்ஸகாரத்தின் உற்போத முண்டாகின்றதோ, அங்ஙனமே பிரம ஸதலத்தில் முன் கண்டதற்குச் சமானமான பதார்த்தத்தோடு இந்திரியத்தின் சம்பந்த முண்டாகவே, சம்ஸ்காரத்தின் உற்போத முண்டாய்ச சம்ஸ்கார கோசர தர்மத்தின் ஞானம் முன்னிருப்பதில் உண்டாகின்றது. இதனை அந்நியதாக்கியாதி யென்பர். அந்நியவடிவமாகத் தோற்றுதலை அந்நியதாக்கியாதி யென்பர். சுத்தியாகிய பதார்த்தத்தில் சுத்தித்தன்மைத் தாமமிருக்கின்றது; இரஜதத்தன்மை இல்லை. சுத்தியின் ஞானம் இரஜதததன்மை வடிவத்தாலுண்டாகின்றது. ஆதலால் அந்நிய வடிவமாகப் பிரதீதி இருக்கின்றது.

## கருரு. விசாரசாகரத்தின்கண் கூறிய இருவகைக் கியாதி வாதத்தில் முதல் பிராசீன மதத்தின் கிரமும் கண்டனமும்.

விசாரசாகரத்தில் அந்நியதாக்கியாதியில் இரண்டு பேதங்கள் எழுதப்பட்டிருக்கின்றன. இரண்டாவது பிரகாரம் இதுவாம்:— இரஜதப்பிரம முண்டாகுங்கால், ஆண்டுக் காந்தையின் காமுதலிய

வற்றிலுள்ள இரஜதத்தோடு நேத்திரத்தின் சம்பந்த முண்டாய் அதன் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. ஆதலால் காந்தையின் கரத்தில் அல்லது கடையிலுள்ள இரஜதத்தின் முன்னிருக்குமிடத்துப் பிரதீதி அந்நியதாக்கியாதியாம். இம்மதத்தில தர்மதாமி அம்சத்திலோ இரஜதத்தின் ஞானம யதாாத்தமாம. ஆனால் தேச அம்சத்தில் வேறுவகை ஞான முண்டு. கடை முதலியவற்றின இரஜதம மறைவா யிருக்கின்றது. அதனோடு நேத்திரத்தின் சம்பந்தம சம்பவியாது. என்றாலும் தோஷத்தோடு கூடிய நேத்திரத்திற்கு விய வகித இரஜதத்தோடு சம்பந்தமுண்டாய் ஞானமுண்டாகின்றது. இது தோஷத்தின் மகாத்மியமாம். இத்தன்மை அந்நியதாக்கியாதி இப்போதிருப்பனவாகிய நியாய முதலிய கிரந்தங்களில காணப்பட வில்லை. என்றாலும இவ்வகையான அந்நியதாக்கியாதியின் கண்டனம அநேக நூலகளிலிருக்கின்றது.

இதில்இத்தோஷமிருக்கின்றது:—தேசாந்தரத்திலுள்ள இரஜதத்தோடு நேத்திரத்திற்குச சம்பந்தமுண்டாயின், கடையில இரஜதத்தின் சமீபத்தில் வைக்கப்பட்ட பிற பதாாத்தங்களின் பிரத்தியக்ஷமு முண்டாதல் வேண்டும. காந்தையின் கரத்திலுள்ள இரஜதத்தின் பிரத்தியக்ஷ முண்டாகுங்கால காந்தையினது கரத்தின் பிரத்தியக்ஷமுமுண்டாதல வேண்டும. அன்றியும இங்ஙனம கூறின்:— அந்நியதாக்கியாதிக்குக் கேவலம இந்திரியத்தினால் உற்பத்தி உண்டாகிறதில்லை. ஆனால பூர்வாநுபவத்தினால உண்டாகிய சம்ஸ்காரத்தோடுகூடிய தோஷமுள்ள நேத்திரத்தால அந்நியதாக்கியாதி ஞானம உற்பத்தியாகின்றது. ஆதலால் உற்பூத சம்ஸ்காரம நேத்திரத்தின் சககாரியாம. இரஜதகோசர சம்ஸ்காரத்தோடுகூடிய நேத்திரத்தினால் இரஜதத்தின ஞானமே உண்டாகின்றது. அந்நியபதாாத்த கோசர சமஸ்காரமோ இருக்கின்றது; ஆனால் உற்பூதமன்று. இதனால் அந்நிய வஸ்துவின் ஞானமுண்டாகிறதில்லை. சம்ஸ்காரத்தின் உற்பூதத்தன்மையும அநுற்பூதத் தன்மையும காரியத்தினால் அநுமேயமாம; ஆதலால தோஷமில்லை. என்றாலும யாண்டுச சுத்தியில இரஜதப்பிரம முண்டாகின்றதோ, ஆண்டுச சுத்திக்குச சமானமாக ஆரோபித இரஜதத்தின் பரிமாணம தோற்றுகின்றது. இலகுவான சுத்தியில் இரஜதப் பிரமமுண்டாகுங் காலத்து ஆரோபிக்கப்பட்ட இரஜதத்தினும இலகுத்தன்மை தோற்றுகின்றது. மகத்தாகிய சுத்தியில்

இரஜதப்பிரமமுண்டாகுங்கால் ஆண்டு மகத்துப்பரிமாணமுடைய இரஜதம் தோற்றுகின்றது. இவ்வாற்றால் ஆரோபிக்கப்பட்ட பதார்த்தத்தில் அதிஷ்டான பரிமாணத்தின் நியமமிருத்தலின், சுத்தி முதலியவற்றின் இரஜதத்தன்மை முதலிய தர்மத்தின் உணர்ச்சி உண்டாகின்றது. அந்நிய தேசத்திலுள்ள இரஜதத்தின் பிரதீதி உண்டாகுமாயின், ஆரோபிதத்தில் அதிஷ்டான பரிமாணத்தின் நியமம் வேண்டியதில்லை. சுத்தியினது இலகு பரிமாணமும் அங்ஙனமே மகத்பரிமாணமும் தோற்றுகின்றன. ஆதலால் தேசாந்தரத்தின் இரஜதத்தினது பிரதீதி இல்லை. இரஜத சமஸ்காரமுடையவர்களுக்கு அந்நியபதார்த்தத்தின் உணர்ச்சி சம்பவிக்கிறதில்லை யாயினும், எல்லா இடங்களிலும் உள்ள அநந்த இரஜதங்களின் உணர்ச்சி உண்டாதல் வேண்டும். இவ்வாறு அளவின்றிய தூஷணங்களால் விழுங்கப்பட்டதாம் இப்பக்ஷம். இதனாற்றான் தற்காலத்தைய நூல்களில் இப்பக்ஷம் காணப்படுகிறதில்லை.

## ௧௫௬. முற்கூறிய அந்நியதாக்கியாதிவாதத்தின் கண்டனம்.

சுத்தியில் இரஜதத்தன்மைத் தர்மத்தின் பிரதீதி உண்டாகின்றதென்னும் அந்நியதாக்கியாதி வாதத்தை அநேக நூலாசிரியர்களாகிய நையாயிகர் எழுதியிருக்கின்றனர். என்றாலும் அவர்கள் எழுத்தும் சுருதி ஸ்மிருதிகளுக்கு விருத்தமாம். ஆதலால் விசுவசிக்கத்தக்க தன்று:— சொப்பன ஞானத்தினை நையாயிகர் மானஸவிபரியய மென்பர். அந்நியதாக்கியாதியினை விபரியய மென்பர். சுருதியில் சொப்பன பதார்த்தத்தின் உற்பத்தி கூறப்பட்டிருக்கின்றது. "ந தத்ர ரதா ந ரதயோகா ந பந்தாநோ பவந்த்யத ரதாந் ரதயோகாந் பத: ஸ்ருஜதே-ஆண்டு இரதமுமில்லை. இரதத்திற் பூட்டியனவுமில்லை. வழியுமில்லை. இனி இரதங்களும் இரதத்திற்பூட்டியனவும் வழிகளும் ஆகக்கடவனவென்று சிருஷ்டிக்கின்றார்" என்பது (பிருகதாரணிய) சுருதி. அது வியாவகாரிக இரதம், குதிரை, வழியென்பவற்றைச் சொப்பனத்தில் நிஷேதித்து, அநிர்வசநீய ரதம் குதிரை வழி என்பவற்றின் உற்பத்தி கூறியிருக்கின்றது. அங்ஙனமே "ஸந்த்யே ஸ்ருஷ்டிராஹ ஹி-சந்தியிற் (சொப்பனத்திற்) சிருஷ்டியை (சுருதி) கூறுகின்றது." என்பது வியாசசூத்திரம். அதுவும் சொப்பனத்தின் அநிர்வசநீய பதார்த்தங்

களின் சிருஷ்டியைக் கூறி யிருக்கின்றது. வியாசரால் செய்யப் பட்ட சூத்திரமும் ஸ்மிருதி வடிவமாம்.

இவ்வாற்றால் நையாயிகர்களது அந்நியதாக்கியாதி வாதம் சுருதி ஸ்மிருதி விருத்தமாம். நேத்திரத்திலுல வியவகித இரஜதத் தன்மையின் ஞானம் சுத்தியிற் சம்பவியாது. சுத்திக்குச் சமீபத் தில் இரஜதமிருக்குமாயின், இரண்டற்கும் சையோக முண்டாய் இரஜதத்திலுள்ள இரஜதத்தன்மையின் நேத்திர ஜந்நியம் பிரம ஞானம் சுத்தியிற் சம்பவிக்கின்றது. யாண்டுச் சுத்தியின் சமீ பத்தில் இரஜத மில்லையோ, ஆண்டுச் சுத்தியில் இரஜதத்தன்மைப் பிரமம் நேத்திர ஜந்நியமென்பது சம்பவியாது. ஏனெனின் விசே ஷண விசேஷியங்களோடு இந்திரியத்தின சம்பந்தமுண்டாக இந்தி ரியஜந்நிய விசிஷ்டஞான முண்டாகின்றது. யாண்டுச் சுத்திய ரஜத மிருக்கின்றதோ, ஆண்டு விசேஷணம் இரஜதத்தன்மையாம்; விசே ஷியம் இரஜதவியக்தியாம். இரஜதவியக்தியோடு நேத்திரத்தின் சையோக சம்பந்தமுண்டாகின்றது. இரஜதத்தன்மையோடு நேத் திரத்தின் சையுக்த சமவாய சம்பந்தமுண்டாகின்றது. ஆதலால் "இது இரஜத" மென்பதாக இரஜதத்தன்மை விசிஷ்டத்தின் நேத் திர ஜந்நிய ஞானமுண்டாகின்றது. யாண்டுச் சுத்தியில் இரஜதத் தன்மை விசிஷ்டப்பிரம முண்டாகின்றதோ, ஆண்டு விசேஷியமா கிய சுத்தியினேடு நேத்திரத்தின் சையோக சம்பந்த மிருக்கின்றது. இரஜதத்தன்மை விசேஷணத்தோடு சையுக்த சமவாய மில்லை. இர ஜதவியக்தியோடு சையோக முண்டாயின், இரஜதத்தன்மையோடு சையுத்த சமவாயமுண்டாகும். இரஜதவியக்தியோடு சையோகத் தின் அபாவத்தால் இரஜதத்தன்மையோடு சையுத்த சமவாயத் தின் அபாவமிருக்கின்றது. ஆதலால இரஜத விசிஷ்ட சுத்தியின் ஞானம் சம்பவிக்கிறதில்லை.

## ௧௫௭. பிரத்தியக்ஷஞானத்திற்கேதுவாகிய அறுவகை இலௌகிகமும் மூவகை அலௌகிகமு மாகிய இரண்டு சம்பந்தங்கள்.

நையாயிகர் கூறுவதாவது:—பிரத்தியக்ஷ ஞானத்திற்கு ஏது வாகிய விஷய இந்திரியங்களின் சம்பந்தம் இருவகையாம். ஒன்று இலௌகிகசம்பந்தம்; மற்றையது அலௌகிகசம்பந்தம். சையோக முதலிய அறுவகைச் சம்பந்தங்களும் இலௌகிக மெனப்படுகின்றன.

சாமாந்யலக்ஷணம், ஞானலக்ஷணம், யோக ஜந்ய தாமலக்ஷணம் என மூவகை அலௌகிக சம்பந்த முண்டு. இவ்வலௌகிக சம்பந்தத்தின் உதாரணத்தையும் சொரூபத்தையும் பிரத்தியக்ஷ நிரூபணத்திற் கூறி யிருக்கின்றோம்.

அலௌகிக சம்பந்தத்தின் உதாரணமும் சொரூபமும் இவ்வாறாம்:—யாண்டு ஒரு கடத்தோடு நேத்திரத்தின் சையோக முண்டாகின்றதோ, ஆண்டு ஒரே கடத்தின் சாக்ஷாத்காரம் நேத்திரத்தினால் உண்டாகிறதில்லை. கடத்தன்மையின் ஆசிரயமாகிய சகல கடங்களின் சாக்ஷாத்காரமும் நேத்திரத்தினால் உண்டாகின்றது. ஆனால் நவீன மதத்தில் நேத்திரசையுக்த கடத்தின் சாக்ஷாத்காரமும், தேசாந்தரங்களிலுள்ள கடங்களின் சாக்ஷாத்காரமும் ஒரே கணத்தி லுண்டாகின்றன. பிராசீன மதத்தில் நேத்திரசையுக்த கடத்தின் சாக்ஷாத்காரம் முதற்கணத்தி லுண்டாகின்றது. ஆனால் நவீன மதத்தில் நேத்திர சையுக்தகடத்தின் சாக்ஷாத்காரமும், தேசாந்தரத்தின்கண்ணுள்ள கடத்தின் சாக்ஷாத்காரமும் இரண்டாவது கணத்தி லுண்டாகின்றன. இரண்டு சாக்ஷாத்காரமும் நேத்திர ஜந்யமாம்; ஆனால் சம்பந்தம் பின்னமாம். இவை இரண்டு மதங்களாம். இவற்றுள் பிராசீனக் கிரமம் எளிதாம். ஆதலால் பிராசீனக் கிரமத்தினையே கூறுவாம்:—முன்னிடத்திருக்கும் கடத்தோடு நேத்திரத்தின் சையோக முண்டாய், "இது கடம்" என்பதாக ஒரு கடத்தின் சாக்ஷாத்கார முண்டாகின்றது. இச்சாக்ஷாத்காரத்திற் கேது சையோகசம்பந்தமாம். ஆதலால் இச்சாக்ஷாத்காரம் லௌகிக சம்பந்த ஜந்யமாம். இச்சாக்ஷாத்காரத்திற்கு விஷயம் கடமும் கடத்தன்மையுமாம். அவற்றுள் வியக்தி விசேஷியமும், கடத்தன்மை பிரகாரமுமாம். விசேஷணத்தைப் பிரகாரமென்பர். இந்த ஞானத்திற் பிரகாரமாகிய கடத்தன்மை எதுவோ அது எல்லாக் கடங்களிலுமிருக்கின்றது. ஆதலால் முன்னிடத்துள்ள கடத்தின் ஞான காலத்தில் நேத்திரேந்திரியத்தின்கண் ஜந்யஞானப் பிரகாரவடிவ கடத்தன்மையுடைமைச் சம்பந்தம் சகல கடங்களிலும் இருக்கின்றது. இச்சம்பந்தத்தால் நேத்திரேந்திரிய ஜந்ய சகல கடங்களின் சாக்ஷாத்காரமும் இரண்டாவது கணத்தில் உண்டாகின்றது. இச்சாக்ஷாத்காரத்தின் விஷயம் முன்னுள்ள கடமுமாம். ஏனெனின், கடத்தன்மையுடைமை

எங்ஙனம் அந்நிய கடங்களி லிருக்கின்றதோ, அங்ஙனமே முன்னிருக்கும் கடத்திலு மிருக்கின்றது. ஆதலால் முன்னிருக்கும் கடத்தைக் கிரகிப்பன இரண்டுஞானங்களாகின்றன. முதல் க்ஷணத்தில் இலௌகிக ஞானமுண்டாகின்றது. இரண்டாவது க்ஷணத்தில் அலௌகிக ஞான முண்டாகின்றது. கூறிய இச்சம்பந்தம் அலௌகிகமாம். அலௌகிக சம்பந்த ஜந்நிய ஞானமும் அலௌகிகமாம். இந்திரியத்திற்குச் சகல கடங்களினோடும் சுவ ஜந்நிய ஞான விசேஷண வடிவ கடத்தன்மையுடைமைச் சம்பந்தமிருக்கின்றது. யாண்டு நேத்திர ஜந்நிய சாக்ஷாத்காரம் ஒரு கடத்திற்கு உண்டாகின்றதோ, ஆண்டு சுவ வென்னுஞ் சொல் நேத்திரத்தை அறிவிப்பதாம். யாண்டுத் துவக்கினால் ஒரு கடத்தின் ஞான முண்டாகின்றதோ, ஆண்டுச் சுவ வென்னுஞ் சொல் துவக்கை அறிவிப்பதாம். இவ்வாறு எவ்விந்திரியத்தினால் ஒரு வியக்தியின் ஞான முண்டாகின்றதோ, அவ்விந்திரிய ஜந்நியமாகவே சகல கடங்களின் அலௌகிக சாக்ஷாத்காரமு முண்டாகின்றது நேத்திரேந்திரிய ஜந்நிய ஒரு கடத்தின் இலௌகிக சாக்ஷாத்கார முண்டாயின், துவக்கிந்திரியஜந்நிய சகலகடங்களின் அலௌகிக சாக்ஷாத்காரமு முண்டாகிறதில்லை. நேத்திர ஜந்நிய ஒரு கடத்தின் ஞான முண்டாகவே சுவ என்பது நேத்திரம்; அதனால் ஜந்நியமென்பது "இது கடம்" என்னும் ஞானம்; அதனிடத்துப் பிரகார (விசேஷண) வடிவமாகிய கடத்தன்மை யாதோ அதனையுடைமை அதாவது அதன் ஆதாரத்தன்மை சகல கடங்களிலு மிருக்கின்றது. இவ்வாறால் சகல கடங்களின் ஞானத்திற்கும் ஏது முற்கூறிய சம்பந்தமாம். அது ஒரு கட ஞான முண்டாயின், அப்போது நேத்திர ஜந்நிய ஞானத்தில் கடத்தன்மைவிசேஷணமுண்டாகின்றது. முன்னிருக்கும் 'கடத்தின்' இலௌகிக ஞானத்தால் முற்கூறிய சம்பந்தம் சம்பவியாது. ஆதலால் இலௌகிக ஞானம் முதற்கணத்தில் உண்டாகின்றது; அலௌகிகம் உத்தரக்ஷணத்தி லுண்டாகின்றது. இது பிராசீனக் கிரமம். நவீனக் கிரமத்தால் ஒரே ஞானம் சகல கடகோசரமாகின்றது. முன்னிருக்கும் கட அம்சத்தில் இலௌகிக முண்டாகின்றது. தேசாந்தரத்திலுள்ள கடாம்சத்தில் அலௌகிக முண்டாகின்றது. பிரசங்கத்தா லடையப்பட்ட ஒரு கிரமத்தைக் கூறினோம். விரிதலஞ்சி நவீனக் கிரமத்தைக் கூறவில்லை. இது சாமாந்யலக்ஷண சம்பந்தம். சாமாந்ய மென்பது ஜாதியும்

இலக்ஷணமென்பது சொரூபமுமாமாகலின் ஜாதிசொரூப சம்பந்தமாம். இதனால் இது பெறப்பட்டதாயிற்று:—நேத்திரஜந்ய ஞான விசேஷண வடிவ கடத்தன்மையுடைமையைக் கூறுதலால் கடத்தன்மையே சித்திக்கின்றது. ஆகலால் முற்கூறிய சம்பந்த சாமாந்ய சொரூபமாம். அல்லது கடத்தன்மை யதிகரணத்தினைக் கடத்தன்மை யுடைமை எனக் கூறினும் சாமாந்ய லக்ஷண சம்பந்தமே இருக்கின்றது. ஏனெனின் அநேக அதிகரணங்களில் அதிகரணத்தன்மைத் தர்மம் சாமாந்யமாம். இந்த ஸ்தானத்தில் அநேகங்களிலிருக்கும் சமான தர்மம் எதுவோ அது சாமாந்ய சப்தத்திற்குப் பொருளாம். கேவலம் ஜாதியே சாமாந்ய சப்தத்திற்குப் பொருளன்று. ஆதலால் அநேக கடங்களில் கடத்தன்மை அதிகரணத்தன்மையும் சமான தர்மமாய் இருத்தலின் சாமாந்யமெனப்படுகின்றது. இவ்வாறனால் ஒரு வியக்தியோடு இந்திரியத்திற்குச் சம்பந்தமுண்டாக, இந்திரிய சம்பந்தியாகிய வியக்தியின் சமான தர்மமுடைய இந்திரிய சம்பந்தியாகிய சகல வியக்தியோடும் இந்திரியத்தின் சாமாந்ய லக்ஷண அலௌகிக சம்பந்த முண்டாதலால், வியவஹித அவ்வியவஹித வஸ்துக்களின் இந்திரிய ஜந்ய அலௌகிக சாக்ஷாத்கார முண்டாகின்றது.

ஞான லக்ஷண சம்பந்தத்தின் உதாரணத்தோடு கூடிய சொரூபம் இதுவாம். யாண்டு இந்திரியயோக்கிய பதார்த்தத்தோடு இந்திரியத்தின் சம்பந்த முண்டாகின்றதோ, இந்திரிய சம்பந்தகாலத்தில் அவ்விந்திரிய அயோக்கியபதார்த்தத்தின் ஸ்மிருதிஞானமும் உண்டாகின்றதோ, ஆண்டு இந்திரியசம்பந்தியாகியபதார்த்தம், ஸ்மிருதிகோசர பதார்த்தம் என்பவற்றின் ஏகஞான முண்டாகின்றது. ஆண்டு எப்பதார்த்தத்தின் ஸ்மிருதி உண்டாகின்றதோ, அந்த அம்சத்தில் அந்தஞானம் அலௌகிகமாம். எந்த அம்சத்தினது இந்திரியசம்பந்த ஜந்யமாகின்றதோ அந்த அம்சத்தில் லௌகிக மிருக்கின்றது. எங்ஙனம்: சந்தனத்தோடு நேத்திரேந்திரியத்தின் சையோக முண்டாகுங்காலத்தில் சுகந்த தர்மத்தின் ஸ்மிருதி யுண்டாயின், அப்போது நேத்திரேந்திரிய ஜந்ய "சுகந்தமுடையது சந்தன" மென்னும் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. ஆண்டுச் சந்தனத்தன்மை விசிஷ்ட சந்தனமோ நேத்திரத்திற்கு யோக்கியமாம். சந்தனத்தின் தர்மம் சுகந்தமாம்; அதனோடு நேத்திர சையுக்த சமவாய சம்பந்தமுமிருக்கின்றது. என்றாலும் நேத்திர யோக்கியம் சுகந்த மன்று.

கிராணயோக்கியம் சுகந்தமாம். ஆதலால் நேத்திர சையுக்த சம வாய சம்பந்தத்தால் சுகந்த தாமத்தின் சாக்ஷாத் சாக்ஷாத்கார முண்டாகிறதில்லை. ஆனால் நேத்திர சையோகத்தால் சந்தன வியக்தியின் சாக்ஷாத் ஞானமும் நேத்திர சையுக்த சமவாயத்தால் சந்தனத்தன்மைச் சாக்ஷாத்ஞானமு முண்டாகின்றன. சந்தனத்தின் சுகந்த குணத்தால் நேத்திரத்தின் சையுக்த சமவாய சம்பந்தம் இருப்பதாயினும் பயனில்லாததாம். என்றாலும் நேத்திர சையோகம் இருக்கும்போதே, "சுகந்தமுடையதுசந்தனம்" என்பதாகச் சந்தனகோசர சாக்ஷாத் ஞானம் அநுபவசித்தமாம். ஆதலால் சந்தனத்தின்கண் உள்ள சுகந்த குணத்தோடு நேத்திரத்தின் சம்பந்தம் ஓர் சாக்ஷாத்காரத்திற்கு ஏதுவெனக்கொள்ளுதல் வேண்டும். ஆண்டு வேறு எச்சம்பந்தமும் நேத்திரத்திற்குச் சுகந்த குணத்தோடில்லை. நேத்திர சையுக்த சமவாய மிருக்கின்றது. அது கந்தஞானத்தை உண்டுபண்ணுவதன்று. எவனுக்குச் சந்தனத்தின் சுகந்தத்தன்மை கிராணத்தினால் அநுபவிக்கப்பட்டதாகின்றதோ, அவனுக்கே நேத்திரத்தினால் சந்தனத்தின் "சுகந்தமுடையது சந்தன"மென்னும் ஞான முண்டாகின்றது. எவனுக்குச் சந்தனத்தின் சுகந்தமுடைமை கிராணத்தினால் அநுபவிக்கப்பட்டதாகிறதில்லையோ, அவனுக்குச் சந்தனத்தினோடு நேத்திரத்தின் சையோக முண்டாகச் "சுகந்தமுடையது சந்தன" மென்னும் ஞான முண்டாகிறதில்லை. இவ்வாற்றால் பூர்வ அநுபவ ஜந்நிய சுகந்தத்தின் சம்ஸ்காரத்திற்குச் "சுகந்தமுடையது சந்தன" மென்னும் பிரத்தியக்ஷத்தினால் அந்வயவெதிரேக மிருக்கின்றது. ஆதலால் "சுகந்தமுடையது சந்தனம"என்னும் சாக்ஷாத் ஞானத்திற்குச் சுகந்தாநுபவஜந்நிய சம்ஸ்காரம் அல்லது சுகந்த ஸ்மிருதி ஏதுவாம். சுகந்த சம்ஸ்காரத்திற்கு அல்லது ஸ்மிருதிக்குச் சுகந்தப் பிரத்தியக்ஷத்தின் சுவதந்திர காரணத்தன்மையைக் கூறின், சுகந்தஅம்சத்தில் அந்த ஞானம் சாக்ஷாத்மாகாது. "சுகந்தமுடையது சந்தன"மென்னும் ஞானம் சுகந்தாம்சத்தினும் சந்தன சந்தனத் தன்மைகளைப்போலச் சாக்ஷாத் மென்பதே அநுபவசித்தமாம். ஆதலால் அந்த ஞானத்திற் கேதுவாகிய சம்ஸ்காரத்திற்காவது ஸ்மிருதிக்காவது நேத்திரத்தின் சம்பந்தம் அங்கீகரித்தல்வேண்டும். நேத்திரத்தின் சம்பந்தத்தினை அங்கீகரிக்கின், சுகந்தஞானமும் சம்ஸ்கார அல்லது ஸ்மிருதிவடிவ நேத்திரத்தின்

சம்பந்த ஜநநியமாம்; ஆதலால் சாக்ஷாத்ஷமாம். ஆனால் சம்ஸ்காரம் அல்லது ஸ்மிருதி நேத்திரத்தால் நிரூபிக்கப்பட்டதாமாயின் நேத்திரத்தின் சம்பந்தமுளதாம். எங்ஙனம் கடத்தால் நிரூபிக்கப்பட்ட சையோகம் கடத்தின் சம்பந்த மெனப்படுகின்றதோ, படத்தால் நிரூபிக்கப்பட்ட சையோகம் படத்தின தெனப்படுகின்றதோ, இவ்வாற்றால் சுகந்த கோசரஸ்மிருதியும் சம்ஸ்காரமும நேத்திரத்தால் நிரூபிக்கப்பட்டனவாமாயின், நேத்திரத்தின் சம்பந்தம சம்பவிக்கும்.' வேறுவகையாக நேத்திரத்தின் சம்பந்தம சுகந்தத்தின் ஸ்மிருதிக்காவது சுகந்தத்தின் சம்ஸ்காரத்திற்காவது கூறுதல சம்பவியாதாகலின், இவ்வாற்றால் நேத்திரத்தால் நிரூபிக்கப்பட்டனவாம. எப்போது சந்தனத்தின் சாக்ஷாத்கார முண்டாகிறதோ, அப்போது மனதிற்கும ஆத்மாவிற்கும் சம்பந்தமுண்டாய், மனதிற்கும் நேத்திரத்திற்கும சம்பந்தமுண்டாகின்றது. ஆத்ம சையுக்த மன சையுக்த நேத்திரத்திற்குச் சந்தனத்தோடு சையோக முண்டாகின்றது. இவ்வாற்றால் மன ஆத்மாக்களின் சையோகமும் மன நேத்திரங்களின் சையோகமும் சந்தன சாக்ஷாத்காரத்திற்கு ஏதுவாம. எக்காலத்தில ஆத்ம சையுக்த மனதிற்கு நேத்திரத்தோடு சையோகமுண்டாகின்றதோ, அக்காலத்தில் சுகந்தத்தின் ஸ்மிருதி அல்லது சுகந்தத்தின் சம்ஸ்காரம ஆத்மாவினிடத்துச் சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. அவற்றின் விஷயம சுகந்தமாம. ஆதலால் சுவசையுக்த மன சையுக்த ஆத்மசமவேத ஞானம், அல்லது சுவசையுக்த மனசையுக்த ஆத்ம சமவேத சம்ஸ்காரம சந்தனத்திற்குச் சுகந்தத்தி லிருக்கின்றது. ஏனெனின் சுவசப்தத்தாற் நேத்திரம் கொள்ளப்படுகிறது. அதனோடு சையுக்தம அதாவது சையோகமுடையது மனமாம; அதனோடு சையுக்தம் அதாவது சையோகமுடையது ஆத்மாவாம. அதனிடத்துச் சமவேதத்தி (சமவாயசம்பந்தத்தா லிருப்பத)ற்குச் சுகந்தத்தின் ஸ்மிருதி இருக்கின்றது. சுகந்தத்தின் சம்ஸ்காரமும சமவாய சம்பந்தத்தால் ஆத்மாவிலிருப்பதாம். ஆதலால நேத்திரசையுக்த மனசையுக்த ஆத்மசமவேத ஸ்மிருதி ஞானமும, நேத்திரசையுக்த மனசையுக்த ஆத்மசமவேத சம்ஸ்காரமுமாகிய இவ்விரண்டும் நேத்திரநிரூபிதமாம. நேத்திரத்தால் நிகழும் சொரூபமாகிய இது பரம்பரையாம். ஆதலால் நேத்திரத்தின்சம்பந்தமிருக்கின்றது. இந்தப் பரம்பரைச் சம்பந்தத்

திற்குப் பிரதியோகி நேத்திரமும், அநுயோகி சுகந்தமுமாம். எதனிடத்துச் சம்பந்தமிருக்குமோ அது சம்பந்தத்தின் அநுயோகியெனப்படுகின்றது. ஸ்மிருதிரூப அல்லது சமஸ்காரரூப முற்கூறிய பரம்பரையால் நேத்திரத்தின் சம்பந்தம் யாதோ அதன் விஷயம் சுகந்தமாம். ஆதலால் முற்கூறியபரம்பரத்திற்குச்சுகந்தம் அநுயோகியாம். ஞானத்தின் அதிகரணத்தன்மை விஷயத்தில் அநுபவ சித்தமாம். ஆதலால் ஆத்மாவைப்போல விஷயமும் ஞானத்திற்கு அதிகரணமென்றும், அநுயோகியென்றும் சொல்லப்படுகின்றது. எங்ஙனம்: "கடத்தில் ஞானம்" என்னும் வியவகார முண்டாகின்றது. ஆண்டுக் "கடவிருத்தி ஞானம்" என்பது கூறிய வாக்கியத்திற்குப் பொருளாம். இவ்வாற்றால் விஷயமும் ஆத்மாவினைப் போல ஞானத்திற்கு ஆதாரமா யிருத்தலால் அநுயோகியாம். ஆனால் சமவாய சம்பந்தத்தால் ஞானங்களுக் காதாரம் ஆத்மாவாம். விஷயத்தன்மைச் சம்பந்தத்தால் ஞானத்திற்கு ஆதாரம் சுகந்த முதலிய விஷயங்களாம். எது ஞானத்திற்கு ஆதாரமாகின்றதோ, அதுவே சமஸ்காரத்திற்கு ஆதாரமாகின்றது. ஏனெனின் பூர்வ அநுபவத்தால் சமஸ்காரம் உற்பத்தியாகின்றது. அநுபவத்திற்குச் சமான விஷயமுடைய பின் ஸ்மிருதி முதலிய வற்றினை உண்டாக்குகின்றது. ஆதலால் முன் அநுபவம், சமஸ்காரம், ஸ்மிருதி என்னும் மூன்றற்கும் ஆசிரயமாகிய விஷயம் சமானமாம். ஆதலால் சுகந்தகோசர சமஸ்காரமும் விஷயத்தன்மைச் சம்பந்தத்தால் சுகந்தத்தி லிருக்கின்றது. ஆதலால் நேத்திரப்பிரதியோகியினையுடைய சமஸ்காரத்திற்கு அநுயோகி சுகந்தமாம். இவ்வாற்றால் ஸ்மிருதி வடிவ அல்லது சமஸ்கார வடிவ சம்பந்தம் நேத்திரத்திற்குச் சுகந்தத்தோ டிருக்கிறது. சையோக சம்பந்தம் சந்தன வியக்தியினோ டிருக்கின்றது. சையுக்தசமவாயம் சந்தனத்தன்மையோ டிருக்கின்றது. ஆதலால் மூன்றனையும் விஷயஞ்செய்வது "சுகந்தமுடையது சந்தன"மென்னும் நேத்திரேந்திரிய சாக்ஷாத்காரமாம். "சுகந்தமுடையது சந்தனமா" மென்பது வாக்கியத்திற்குப் பொருள். நேத்திரத்தினால் சுகந்தம், சந்தனத்தன்மை, சந்தனம் என்பவற்றின் சாக்ஷாத்கார முண்டாகுமிடத்துச் சந்தனத் தன்மையோடு ஆண்டு இலௌகிக சம்பந்த மிருக்கின்றது. சையோகமுதலிய ஆறு சம்பந்தங்களை இலௌகிக சம்பந்த மென்பர். ஸ்மிருதியின் சமஸ்காரமும் இலௌகிகசம்பந்தத்திற்கு வேறாயிருத்தலின் அலௌகிக

மெனப்படும். யாண்டுச் சந்தனத்தோடு நேத்திரத்தின் சமபந்த காலததில் சுகநத ஸ்மிருதி அநுபவ சிததமாகின்றதோ, ஆண்டு ஸ்மிருதிவடிவ சமபநத மிருக்கின்றது. ஸ்மிருதியின் அநுபவ முண்டாகாவிடின், சமஸ்காரமே சமபநதமாம. இந்த அலௌ கிக சமபநதததினை ஞானலக்ஷண சம்பந்த மென்பர். ஸ்மிருதியி னிடத்தோ ஞான சப்ததநின் பிரயோகம பிரசிததமாகவே இருக் கின்றது. சமஸ்காரமும ஞான ஜநயமாய்ப் பின் ஞானததை உண்டுபண்ணுவ தாகின்றது. இதனால் ஞானத்தின் சமபநதமுடை யதா யிருததலால் ஞான மெனபபடுகின்றது.

அங்ஙனமே யோகிக்கு இநதிரிய சமபநதியின் சாக்ஷாத்கார ததினைப் போல இநதிரியததினால் வியவகிததததின சாக்ஷாதகாரமு முண்டாகினறது. ஆண்டு யோகாப்பியாசத்தினால் இநதிரியத்தில் விலக்ஷண சாமார்ததிய முணடாகினறது ஆதலால யோகஜ தர் மமே இந்திரியத்தின் சமபநத மெனப்படுகினறது. ஆனால் இதனி டதது மதபேத மிருக்கினறது.

ஜரத்நையாயிகர் மதம் இதுவாம்:— எவ்விந்திரியத்திற்கு யோக்கியம எப்பதாாத்தமாகினறதோ, அவ்விநதிரியத்தால் அப் பதாாததத்தின் சாக்ஷாத்கார முண்டாகின்றது. யோகிக்கு மறைந் துள்ளன, சென்றன, வருவன என்பவற்றின இநதிரிய ஜநிய சாக்ஷாத்காரமு முண்டாகினறது. யோகிக் கநியமானவாகளுக்கு வர்த்தமான இநதிரிய சம்பநதமுடையதின் சாக்ஷாத்கார முண்டா கின்றது. எவ்விநதிரியததிற்கு எப்பதாாததம யோக்கியமன்று, அவ்விந்திரியத்தால அபபதாாதததநின் சாக்ஷாத்காரம் யோகிக்கு முண்டாகிறதில்லை. எங்ஙனம்: உருவத்தின் ஞானம நேததிரததினா லேயே உண்டாகின்றது; இரச முதலியவற்றால் உண்டாகிறதில்லை.

வேறு சில நூலாசிரியர் மதம் இதுவாம்:— யோகத்திற்கு அற் புதமகிமை இருக்கின்றது. அப்பியாசத்தின் உயாவு தாழ்வுகளால் யோகஜதர்மம விலக்ஷணமாக உண்டாகின்றது. சிலரிடததிலோ அப்பியாசததின் மேமபாட்டால் இததன்மைத் தர்மம உண்டா கின்றது. ஒரு இந்திரியத்தால யோக்கிய அயோக்கியமான எல் லாவற்றின் ஞானமும உண்டாகின்றது. எல்லாவிதத்தினாலும் யோகஜ தர்மத்தினால் வியவகிததநின் ஞானம் உண்டாகின்றது. ஆதலால் யோகஜ தாமமும அலௌகிக சமபநதமாம்.

## ௧௫௮. நியாயமதத்தில் அலௌகிக சம்பந்தத்தால் சுத்தியில் தேசாந்தரத்துள்ள இரஜதத்தன்மையின் ஞானமும், அந்தஞானம் சுகந்தமுடைய சந்தனத்தின் ஞானத்திற்கு விலக்ஷணமாதலும்

இவ்வாற்றால் இந்திரியத்தின் சையோக முதலிய சம்பந்தமின்றி, அலௌகிக சம்பந்தத்தினாலும் இந்திரிய ஜந்திய சாக்ஷாத்கார முண்டாதலால், தேசாந்தரத்தின் கண்ணுள்ள இரஜதத்திலிருக்கும் இரஜதத்தன்மையின் சாக்ஷாத் சாக்ஷாத்காரமும் சுத்தியினிடத்து அலௌகிக சம்பந்தத்தால் சம்பவிக்கின்றது. சுகந்த ஸ்மிருதியும், சந்தனத்தோடு நேத்திர சையோகமுண்டாகச் "சுகந்தமுடையது சந்தனம்" என்பதாக யோக்கிய அயோக்கிய அநுபவகோசர சாக்ஷாத் ஞானமு முண்டாகின்றது. இவ்வாற்றால் தோஷத்தோடுகூடிய நேத்திரத்தின் சையோகம் சுத்தியினோடு உண்டாகின்றது. சுத்தி வியக்தியோ நேத்திரயோக்கியமாம். இரஜதத்தன்மை ஜாதி பிரத்தியக்ஷ யோக்கியமாயினும், ஜாதியின் ஆசிரயமாகிய வியக்தி யாண்டுப் பிரத்தியக்ஷ கோசரமாகின்றதோ, ஆண்டு ஜாதி யோக்கியமாம். யாண்டு ஜாதியின் ஆசிரயம் பிரத்தியக்ஷயோக்கிய மல்லவோ, ஆண்டு ஜாதி அயோக்கியமாம். இப்பிரசங்கத்தில் இரஜதத்தன்மையின் ஆசிரயமாகிய இரஜதவியக்தி நேத்திரத்தோடு வியவஹிதமாம். ஆதலால் நேத்திர யோக்கியமன்று. எங்ஙனம் சுகந்த அம்சத்தில் சந்தன ஞானம் அலௌகிகமோ, அங்ஙனமே "இது இரஜத" மெனனும் ஞானமும் இரஜதத்தன்மை அம்சத்தில் அலௌகிகமாம். ஆனால் இதனுள் பேதமுண்டு:— "சுகந்தமுடையது சந்தன" மென்னும் ஞானத்தால் சந்தனத்தின் கண்ணுள்ள சுகந்தம் சந்தனத்தில் தோற்றுகின்றது. "இது இரஜத" மென்னும் ஞானத்தால் இதுவெனும் பதார்த்தத்திலில்லாத இரஜதத்தன்மை இதுவெனும் பதார்த்தத்திற் றோற்றுகின்றது. அங்ஙனமே மற்றும் விலக்ஷணத்தன்மை யுளது:— "சுகந்தமுடையது சந்தன" மென்னும் ஞானத்தால் நேத்திரத்திற்கு அயோக்கியமான சுகந்தம் தோற்றுகின்றது. சந்தனத்தின் சகல சாமானிய விசேஷத்தன்மையும் தோற்றுகின்றது. "இது இரஜத" மென்னும் ஞானத்தினால் வியவஹிதமா யிருத்தலின், நேத்திரத்திற்கு அயோக்கியமான இரஜதத்தன்மையின் விளக்கமோ சுகந்த விளக்கத்திற்

குச் சமானமாம். ஆனால் சந்தனத்தின் விசேஷ வடிவ சந்தனத் தன்மையின் விளக்கம்போல சுத்தியின் விசேஷ வடிவ சுத்தித் தன்மையின் விளக்கம் உண்டாகிறதில்லை. மலயாசலத்தின்கண் உண்டாகிய காஷ்ட விசேஷ வடிவமான சந்தனத்தின் அவயவம் தோற்றுகின்றது. சுத்தியின் முக்கோணத்தன்மை முதலிய விசிஷ்ட அவயவம் தோற்றுகிறதில்லை. இவ்வாற்றால் இரண்டு ஞானங்களுக்கும் பேதமுண்டு. யதார்த்தத்தன்மை அயதார்த்தத்தன்மைகள் கிரமமாக முற்கூறிய பேதத்தினால் ஆயினவாகவே இருக்கின்றன. இந்திரியத்தின் சையோகமும் அயோக்கியதாமத்தின் ஸ்ருதியுமாகிய சாமக்கிரி இரண்டுஞானங்களினும் சமமாம். சாமக்கிரி பேதமின்றி முற்கூறியவகையின் விலக்ஷணத்தன்மை சம்பவியாது. என்றாலும் சாமக்கிரியினிடத்துத் தோஷமின்றிய தன்மையும் தோஷத்தோடுகூடிய தன்மையுமாகிய விலக்ஷணத்தன்மை யிருக்கின்றது. இதனால் முற்கூறிய விலக்ஷணத்தன்மை சம்பவிக்கின்றது. எங்ஙனம் "வாசனையுடைத்து சந்தனம்" என்னுமிடத்தில் ஞான லக்ஷண சம்பந்தத்தை நிரூபிக்குந்தன்மை நேத்திரத்திற் கிருக்கின்றதோ, அங்ஙனமே "இது இரஜத" மென்னும் ஞானத்திலும் நேத்திரசையுக்த, மனசையுக்த, ஆத்மசமவேத ஞானசம்பந்த மிருக்கின்றது. அதை நிரூபிப்பது நேத்திரமாம். விஷயம் இரஜதத்தன்மையாம். அது ஸ்மிருதிஞானத்திற்கு அநுயோகியாம். எவ்விஷயத்தின் ஞானம் உண்டாகின்றதோ, அது விஷயத்தன்மைச சம்பந்தத்தால ஞானத்திற்கு அநுயோகியாம். நேத்திரத்தோடு சையோகமுடையதா யிருத்தலின் நேத்திரசையுக்தம் மனமாம்; அதனோடுசையுக்தம் அதாவது சையோகமுடையது ஆத்மாவாம்; அதனிடத்துச சமவேத ஞானம் இரஜதத் தன்மையின ஸ்மிருதியாம். அது விஷயத்தன்மைச சம்பந்தத்தால் இரஜதத்தன்மையி லிருக்கின்றது. இவ்வாற்றால நேத்திரசையுக்த, மனசையுக்த, ஆத்மசமவேத ஞானவடிவ நேத்திரத்தின் சம்பந்தம இரஜதத்தன்மையி லிருத்தலால், நேத்திர சம்பந்தப்பட்ட இரஜதத்தன்மையின் பிரமஞானம பிரத்தியக்ஷமாம.

அல்லது ஞானரூப சம்பந்தமில்லை; ஆனால் ஞானத்தின் விஷயத்தன்மைச் சம்பந்த மிருக்கின்றது. ஆதலால நேத்திரசையுக்த, மனசையுக்த, ஆத்மசமவேத ஞானத்தின விஷயத்தன்மைச சம்பந்தம் அலௌகிக சம்பந்தமாம. "சுகந்தமுடையது சந்தன"மென்

னும் ஸ்தானத்தில் சம்பந்தவடிவ முற்கூறிய விஷயதத்தன்மை சுகத்தத்தி லிருக்கின்றது. "இது வெள்ளி" யென்னு மிடத்தில் நேத்திரசையுக்த மனசையுக்த ஆத்மசமவேத ஞானம இரஜதத்தன்மை ஸ்மிருதியாம். அதன் விஷயதத்தன்மை இரஜதத்தன்மையி லிருக்கின்றது. இவ்வாறு விஷயதத்தன்மை யமச சம்பந்தத்தைச் சேர்த்தால் சம்பந்தத்தின் அநுயோகி சுகந்த இரஜதத்தன்மைக ளென்பது ஸ்பஷ்டமேயாம. இதனால் அந்நியதாக்கியாதி வாதம் சம்பவிக்கின்றது. நேத்திரத்தின் சம்பந்தமின்றி, இரஜதத்தன்மையின் ஞானம் சம்பவிக்கிறதில்லை. இத்தோஷம அந்நியதாக்கியாதி வாதத்தில் இல்லை. இவ்வாற்றால் இரஜதத்தன்மைவடிவ விசேஷணத்தோடு நேத்திரத்தின் அலௌகிக சம்பந்தமும், சுத்திவடிவ விசேஷியத்தோடு இலௌகிக சம்பந்தமும அங்கீகரித்து, அந்நியதாக்கியாதியின் சம்பவத்தைக் கூறுகின்றார்.

## ௧௫௯. அநிர்வசநீயக்கியாதியில் நியாயத்திற் கூறிய தோஷம்.

அநிர்வசநீயக்கியாதியில் இத்தோஷத்தைக் கூறுகின்றார்:— அந்நியதாக்கியாதி வாதிக்குப் பிரமஞானத்தின் காரணத்தன்மை தோஷத்தில் அங்கீகரிப்பதாகின்றது. அநிர்வசநீயக்கியாதிவாதிக்கு இரஜதமுதலிய அநிர்வசநீய விஷயங்களின் காரணத்தன்மையும், அவற்றின ஞானத்தினது காரணத்தன்மையும் அங்கீகரிக்க வருகின்றது. ஆதலால அந்நியதாக்கியாதி வாதத்தில் இலாகவமுளது. அநிர்வசநீயக்கியாதிவாதிக்கு அந்நியதாக்கியாதியின்றி நிர்வாக முண்டாகிறதில்லை. சிலவிடத்து அந்நியதாக்கியாதியை அங்கீகரிக்கின்றனர்; சிலவிடத்து அநிர்வசநீயக்கியாதியை அங்கீகரித்திருக்கின்றனர். ஆதலால் முழுவதும அந்நியதாக்கியாதியினையே அங்கீகரித்தல் தகுதியாம். முழுவதும அநிர்வசநீயக்கியாதியை அங்கீகரிக்கின், அதவைதவாதிக்குத் தன் மதநூல்களோடு விரோதமுண்டாகும. கேவல அநிர்வசநீயக்கியாதியினால் நிர்வாக முண்டாகிறதில்லை. யாண்டு அநிர்வசநீயக்கியாதி சம்பவிக்கவில்லையோ, ஆண்டு அத்வைத மதநூல்களில் அந்நியதாக்கியாதியே எழுதப்பட்டிருக்கின்றது. எங்ஙனம் அநாதம பதார்த்தங்களில் பாதிக்கப்படாத்தன்மை வடிவ சத்தியத்தன்மை தோற்றுகின்றதோ, ஆண்டு அநிர்வசநீய பாதிக்கப்படாத்தன்மையின் உற்பத்தியினை

அநாத்ம பதார்த்தங்களிற் கூறுவோமாயின், இக்கூற்று "பிறப்பில்லாததற்குப் பிறப்புண்டாயிற்று, நித்தியத்திற்குத் த்வம்சமுண்டாயிற்று" என்னும் வாக்கியங்களுக்குச் சமானமாக விருத்தமாம். ஆதலால் ஆத்ம சத்தியத்தன்மை அநாத்மாவினிடத்தில் தோற்றுதலாகிய அந்நியதாக்கியாதியே சம்பவிக்கின்றது. இத்தன்மை ஸ்தானங்களில் அந்நியதாக்கியாதியே அத்வைத நூல்களில் எழுதப்பட்டிருக்கின்றது. பரோக்ஷப் பிரமஸ்தலத்திலும் அத்வைத நூல்களில் அந்நியதாக்கியாதியே சொல்லப்பட்டிருக்கிறது. இது அவற்றின் தாற்பரியமாம்:— பிரத்தியக்ஷஞானமோ நியமமாக வர்த்தமான கோசரமாகின்றது. எந்த விஷயத்திற்குப் பிரமாதாவோடு சம்பந்த முண்டாகின்றதோ, அவ்விஷயத்தின் ஞானம் பிரத்தியக்ஷ மெனப்படுகின்றது. வியவகித இரஜதத்தினது இரஜதத்தன்மையின் சம்பந்தம் பிரமாதாவோடு சம்பவிக்கிறதில்லை. ஆதலால் முன்னுள்ள இடத்தில் இரஜதத்தின் சத்தை (இருப்பு) அவசியம் வேண்டும். பரோக்ஷ ஞானமோ அதீதமும் வருவனவுமாகிய பதார்த்தங்களினது மாகின்றது. ஆதலால் பரோக்ஷ ஞானத்தினது விஷயத்தின் சம்பந்தம் பிரமாதாவோடு அபேக்ஷிக்கப்பட்டதன்று; சம்பவிப்பதுமில்லை. ஏனெனின் யாண்டு அநுமானப் பிரமாணத்தினாலாவது சப்தப் பிரமாணத்தினாலாவது தேசாந்தரத்திருப்பனவும் காலாந்தரத் திருப்பனவுமாகிய பதார்த்தங்களின் யதார்த்தஞான முண்டாகின்றதோ, ஆண்டும் பின்னதேசத்திருப்பதும் பின்னகாலத் திருப்பதுமாகிய பிரமாதாவோடு சம்பந்த முண்டாகிறதில்லை பிரமவடிவ பரோக்ஷஞானத்திலோ பிரமாதாவோடு விஷயத்தின் சம்பந்தம் முற்றும் அசம்பாவிதமாம். ஆதலால் பரோக்ஷப் பிரமஸ்தலத்தில் அநிர்வசநீயக்கியாதி யில்லை. ஆனால் விஷயசூந்திய தேசத்தில் விஷயத்தின் பிரதீதியாகிய அந்நியதாக்கியாதி இருக்கின்றது. இவ்வாறு அநேக இடங்களில் அந்நியதாக்கியாதி அங்கீகரித்திருக்கின்றனர். அபரோக்ஷப் பிரமத்தில் யாண்டு வியவகித ஆரோபித முண்டாகின்றதோ, அதே ஸ்தானத்தில் அநிர்வசநீயக்கியாதியை அங்கீகரித்திருக்கின்றனர். யாண்டு முன்னுள்ள இடத்தில் அதிஷ்டான சம்பந்தமுடைய ஆரோபித முண்டாகின்றதோ, ஆண்டும் அந்நியதாக்கியாதியே யிருக்கின்றது. ஏனெனின் அதிஷ்டான கோசரவிருத்தி உண்டாயின், அப்போது ஆரோபித வஸ்துவிற்குப் பிரமாதாவோடு சம்பந்தம் அந்நியதா

க்கியாதியை அங்கீகரிக்கினும் சம்பவிக்கின்றது. அநிர்வசநீய விஷயத்தின் உற்பத்தி நிஷ்பிரயோஜனமாம். இவ்வாற்றால் அத்வைதவாதியின் மதத்தில் அநிர்வசநீயக்கியாதி ஒன்றினால் நிர்வாகமுண்டாகிறதில்லை. அந்நியதாக்கியாதியை அங்கீகரிக்கின், அநிர்வசநீயக்கியாதியின் அங்கீகாரமுண்டாகாது. யாண்டு வியவகித ஆரோபிதமுண்டாய்ப் பிரத்தியக்ஷப் பிரமமுண்டாகின்றதோ, அந்தஸ்தானத்தில் அத்வைதவாதியான்வர் அந்நியதாக்கியாதியின் அசம்பவம் கூறியிருக்கின்றனர். ஆண்டும் முற்கூறியபடி நேத்திரத்தின் ஞானலக்ஷண சம்பந்தம் சம்பவிக்கின்றது. ஆதலால் பிரத்தியக்ஷப் பிரமத்தின் சம்பவமிருத்தலின், அநிர்வசநீயக்கியாதியின் அங்கீகாரம் பிரயோஜனசூந்யமாய்க் கௌரவத்தால் தூஷிக்கப்படுவதாம்.

## ௧௯௦. சாமாநியம் ஞானலக்ஷணமுதலிய அலௌகிக சம்பந்தம் பிரத்தியக்ஷ ஞானத்திற்கு ஏதுவாதல் சம்பவியாமையின் பிரமஞானத்திற்கு இந்திரிய ஜந்நியத்துவமின்மை.

இத்தன்மைய அநந்த நிராதத்தகப் பிதற்றுதலை நையாயிகர் விவேகமின்மையாற் செய்திருக்கின்றனர். ஏனெனின் சாமாநிய லக்ஷணமுதலிய சம்பந்தம் பிரத்தியக்ஷ ஞானத்திற்கு ஏதுவெனக் கூறின், அது எல்லோருடைய அநுபவத்திற்கும் விரோதமாம். எவனுக்கு ஒருகடத்தின் நேத்திரஜந்நிய ஞானமுண்டாகின்றதோ, அவனை "எத்தனை கடங்களின் சாக்ஷாத் சாட்சாத்காரம் உனக்கு உண்டாயிற்று" என்று கேட்பாம். அப்போது பிரசினஞ்செய்பவனைப் பார்த்துக் காண்பவன் "எனது நேத்திரத்திற்கெதிரில் ஒரு கடமிருக்கின்றது. எவ்வளவு கடங்களின் சாக்ஷாத்காரமுண்டாயிற்றென்று நீவினவியது அவிவேகத்தினாலாம்" என்றிவ்வாறு கடத்தைக் காண்போன் பிரசினத்திற்கு உபாலம்பஞ் செய்கின்றான். நையாயிகக் கிரமமாக இலௌகிக அலௌகிக பேதத்தால் சகல கடங்களினது பிரத்தியக்ஷத்தினது சாமக்கிரி இருத்தலால உபாலம்பம் (பழித்தல்) சம்பவியாது. ஒருகடத்தின் இலௌகிக சாக்ஷாத்ஷம் உண்டாயிருக்கின்றது. எல்லாவற்றின் அலௌகிக சாக்ஷாத் சாக்ஷாத்காரம் உண்டாயிருக்கின்றது. என்று விடைகூறுதல் வேண்டும் வியவகித கடத்தின் சாக்ஷாத்காரத்தைக் கேட்டு எல்லோருடைய இருதயத்திலும் ஆச்சரியம் உண்டாகின்றது. ஆத

லால் சாமாநிய லக்ஷண சம்பந்தத்தால் சாக்ஷாத்காரம் சர்வலோக விருத்தமாம். சகல தந்திரங்களுக்கும் விருத்தமாம். ஆனால் ஒரு கடத்தின் சாக்ஷாத்கார முண்டாயின், அப்போது கடாந்தரத்தின சஜாதீயத்தன்மையினால ஸ்மிருதி முதலியன சம்பவிக்கின்றன. அங்ஙனமே "வாசனையுடையது சந்தன" மென்பதாகச் சந்தனத்தில சுகந்த தாமந்தைக் கவரும் சாக்ஷுஷ சாக்ஷாத்காரம ஞான ரூப சம்பந்தத்தால நேத்திரேந்திரிய ஜந்யமாகின்றதென்று நையாயிகா கூறுவதும் விருத்தமாம். ஏனெனின் எந்தப் புருஷனுக்குச் சந்தனத்தின் சாக்ஷாத்கார முண்டாகின்றதோ, அவனை "யாது காணப்பட்டது" என்று கேட்கின், அப்போது அவன் "சுகந்தமுடைய சந்தனம காணப்பட்ட" தென்று இவ்வாறு கூறுவன். மீண்டும், இச்சந்தனத்தில சுகந்த மிருக்கின்றதென்னும ஞானம் உனக்கெவ்வா றுண்டாயிற்றெனறு பிரித்துக் கேட்போமாயின், அப்போது திருஷ்டா இது கூறுகின்றான்:—சுவேத (வெண்மைச்) சந்தனமா யிருத்தலால் சுகந்தம் இதில அவசியமாயிருக்கும். இரக்த சந்தனத்தில சுகந்தமிராது. இத்தன்மைய சுவேதத்தில கந்த மிருக்குமென்று இவ்வாறு சுகந்தஞானத்தில அநுமானஜந்யத் தன்மையைக் குறிப்பிக்கும வாக்கியத்தைக் கூறுகின்றான. நேத்திரத்தால் சுகந்தத்தின் சாக்ஷாத்காரம எனக்குண்டாயிருக்கின்றதென்று விடை கூறுகிறதில்லை. ஆதலால் சுகந்தத்தின் ஞானம் நேத்திர ஜந்யப் பிரத்தியக்ஷரூப மன்று. ஆனால் சுகந்தாமசத்தில் அந்த ஞானம் அநுமிதியாம; சந்தன அமசத்தில பிரத்தியக்ஷமாம். "சுகந்தமுடையது சந்தன" மென்னும வாக்கியப் பிரயோக முடைய சந்தன திருஷ்டாவைப்பார்த்து, "இச்சந்தனத்தில் அற்ப கந்த மிருக்கின்றதா? அல்லது அதிக கந்த மிருக்கின்றதா?" என்று கேட்போமாயின், அப்போது அவன் "நேத்திரத்தினால் சுவேத சந்தனம் தோற்றுகின்றதாகலின், கந்த சாமாநியத்தின் அநுமிதி உண்டாகின்றது. கந்தம் பிரத்தியக்ஷமாயின், கந்தத்தின் உயர்வு தாழ்வுகளின் ஞானம் உண்டாகும். ஆதலால் கந்தத்தின் உயர்வு தாழ்வுகளோ மூக்கினால் மோந்தால் அப்போது அறியப்படும். நேத்திரத்தினாலோ சுவேத சந்தனத்தின் ஞானம உண்டாகின்றது. அதனால கந்த சாமாநியத்தின் ஞான முண்டாகின்றது" என்று விடை கூறுதலாலும சுகந்தத்தினது ஞானத்தின் அநுமிதி உண்டாகின்றது; பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. எவ்விந்திரியத

தினால் ரூப, ரச, கந்த, பரிச, சப்தங்களின் ஞான முண்டாகின்றதோ, அவ்விந்திரியத்தினால் உருவ முதலியவற்றினது உயர்வு தாழ்வுகளின் ஞானம் உண்டாகும். நேத்திரேந்திரியத்தால் கந்தத்தின் ஞானம் முண்டாகுமாயின், கந்தத்தின் உயர்வு தாழ்வுகளின் ஞானம் உண்டாதல் வேண்டும். ஆதலால் சந்தனத்தில் சுகந்தத்தின் ஞானம் அநுமிதி வடிவமாம்; பிரத்தியக்ஷ மன்று. அநுமிதி ஞானத்தினாலோ உயர்வு தாழ்வுகளின் அபபிரதீதி அநுபவசித்தமாம். தூமத்தினால் வந்நியின் ஞானம் உண்டாகின்றது. ஆண்டு வந்நியின் அற்பத்துவ மகத்துவங்களின் ஞானம் உண்டாகிறதில்லை. நையாயிகர், லௌகிக சம்பந்த ஜந்நிய பிரத்தியக்ஷத்தினால் விஷயங்களின் உத்கருஷ அபகருஷங்கள் தோற்றுகின்றன, அலௌகிகத்தினால் விஷயத்தின் சாமாந்ய தர்மமும் தோற்றுகின்றது, விசேஷ தர்மம் தோற்றுகிறதில்லை என்று கூறுகின்றனர். அதுவும் அசங்கதமாம். ஏனெனின் சாமாந்ய தர்மத்தினாலோ பரோக்ஷ ஞானத்தினாலும் விஷயத்தின் பிரகாசம் சம்பவிக்கின்றது. அப்பிரசித்த சம்பந்தத்தால அப்பிரசித்த பிரத்தியக்ஷ கற்பனை நிஷ்பிரயோஜனமாம். விசேஷரூபமாக சுகந்தத்தின் பிரகாசம் உண்டாகிறதில்லை. சாமாந்ய ரூபமாக சுகந்தத்தின் பிரகாச மிருக்கின்றது. இவ்வாறு சுகந்தத்தின் ஞானம் நேத்திரத்தால் உண்டாகின்றது. இந்நையாயிக வசனத்தால் இது சித்திக்கின்றது:—நேத்திரத்தினால் சுவேத சந்தனத்தின் சாக்ஷாத்கார முண்டாகலே, சுகந்தத்தின் சாமாந்ய ஞானம் அநுமிதி ரூபமாகின்றது. அவ்வநுமிதிக்குப் பிரயோஜகம் சந்தனத்தின் சுவேதத் தன்மை ஞானவாயிலாக நேத்திரமாம். இவ்வாற்றால் சுகந்தத்தின் ஞானம் நேத்திரஜந்நிய மன்று; அநுமிதியாம். நையாயிகர் இங்ஙனம் கூறுகின்றனர்:—நேத்திர ஜந்நிய சுகந்தத்தின் ஞானம் உத்கர்ஷ அபகர்ஷங்களை விளக்குகிறதில்லை. ஆதலின் அநுமிதிக்குச் சமானமாம். அங்ஙனமாயினும் அநுமிதி வடிவம் சம்பவியாது ஏனெனின் "சுகந்தமுடையது சந்தனம்" மென்னும் ஞானம் ஒன்றும்; இரண்டன்று. ஒரே ஞானத்திற்குச் சுகந்த அம்சத்தில் அநுமிதித்தன்மையும், சந்தன அம்சத்தில் பிரத்தியக்ஷத்தன்மையும் கூறின், அநுமிதித்தன்மை பிரத்தியக்ஷத்தன்மையாகிய விரோதமுடைய தர்மங்களின் சமாவேச முண்டாகும். ஆதலால் எல்லா அம்சங்களிலும் பிரத்தியக்ஷ முண்டென்று கூறுதலும் சம்ப

வியாது. ஏனெனின், உன்னுடைய மதத்தில் ஒரு ஞானத்தில் எங்ஙனம் இலௌகிகத்தன்மை அலௌகிகத்தன்மை யாகிய விரோத முடைய தர்மங்களின் சமாவேச மிருக்கின்றதோ, அங்ஙனமே அநுமிதித்தன்மை பிரத்தியக்ஷத்தன்மைகளுக்கும் ஒரு ஞானத்தில் சமாவேசம் சம்பவிக்கின்றது. பிரத்தியக்ஷத்தன்மை அநுமிதித்தன்மைகளின் விரோதமோ நியாயசாஸ்திர சம்ஸ்காரமுடையவர்களுக்குத் தோற்றுகின்றது. இலௌகிகத்தன்மை அலௌகிகத்தன்மைகளோ ஒன்றற்கொன்று அபாவரூபமா யிருக்கின்றன. ஆதலின் அவற்றின் விரோதம் எல்லோருக்கும் விளங்கும். பிரதியோகி அபாவங்கட்குப் பரஸ்பரம் விரோதமிருக்கின்றது. இது சகல லோகத்திலும் பிரசித்தமாம். ஆதலால் உலகப் பிரசித்த விரோதமுடைய தர்மங்களின் சமாவேசத்தை நையாயிகர் அங்கீகரித்திருக்கின்றனர். இதனால் விரோதமுள்ள பதார்த்தங்களுக்குச் சமாவேச மில்லையெனனும் வாக்கியம் நாணமின்மையைக் காரணமாகவுடையதாம்.

வேதாந்த மதத்திலோ அந்தக்கரணத்தின் விருத்திரூப ஞானம் அம்சத்தோடு கூடியதாயிருத்தலின், ஒரு விருத்தியில் அம்சபேதத்தால் விரோதமுடைய தர்மங்களின் சமாவேசம் சம்பவிக்கின்றது. நியாயமதத்தில் ஞானம் ஜந்யத்தன்மை இருக்கின்றது; ஆனால் திரவியமில்லை. ஆதலால் அம்சத்தோடு கூடியதன்று. நிரம்ச ஞானத்தில் விரோதமுடைய தர்மங்களின் சமாவேசம் பாதிதமாம். ஆதலால் "சுகந்தமுடையது சந்தனம்" மெனனும் ஞானம் சுகந்த அம்சத்தில் அநுமிதியாம்; சந்தன அம்சத்தில் பிரத்தியக்ஷமாம். அல்லது ஞானத்தின் உபாதானமாகிய அந்தக்கரணம் அம்சமுடையதாம். ஆதலால் அந்தக்கரணத்தின் பரிணாமமாகிய இரண்டு ஞானமிருக்கின்றது. "சுகந்தமுடைய"தென்னும் ஞானம் அநுமிதி வடிவமாம். "சந்தன"மென்னும ஞானம் பிரத்தியக்ஷமாம். இரண்டு பரிணாமமும் ஏககாலத்தில் உண்டாகின்றன. ஆதலால் அவற்றின் இருமை ஒருநாளும் தோற்றுகிறதில்லை. இவ்வாற்றால் "வாசனையுடைத்துசந்தனம்" என்னும ஞானம் சுகந்த அம்சத்தில்சாக்ஷூஷமன்று. இந்த ஞானத்திற்கு ஒருவாற்றால் அலௌகிக சம்பந்த ஜந்யத்தன்மை கூறினர்.

அங்ஙனமாயினும் "இது இரஜத" மென்றல் முதலிய பிரமமோ கூறியபடி சம்பவியாது. ஏனெனின் சுத்தியோடு நேத்திரத்தின்

சம்பந்தத்தினையும், இரஜதத்தன்மையின் ஸ்மிருதியினையும் "இது இரஜதம்"மென்னும் ஞானத்திற்குக் காரணமாய் அங்கீகரிக்கின், அவனை இது கேட்பாம்:—சுத்தியோடு நேத்திரத்தின் சம்பந்தமுண்டாய்ச் சுத்தி ரஜத சாதாரண தர்மமாகிய வெண்மினுமினுப்பு விசிஷ்ட சுத்தியின் இதுவென்னும்வடிவ சாமான்யஞானமுண்டாய், இரஜதத்தின் ஸ்மிருதி உண்டாகப் பின் அதன் பிரமமுண்டாகின்றதா? அல்லது சுத்தியின் சாமான்யஞானத்திற்கு முன்னரே சுத்தியினோடு நேத்திரத்தின் சம்பந்தமுண்டாக, அதேகாலத்தில் இரஜதத்தன்மை விசிஷ்ட இரஜதத்தின் ஸ்மிருதி உண்டாய், "இதுஇரஜதம்" மென்னும் பிரமம் உண்டாகின்றதா? முதற்பக்ஷத்தைக் கூறுமிடத்துச் சம்பவியாது. ஏனெனின், முதலிலோ சுத்தியின் சாமான்ய ஞானமும், அதற்குப்பின் இரஜதத்தன்மை விசிஷ்டஇரஜதத்தின் ஸ்மிருதியும், அதன்பின் இரஜதப் பிரமமுமாக, இவ்வாறு மூன்று ஞானங்களின் தாரை அநுபவத்தால் பாதிதமாயிருக்கின்றது. "இது வெள்ளி" என்னும் ஒரே ஞானம் எல்லோருக்கும் தோற்றுகின்றது.

முதலில் சுத்தியின் சாமான்ய ஞானம் உண்டாதலின்றிச் சுத்தியோடு நேத்திரத்தின் சையோக காலத்தில் இரஜதத்தின் ஸ்மிருதி உண்டாய் "இது இரஜதம்" மென்னும் பிரமமுண்டாகின்றது என்று கூறுவாராயின், அதுவும் சம்பவியாது. ஏனெனின் சகல ஞானமும் சேதனவடிவ சொரூபபிரகாசமாம். விருத்திவடிவஞானம் சாக்ஷிபாஸ்யமாம். எந்த ஞானமும் எக்காலத்திலும் அஞ்ஞாதமாகாதென்னும் வார்த்தையினைப் பிற பிரதிபாதனம் செய்வோம். ஆதலால் சுத்தியோடு நேத்திரத்தின் சையோககாலத்தில் இரஜதத்தின் ஸ்மிருதி உண்டாயின், ஸ்மிருதியின் பிரகாசம் உண்டாதல் வேண்டும். ஸ்மிருதியில் சேதனபாகமோ சுயம்பிரகாசமாம். விருத்திபாகத்தின் பிரகாசம் சாக்ஷியதீனமாய் எப்போதும் உண்டாகின்றது. ஆதலால் ஸ்மிருதியின் அநுபவம் உண்டாதல் வேண்டும். நையாயிகனைச் சபதபூர்வகமாய் இது கேட்பாம்:— "சுத்தியில் 'இது இரஜதம்'மென்னும் பிரமத்திற்குப் பூர்வகாலத்தில் இரஜத ஸ்மிருதியின் அநுபவம் உனக்கு உண்டாகின்றதா?" என்று கேட்போமாயின், அப்போது அவன் உண்மை உரைப்பவனாயின், ஸ்மிருதியினது அநுபவத்தின் அபாவத்தையே கூறுவன். ஆதலால் சுத்தியினோடு நேத்திர சையோககாலத்தில் பிரமத்திற்கு முன் இரஜதத்தின் ஸ்மிருதி சம்பவிக்கிறதில்லை.

இரஜதாநுபவ ஜந்ய இரஜதகோசர சமஸ்காரத்தோடு கூடிய நேத்திர சம்யோகத்தால் இரஜதப்பிரம முண்டாகின்றது. சமஸ்கார குணம் பிரத்தியக்ஷ யோக்கிய மன்று; ஆனால் அநுமேயமாம். ஆதலால் முற்கூறிய தோஷமில்லை யென்று கூறுவாராயின், அவனை அங்ஙனமாயினும் உற்புத்த சமஸ்காரம் பிரமத்தை உண்டுபண்ணுவதா? அல்லது உற்புத்தம் அநுற்புத்தமென்னும் இரண்டு சமஸ்காரமும் பிரமத்தை உண்டுபண்ணுவனவா? என்று கேட்பாம். இரண்டாகும் உண்டுபண்ணுந் தன்மையைக் கூறின் சம்பவியாது. ஏனெனின் அநுற்புத்த சமஸ்காரங்களால் ஸ்மிருதி முதலிய ஞானம் என்றும் உண்டாகாது. அநுற்புத்தத்தினாலும் ஸ்மிருதி உண்டாகுமாயின், அநுற்புத்த சமஸ்காரத்தால் எப்போதும் ஸ்மிருதி உண்டாகுதல்வேண்டும். ஆதலால் உற்புத்த சமஸ்காரத்தால் ஸ்மிருதி உண்டாகின்றது. அங்ஙனமே பிரமஞானமும் உற்புத்தஸமஸ்காரத்தினாலேயே சம்பவிக்கின்றதாகலின், உற்புத்த ஸம்ஸ்காரம் பிரமத்தை உண்டுபண்ணுவதாம் என்று கூறின், அதுவும் பொருந்தாது. ஏனெனின் சம்ஸ்காரத்தின் உற்போதகம் (வாசனையை எழுப்புவன) சமானமானவற்றைக் காணுதல் முதலியனவாம். ஆதலால் சுத்தியினோடு நேத்திரத்தின் சம்யோகத்தால் வெண்பளபளப்பு விசிஷ்ட சுத்தியின் ஞானமுண்டாகியபின், இரஜதகோசர சமஸ்காரத்தின் உற்போதகம் சம்பவிக்கின்றது. நேத்திர சுத்திகளின் சம்யோக காலத்தில் இரஜதகோசர சமஸ்காரத்தின் உற்போதம் சம்பவியாது. ஆதலால் இது அங்கீகரிப்பதாகும்:—முதற் கணத்தில் நேத்திர சம்யோகமும், இரண்டாவது கணத்தில் வெண்பளபளப்புத் தாமவிசிஷ்ட சுத்தியின் ஞானமும், அதற்குப் பிற்கணத்தில் சமஸ்காரத்தின் உற்போதமும், அதற்குப் பிற்கணத்தில் இரஜதப்பிரமமும் சம்பவிக்கின்றன. இவ்வாற்றால் நேத்திர சம்யோகத்தினால் நான்காவது கணத்தில் பிரமஞானத்தின் உற்பத்தி சித்தித்தது. அது அநுபவத்தினால் பாதிக்கப்படுவதாம். நேத்திர சம்யோகத்திற்கு அவ்யவஹித பிற்கணத்தில் சாக்ஷாத்ஞானம் உண்டாகின்றது. அங்ஙனமே அநுபவமு முண்டாகின்றது. ஆதலால் முற்கூறிய கிரமம் அசங்கதமாம்.

முற்கூறியபடி சுத்தியின் இரண்டு ஞானங்கள் சித்திக்கின்றன. ஒன்றோ சமஸ்காரத்தின் உற்போதக சாமாந்யஞானம்; மற்றையது சமஸ்கார ஜந்ய பிரமஞானம். இவ்வாற்றால் சுத்தியின்

இரண்டு ஞானமும் அநுபவசித்தமாம். நேத்திரசையோகமுண்டா கியும் "இது இரஜதம்" என்னும் ஒரே ஞானம் அநுபவ சித்த மாம். ஆதலால் இரஜதாநுபவ ஜந்ய சம்ஸ்காரத்தோடு கூடிய நேத்திர சையோகத்தினால் "இது இரஜத" மென்னும் பிரமம் உண்டாகின்றதென்று சொல்லுதலும் சம்பவியாது.

"சுகந்தமுடையது சந்தனம்" என்னும் ஞானத்தினை அலௌ கிகப்பிரத்தியக்ஷமெனக் கொள்ளினும், "இது இரஜத" மென் னும் ஞானமோ ஞானலக்ஷண அலௌகிக சம்பந்த ஜந்யம் என்பது சம்பவியாது. ஏனெனின், "சுகந்தமுடையது சந்தன" மென்னும் ஞானமுண்டாகச் சுகந்தத்தின் உயர்வு தாழ்வுகளின் சந்தேகமுண்டாகின்றது. ஆதலால் சுகந்தத்தினது உயர்வு தாழ்வு களின் நிச்சய வடிவ பிரகடத்தன்மை அலௌகிக ஞானத்தால் உண்டாகிறதில்லை என்பதை அங்கீகரித்தல் வேண்டும். அலௌகிக ஞானத்தாலும் விஷயத்தின் பிரகடத்தன்மை உண்டாகுமாயின், சுகந்தத்தினது அபகர்ஷ முதலியவற்றின் சந்தேகம் சம்பவிக்கிற தில்லை. "இது இரஜத" மென்னும் பிரமத்தினாலும், சத்திய ரஜதத் தில் "இது இரஜத" மென்னும் பிரமையினாலும் இரஜதத்தின் பிரகடத்தன்மை சமமாகின்றது. பிரமஸ்தலத்தில் இரஜதத்தின் பிரகடத்தன்மை உண்டாகாதாயின், இரஜதத்தினது பரிமாண முதலியவற்றின் சந்தேக முண்டாதல்வேண்டும். பரிமாண முதலி யவற்றின் சந்தேக முண்டாகிறதில்லை. இதனால் பிரமஞானத்தி னால் இரஜதத்தின் பிரகடத்தன்மை உண்டாகின்றது. ஞான லக்ஷண சம்பந்த ஜந்ய ஞானத்தினால் விஷயத்தின் பிரகடத் தன்மை உண்டாகிறதில்லை. ஆதலால் "இது இரஜத" மென்னும் பிரமஞானத்திற்கு ஏது ஞானலக்ஷண சம்பந்தமன்று.

விசாரஞ்செய்யின் ஞானவடிவ சம்பந்தம் ஓரிடத்தும் சம்ப விக்கிறதில்லை. ஏனெனின் ஞானலக்ஷண சம்பந்தத்தால் அலௌ கிகப் பிரத்தியக்ஷமுண்டாகின்றது. இப்பக்ஷத்தின் நிச்சயம் இது வாம்:—யாண்டு ஒரு பதார்த்தத்தின் அநுபவஜந்ய ஸ்மிருதி அல் லது அநுபவ ஜந்ய சம்ஸ்கார முண்டாய்ப் பிறபதார்த்தத்தோடு இந்திரியத்தின் சம்பந்த முண்டாகின்றதோ, ஆண்டு இந்திரிய சம் பந்தியில் ஸ்மிருதிகோசர பதார்த்தத்தின் அல்லது சம்ஸ்கார கோசர பதார்த்தத்தின் பிரதீதி உண்டாகின்றது. இந்திரிய சம்ப

நதி பதார்த்தமோ விசேஷியரூபத்தாற் றோற்றுகின்றது. ஸம்ருதி கோசர பதார்த்தம விசேஷண ரூபத்தால் பிரதீதியாகின்றது. எங்ஙனம 'சுகந்தமுடையது சந்தன'' மென்னும ஞானத்தில் நேத்திர வடிவ இந்திரிய சம்பந்தியாகிய சந்தனம் விசேஷியமும, ஸம்ருதிகோசர சுகந்தம விசேஷணமுமாகின்றனவோ, அங்ஙனமே "இது இரஜத'' மெனனும் பிரமஞானத்திலும இந்திரிய சம்பந்தியாகிய சுத்தி விசேஷியமும, ஸம்ருதியின் கோசரமாகிய அல்லது ஸம்ஸ்காரத்தின் கோசரமாகிய இரஜதத்தன்மை விசேஷணமுமாம. விசேஷண விசேஷிய மிரண்டின ஞானமும பிரத்தியக்ஷமாம எனனும் பக்ஷத்தை அங்கீகரிக்கின், அநுமானப்பிரமாணத்தின் நீக்க முண்டாகும. ஏனெனின "பாவதம வந்நியுடைத்து''என்னும அநுமிதிஞானம அநுமானப் பிரமாணத்தால உண்டாகின்றது. ஏதுவில சாத்தியத்தினது வியாப்தியின் ஸ்மரணத்தால் அல்லதுசாத்தியத்தினது வியாப்தியின் உறபுத்தஸம்ஸ்காரங்களால் அநுமிதி ஞானம உண்டாகின்றதென்னும அர்த்தம அநுமான நிரூபணத்தில நிச்சயிக்கப்பட்டிருக்கின்றது. சாத்தியத்தினது வியாப்தியின ஸம்ருதி உண்டாகுமாயின், அப்போது வியாப்தியை நிரூபிக்கும் சாத்தியத்தின் ஸ்மிருதியும உண்டாகும். ஆதலால பாவதத்தோடு நேத்திரத்தின சையோகத்தினாலும வந்நியின ஸமிருதியினாலும "பாவதம வந்நியுடைத்து'' என்னும பிரத்தியக்ஷ ஞானத்தின சம்பவம உண்டாகுமென்னும் பக்ஷத்தில், சாத்திய நிச்சயமாகிய அநுமிதி ஞானத்தை உண்டு பண்ணும அநுமானப் பிரமாணத்தின அங்கீகாரம பயனிலதாம். கௌதமா கணாதா கபிலாமுதலிய முற்றறிவுடையோராற் செய்யப்பட்ட சூத்திரங்களில அநுமானப்பிரமாணம பிரத்தியக்ஷத்திற்கு வேறாகவே சொல்லப்பட்டிருக்கின்றது. அநுமானப்பிரமாணம் பயனிலதாமாயின அதனைச சூத்திரங்களிற சொல்லார். ஆதலால் அநுமானத்தின் பிரயோஜனத்தைச சாதிக்கும ஞானரூப சம்பந்தஜந்நிய அலௌகிகப் பிரத்தியக்ஷம அபபிரசித்தமாம. அந்நியதாக்கியாதிவாதியானவா "பிரத்தியக்ஷ ஞானத்தின் விஷயத்தன்மையினும அநுமிதி ஞானத்தின் விஷயத்தன்மை விலக்ஷணமாம. இதனாற்றான பிரத்தியக்ஷ விஷயத்தில பரிமாண முதலியவற்றின் சந்தேக முண்டாகிறதில்லை. அநுமிதியின விஷயத்தில் பரிமாணமுதலியவற்றின் சந்தேக முண்டாகின்றது. இவ்வாற்றால் பரோக்ஷத்த

ன்மை அபரோக்ஷத்தன்மை வடிவ விஷயத்தன்மையின் பேதம் அநுமிதிஞானப் பிரத்தியக்ஷ ஞானங்களின் பேதத்தால் உண்டாகின்றது. இதனால் அபரோக்ஷத்தன்மைவடிவ விஷயத்தன்மையைச் சம்பாதிப்பது பிரத்தியக்ஷ ஞானமன்று; ஆனால் அநுமிதிஞானமாம். அதற்கேது அநுமானப்பிரமாணமாம்" என்று கூறுவாராயின், இங்ஙனங் கூறுதலும் பொருந்தாது. ஏனெனின் இலௌகிகப் பிரத்தியக்ஷத்தின் விஷயத்தன்மையோ அநுமிதியின் விலக்ஷணமாம். ஆனால் "சுகந்த முடையது சந்தனம்" என்றல் முதலிய ஞானம் சுகந்தமுதலிய அம்சத்தில் அலௌகிகமாம். ஆண்டு சுகந்தத்தின் ஞானம் அநுமிதிக்குச் சமானமாம். எங்ஙனம் அநுமிதி ஞானத்தின் விஷயத்தில் உயர்வு முதலியன நிர்ணயிக்கப்படாதன வாகின்றனவோ, அங்ஙனமே சுகந்தத்தின் உயர்வு முதலியனவும் நிர்ணயிக்கப்படாதனவாம். ஆதலால் அலௌகிகப் பிரத்தியக்ஷத்தின் விஷயத்தன்மைக்கு அநுமிதியின் விஷயத்தன்மையோடு பேதமில்லை. பிரமவடிவ அலௌகிகப் பிரத்தியக்ஷத்தின் விஷயத்தன்மை இரஜதாதிகளிலிருக்கின்றது. அதற்கு அநுமிதியின் விஷயத்தன்மையோடு பேதம் அநுபவசித்தமாம்; இதனானே இரஜதத்தின் அறுபத்தன்மை முதலியவற்றின் சந்தேக முண்டாகிறதில்லை. என்றாலும் ஞானலக்ஷணா சம்பந்த ஜந்நிய அலௌகிகப் பிரத்தியக்ஷப் பிரமையின் விஷயத்தோடு பேதமில்லை. எங்ஙனம் அநுமிதியின் விஷயத்தில் பிரகடத்தன்மையின்மை யிருக்கின்றதோ, அங்ஙனமே அலௌகிகப் பிரத்தியக்ஷப் பிரமையின் விஷயமாகிய கந்தத்தில் பிரகடத்தன்மையின்மை இருக்கிறது. இதனால் ஞானலக்ஷண சம்பந்தத்தினால் பர்வதத்தில் வந்நியின் பிரகாசம் அலௌகிகப் பிரத்தியக்ஷத்தினால் சம்பவிக்கின்றது. அநுமிதி ஞானத்தின் பொருட்டு அநுமானப்பிரமாணம் வியர்த்தமாகும். அநுமானப்பிரமாணம் முற்றறிவுடையோர் வாக்கியங்களால் பெறப்பட்டதாம். ஆதலால் அநுமானத்தின் பயனின்மையைச் சம்பாதிக்கும் அலௌகிகப் பிரத்தியக்ஷம் பெறப்படாததாம்.

விலக்ஷணவிஷயத்தன்மையைச் சம்பாதிப்பது அநுமிதிஞானமாம்; அதற்கு ஏதுவான அநுமானப் பிரமாணம் வியர்த்தமன்று என்று இங்ஙனங் கூறி இருக்கின்றனர். இவ்வார்த்தையே அசங்கதமாம். ஏனெனின் யாண்டு அநுமானப் பிரமாணத்தால் அநுமிதி உண்டாகின்றதோ, ஆண்டுச் சகல அலௌகிகப் பிரத்தியக்ஷத்

தின் சாமக்கிரியும் இருக்கின்றது. எங்ஙனம்: பர்வதத்தில் வந்நி யின் அநுமிதிக்குமுன் புகையைக் காணுதலாகிய வியாப்தி ஞான மோ அநுமிதியின் சாமக்கிரியாம். பர்வதத்தோடு நேத்திரத் தின் சம்பந்தமும் வந்நியின் ஸ்மிருதியுமாகிய இது அலௌகிகப் பிரத்தியக்ஷத்தின் சாமக்கிரியாம். இரண்டு ஞானத்திற்கு இரண்டு சாமக்கிரி இருக்குமாயின், பர்வதத்தில் வந்நியின் பிரத்தியக்ஷ வடிவஞானமே உண்டாகும்; அநுமிதிஞானம் உண்டாகாது. இத னால் அநுமானப்பிரமாணம் வியர்த்தமே ஆகின்றது. வினவின் இது நியாயசாஸ்திரத்தின் நிச்சயிக்கப்பட்ட பொருளாம்:—யாண்டு ஒன்றைக்கோசரிக்கும் அநுமிதியின் சாமக்கிரிக்கும் பிறிதொன் றைக் கோசரிக்கும் பிரத்தியக்ஷத்தின் சாமக்கிரிக்கும் சமாவே சம் உண்டாகின்றதோ, ஆண்டு அநுமிதி சாமக்கிரி பிரபல மாம். எங்ஙனம்: பர்வதத்தோடு நேத்திரத்தின் சையோகமோ பர்வதத்தினது பிரத்தியக்ஷத்தின் சாமக்கிரிக்கும், வந்நியின் அநு மிதியின் சாமக்கிரிக்கும் சமாவேசமுண்டாக வந்நியின் அநுமிதி உண்டாகின்றது. பர்வதத்தின் பிரத்தியக்ஷ ஞானமுண்டாகிற தில்லை. யாண்டுத் தூமத்தோடும் வந்நியோடும் நேத்திரத்தின் சையோகமுண்டாய்த் தூமத்தில் வந்நியினது வியாப்தியின் ஞான முண்டாகின்றதோ, ஆண்டு வந்நியினது அநுமிதியின் சாமக்கிரி யிருக்கின்றது; வந்நியின் பிரத்தியக்ஷத்தின் சாமக்கிரியு மிருக்கின் றது. ஆதலால் சமானகோசர உபயஞானத்தின் சாமக்கிரி யிருக் கின்றது. ஆண்டுப் பிரத்தியக்ஷ சாமக்கிரி பிரபலமாம். ஆதலால் வந்நியின் பிரத்தியக்ஷ ஞானமே உண்டாகின்றது; வந்நியின் அநு மிதி உண்டாகிறதில்லை. புருஷனிடத்துப் "புருஷனோ, அன்றோ" வென்னும் சந்தேகமுண்டாய்ப் "புருஷத்தன்மை வியாப்பிய கைமு தலியவற்றையுடையது இது" என்னும் பிரத்தியக்ஷ வடிவ பராமரிச ஞானமும் புருஷனோடு நேத்திரத்தின் சையோகமு முண்டாயின், ஆண்டுப் பராமரிசமோ புருஷனது அநுமிதியின் சாமக்கிரியாம். புருஷனோடு நேத்திரத்தின் சையோகம் புருஷனது பிரத்தியக்ஷத் திற்குச் சாமக்கிரியாம். ஆண்டுப் புருஷனது பிரத்தியக்ஷ ஞானமே உண்டாகின்றது; புருஷனது அநுமிதி உண்டாகிறதில்லை. ஆதலால் ஒரு விஷயத்திற்கு இரண்டு ஞானங்களின் சாமக்கிரி இருக்குமா யின், அவற்றிற் பிரத்தியக்ஷ சாமக்கிரி பிரபலமாம். ஆதலால் வந் நியின் அநுமிதி சாமக்கிரி இருக்கினும், அலௌகிக சம்பந்தமா

கிய சாமக்கிரியினால் வந்நியின் பிரத்தியக்ஷ ஞானமே உண்டாகும். இவ்வாற்றால் ஞானலக்ஷண அலௌகிக சம்பந்தத்தால் பிரத்தியக்ஷ ஞானத்தின் உற்பத்தி அங்கிகரிக்கின் அநுமானப்பிரமாணம் வியர்த்தமாம்.

"பின்ன விஷயங்களிருக்குமாயின் ஆண்டுப் பிரத்தியக்ஷ சாமக்கிரியினும் அநுமிதி சாமக்கிரி பிரபலமாம். சமான விஷயமிருக்குமாயின் ஆண்டு அநுமிதி சாமக்கிரியினும் பிரத்தியக்ஷ சாமக்கிரி பிரபலமாம். என்றாலும் சமானவிஷயமிருக்கவும் இலௌகிகப் பிரத்தியக்ஷத்தின் சாமக்கிரி அநுமிதி சாமக்கிரியினும் பிரபலமாம். அலௌகிகப் பிரத்தியக்ஷத்தின் சாமக்கிரியோ அநுமிதி சாமக்கிரியினும் முற்றும் வலியின்றியதாம். ஆதலால் பர்வதத்தின் வந்நியின் அநுமிதி சாமக்கிரியினால் அலௌகிகப் பிரத்தியக்ஷ சாமக்கிரிக்குப் பாதமிருத்தலால் அநுமானப்பிரமாணம் பயனின்றியதன்று." என்றுநையாயிகர் கூறுவாராயின், இக்கூற்றும் நலமுடையதன்று. ஏனெனின் யாண்டுத் தாணுவில் "தாணுவோ? அன்றோ?" என்னும் சந்தேகமுண்டாய்ப் "புருஷத்தன்மை வியாப்பிய கரமுதலியவற்றை யுடையது இது" என்னும் பிரம முண்டாய், "இவன் புருஷனே" என்னும் பிரமவடிவப் பிரத்தியக்ஷமுண்டாகின்றதோ, ஆண்டு நையாயிக வசனத்தின்படி அநுமிதி உண்டாதல்வேண்டும்; பிரத்தியக்ஷ முண்டாகலாகாது. ஏனெனின் முற்கூறிய ஸ்தலத்தில் தாணுவில் புருஷத்தன்மையின் பிரத்தியக்ஷ மிருத்தலால் பிரமப் பிரத்தியக்ஷமாம். பிரமப்பிரத்தியக்ஷத்திற்கு உன்னுடைய மதத்தில் அலௌகிக சாமக்கிரியிருக்கின்றது. ஆதலால் அநுமிதி சாமக்கிரியினும் அலௌகிகப் பிரத்தியக்ஷத்தின் சாமக்கிரிக்கு வலியின்மை அங்கீகரிக்க, முற்கூறியவிடத்தில் அநுமிதி உண்டாதல் வேண்டும். முற்கூறியவிடத்தில் புருஷனது பிரமம் அநுமிதி வடிவமாக அங்கீகரிக்கின், பிற்காலத்தில் "புருஷனைச் சாக்ஷாத்கரிக்கின்றேனென்னும் அநுவியவசாயம் உண்டாதல்வேண்டும்; ஆதலால் இரண்டும் சமான விஷயமாயின், ஆண்டு லௌகிகப் பிரத்தியக்ஷ சாமக்கிரியைப்போல அலௌகிகப் பிரத்தியக்ஷ சாமக்கிரியும் பிரபலமாம்; அநுமிதி சாமக்கிரி துர்ப்பலமாம். ஆதலால் ஞானலக்ஷண சம்பந்தத்தால் பிரத்தியக்ஷத்தின் உற்பத்தி அங்கிகரிக்கின், அநுமிதி ஞானத்தைப் பாதித்துப் பருவதமுதலியவற்றில் வந்நி முதலியவற்றின் பிரத்தியக்ஷ ஞானமே உண்டாகும்.

இதனால் அநுமானப்பிரமாணம நிஷ்பலமாகும். இக்காரணத்தால் எவன் அநுமானப்பிரமாணத்தை அங்கீகரிக்கின்றானோ, அவன் மதத்தில் ஸமிருதி ஞானத்தோடுகூடிய இந்திரிய சையோகத்தினாலேனும், சமஸ்காரத்தோடு கூடிய இந்திரிய சையோகத்தினாலேனும வியவகித வஸ்துவின் பிரத்தியக்ஷஞானம சம்பவிக்கிறதில்லை. ஆதலால சுத்தியின் இரஜதத்தன்மை வடிவால தோற்றுதலாகிய அந்நியதாக்கியாதி சம்பவியாது.

## ககூக. அநிர்வசநீய வாதத்தில் நியாயவாதி கூறிய தோஷத்தின் நிவிருத்தி.

"அநிர்வசநீயக்கியாதியின் மதத்தில் விஷயத்திற்கும காரணத்தன்மை தோஷத்தில் அங்கீகரித்திருக்கின்றனர். அந்நியதாக்கியாதி வாதத்தில் ஞானத்திற்குக் காரணத்தன்மை அங்கீகரித்திருக்கின்றனர்; விஷயத்திற்கில்லை. ஆதலால் அந்நியதாக்கியாதி வாதத்தில் இலாகவமுண்டு. அநிர்வசநீயக்கியாதி வாதிக்கு அந்நியதாக்கியாதியும அங்கீகரித்தல் உண்டாகின்றது. அந்நியதாக்கியாதி வாதிக்கு அநிர்வசநீயக்கியாதி அங்கீகரித்தல் உண்டாகிறதில்லை. இதனாலும இலாகவமிருக்கின்றது." என்றிவ்வாறு அநிர்வசநீயக்கியாதிவாதத்தில தோஷம் சொல்லப்பட்டிருக்கின்றது. இங்ஙனம கூறுவதும அவிவேக காரணத்தினாலாம. ஏனெனின், அந்நியதாக்கியாதிவாதிக்குச்சுருதி ஸமிருதிகளின் ஆஞ்ஞையால் சொப்பனத்திலோ அநிர்வசநீயக்கியாதியை அவசியம அங்கீகரித்தல் வேண்டும. வேதத்திற்கூறிய அர்த்தத்திற்குப் புருஷபுத்தியினால் கற்பிக்கப்படும யுக்தி சமுதாயத்தால் வேறுதன்மையினைக் கற்பித்தல் அதெதிகாரகுரிய நன்று. சுத்தி இரஜதத்தின் தாதான்மியம தோற்றுகின்றது. அங்ஙனமே இதுவெனும பதார்த்தத்தில் இரஜதத்தன்மையின சமவாயம் தோற்றுகின்றது. அங்ஙனமே இதுவெனும பதார்த்தம் இரஜதம் என்பவற்றின் தாதான்மியம் தோற்றுகின்றது. இதுவெனும பதார்த்தம சுத்தியாம. சுத்தி இரஜதங்களின தாதாதமியம் வேறு இடங்களில பிரசித்தமில்லை. ஆதலால் முன்னிருக்கு மிடத்தில சுத்தி இரஜதத்தின தாதான்மியம் அநிர்வசநீயமாக உற்பத்தியாகின்றது. அநிர்வசநீய தாதான்மியத்தின் உற்பத்தி அங்கீகரியாவிடின், அப்பிரசித்தத்தின் அபரோக்ஷப் பிரதீதி யுண்டாகாது. தாதான்மியத்தின் அபரோக்ஷப் பிரதீதி

உண்டாகின்றது. நையாயிகர் ஆக்கிரகத்தால் சுத்தியில் இரஜதத்தன்மையின் சமவாயமே தோற்றுகின்றது எனக்கூறின், அதற்கும் சம்வாய சம்பந்தத்தால் இரஜதத்தன்மை தோற்றுகின்றது என்பது பொருளாம். சுத்தி இரஜதத்தின் தாதான்மியம் தோற்றுகிறதில்லை எனறு கூறின், சுத்தி ஞானத்திற்குப் பிற்காலத்தில் இது இரஜதமன்றெனனும் பாதமுண்டாகின்றது. அதன்பாததியம் (வாதிககபபடுவது) இதுவெனும் பதார்த்தத்தில இரஜதத்தின் தாதான்மியமாம். பிரமகாலத்தில இதுவெனும் பதார்த்தத்தில் இரஜதத்தின் தாதான்மியம் தோற்றுவிடின பாதம் நிர்விஷயமாகும். கேவல இரஜதத் தன்மையின் சமவாயமே சுத்தியில தோற்றுமாயின், "ஈண்டு இரஜதத்தன்மை இல்லை" யெனனும் பாதமுண்டாதல வேண்டும். ஆதலால சுத்தியில இரஜதத்தின் தாதான்மியம் தோற்றுகின்றது. அந்தச் சுத்திரஜதத்தின தாதான்மியம இரண்டையும் அபேக்ஷித்ததாம்; ஓரிடத்தும பிரசித்தமிலலை. ஆதலால் அநிர்வசநீய தாதாத்மியத்தின் உற்பத்தி அந்நியதாக்கியாதி வாதத்தில் ஆவசியகமாம. கேவலம அந்நியதாக்கியாதியினால் நிர்வாக முண்டாகிறதில்லை.

அநிர்வசநீயக்கியாதிவாதிக்கு அந்நியதாக்கியாதி அங்கீகரிக்க வேண்டியதாகின்றது; அதனைத்தக் கிரந்தகாரர்களும அங்கீகரித்திருக்கின்றனர் என்று கூறுதலும அந்நவைத நூல்களின அபிப்பிராயத்தை அறியாததினாலாம். ஏனெனின் அத்வைத வாதத்தில் ஓரிடத்தும அந்நியதாக்கியாதி யில்லை; முழுவதும அநிர்வசநீயக்கியாதியாம. வெகுவாய்ச் சொல்லுவதிலென? யாண்டுப பிரமாண ஞானத்தைக் கூறுகின்றனரோ, ஆண்டும அத்வைத சித்தாந்தத்தில விஷயமும் ஞானமும அநிர்வசநீயமாம. சில ஸ்தானங்களில் அந்நியதாக்கியாதி எழுதி இருப்பதற்கு இது தாற்பரியமாம்:— யாண்டு அதிஷ்டான ஆரோப்பியங்களுக்குச் சம்பந்தமுண்டாய்ப் பரோக்ஷப பிரமமுண்டாகின்றதோ, ஆண்டு அந்நியதாக்கியாதியும் சம்பவிக்கின்றது; ஆனால் முழுவதும அந்நியதாக்கியாதியாகாது. யாண்டு ஆரோப்பியம வியவகிதமாய் அபரோக்ஷப் பிரமம உண்டாகின்றதோ, ஆண்டு அநிர்வசநீயக்கியாதி ஆவசியகமாம. ஆதலால் ஆவசியகமாய் அநிர்வசநீயக்கியாதியினையே முழுவதும் அங்கீகரித்தல் வேண்டும். இவ்வாற்றால் அந்நியதாக்கியாதியைக் கூறுதல் சமபவாபிப்பிராயத்தினாலாம; அங்கீகரிக்கப்படுந் தன்மை அபிப்

பிராயத்தினாலன்று. யாண்டு ஆத்மசத்தையும் அநாத்மாவில் அந்நியதாக்கியாதியாகச் சொல்லப்பட்டதோ, ஆண்டும் ஆத்மசத்தையின் அநிர்வசநீய சம்பந்தம் உற்பத்தியாகின்றது. இவ்வாறாதலால் யாண்டு அநிர்வசநீய சம்பந்தியின் உற்பத்தி சம்பவிக்கவில்லையோ, ஆண்டு அநிர்வசநீய சம்பந்தத்தின் அங்கீகாரமாம். அங்ஙனமே பரோக்ஷப் பிரமம் உண்டாயின், ஆண்டும் அநிர்வசநீயவிஷயத்தின் உற்பத்தி பிராஹ்மவித்தியாபரணத்தில் எழுதப்பட்டிருக்கின்றது. ஆனால் பரோக்ஷப் பிரமம் உண்டாகுமிடத்து அந்நியதாக்கியாதியை அங்கீகரிக்கினும் தோஷமில்லை. இதனாற்றான் சரள (ஒழுங்கான) யுத்தியினால் பரோக்ஷப் பிரமம் அந்நியதாக்கியாதி வடிவமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது.

"அதுவே இவ்விரஜதம்" என்று இவ்வாறு சுத்தியினிடத்து இரஜதத்தின் பிரத்தியபிஞ்ஞைப் பிரமம் உண்டாயின், ஆண்டு அநிர்வசநீய ரஜதத்தின் உற்பத்தி முன்புள்ள இடத்தில் அங்கீகரிக்கின், அடுத்துள்ள இரஜதத்திலோ அதுவென்னுந் தன்மை சம்பவியாது. ஆதலால் தேசாந்தரத்திருக்கும் இரஜதத்துள்ள இரஜதத்தன்மையின் பிரதீதியும், அதுவென்னுந் தன்மையின் பிரதீதியும் சுத்தி பதார்த்தத்தில் உண்டாகின்றன. அலௌகிக ஞானமய சம்பந்தத்தால் தேசாந்தரத்துள்ள இரஜதத்தின் பிரதீதி உண்டாகின்றது. ஆதலால் முற்கூறிய லக்ஷணத்தில் அந்நியதாக்கியாதி ஆவசியகமாம் என்றிவ்வாறு சொல்லுவாராயின், இங்ஙனம் கூறுதலும் அசங்கதமாம். ஏனெனில் முற்கூறிய பிரத்தியபிஞ்ஞையினும் அநிர்வசநீய ரஜதமே விஷயமாம்; தேசாந்தரத்தில் உள்ளதன்று. ஏனெனின் பிரமாதாவோடு சம்பந்தமின்றி அபரோக்ஷ அவபாசம் சம்பவிக்கிறதில்லை. தேசாந்தரத்துள்ள இரஜதத்திற்குப் பிரமாதாவோடுள்ள சம்பந்தம் பாதிதமாம். ஆதலால் தேசாந்தரத்துள்ள இரஜதத்தின் பிரதீதியன்று. யாண்டு யதார்த்தப் பிரத்தியபிஞ்ஞை யுண்டாகின்றதோ, ஆண்டும் அதுவென்னுந் தன்மை அம்சத்தில் ஸ்மிருதி இருக்கின்றதென்பது சித்தாந்தமாம். ஆதலால் "அதுவே இவ்விரஜத" மென்னும் பிரமவடிவ பிரத்தியபிஞ்ஞையும், அதுவென்னுந்தன்மை யம்சத்தில் ஸ்மிருதியும், இது இரஜதமென்னும் இதந்தை அம்சத்தில் அநிர்வசநீயப் பிரத்தியக்ஷமு மிருக்கின்றன. ஆதலால் ஓரிடத்தும் அந்நியதாக்கியாதி ஆவசியகமன்று. யாண்டு அநிர்வசநீய விஷயத்தின் உற்பத்தி சம்பவிக்கவில

லேயோ, ஆண்டு அநிர்வசநீய சம்பந்தத்தின் உற்பத்தி உண்டாகின்றது. எங்ஙனம்: ஆத்மாநாத்மாக்களின் அந்யோந்யாத்யாசமுண்டாகுமிடத்து, அநாத்மாவில் ஆத்மாவும் ஆத்மாவின் தர்மமும் அநிர்வசநீயமாக உற்பத்தியாகின்றன என்று கூறுதல் சம்பவியாது. ஆதலால் ஆத்மாவின் அநிர்வசநீய சம்பந்தமும், ஆத்மதர்மங்களின் அநிர்வசநீய சம்பந்தமும் அநாத்மாவினிடத்து உற்பத்தியாகின்றன. இவ்வாற்றால் முழுவதும் அநிர்வசநீயக்கியாதியினால் நிர்வாகமாகின்றது. ஓரிடத்தும் அந்யதாக்கியாதி அங்கீகரிக்கப்படுகிறதில்லை.

அந்யதாக்கியாதி வாதியானவர் அநிர்வசநீயக்கியாதி வாதத்தில் இக்கௌரவம் சொல்லியிருக்கின்றார்:— தோஷம் அநிர்வசநீய ரஜத முதலியவற்றிற்கும், அவற்றின் ஞானத்திற்கும் காரணமாதலை அங்கீகரித்தலால், கேவல ஞானத்திற்குக் காரணமாதலை அங்கீகரித்தலில் இலாகவ மிருக்கின்றது. அந்யதாக்கியாதி வாதத்தில் இரஜதமோ தேசாந்தரத்தில் பிரசித்தமாம். அதனது இரஜதத்தன்மைத் தர்மத்தின் ஞானம் சுத்தியில் உண்டாகின்றது. அல்லது தாதான்மிய சம்பந்தத்தால் இரஜதத்தின் ஞானம் சுத்தியில் உண்டாகின்றது. இவ்வாற்றால் கேவல ஞானமே தோஷ ஜந்யமாம். அநிர்வசநீயக்கியாதி வாதத்தில் விஷயமும் ஞானமுமாகிய இரண்டினையும் தோஷ ஜந்யமென்பர். ஆதலால் கௌரவ மிருக்கின்றது.

இங்ஙனம் கூறுதலும் அசங்கதமாம். ஏனெனின் இலாவக பலத்தால் அநுபவசித்த பதார்த்தத்தின் லோபத்தைச் செய்யின், யதார்த்தஞானத்தின் விஷயமும் அங்கீகரிக்கப்படாது. விஞ்ஞான வாதத்தின்படி கேவல விஞ்ஞானமே அங்கீகரிக்கின்; மிக்க இலாகவமாம். எங்ஙனம் அநுபவசித்த கடமுதலியவற்றை அங்கீகரித்து இலாகவத்துடனாகிய விஞ்ஞான வாதத்தின் தியாகமுளதாகின்றதோ, அங்ஙனமே அபரோக்ஷ பிரதீதியினாற் சித்தித்த அநிர்வசநீய ரஜத முதலியவற்றை அங்கீகரித்து அந்யதாக்கியாதி வாதமும் தள்ளத்தக்கதாகின்றது.

விசாரிக்குமிடத்துக் கௌரவமும் அந்யதாக்கியாதி வாதத்திருக்கின்றது. ஏனெனின் தேசாந்தரத்துள்ள இரஜதத்தின்ஞானம் அங்கீகரிக்கின், அவர் மதத்தில் அதிகௌரவமுண்டு. இரஜத நேத்

திரசையோகத்திற்கு இரஜத சாக்ஷாத்காரத்தில் காரணத்தன்மை நிச்சயிக்கப்பட்டிருக்கின்றது. நிச்சயிக்கப்பட்ட அதன் தியாக முண்டாகும். இரஜத ஆலோகங்களின் சம்பந்தத்தால் இரஜதத்தின் சாக்ஷாத்காரம் நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றது. அந்நியதாக்கியாதி வாதத்தில் சுத்தி ஆலோகங்களின் சையோகத்தால் இரஜதத்தின் பிரமம் சாக்ஷாத்காரமாகின்றது. அது நிர்ணயிக்கப்படாததாம். இதனால் நிர்ணயிக்கப்படாததின் அங்கீகார முண்டாகின்றது. அங்ஙனமே ஞான லக்ஷண சம்பந்தமும் அப்பிரசித்தமாம். இதனால் அப்பிரசித்தத்தின் அங்கீகார முண்டாகின்றது. ஞான லக்ஷண சம்பந்தத்தினை அங்கீகரிக்கினும், ஸம்பிரதாயத்தின் அலௌகிக சம்பந்தத்தால் பிரத்தியக்ஷ முண்டாகின்றதோ அதன் பிரகடத்தன்மை உண்டாகிறதில்லை. இதனாற்றான் "சுகந்த முடையது சந்தனம்" என்பதாகச் சுகந்தத்தின் அலௌகிகப் பிரத்தியக்ஷ முண்டாகியும், "சுகந்தத்தைச் சாக்ஷாத்கரிக்கின்றேன்" என்னனும் அநுவியவசாய முண்டாகிறதில்லை. அலௌகிக சம்பந்த ஜந்நிய இரஜதப் பிரமம் உண்டாக இரஜதத்தின் பிரகடத்தன்மை உண்டாகின்றது. இதனாற்றான் பிரமத்திற்குப் பிற்காலத்தில் "இரஜதத்தைச் சாக்ஷாத்கரிக்கின்றேன்" என்னனும் அநுவியவசாய முண்டாகின்றது. இவ்வாறான ஞானலக்ஷண சம்பந்தஜந்நிய யதார்த்த ஞானத்தில் பிரகடத் தன்மையை உண்டுபண்ணுந் தன்மையில்லை. பிரமஸ்தலத்தில் அலௌகிக ஞானத்திற்குப் பிரகடத்தன்மையை உண்டுபண்ணுந்தன்மையை அங்கீகரிக்கின், அதுவும் அப்பிரசித்த கற்பனையாம். இவ்வாறு அநேகவித அப்பிரசித்த கற்பனை அந்நியதாக்கியாதி வாதத்தி லிருப்பதால் இப்பக்ஷத்திலேயே கௌரவ முண்டு. தோஷத்திற்கு அநிர்வசநீய விஷயத்தை உண்டுபண்ணுந் தன்மையோ சுருதி ஸ்மிருதிகளின் வலியால் சொப்பனத்திலுண்டு. அப்பிரசித்த கற்பனை யின்று. பிரஹ்மாநந்தரால் செய்யப்பட்ட அநிர்வசநீயவாதத்தில் அந்நியதாக்கியாதியின் கண்டனம் விசேஷமாகச் செய்யப்பட்டிருக்கின்றது. அந்தக்கிரமம் கடினமா யிருத்தலின் பிரஹ்மவித்தியாபரணத்தின் ஸௌரியகிரமமாக அந்நியதாக்கியாதி வாதத்தின் நீக்கப்படுந்தன்மை சொல்லப்பட்டது. ஆதலால் அந்நியதாக்கியாதி அசங்கதமாம்.

---

## ௧௯௨—௧௭௮. அக்கியாதி வாதத்தின் கிரமமும் கண்டநமும்.

### ௧௯௨. அக்கியாதி வாதியின் தாற்பரியம்.

அநங்கேயே அந்கியாதிவாதமும அசங்கதமாம. அக்கியாதி வாதம பிரபாகரரதாம. இது அவரது அபிபபிராயம:—அநநிய சாஸ்திரங்களில் யதாரதத அயதாரத்தமென்னும பேதததால் இரு வகை ஞானம் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. யதாரதத ஞானத் தினுல் பிரவிருததி நிவிருத்திகள் பயனுடையனவாம. அயதாரதத ஞானத்தினுல பிரவிருததி நிவிருததிகள் பயனில்லாதனவாம. இரசகல சாஸ்திரஙகளின் எழுநதும அசங்கதமாம. ஏனெ னின் அயதாரதத ஞானம அபபிரசித்தமாம். சகல ஞானங்க ளும யதாரததமேயாம. அயதாரதத ஞானமும உளதாயின் புருஷனுக்கு ஞானமுண்டாகவே ஞானதன்மைச சாமாநிய தா மததைக் கண்டு, உற்பததியான ஞானத்தில அயதாரத்தத்தின் சநதேகமுண்டாய்ப் பிரவிருத்தி நிவிருததிகளின் அபாவமுண்டா கும. ஏனெனின ஞானததில யதாரதததன்மை நிசசயம அயதா ர்த்தததன்மைச சநதேகம எனபவைறறின அபாவம புருஷனது பிரவிருத்தி நிவிருத்திகளுககு ஏதுவாம அயதாரதத்தன்மையின் சநதேகம உளதாயின் இரண்டும சமபவியா. அயதார்த்த ஞான த்தினை அங்கீகரியாவிடின, அப்போது உறபததியாகிய ஞானததில் முற்கூறிய சநதேகமுண்டாகாது. ஏனெனின் எந்த ஞானமாவது அயதாரததமாகுமாயின், அதன் ஞானததன்மைததாமததினுல்சஜா தீயததன்மையினைத தனது ஞானததிற்கண்டு அயதாரதததன் மைச சநதேகமுண்டாகும. அவ்வயதாரதத ஞானமோ இருப்ப தில்லை. சகல ஞானங்களும் யதாரததமேயாம. ஆதலால் ஞானத் தில் அயதாரத்தததன்மைச சநதேக முண்டாகிறதில்லை. இவ்வாற் ருல் பிரம ஞானம அப்பிரசித்தமாம. யாண்டுச சுத்தியில் இரஜத விருப்புடையோனுககுப் பிரவிருததியும பயத்திற்கேதுவாகிய இர ஜ்ஜுவினினும நிவிருததியும் உண்டாகின்றதோ, ஆண்டும இரஜ தததினது பிரத்தியக்ஷ ஞானமும சாப்பததின் பிரததியக்ஷ ஞான மமில்லை. இரஜதத்தின் பிரததியக்ஷ ஞானமும சாப்பத்தின பிரத் தியக்ஷ ஞானமும முற்கூறியவிடத்தி லிருக்குமாயின் யதார்த் தமோ சமபவியாது; ஆதலால அயதார்ததமாம. அநத அயதாரத்த ஞானம் பொய்யாம. ஆதலால் முறகூறியவிடததில இரஜத

சாப்பங்களின் பிரத்தியக்ஷ ஞானமில்லை. ஆனால் இரஜதத்தின் ஸ்மிருதி ஞானமும், சுத்தியின் இதுவெனும் வடிவத்தால் சாமாந்ய ஞானமாகிய பிரத்தியக்ஷமு மிருக்கின்றன. அங்ஙனமே முன் அநுபவிக்கப்பட்ட சாப்பத்தின் ஸ்மிருதிஞானமும், சாமாந்ய இதுவெனும் வடிவத்தால் இரஜ்ஜுவின் பிரத்தியக்ஷ ஞானமு மிருக்கின்றன. சுத்தியினோடுமே அங்ஙனமே இரஜ்ஜுவினோடுமே தோஷத்தோடுகூடிய நேத்திரத்தின் சம்பந்த முண்டாகின்றது. ஆதலால் சுத்தியின் விசேஷவடிவமும், அங்ஙனமே இரஜ்ஜுவின் விசேஷவடிவமும் விளங்குகிறதில்லை. ஆனால் சாமாந்ய வடிவமாகிய இதனை விளங்குகின்றது. சுத்தியினோடு நேத்திரத்தின் சம்பந்த ஜந்நியஞானம் உண்டாய், இரஜதத்தின் சம்ஸ்காரம் உற்புத்தமாய்ச் சுத்தியின் சாமாந்ய ஞானத்திற்கு அடுத்தக்ஷணத்தில் இரஜதத்தின் ஸ்மிருதி உண்டாகின்றது. அங்ஙனமே இரஜ்ஜுவின் சாமாந்ய ஞானத்திற்கு அடுத்தக்ஷணத்தில் சாப்பத்தின் ஸ்மிருதி உண்டாகின்றது. சகல ஸ்மிருதி ஞானங்களிலும் பதார்த்தங்களின் அதுவெனுந்தன்மையும் தோற்றுகின்றது. என்றாலும் தோஷத்தோடுகூடிய நேத்திரத்தின் சம்பந்தத்தால் சம்ஸ்காரம் உற்புத்தமாம். ஆண்டுத் தோஷத்தின் மகாத்மியத்தால் அதுவெனுந்தன்மை அம்சத்தின் பிரமோஷம் (லோபம்) உண்டாகின்றது. ஆதலால் பிரமுஷ்ட அதுவெனுந் தன்மைகளின் ஸ்மிருதி உண்டாகின்றது. பிரமுஷ்டமென்பது லுப்தமாய் (மறைந்து) இருப்பதாம். அதுவெனுந் தன்மை எதற்கு உளதோ, அது பிரமுஷ்ட அதுவெந்தன்மையுடையதெனும்சொல்லின் பொருளாம். இவ்வாற்றால் "இதுஇரஜதம், இதுசாப்பம்" என்றல் முதலியஸ்தலங்களில் இரண்டு ஞானமுண்டு. ஆண்டுச்சுத்தி இரஜ்ஜுக்களின் சாமாந்ய இதுவெனும் வடிவத்தின் பிரத்தியக்ஷ ஞானம் யதார்த்தமாம். இரஜதத்தின் அங்ஙனமே சாப்பத்தின் ஸ்மிருதிஞானமும் யதார்த்தமாம். விசேஷமாகிய சுத்தி இரஜ்ஜுபாகங்களை விட்டுப் பிரத்தியக்ஷ ஞானமும், அதுவெனுந் தன்மைப் பாகமின்றிய ஸ்மிருதி ஞானமும் உண்டாயிருக்கின்றன. என்றாலும் ஒரு பாகத்தை விடுதலால் ஞானம் அயதார்த்தமாகிறதில்லை. ஆனால் அந்நிய வடிவத்தால் ஞானத்தினை அயதார்த்தமென்பர். ஆதலால் முற்கூறிய ஞானம் யதார்த்தமாம்; அயதார்த்தமன்று. இவ்வாற்றால் பிரமஞானம் அப்பிரசித்தமாம்.

---

## ௧௬௩. அக்கியாதிவாதி பிறரால் செய்யப்பட்ட சங்கையை நிவர்த்தித்தல்.

வேறு ஸாஸ்திரகாரர் இவ்வாறு கூறுவர். எப்பதார்த்தத்தில் இஷ்டசாதனத் தன்மை (விரும்பப்பட்டதற்கு ஏதுவாந்தன்மை) ஞானம் உண்டாகின்றதோ, அதனிடத்தப்பிரவிருத்தி யுண்டாகின்றது. எதனிடத்தில் அநிஷ்ட சாதனத்தன்மைஞானம (விரும்பப்படாததற்குஏதுவாந்தன்மையின் உணர்ச்சி)உண்டாகின்றதோ, அதனின் றும நிவிருத்தி உண்டாகின்றது. அக்கியாதிவாதியின்மதத்தில சுத்தியில இஷ்ட சாதனத்தன்மை ஞானத்தைக்கூறின் பிரமத்தின் அங்கீகாரமுண்டாகும். ஆதலால் இஷ்ட சாதனத்தன்மை ஞானத்தின அபாவத்தாலசுத்தியில இரஜதவிருப்புடையோனுக்குப்பிரவிருத்தி உண்டாகலாகாது. அங்ஙனமே இரஜ்ஜுவில அநிஷ்ட சாதனத்தன்மையில்லை. அதன ஞானத்தை அங்கீகரிக்கின பிரமத்தின் அங்கீகாரமுண்டாகும். ஆதலால் அநிஷ்டசாதனத்தன்மை ஞானத்தின் அபாவத்தால நிவிருத்தி உண்டாகலாகாது. ஆதலால் பிரமஞானம அவசியகமாமெனக் கூறுகின்றனர். அதற்கு இவ்வாறு அக்கியாதிவாதி சமாதானம செய்கின்றார்:—எந்தப்பதார்த்ததிலபுருஷனது பிரவிருத்தி உண்டாகின்றதோ, அந்தப் பதார்த்தத்தின சாமானியவடிவமான பிரத்தியக்ஷ ஞானமும், இஷ்டபதார்த்தத்தின ஸ்மிருதியும், ஸ்மிருதியின் விஷயத்தினும முன்னிடத்துள்ள பதார்த்தத்தின் பேத ஞானபாவமும், அங்ஙனமே ஸ்மிருதி ஞானத்திற்கு முன்னிருப்பதின ஞானத்தினும் பேதஞானமின்மையுமாகிய இத்துணைச் சாமக்கிரிகள பிரவிருத்திக்கு ஏதுவாம். ஆதலால் பிரமஞான மின்றிப் பிரவிருத்தி சம்பவிக்கின்றது. விஷயத்திற்கும் ஞானத்திற்கும உள்ள பேத ஞானமின்மையே பிரவிருத்தியில் ஏதுவாமெனக்கூறின், உதாசீன தசையில் பிரவிருத்தி உண்டாதல் வேண்டும். விஷயத்தின் சாமானிய ஞானத்தோடு கூடிய இஷ்டத்தின் ஸ்மிருதியே பிரவிருத்திக்குக் காரணமெனக்கூறின், "தேசாந்தரத்திலுள்ள அவ்விரஜதம் கிருஹித்து இது" என்றிவ்வாறு தேசாந்தர சம்பந்த வடிவமாக இரஜதத்தின் ஸ்மிருதி உண்டாய்ச் சுத்தியின் ஞானம் கிருஹிதமெனனும் வடிவான் உண்டாகுமாயின், ஆண்டும் இரஜத விருப்புடையோனுக்குப் பிரவிருத்தி உண்டாதல் வேண்டும. ஆதலால் இஷ்டபதார்த்தத்தோடு

விஷயத்தின் பேத ஞானம் இன்மையும் பிரவிருத்திக்கு ஏதுவாம். முற்கூறிய ஸ்தலத்தில் இஷ்டமாகிய இரஜதத்திற்குச் சுத்தியோடு பேத ஞான மிருக்கின்றது; அதன் அபாவமில்லை. ஆதலால் பிரவிருத்தி உண்டாகிறதில்லை. இஷ்டபதார்த்தத்திற்கு முன்னிருப்பதனோடு பேதஞான மின்மையைப் பிரவிருத்தியின் சாமக்கிரியில் சேர்த்து, இரண்டு ஞானங்களுக்கும் பேத ஞான மின்மை இல்லையெனக்கூறின், இது இரஜதமென்பதாக இரண்டு ஞானமுண்டாய், இதுவெனும் பதார்த்தத்தின் பிரத்தியக்ஷ ஞானம் எனக்குண்டாயிருக்கின்றது, இரஜதத்தின் ஸ்மிருதி ஞானமும் உண்டாயிருக்கின்றதென்பதாக இரண்டு ஞானங்களின் பேத ஞானமுண்டாகும், அல்லது இதுவெனும் பதார்த்தத்தின் ஞானமும் இரஜதபதார்த்தத்தின் ஞானமும் ஒன்றுக்கொன்று பின்னமாயுண்டாயிருக்கின்றன வென்பதாகப் பேத ஞான முண்டாகும். ஆண்டும் விஷயத்தின் பேதஞானமில்லை. இதனாற் பிரவிருத்தி உண்டாதல் வேண்டும். ஆதலால் ஞானத்தின் பேதஞான மின்மையையும் பிரவிருத்தி சாமக்கிரியில் சொல்லுதல் வேண்டும். முற்கூறிய விடத்தில் முன்னிருப்பதின் சாமாந்நிய ஞானமும் இஷ்ட ரஜதத்தின் ஸ்மிருதியும் இருக்கின்றன. அங்ஙனமே முன்னிருப்பதனோடு இஷ்ட ரஜதத்தினது பேதஞானத்தின் அபாவமுமிருக்கின்றது. ஆனால் இரண்டுஞானங்களின் பேதஞான மிருக்கின்றது; அதனபாவமில்லை. இவ்வாறனால் இரண்டுவகைப் பேதஞானத்தோடு கூடிய இஷ்டஸ்மிருதியோடுள்ள முன்னிருப்பதின் சாமாந்நிய ஞானம் பிரவிருத்திக்கு ஏதுவாம். அந்த முன்னிருப்பதாகிய சுத்தியின் இதுவெனும் வடிவ சாமாந்நிய ஞானம் யதார்த்தமாம். ஆதலால் பிரமத்தின் அங்கீகாரம் நிஷ்பலமாம். யாண்டுச் சுத்தியில் இரஜதத்தின் பேத ஞான முண்டாகின்றதோ, ஆண்டு இரஜதவிருப்புடையோனுக்கும் பிரவிருத்தி உண்டாகிறதில்லை. சுத்திஞானத்தில் இரஜத ஞானத்தின் பேதத்தைக் கொள்ளுதல் உண்டாகுமிடத்தும் பிரவிருத்தி உண்டாகிறதில்லை. ஆதலால் பேதஞானம் பிரவிருத்தியின் பிரதிபந்தகமாம். பிரதிபந்தகத்தின் அபாவம் காரணமாகின்றது. ஆதலால் பேதஞானத்தின் அபாவத்தில் பிரவிருத்தியின் காரணத்தன்மையை அங்கீகரித்தலில் அப்பிரசித்த கற்பனையின்று. யாண்டு இரஜ்ஜு தேசத்தினின்றும் பயகாரணத்தினால் ஓடுதல் உண்டாகின்றதோ, ஆண்டும் சர்ப்பப் பிரம முண்டாகிறதில்லை. ஆனால் துவே

ஷத்தைக் கோசரிக்கும் சாப்பதத்தின் ஸ்மிருதியும், இரஜ்ஜுவின் சாமானிய ஞானமும், அங்ஙனமே ஞானத்திற்கும் அதன் விஷயத்திற்கும் உள்ள பேத ஞானமின்மையும் ஓட்டத்திற்குக் காரணமாம். ஓடுதலும் பிரவிருத்தி விசேஷமாம். ஆனால் அந்தப் பிரவிருத்தி விஷயத்தின் எதிர்முக மன்று; ஆனால் புறமுகப் பிரவிருத்தியாம். புறமுகப் பிரவிருத்தியில் துவேஷ கோசரத்தின் ஸ்மிருதி ஏதுவாம். எதிர்முகப் பிரவிருத்தியில் இச்சையின் கோசரத்தினது ஸ்மிருதி ஏதுவாம். இவ்வாறல்ல பயந்தாற றோன்றிய ஓடுதல் முதலிய கிரியையுண்டாயின், அதனைப் பிரவிருத்தி யென்க அல்லது நிவிருத்தியென்க. அதற்கு ஏது துவேஷ கோசர பதார்த்தத்தின் ஸ்மிருதியாம். யாண்டுச் சுத்திஞானத்தினால் இரஜத விருப்புடையோனது பிரவிருத்தியின் அபாவ வடிவ நிவிருத்தி உண்டாகின்றதோ, ஆண்டு அதற் கேதுவோ சுத்திஞானமாம். அதுவும் பிரம மன்று. யாண்டுச் சத்திய ரஜதத்தில இரஜத விருப்புடையோனுக்குப் பிரவிருத்தி உண்டாகின்றதோ, ஆண்டு இரஜதத்தன்மை விசிஷ்ட இரஜதத்தின் ஞானமே இரஜத விருப்புடையோனது பிரவிருத்திக்கு ஏதுவாம். முன்னிருப்பதாகிய சத்திய ரஜதத்தில் இரஜதத்தின் பேத ஞானுபாவம் பிரவிருத்திககு ஏதுவன்று. ஆதலால் விசிஷ்டஞானத்தில பிரவிருத்தியை உண்டுபண்ணுந் தன்மைக்கு முற்றும் லோபமில்லை. ஏனெனின் யாண்டுச் சத்திய ரஜத மிருக்கின்றதோ, ஆண்டு முன்னிருப்பதாகிய இரஜதத்தில் இரஜதத்தின் பேத ஞானுபாவமே பிரவிருத்திக்கு ஏதுவெனக் கூறின் சம்பவியாது. பிரதியோகி பிரசித்தமாயின் அதன் அபாவம வியவகார கோசரமாகும். அப்பிரசித்தப் பிரதியோகியின் அபாவம் வியவகார யோக்கியமன்று. எங்ஙனம: முயற்கோட்டினது அபாவத்தின் பிரதியோகி அப்பிரசித்தமாதலால, முயற்கோட்டின் அபாவமும பொய்யாம. பொய்ப பதார்த்தத்தினால ஒரு வியவகாரமு முண்டாகிறதில்லை. கேவல சப்தப்பிரயோகமும் விகற்பவடிவ ஞானமுமோ பொய்ப பதார்த்தத்திற்கு உண்டாகின்றது. பொய்ப் பதார்த்தத்தில் காரணத்தன்மை காரியத்தன்மை நித்தியத்தன்மை அநித்தியத்தன்மை முதலிய வியவகார முண்டாகிறதில்லை. ஆதலால் பிரசித்த பதார்த்தத்தின அபாவமே வியவகார யோக்கியமாகின்றது. அப்பிரசித்தத்தின் அபாவம எந்த வியவகாரத்திற்கும யோக்கிய மன்று; அதனால் பொய்யாம. சத்திய ரஜதத்தில் இரஜதத்

தின் பேதமில்லை. ஆதலால் சத்திய ரஜதத்தில் இரஜதத்தின் பேத ஞானம் சம்பவியாது. பிரமஞானத்தை அங்கீகரிக்கின் சத்திய இரஜதத்தில் இரஜதத்தின் பேதஞானம் சம்பவிக்கும். அக்கியாதி வாதியின் மதத்தில் பிரமஞானம் அப்பிரசித்தமாம். ஆதலால் சத்திய ரஜதத்தில் இரஜதத்தின் பேதஞானம் சம்பவிக்கிறதில்லை. இவ்வாற்றால் சத்திய ரஜதத்தில் இரஜதப் பிரதியோகியினையுடைய பேத ஞானவடிவப் பிரதியோகியின் சம்பவமின்மையால், சத்திய ரஜதத்தில் இரஜதப் பிரதியோகியினையுடைய பேதஞானத்தின் அபாவம் பொய்யாம். அதனிடத்துப் பிரவிருத்தியை உண்டுபண்ணுந் தன்மை சம்பவியாது. ஆதலால் சத்திய இரஜத ஸ்தலத்தி லுள்ள முன்னிருக்குமிடத்தில் இரஜதத்தன்மை விசிஷ்ட ரஜத மிருக்கின்றதென்னும் விசிஷ்டஞானமே இரஜத விருப்புடையோனுக்குப் பிரவிருத்திக்கு ஏதுவாம். அக்கியாதி வாதத்தில் பிரம ஞானமோ இல்லை. சகல ஞானமும் யதார்த்தமாம். எனினும் சில விடத்துப் பிரவிருத்தி பயனுடையதாகின்றது. இதற்கு ஏது கூறுதல் வேண்டும். அதனிடத்து இது ஏதுவாம். விசிஷ்டஞான ஜந்நியப் பிரவிருத்தி ஸபலமாகின்றது. பேத ஞானபாவ ஜந்நியப் பிரவிருத்தி நிஷ்பலமாகின்றது. இரஜத தேசத்திலும் பேத ஞானபாவ ஜந்நியப் பிரவிருத்தியைக் கூறின், சகலமும் சமப்பிரவிருத்தி யாதல் வேண்டும். ஆதலால் ஸபலப் பிரவிருத்தியை உண்டுபண்ணுவது விசிஷ்ட ஞானமெனக் கொள்ளுதல் வேண்டும். யாண்டுச் சத்திய ரஜதத்தில் இரஜதார்த்தியின் பிரவிருத்தி உண்டாகவில்லை யோ, ஆண்டு பிரவிருத்தியபாவ வடிவ நிவிருத்தி இருக்கின்றது. அதற்கு ஏது இரஜதத்தன்மை விசிஷ்ட இரஜத ஞானபாவமாம். ஆண்டும் பிரமவடிவ இரஜதாபாவ ஞானமில்லை. ஏனெனின் பிர விருத்தி நிவிருத்தி ஒன்றற்கொன்று பிரதியோகி அபாவ வடிவ மாம். பிரவிருத்தி வடிவப் பிரதியோகிக்கு ஏது இரஜதத்தன்மை விசிஷ்ட இரஜத ஞானமாம். பிரவிருத்தியின் அபாவ வடிவ நிவி ருத்திக்கு ஏது இரஜதத்தன்மை விசிஷ்ட ரஜதஞானத்தின் அபாவ மாம். இவ்வாற்றால் அக்கியாதி வாதத்தில் விஷயமும் இருப்ப தில்லை. விஷயார்த்திக்குப் பிரவிருத்தி உண்டாகின்றது. அதற்கேது இஷ்டத்தின் ஸ்மிருதி முதலியனவாம்; விசிஷ்டஞான மன்று. யாண்டுச் சுத்திதேசத்தில் இது இரஜதமென்னும் ஞானம் உண் டாகின்றதோ, அது ஒரு ஞானமன்று. சுத்தியின் இதுவெனும்

வடிவ சாமாநியஞானம, இரஜதத்தின் பிரமுஷ்ட அதுவெனுந தன்மையினையுடைய ஸமிருதி என்னும் இரண்டு ஞானங்களால் பிரவிருத்தி உண்டாகின்றது. ஆனால் பேத ஞானுபாவ முண்டாயின் அப்பொது பிரவிருத்தி உண்டாகின்றது. பேதஞான முண்டாயின் பிரவிருத்தி உண்டாகிறதில்லை. ஆதலால் ஞான மிரண்டோடு கூடிய பேதஞானுபாவம பிரவிருத்திககு ஏதுவாம்.

அநேக நூல்களில் சமபந்தமின்மையைக் கிரகித்தலின் இன்மையால் பிரவிருத்தி கூறப்பட்டிருக்கின்றது. அதன் பொருள் இதுவாம:—சுத்தியில இரஜதத்தன்மையின சமபந்தமின்மை இருக்கின்றது. அங்ஙனமே இரஜதத்தின தாதாத்மிய சம்பந்தமும் இதுவெனும் பதார்த்தத்திலில்லை. இவ்வாறு எவனுக்கு ஞானமுண்டாகின்றதோ, அவனுக்குப் பிரவிருத்தி உண்டாகிறதில்லை. ஆதலால் சமபந்தமின்மையைக் கிரகித்தலின் அபாவம் பிரவிருத்திக்கு ஏதுவாம். இதனால் பேதத்தைக் கிரகித்தலின் அபாவத்திற்குச சமான அர்த்தமே சித்தமாகின்றது. ஆனால் இவ்வாறு பிரவிருத்தி உண்டாயின் அது நிஷ்பலமாம. விஷயதேசத்தில் விஷய விருப்புடையோனுக்குப் பிரவிருத்திக்கு ஏதுவாகிய விசிஷ்டஞானமிருக்கின்றது, விசிஷ்டஞானத்தினால யாண்டுப் பிரவிருத்தி உண்டாகின்றதோ, ஆண்டு ஸபலமாகின்றது. பிரமஞானம அபபிரசித்தமாம். சகல ஞானமும் யதார்த்தமாம். யாண்டு ஞானமிரண்டினால் நிஷ்பலப் பிரவிருத்தி உண்டாகுமோ, ஆண்டு ஞானமிரண்டினையுமே பிரமமென்ப. இது பிரபாகரரது அக்கியாதிவாதமாம். ஞானத்துவயத்தின விவேகமின்மையும இரண்டு விஷயங்களின் விவேகமின்மையும அக்கியாதியெனும் சொல்லிற்குப் பாரிபாஷிகப் பொருளாம.

## கக௬ச. அக்கியாதிவாதத்தின் கண்டனம்.

இமமதமும் நலமுடையதன்று:—ஏனெனின் சுத்தியில் இரஜதப் பிரமத்தினால பிரவிருத்தித்த புருஷனுக்கு இரஜதத்தின் இலாபமுண்டாகிறதில்லை அப்போது புருஷன், இரஜத சூனியவிடத்தில் இரஜதஞானத்தினால் எனக்கு நிஷ்பலப பிரவிருத்தி யுண்டாயிற்றென்று கூறுகின்றான். இவ்வாறன்றேல பிரமஞானம அநுபவசித்தமாம். அதன் லோபம சமபவியாது. மரு பூமியில ஜலத்தின் பாதமுண்டாயின், அப்போது இது கூறுகின்றான்:—மரு பூமியில் மித்

தியாஜலத்தின் பிரதீதி எனக்குண்டாயிற்றென்னும பாதத்தினு லும மிததியாஜலமும அதன பிரதீதியுமுண்டாகின்றன. அக்கியாதி வாதியின் கிரமமாகவோ, இரஜததகின ஸமிருதி சுத்தி ஞானம எனபவற்றின் பேதத்தைதக கிரகிததலினமையால், எனக்குச் சுத தியினிடததுப் பிரவிருததி உண்டாயிறறென்னும் பாத முண்டா தல்வேண்டும். மரு பூமியின பிரததியக்ஷததினுலும ஜலத்தின் ஸமிருதியினுலும எனககுப் பிரவிருத்தி உண்டாயிற்று என் னும் பாத முண்டாதல்வேணடும. விஷயமும அங்ஙனமே பிரம ஞானமுமாகிய இரணடையும விட்டு அநேகவித விருதத கற் பனை அககியாதி வாததநதி லிருககின்றது. எஙஙனமெனின :— நேததிர சையோக முண்டாயத தோஷததின் மகாதமியத்தால் சுத்தியின விசேஷ வடிவ ஞான முண்டாகவிலலை என்னும கற் பனை விருததமாம. அஙஙனமே அதுவெனுந தன்மை அமசததின் பிரமோஷததினுல் ஸமிருதியின கற்பனை விருததமாம. விஷயங் களுக்குப் பேதமிருககின்றது ; தோற்றுகிறதிலலை. அங்ஙனமே ஞானங்களுக்குப் பேதமிருககின்றது, எபபோதும தோற்றுகிற திலலை எனனும கற்பனை விருததமாம். இரஜததததின் பிரதீதிகாலத் தில் எதிர்முகவிடததில இரஜதப்பிரதீதி உணடாகின்றது. இதனுல் அககியாதிவாதம அநுபவ விருததமாம்.

அக்கியாதிவாதியின் மததததில இரஜதத்தின் பேதத்தைக் கிர கித்தல் பிரவிருததிககுப் பிரதி பநதகமா யிருததலால், இரஜதத தின் பேததததைக கிரகிததலின்மை எங்ஙனம் இரஜத விருபபுடை யோனது பிரவிருததிககு ஏதுவெனக் கொள்ளபபட டிருக்கின் றதோ, அங்ஙனமே சததியரஜத ஸதலத்தில இரஜததததின அபே தத்தைக் கிரகிததல நிவிருததிககுப் பிரதிபநதக மெனபது அநு பவ சிததமாம. ஆதலால் இரஜதததததினது அபேததததைக கிரகித் தலின் இன்மை நிவிருததிக்கு ஏதுவாகும. இவ்வாற்றுல் இரஜ தத்தினது பேத ஞானததின் அபாவம இரஜத விருப்புடையோ னது பிரவிருத்திக்கு ஏதுவாம. இரஜதததினது அபேத ஞானத் தின் அபாவம. இரஜத விருப்புடையோனது நிவிருததிககு ஏது வாம். சுத்தி தேசததில இது இரஜத மென்றிரண்டு ஞான முண் டாகின்றது. ஆண்டு அககியாதிவாதியின் மதத்தில் இரண்டு மிருக் கின்றன. ஏனெனின சுததியில இரஜதத்தின் பேதமோ இருக்கின் றது. ஆனுல் தோஷபலத்தால இரஜதததினது பேததததின் ஞா

னம சுத்தியில் உண்டாகிறதில்லை. ஆதலால் பிரவிருத்திக்கு ஏது இரஜதத்தினது பேத ஞானத்தின் அபாவமாம். சுத்தியில் இரஜதத்தின அபேதமில்லை. அக்கியாதிவாதத்தில் பிரமத்தின் அங்கீகாரமில்லை. ஆதலால் சுத்தியில் இரஜதத்தின் அபேதஞானம் சம்பவிக்கிறதில்லை. இவ்வாற்றால் சுத்தியினால் இரஜத விருப்புடையோனுடைய நிவிருத்திக்கு ஏது இரஜதத்தினது அபேதஞானத்தின் அபாவமாம். இரஜத விருப்புடையோனுக்குச் சாமக்கிரி இரண்டுமாம். பிரவிருத்தி நிவிருத்திகளிரண்டும் ஒன்றற்கொன்று விரோதிகளாம். ஒருகாலத்தில் இரண்டும் சம்பவியா. இரண்டும் சம்பவியாமையால் இரண்டையும் விடின், அதுவு(விடுதலு)ம் சம்பவியாது. ஏனெனின் பிரவிருத்தியின அபாவமே இந்த ஸ்தானத்தில் நிவிருத்தி பதார்த்தமாமாகலின், பிரவிருத்தியை விடின நிவிருத்திப்பெருக் குண்டாகின்றது. நிவிருத்தியைவிடின் பிரவிருத்திப் பெருக்குண்டாகின்றது. இவ்வாற்றால இரண்டையும விடுதலினும்,இரண்டையும அநுஷ்டித்தலினுமசக்தியற்றவனான அக்கியாதிவாதி வியாகூலமடைந்து வெட்கத்தினால் பிராணனை விடுவான். ஆதலால் அக்கியாதிவாதம மரணாந்திற கேதுவாம. இவ்வர்த்தத்தில் அநேகம பக்ஷங்களுண்டு. கிலேச முண்டாமென்றறிந்து எழுதப்படவில்லை.

அக்கியாதிவாதியின் மதத்திலும் இச்சையின்றிப் பிரமஞானத்தின் சாமக்கிரியின் பலத்தால் சித்தமாகின்றது. யாண்டு தூமமின்றிய வந்நியோடு கூடிய பாவதத்தில் தூளிபடலத்தைக் கண்டு, வந்நிவியாப்பிய தூமமுடையது என்னும பராமரிசம் உண்டாகின்றதோ, ஆண்டு வந்நியின் பிரமைவடிவ அநுமிதி உண்டாகின்றது. ஏனெனின் அநுமிதியின் விஷயமாகிய வந்நி பாவதத்தில் இருப்பதாயிருக்கின்றது; ஆதலால் பிரமையாம். அதற்கு ஏதுவான "வந்நிவியாப்பிய தூமமுடையதுமலை" என்றிவ்வாறு பர்வதத்தில் வந்நிவியாப்பிய தூமத்தினது சம்பந்தத்தின் ஞானமோ அக்கியாதிவாதியின் மதத்தில் சம்பவிக்கிறதில்லை. ஏனெனின் பர்வதத்தில் தூமத்தின் சம்பந்தமில்லை. பிரமஞானத்தின் அங்கீகாரமுளதாயின், தூமசம்பந்தமின்றிய பாவதத்தில் தூமசம்பந்தத்தின் ஞான முண்டாகும. பிரமஞானத்தின் அங்கீகாரமில்லையாகலின், தூமமின்றியதில் தூமசம்பந்தத்தின் ஞானம உண்டாகிறதில்லை. ஆதலால் பாவதத்தில் தூமத்தின் சம்பந்தமின்மை ஞான

த்தின அபாவவடிவ பராமரிசமே முற்கூறிய அநுமிதிக்குக்காரண மாயிருத்தலின், சகல பக்ஷத்திலும ஏதுவின் சமபந்தமின்மை ஞானத்தினது அபாவமே அநுமிதிக்குக காரணமெனக் கொள்ளு தல் வேண்டும. யாண்டுப் பக்ஷத்தில் ஏதுவின சமபந்த மிருக்கின்ற தோ, ஆண்டுப் பக்ஷத்தில சமபந்தமின்மை ஞானத்தின் அபாவ மிருககின்றது. பக்ஷத்தில் ஏதுவின சமபநதஞானமு மிருக்கின் றது. ஆனால் யாண்டு முற்கூறிய பாவதத்தில தூம மிலலாதிருநது அநுமிதி உண்டாகின்றதோ, ஆண்டுப பக்ஷத்தில் ஏதுவின சம் பநதஞானம சமபவிககிறதில்லை. ஏதுவின சம்பநதமினமை ஞான த்தின் அபாவம முழுவதும சமபவிககின்றது ஆதலால பக்ஷத தில் ஏதுவின் சமபநதமின்மை ஞானததின அபாவமே அநுமிதி க்குக் காரணமென அக்கியாதி வாததநில சிததமாகினறது. ஆத லால் சொல்லப்படும கிரமமாக லகஙகிரக (தொணடையைப் பிடித் தலெனும) ஞாயததால அக்கியாதிவாதியின் மததநில் அநுமிதி வடிவுபிரமஞானததின்சிததி உண்டாகின்றது. எங்ஙனமெனின்:— எஙஙனம் வந்தியின் வியாப்பிய தூமமிருககின்றதோ, அங்ஙனமே இஷ்டசாதனத தனமையின வியாப்பிய இரஜததனமை இருக் கின்றது. “யாண்டு யாண்டு இரஜதததனமை ஆண்டாண்டு இஷ்ட சாதனததனமை” என்பதாக இரஜதததனமையில இஷ்டசாதனத் தன்மையின்வியாப்தி இருக்கினறது. எதனிடததில எதன்வியாப்தி உண்டாகினறதோ, அது அதன வியாப்பியமாகின்றது. எதன் வியாப்தி உண்டாகின்றதோ அது வியாபகமாகின்றது. இவ்வாற் ருல் இஷ்டசாதனததன்மை வியாபகமும இரஜதததனமை வியாப் பியமுமாம. வியாப்பியம் ஏதுவும வியாபகம சாததியமு மாகின் றன. இவ்வாறு அநுமானததில எழுதப்பட்டிருககினறது. ஆத லால் இரஜததன்மை ஏதுவினுல இஷ்ட சாதனததன்மை வடிவ சாத்தியததின் அநுமிதி உண்டாகின்றது. இவ்வாததமோ எலலா ருடைய மததநினும விவாதமின்றியதாம. அநநிய மதத்திலோ வியாப்பியமாகிய ஏதுவின் சமபநத ஞானததால வியாபகமாகிய சாததியத்தின் அநுமிதி உண்டாகினறது. அக்கியாதி வாதத்தில், பக்ஷத்தில் வியாப்பிய ஏதுவின் சமபந்தமின்மை ஞானத்தின் அபா வத்தால் சாததியத்தின் அநுமிதி உண்டாகின்றதென்னும் அர்த் தம சொல்லப்பட்டிருக்கின்றது. ஆதலால் இது இரஜதம்என்பதாக யாண்டுச் சுத்திதேசததில் ஞான முண்டாகின்றதோ, ஆண்டு இது

வெனும் பதார்த்தமாகிய சுத்தியில் இரஜதத்தன்மையின் ஞான மோ இல்லை. அங்ஙனமாயினும் இரஜதத்தன்மையினது சம்பந்த மின்மையின் ஞானமில்லை. ஆதலால் இரஜதத்தன்மையின் சம்பந்த மின்மையினது ஞானத்தின் அபாவமிருத்தலால் இதுவெனும் பதார்த்த வடிவபக்ஷத்தில் இரஜதத்தன்மை வடிவ ஏதுவின் சம்ப ந்தமின்மை ஞானத்தின் அபாவத்தால் இஷ்ட சாதனத்தன்மை வடிவ சாத்தியத்தின் அநுமிதி இச்சையினறிச் சாமக்கிரிபலத் தில் சித்தமாகின்றது. அந்த இதம்பதார்த்தத்தில் இஷ்ட சாதன த்தன்மையின் அநுமிதி பிரமவடிவமாம் ஏனெனின் இதுவெனும் பதார்த்தம் சுத்தியாம். அதனிடத்து இஷ்டசாதனத்தன்மை இல் லை. இஷ்ட சாதனமின்றியதில் இஷ்ட சாதனத்தன்மையின் அநு மிதிஞானம் பிரமவடிவமாம். இவ்வாறு கலக்கிரக நியாயத்தால் அக் கியாதிவாதியின் மதத்தில் பிரம ஞானத்தின் சித்தி உண்டாகின் றது. தூளிபடலத்தோடுகூடிய பாவத்தத்தில் எந்தத்தூமத்தின் பரா மரிசம் சொல்லப்பட்டதோ, ஆண்டுத் தூமத்தின் சம்பந்த ஞானம் பாவத்தத்தில் அங்கீகரிக்கின், தூமத்தின் சம்பந்தஞானமே பிரம வடிவமென்று கொள்ளுதல் உண்டாகின்றது. அப்பாவத்தத்தில தூமத்தின் சம்பந்தமின்மை ஞானத்தின் அபாவம் அநுமிதிக்கு ஏதுவெனக் கூறின், அந்நல்தானத்திலோ பிரமஞானத்தின் அங் கீகாரத்தினாலும் நிர்வாக முண்டாயிற்று. ஆனால் சகல அநுமிதி களிலும் ஏதுவின் சம்பந்தமின்மை ஞானத்தின் அபாவத்தினைக் காரணமெனக்கொண்டு, சுத்தியில் இரஜதத்தன்மையின் சம்பந்த மின்மை ஞானத்தின் அபாவத்தால் இஷ்டசாதனத்தன்மையின் பிரமவடிவ அநுமிதி சித்தமாயிற்று. இவ்வாற்றால் உபயதப்பாசா இரஜ்ஜு நியாய(உபயதஃபாசாரஜ்ஜு ந்யாய) த்தால் (இரண்டு புறமும் கட்டியுள்ள கயிற்றுத் திருஷ்டாந்தத்தால்) அக்கியாதிவா தியின் மதத்தில் பிரமம் சித்தமாகின்றது.

இன்னும் அக்கியாதிவாதத்தில் தோஷமிருக்கின்றது:—யா ண்டுச் சாயமும் இரஜதமும் வைக்கப்பட்டிருக்கின்றனவோ, ஆண்டு அவற்றின் "இவை இரஜத" மென்னும் ஞானமுண்டாகின்றது. இந்த ஞானம் அந்நிய மதங்களின்படியோ சாய அம்சத்தில் பிர மமும், இரஜத அம்சத்தில் பிரமையுமாம். சாயத்திலும் அங்ஙனமே இரஜதத்திலும் இரஜதத்தன்மைத் தாமத்தினை விஷயஞ் செய்

கின்றது. ஆதலால சாய அமசததில இரஜததன்மை விசிஷ்ட ஞான மிருககின்றது. அககியாதிவாதியின் மதத்தில் பிரமஞான மோ இல்லை. முற்கூறிய ஞானமும் எல்லா அமசங்களிலும யதார் ததமாம். ஆனால இரஜத அமசததில இரஜதத்தன்மைச சமசாக கம(சமபநதம) கொள்கையாம. சாய அமசததின் இதுவெனுமவடி வததான் ஞான மிருககின்றது. அதில இரஜதத்தன்மையினது சம் பநதமின்மையின் கொளகையின்மை இருக்கின்றது. இவ்வாற் றால் பேதகறபனம் அநாவசியமாம.ஏனெனின சாயத்திறகும இரஜததிறகும "இவை இரஜத" மெனபதாக ஒருவடிவ உசச ரிப்பு உண்டாகின்றது. அதில் முற்கூறிய பேதததைச சொல்லுதற் கிரமததினும விலக்ஷணமான உசசரிபபு உண்டாதல் வேண்டும. சாயஅமசததில் இரஜதத்தன்மையின் சமபநதக கொள்கையோ பிரமத்தை அங்கீகரியாமையினால சமபவிககிறதில்லை. இரஜத அம சததிலும இரஜதத தன்மையின் சமபநதமின்மையினது கொள் கை இன்மையை அங்கீகரிககின் சமபவிக்கின்றது. ஏனெனின இரஜததில் இரஜதததன்மையினது சமபநதமின்மையின் கொள் கையில்லை; ஆனால சம்பநததின் கொளகை இருக்கின்றது. ஆத லால ஒரே வடிவ உசசரிப்பும் சமபவிககின்றது. ஆனால் யாண் டுப் பிரவிருததியின் விஷயம் எதிர்முகமாகின்றதோ, ஆண்டுச் சமசர்க்க விசிஷ்டஞானத்தினால் பிரவிருததி உண்டாகின்றதென் னும நியமம முன் சொல்லப்பட்டிருக்கின்றது. அதனை விடுபாடு உண்டாகும. இவ்வாறு கூறின், யாணடுப பிரவிருததியின் விஷய மாகிய இஷ்ட பதாரததமே எதிர்முகமாய் அநிஷ்ட பதாரத்தம் எதிர்முகமாகவில்லையோ,ஆண்டுச சமசர்க்க விசிஷ்டததின் ஞான முண்டாகின்றது. எஙஙனம. கேவல இரஜதததின் இரஜதமென் னும ஞானம இரஜதததன்மை விசிஷ்டத்தின் ஞானமாம. அன்றி யும் யாண்டு இஷ்டமான இரஜதம அநிஷ்டமாகிய சாயம் இரண் டும எதிர்முகமாகின்றனவோ, அநிஷ்ட பதாரததத்திற்கும இஷ்ட ததினைப்போல இதுவெனுமவடிவ ஞானம உண்டாகின்றதோ, ஆண்டு இஷ்டபதாரததததிலும இரஜதத்தன்மை விசிஷ்டஞான முண்டாகிறதில்லை. ஆனால இரஜதததன்மையினது சமபந்தமின் மை ஞானததின் அபாவமுண்டாகின்றது. இவ்வாறு கொள்ளுத லில் "இவை இரஜத" மென்பதாகச சமான உசசரிப்பு சம்பவிக் கின்றது. இரஜத சாயங்களின் இதுவெனும்வடிவ சாமாநிய ஞான

மிருக்கின்றது. அங்ஙனமே சாயத்தில் இரஜதத்தன்மையின் சம்பந்தமின்மையோ இருக்கின்றது; ஆனால் சம்பந்தமின்மையின் தோஷத்தால் ஞானமில்லை. ஆதலால் சாயத்தில் இரஜதத்தன்மையின் சம்பந்தமின்மை ஞானத்தின் அபாவமிருக்கின்றது. இரஜதத்தில் இரஜதத்தன்மையின் சம்பந்தமின்மை யில்லையாகலின், சம்பந்தமின்மையின் ஞானத்தின் அபாவமிருக்கின்றது. இதனால் ஏகரசமான உச்சரிப்பு சம்பவிக்கின்றது. ஆனால் முற்கூறியபடி இரஜதாம்சத்திலும் நிஷ்பலப் பிரவிருத்தி உண்டாதல் வேண்டும். ஆதலால் முற்கூறிய இடத்தில் இரஜத அம்சத்தில் இரஜதத்தன்மை விசிஷ்டத்தின் ஞானமிருக்கின்றது. ஏனெனின் அக்யாதிவாதியின் மதத்தில் பிரமஞானமோ இல்லை. எதனால் நிஷ்பலப் பிரவிருத்தி உண்டாகின்றதோ, அதனால் இஷ்டபதார்த்தத்தின் பேதஞானத்தால் எந்தப் பிரவிருத்தி உண்டாகின்றதோ, அது நிஷ்பலமாகின்றது. விசிஷ்டஞானத்தால் ஸபலப்பிரவிருத்தி உண்டாகின்றது. ஆதலால் சாயமும் இரஜதமும் முன் இருப்பனவாய் "இது இரஜத" மென்னும் ஞானமுண்டாயின், ஆண்டு இரஜத சாயங்களின் ஞானம் இதுவெனும் வடிவமாகவோ சமமாம். ஆனால் இரஜதத்தின் இதுவெனும் அம்சத்தில் இரஜதத்தன்மைவிசிஷ்டஞானமிருக்கின்றது. சாயத்தின் இதுவெனும் அம்சத்தில் இரஜதத் தன்மையினது சம்பந்தத்தின் கொள்கையின்மை இருக்கின்றது. அல்லது இரஜதத்தினது பேதத்தின் கொள்கையின்மை இருக்கிறது. யாண்டு இரஜதத்தன்மையின் சம்பந்தமின்மை இருக்கிறதோ, ஆண்டு இரஜதத்தின் பேதமிருக்கிறது. ஆதலால் இரஜதத்தன்மையினது சம்பந்தமின்மையின் கொள்கையின்மை என்றும், இரஜத பேதத்தின் கொள்கையின்மையென்றும் சொல்லுதலில் பொருட்பேதமில்லை. இவ்வாற்றால் அக்கியாதிவாதத்தில் "இவ்விரண்டும் இரஜத" மென்னுமிடத்தில் சமான உச்சரிப்பு சம்பவிக்கிறதில்லை. ஆதலால் அக்கியாதிவாதம் அசங்கதமாம்.

## கஊரு. பிரமஞானவாதியின் மதத்திற் கூறிய தோஷத்தின் அசம்பவம்.

பிரமஞானத்தை அங்கீகரிப்பவர்களது மதத்தில் தோஷம் சொல்லப்பட்டிருக்கிறது:—பிரமஞானமும் பிரசித்தமாயின், சகல ஞானங்களிலும் பிரமத்தன்மைச் சந்தேகத்தால் அசைவின்றிய

பிரவிருத்தி உண்டாகாது என்பதாம். அதுவும் சம்பவியாது. ஏனெனின் அக்கியாதிவாதியின் மதத்தில் பிரமஞானமே இல்லை. சகல ஞானமும் யதார்த்தமாம். ஆனால் ஞானத்தினால் பிரவிருத்தியோ சிலவிடத்து ஸபலமும் சிலவிடத்து நிஷ்பலமுமாகின்றது. ஆதலால் பிரவிருத்தியில் ஸபலத்தன்மை நிஷ்பலத்தன்மைகளைச் சம்பாதிப்பதோ, ஞானங்களிலுள்ள விலக்ஷணத்தன்மையாமென்று அக்கியாதிவாதிகளும் அங்கீகரித்திருக்கின்றனர். யாண்டுச் சம்சர்க்க விசிஷ்ட ஞானத்தினால் பிரவிருத்தி உண்டாகின்றதோ அது ஸபலமாகின்றது. ஆதலால் ஸபலப் பிரவிருத்தியை உண்டு பண்ணுவதாகிய சம்சர்க்க விசிஷ்ட ஞானம் பிரமையாம். கிரகிக்கப்படாத பேதஞானமிரண்டினால் நிஷ்பலப் பிரவிருத்தி உண்டாகின்றது. நிஷ்பலப் பிரவிருத்தியை உண்டுபண்ணுவன இரண்டு ஞானங்களாகின்றன. அந்த ஞானம் அப்பிரமையாம். விஷயங்களின் பாவாபாவங்களால் ஞானங்களில் பிரமாத்தன்மை அப்பிரமாத்தன்மைகளில்லையாயினும், பிரவிருத்தியின் விலக்ஷணத்தன்மைக்கு ஏதுவாகிய பிரமாத்தன்மை அப்பிரமாத்தன்மைகளோ அக்கியாதிவாதிகளும் இஷ்டமாம். அப்பிரமாத்தன்மைப் பெயரினோடும் அக்கியாதிவாதிக்கு விரோதமேனு முண்டாயினும், கிரகிக்கப்படாத பேதத்தோடு ஞானமிரண்டில் ஸபலப்பிரவிருத்தியை உண்டுபண்ணும் ஞானத்திற்கு விலக்ஷணத்தன்மையோ அநுபவசித்தமாய்; அக்கியாதிவாதியும் அங்கீகரித்திருக்கின்றனர். ஆதலால் வியவகார பேதத்தின் பொருட்டு வேறு பெயரிடத்தக்கதாயிருக்கின்றது. ஆதலால் பிரசித்தமான பெயரினாலே வியவகாரம் செய்வது தகுதியாம். இவ்வாற்றால் பிரமஞானத்தின் அங்கீகாரமின்மையினும், பிரமஸ்தானத்தில் நிஷ்பலப் பிரவிருத்தியை உண்டுபண்ணும் எந்தக் கிரகிக்கப்படாத பேதத்தினது யதார்த்த ஞானமும், ஸபலப் பிரவிருத்தியை உண்டுபண்ணும் இரஜதத்தில் இரஜதத்தன்மை விசிஷ்டஞானமும் உண்டாகின்றனவோ, அவற்றில் ஞானத்தன்மைவடிவ சமானதாமத்தைக் கண்டு இசாந்தேகம் சம்பவிக்கின்றது. எங்ஙனம் சுத்தியில் கிரகிக்கப்படாத பேதத்தினையுடைய இரண்டு ஞானங்களிருந்தும் அவற்றின் பேதம் கிரகிக்கப்படுகிறதில்லையோ, அங்ஙனமே இந்த ஞானமும் கிரகிக்கப்படாத பேதத்தினையுடைய இரண்டு ஞானவடிவமா? அல்லது பேதமின்றிய ஒன்று? கிரகிக்கப்படாத பேதத்தினையுடைய ஞானமிரண்டினவடிவமாகுமாயின்,

இரஜதத்தின் லாபம் பிரவிருத்தியினால் உண்டாகாது என்னும் சந்தேகத்தால் அக்கியாதிவாதத்திலும அசைவின்றிய பிரவிருத்தி சமபவியாது. ஆதலால் அசைவின்றிய பிரவிருததியின் அசம்பவம் இரண்டு மதங்களிலும சமானமாம. இவ்வாற்றால் அக்கியாதிவாதமும் அசஙகதமே ம.

## கசுசு. கஅக. பிரமாத்தன்மை அப்பிரமாத்தன்மைகளின் சொரூபமும், உற்பத்தியும், ஞானத்தின் தன்மையும்.

## கசுசு. பிரமாத்தன்மை அப்பிரமாத்தன்மைகளின் சொரூபம்.

அநிர்வசநீயக்கியாதியே தோஷமில்லாததாம:—சதகியாதி முதலிய ஐவகை வாததநின் கண்டநம் விவரணமுதலிய நூல்களில் விஸ்தாரமாயிருக்கின்றது. ஈண்டு அவற்றின் தன்மைமாத்திரம் அறிவிக்கப்பட்டது. அக்கியாதிவாதி சிந்தாநதமநத்தில் அசைவின்றிய பிரவிருத்தியின் அசமபவமாகிய தோஷம கூறினர். அந்தத் தோஷத்தின் சமபவம அக்கியாதிவாததநிலும சொல்லப்பட்டது. ஆனால் தனது மதததில் பரிகாரஞ் செய்யவில்லை. அதன் பரிகாரம் இதுவாம:—எந்தப் பதார்த்தததின் எநத ஞானம் உண்டாகின்றதோ, அநத ஞானத்தில அப்பிரமாததன்மை நிசசயம் உண்டாயின், பிரவிருத்தி உண்டாகிறதில்லை. அப்பிரமாத்தன்மையின் சந்தேக முண்டாயின், அசைவோடுகூடிய பிரவிருத்தி உண்டாகின்றது. பிரமாததன்மையின் நிசசயமுண்டாயின், அசைவின்றிய பிரவிருத்தி உண்டாகின்றது. இதனுற்றுன் பிரமாததன்மை அப்பிரமாத தன்மைகளின் சொரூபததையும, அவற்றின உற்பததியையும், அவற்றின் ஞானததின பிரகாரத்தையும் சொல்லுவாம்.

பிரமாத்தன்மை அப்பிரமாததன்மைகளின் சொரூபம் முன் சொல்லப்பட டிருக்கின்றது. ஸமிருதிக்கு வேறுய்ப் பாதிக்கப் படாத அர்ததத்தைக் கோசரிக்கும ஞானம எதுவோ அது பிரமையாம். அதனின் வேறுகிய ஞானம அப்பிரமையாம. இங்ஙனம் கூறுதலால் இது அறியப்படுகின்றது:—ஸமிருதிக்குப பின்னமாய்ப் பாதிக்கப்படாத அர்த்தத்தைக கோசரிககும ஞானத்தின் தாமம் எதுவோ, அது பிரமாததன்மையாம. அதற்கந்நியமான ஞானத்தின் தாமம அப்பிரமாததன்மையாம்.

என்றாலும் முற்கூறிய பாரிபாஷிகப் பிரமாத்தன்மை ஸ்மிருதியிலில்லை. பிரவிருத்தியின் உபயோகியாகிய பிரமாத்தன்மையினை ஸ்மிருதியிலும் அங்கீகரித்தல வேண்டும். ஏனெனின் ஸ்மிருதி ஞானத்தினாலும் புருஷனது பிரவிருத்தி உண்டாகின்றது. எந்தஸ்தானத்தில நிலைத்துள்ள இஷ்டபதாரத்ததின் ஸ்மிருதி உண்டாகின்றதோ, அந்தஸதானததில் புருஷனது பிரவிருததி உண்டாகின்றது. ஸமிருதி ஞானததில் பிரமாததன்மையின் நிசசயம் உண்டாயின் அசைவின்றிய பிரவிருத்தி உண்டாகின்றது. ஆதலால் பிரவிருததியின் உபயோகியான பிரமாததன்மை ஸமிருதியிலு மிருக்கின்றது. ஆதலால முறகூறிய ஸொரூபம பிரமாததன்மையினும் வேறுவித பிரமாததனமையின் ஸொரூபததைசசொல்லுதல்வேண்டும. சகலசாஸதிரஙகளிலுமஸ்மிருதிக்கு வேறாகிய ஞானததில்அநுபவ வியவகாரத்தைச செய்கின்றனா. சமஸ்கார ஜநநியஞானததில் ஸ்மிருதி வியவகாரத்தைச செய்கின்றனா. யதாாதத அநுபவததில் பிரமை வியவகாரததைசசெய்கின்றனா. அதற்கு வேறாகியதில் அப்பிரமை வியவகாரததைச செய்கின்றனா. இவ்வாறாதல் ஞானத்தன்மைத தாமமோ சகல ஞானத்திலு மிருததலால வியாபகமாம. அநுபவததன்மை ஸமிருதிததனமை ஞானத்தன்மையின் வியாப்பியமாம; ஒன்றற்கொன்று விரோதிகளாம். அங்ஙனமே பிரமாத்தன்மைத் தர்மமும் அநுபவததன்மையின் வியாப்பியமாம். ஏனெனின் அநுப்வததன்மையோ யதாாததாநுபவ அயதாாத்தாநுபவங்களி லிருக்கின்றது. பிரமாததன்மைத தாமம யதார்த்த அநுபவததிலேயே இருககின்றது. ஆதலால அநுபவத்தன்மையின் வியாப்பியம் பிரமாததன்மையாம். அங்ஙனமே யதார்த்தத் தன்மைக்கும பிரமாத்தன்மை வியாப்பியமாம. ஏனெனின் யதார்த்ததத்தன்மையோ சத்தியபதாாததததின் ஸமிருதியிலு மிருக்கிறது. ஸமிருதியில பிரமாததனமை இருக்கிறதில்லை. ஆதலால் யதாாத்தத் தன்மைக்கும பிரமாத்தனமை வியாப்பியமாம. இது சாஸதிரகாராகளது பரிபாஷையாம. இதை அநுசரித்த பிரமைக்கு, ஸமிருதிக்கு வேறாய்ப் பாதிக்கப்படாத அாததத்தைக் கோசரிககுமு ஞானம பிரமை எனப்படுகினற தென்னும் லக்ஷணம் சொல்லப்பட டிருககின்றது. எநதப் பிரமாத்தன்மையின் ஞானத்தினால் புருஷனுக்கு அசைவின்றிய பிரவிருத்தி உண்டாகின்றதோ, அத்தன்மைய பிரமாத்தன்மையை ஸ்மிருதியிலும் அங்கீகரி

த்தல் வேண்டும. ஆதலால் இந்தப் பிரசங்கத்தில் யதார்த்தத்தன் மையின் வியாப்பியம பிரமாத்துவ மன்று. ஆனால் யதார்த்தத் தன்மையின் பெயரே பிரமாத்தன்மையாம. முற்கூறிய பாரிபாஷிகப் பிரமாத்தன்மையோ ஸ்மிருதியிலில்லை. யதார்த்தத்தன்மை இருக்கின்றது. ஆதலால் முற்கூறிய பிரமாத்தன்மை யதார்த்தத் தன்மை வடிவமன்று; ஆனால் அதனின்வேறும. அதனின் அற்ப தேசத்திருப்பதா யிருத்தலின் யதார்த்தத்தன்மையின் வியாப்பிய மாம .பிரவிருத்திக்கு உபயோகமுள்ள பிரமாத்தன்மை விசாரிக் கத்தக்கதாம. அது ஸ்மிருதி சாதாரணமாம. ஆதலால் யதார்த் தத்தன்மையினும் அற்ப தேசத்திருப்பதன்று. ஆனால் யதார்த்தத் தன்மை வடிவமே பிரமாத்தன்மையாக விசாரிக்கத் தக்கதாம். ஸ்மிருதி ஞானத்தில பிரமை வியவகாரத்தினால முற்றும வித்து வேஷ முண்டாயின, பிரமாத்தன்மை ஞானத்தால அசைவின்றிய பிரவிருத்தி உண்டாகின்றதென்னும வாக்கியத்தினை விட்டு, யதார்த்தத்தன்மை ஞானத்தினால அசைவின்றியபிரவிருத்தியுண்டாகின் றதென்னும வாக்கியத்தினைக் கூறுக. இவ்வாறால இப்பிரசங்கத் தில பிரமாத்தன்மைகளுக்கு ஒரே பொருளிருக்கின்றது. ஆதலால் இந்தப் பிரசங்கத்தில் யதார்த்தத்தன்மைத் தாமத்திறகுப்பிரமாத் தன்மைச் சப்தத்தால் வியவகார மிருக்கின்றது.

## ௧௬௭. நியாயவைசேஷிக மதத்தில் ஞானத்தை உண்டுபண்ணும் சாமக்கிரிக்குப் புறம்பாகிய சாமக்கிரியினால் பிரமாத்துவ அப்பிரமாத்துவங்கள் உற்பத்தியாதல் (பிறிதாற்பிராமாணிய வாதமும் பிறிதால் அப்பிராமாணிய வாதமும்).

நியாய சாஸ்திரத்தின் மதத்தில ஞானத்தை உண்டுபண்ணும் சாமக்கிரியினால் பிரமாத்தன்மையின உற்பத்தி உண்டாகிறதில்லை. ஞானத்தின் ஞாபகஞ்செய்யும சாமக்கிரியினால பிரமாத்தன்மை யின் ஞானம உண்டாகிறதில்லை. இதனைப் பிறிதாற்பிராமாணியவாத மென்பர். இப்பிரசங்கத்தில பிரமாத்தன்மைக்குப் பிராமாணிய மென்று பெயர். பிறிதின் அதாவது அந்நியத்தினின்றும் பிராமா ணியத்தின் உற்பத்தி உண்டாகின்றது. அந்நியத்தினின்றே பிராமா ணியத்தின் ஞான முண்டாகின்றது. ஞானத்தின் சாமக்கிரிக்கு

வேருகிய சாமக்கிரி பிறிதென்னும் சொல்லுக்குப் பொருளாம். இதனால் இந்த நிச்சயம் உண்டாயிற்று:— ஞானத்தின் சாமக்கிரியினும் பிரமாத்தன்மையின் சாமக்கிரி வேறும். ஞானத்தினது உற்பத்தியின் சாமக்கிரியான இந்திரிய அநுமானாதிகளோ முன் கூறப்பட்டிருக்கின்றன. அதனாற் பிரமாத்தன்மையின் உற்பத்தி உண்டாயின் சகல ஞானமும் பிரமையாதல் வேண்டும். அப்பிரமாஞானத்திற்கு லோபமுண்டாகும். ஆதலால் ஞானத்தின் உற்பத்தி சாமக்கிரியினும் அதிக சாமக்கிரியினால் பிரமாத்தன்மையின் உற்பத்தி உண்டாகின்றது. யாண்டு அதிக சாமக்கிரி இல்லையோ, ஆண்டு ஞானத்தில் பிரமாத்தன்மைத் தாமுண்டாகிறதில்லை. ஆதலால் பிரமாஞானத்திற்கு லோபமில்லை. அவ்வதிக சாமக்கிரி குணமாம். யாண்டுக் குணத்தோடுகூடிய இந்திரிய அநுமான முதலியவற்றால் ஞானமுண்டாகின்றதோ, ஆண்டுப் பிரமை உண்டாகின்றது. குணமின்றிய இந்திரிய அநுமான முதலியவற்றாலும் ஞானமுண்டாயின், அது பிரமையன்று. பிரத்தியக்ஷப் பிரமையின் உற்பத்தியில் விஷயத்தின் அதிகதேசத்தில் இந்திரியங்களின் சையோகம் குணமாம். சாத்தியத்தின் வியாப்பியமான ஏதுவின் சாத்தியமுடைய பக்ஷத்தில் உண்டாகும் ஞானம் அநுமிதிப் பிரமையின் உற்பத்தியில் குணமாம். யாண்டு வியபிசாரி ஏதுவின் ஞானம் பக்ஷத்தில் உண்டாகின்றதோ, ஆண்டு அநுமிதி ஞானத்தின் சாமக்கிரி பக்ஷத்தில் ஏதுவின் ஞானமோ இருக்கின்றது; ஆனால் வியாப்பிய ஏதுவின் ஞானவடிவ குணமில்லை. ஆதலால் அநுமிதிப்பிரமை உண்டாகிறதில்லை. இவ்வாற்றால் ஞானத்திலிருக்கும் பிரமாத்தன்மைத் தருமத்தின் உற்பத்தியில் ஞானத்தை உண்டுபண்ணும் சாமக்கிரியினும் வேறு குணத்தின் அபேக்ஷை இருத்தலால், பிறிதாற் பிராமாணியத்தின் உற்பத்தி உண்டாகின்றது.

பிரமாத்தன்மையினைப்போல ஞானத்தின்கண் உள்ள அப்பிரமாத்தன்மைக்கும் பிறிதால் உற்பத்தி உண்டாகின்றது. ஏனெனின் பிரமாஞானம் தோஷஜந்நியமாமென்னும் வார்த்தை பிரசித்தமாம்; பிரமாஞானத்தில் தோஷம் ஏதுவன்று. ஆதலால் ஞானத்தின் சாமக்கிரியினும் தோஷம் புறத்ததாம். அந்தத் தோஷம் அநந்தவிதமாம். இவ்வாற்றால் ஞான சாமக்கிரியினும் தோஷம் பிறிதாம். பின்னதனைப் பிறிதென்பர். அதனால் அப்பிரமையின் உற்பத்தி உண்டாகுதலால் பிறிதால் அப்பிராமாணியத்தின் உற்பத்தி

உண்டாகின்றது அப்பிரமாத்தன்மையை அப்பிராமாணியமென்பர். இவ்வாற்றால் பிரமாத்தன்மையின் உற்பத்தியும் அப்பிரமாத்தன்மையின் உற்பத்தியும் பிறிதால் உண்டாகின்றன.

## ௧௬௮. ஞான ஞானத்தன்மைகளின் சாமக்கிரியின் வேறு காரணத்தினால் பிரமாத்தன்மையின் ஞானத்தின் உற்பத்தி (பிறிதாற் பிராமாணியங்கொள்ளும் வாதம்).

அங்ஙனமே ஞானத்தினது ஞானத்தின் சாமக்கிரியினால் பிரமாத்தன்மையின் ஞானம் உண்டாகிறதில்லை. ஆனால் ஞானம் ஞானத்தன்மை எனனுமிவற்றின் ஞான மெந்தச சாமக்கிரியினால் உண்டாகின்றதோ, அதற்கு வேறாகிய காரணத்தினால பிரமாத்தன்மையின் ஞான முண்டாகின்றது. அங்ஙனமே பிரத்தியக்ஷ முதலிய பிரமாணங்களால கடமுதலியவற்றின ஞான முண்டாகின்றது. அங்ஙனமே மனசையுக்த சமவாய சம்பந்தத்தால் கடாதி ஞானங்களின ஞானமு முண்டாகினறது. நேத்திர முதலிய பிரமாணத்தால் கடத்தின் ஞானமுண்டாகின்றது. அதற்கு "இதுகட" மென்பது வடிவமாம. மன வடிவப் பிரமாணத்தால் கடஞானத்தின் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. அதறகுக் "கடத்தை யான் அறிகின்றே" னென்பது வடிவம. "கடத்தை யான் அறிகின்றே" னென்னும மானச ஞானத்திற்கு விஷயம் கடஞானமாம்; கடமும விஷயமாம். ஏனெனின ஞானத்தின் ஞானம அநுவியவசாய மெனப்படுகின்றது. கட முதலியவற்றின் ஞானம வியவசாய மெனப்படுகின்றது. அநுவியவசாய ஞானத்திற்கு இது சுபாவமாம:— வியவசாயத்தின் விஷயத்தை விடுகிறதில்லை; ஆனால் விஷயத்தோடுகூடிய வியவசாயத்தினைப்* பிரகாசிக்கின்றது. இதனாற்றான் ஞானத்தின் ஞானத்திற்குஅநுவியவசாயமெனனுமபெயர் இருக்கின்றது. வியவசாயத்தை அநுசரித்ததனை அநுவியவசாய மென்பர. எங்ஙனம் வியவசாயத்திற்குக் கடமுதலியன விஷயமோ, அங்ஙனமே அநுவியவசாயத்திற்கும் கடமுதலியன விஷயமாம. ஆதலால வியவசாயத்தை அநுசரித்தது அநுவியவசாயமாம். அநுவியவசாய ஞானத்திற்கு ஆத்மாவும விஷயமாம். ஏனெனின் இது நியமமாம்:— ஞானம், இச்சை, தொ

---

* பிரகாசிக்கின்றது என்று வரு மிடந்தோறும் அறிகின்றதெனப் பொருள்கொள்க.

ழில், சுகம், துக்கம், த்வேஷமென்பன ஆத்மாவின் விசேஷகுணங்களாம். இவற்றில் யாதேனும் ஓர் குணம் தோற்றுமாயின் ஆத்மாவின் பிரதீதி உண்டாம். எதன் பிரதீதியும் உண்டாகாவிடின், ஆத்மாவின் பிரதீதியும் உண்டாகாது. ஆதலால் சகல விசேஷ குணங்களையும் விட்டு ஆத்மாவின் பிரதீதி உண்டாகிறதில்லை. அங்ஙனமே ஆத்மாவினைவிட்டுக் கேவலம் ஞான முதலியவற்றின் பிரதீதி உண்டாகிறதில்லை. ஆதலால் கடத்தின் ஞானத்தின் ஞானமுண்டாயின், அப்போது ஆத்மாவின் ஞானமும் உண்டாகும். ஆதலால் வியவசாய ஞானத்தினையும், அதன் விஷயமாகிய கடத்தையும், அங்ஙனமே வியவசாயத்தின் ஆச்ரயமான ஆத்மாவையும் "கடத்தை யான் அறிகின்றேன்" எனனும் ஞானம் பிரகாசிக்கின்றது. இத்தன்மைத்தான திரிபுடி கோசர ஞானத்தினை அநுவியவசாயமென்பர். அநுவியவசாய ஞானத்திற்குக் கரணம் மனமாம். ஆதலால் சகல விஷயங்களோடும் மனதிற்குச் சம்பந்தத்தைச் சொல்லுதல்வேண்டும். எங்ஙனம்: கடம் ஞானம் ஆத்மா என்பன விஷயமாகின்றனவோ, அங்ஙனமே கடத்தன்மை ஞானத்தன்மை ஆத்மத்தன்மைகளும் கடஞானத்தின் ஞானத்திற்கு விஷயமாம். கட ஞானத்தினோடு மனதின் சுவசையுக்த சமவாய சம்பந்தமிருக்கின்றது. ஞானத்தன்மையினோடு சுவசையுக்த சமவேத சமவாய சம்பந்தமிருக்கின்றது. ஆத்மாவோடு சுவசையோக சம்பந்தமிருக்கின்றது. ஆத்மத்தன்மையோடு சுவசையுக்த சமவாய சம்பந்தமிருக்கின்றது. கடத்தினோடு மனதின் சம்பந்தமோ பிரத்தியக்ஷத்திற்கு ஏதுவாகாது. ஏனெனின் பாகிய பதார்த்தத்தின் ஞானம் சுதந்திர மனதினால் உண்டாகிறதில்லை. ஆதலால் கடத்தினோடு மனதிற்கு அலௌகிக சம்பந்தத்தைச் சொல்லுதல் வேண்டும். இலௌகிக சம்பந்தத்தினால் பாகிய பதார்த்தத்தின் ஞானம் மனதினால் உண்டாகிறதில்லை. அலௌகிக சம்பந்தத்தினால் பாகிய பதார்த்தத்தின் ஞானமும் மனதினால் உண்டாகின்றது. அந்த அலௌகிக சம்பந்தமும் ஞானலக்ஷணமாம். அநுவியவசாய ஞானத்தின் விஷயமாகிய வியவசாய ஞானம் எதுவோ, அதுவே மனதிற்குக் கடத்தோடுள்ள சம்பந்தமாம். அதன் சொரூபம் இதுவாம்:— சுவசையுக்த சமவேத ஞானம் அல்லது சுவசையுக்த சமவேத ஞான விஷயத்தன்மை கடத்தோடு மனதிற்குள்ள சம்பந்தமாம். ஞானலக்ஷண வாக்கியத்தில் இலக்ஷண சப்தத்திற்குச் சொரூபமெனப்பொருள் செய்யின், அப்போது முதற் சம்பந்த

மாம். இலக்ஷண சப்தத்திற்கு ஞாபகம் (அறிவிப்பது) எனப் பொருள்செய்யின், அப்போது இரண்டாவது சம்பந்தமாம். சுவவெனும் சொல்லிற்குப் பொருள் மனமாம். அதனோடு சையுக்த ஆத்மத்தன்மையிற் சமவேதம் வியவசாய ஞானமாம். அது கடத்தி லிருக்கின்றது. ஆதலால் முற்கூறிய ஞானமே கடத்தில் மனதின் சம்பந்தமா யிருத்தலின் கடத்தின் மானச ஞானமாகின்றது. இரண்டாவது பக்ஷத்திற் கூறிய ஞானத்தின் விஷயத்தன்மை வடிவ சம்பந்தம் கடத்தி லிருக்கின்றது. வியவசாய ஞானத்தின் விஷயம் கடத்தன்மை படத்தன்மை இரண்டுமாம். ஆதலால் வியவசாய வடிவ சம்பந்தத்தால் அநுவியவசாய ஞானத்திற்கு இரண்டும் விஷயமாம். இவ்வாற்றால் கட ஞானமுதலியன அநுவியவசாய ஞானத்திற்கு விஷயமாம். ஆதலால் ஞானத்தின் ஞானம் அநுவியவசாயமாம். அதன் சாமக்கிரி மனசையோக முதலிய வடிவினதாம். அதனால் ஞானத்தின் ஞானமும் ஞாதத்தன்மையின் ஞானமு முண்டாகின்றன; பிரமாத்தன்மையின் ஞானமுண்டாகிறதில்லை. ஆனால் ஞானமுண்டாய்ப் புருஷனுக்கு ஸபலப்பிரவிருத்தி உண்டாயின், அதற்குப் பிற்காலத்தில் பிரவிருத்தியை உண்டுபண்ணும் ஞானத்தில் பிரமாத்தன்மையின் அநுமிதி ஞானமுண்டாகின்றது. எங்ஙனம்: தடாகத்தில் ஜலத்தின் பிரத்தியக்ஷ ஞானத்தினால் ஜல விருப்புடையோனுக்குப் பிரவிருத்தி உண்டாய் ஜலத்தின் லாபமுண்டாகின்றது; அப்போது புருஷனுக்கு இவ்வாறு அநுமான முண்டாகின்றது:—"இந்த ஜலஞானம் பிரமை; ஸபலப்பிரவிருத்தியை உண்டுபண்ணுவதாயிருத்தலின்; யாண்டு ஸபலப்பிரவிருத்தியை உண்டுபண்ணுந் தன்மையுளதோ, ஆண்டுப் பிரமாத்தன்மையுளது; நிச்சயிக்கப்பட்ட பிரமையைப்போல" ஈண்டு வர்த்தமான ஜலஞானம் பக்ஷம். அநுமான காலத்தில் ஜல ஞானம் அதீதமாயினும், வர்த்தமானத்திற்குச் சமீபித்த இறப்பும் எதிர்வும் வர்த்தமானமென்றே சொல்லப்படுகின்றன. இதனால் வர்த்தமான ஜலஞானமே பக்ஷமாகச்சொல்லப்பட்டது; அதீதமாகச் சொல்லப்படவில்லை. பிரமாத்தன்மை சாத்தியமாம். மேல் ஏது திருஷ்டாந்தங்கள் ஸ்பஷ்டமாம். வெதிரேகதிருஷ்டாந்தம்சொல்லவேண்டியதாயின், "யாண்டு யாண்டு ஸபலப்பிரவிருத்தியை உண்டுபண்ணுந் தன்மையில்லையோ, ஆண்டாண்டுப் பிரமாத்தன்மையில்லை; சுத்திரஜதத்தை அறிதலிற்போல" என்றித்தன்மைய வாக்கியத்தி

னைச் சொல்லுக. இவ்வநுமானத்தால் ஜலஞானத்திற் பிரமாதத ன்மையின் நிச்சயமுண்டாகின்றது. இவ்வாறால் சகல ஞானங்க ளிலும் ஸ்பஷ்ட பிரவிருத்தியினால பிரமாததன்மையின் அநுமிதி உண்டாகின்றது. ஜலஞானத்தைக் கிரகிக்கும் சாமக்கிரி "ஜலத் தை யான் அறிகின்றே" னென்னும் அநுவியவசாயத்தின் சாமக் கிரியாம். பிரமாததன்மையைக் கிரகிக்கும் சாமக்கிரி முற்கூறிய அநுமானமாம்; அது அநுவியவசாயத்தின் சாமக்கிரிக்கு வேறாயிரு த்தலின் பிறிதாம். ஆதலால் பிறிதால் பிரமாததன்மையைக் கொ ள்ளுதலாகின்றது. நியாயமதத்தில் அநுமிதியின் விஷயம் பக்ஷமு மாம். முற்கூறிய அநுமிதியில் ஜலஞானம் பக்ஷமாம். ஆதலால் பிரமாததன்மையின் அநுமானமும் ஞானத்தைக் கிரகிக்கும் சாம க்கிரியாம். அங்ஙனமே அநுவியவசாயமும் இருவகையாகின்றது:— ஒன்றோ "ஜலத்தை யான் அறிகின்றேன" என்னும் அநுவியவசாய முண்டாகின்றது. யாண்டுப் பிரமாததன்மை நிச்சயத்திருப்பின் அநுவியவசாயமுண்டாகின்றதோ, ஆண்டு "ஜலத்தை யான் அளக் (பிரமாணத்தினால் அறி) கின்றேன" என்னும் அநுவியவசாயமுண் டாகின்றது. ஆதலால் முற்கூறிய அநுமான வடிவ ஞானத்தைக் கிரகிக்கும் சாமக்கிரியினால் பிரமாததன்மையின் நிச்சயமுண்டாயி ற்று. இரண்டாவது அநுவியவசாயத்தின் சாமக்கிரியும் ஞானத் தைக் கிரகிப்பதாம். அதனால் பிரமாததன்மையின் நிச்சய முண்டா யிற்று. இவ்வாறால் சித்தாந்த பக்ஷத்தில் தன்னாற்பிராமாணியத் தைக் கிரகித்தலின் அடைவுண்டாயிற்று. என்றாலும், யாது யாது ஞானத்தைக் கிரகிக்கும் சாமக்கிரியோ, அது முழுவதும் பிரமாத் தன்மையைக் கிரகிப்பதாம் என்பது சித்தாந்த பக்ஷமாம். ஞானத் தைக் கிரகிக்கும் சகல சாமக்கிரியிலும் "ஜலத்தை யான் அறிகின் றே" னென்னும் அநுவியவசாயத்தின் சாமக்கிரியும் அடங்கி இரு க்கின்றது. அதனால் பிரமாததன்மையின் கிரகிப்பு உண்டாகிறதி ல்லை. ஆதலால் சித்தாந்த பக்ஷத்தின் அங்கீகாரமில்லை.

இவ்வாற்றால் கட முதலியவற்றின் ஞானத்தால் கட முதலிய வற்றின் பிரகாசமுண்டாகின்றது. கட முதலியவற்றின் பிரகாசமு ண்டாகியும், கடாதிகளின் ஞானத்தின் பிரகாசமும் ஞானத்திற் காசிரயமாகிய ஆத்மாவின் பிரகாசமு முண்டாகிறதில்லை. எந்தக் காலத்தில் அநுவியவசாய ஞானமுண்டாகின்றதோ, அப்போது கட முதலிய விஷயத்துடனும் ஆத்மாவுடனும் கடாதி ஞானத்தின்

பிரகாசமுண்டாகின்றது. ஆனால் அநுவியவசாய ஞானத்தினால் வியவசாயத்தினது திரிபுடியின் பிரகாச முண்டாகின்றது; அநுவியவசாயத்தின் பிரகாசமுண்டாகிறதில்லை. எப்போது அநுவியவசாயகோசர அநுவியவசாய முண்டாகின்றதோ, அப்போது முதல் அநுவியவசாயத்தின் பிரகாசமுண்டாகின்றது; இரண்டாவது அநுவியவசாயம பிரகாசமின்றியதாகவே இருக்கின்றது. முதல அநுவியவசாயமோ வியவசாயத்தைக் கோசரிப்பதாயிருக்கின்றது. இரண்டாவது அநுவியவசாயமோ அநுவியவசாயத்தைக் கோசரிப்பதாயிருக்கின்றது. "கட ஞானத்தை யான் அறிகின்றே" னென்பது இரண்டாவது அநுவியவசாயத்தின் சொரூபமாம. இரண்டாவது அநுவியவசாயத்தின் வியவகாரம் இஷ்டமாயின், "கடஞானத்தின் ஞானத்தை யானறிகின்றேன" என்று மூன்றாவது அநுவியவசாயமுண்டாகின்றது. ஆனால நியாய மதத்தில் கட ஞானத்தினால் கடத்தின் பிரகாசமுண்டாய்க் கடத்தின் வியவகாரம சித்திக்கின்றது. கடவியவகாரத்தில் கடஞானத்தினது பிரகாசத்தின் அபேக்ஷை இல்லை. கடஞானத்தின் வியவகாரம இஷ்டமாயின், அப்போது அநுவியவசாயத்தினால் கடஞானத்தின் பிரகாசமுண்டாய்க் கடஞானத்தின் வியவகாரமுண்டாகின்றது. அநுவியவசாயத்தினது பிரகாசத்தின் அபேக்ஷை இல்லை. இவ்வாறால் எதன வியவகாரம இஷ்டமாகின்றதோ, அதன ஞானத்தின் அபேக்ஷையுண்டு. விஷயத்தைப் பிரகாசிக்கும ஞானம எதுவோ, அது பிரகாசிக்கப்படுவதாகுக; அல்லது பிரகாசிக்கப்படாததாகுக; அதன்பிரகாசத்தினால் உபயோகமில்லை. பிரகாசிக்கப்படும் ஞானத்தினாலேயே விஷயத்தின பிரகாசம் உண்டாகுமாயின், நியாயமதத்தில் அநவஸ்தாதோஷ முண்டாகும். ஏனெனின் எந்த ஞானத்தினால் விஷயம பிரகாசமாகின்றதோ, அந்தஞானம சுவப்பிரகாசமோ அன்று. அதனைப் பிரகாசிக்கும வேறு ஞானமுண்டாயின், அப்போது ஞானத்தினால் விஷயத்தின பிரகாசமுண்டாம். அந்த முதல ஞானத்தைப் பிரகாசிப்பிக்கும் வேறு ஞானத்திற்கு வேறு ஞானம வேண்டும். மூன்றாவதைப்பிரகாசிப்பிக்குமநான்காவதுஞானம்வேண்டும். இவ்வாறு அநவஸ்தாதோஷமுண்டாம. ஒன்றற்கொன் றபேக்ஷையுடைய பிரகாசத்தை அங்கீகரிக்கின், அந்நியோந்நியாசிரயம் சக்கிரிகை முதலிய தோஷமுண்டாம். ஆதலால் விஷயத்தின் பிரகாசத்தில் தனது பிரகாசத்தின் ஞானத்தை அபேக்ஷிக்கிற தில்லை.

ஆனால் தனது வியவகாரத்தில் பிரகாசத்தின் அபேக்ஷையுண்டு. யாண்டுக் கடமுதலிய விஷயங்களின் வியவகாரம் இஷ்டமாகின்றதோ, ஆண்டுக் கடஞானத்தின் அபேக்ஷ கடத்தினது பிரகாசத்தின் பொருட்டுண்டு. பிரகாசிக்கப்படுவதின்றிய ஞானத்தினாலேயே கடவியவகாரம் உண்டாகின்றது. எங்ஙனம் எப்போது கடத்தின் ஞானம் உண்டாகவில்லையோ, அக்காலத்திலும் ஜலத்தைத் தரித்தல் முதலிய பிரயோஜனத்தின் பேற்றினைக் கடம் செய்கின்றது. தனது காரியத்தில் பிரகாசத்தின் அபேக்ஷையைக் கடம் செய்கிறதில்லை. அங்ஙனமே ஞானத்தின் காரியம் விஷயத்தின் பிரகாசமாம். அந்த விஷயப்பிரகாசவடிவ காரியத்தில் தனது பிரகாசத்தின அபேக்ஷையை ஞானம் செய்கிறதில்லை. கடத்தினைப் போலத் தனது வியவகாரத்திற் பிரகாசத்தின் பொருட்டு ஞானத்தின் அபேக்ஷையை ஞானம் செய்கின்றது. எந்த ஞானத்தின் வியவகாரம் இஷ்டமாமோ, அந்த ஞானத்தின் ஞானம் உண்டாகின்றது. ஞான ஞானத்திற்குப் பிரகாசத்தின் அபேக்ஷ யில்லை. இச்சையின் விஷயத்தை இஷ்டமெனபர். ஆதலால் நியாயமதத்தில் அநவஸ்தாதோஷம் கூறுகின்றனர். அது அவர்களது அவிவேகத்தைக் காரணமாகவுடைய பிரலாபமாம். இவ்வாற்றால நியாயமதத்தில எந்த ஞானமும் சொப்பிரகாசமன்று. ஆதலால ஞானத்தினது ஞானத்தின் உற்பத்தி எதனால உண்டாகின்றதோ, அது ஞானத்தைக் கிரகிக்கும் சாமக்கிரி எனப்படுகின்றது. அநுவியவசாய ஞானத்தின் சாமக்கிரி மனசையோக முதலியனவும், ஞானலக்ஷண அலௌகிக சம்பந்தமுமாம். அது அநுவியவசாய பேதத்தால் நானாவாம். அங்ஙனமே "ஜலஞானம் பிரமை" என்னும் அநுமிதியும் ஞானத்தின் ஞானமாம். அதனை உண்டுபண்ணுவது அநுமானமாம். அதுவும் ஞானத்தைக் கிரகிக்கும் சாமக்கிரியாம். அதனால் ஜலஞானத்தினது பிரமாதத்தன்மையின் ஞானம் உண்டாகிறதில்லை. "ஜலத்தை அளக்கின்றே" னென்னும் அநுவியவசாயத்தின் சாமக்கிரியும ஞானத்தைக் கிரகிக்கும் சாமக்கிரியாம். அதனால் ஜலஞானத்தினது பிரமாத்தன்மையின் ஞானமுண்டாகின்றது. ஆனால் "ஜலத்தை யான் அறிகின்றே" னென்னும அநுவியவசாயமும ஜலஞானத்தின் ஞானமாம. ஜலஞானத்தின் பிரமாதத்தன்மையினைப் பிரகாசிக்கிறதில்லை. ஆதலால் ஞானத்தைக் கிரகிக்கும சாமக்கிரியான கூறிய அநுவியவசாய சாமக்கிரியினால் ஜலஞானத்தினது பிரமாத்

தன்மையின் கிரகணமின்மை யிருத்தலின், ஜலஞானத்தைக் கிர கிக்கும் சகல சாமக்கிரியினாலும் ஜலஞானத்தினது பிரமாததன்மை யின் கிரகணம உண்டாகாமையால, தன்னற பிராமாணியங் கொள்ளுதல் உண்டாகிறதில்லை. ஆனால பிறிதாற பிராமாணியங் கொள்ளுதல் உண்டாகின்றது. யாது யாது ஞானத்தைக் கிரகிக்கும் சாமக்கிரியோ, அவ்வெல்லாவற்றானும் பிரமாததன்மையைக் கிரகித்தல் உண்டாகின்றது. இதனைத தன்னாற் பிராமாணியங்கொள்ளுத லென்பா. இப்பக்ஷத்தில பிரமாததன்மைத் தர்மத்தினை விட்டு எந்த ஞானத்தின் ஞானமு முண்டாகிறதிலலை. பிரமாததன்மை ஞானததன்மை யென்னும இரண்டு தாமவிசிஷ்ட ஞானததின ஞானம உண்டாகினறது. கேவல ஞானததனமைததாம விசிஷ்ட ஞானத்தின ஞான முண்டாகிறதிலலை. பிறிதாற பிராமாணியங் கொள்ளும வாததில முதல அநுவியவசாயத்தினால பிரமாத்தன் மையை விட்டு ஞானத்தன்மைவிசிஷ்ட ஞானததின ஞான முண் டாகின்றது. மீண்டும வேறு அநுவியவசாயததினாலேனும் அல் லது முற்கூறிய அநுமானத்தினாலேனும பிரமாத தன்மையின் ஞானமுண்டாகின்றது.

## ௧௪௧. மீமாம்ஸக மதத்திலும் சித்தாந்த மதத்திலும் கொண்டுள்ள தன்னாற் பிராமாணியவாதத்தில் தோஷம்.

மீமாம்ஸக மததிலும் சித்தாந்த மததிலும தன்னாற் பிரா மாணியங்கொள்வது அங்கீகாரமாம. நியாய வைசேஷிகமதத்தில் பிறிதாற் பிராமாணியம கொள்ளுதலின் அங்கீகார முண்டு. தன் னாற் பிராமாணியம் கொள்ளுதலில இந்ததோஷங் கூறப்பட்டிருக் கின்றது:—யாண்டு ஒருபதாாததத்திற்கு அநேகமுறை ஞானமுண் டாய்ப் பிரவிருததி உணடாயிருந்திருக்குமோ, ஆண்டு ஞானத்தின் பிரமாத்தனமையில் ஓரிடத்தும சந்தேகமிலலை. ஏனெனின் அநேக முறை ஸபலப்பிரவிருததி உண்டாய்ப்பிரமாததன்மைநிச்சயம் உண் டாய் விடுகின்றது. அந்தப்பிரமாததன்மை நிச்சயம் பிரமாத்தன் மையின் சம்சயத்திற்கு விரோதியாம. ஆனால எப்பதாாததததின அபூர்வஞான முண்டாகின்றதோ, அதன ஞானததில பிரமாததன் மையின் சந்தேகமுண்டாகின்றது. அஃதுஉண்டாகலாகாது. ஏனெ னின் அத்வைத மதததிலும் பிரபாகரரது மதத்திலுமோ ஞானம்

சொப்பிரகாசமாம். ஆதலால் ஞானம் என்றும் கிரகிக்கப்படாத தாகாது; கிரகிக்கப்பட்டதேயாகின்றது. ஆதலால் பிரமாத்தன் மையும் கூடவே கிரகிக்கப்படுவதாயின், நிச்சயிக்கப்பட்ட பதார்த் தத்தின் சந்தேகமுண்டாகாது. அதனால் பிரமாத்தன்மையின் சந் தேகம் சம்பவியாது. சித்தாந்தபக்ஷத்திலோ பிரகாசவடிவ ஞான மிருக்கின்றது. பிரகாச பதார்த்தத்திற்கு ஞானபதார்த்தத்தோடு பேதமில்லை.

## சஎ0. பிரபாகராது மதத்தில் சகல ஞானங்களினும் திரிபுடி பிரகாசித்தல்.

பிரபாகரராதுமதத்தில் ஞானத்தின் விஷயத்திற் பிரகாசமுண் டாகின்றது. பிரகாசத்திற் கேது ஞானம். எங்ஙனம் கடத்தின் ஞானமுண்டாயின் அப்போது கடஞானத்தினால் கடத்தின் பிர காசமுண்டாகின்றதோ, அங்ஙனமே கடத்தின் ஞானம் தனது சொரூபத்தின் பிரகாசஞ் செய்கின்றது. தனது ஆசிரயமாகிய ஆத்மாவினுடைய அதனையும் பிரகாசம் செய்கின்றது. சகல ஞானங் களும் திரிபுடியைப் பிரகாசிப்பிக்கின்றன. ஞாதாஞானஞேயங்க ளின் சமுதாயம் திரிபுடி எனப்படுகின்றது. இவ்வாற்றால் பிரபாகர ரது மதத்தில் தனது சொரூபத்தினையும் ஞானம் விஷயஞ்செய்கின் றது. தனது பிரமாத்தன்மையையும் விஷயம் செய்கின்றது.

## சஎக. முராரி மிசிரர் மதம்.

முராரி மிசிரர் மதத்தில் ஞானத்தின் பிரகாசம் அநுவியவசாய த்தால் உண்டாகின்றது. அந்த ஞானத்தைப் பிரகாசிக்கும் அநுமிதியே பிரமாத்தன்மையின் பிரகாசமென்று கொள்ளப்பட் டிருக்கின்றது. இதனால் அநுவியவசாயத்திற்குப் பின் பிரமாத் தன்மையின் சந்தேகமுண்டாகலாகாது.

## சஎஉ. பட்டர் சித்தாந்தம்.

அங்ஙனமே பட்டர் சித்தாந்தம் இதுவாம்:—கடமுதலியவற்றி னது ஞானத்தின் ஞானம் பிரத்தியக்ஷ வடிவமாகாது. ஏனெனின் ஞானகுணம் பிரத்தியக்ஷ யோக்கியமன்று. ஆதலால் ஞானத்தின் ஞானம் அநுமிதிவடிவ மாகின்றது; மானஸப் பிரத்தியக்ஷ வடிவ மன்று. அவ்வநுமிதி ஞானம் இவ்வாற்றால் உண்டாகின்றது. இந் திரிய விஷயங்களின் சையோகத்தால் பிரத்தியக்ஷஞானம் உண்டா

குக; அல்லது அநுமிதிஞான முண்டாகுக. சகல ஞானங்களினு லும கடமுதலிய விஷயங்களில ஞாததன்மையென்னும தாமம் உறபததியாகின்றது. இதனுற்முன ஞானமுண்டாகிய பின் "அறி யப்பட்டது கடம" என்னும வியவகாரமுண்டாகின்றது. ஞானத் திற்கு முன் எநதக் கட இநதிரியங்களின சையோக முண்டாகின் றதோ, அதனுல் "இது கட" மென்னும பிரத்தியக்ஷ முண்டாகின் றது. அநதப பிரததியக்ஷ ஞானம சமவாய சமபநததால் ஞாதா விலிருக்கின்றது; விஷயததன்மைச சம்பநதததால் கடததிலிருக் கின்றது. யாண்டு விஷயத்தன்மைச் சமபநததினுல ஞானமுண் டாகின்றதோ, ஆண்டுச் சமவாய சமபநததினுல் ஞாததன்மை உற்பததியாகின்றது. இவ்வாறமுல கடத்தின் ஞானததினுல் கட த தில் ஞாதத்தன்மை உறபததியாகின்றது. அநத ஞாததன்மை க்கு உபாதான காரணம கடமும, நிமிததகாரணம ஞானமுமாம: அசமவாயிகாரணபரிபாஷை படடா மதத்தில இல்லை. உபாதான காரணததிற்கு வேறுகியதை நிமித்தகாரணமென்றே கூறுவா. இவ் வாறமுல் ஞானஜநிய ஞாததன்மைந தாமம் கடததில் உண்டா கின்றது. முதலிலோ "இது கட" மென்பதாகக் கடத்தைப் பிர காசிக்கும பிரத்தியக்ஷமுண்டா யிருக்கின்றது. அநதப் பிரததிய க்ஷததினுல் கடத்தில் ஞாதத்தன்மைத் தாமம உண்டாயிற்று; அப் போது இநதிரிய சையோகததினுல் அநத கடததின் பிரததியக்ஷம "அறியப்பட்டது கட" மெனபதாக உண்டாகினறது. இவ்வாற முல் ஞான ஜநிய ஞாதத்தன்மையின் பிரததியக்ஷம் புற இநதிரிய த்தினுல் உண்டாகின்றது. புறப்பதாரததஙகளினது ஞானத்தின் பிரத்தியக்ஷம் புற இநதிரியஙகளினுலோ எமமததததிலும உண்டா கிறதில்லை. நையாயிகா முதலியோா மததததில ஞானததின் மான ஸப் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. படடா மதத்தில் கடமுதலிய வற்றினது ஞானத்தின் மானஸப்பிரததியக்ஷமு முண்டாகிறதில்லை. ஆனுல் கடமுதலிய ஞானததின் அநுமானஜநிய அநுமிதிஞானம் உண்டாகின்றது. அநுமானத்திற்கு ஒது வடிவமாம:— "இக்கடம் விஷயத்தன்மைச் சமபநதத்தினுல் ஞானமுடையதாம; சமவாய த்தினுல் ஞானத்தன்மை யுடைமையால்; யாண்டு யாண்டுச் சமவா யத்தால் ஞானததன்மை ஆண்டு ஆண்டு விஷயத்தன்மைச சம்பந் தத்தால் ஞானமுண்டு." இநத ஸதானத்தில் முன்னிருப்பதாகிய கடம் பக்ஷம, விஷயததன்மைச் சமபந்தததால் ஞானம் சாததியம.

மேல் ஏது திருஷ்டாந்தங்க ளிருக்கின்றன. பிற நூல்களில் வேறு விதமாக அநுமானம எழுதப்பட்டிருக்கின்றது. அது கடினமாம். பட்டர் மதததில் அநுமானத்தினுல ஞானம அறியப்படுகின்றது. இது சுலபமான கிரமமாய்க் காட்டப்பட்டது. இவ்வாறுல் ஞானத்தைக் கிரகிக்கும சாமக்கிரி பட்டர் மதத்தில் அநுமானமாம்.

## களகூ. நியாய வைசேஷிகமத நிச்சயம்.

இவ்வநுமானததினுலேயே கடஞானத்தின் பிரமாத்தன்மையின் ஞானமு முண்டாகின்றது. ஆதலால ஞானத்தின் அநுமிதி உண்டாகிய பின், பிரமாத்தனமையின் சந்தேகம பட்டா மதத்தில் உண்டாகலாகாது. ஆதலால் ஞானத்தின் சகல ஞானங்களினுலும பிரமாத்தன்மையின் நிசசயம உண்டாகிறதில்லை. ஆனுல சபலப் பிரவிருத்தி உண்டாகியபின், ஞானத்தினது பிரமாததன்மையின் நிசசயம உண்டாகின்றது. இது நியாய வைசேஷிகா மதம். இதனைப் பிறிதாற் பிராமாணியவாத மென்பர். ஞானத்தினது உறபத்தியின் சாமக்கிரியினுல் பிரமாததன்மையின் உறபத்தி உண்டாகிறதில்லை. அதிக சாமக்கிரியினுல் பிரமாததன்மையின் உற்பததி உண்டாகின்றது. அங்ஙனமே அதிக சாமக்கிரியினுல் பிரமாததன்மையின் ஞானம் உண்டாகின்றது. பிரமாத்தன்மையினைபபோல அப்பிரமாத்தன்மையின் உறபத்தி பிறிதான் உண்டாகின்றது. பிறிதான் ஞானமுண்டாய் ஞானத்தை உண்டுபண்ணும் சாமக்கிரியினுல் ஞானத்தினது அப்பிரமாததன்மைத தாமத்தின உறபததி உண்டாயின், சகல ஞானங்களும அப்பிரமையாதலவேண்டும. ஆதலால் ஞானததை உண்டுபண்ணும் சாமக்கிரியினுல அப்பிரமாத்தன்மையின உற்பததி உண்டாகிறதில்லை. ஞானத்தை உண்டுபண்ணுவன இந்திரிய அநுமாஞதிகளாம. அவைறறில் தோஷத்தின் சகாயமிருக்குமாயின், அப்பிரமாத்தனமையோடு கூடிய ஞானத்தின் உற்பத்தி உண்டாகும. தோஷம நாநாவிதமாம்.

பிரத்தியக்ஷப பிரமம உண்டாயின, ஆண்டோ நேத்திர முதலியவற்றின்கண் உள்ள பிரமாணதோஷததினைப்போல, விஷயத்தின்கண் உள்ள சாதிருசியதோஷமும ஏதுவாம. சில விடத்துப் பிரத்தியக்ஷப் பிரமததில விஷயத்தின்கண் உள்ள சாதிருசிய தோஷததின் வியபிசாரமு மிருக்கின்றது. ஆனுல் சதிருசத் (சமான முடைய) தின்கண்ணே வெகு பிரமம் உண்டாகின்றது. ஆதலால் அநேக இடங்களிலோ சாதிருசிய தோஷம் பிரமக்

திறகு ஏதுவாம். யாண்டு வேற்றியல்புடையதின்கண் பிரமம் அநுபவசித்த மாகின்றதோ, ஆண்டுச சாதிருசிய தோஷம பிரம த்திற்குக் காரணமன்று. ஏகவடிவததால் தோஷம ஏதுவன்று. ஆனல் எதுவிருக்க எநதப்பிரமம உண்டாகின்றதோ, அந்தத் தோஷம் அநதப் பிரமத்திற்குக் காரணமாகின்றது. பரோக்ஷப் பிரம ஞானததில் சாதிருசியததின் அபேக்ஷையில்லை. இது அநுபவசித்த மாம். ஆதலால் பரோக்ஷ ஞானததில விஷயத்தின்கண் உள்ள தோஷம் ஏதுவன்று. ஆனல் அநுமிதிபபிரமத்தில் அநுமானதோஷம் ஏதுவாம. வியாப்பியமாகிய ஏதுவின் ஞானம அநுமானமாம். ஏதுவில் வியபிசார முதலிய தோஷம நியாயகிரநதங்களிற பிரசித்த மாம். சாப்தப்பிரம முண்டாயின, ஆண்டுச சுரோதாவினிடத்து வாக்கிய தாறபரியததின் அவதாரணமினமை தோஷமாம். சொல்லுவோனிடத்து விப்பிரலமபகததனமை (வஞ்சகததன்மை) முதலியன தோஷமாம். சபதததில் பிறிதோாவிதத்தால் போதிககுந் தன்மை முதலியன தோஷமாம. இவ்வாறு அப்பிரமாததன் மைக்கு ஏதுவாகிய தோஷத்தை அநுபவாநுசாரமாக அறிய வேணடும.

இப்பிரசங்கத்தில் பிரமாத்தன்மையின் உறபததியும், அப்பிரமாத்தன்மையின் உறபததியும சொல்லப்பட்டன. அது விருததமாகத் தோற்றுகின்றது. சென்றன, வருவன, இருப்பனவாகிய சகலப் பிரமைகளிலும பிரமாததன்மைத் தாமம ஏகமாம. அஙஙனமே சகல அப்பிரமையிலும அப்பிரமாத்தனமையும ஏகமாம. அவற்றின் உறபத்திகூறுதல் சமபவியாது. எனறுலும தனது காரணததினல் ஞானம் உற்பத்தியாயின், அப்போது சில ஞானம பிரமையும், சிலஞானம் அப்பிரமையுமாகின்றன. பிரமாத்தன்மை விசிஷ்டம் பிரமையாம். அப்பிரமாத்தன்மை விசிஷடம அப்பிரமையாம. இவ்வாற்றால ஞானததில் பிரமாததனமை அபபிரமாததன்மைத தர்மங்களின் விலக்ஷணததன்மை ஞானத்தை யுண்டுபண்ணும சாமக்கிரியின் அதீனமாம. சிலவிடத்து ஞானத்தின இததன்மைய சாமக்கிரி இருக்கின்றது அதாவது பிரமாத்தன்மை விசிஷ்டஞானத்தின் உற்பத்தி எதனல் உண்டாகின்றதோ அத்தன்மைய சாமக்கிரி இருக்கின்றது. சிலவிடத்து அப்பிரமாத்தனமை விசிஷ்டஞானத்தின உற்பத்தி எதனல் உண்டாகின்றதோ, அத்தன்மைய சாமக்கிரி இருக்கின்றது. இதனல் இவ்வாறு மதித்தல் வேண்டும்:—

பிரமாத்தன்மைத் தாமமோ ஒன்றும். சகலப் பிரமையிலும் அதன் சம்பந்தமிருக்கின்றது. ஆனால் பிரமாத்தன்மையின் சம்பந்தம் சாமக்கிரியின் அதீனமாம். இவ்வாற்றால் ஞானத்தில் பிரமாத்தன்மையின் பிரயோஜக (காரண) சாமக்கிரி இருத்தலால் பிரமாத்தன்மையின் உற்பத்தி சொல்லப்பட்டிருக்கின்றது. அங்ஙனமே அப்பிரமாத்தன்மையின் பிரயோஜகம் தோஷமாம். ஆதலால் தோஷஜந்நியம் அப்பிரமாத்தன்மை எனப்படுகின்றது. தோஷஜந்நியமென்று சொல்லுதற்கு தோஷப் * பிரயோஜ்ஜியத்தில் தாற்பரியமாம். அவற்றின் ஞானத்திற்கோ முக்கிய உற்பத்தி சம்பவிக்கின்றது.

சிந்தாந்தத்தில் சாக்ஷிபாஸ்யம் பிரமாத்தன்மையாம். ஆதலால் பிரமாத்தன்மையினது ஞானத்திற்கும் உற்பத்தி கூறின், சாக்ஷியின் உற்பத்தி சித்தமாகின்றது. அது பொருந்தாது. என்றலும் விருத்தியில் ஆரூடசாக்ஷி பிரமாத்தன்மை முதலியவற்றைப் பிரகாசிக்கின்றது. ஆதலால் விருத்தியும் ஞானமெனப்படுகின்றது. அதற்கு உற்பத்தி சம்பவிக்கும். இவ்வர்த்தத்தை முன் சொல்லப்பட்டிருக்கின்றதெனினும், முன்கூறிய பொருளையே கூறுதலால் கேட்பவருக்கும் படிப்பவருக்கும் போதம் திடமாகின்றது. சாஸ்திரீய அர்த்தத்தின் மந்த சமஸ்காரமுடைய புருஷர்களுக்கு அடிக்கடி சொல்லுதலால் பிரயாசையின்றிப் போதமுண்டாகின்றது. ஆதலால் இப்பிரகரணத்தில் அநேக அர்த்தங்களைப் பலமுறைகூறியிருக்கின்றோம்; கூறியது கூறல் என்னும் குற்றமில்லை. இவ்வாற்றால் நியாயமதத்தில் பரதப்பிராமாணிய வாதம் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. ஸ்வதப் பிராமாணியவாதத்தில் சம்சயத்தின் அநுபபத்திதோஷம் சொல்லப்பட்டிருக்கின்றது.

## ௧௭௫. நியாயவைசேஷிக மதகண்டனம்.

அது முழுவதும் அசங்கதமாம்:—பிரமாத்தன்மையின் ஞானத்தையோ பின் சொல்லுவோம். முதலிலோ அநுவியவசாய ஞானத்தினால் ஞானத்தின் பிரகாசமுண்டாகின்றது என்றுகூறுதல் அசங்கதமாம். ஏனெனின் அப்பிரகாச சுபாவம் ஞானமாகுமாயின், அதன் சம்பந்தத்தால் கடமுதலியவற்றின் பிரகாசமுண்டாகாது. கடமுதலியவற்றின் பிரகாசத்தில் ஞானம் தன்னது பிரகாசத்தை அபேக்ஷிக்கிறதில்லை. எங்ஙனம் கடமுதலியன அறியப்படாதனவாயினும் தம் காரியத்தைச் செய்கின்றனவோ, அங்ஙனமே ஞா

---

* பிரயோஜகம்=காரணம். பிரயோஜ்ஜியம்=காரணத்தாலாகியது.

னமும அறியப்படாததாய் விஷயத்தின் பிரகாச வடிவ தனது காரியத்தைச் செய்கின்றது என்று முன் கூறியது யாதோ அது சம்பவியாது. ஏனெனின் சகல பௌதிக ஜோதிகளும் தாம் பிரகாசவடிவினவாய் அந்நியத்தைப் பிரகாசிக்கின்றன. பிரகாசமின்றிய ஜோதியினால் எதன் பிரகாசமும் காணப்படுகிறதில்லை. பிரகாசமின்றியதும் சுபாவபலத்தால் தனது சம்பந்தமுடையதின் பிரகாசத்தைச் செய்யின், சுவர்ணத்தின்கணுள்ள ஜோதிபாகத்தினாலும் சுவர்ண சம்பந்தமுடைய கடமுதலியவற்றின் பிரகாசமுண்டாதல் வேண்டும். சொரூபப் பிரகாசத்தினால் பிரகாசிக்கப்படும் பௌதிக ஜோதியினால கடமுதலியவற்றின் பிரகாசத்தைக் கண்டிருக்கின்றோம. சொரூபப் பிரகாசத்தினால் பிரகாசிக்கப்படாத சுவர்ணம் இரஜதம முதலிய வடிவ ஜோதியினால் எதன் பிரகாசமும் காணப்படுகிறதில்லை. ஆதலால் சொரூபப் பிரகாசத்தினால் பிரகாசிக்கப்படும ஞானத்தின் சம்பந்தத்தினால் கடமுதலியவற்றின் பிரகாச முண்டாகின்றதென்று கொள்ளவேண்டும. ஆதலால் பிரகாச சுபாவமும் ஞானமாம். கேவலம திருஷ்டாந்த பலத்தினால் ஞானத்திற்குசொப்பிரகாசத்தன்மையை அங்கீகரிக்கவில்லை. ஆனால் அநுபவத்தினாலும் சொப்பிரகாசத்தன்மை சித்திக்கின்றது. யாண்டு அறிதற்கரிய அஞ்ஞாத பதார்த்தத்தின் ஞானம் புருஷனுக்குண்டாய் "அறியத்தக்கது அறியப்பட்டது, அறிவதற்கு ஒன்றும் மிகுந்ததில்லை" என்னும் வாக்கியத்தைச் சந்தோஷத்தினால் சொல்லுகினறானோ, அவனைப்பார்த்து அந்நிய புருஷன் "இவ்வஞ்ஞானம் அறிதற்கு எஞ்சி இருக்கின்றது" என்று சொல்ல இவ்வாக்கியத்தைக் கேட்டுச் சிரிக்கின்றான். ஆதலால் ஞானத்தின் பிரகாசத்தன்மையின் அநுபவம் சித்தமாம. ஞானத்தினது பிரகாசத்தின் எஞ்சுதற் றன்மையைக் கேட்டுச் சிரிக்கின்றான். கடஞானம அறியப்பட்டதா? இல்லையா? வென்னும வாக்கியத்தைக் கூறுகின்றவனைப் புத்தியில்லாதவனென்பர். ஆதலால் ஒருநாளும ஞானத்தில் அஞ்ஞாதத்தன்மை யில்லை. அஞ்ஞானத்தன்மையின் அபாவத்தால் ஞானகோசர அநுவியவசாயமுண்டாகின்றது என்று கூறுதல் அசங்கதமாம். எந்தப் புருஷனுக்கும "எனக்குக் கடஞானம் உண்டாயிற்றா? இல்லையா?" வென்னும் சந்தேக முண்டாகிறதில்லை. கடஞானம அறியப்படாததாயின் ஒருகால் சந்தேகமுண்டாதல் வேண்டும். ஆதலால் ஞானம் அஞ்ஞாதமாகிறதில்லை. ஞானத்தின் பிர

காசம் அநுவியவசாயமாமென்று கூறுதல்அசங்கதமாம். இவ்வாறு கூறுவாராயின்:—ஞானகோசர ஞானமுண்டாகாவிடின், "இது கடம், கடத்தை யானறிகின்றேன்" னென்பதாக ஞானத்தில் விலக்ஷணத்தன்மை தோற்றலாகாது. ஏனெனின் நியாயமதத்திலோ முதல் ஞானத்திற்கு விஷயம் கடமும், இரண்டாவது ஞானத்திற்கு விஷயம் கடஞானமுமாம். ஆதலால் விஷயபேதத்தால் ஞானங்களுக்கு விலக்ஷணத்தன்மை சம்பவிக்கின்றது. சொப்பிரகாச ஞானவாதியின் மதத்தில் ஞானத்திற்கு விஷயம் ஞானமாகாது. இரண்டு ஞானங்களுக்கும் விஷயம் கடமாயிருத்தலின், விஷயபேதத்தின்மையால் விலக்ஷணப் பிரதீதி உண்டாகலாகாது என்னும் சங்கையும் சம்பவியாது. எங்ஙனம்: ஒரே கடத்திற்கு ஒரு காலத்தில் "இது கட" மென்னும் ஞானம் உண்டாகின்றது; ஒரு காலத்தில் "அநித்தியம் கட" மென்னும் ஞானமுண்டாகின்றது. ஆண்டு விஷயத்தின் பேதமின்றி விலக்ஷணஞான முண்டாகின்றது. ஆனால் முதல்ஞானத்தில் கடத்தின் அநித்தியத்தன்மை தோற்றுகிறதில்லை. இரண்டாவது ஞானத்தில் கடத்தின் அநித்தியத்தன்மை தோற்றுகிறது. அங்ஙனமே "இது கட" மென்னும் ஞானத்தில் கடத்தின் ஞாதத்தன்மை தோற்றுகிறதில்லை. "கடத்தை யான் அறிகின்றேன்" னென்னும் ஞானத்தில் கடத்தின் ஞாதத்தன்மை தோற்றுகின்றது. ஞான ஜந்நியப் பிரகடத்தன்மையை ஞாதத்தன்மை யென்பர். இரண்டாவது ஞானத்தின் விஷயம் கடத்திலுள்ள ஞாதத்தன்மையாம்; கடத்தின் ஞானமன்று. இதனுற்றன கடஞானத்திற்குப் பிற்காலத்தில் ஒரு காலத்தில் "கடத்தை யான் அறிகின்றேன்" னென்னும் ஞானம் உண்டாகின்றது. ஒரு காலத்தில் "அறியப்பட்டது கடம்" என்னும் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. "அறியப்பட்டது கட" மென்னும் பிரத்தியக்ஷத்திற்கு விஷயம் கடத்தின் ஞாதத்தன்மையாம். இவ்வாத்தம் பட்டருக்குச் சம்மதமும், அநுபவத்தை அநுசரித்ததுமாம். ஏனெனின் "அநித்தியம் கட" மென்று சொல்லுதலால் அநித்திய பதார்த்தத்தில் விசேஷணமாகிய அநித்தியத்தன்மையின் பிரதீதி கடத்தில் எல்லோருக்கும் சம்மதமாம். அங்ஙனமே "அறியப்பட்டது கட" மென்று சொல்லுதலானும் அறியப்பட்ட பதார்த்தத்தின் விசேஷணமாகிய ஞாதத்தன்மையின் பிரதீதி கடத்தில் சர்வாநுபவ சித்தமாம். "அறியப்பட்டது கடம்" என்னும் ஞானத்தின் அவசரத

தில் "கடத்தை யான் அறிகின்றேன்" என்னும் ஞானமுண்டாகிறது. ஆதலால், கடத்தை யான் அறிகின்றேனென்னும் ஞானமும் கடத்தின் ஞானத்தன்மையை விஷயஞ் செய்கின்றது. இவ்வாற்றால் ஞானகோசர ஞானத்தை அங்கீகரியாவிடினும், "இது கடம்" "கடத்தை யான் அறிகின்றேன்" என்பதாக விலக்ஷணஞானம் சமட்டிக்கின்றது. ஆதலால் அநுவியவசாய ஞானத்திற்கு விஷயம் ஞானமாமென்னும் நையாயிகமதம் அசங்கதமாம்.

## ௧எ௫. முராரிமிசிரர் மதத்தின் கண்டநம்.

அங்ஙனமே முராரிமிசிரர் மதமும் இப்பிரசங்கத்தில் நையாயிக மதத்திற்குச் சமமாம். ஆதலால் அசங்கதமாம். முராரிமிசிரர் மதத்தில் ஞானத்தைப் பிரகாசிக்கும் அநுவியவசாயத்தினாலேயே பிரமாதன்மையின் பிரகாச முண்டாகின்றது. நியாயமதத்தினும் இத்துணை விசேஷமிருக்கின்றது. என்றாலும் இவ்விசேஷம் நல முடையதன்று. ஏனெனின் அப்பிரகாச சுபாவ ஞானத்தின் பிரகாசம் அநுவியவசாயத்தினால் உண்டாகின்றது என்னும் அம்சத்தில் நியாயமதத்திற்குச் சமமாயிருத்தலின் அசங்கதமாம்.

## ௧எ௬ பட்டமத கண்டநம்.

அங்ஙனமே பட்டர் மதத்தில் அநுமிதியினால் ஞானத்தின் பரோக்ஷப் பிரகாச முண்டாகின்றது என்பதும் நியாயத்தினும் அசங்கதமாம். ஏனெனின், அவர்கள் மதத்திலும் ஞானத்தைப் பிரகாசிக்கும் அநுமிதி யாதோ, அதனால் பிரமாத்தன்மையின் பிரகாசம் உண்டாகின்றதென்னும் இத்துணை அம்சமோ நியாயத்தினும் விலக்ஷணமாம்; சித்தாந்தத்திற்கு அநுகூலமாம். என்றாலும் கடமுதலிய விஷயங்களை அபரோக்ஷத்தன்மையாக்குவதாகிய பிரத்தியக்ஷ ஞானத்தின் அநுமிதி வடிவ பரோக்ஷப் பிரகாச முண்டாகின்றது என்று கூறுதல் நகைப்பிற் கிடமாம்.

## ௧எஎ. பிரபாகரர் மதத்தின் கண்டநம்.

அங்ஙனமே பிரபாகரர் மதத்திலும் கடஞான முதலியன தனது பிரகாசத்தில் அநுவியவசாயத்தின் அபேக்ஷையைச் செய்கிறதில்லை. இத்துணை அம்சத்தில் சித்தாந்தத்திற்கு அநுகூலமாம். பிரமாத்தன்மையைக் கிரகித்தலில் ஞானத்தைக் கிரகிக்கும் சாமக்கிரியினும் பிறிதொன்றின் அபேக்ஷை செய்கிறதில்லை என்னும் அம்

சத்திலும் சித்தாந்தத்திற் கநுகூல மிருக்கின்றது. அங்ஙனமாயி னும் பிரபாகரர் மதமும் சிரத்தைக்குரியதன்று. ஏனெனில் சகல ஞானமும சொப்பிரகாசமாம; திரிபுடியை விஷயஞ் செய்வதாம். விஷயமாததிரததைக கோசரிப்பது ஓர ஞானமு மாகாது. சகல ஞானமும "கடத்தை யான் அறிகினறே" னென்பதாகத் திரிபுடி யைக் கோசரிப்பனவாகின்றன. "இதுகட" மென்பதாகக் கேவல விஷயகோசரஞானம அப்பிரசித்தமாம. கடததோடு இநதிரியத்தி ற்குச சமபந்த முண்டாகக் கடததின் ஞானமுண்டாகின்றது. அது கடத்தையும, தனது சொரூபத்தையும், அங்ஙனமே தனது ஆசிரய மாகிய ஆதமாவையும விஷயஞசெய்கின்றது. அஙஙனமேகடததின் ஞானமே தனது தாமமாகிய பிரமாததன்மையை விஷயஞ செய் கின்றது. இவ்வாற்றால் கடததின் ஞானம தனது பிரகாசத்தில் அநயத்தின் அபேக்ஷை செய்கிறதில்லை. இத்துணை அமசமோ நலமுடையதாம. ஆனால் தனது பிரகாசததைத் தான செய்கினற தென்பது விருத்தமாம. ஒரு கிரியைக்கு எது கர்த்தாவாகின்ற தோ அது கர்மமாகாது. ஆதலால் பிரகாசத்திற்குத் தானே கர்த் தாவும் தானே கர்மமுமாமென்று கூறுதலும் விருத்தமாம. சித்தா நதத்திலோ ஞானம பிரகாச வடிவமாம். ஆதலால் முறகூறிய விரோதமில்லை. இவ்வாற்றால் பிரகாசவடிவஞானத்தினை அங்கீகரியா விடின் அம்மதங்கள் யாவும் அசுத்தமாம். ஆதலால் ஞானத்தின் அநுவியவசாயத்தினால் பிரகாசமுண்டாகின்ற தென்னும் நையா யிக வசனம் அசங்கதமாம்.

## கஎஅ. தன்னாற் பிராமாணிய வாதத்தின் அங்கீகார மும், சித்தாந்தமதத்தில் முற்கூறிய சம்சயத் தின் அநுபபத்தி வடிவ தோஷத்தின் பரிகாரமும்.

ஞானத்தைக் கிரகிக்குங் காலத்தில் பிரமாத்தன்மையைக் கிர கித்தலுண்டாயின், சமசயத்தின் அநுபபத்தி உண்டாகின்றது என் பதற்கு இது சமாதானமாம:—ஞானத்தைக் கிரகிக்கும சாமக்கிரி யினால் பிரமாத்தன்மையின் கிரகிப்புண்டாகின்றது. ஆனால் தோ ஷாபாவத்தோடுகூடிய ஞானசாமக்கிரியினால் பிரமாத்தன்மையின் கிரகண முண்டாகினறது. இதனை மேற்கூறுவாம. யாண்டுச சம சயமுண்டாகின்றதோ ஆண்டுத் தோஷாபாவமில்லை. தோஷமில்லை

யாயின் சம்சயம் சம்பவியாது. ஏனெனின் சம்சய ஞானமும் பிரமமாம். பிரமத்தின் உற்பத்தியில் தோஷம் ஏதுவாம். ஆதலால் சம்சயஸ்தலத்தில் தோஷாபாவம் சம்பவியாது. பிரமாத்தன்மை ஞானத்தில தோஷாபாவம் ஏதுவாம. ஆதலால் யாண்டுச் சம்சயமுண்டாகின்றதோ, ஆண்டுப் பிரமாத்தன்மையின் ஞானம உண்டாகிறதில்லை. ஆதலாற் சமசயம் சம்பவிக்கின்றது. சித்தாந்தத்தில் விருத்தி வடிவ ஞானத்திற்கு சாக்ஷியினால் பிரகாசம் உண்டாகின்றது. ஆதலால் ஞானத்தைக் கிரகிக்கும் சாமக்கிரி சாக்ஷியாம். அதனாலேயே விருத்தி ஞானத்தினது பிரமாத்தன்மையின் கிரகணமுண்டாகின்றது. ஆனால சில இடங்களில் ஞானமோ பிரமையாகின்றது. எதனால் அநிர்வசநீயப் பிரமத்தின் உற்பத்தி உண்டாகிறதில்லையோ, அததனமைய விலக்ஷண தோஷ முளதாயின், அதனால் ஞானமோ பிரமையாய், சாக்ஷி அதனது பிரமாததன்மையின் பிரகாசத்தைச செய்ய, அதனிடத்துப் பிரதிபந்தக முண்டாய் விடுகின்றது. அதனால் ஞானததைக் கிரகிக்கும் சாக்ஷியோ இருந்தும, பிரமாத்தன்மையின் கிரகண முண்டாகிறதில்லை. இககாரணத்தால் முறகூறிய லக்ஷணததின் அவ்வியாப்தி உண்டாகின்றது. ஞானத்தைக கிரகிகரும சகல சாமக்கிரியினாலும பிரமாததன்மையின் கிரகணததைத தன்னாற் கிரகிததல்(கொள்ளுதல)என்பர். முற்கூறிய விடததில ஞானததைக் கிரகிகரும சாமககிரியினால் பிரமாத்தன்மையின் கிரகணம உண்டாகவில்லை; ஆதலால் அவ்வியாப்தியாம். அங்ஙனமாயினும தோஷாபாவததோடுகூடிய ஞானததைக் கிரகிகரும சாமககிரியினால் பிரமாத்தனமையின கிரகிப்பு உண்டாகின்றது. அதனைத தன்னாற் பிராமாணியம் கொள்ளுதல் என்பர். முற்கூறிய ஸ்தலத்தில தோஷாபாவததோடுகூடிய சாமககிரி இலலை. ஆனால் தோஷததோடுகூடிய சாமக்கிரி இருக்கினறது. ஆதலால் முற்கூறிய ஸ்தலததில் இலக்ஷியமில்லை. இககாரணததினால் அவ்வியாப்தியில்லை. இவ்வாற்றால ஞானத்தினது பிரமாததன்மையைப் பிரகாசிப்பதோ தோஷாபாவததோடுகூடிய சாக்ஷியாம. அப்பிரமாத்தன்மையின் கிரகிப்போ சாக்ஷியினால் உண்டாகிறதில்லை. ஏனெனின் பிரமத்தின் இலக்ஷணம் தோஷ ஜநநியத்துவமாய; அல்லது நிஷ்பலப் பிரவிருததியை உண்டுபண்ணுந் தன்மையாம; அல்லது அதிஷ்டானத்தினும் விஷமசத்தை யுடையதின் அவபாசமாம. இவ்வாற்றால் தோஷததால் நிகழ்வதும, நிஷபலப் பிரவிருததியினால்

நிகழ்வதும், விஷமசத்தையினால் நிகழ்வதும் பிரமத்தின் லக்ஷணமாம். அத்தோஷ முதலியன சாக்ஷியின் விஷயமன்று. ஆதலால் தோஷ முதலியவற்றால் நிகழும் அப்பிரமாததன்மையும் சாக்ஷிக்கு விஷயமன்று. ஆதலால் அப்பிரமாததன்மையின் ஞானமோ நையாயிகரைப்போல நிஷ்பலப்பிரவிருத்தியைக் கண்டு உண்டாகின்றது. அங்ஙனமே அப்பிரமாததன்மையின் உற்பத்தியும் ஞானத்தின் சாமாநிய சாமக்கிரியினால் உண்டாயின், சகல ஞானமும் அப்பிரமையாதல் வேண்டும். ஆதலால் நேத்ரதோஷத்தோடுகூடிய ஞானத்தை உண்டுபண்ணும் சாமக்கிரியினால் பிரமாததன்மையின் உற்பத்தி உண்டாகின்றது என்பதற்குப் பொருள் இதுவாம்:—தோஷத்தோடுகூடிய நேத்திரம் அநுமானமுதலியவற்றினால் அப்பிரமை ஞானத்தின் உற்பத்தி உண்டாகின்றது. அப்பிரமாத்தன்மை விசிஷ்டப்பிரமஞானத்தின் உற்பத்தியே இப்பிரகரணத்தில் அப்பிரமாந்தன்மையின் உற்பத்தி எனப்படுகின்றது. பிரமாததன்மையின் உற்பத்தியோ ஞானத்தின் சாமாநிய சாமக்கிரியினாலேயே உண்டாகின்றது.

## கஎக. நியாயமதத்தில் (பிறிதாற்பிராமாணிய வாதத்தில்) தோஷம்.

பிரமாததன்மையின் உற்பத்தியில் குணம் காரணமெனப்பட்டது. அது சம்பவியாது. ஏனெனின் பிரத்தியக்ஷஸ்தலத்தில் அதிக அவயவங்களினால் இந்திரியத்தின் சையோக குணமானது சொல்லப்பட்டது. அது நிரவயவவாயு முதலியவற்றின் பிரத்தியக்ஷத்திற் சம்பவிக்கிறதில்லை. அநுமிதியில் வியாப்பியமான ஏதுவிற்குப் பக்ஷத்தில் ஞான குணம் சொல்லப்பட்டிருக்கின்றது. அதுவும் சம்பவிக்கிறதில்லை. ஏனெனின், யாண்டு வந்நியோடுகூடிய பாவத்தில் தூளிபடலத்தில் தூமத்தின் பிரமமுண்டாய் வந்நியின் ஞானமுண்டாகின்றதோ, ஆண்டு முற்கூறிய குணமோ இல்லை. வந்நியின் அநுமிதிப்பிரமை யுண்டாகின்றது. ஆதலால் பிரமாத்தன்மையின் உற்பத்தியில் குணத்திற்கு உண்டுபண்ணுந்தன்மையைக் கூறுதல் சம்பவியாது. ஆனால் ஞானசாமாநியத்தின் சாமக்கிரியினால் பிரமாததன்மையின் உற்பத்தி உண்டாகின்றது.

ஞான சாமாநியத்தின் சாமக்கிரியினால் பிரமாததன்மையின் உற்பத்தியை அங்கீகரிக்கின், பிரமஸ்தலத்திலும் ஞானசாமாநிய

சாமக்கிரி இருத்தலால் பிரமாஞானம் உண்டாதல் வேண்டும் என்று கூறுவாராயின், அதற்கு இது சமாதானமாம்:—தோஷமுளதாயின் ஆண்டுப் பிரமாஞான முண்டாகாது. ஆதலால் பிரமாத்தன்மையின் உற்பத்தியில் தோஷம் பிரதிபந்தகமாம் சகல காரியங்களின் உற்பத்தியிலும் பிரதிபந்தக அபாவம் ஏதுவாம். ஆதலால் தோஷாபாவத்தோடுகூடிய ஞானத்தின் சாமக்கிரியினால் பிரமாத்தன்மையின் உற்பத்தி உண்டாகின்றது. ஈண்டுப் பிரமாத்தன்மையின் உற்பத்தி கூறுதலால் பிரமாத்தன்மை விசிஷ்ட ஞானத்தின் உற்பத்தியில் தாற்பரியமாம். ஆதலால் பிரமாத்தன்மைத் தாமத்தின் உற்பத்தி கூறுதல் அசங்கதமன்று. இவ்வாற்றால் தோஷாபாவத்தோடு கூடிய ஞானத்தை உண்டுபண்ணும் நேத்திரமுதலியவடிவ சாமக்கிரியாதோ, அதனால் பிரமாஞானத்தின் உற்பத்தி உண்டாகுதலால் பிரமாத்தன்மையின் உற்பத்தி தன்னால் உண்டாகின்றது.

ஞானசாமானியத்தின் சாமக்கிரி இந்திரியம் அநுமான முதலியனவாம். சாமானிய ஞானத்தின் காரணம் தோஷாபாவமன்று. பிரமாத்தன்மையின் உற்பத்தியில் தோஷாபாவமும் காரணமெனப்பட்டது. ஆதலால் சாமானிய சாமக்கிரியினும் அதிக காரணத்தாற் றோன்றியதாயிருத்தலின் பிறிதாற பிராமாணியத்தின் அங்கீகார முண்டாயிற்று. அங்ஙனமாயினும், ஞான சாமானியத்தின் சாமக்கிரியினால் அதிகத்தன்மையின் அபேக்ஷை உண்டாகுமாயின் பிறிதாற பிராமாணியமாகின்றது. அபாவ வடிவ தோஷாபாவத்தின் அபேக்ஷையினால் பிறிதாற பிராமாணிய முண்டாகிறதில்லை. அங்ஙனமே ஞானத்தைக் கிரகிக்கும் சாமக்கிரி சாக்ஷியாம். தோஷமின்மையோடுகூடிய சாக்ஷியினால் ஞானத்தினது பிரமாத்தன்மையின் ஞான முண்டாகின்றது. தோஷத்தோடுகூடிய இந்திரியம் அநுமானமுதலியவடிவ ஞானத்தை உண்டுபண்ணும் சாமக்கிரியினால் அப்பிரமாத்தன்மையின் உற்பத்தி உண்டாகின்றது. ஞான சாமானியத்தின் சாமக்கிரி இந்திரியம் அநுமான முதலியனவாம். அவற்றினும் தோஷம் பிறிதாம். ஆதலால் அப்பிரமாத்தன்மையின் உற்பத்தி பிறிதால உண்டாகின்றது. பிரமமுண்டாய்ப் பிரவிருத்தியுண்டாகப் பலத்தின் இலாபமுண்டாகாவிடின், அப்போது அப்பிரமாத்தன்மையநுமிதிஞானம் உண்டாகின்றது. அது அநுமானத்தினால் உண்டாகின்றது. ஞானத்தைக் கிரகிக்கும் சாமக்கிரி

யாகிய சாக்ஷியினும் அநுமானம் வேறாம். ஆதலால் அப்பிராமாணியக் கிரகிப்பும் பிறிதால் உண்டாகின்றது. அநுமானத்தின் வடிவம் இதுவாம்:— "இந்த ஜலஞானம் அப்பிரமை; நிஷ்பலப் பிரவிருத்தியை உண்டுபண்ணுவதாயிருத்தலின்; யாதொன்று யாண்டு நிஷ்பலப் பிரவிருத்தியை உண்டுபண்ணுந்தன்மையுளதோ, அஃதாண்டு அப்பிரமாத்தன்மையுடைத்து; வேறு பிரமத்தைப்போல" என்றிவ்வாறு ஞானத்தின் உற்பத்திகாலத்திலேயே சாக்ஷியினால் ஞானத்தினது சொரூபத்தின் பிரகாசமுண்டாகின்றது. ஞானத்திலிருக்கும் பிரமாத்தன்மையின் பிரகாசமு முண்டாகின்றது.

## க௮ம். அக்கியாதிவாதியினது வசனத்தின் பரிகாரம்.

நிச்சய ஞானத்திற்குச் சம்சயஞானத்தோடு விரோதமுண்டு. ஆதலால் பிரமாத்தன்மையின் நிச்சயமுண்டாகப் பிரமாத்தன்மையின் சந்தேகமுண்டாகாது. இதனால் பிரமாத்தன்மைச் சந்தேகத்தினால் அசைவின்றிய பிரவிருத்தியின் அபாவமுண்டாகுமென்னும் அக்கியாதிவாதியின் வசனம் அசங்கதமாம். பிரமாத்தன்மைச் சம்சயத்திற்கு விரோதி பிரமாத்தன்மை நிச்சயமாம். பிரமத்தன்மைச் சம்சயத்திற்கு விரோதி பிரமாத்தன்மைநிச்சயமன்று. ஏனெனின் சமான விஷயத்தில் சம்சய நிச்சயங்கள் விரோதிகளாம். பிரமாத்தன்மை நிச்சயத்திற்கும் பிரமத்தன்மைச் சம்சயத்திற்கும் விஷயமாகிய பிரமாத்தன்மையும் பிரமத்தன்மையும் பின்னமாம். ஆதலால் அக்கியாதிவாதி கூறிய வசனம் பொருத்தமுடையதாம். என்றாலும் எந்த ஞானத்தில் பிரமாத்தன்மை நிச்சயமுண்டாகின்றதோ, அந்த ஞானத்தில் பிரமத்தன்மையின் நிச்சயமும் பிரமத்தன்மையின் சந்தேகமு முண்டாகிறதில்லையென்பது அநுபவசித்தமாம்; ஆதலால் பிரமத்தன்மைச் சந்தேகத்திற்கும் விரோதியாம். விசாரிக்குமிடத்துப் பிரமாத்தன்மைச் சம்சயத்திற்கும் பிரமத்தன்மைச் சம்சயத்திற்கும் பேதமில்லை; ஒரே பதார்த்தமாம். ஏனெனின் "இவ்வுஞ்ஞானம் பிரமையோ? அன்றோ?" என்பது பிராமாத்தன்மைச் சம்சயத்தின் ஆகாரமாம். இதில் விதிபக்ஷம் பிரமாத்தன்மையாம்; நிஷேதபக்ஷம் பிரமத்தன்மையாம். ஏனெனின் ஞானத்தில் பிரமாத்தன்மையை நிஷேதிக்கின் பிரமத்தன்மையே சேஷமிருக்கும். அங்ஙனமே இவ்வுஞ்ஞானம் பிரமமோ? அன்றோ?" என்பது பிரமத்தன்மைச் சம்சயத்தின் ஆகாரமாம். இதில்

விதிபக்ஷம் பிரமத்தன்மையாம்; நிஷேதபக்ஷம் பிரமாத்தன்மையாம். ஞானத்தில் பிரமத்தன்மையை நிஷேதிக்கின் பிரமாத்தன்மையின் சேஷமே இருக்கும். இவ்வாற்றால் இரண்டு சமசயங்களிலும் பிரமத்தன்மை பிரமாத்தன்மைகளாகிய இரண்டு பக்ஷங்களும் சமானமாம். ஆதலால் பிரமாத்தன்மைச் சமசயத்திற்கும் பிரமத்தன்மைச் சம்சயத்திற்கும் பேதமில்லை. என்றாலும் எதில் விதிபக்ஷம் பிரமாத்தன்மையோ அது **பிரமாத்தன்மைச் சம்சய**மெனப்படுகின்றது. எதில் விதிபக்ஷம் பிரமத்தன்மையோ அது **பிரமத்தன்மைச் சம்சய**மெனப்படுகின்றது. இவ்வாற்றால் பிரமாத்தன்மைச் சமசயத்திற்கும் பிரமத்தன்மைச் சமசயத்திற்கும் விஷயம் சமானமாயிருத்தலின், பிரமாத்தன்மையின் நிச்சயமுண்டாக, எங்ஙனம் பிரமாத்தன்மைச்சமசயமுண்டாகிறதில்லையோ, அங்ஙனமே பிரமத்தன்மைச்சமசயமும் உண்டாகிறதில்லை. ஆதலால் சித்தாந்த மதத்தில் பிரம ஞானத்தை அங்கீகரித்தும் அசைவின்றிய பிரவிருத்தி சம்பவிக்கின்றது. அநிர்வசநீயத்தின் நிச்சயம் பிரம நிச்சயமாம்.

## ௧௮௧. பிராந்தி ஞானத்தின் மூவகைத்தன்மையும் விருத்திபேதத்தின் பரிகாரமும்.

இவ்வாற்றால் சம்சய நிச்சயபேதத்தால் பிரமஞானம் இருவகையாம். தர்க்கஞானம் பிரம நிச்சயத்தில் அடங்கும். ஏனெனின் வியாப்பியத்தின் ஆரோபத்தால் வியாபகத்தின் ஆரோபம் தர்க்கமாம். எங்ஙனம்: "வந்நி இராதாயின், அப்போது தூமமும் இராது" என்னும் ஞானம், தூமவந்நிகளோடு கூடிய தேசத்திலுண்டாயின் அது தர்க்கமாம். ஆண்டு வந்நியின் அபாவம் வியாப்பியமாம். தூமத்தின் அபாவம் வியாபகமாம். வந்நி அபாவத்தின் ஆரோபத்தால் தூமாபாவத்தின் ஆரோபம் உண்டாகின்றது. வந்நி தூமங்களிருக்க, வந்நியபாவத்தின் ஞானமும் தூமாபாவத்தின் ஞானமுமிருக்கின்றன; ஆதலால் பிரமமாம். பாதம் உண்டாகப் பிரமமுண்டாயின் அதனை **ஆரோப**மெனபர். ஈண்டுத் தூமவந்நிகளின் இருப்பிருக்கின்றது. ஆதலால் அவற்றின் அபாவத்திற்குப் பாதமிருக்கின்றது. அது இருக்கவும், புருஷனது இச்சையினால் வந்நியபாவ தூமாபாவங்களின் பிரமஞானமுண்டாகின்றது; ஆதலால் ஆரோபமாம். இவ்வாற்றால் ஆரோப சொரூப தர்க்கமும் பிரமத்திலடங்கும்; வேறன்று. விருத்தியின் பிரசித்தபேதங்களைச் சொன்னோம்; அவாந்தரபேதங்கள் அநந்தமாம்.

**ஏழாவது பிரகாசம்**
**விருத்திபேதக்கியாதி கண்டன தானே**
**பிரமாணமாந்தன்மை நிரூபணம் முடிந்தது**

---

ஓம்.

தத்ஸத் பிரஹ்மணேநம:

# எட்டாவது பிரகாசம்.



## ஜீவேசுவரசொரூப விருத்திப்பிரயோஜனத்தோடு கற்பிதநிவிருத்திசொரூப நிரூபணம்.

### ௧௮௨-௧௮எ. அஞ்ஞானத்தில் விசாரம்.

### ௧௮௨. விருத்தியின் பிரயோஜனத்தைக் கூறுதலின் பிரதிஞ்ஞை.

ஏழாவது பிரகாசத்தில் விருத்தியின் சொரூபமும் காரணமும் சொல்லப்பட்டன. விருத்தியின் பிரயோஜனத்தைச் சொல்லுதற்கு எட்டாவது பிரகாசம் ஆரம்பமாகின்றது. அஞ்ஞானத்தின் நிவிருத்தி விருத்தியின் முக்கியப் பிரயோஜனமாம். கடமுதலிய அநாத்மாகார விருத்தியினாலே கடாதி அவச்சின்ன சேதனத்தின்கண் உள்ள அஞ்ஞானத்தின் நிவிருத்தி உண்டாகின்றது. அகண்ட பிரஹ்மாகார விருத்தியினாலே நிரவச்சின்ன சேதனத்தின்கண்ணுள்ள அஞ்ஞானத்தின் நிவிருத்தி உண்டாகின்றது.

### ௧௮௩. அஞ்ஞானத்தின் ஆசிரயமும் விஷயமும்.

வாசஸ்பதியின் மதத்தில் விருத்தியினால் நசிக்கத்தக்க அஞ்ஞானத்திற்கு ஆசிரயம் சீவனும், விஷயம் பிரஹ்மமுமாம். விவரணகாரர் முதலியோர் மதத்தில் அஞ்ஞானத்தின் ஆசிரயமும் விஷயமும் சுத்தசேதனமாம். எங்ஙனம் ஞானத்தினாலாகிய கடமுதலியவற்றின் பிரகாசம் ஞானத்தின் விஷயத்தன்மை எனப்படுகின்றதோ, அங்ஙனமே அஞ்ஞானத்தினாலாகிய சொரூபத்தின் ஆச்சாதனமே (மறைப்பே) அஞ்ஞானத்தின் விஷயத்தன்மையாம். ஜீவத்தன்மை ஈசுவரத்தன்மைகள் அஞ்ஞானத்தின் அதீனமாம். ஆதலால் அஞ்ஞானத்தினாலாகிய ஜீவன் அஞ்ஞானத்திற்கு ஆசிரயமாதல் சம்பவியாது. இவ்வர்த்தத்தினது ஞானத்தில் உபயோகமுள்ள ஜீவேச்வரர்களது சொரூபத்தை முதலில் நிரூபிப்பாம்.

## ௧௮௪. அஞ்ஞானத்தின் நிரூபணம்.

இந்த ஜீவேசுவரர்களது நிரூபணத்தில் உபயோகமுள்ளதாகிய அஞ்ஞானத்தின் நிரூபணத்தைச் செய்வாம். அஞ்ஞானம், அவித்தை, பிரகிருதி மாயை சக்தி என்னும் பெயர்கள் ஒரே பதார்த்தத்தின் நாமம். மாயை அவித்தைகளின் பேதவாதம் ஏகதேசிகளதாம். நையாயிகர் முதலியோர் ஞானபாவத்தினையே அஞ்ஞான மென்பர். சித்தாந்தமதத்தில் ஆவரண விக்ஷேப சக்திகளையுடைய அநாதி பாவரூபம் அஞ்ஞானபதார்த்தமாம். வித்தையினால் நசிக்கப்படுவதா யிருத்தலின் அவித்தை யென்பர். பிரபஞ்சத்திற்கு உபாதானமா யிருத்தலின் பிரகிருதி யென்பர். நிகழ்தற்கரியதனையும் நிகழச்செய்த லால் மாயை யென்பர். சுதந்திரத்தன்மை இன்மையால் சக்தி யென்பர்.

## ௧௮௫. அஞ்ஞானத்தின் அநாதி பாவரூபத் தன்மையில் சங்கை.

அஞ்ஞானத்திற்கு அநாதிபாவரூபத்தன்மையைக் கூறுதல் சம்பவியாது. ஏனெனின் இது அத்வைத நூலின் ஏழுத்தாம்:—சேதனத்திற்குப் பின்னமாகவேனும், அபின்னமாகவேனும் அஞ்ஞான முளதெனினும் இரண்டு பக்ஷங்களும் சம்பவியா. ஏனெனின் "நேஹ நாநாஸ்தி கிஞ்சந - ஈண்டு நானாவென்பது சிறிதும் இல்லை" என்றல் முதலிய சுருதிவசனங்களால் சேதனத்திற்குப் பின்னமானது நிஷேதிக்கப்படுகின்றது. ஜடசேதனங்களுக்கு அபேதம் சம்பவியாது பின்னத்தன்மை அபின்னத்தன்மைகளுக்கு ஒன்றற்கொன்று விரோத மிருத்தலின், அஞ்ஞானம் சேதனத்தினும் பின்னபின்னமாம் என்று கூறுதலும் சம்பவியாது. அங்ஙனமே அத்வைதத்தைப் பிரதிபாதிக்கும் சுருதிகட்கு விரோதமாக அஞ்ஞானத்திற்கு சத்சொரூபத்தன்மை சம்பவியாது. பிரபஞ்ச காரணத்தன்மை சம்பவியாமையால் துச்சத்தன்மைசொரூபமான அசத் சொரூபத்தன்மை சம்பவியாது. ஒன்றற்கொன்று விரோத முள்ளதாமம் ஒன்றனிடத்தும் சம்பவியாது; ஆதலால் சத்து அசத்தெனும் இருவடிவுமாமென்று கூறுதல் சம்பவியாது. அங்ஙனமே அஞ்ஞானத்திற்கு சாவயவ மங்கீகரிக்கின், நியாயமதத்திலோ திரவியத்தை ஆரம்பிக்கும் உபாதானத்தினை அவயவமென்பர். சாங்கியர் முதலியோர் மதத்தில் திரவியரூப பரிணாமமுடைய உபாதானத்தினை அவயவமென்பர். உபாதானத்தினையே அவயவமெனின், சப்

வயவத்தன்மை சமபவியாது. அஞ்ஞானத்திற்குப் பிரபஞ்சத்தின் உபாதானத்தன்மை "மாயாந்து ப்ரக்ருதிம் வித்யாத்-மாயையினை யோ பிரகிருதி என்றறிக" எனனும சுருதியிற பிரசித்தமாம். மாயை அஞ்ஞானங்களுக்குப் பேதமில்லை. இவ்வாறுல அஞ்ஞானத்தில ஸாவயவத்தனமை அல்லது நிரவயவததனமைகள சமபவியா. அங்ஙனமே ஒனறற்கொனறு விரோதமுள்ள இருவடிவத தன்மையும சம்பவிக்கிறதிலலை.

இவ்வாற்றால் எந்தத தாமத்தினாலும் அஞ்ஞானம் நிரூபிக்க முடியாததாயிருததலின், அதனை அநிர்வசநீய மென்பா. இவ்வாறு அநேக நூல்களில எழுதபபட்டிருக்கின்றது. ஆதலால அநிர்வசநீய அஞ்ஞானததிறகு அநாதிபாவரூபத்தன்மை கூறுதல் சமபவியாது. பாவரூபததன்மை கூறுதலால் சதரூபததனமை சிததிக்கின்றது; சத்ரூபததன்மையோ நிஷேதம செயயப்பட்டிருககின்றது.

## கஅகூ. முற்கூறிய சங்கைக்குச் சமாதானம்.

அங்ஙனமாயினும, அஞ்ஞானம எங்ஙனம சததுவிலக்ஷண மோ, அங்ஙனமே அசததுவிலக்ஷணமுமாம. ஆதலால பாதிககப்படாத வடிவினதாகிய சத்துவமோ அஞ்ஞானததிலிலலை. ஆனால் துச்சவடிவ அசத்திறகு விலக்ஷணத்தன்மை வடிவ சத்துவததின் அங்கீகாரம அஞ்ஞானததிலுண்டு. இதனாறுன் சததசத்திற்கு விலக்ஷண அநிர்வசநீயம அஞ்ஞானமாம. முறறும வசனததிற்கெட்டாததனை அநிர்வசநீய மென்பதில்லை. அனால பாரமார்த்திக சத்சொரூப பிரஹ்மததின் விலக்ஷணமும, முறறும சத்தாஸ்பூர்த்தியினறிய முயறகோடு முதலியனவாகிய அசததிறகு விலக்ஷணமுமே அநிர்வசநீய சப்தத்திற்குப் பாரிபாஷிகப்பொருளாம். ஆதலால் அநாதிபாவரூபத்தன்மையைக் கூறுதல் சமபவிககின்றது. நையாயிகா முதலியோரது மதத்தில எங்ஙனம நிஷேதமுக வுணாச்சிக்கு விஷய ஞானாபாவ வடிவம் அஞ்ஞானமோ, அங்ஙனமே அத்வைத நூல்களிலும அஞ்ஞான சப்ததிற்குப் பொருளில்லை. ஆனால் ஞானத்தினால் பாதிக்கப்படும இரஜ்ஜுசாப்ப முதலியன எங்ஙனம் விதிமுக உணாசசிக்கு விஷயமோ, அங்ஙனமே ஞானத்தினால் நிவர்த்திக்கததக்க விதிமுக உணாசசிக்குக் கோசரமாவது அஞ்ஞானமாம். அஞ்ஞான சப்ததில் அகாரத்திற்கு

விரோத முடைமை பொருளாம் என்பது முன்னர் (ஆறுவது பிரகாசத்தில்)கூறப்பட்டிருக்கின்றது. ஆதலால் அஞ்ஞானத்திற் பாவரூபதன்மையைக் கூறுதல் சமபவிக்கின்றது. பிராசீன ஆசாரியர்களாகிய விவரணகாரர் முதலியோர் பெருங்கூச்சலாகப் பிரகாசவிரோதியாகிய அந்தகாரத்திற்குப் பாவரூபத்தன்மையைப் பிரதிபாதித்து, ஞான விரோதியாகிய அஞ்ஞானத்திற்குப் பாவரூபத்தன்மையையே பிரதிபாதனம் செய்திருக்கின்றனர். ஆதலால் அஞ்ஞானத்திற்கு பாவரூபத்தன்மையைச் சிரவணஞ்செய்யின் உத்காக்ஷமுண்டாகுமென்று மனோகள சிறுகேள்வியாளராவர். இவ்வாற்றால் பாவரூபம் அஞ்ஞானமாம். உற்பத்தியின்மையதாயிருத்தலின் அநாதியாம். கடத்தைப்போல அவயவத்தோடுகூடியதாகிய ஸாவயவமன்று. ஆயினும் அந்தகாரத்தைப்போல ஸாம்சம (அம்சத்தோடு கூடியது) ஆம்.

## ௧௮௭ - ௨௦௫. ஜீவேசுவரர்களிடத்து விசாரம்.

### ௧௮௭. மாயை அவித்தை பூர்வகமாக ஜீவேசுவரர்களது வாதத்தில் நான்குபக்ஷம்.

௧. சுத்தசேதனத்தின் ஆசிரிதமான மூலப்பிரகிருதியில் சேதனத்தின் பிரதிபிம்பமாகிய ஈசுவரனாம். * ஆவரணவிக்ஷேப சக்திவிசிஷ்ட மூலப் பிரகிருதியின் அம்சங்களை அவித்தை யென்பர். அவித்தை வடிவமாகிய அநந்த அம்சங்களிலிருக்கும் சேதனத்தின் அநந்தப் பிரதிபிம்பத்தை ஜீவனென்பர். தத்துவ விவேகநூலில் இவ்வாறு ஜீவேசுவரநிரூபணமிருக்கின்றது:— ௨. ஜகத்திற்குக்காரணவடிவமாயுள்ள பிரகிருதிக்கு இரண்டு வடிவம் கற்பிதமாம். இதனாற்றான் மூலப்பிரகிருதியின் பிரசங்கத்தில் "மாயாசாவித்யா ச ஸ்வயமேவ பவதி - மாயையும் அவித்தையும் தானேயாகின்றது" என்று சுருதி இருக்கின்றது. "தானே" என்பது ஜகத்தின் மூலப்பிரகிருதி தானே மாயை வடிவமும் அவித்தை வடிவமுமாகின்றது. சுத்த சத்துவப் பிரதானம் மாயையாம். மலின சத்துவமுடையது அவி

---

* "பிரஹ்மமில்லை, காணப்படவில்லை" என்று வியவகரித்தற்குரியதாய்ப் பிரஹ்ம சைதன்னியத்தை மறைத்தற் கநுகூலமான சக்தி ஆவரணசக்தியாம். அந்தந்த ஜீவ அசாதாரண துக்க முதலிய விக்ஷேபத்திற்கு அநுகூலமான சக்தி விக்ஷேபசக்தியாம்.

த்தையாம். இரஜோகுண தமோகுணங்களால் அமிழ்த்தப்பட்ட சத்துவத்தினை மலினசத்துவ மென்பர். எதனால ரஜோகுணதமோ குணங்கள் அமிழ்த்தப்பட்டன வாகின்றனவோ அதனை சுத்த சத்துவ மென்பர். மறைக்கப்பட்டதனை அபிபூதம் (அமிழ்த்தப் பட்டது) என்பர். முற்கூறிய வடிவ மாயையில் பிரதிபிம்பம் ஈசு வரனும். அவித்தையில் பிரதிபிம்பம் ஜீவனும். ஈசுவரனது உபாதி யாகிய மாயையின்சத்துவம் சுத்தமாயிருத்தலின்ஈசுவரன் சர்வஞ் ஞனவன். ஜீவனது உபாதியாகிய அவித்தையின் சத்துவம் மலினமாய் இருக்கின்றதாகலின் ஜீவன் அற்பஞ்ஞனுவன். சில நூலாசிரியர் இவ் வாறு கூறுகின்றனர் :— ௩. முற்கூறிய சுருதியில் இரண்டு வடிவ முடைய பிரகிருதி சொல்லப்பட்டிருக்கின்றது. அதில் இது எது வாம :—விக்ஷேப சத்தியின பிரதானத்தன்மையினால் மாயை என் பர். ஆவரண சக்தியின் பிரதானத்தன்மையினால் அவித்தை என் பர். ஈசுவரனது உபாதியாகிய மாயையில் ஆவரண சக்தி யிலலை. ஆதலால் மாயையிற பிரதிபிம்பமாகிய ஈசுவரனுக்கு அறியாமை யில்லை. ஆவரண சத்தியுடைய அவித்தையிற பிரதிபிமப ஜீவருக்கு அறிவின்மை யிருக்கின்றது. சம்க்ஷேபசாரீரகத்தில் இது சொல் லப்பட்டிருக்கின்றது:— ௪. ஜீவனது உபாதி காரியமும், ஈசுவர னது உபாதி காரணமுமாமென்று சுருதி கூறியிருக்கின்றது. ஆத லால் அவித்தையிற் பிரதிபிம்பன ஈசுவரனும், அந்தக்கரணத்தில்பிர திபிம்பன ஜீவனுமாவர். இப்பிரசங்கத்தில பிரதிபிம்பத்தை ஜீவ னென்பர்; அல்லது ஈசுவரனென்பர். ஆண்டுக் கேவலப் பிரதிபிம் பத்திற்கு ஜீவத்தன்மை அல்லது ஈசுவரத்தன்மை இஷ்டமன்று. பிரதிபிம்ப விசிஷ்ட சேதனத்திற்கு ஜீவத்தன்மையும ஈசுவரத் தன்மையுமாமென்று அறிதல வேண்டும். ஏனெனின் கேவலப் பிரதிபிம்பத்திற்கு ஜீவத்தன்மை ஈசுவரத்தன்மை யுளதாயின், ஜீவவாசகபத ஈசுவரவாசக பதங்களில் பாகத்தியாக லக்ஷணையின் அசம்பவமுண்டாகும். பரமார்த்தமோ இதுவாம :— முற்கூறிய நான்கு பக்ஷங்களிலும பிம்பப்பிரதிபிம்பங்களுக்கு அபேத வாத முண்டு. இந்த வாதத்தில் பிரதிபிம்பம மித்தையன்று. ஆனல் கழுத்திலிருக்கும முகத்திலேயே பிரதிபிம்பத்தன்மை தோற்று கின்றது. அது பிரமவடிவப் பிரதீதி யாகின்றது. ஆதலால் பிரதி பிம்பத்தன்மைத் தாமமோ மித்தையாம; சொரூபமாகப் பிரதி பிம்பம மித்தையன்று. இவ்வர்த்தம மேல் விளக்கமாகும்.

## க௮௮. முற்கூறிய நான்குபக்ஷங்களிலும் முக்தஜீவர்களுக்குச் சுத்தப் பிரஹ்மத்தோடு அபேதமுளதாதல்.

முற்கூறிய நான்குபக்ஷங்களிலும் ஜீவேசுவரர் இருவர்களை யும் பிரதிபிம்பமெனக் கொண்டிருக்கின்றனர். ஆதலால் முக்த ஜீவர்களால் அடையப்படுவது சுத்தப்பிரஹ்மமாம்; ஈசுவரனன்று. ஏனெனின் ஒரு உபாதி நசிக்கின், அப்போது அவ்வுபாதியின் பிரதி பிம்பத்திற்கு மற்றப் பிரதிபிம்பத்தோடு அபேதம் உண்டாகிற தில்லை; ஆனால் தனது பிம்பத்தோடு அபேத முண்டாகின்றது. ஈசுவரனும் பிரதிபிம்பமாம். ஆதலால் ஜீவரூபப பிரதிபிம்பத்தின் உபாதி நாசமாகப் பிரதிபிம்ப வடிவ ஈசுவரனோடு அபேதம் சம்ப விக்கிறதில்லை; ஆனால் பிம்பவடிவ சுத்தப் பிரஹ்மத்தோடுதான் அபேதமுண்டாகின்றது.

## க௮௯. முற்கூறிய நான்குபக்ஷங்களிலும் ஆறு அநாதி பதார்த்தங்களைக்கூறி, மூவகைச் சேதனத்தை அங்கீகரித்தல்.

இவ்வாற்றால் முற்கூறியபக்ஷங்களில் ஜீவன், ஈசுவரன், சுத்தப் பிரஹ்மம் என்னும் பேதத்தினால் மூவகைச் சேதனம் அங்கீ காரமாம். இதன்றியும் வார்த்திகத்தில் ஆறு பதார்த்தம் அநாதி யெனப்பட்டிருக்கின்றது. க. சுத்தசேதனம், உ. ஈசுவரசேதனம், ௩. ஜீவசேதனம், ௪. அவித்தை, ரு. அவித்தைக்கும் சேதனத்திற் கும் ஒன்றற்கொன்றுள்ள சம்பந்தம், சா.இவ்வைந்திற்கும் ஒன்றற் கொன்றுள்ள பேதம் என்னும் இவ்வாறு பதார்த்தங்களும் உற் பத்தி ரூபியமாயிருத்தலின் அநாதியாம். இவற்றில் சேதனத்திற்கு மூன்றே பேதம் கூறப்பட்டிருக்கின்றது.

## ககூ௦. சித்திரதீபத்தில் வித்தியாரணிய சுவாமிகளாற் சொல்லப்பட்ட சேதனத்தின் நான்குபேதம்.

சித்திரதீபத்தில் வித்தியாரணிய சுவாமியானவர் சேதனத்திற்கு நான்குபேதம் கூறியிருக்கின்றனர். அங்ஙனமாயினும், கடாகாசம், மகாகாசம், ஜலாகாசம், மேகாகாச மென்னும் பேதத்தால் ஆகாச த்திற்கு நான்குபேதமுண்டு. கடாவச்சின்ன ஆகாசத்தினைக் கடாகாச

மென்பர். நிரவச்சின்ன ஆகாசத்தினை மகாகாசமென்பர். கடஜல த்தில் ஆகாசத்தின் பிரதிபிம்பத்தை ஜலாகாசமென்பர். மேகத்தில் ஜலத்தின் சூக்ஷ்மத்துளிக ளிருக்கின்றன. அவற்றில் ஆகாசத்தின் பிரதிபிம்பத்தினை மேகாகாசமென்பர். அங்ஙனமே சேதனமும் க. கூடஸ்தன், உ. பிரஹ்மம், ௩. ஜீவன், ச. ஈசுவரனென்னும் பேதத்தால் நான்குவகையாம். ஸ்தூல சூக்ஷ்ம சரீரங்களின் அதிஷ்டானசேதனத்தைக் கூடஸ்தனென்பர். நிரவசின்னசேதனத்தைப் பிரஹ்மமென்பர். சரீரவடிவ கடத்தில் புத்திரூப ஜலத்திலுள்ள சேதனத்தின் பிரதிபிம்பம் யாதோ அதனை ஜீவனென்பர். மாயா வடிவ அந்தகாரத்திலுள்ள நீர்த்துளிக்குச் சமமான புத்திவாசனைகள் எவையோ, அவற்றிலுள்ள பிரதிபிம்பத்தினை ஈசுவரனென்பர். சுழுத்தி அவஸ்தையிலுள்ள புத்தியின் சூக்ஷ்ம அவஸ்தை யாதோ அதனை வாசனை என்பர். கேவல புத்திவாசனையில் உள்ள பிரதிபிம்பத்தை ஈசுவரனெனின், புத்திவாசனைகள் அநந்தமாயிருத்தலால் ஈசுவரனும் அநந்தராதல் வேண்டும். ஆதலால் புத்திவாசனை விசிஷ்ட அஞ்ஞானத்தில் உள்ள பிரதிபிம்பத்தினை ஈசுவரனென்பர். இவ்வாற்றால் விஞ்ஞானமயகோசம் ஜீவனும். ஜாக்கிரசொப்பன அவஸ்தைகளிலுள்ள ஸ்தூல அந்தக்கரணத்தினை விஞ்ஞானமென்பர். அதிலுள்ள பிரதிபிம்பத்தை விஞ்ஞானமய மென்பர். "யான் காத்தா, போக்தா, ஸ்தூலன், தூர்ப்பலன், ஒற்றைக்கண்ணன், செவிடன்" என்றிவ்வாறு விசேஷ விஞ்ஞானமுடையவன் ஜீவன். சுழுத்தியவஸ்தையில் புத்திவாசனையோடுகூடிய அஞ்ஞான வடிவ ஆநந்தமயகோசன் ஈசுவரனுவன். ஆநந்தமயகோசத்திற்கு ஈசுவரத்தன்மை மாண்டூக்கிய உபநிஷத்தில் பிரசித்தம். இவ்வாறு சேதனத்தின் நான்குபேதங்களைச் சித்திரதீபத்தில் கூறியிருக்கின்றார்.

## கக௧. பிம்பப் பிரதிபிம்ப வாதத்தோடு ஆபாசவாதத்திற்குள்ள பேதம்.

வித்தியாரணியசுவாமிகள்மதத்தில் பிரதிபிம்பம் மித்தையாம். முற்கூறிய பக்ஷங்களில் பிம்பப்பிரதிபிம்பங்களுக்கு அபேத மிருத்தலின் பிரதிபிம்பம் சத்தியமாம். ஒரே பதார்த்தத்தில் உபாதிகளின் சந்நிதானத்தால் பிம்பத்தன்மைப் பிரதிபிம்பத்தன்மைப்

பிரமமுண்டாகின்றது. பிம்பத்தின் சொரூபமே பிரதிபிம்பமாம். வித்தியாரணியசுவாமிகள் மதத்தில் கண்ணாடி முதலியவற்றில் பிம்பத்தின் சந்நிதானத்தினால் அநிர்வசநீயப பிரதிபிம்பத்தின் உற் பத்தி உண்டாகின்றது. ஆதலால் ஜீவேசுவரர்களது சொரூபம் மித்தையாம.

## ககஉ. ஆபாச வாதத்தின்படி ஜீவப்பிரஹ்மங்களின் அபேத வாக்கியங்களில் பாதசமானாதிகரணமுளதெனல்.

ஜீவனுக்குப் பிரஹ்மத்தோடு அபேதத்தைப் பிரதிபாதிக்கும் வாக்கியங்களில் பாத * சமானாதிகரண முண்டு; அபேத சமானாதி கரணமில்லை. எங்ஙனம் புருஷனிடத்துத் தாணுபபிரமமுண்டாய்ப் புருஷனது ஞானமுண்டாக, "இத்தாணு புருஷ" னெனபதாகப் புருஷனோடு தாணுவிறகு அபேதம கூறின, ஆண்டுத தாணுவின் அபாவமுடையவன் புருஷன அல்லது தாணுவின் அபாவம புரு ஷன என்றிவ்வாறு ஞானமுண்டாகின்றது. அதிகரணத்தினும் அபாவம வேறுமென்னும மதத்தில் தாணுவின்அபாவமுடையவன் புருடனுமென்னும போதமுண்டாகின்றது. கற்பிதத்தினஅபாவம் அதிஷ்டான வடிவமாமென்னும் மதத்தில் தாணுவின் அபாவம் புருஷனென்னும் போதமுண்டாகினறது. இவ்வாறே யானென் னும சொல்லிற்குப் பொருளாகிய "ஜீவன் பிரஹ்ம" மென்னும் வாக்கியத்திற்கு ஜீவனது அபாவமுடையது பிரஹ்மமா மென்பது பொருள்; அலலது ஜீவனது அபாவம் பிரஹ்மமா மென்பது பொருள். அபாவத்தினைப் பாதமென்பர. முற்கூறியபடி கற்பித பதார்த்தத்திற்குச் சத்திய அதிஷ்டானத்தோடு அபேதங்கூறின் ஆண்டுப் பாத சமானாதிகரணமே சொல்லக் கருதியதாம்.

## ககரு. கூடஸ்தப் பிரஹ்மங்களின் அபேதஸ்தலத்தில் அபேத (முக்கிய) சமானாதிகரணமுளதெனல்.*

யாண்டுக் கூடஸ்தருக்குப் பிரஹ்மத்தோடு அபேதம சொல் லப்படுகின்றதோ, ஆண்டு அபேதசமானாதிகரண முண்டு. ஜலாகாச

---

* ஈண்டு மூலக்கிரந்தகாரரால் அப்பியாசிகள் சுலபமாய் உச்சரிக்கும் பொருட்டுச் சாமானாதிகரணியம் எனனும் பதம் சமானாதிகரண மென்று பிரயோகிக்கப்பட்டிருக்கின்றது.

த்திற்கு மகாகாசத்தோடு அபேதம் கூறுமிடத்து, ஜலாகாசத்திற்கு மகாகாசத்தோடு பாதசமானாதிகரணமுண்டு. கடாகாசத்திற்கு மகாகாசத்தோடு அபேதங் கூறின், ஆண்டு அபேதசமானாதிகரணமுண்டு. இதனையே முக்கியசமானாதிகரண மென்பர். இவ்வாறு வித்தியாரணிய சுவாமிகள் ஜீவனுக்குப் பிரஹ்மத்தோடு பாதசமானாதிகரணமே எழுதி இருக்கின்றனர்.

## ௧௧௪. முற்கூறிய பாதசமானாதிகரணத்தில் விவரணகாரரது வசனத்தோடு விரோதமின்மை.

விவரண கிரந்தத்தில் "யான பிரஹ்மம" என்னும் வாக்கியத்தில் யானென்னும சொற்பொருளாகிய ஜீவனுக்குப் பிரஹ்மத்தோடு முக்கியசமானாதிகரணம எழுதப்பட்டிருக்கின்றது. மகாவாக்கியத்தில் பாதசமானாதிகரணத்தின் கண்டநமும் எழுதப்பட்டிருக்கின்றது. அதற்குச் சமாதானம் வித்தியாரணியசுவாமி இவ்வாறு எழுதி இருக்கின்றனர் :— புத்தியிலுள்ள சிதாபாசனுக்கும் கூடஸ்தனுக்கும அந்நியோந்நியாத்தியாசமுண்டு. ஏனெனின் சிதாபாசவிசிஷ்ட புத்திக்கு அதிஷ்டானம கூடஸ்தனும். யானெனும் உணர்ச்சிக்கு விஷயம் சிதாபாசவிசிஷ்ட புத்தியாம. தானெனும் உணர்ச்சிக்கு விஷயம் கூடஸ்தனும. "யானறிகினறேன், நீயறிகின்றாய், அவனறிகின்றான்" என்றிவ்வாறு சகல உணர்ச்சியிலும கலந்திருப்பது தானென்னும சொல்லின் பொருளாம. யான், நீ முதலியசொற்களின் பொருள வியபிசாரியாம் (பிறழ்ச்சியுள்ளதாம்). தானெனும சொல்லிற்குப் பொருளாகிய கூடஸ்தன்எல்லாவற்றினும கலந்திருத்தலால் அதிஷ்டானமாம. நான் நீ முதலிய சொற்களுக்குப் பொருளாகிய சிதாபாசவிசிஷ்ட புத்திவடிவஜீவன் வியபிசாரியா யிருத்தலின் அத்தியஸ்தமாம. கூடஸ்தரிடத்து ஜீவனது சொரூபாத்தியாச மிருக்கின்றது. ஜீவனிடத்துக் கூடஸ்தரது சம்பந்தாத்தியாச மிருக்கின்றது. இதனால கூடஸ்தஜீவர்களுக்குஅந்நியோந்நியாத்தியாச மிருத்தலின், ஒன்றற்கொன்று விவேகமுண்டாகிறதில்லை. ஆதலால் பிரஹ்மத்தோடு கூடஸ்தனுக்குள்ள முக்கிய சமானாதிகரணத்தின் வியவகாரம் ஜீவனிடத்துச் செய்திருக்கின்றனர். ஜீவனிடத்துக் கூடஸ்த தர்மத்தின் ஆரோபமின்றி மித்தையாகிய ஜீவனுக்குச் சத்தியமாகிய பிரஹ்மத்தோடு முக்கியசமானாதிகரணம் சம்பவியாது. ஆதலால் தனது ஆசிரயமான அந்தக்

கரணத்தின் அதிஷ்டானமாகிய கூடஸ்தன் யாதோ, அதன் தர்ம த்தைச் சொல்லுங்கருத்தால் ஜீவனுக்குப் பிரஹ்மத்தோடு முக் கிய சமானாதிகரணம் சொல்லப்பட்டிருக்கின்றது. இவ்வாறு சித் திரதீபத்தில் வித்தியாரண்ணிய சுவாமியானவர் விவரணகாரரது வச னத்தோடு விரோதமில்லாமையை எழுதியிருக்கின்றனர்.

## ௪௬௫. விவரணத்திற் கூறிய ஜீவனுக்குப் பிரஹ்மத் தோடு முக்கிய சமானாதிகரணமும், வித்தியா ரண்ணியரது வாக்கியத்தின் பிரௌடிவாதத் தன்மையும்.

விவரண கிரந்தத்தை முன்பின் நோக்கின், இத்தன்மை சம்ப விக்கிறதில்லை. ஏனெனின் விவரணகிரந்தத்தில் பிம்பத்தின் சொரூ பமே பிரதிபிம்பமெனக் கொள்ளப்பட்டிருக்கின்றது. ஆதலால் அவர்கள் மதத்தில் பிரதிபிம்பத்தன்மை வடிவ ஜீவத்தன்மையோ மித்தையாம். பிரதிபிம்பவடிவ ஜீவனது சொரூபம் மித்தையன்று. ஆனால் அதன் சொரூபம் சத்தியமாம். ஆதலால் ஜீவனுக்குப் பிரஹ் மத்தோடு முக்கிய சமானாதிகரணம் சம்பவிக்கின்றது. வித்தியா ரண்ணியசுவாமிகள் முற்கூறிய விவரணகிரந்தத்தின் அபிப்பிராயம் யாதோ, அது பிரௌடிவாதத்தினாற் கூறப்பட்டதாம். எங்ஙன மெனின்: பிரதிபிம்பத்திற்கு மித்தியாத்தன்மை அங்கீகரிக்கினும், ஜீவனிடத்தாக கூடஸ்தத் தன்மையைக் கூறுங்கருத்தால் மகா வாக்கியங்களில் விவரணத்திற் கூறிய முக்கிய சமானாதிகரணம் சம்பவிக்கின்றது. ஆதலால் முக்கிய சமானாதிகரணத்தின் அநுப பத்தி (சம்பவமின்மை)யால் பிரதிபிம்பத்திற்குச் சத்தியத்தன்மை அங்கீகரிக்கத்தக்க தன்று என்னும் பிரௌடிவாதத்தால் வித் தியாரண்ணிய சுவாமியானவர் விவரணத்திற்கு முற்கூறிய அபிப் பிராயத்தை எழுதி இருக்கின்றனர். விவரணகிரந்தத்திற்கு முற் கூறிய அபிப்பிராய மில்லை. மேன்மை (பிரௌடி)யாகச் சொல்லு தல் (வாதம்) பிரௌடிவாதமெனப்படும். பிரதிபிம்பத்திற்கு மித் தியாத்தன்மையை அங்கீகரித்து மகா வாக்கியங்களில் முக்கிய சமானாதிகரணமும் பிரதிபாதனம் செய்யக்கூடுமென்று இவ்வாறு தனது மேன்மையைப் போதித்திருக்கின்றனர்.

## ௧௯௬. வித்தியாரணியர்கூறிய சேதனத்தின் நான்குபேதங்களது அநுவாதம்.

இவ்வாற்றால் அந்தக்கரணத்தில் ஆபாசன் ஜீவனாவன். அவன் விஞ்ஞானமயகோச வடிவமாவன். புத்தி வாசனா விசிஷ்ட அஞ்ஞானத்தில் ஆபாசன் ஈசுவரனாவன். அவன் ஆநந்தமயகோச வடிவமாவன். இருவரது சொரூபமும் மித்தையாம். கூடஸ்த ஜீவர்களுக்கு அந்நியோந்நியாத்தியாச முண்டு. பிரஹ்ம சேதனத்திற்கும் ஈசுவரனுக்கும் அந்நியோந்நியாத்தியாசமுண்டு. ஆதலால் ஜீவனிடத்துக் கூடஸ்த தர்மங்களின் ஆரோபத்தால் சிலவிடத்துப் பாரமார்த்திகப் பிரஹ்மத்தன்மை சொல்லப்பட்டிருக்கின்றது. அங்ஙனமே ஈசுவரனிடத்து அத்தியாசத்தாலாகிய பிரஹ்மத் தன்மையைக் கூறும் கருத்தால் சிலவிடத்து வேதாந்தத்தால் அறியப்படுந்தன்மை முதலிய தர்மங்களைக் கூறியிருக்கின்றனர். ஆதலால் சேதனத்திற்கு நான்குபேத முண்டென்னும் பிரக்கிரியை சித்திரதீபத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது.

## ௧௯௭. வித்தியாரணிய சுவாமிகள் கூறிய புத்திவாசனையிலுள்ள பிரதிபிம்பத்தினது ஈசுவரத்தன்மையின் கண்டனம்.

ஆனால் புத்திவாசனையிலுள்ள பிரதிபிம்பத்திற்கு ஈசுவரத்தன்மை சம்பவியாது. அங்ஙனமே ஆநந்தமயகோசத்திற்கு ஈசுவரத்தன்மை கூறுதலும் சம்பவியாது. அது வருமாறு:—புத்திவாசனை விசிஷ்ட அஞ்ஞானத்திலுள்ள பிரதிபிம்பத்தை ஈசுவரனெனக் கூறுவோரை, ஈசுவரத்தன்மையின் உபாதி கேவலம் அஞ்ஞானமா? அல்லது வாசனையோடுகூடிய அஞ்ஞானமா? அல்லது கேவலம் வாசனையா? என்று கேட்கவேண்டும். முதற் பக்ஷத்தைக் கூறின், புத்திவாசனை விசிஷ்ட அஞ்ஞானத்திலுள்ள பிரதிபிம்பத்திற்கு ஈசுவரத்தன்மை கூறுதலோடு விரோதமுண்டாகும். இரண்டாவது பக்ஷத்தைக் கூறின், கேவலஅஞ்ஞானத்தினையே ஈசுவரத்தன்மையின் உபாதியாகக் கொள்ளுதல் வேண்டும். புத்திவாசனை விசிஷ்ட அஞ்ஞானத்தினை ஈசுவரனது உபாதியாகக் கூறுதல் பயனின்றியதாம். வித்தியாரணிய சுவாமிகளது பக்ஷத்தில், கேவல அஞ்ஞானத்தினை ஈசுவரனது உபாதியாகக்கொள்ளின், ஈசுவரனிடத்துச

சர்வஞ்ஞத்தன்மை சித்தியாதாகலின், சர்வஞ்ஞத்தன்மையைப் பெறுதற்பொருட்டுப் புத்திவாசனையையும் அஞ்ஞானத்திற்கு விசேஷணமாகக் கொண்டிருக்கின்றனா என்றிவ்வாறு கூறுவாராயின், அதுவும் அசங்கதமாம். ஏனெனின் அஞ்ஞானத்தின்கண் உள்ள சத்துவ அம்சத்தின் எல்லாவற்றையும் கோசரிக்கும் விருத்தியினாலேயே சர்வஞ்ஞத்தன்மையின் இலாபமிருத்தலால் புத்திவாசனையை அஞ்ஞானத்திற்கு விசேஷணமாகக் கொள்ளுதல் நிஷ்பலமாம். அஞ்ஞானத்திலுள்ள சத்துவாம்சத்தின் விருத்தியினாலேயே சர்வஞ்ஞத்தன்மை சம்பவிக்கின்றது. புத்திவாசனையினால் சர்வஞ்ஞத்தன்மை சித்திக்கிறதில்லை. ஏனெனின் ஒவ்வொரு புத்திவாசனைக்குமோ சகல பதார்த்தங்களையும் கோசரிக்குந்தன்மை சம்பவியாது. சர்வஞ்ஞத்தன்மையை யுடைத்தற்பொருட்டுச் சகலவாசனைகளையும் அஞ்ஞானத்திற்கு விசேஷணமாகக் கொள்ளுதல்வேண்டும். பிரளயகாலமின்றி ஏககாலத்திற் சர்வ வாசனைகளும் இருத்தல் சம்பவியாதாகலின், சர்வஞ்ஞத்தன்மையின் சித்தி வாசனையினா லுண்டாகிறதில்லை. இவ்வாற்றால் புத்திவாசனையோடு கூடிய அஞ்ஞானம் ஈசுவரனது உபாதியாமென்னும் இரண்டாவது பக்ஷமும் சம்பவியாது. கேவலவாசனை ஈசுவரனுக்கு உபாதியாமென்பது மூன்றாவது பக்ஷமாம். என்றாலும் இதனைக் கேட்கவேண்டும்:—ஒவ்வொரு வாசனைகளிலுமுள்ள பிரதிபிம்பம் ஈசுவரனா? அல்லது சகல வாசனைகளிலுமுள்ள ஒரு பிரதிபிம்பம் ஈசுவரனா? முதற்பக்ஷத்தைக் கூறின், ஜீவர்களனேகராதலும் புத்தியின்வாசனை அனந்தமாயிருத்தலின், அவற்றிலுள்ள பிரதிபிம்பாசுவரனும் அனந்தராவர். ஒவ்வொரு வாசனைக்கும் அற்பத்தைக் கோசரிக்குந்தன்மை யிருத்தலால் அவற்றிலுள்ள பிரதிபிம்ப வடிவ அனந்த ஈசுவரர்களும் அற்பஞ்ஞரேயாவா. சகல வாசனைகளிலும் ஒரு பிரதிபிம்ப முளதெனக் கொள்ளின், சகல வாசனைகளும் பிரளயமின்றி ஏககாலத் தொன்றாயிருப்பதில்லை. அனேக உபாதியில் அனேக பிரதிபிம்பமே உண்டாகின்றன. ஆதலால் சர்வ வாசனைகளிலும் ஒரு பிரதிபிம்பம் சம்பவியாது. இவ்வாற்றால் கேவல அஞ்ஞானமே ஈசுவரனுக்கு உபாதியாம். வித்தியாரணிய சுவாமியானவா சித்திரதீபத்தில் வாசனைக்கு நிஷ்பலம் அநுசரித்திருக்கின்றனா.

---

## கககஅ. வித்தியாரணியசுவாமி கூறிய ஆநந்தமயகோசத்தினது ஈசுவரத்தன்மையின் கண்டநம்.

ஆநந்தமயகோசத்திற்கு ஈசுவரத்தன்மையைக் கூறுதலும் அசங்கதமாம். ஏனெனின் ஜாக்கிர சொப்பனங்களில் வைதாலாவஸ்தை விசிஷ்டப் பிரதிபிமபத்தோடுகூடிய அந்தக்கரணத்தை விஞ்ஞானமயமென்பர். விஞ்ஞானமய ஜீவனே சுழுத்திகாலத்தில் சூக்ஷ்ம வடிவமாகவும் ஒடுங்கி ஆநந்தமய னெனப்படுகின்றான். அவனே ஈசுவரனெனக் கொள்ளின் ஜாக்கிர சொப்பனங்களில் அந்தக்கரணத்தின் ஒடுக்க அவஸ்தையாகிய ஆநந்தமயனது அபாவத்தால் ஈசுவரனது அபாவம் உண்டாதல் வேண்டும். அநந்த புருஷர்களது சுழுத்தியில் அநந்த ஈசுவரர்கள் உண்டாதல் வேண்டும். ஜீவனுக்குப் பஞ்சகோசத்தை எல்லா நூலாசிரியர்களும் கூறியிருக்கின்றனர். பஞ்சகோச விவேகத்தில் வித்தியாரணியசுவாமி தாமும் ஜீவனுக்குப்பஞ்சகோசத்தைக் கூறியிருக்கின்றனர். ஆநந்தமயனுக்கு ஈசுவரத்தன்மை அங்கீகரிக்கின், சகலவசனங்களும் அசங்கதமாகும். ஆதலால் ஆநந்தமயனுக்கு ஈசுவரத்தன்மை சம்பவியாது.

## கககக. மாண்டூக்கிய உபநிஷத்தில் கூறிய ஆநந்தமயனது சர்வஞ்ஞத்தன்மை முதலியவற்றின் அபிப்பிராயம்.

மாண்டூக்கிய உபநிஷத்தில் ஆநந்தமயனுக்குச் சர்வஞ்ஞத்தன்மை சர்வேசுவரத்தன்மை கூறியிருக்கின்றது. அதனாலும் ஆநந்தமயனுக்கு ஈசுவரத்தன்மை சித்திக்கிறதில்லை. ஏனெனின் மாண்டூக்கியத்தில் இப் பொருளுளது:—விசுவ தைஜஸ பிராஞ்ஞபேதத்தால் ஜீவனுக்கு மூன்று சொரூபமுண்டு. விராட்டு, இரணியகருப்ப, அவ்வியாகிருத பேதத்தால ஈசுவரனுக்கும் மூன்றுபேத முண்டு. இரணியகருப்பனுக்கு ஜீவத்தன்மை சகல உபநிஷத்துக்களிலும் பிரசித்தமாம். இரணியகருப்ப வடிவத்தின் அடைவிற்கு ஏதுவாகிய உபாசனை உபநிஷத்தில் பிரசித்தம். உபநிஷத உபாசனை செய்பவனாகிய ஜீவனே கற்பாந்தரத்தில் இரணியகருப்ப பதவியை அடைகின்றான். அங்ஙனமே விராட்டுத் தன்மையினது அடைவின் உபாசனையினால் கற்பாந்தரத்தில் ஜீவனுக்கே விராட்டு வடிவத்தின்

அடைவு உண்டாகின்றது. இரணியகருப்பனது ஐசுவரியத்தினும் விராட்டின் ஐசுவரியம் குறைந்ததாம். ஈசுவரனது ஐசுவரியம் எல்லாவற்றினும் உயர்ந்ததாம். அதனிடத்துத் தாழ்ந்த ஐசுவரியம் சம்பவியாது. அங்ஙனமே இரணியகருப்பனது புத்திரர் விராட்டாவர். அவருக்குப் பசிதாகங்களின் வாதை உண்டாகின்றதென்னும் கதை புராணங்களிற் பிரசித்தமாம். ஆதலால் இரணியகருப்பனுக்கும் விராட்டிற்கும் ஈசுவரத்தன்மையைக் கூறுதல் சம்பவியாது. அங்ஙனமாயினும், சத்தியலோக வாசியாய சூக்ஷ்மசமஷ்டியின் அபிமானிசுகபோக்தாவாகிய இரணியகருப்பனே ஜீவனாவன். ஸ்தூலசமஷ்டியின் அபிமானி விராட்டுஜீவனாவன். சூக்ஷ்மப் பிரபஞ்சத்தைப் பிரேரிக்கும் அந்தரியாமியும் இரணியகருப்பனென்னும் சொல்லிற்குப் பொருளாவர். அங்ஙனமே ஸ்தூலப் பிரபஞ்சத்தைப் பிரேரிக்கும் அந்தரியாமி விராட்டென்னுஞ் சொல்லிற்குப் பொருளாவர். சேதனப் பிரதிபிம்ப கர்ப்ப அஞ்ஞானவடிவ அவ்வியாகிருதமே சூக்ஷ்மசிருஷ்டிகாலத்தில் அதனைப் பிரேரிப்பதாகும்போது இரணியகருப்பனென்னும் பெயருடையதாகின்றது. ஸ்தூல சிருஷ்டி காலத்தில் அதனைப் பிரேரிப்பதாகும்போது விராட்டென்னும் பெயருடையதாகின்றது. இவ்வாறு ஜீவனிடத்திலும் ஈசுவரனிடத்திலும் இரணியகருப்பன் விராட்டென்னும் சொற்களின் பிரவிருத்தி உண்டாகின்றது. ஆனால் ஸ்தூல சூக்ஷ்மங்களின் அபிமானிகளாகிய ஜீவனிடத்திலோ விராட்டு, இரணியகருப்பனென்னும் சொற்களின் சக்திவிருத்தி இருக்கின்றது. இருவகைப் பிரபஞ்சத்தையும் பிரேரிக்கும் ஈசுவரனிடத்து அச்சப்தங்களின் கௌணிவிருத்தி யிருக்கின்றது. எங்ஙனம் ஜீவவடிவ இரணியகருப்பனுக்கும் விராட்டிற்கும் தனதென்னுந் தன்மைச் சம்பந்தம் ஸ்தூல சூக்ஷ்மப் பிரபஞ்சத்தோடு இருக்கின்றதோ, அங்ஙனமே ஈசுவரனுக்கும் சூக்ஷ்ம ஸ்தூலப் பிரபஞ்சத்தோடு பிரேரிக்கப்படுந்தன்மைச் சம்பந்தமிருக்கின்றது. ஆதலால் சூக்ஷ்மசிருஷ்டி சம்பந்தமுடைமை வடிவ இரணியகருப்பனிடத்துள்ள குணத்தின் யோகத்தால் ஈசுவரனிடத்து இரணியகருப்ப சப்தத்திற்குக் கௌணிவிருத்தி இருக்கின்றது. அங்ஙனமே ஸ்தூலசிருஷ்டி சம்பந்த முடைமை வடிவ விராட்டின்கண் உள்ள குணத்தின் யோகத்தால் ஈசுவரனிடத்து விராட் சப்தத்திற்குக் கௌணிவிருத்தி இருக்கின்றது. இவ்வாற்றால் இரணியகருப்ப விராட் சப்தங்களுக்கு

ஸ்ரீவேசுவரர் இருவர்களும் பொருளாவர். எந்தப் பிரசங்கத்தில் எந்த அர்த்தம் சம்பவிக்கின்றதோ அதனைக் கொள்ளவேண்டும். குரு சம்பிரதாயமின்றி வேதாந்தநூலைப் பார்ப்பாராயின், அவர்களுக்கு முற்கூறிய வியவஸ்தையின் உணர்ச்சி உண்டாகாது. ஆதலால் இரணியகருப்ப விராட்டென்னும் சொற்களால் சிலவிடத்து ஜீவனும் சிலவிடத்து ஈசுவரனும் சம்பவித்தலைக் கண்டு மோகத்தை அடைகின்றார்கள். மாண்டூக்கிய உபநிஷத்தில் மூவகைச் சீவர்களையும் மூவகை ஈசுவரனோடு அபேதமாகச் சிந்தித்தல் எழுதப்பட்டிருக்கின்றது. எந்த மந்தபுத்தியுள்ள புருஷனுக்கு மகாவாக்கிய விசாரத்தால் தத்துவசாக்ஷாத்கார முண்டாகவில்லையோ, அவனுக்குப் பிரணவ சிந்தனம் மாண்டூக்கியத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது. அதன் கிரமம் விசாரசாகரத்தின் ஐந்தாவது தரங்கத்தில் விளக்கமா யிருக்கின்றது. ஆண்டு விசுவனுக்கும் விராட்டிற்கும், தைஜசனுக்கும் இரணியகருப்பனுக்கும், அங்ஙனமே பிராஞ்ஞனுக்கும் ஈசுவரனுக்கும் அபேத சிந்தனம் எழுதப்பட்டிருக்கின்றது. ஆதலால் ஈசுவரனது தாமமாகிய சர்வஞ்ஞத்தன்மை முதலியன பிராஞ்ஞவடிவ ஆநந்தமயனிடத்து அபேத சிந்தனத்தின் பொருட்டுச் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆநந்தமயனுக்கு ஈசுவரத்தன்மையின் அபிப்பிராயத்தாற் கூறியதன்று. அங்ஙனமே விசுவவிராட்டுகளின் அபேத சிந்தனத்தின்பொருட்டு வைசுவானரனுக்குப் பத்தொன்பது முகங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. பதினன்கு திரிபுடி ஐந்து பிராணன் என்னும் இப்பத்தொன்பதும் விசுவனுக்குப் போகசாதனமா யிருத்தலின் விசுவனது முகங்களாம். வைசுவானரன் ஈசுவரனாவன். அவனுக்குப் போகமுண்டாகாது. ஆதலால் விசுவவிராட்டுகளின் அபேத சிந்தனத்தின் பொருட்டே விசுவனது போகசாதன பதார்த்தங்களை வைசுவானரனது போக சாதனமாகக் கூறியதாம். விராட்டை வைசுவானர னென்பர். மாண்டூக்கிய வசநத்திற்கு அபேத சிந்தனத்திற் றாற்பரியமாம். வஸ்துவின் சொரூபத்தை அநுசரித்தே சிந்தன முண்டாமென்னும் நியமமில்லை; வேறு வடிவத்தானும் சிந்தனமுண்டாம். இவ்வர்த்தமும் விசாரசாகரத்தில் விளக்கமாயுளது. ஆதலால் மாண்டூக்கிய வசனத்தினால் ஆநந்தமயனுக்கு ஈசுவரத்தன்மை சித்திக்கிறதில்லை.

---

## தன்மையில் வித்தியாரணிய சுவாமிகளுக்குத் தாற்பரியமில்லாமை.

வித்தியாரணிய சுவாமிகளும் பிரஹ்மாநந்தமென்னும் கிரந்தத்தில் ஜீவனது அவஸ்தாவிசேஷம் ஆநந்தமயகோசமாம் என்று எழுதியிருக்கின்றனா. ஆண்டு இது பிரசங்கமாம்;—ஜாக்கிர சொபபனங்களில் போகததைத் தரும கர்மசமுதாயததிறகு நாசமுண்டாக, நித்திரை வடிவமாக ஒடுங்கிய அந்தக்கரணத்திற்குப் போகத்தைத் தரும கர்மத்தின் வசத்தால் ஜாக்கிரத்தில் கனததன்மை உண்டாகின்றது. அதனை விஞ்ஞானமயமென்பா. அவ்விஞ்ஞானமயமே சுழுத்தியில் ஒடுங்கிய அவஸ்தையுடைய அநதக்கரணவடிவ உபாதியின் சமபநததால் ஆநந்தமய மெனப்படுகின்றது. இவ்வாற்ருல் விஞ்ஞானமயனது அவஸ்தாவிசேஷமே ஆநந்தமயனெனக் கூறப்பட்டிருக்கின்றது. ஆதலால் விததியாரணிய சுவாமிக்கும் ஆநநதமய கோசத்தில் ஜீவத்தன்மையே இஷ்டமாம. விலக்ஷணமான எழுத்தைக் கண்டும, பரம்பரை வசனத்தில் பரமபரையாகவும "ஐநது விவேகமும ஐநது தீபமுமோ வித்தியாரணியராற் செய்யப்படடதாம். ஐநது ஆநநதம பாரதீதீர்த்தராற் செய்யப்பட்டதா" மென்றும கூறுகின்றனர். என்ருலும் ஒரே கிரநதத்தில் முன்னுக்குப் பின விரோதம் சமபவியாது. ஆதலால் பஞசதசி என்னும் நூலில் ஆநநதமயனுக்கு ஈசுவரததன்மை சொல்வது கருத்தன்று. சித்திரதீபததில் அவருக்கு ஈசுவரத்தன்மை கூறப்பட்டிருக்கின்றது. அது மாண்டூக்கிய வசனததைப்போலச் சிந்திக்கத்தக்க ஈசுவர அபேதததில் தாற்பரியமாகச சொல்லப்பட்டிருக்கின்றது. ஆநநதமயனுக்கு ஈசுவரத்தன்மையில் வித்தியாரணிய சுவாமிக்குத் தாற்பரியமில்லை. இவ்வாற்ருல் வித்தியாரணியசுவாமியானவா சேதனத்திற்கு நான்குபேதம் சித்திரதீபத்திற் சொல்லியிருக்கின்ருர்.

## உ0க. சேதனத்தின் மூன்றுபேதங்களை வித்தியாரணிய சுவாமியோடு எல்லோரும் அங்கீகரித்தல்.

அங்ஙனமாயினும், திருக்குத்திருசியவிவேகமென்னும் நூலில் வித்தியாரணிய சுவாமியானவர் கூடஸ்தனுக்கு ஜீவனிடத்து அடக்கம் எழுதி இருககின்றனா. என்ருலும பாரமாாத்திகம் வியா

வகாரிகம் பிராதிபாஸிகம் என்னும் பேதத்தால் ஜீவன் மூன்று விதமாவன்; ஸ்தூல சூக்ஷ்மபேத மிரண்டின் அவச்சின்ன கூடஸ்த சேதனம் பாரமார்த்திக ஜீவனாவன். அவனுக்குப் பிரஹ்மத்தோடு முக்கிய அபேதமுண்டு. மாயையினால ஆவரிக்கப்பட்ட கூடஸ்த னிடத்துக் கற்பித அந்தக்கரணத்தில் சிதாபாசன் இருக்கின்றான். அவன் தேகமிரண்டில் அபிமானத்தைச்செய்யும வியாவகாரிக ஜீவனாவன். பிரஹ்ம ஞானத்திற்குமுன் அவனுக்குப் பாதமுண்டாகிறதில்லை; ஆகலின் வியாவகாரிகனாவன். நித்திரைவடிவ மாயையினால் ஆவரிக்கப்பட்ட வியாவகாரிக ஜீவவடிவ அதிஷ்டானத்தில் கற்பிதன் பிராதிபாஸிக ஜீவனாவன். சொப்பனாவஸ்தையில் பிராதிபாஸிகப் பிரபஞ்சத்தை யான் எனதென்று அபிமானிப்பவன் பிராதிபாஸிக ஜீவனாவன். பிரஹ்மஞான மின்றியே ஜாக்கிரப் பிரபஞ்சத்தின் போதத்தினால் பிராதிபாஸிகப் பிரபஞ்சத்தின் நிவிருத்திகாலத்தில், வியாவகாரிக ஜீவனது போதத்தால் பிராதிபாஸிக ஜீவனது நிவிருத்தி உண்டாகின்றது. இவ்வாற்றால் கூடஸ்தனுக்கு ஜீவனிடத்து அந்தர்ப்பாவ(அடக்க)மிருக்கின்றது. ஆதலால் ஜீவன் ஈசுவரன் சுத்தசேதன மென்னும் பேதத்தால் மூவகைச் சேதனமுண்டு. இப்பக்ஷமே எல்லோருக்கும சம்மதமாம்; வார்த்திக வசனத்திற்கும் அநுகூலமாம்.

## ௨௦௨. ஜீவனுக்கு மோக்ஷதசையில் முற்கூறிய பக்ஷங்களில் சுத்தப்பிரஹ்மத்தோடும், விவரணபக்ஷத்தில்ஈசுவரனோடும்அபேதமுண்டெனல்.

முற்கூறிய சகலபக்ஷங்களிலும் ஜீவனைப்போல ஈசுவரனும் பிரதிபிம்பவடிவமாவன். ஆதலால் ஈசுவரனோடு மோக்ஷதசையில் ஜீவனுக்கு அபேதம் இவர்கள் மதத்தில் உண்டாகிறதில்லை. ஏனெனின் உபாதியின் நீக்கத்தால் ஒரு பிரதிபிம்பத்திற்கு வேறு பிரதிபிம்பத்தோடு அபேதம் அநுபவகோசர மன்று. ஆனால் பிம்பத்தோடு தான் அபேதமுண்டாகின்றது. அங்ஙனமே சுத்தசேதனத்தோடுதான் பிரதிபிம்பவடிவ ஜீவனுக்கு மோக்ஷத்தில் அபேதம் உண்டாகின்றது. விவரணகாரர் மதத்தில் பிம்பசேதனம ஈசுவரனாவன். அவர் மதத்தில் ஈசுவரனோடுதான் ஜீவனுக்கு அபேதமுண்டாகின்றது.

## சித்தாந்தத்தில் பிரக்கிரியையின் பேதம்.

## ௨0௯ விவரணகாரர் மதத்தில் அஞ்ஞானத்தில் பிரதிபிம்ப ஜீவனையும் பிம்ப ஈசுவரனையும் நிரூபித்தல்.

விவரணகாரர் மதத்தில் ஜீவேசுவரர்களது உபாதி அஞ்ஞானம் ஒன்றே. அஞ்ஞானத்தில் பிரதிபிம்பம் ஜீவனும், பிம்பம் ஈசுவரனுமாவர். யாண்டுக் கண்ணாடியில் முகத்தின் பிரதிபிம்பம் தோற்றுகின்றதோ, ஆண்டு கண்ணாடியில் முகத்தின் சாயையில்லை. கண்ணாடியில் அநிர்வசநீயப் பிரதிபிம்பத்தின் உற்பத்தியில்லை. அங்ஙனமே வியாவகாரிகப் பிரதிபிம்பத்தின் உற்பத்தியுமில்லை. ஆனால் கண்ணாடியைக் கோசிகமும் சாக்ஷாத்விருத்தி கண்ணாடியினால் தடுக்கப்பட்டதாய்க் கழுத்திலுள்ள முகத்தினையே விஷயஞ் செய்கின்றது. இவ்வாற்றால் கழுத்தின்மேலிலுள்ள முகத்திலேயே பிம்பப்பிரதிபிம்பத்தன்மை தோற்றுகின்றது. அந்தக் கழுத்திலுள்ள முகம் சத்தியமாம். ஆதலால் பிம்பப்பிரதிபிம்பங்களின் சொரூபமும் கழுத்திலுள்ளமுகவடிவமாயிருத்தலின் சத்தியமாம். ஆனால் கழுத்திலுள்ள முகத்தில் பிம்பத்தன்மை பிரதிபிம்பத்தன்மைத் தர்மங்கள் மித்தையாம். அநிர்வசநீய மித்தையான பிம்பத்தன்மை பிரதிபிம்பத்தன்மைகளின் அதிஷ்டானம் முகமாம். இவ்வாற்றால் பிம்பத்தினைப்போலப் பிரதிபிம்பத்தின சொரூபமும் சத்தியமாயிருத்தலின், தாப்பணஸ்தானத்திலுள்ள அஞ்ஞானத்தின் சந்நிதானத்தால் சுத்தசேதனத்தில் பிம்பஸ்தானத்திலுள்ள ஈசுவரனைப் போல பிரதிபிம்பஸ்தானத்திலுள்ள ஜீவனது சொரூபமும் சத்தியமாம். ஆதலால் மகாவாக்கியங்களில் முக்கிய சமானாதிகரணம் சம்பவிக்கின்றது. ஆனால் பிம்பத்தன்மை வடிவ ஈசுவரத்தன்மையும், பிரதிபிம்பத்தன்மை வடிவ ஜீவத்தன்மையுமாகிய இரண்டு தர்மங்களும் மித்தையாம். அவற்றின் அதிஷ்டானம் சுத்த சேதனமாம். முற்கூறியபடி ஜீவேசுவரர்களது உபாதி அஞ்ஞானம் ஒன்றுமாகலின், இரண்டற்கும் அஞ்ஞத்துவமேனும் சர்வஞ்ஞத்துவமேனு முண்டாதல் வேண்டும். அங்ஙனமாயினும், கண்ணாடி முதலிய உபாதியின் இலகுத்தன்மை பீதத்தன்மை முதலிய தர்மங்களின் ஆரோபம் பிரதிபிம்பத்தில் உண்டாகின்றது; பிம்பத்தி லில்லை. ஆதலால் ஆவரணசுபாவ அஞ்ஞானத்தாலாகிய அற்பஞ்ஞத்

தன்மை ஜீவனிடத்தில் இருக்கின்றது. பிம்பவடிவ ஈசுவரனிடத்து ச ஸொரூபப் பிரகாசத்தினால் சாவஞ்ஞத்துவ மிருக்கின்றது. பிமபப் பிரதிபிமபங்களுக்கு முற்கூறியபடி அபேதமிருக்கினறதாகலின், பிமபப் பிரதிபிமபங்களின தர்மங்களுக்குப் பேதங் கூறுதல சம்பவியாது. பிமபப் பிரதிபிம்பங்களுக்குப் பேதமிருக்குமாயின முற்கூறிய வியவஸ்தைசம்பவிக்கும. அங்ஙனமாயினும, கண்ணாடியிலிருத்தற்றன்மைவடிவ பிமபப் பிரதிபிம்பத்தன்மைகளின் பிரமம கழுத்திலுள்ள முகத்திலுண்டாகின்றது. பிரமததாற் சித்தித்த பிரதிபிமபததன்மையின் அபேக்ஷையால் பிமபததன்மை வியவகாரம் உண்டாகின்றது. ஆதலால் ஒருமுகத்தில் பிம்பத்தன்மை பிரதிபிமபத்தன்மை என்னு மிரண்டும ஆரோபிதமாம. அங்ஙனமே ஒரேமுகத்தில் பிம்பததன்மை பிரதிபிம்பத்தன்மை வடிவத்தால் தாமியினது பேதத்தின் பிரமமுண்டாகின்றது. பிராந்தியினால் தோற்றும் பிம்பப் பிரதிபிமபங்களின் பேதம் யாதோ, அதனால் முற்கூறிய வியவஸ்தை சம்பவிக்கின்றது. இவ்வாற்றால் விவரணகாரர மதத்தில் அஞ்ஞானத்தில் பிரதிபிம்பம் ஜீவனும், பிமபசேதனம் ஈசுவரனுமாவர். அஞ்ஞானம் அநிர்வசநீயமாம். ஆதலால் அஞ்ஞான மிருக்குங்காலத்தினும், அஞ்ஞானத்திற்குப் பரமார்த்தமாக அபாவ மிருத்தலின், பிம்பப் பிரதிபிம்பவடிவ சேதனமே பரமார்த்தமாகச் சுத்தசேதனமாம் ஆதலால் ஈசுவரத்தன்மையின் அடைவும சுத்தத்தின் அடைவேயாம.

## ௨௦௬. அவச்சேதவாதியினால் ஆபாசவாதத்தின் கண்டநமும் தனது மதத்தின் நிரூபணமும்.

ஓர் ஆசாரியர் இங்ஙனம் கூறுகின்றனர்:—அந்தக்கரண அவச்சின்ன சேதனம் ஜீவனும், அந்தக்கரணத்தினால் அநவச்சின்ன சேதனம ஈசுவரனுமாவர். உருவமின்றிய சேதனத்திற்குப் பிரதிபிம்பம சம்பவியாது. கிணறு, தடாகமுதலிய ஜலங்களிலுள்ள ஆகாயத்தில நீலததன்மை விசாலத்தன்மைகள் இல்லாதிருக்க "நீல வாகாயம், விசால வாகாயம" என்று தோறறுகின்றது. ஆதலால் விசாலத்தன்மை விசிஷ்டமும் ஆரோபித நீலத்தன்மை விசிஷ்டமும ஆகாயத்தின் பிரதிபிமபமென்று கொள்ளுதல் வேண்டும்; ஆகாயததில் உருவமில்லை. ஆதலால் உருவமின்றியதற்கும் பிரதிபிமபம சம்பவிக்கின்றது. என்றாலும் ஆகாயத்திலும பிரா

ந்தியினாற் சித்தித்த ஆரோபித நீலவுருவ மிருக்கின்றது. சேதனத்தில் ஆரோபித வுருவத்திற்கும் அபாவமிருத்தலின் அதன் பிரதிபிம்பம் சம்பவியாது. எந்தப் பதார்த்தத்தில் ஆரோபித அல்லது அநாரோபித உருவம் உளதாகின்றதோ, அதன் பிரதிபிம்பம் உண்டாம். முற்றும் உருவமின்றியதினால் பிரதிபிம்பம் உண்டாகாது. உபாதியின்றியதன் கண்ணே முற்றும் பிரதிபிம்பம் சம்பவியாது. ஏனெனின் சொரூபமுடைய கண்ணாடி முதலியவற்றிற்றான் பிரதிபிம்பத்தைக் கண்டிருக்கின்றோம். ஆதலால் உருவமின்றிய அந்தக்கரணத்திலேனும், உருவமின்றிய அவித்தையிலேனும் உருவமின்றியசேதனத்தின் பிரதிபிம்பம் சம்பவியாது. உருவமின்றிய சப்தத்திற்கு உருவமின்றிய ஆகாயத்தில் எங்ஙனம் பிரதித்தொனி வடிவப் பிரதிபிம்பத்தைக் கூறுகின்றனரோ அதுவும் அசங்கதமாம். ஏனெனின் முற்கூறியபடி ஆகாயம் உருவமின்றியதன்று. ஆகாயத்தில் உண்டாகும் பிரதித்தொனி சப்தத்தின் பிரதிபிம்ப மன்று. ஏனெனின் பிரதித்தொனியினைச் சப்தத்தின் பிரதிபிம்பமெனக் கொள்ளின், ஆகாயத்தின் கண்ணுள்ள சப்தத்திற்கு அபாவமுண்டாகும். பேரி, தண்டமுதலியவற்றின் சையோகத்தால் பார்த்திவ சப்த முண்டாகின்றது. அந்தப் பார்த்திவ சப்தத்தினால் அதன் எதிர்முகதேசத்தில் பாஷாணமுதலியவற்றா லவச்சின்ன ஆகாயத்தில் பிரதித்தொனிவடிவ சப்த முண்டாகின்றது. அந்தப் பிரதித்தொனியாகிய சப்தத்திற்குப் பார்த்திவ சப்தம் நிமித்தகாரணமாம். ஆதலால் பார்த்திவத்தொனிக்குச் சமானமாகவே பிரதித்தொனி உண்டாகின்றது. பிரதித்தொனியினைச் சப்தத்தின் பிரதிபிம்பமாகக்கொள்ளின், பிரதிபிம்பத்தை அநிர்வசநீயமாகக் கொண்டிருக்கின்றனர்; விவரணகாரரை அநுசரித்தவர் பிம்ப சொரூபத்தையே பிரதிபிம்பமெனக் கொண்டிருக்கின்றனர்; இவ்விரண்டு மதங்களிலும் ஆகாயத்தின் குணம் பிரதித்தொனியாகாது. ஏனெனின் வியாவகாரிக ஆகாயத்தின் குணம் பிராதிபாஸிகமாகாது. ஆதலால் அநிர்வசநீயப் பிரதிபிம்ப வாதத்தில் பிரதித்தொனியைப் பார்த்திவசப்தத்தின் பிரதிபிம்பமெனக் கொண்டு ஆகாயத்தின் குணமெனக் கூறுதல் சம்பவியாது. பிம்பப் பிரதிபிம்பத்தின் அபேத வாதத்தில் பார்த்திவசப்தத்தின் பிரதிபிம்பவடிவப் பிரதித்தொனிக்குத் தனது பிம்பத்தோடு அபேத மிருத்தலால், பிருதிவியின் குணம் பிரதித்தொனியாகும். ஆதலால் பிரதித்தொனியைச் சப்த

த்தின் பிரதிபிம்பமெனக் கொள்ளின், எவ்வாற்றானும் ஆகாயத்தின் குணம் பிரதித்தொனியாமென்று கூறுதல் சம்பவியாது. பிரதித் தொனிக்குப் பின்னமான சப்தம், பிருதிவி ஜல அக்கினி வாயுக்களுக்கிருக்கின்றது. ஆகாயத்தில் வேறுவிதமான சப்தமில்லை. ஆதலால் சப்தமில்லாதிய மேக ஆகாசமாகும். சப்தமின்றியது ஆகாயமென்னும் மதம் அசாஸ்திரீயமாம். பூதவிவேகத்தில் வித்தியாரணியசுவாமி இங்ஙனம் கூறியிருக்கின்றனர்:—கடகட என்னும் சப்தம் பிருதிவியினதாம்; குளகுள என்னும் சப்தம் ஜலத்தினதாம்; புகுபுகு என்னும் சப்தம் அக்கினியினதாம்; சீசீ என்னும் சப்தம் வாயுவினதாம்; பிரதித்தொனியாகிய சத்தம் ஆகாயத்தினதாம். அங்ஙனமே அநேக நூலாசிரியர்களும் ஆகாயத்தின் குணமே பிரதித்தொனி என்று கூறியிருக்கின்றனர். ஆதலால் சப்தத்தின் பிரதிபிம்பம் பிரதித்தொனியன்று; ஆனால் ஆகாயத்தின் சுவதந்திர சப்தம் பிரதித்தொனியாம். அதன் உபாதானகாரணம் ஆகாயமாம். பேரிமுதலியவற்றில் எந்தப் பிரதித்தொனி உண்டாகின்றதோ, அது பிரதித்தொனியின் நிமித்தகாரணமாம். ஆதலால் உருவமின்றிய பிரதிபிம்பம் சம்பவியாது. பிரதிபிம்பவாதியானவர், "கிணறு முதலியவற்றின் ஆகாயத்தில் விசாலமுடையது ஆகாசம் என்னும் உணர்ச்சி உண்டாகின்றது. கிணற்றிடத்தில் ஆகாயத்தின் விசாலத்தன்மையில்லை. ஆதலால் பாகிய தேசத்திலுள்ள உருவமின்றிய விசால ஆகாயத்தின் பிரதிபிம்பம் கூபஜலத்தில் உண்டாகுதலின் உருவமின்றிய சேதனத்தின் பிரதிபிம்பம் சம்பவிக்கு" மெனவிவ்வாறு கூறுவாராயின், அங்ஙனமாயினும் உருவமுடைய உபாதியிற்றான் பிரதிபிம்பமுண்டாகும். உருவமின்றிய உபாதியில் பிரதிபிம்பம் சம்பவிக்கிறதில்லை. ஆகாயத்தினது பிரதிபிம்பத்தின் உபாதி கூபஜலமாம். அதனிடத்து உருவமிருக்கின்றது. அவித்தை அந்தக்கரண முதலியன உருவமின்றியனவாம். அவற்றில் சேதனத்தின் பிரதிபிம்பம் சம்பவியாது. ஆதலால் அந்தக்கரணாவச்சின்ன சேதனம் ஜீவனாவன். அந்தக்கரண அநவச்சின்ன சேதனம் ஈசுவரனாவன்.

## ௨௦௫. அவச்சேதவாதத்தின் கூற்று.

அல்லது அவித்தை அவச்சின்ன சேதனம் ஜீவனும், மாயை அவச்சின்ன சேதனம் ஈசுவரனுமாவர்.

## ௨0௬. அந்தக்கரண அவச்சின்ன சேதனம் ஜீவன், அநவச்சின்னசேதனம் ஈசுவரன் என்னும் பக்ஷத்தின் கண்டனம்.

அந்தக்கரண அவச்சின்னத்தை ஜீவனென்றும் அநவச்சின்னத்தை ஈசுவரனென்றும் கொள்ளுமிடத்து, பிரமாண்டத்திற்கு வெளியிடத்திலுள்ள சேதனத்தில் ஈசுவரத்தன்மை உண்டாகும். ஏனெனின் பிரமாண்டத்தில் அநந்த ஜீவர்களது அநந்த அந்தக்கரணங்கள் வியாபிக்கப்பட்டிருக்கின்றன. ஆதலால் பிரமாண்டத்தின் மத்தியில் அந்த அந்தக்கரணாநவச்சின்ன சேதனத்தின் பெறுதி சம்பவியாது. பிரமாண்டத்திற்கு வெளியிடத்திலேயே ஈசுவரனது இருப்பை அங்கீகரிக்கின், அந்தர்யாமியைப் பிரதிபாதிக்கும் வசனத்திற்கு விரோதமுண்டாகும். "யொவிஜ்ஞாநெ திஷ்டந் விஜ்ஞாந மந்தரோ யமயதி—எவர் விஞ்ஞானத்திலிருப்பவராய் விஞ்ஞானத்தை உள்ளே இயக்குகின்றாரோ" என்னும் வசனத்தில் விஞ்ஞானமாத்திரமாகவிருக்கப்படும் ஜீவதேசத்தில் ஈசுவரனது இருப்புச் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆதலால் அந்தக்கரணத்தால் அநவச்சின்னம் ஈசுவரனன்று; மாயை அவச்சின்ன சேதனமே ஈசுவரனாவன். அந்தக்கரண அநவச்சின்னத்திற்கு ஈசுவரத்தன்மை அங்கீகரிக்கின், அந்தக்கரணத்தோடு சம்பந்தமின்மையே ஈசுவரத்தன்மையின் உபாதி என்பது சித்தமாகின்றது. ஈசுவரனிடத்துச் சர்வஞ்ஞத்தன்மை முதலியன உபாதியினாலாகியனவாம். அபாவவடிவ உபாதியினால் சர்வஞ்ஞத்தன்மை முதலிய தர்மங்கள் சித்திக்கிறதில்லை.

## ௨0௭. திருப்தி தீபத்தில் வித்தியாரணிய சுவாமிகள் கூறிய அந்தக்கரணத்தின் சம்பந்தம் அதன் அபாவம் என்பவற்றினது உபாதித்தன்மையின் அபிப்பிராயம்.

வித்தியாரணியசுவாமிகள் திருப்திதீபத்தில் இது கூறியிருக்கின்றனர்:—எங்ஙனம் அந்தக்கரணத்தின் சம்பந்தம் உபாதியோ, அங்ஙனமே அந்தக்கரணத்தினது சம்பந்தத்தின் அபாவமும் உபாதியாம். எங்ஙனம் இருப்புவிலங்கினால் சஞ்சாரத்தின் நிரோதம் (தடை) உண்டாகின்றதோ, அங்ஙனமே பொன்விலங்கினா

னும் சஞ்சாரத்திற்குத் தடை உண்டாகின்றது. இவ்வாறனால் அந்தக்கரணத்தின் சம்பந்தவடிவ பாவ உபாதியினால் ஜீவ சொரூபத்தின் போத முண்டாகின்றது. முற்கூறிய சம்பந்தத்தின் அபாவத்தால் பரமாத்ம சொரூபத்தின் போத முண்டாகின்றது. இவ்வாறு வித்தியாரணியசுவாமி அந்தக்கரணமின்றியதனையும் உபாதியெனக் கூறியிருக்கின்றனர். அதற்கு இது அபிப்பிராயமாம்:—எங்ஙனம் அந்தக்கரண சம்பந்தத்தால் ஜீவ சொரூபத்தின் போத முண்டாகின்றதோ, அங்ஙனமே அந்தக்கரண மின்றியதனாலும் பிரஹ்ம சொரூபத்தின் போத முண்டாகுதலால் பிரஹ்மத்தினது போதத்தின் உபயோகி அந்தக்கரண மின்றியதுமாம். ஆதலால் வித்தியாரணிய சுவாமிகள் வசனத்தினாலும் அபாவவடிவ உபாதியினால் ஈசுவரனிடத்துச் சர்வஞ்ஞத்தன்மை முதலியவற்றின் சித்தி தோற்றுகிறதில்லை.

## உ0அ. அவச்சேதவாதத்தின் பேதபூர்வகமாக அதன் சமாப்தி.

ஆதலால் மாயாவச்சின்ன சேதனமே ஈசுவரனாவன், ஈசுவரனது உபாதியாகிய மாயை எல்லா விடங்களிலு மிருக்கிறது. ஆதலால் ஈசுவரனிடத்து அந்தரியாமித்தன்மையும் சம்பவிக்கின்றது. அந்தக்கரண அவச்சின்னத்தினை ஜீவனெனக்கொள்ளின், கர்த்தா போக்தாவாகிய சேதனத்தின் பிரதேசம் பின்னமாகும். இதனால் செய்ததின் நாசமும் செய்யாததின் அடைவு முண்டாகும். ஆதலால் அவித்தை யவச்சின்ன சேதனமே ஜீவனாம். அந்தக்கரண அவச்சின்ன சேதனம் ஜீவனன்று. இவ்வாறு சில நூலாசிரியர் அவச்சேதவாதத்தினையே அங்கீகரித்திருக்கின்றனர். பிரதிபிம்பத்தைப் பிரதிபாதிக்கும் சுருதி, ஸ்மிருதி வசனங்களுக்கு விரோதமும் பரிகாரமும் அவர்களது நூல்களில் ஸ்பஷ்டமாம்.

## உ0கூ. சித்தாந்தமுக்தாவலி முதலியவற்றிற் கூறிய ஏகஜீவ (திருஷ்டிசிருஷ்டி)வாதத்தின் நிரூபணம்.

சித்தாந்தமுக்தாவலிகாரர் முதலியோரது மதம் இதுவாம்:—

விருத்தம்.

"வெளிபடா மையினிற் குந்தி சுதனெனக் கன்ன வேந்தன்
இழிபடு ராதை மைந்த னெனத்துய ருற்ற வாங்கு
மிளிர்சிதா னந்த ரூப மெய்க்கனப் பிரஹ்மந் தானே
எளியதோர் ஜீவ பாவ மெய்திய தென்பர் மேலோர்."

எப்போதும் அசங்கமும் நித்தியமுக்தமுமாகிய சிதாநந்தப் பிரஹ்மத்தில் கற்பித அவித்தை முதலியவற்றின் சம்பந்தத்தால் பிரதிபிம்பிக்குந் தன்மையும அவச்சின்னத்தன்மையும் சம்பவியா. எங்ஙனம் கானற்சலத்தால் நிரப்பப்பட்டதும, மலடிமைந்தனாகிய குலாலனால் முயற்கோடாகிய தண்டத்தினால் ஆக்கப்பட்டதுமாயுள்ள கடத்தின் சம்பந்தத்தால் ஆகாயத்தில் பிரதிபிம்பிக்குந தன்மையலலது அவச்சின்னத் தன்மை உண்டாகிறதில்லை. ஆனால் ஆகாயத்தின சமானசத்தையுடைய ஜலம நிரம்பிய கடம் தடாகமுதலியவற்றின் சம்பந்தத்தினாலேயே ஆகாயத்தில் பிரதிபிம்பிக்குந தன்மையும் அவச்சின்னத்தன்மையும உண்டாகின்றன. அவித்தையும அதன் காரியமும் பிரஹ்மசேதனத்தின் சமானசத்தை யுடையன வன்று. ஆனால் சுவயமே சத்தாசூன்யமா யிருக்கின்றன. பிரஹ்மத்தின் சத்தையினால சத்தையுடையன அவித்தை முதலியனவாம. ஆதலால் முயற்கோடு முதலியவற்றைப்போல அத்தியந்தம் இல்லாதனவாகிய அவித்தைமுதலியவற்றோடு சேதனத்தின் சம்பந்தத்தைக் கூறுதலே சம்பவியாது. சம்பந்தமின்றியபோது பிரதிபிம்பிக்குந்தன்மை முதலியனவோ அத்தியந்தம் தூரமாம. ஆதலால் எப்போதும ஏகரசம் பிரஹ்மமாம். அதனிடத்து அவச்சின்னத்தன்மை அல்லது பிரதிபிம்பத் தன்மை வடிவ ஜீவத்தனமை சம்பவிக்கிறதில்லை. ஆனால் கற்பித அஞ்ஞானத்தின் கற்பித சம்பந்தத்தால பிரஹ்மத்தில் உண்டாகாமலே ஜீவத்தன்மை தோற்றுகின்றது. எங்ஙனம் அதிகாரியாகிய குந்திபுத்திரனிடத்து ராதாபுத்திரத்தன்மையின் பிரதீதி பிரமவடிவமா யுண்டாயிற்றோ, அங்ஙனமே பிரதிபிம்ப முதலிய விகாரமின்றியே பிரஹ்மத்தில் ஜீவத்தன்மைப்பிரமம உண்டாகின்றது. பிரதிபிம்ப வடிவ அல்லது அவச்சேத வடிவ ஜீவத்தன்மையின் அடைவு உண்டாகிறதில்லை. தனது அவித்தையினால் ஜீவத்தன்மையை அடைந்த பிரஹ்மமே பிரபஞ்சத்தைக் கற்பிப்பதாயிருத்தலின் சர்வஞ்ஞத்தன்மை முதலிய தாமங்களோடு கூடிய ஈசுவரனும் இந்தப் பக்ஷத்தில் ஜீவகற்பிதனாவர். எங்ஙனம சொப்பன கற்பித இராஜாவின் சேவையினால சொப்பனத்தில் பலப்பிராப்தி உண்டாகின்றதோ, அங்ஙனமே சொப்பன கற்பித ஈசுவர பஜனத்தினால் பலப்பிராப்தியும் சம்பவிக்கின்றது. இவ்வாறு அநாதி அவித்தையின் வலியால் தனது பிரஹ்மத்தன்மையின் ஆவரணத்தால் ஜீவத்

தன்மைப் பிரமம் உண்டாகின்றது. தத்துவமஸி முதலிய வாக்கிய ஜந்நிய சாக்ஷாத்காரத்தால் ஜீவத்தன்மைப் பிரமத்தின் நிவிருத்தி உண்டாகின்றது. பிரமகாலத்திலும் ஜீவத்தன்மையில்லை. ஆனால் நித்தியமுக்த சிதாநந்த சொரூபப் பிரஹ்மமே உள்ளதென்பது. இதனையே பாஷியகார வார்த்திககாரர்கள் பிருகதாரணியத்தின் வியாக்கியானத்தில் கர்ணனது திருஷ்டாந்தத்தாற் கூறியிருக்கின்றனர். குந்தி புத்திரனாகிய கர்ணனுக்கு ஈனசாதியின் சம்பந்தத்தால் இழிந்ததன்மைப்பிரமம் உண்டாயிற்று. அநேகவித திரஸ்காரத்தாலுண்டாகிய துக்கத்தை அநுபவிக்கின்றவனும் தானாகச் சித்தித்துள்ள குந்திபுத்திரத் தன்மை நிமித்தத்தாலுள்ள மேன்மையினின்றும் நழுவினவனுமானான்.

ஒருநாள் ஏகாந்தத்தில் சூரியபகவானானவர் "நீ ராதா புத்திரனல்லன்; எனது சம்பந்தத்தால் குந்தியின் உதரத்தினின்றும் உண்டானாய்." என்று கூறினார். இத்தன்மைய சூரியனது வாக்கியத்தினால் தன்னிடத்திருந்த ஈனஜாதியின் பமகத்தைவிட்டு இயல்பாய்ச் சித்தித்துள்ள குந்திபுத்திரத்தன்மை நிமித்தத்தாலுள்ள மேன்மையை அறிந்தான். அங்ஙனமே சிதாநந்தப பிரஹ்மமும் அநாதி அவித்தையின் சம்பந்தத்தால் ஜீவத்தன்மைப் பிரமத்தை அடைந்ததாய், சுயமாகச் சித்தித்துள்ள பிரஹ்மபாவத்தை மறந்து அநேகவித துக்கத்தை அநுபவிக்கின்றது.

ஒருகாலத்துத் தனது அஞ்ஞானத்தினால் கற்பிதசொப்பன கற்பிதஆசாரியருக்குச் சமானமான ஆசாரியர் வாயிலாக மகாவாக்கிய சிரவணத்தால் தன்னைக் கோசரிக்கும் வித்தையினால் அவித்தையின் நிவிருத்தி உண்டாக, நித்திய பரமாநந்தத்தை சசொரூப சைதன்னியமாக அநுபவம் செய்கின்றான். இவ்வாறு பிருகதாரணியத்தின் வியாக்கியானத்தில் பாஷியகாரர் வார்த்திககாரர் எழுதியிருக்கின்றனர். எங்ஙனம் ஜீவனது அவித்தியா கற்பித ஆசாரியர் வேத உபதேசத்திற் கேதுவாவரோ, அங்ஙனமே ஈசுவரனும் சொப்பன கற்பித இராஜாவைப்போல ஜீவகற்பிதரேயாய்ப் பஜனத்தினால் பலத்திற் கேதுவாகின்றார். இம்மதத்தில் ஏகஜீவவாத முளது. ஆதலால் ஏகஜீவகற்பித ஈசுவரனும் ஏகமேயாவர். நாநா (பல) ஈசுவரரது அடையில்லை. சுகர், வாமதேவர் முதலியோரது முக்தியைப் பிரதிபாதிக்கும் சாஸ்திரத்தினாலும்

சொப்பன கற்பித நாநா புருஷர்களைப்போல ஜீவாபாசர்களும் நாநாவாகச் சித்திக்கின்றனர். நாநா ஜீவவாதம் சித்திக்கிறதில்லை. எங்ஙனம்: சொப்பனத்தில் ஒரு திருஷ்டாவிற்கு நாநா புருஷர்கள் தோற்றுகின்றார்கள். அவர்களுள் ஒருவன் பெரிய காட்டில் தப்பு வழியிற் செல்பவனுப்ப புலி முதலியவற்றாலுண்டாகிய துக்கத்தை அநுபவிக்கின்றான். ஒருவன் இராஜமார்க்கத்தில் செல்லுகின்றவ னாய்த் தனது நகரத்தை அடைகின்றான். ஆனால் வனத்திற் றிரித லும் தனது நகரத்தை அடைதலும் சொப்பன திருஷ்டாவிற்கில்லை. ஆனால் ஆபாச புருஷர்களுக்கு உண்டாகின்றது. அங்ஙனமே அவி த்தையோடு கூடிய பிரஹ்ம வடிவ ஜீவனுக்குப் பந்தமோக்ஷத்தின் அடைவில்லை. ஆனால் ஆபாச வடிவ ஜீவர்களுக்குப் பந்தமோக்ஷம் தோற்றுகின்றது.

. இப்பக்ஷத்தில் யாருடைய ஞானத்தினால் அவித்தையின் நிவி ருத்தி வடிவ மோக்ஷ முண்டாகும் என்று வினவின், அதற்கு உனது ஞானத்தினால் உண்டாகுமென்பது உத்தரமாம். அல்லது ஒருவருடைய ஞானத்தினாலும் மோக்ஷ முண்டாகிறதில்லை யென் பது உத்தரமாம். ஏனெனின் இந்த மதத்தில் பந்தத்தின் அத்தி யந்த அசத்துத்தன்மை ஆத்மாவிலிருக்கின்றது. நித்திய முக்தமா கிய ஆத்மாவிற்கு மோக்ஷ முண்டாகும், அல்லது உண்டாயிருக்கி ன்றது என்று கூறுதல் சம்பவியாது. இவ்வபிப்பிராயத்தால் மோக்ஷத்தைப் பிரதிபாதிக்கும் வாக்கியங்களை அர்த்தவாத மென் பர். பந்தமிருக்கின்றது; இற்றையவரை ஒருவரும் முக்தராக வில்லை; மேல் புருஷார்த்தத்தால் மோக்ஷமுண்டாகும் என்னும் அபிப்பிராயத்தால் வாமதேவர் முதலியோர்களது முக்தியைப் பிரதிபாதிக்கும் வாக்கியங்களை அர்த்தவாதமென்று சொல்ல வில்லை. ஏனெனின் பந்தமிருக்க, வாமதேவாதிகளுக்கு மோக்ஷம் உண்டாகாதிருக்குமாயின், மேலும் மோக்ஷத்தை விரும்புதல் பயனின்றியதா மென்னும் புத்தியினால் சிரவணத்தில் பிரவிருத்தி யின் அபாவமே யுண்டாகும். ஆதலால் ஆத்மாவில் பந்தத்தின் அத்தியந்த அசத்பாவமிருக்கின்றது; நித்தியமுக்தபிரஹ்மவடிவம் ஆத்மாவாய்; அதற்கு மோக்ஷம் சம்பவியாதென்பது உத்தம பூமியி லேறிய வித்துவானது நிச்சயமாம்.

---

## உகo. உகரு. வேதாந்தசித்தாந்தத்தின் நாநாப் பிரக்கிரியைகளின் தாற்பரியம்.

## உகo. சகல அத்வைதக் கிரந்தங்களினது தாற்பரியத்தின்விஷயம்.

நித்திய முக்த ஆத்மசொரூபத்தின் ஞானத்தினால் துக்கபரிகார சுகப்பிராப்தியின் பொருட்டு, அநேகவித காதகவ்விய புத்தியினாற் றோன்றும கிலேசத்தின நிவிருத்தியே வேதாந்த சிரவணத்தின் பயனும். ஆத்ம சொரூபத்தில பந்தத்தின நாசவடிவ அல்லது பரமாநந்தத்தின் பிராப்தி வடிவ மோக்ஷம் வேதாந்த சிரவணத்தின் பயனன்று. வேதாந்த சிரவணத்திற்கு முன்னும் ஆத்மாவினிடத்துப் பந்தம் அறபமு மில்லை. அங்ஙனமாயினும் அத்தியந்த அசத்தாகிய பந்தத்தின் பிரதீதி உண்டாகின்றது. ஆதலால் பிரமத்தினாலேயே வேதாந்த சிரவணத்திற் பிரவிருத்தி உண்டாகின்றது. எவனுக்குப் பந்தப்பிரம முண்டாகவில்லையோ, அவனுக்குப் பிரவிருத்தி உண்டாகிறதில்லை. எல்லா அத்வைத சாஸ்திரங்களுக்கும் இந்தப் பக்ஷத்திற்றான் தாற்பரியம.

## உகக ஜீவேசுவரர்களிடத்துச் சகல நூலாசிரியருடைய சம்மதியின் ஒருமித்த நிச்சயம்.

இவ்வாற்றால் ஜீவேசுவரர்களது சொரூபநிரூபணம் நூலாசிரியர்கள் வெகு விஸ்தாரமாக எழுதியிருக்கின்றனர். ஆண்டு ஜீவனது சொரூபத்தில் ஏகத்தன்மை அநேகத்தன்மைகளின் விவாதமுண்டு. சகல மதங்களிலும ஈசுவரன ஒருவன; சர்வஞ்ஞன்; நித்திய முக்தன்; ஈசுவரனிடத்து ஆவரணத்தின் அங்கீகாரம் எந்த அத்வைதவாதத்தின் நூலினும் இல்லை. ஈசுவரனிடத்து ஆவரணத்தைக் கூறுவோர் வேதாந்த சம்பிரதாயத்தினின்றும வெளிப்பட்டவராவர். ஆனால் நாநா அஞ்ஞான வாதத்தில் ஜீவனை ஆசிரயித்ததாய்ப் பிரஹ்மத்தை விஷயஞ் செய்வதாமஞ்ஞானம என்பது வாசஸ்பதியின் மதம். ஆண்டு ஜீவனது அஞ்ஞானத்தால் கற்பிக்கப்பட்ட ஈசுவரனும பிரபஞ்சமும் நாநா வெனக் கொண்டிருக்கின்றனர். அங்ஙனமாயினும் ஜீவனது அஞ்ஞானத்தாற் கற்பிக்கப்பட்ட ஈசுவரனும சர்வஞ்ஞனென்றே கொண்டிருக்கின்றனர். ஈசுவரனிடத்து ஆவரணத்தின் அங்கீகாரமில்லை.

தடுக்கப்படுகின்றதென்று அங்கீகரிக்கின், ஜலத்தினுள்ளிருக்கும் மணாவின் சாக்ஷாத்கார முண்டாகலாகாது. இவ்விரண்டு சங்கைக்கும் இது சமாதானமாம் :— க. கேவல நேத்திரத்திற்கு ஆகாயத்திலிருக்கும் சூரியனது பிரகாசத்தினால் தடை உண்டாகின்றது. ஜல முதலிய உபாதியினால் தடுக்கப்பட்ட நேத்திரத்திற்குச் சூரியப் பிரகாசத்தினால் தடை* உண்டாகிறதில்லை. உ. அங்ஙனமே * ஓர் நேத்திரவிருத்தி ஜலத்திற் பிரவேசித்து அதனுள்ளிருக்கும் மணாவை விஷயஞ்செய்கின்றது. அதே நேத்திரத்தின் வேறு விருத்தி (ஜலத்தினால்) தடுக்கப்பட்டதாய்ப் பிம்பத்தை விஷயஞ் செய்கின்றது. இது கண்டதை அநுசரித்த கற்பனையாம். ஆதலால் பிம்பத்திற் கந்நியமாகப் பிரதிபிம்பமில்லையென்பதே விவரணகாரர் மதமாம்.

## உகரு. வித்தியாரணியசுவாமி விவரணகாரர்களது மதங்களின் வேற்றுமை.

வித்தியாரணியசுவாமிமுதலியோர் பாரமார்த்திக வியாவகாரிக பிராதிபாஸிக பேதத்தால் மூவகைச் சீவன் கூறியிருக்கின்றனர். வியாவகாரிக அந்தக்கரணத்திலுள்ள பிரதிபிம்பத்தினை வியாவகாரிகஜீவ னென்பர். சொப்பனாவஸ்தையின் பிராதிபாஸிக அந்தக்கரணத்திலுள்ள பிரதிபிம்பத்தினைப் பிராதிபாஸிகஜீவ னென்பர். விவரணகாரர் கிரமப்படி பிம்பத்திற்கு வேறாகப் பிரதிபிம்ப மில்லாமையால் ஜீவனது மூன்று பேதம் சம்பவியாது. ஆதலால் மூவகை ஜீவவாதத்தை அநுசரித்தவர்கள் பிம்ப பிரதிபிம்பங்களின் பேதத்தை அங்கீகரிக்கின்றனர். அவர்கள் மதத்தில் கண்ணாடி முதலிய உபாதியில் அநிர்வசநீயப் பிரதிபிம்பத்தின் உற்பத்தி உண்டாகின்றது. பிரதிபிம்பத்தின் அதிஷ்டானம் கண்ணாடிமுதலியனவாம். பிம்பத்தின் சந்நிதானம் நிமித்தகாரணமாம். நிமித்தகாரண மின்மையால் காரியத்தின் அபாவம் உண்டாகிறதில்லை; பிம்பத்தின் நீக்கத்தினால் பிரதிபிம்பத்தின் அபாவ முண்டாகின்றது. அங்ஙனமாயினும், நிமித்தகாரணத்திற் கிரண்டு பேத முண்டு. ஒன்றோ காரியத்திற்கு மறைவின்றிய முற்காலத் திருப்பதாகிய நிமித்த காரணமாம். வேறு சில காரியகாலத்திருக்கும் நிமித்தகாரண

* மணாவையும் பிம்பத்தையும் காணும் விருத்திகள் பலவாயினும் அவை விரைவிற் சுழலுதலால கொள்ளிவட்டம்போல் ஒரே விருத்தியாகக் காணப்படுகின்றன.

மாம். கடமுதலியவற்றிற்குத் தண்டம் குலாலன்முதலியன நிமித்த காரணமாம். அவை காரியத்திற்கு முற்காலத் திருப்பனவாதல் வேண்டும். கட முதலியவற்றின் சத்தை உள்ளதாக அவற்றின் அபேக்ஷை இல்லை. அங்ஙனமே பிரத்தியக்ஷ ஞானத்தில் சுவ (தனது) விஷயம் நிமித்தகாரணமாம். ஆனால் விஷயத்தின்சத்தை ஞானகாலத்தில் அபேக்ஷிக்கப்படுவதாம். அழிவிற் கெதிர்முகமான கடத்தோடு நேத்திரத்தின் சையோகமுண்டாகியும், கடத்தின் சாக்ஷாத்கார முண்டாகிறதில்லை. ஆதலால் ஞானகாலத்தில் வர்த்தமான கட முதலியனவே தமது சாக்ஷாத்காரத்திற்கு நிமித்தகாரணமாம். தூரத்துள்ள நானா பதார்த்தங்களில் ஒருமைப்பிரம முண்டாகின்றது. மந்தாந்தகாரத்துள்ள இரஜ்ஜுவில் சர்ப்பப்பிரம முண்டாகின்றது. ஆதலால் ஒருமைப்பிரமத்திற்கு நிமித்தகாரணம் தூரந் திருத்தற்றன்மைந் தோஷமாம். இரஜ்ஜுவின் சர்ப்பப்பிரமத்திற்கு நிமித்தகாரணம் மந்தாந்தகாரமாம். தூரத்திருத்தற்றன்மை மந்தாந்தகார மென்பவற்றின் அபாவ முண்டாக, ஒருமைப்பிரம சர்ப்பப்பிரமங்களின் அபாவம் உண்டாகுதலால், காரியகாலத்திருப்பனவாகிய தூரத்திருத்தற்றன்மை மந்தாந்தகார மென்பன முற்கூறிய இரண்டுவித அத்தியாசங்களுக்கும் நிமித்தகாரணமாம். அவ்வாற்றால் பிம்பத்தின் சந்நிதானமும், காரிய காலத்திலிருப்பதேயாய்ப் பிரதிபிம்ப அத்தியாசத்திற்கு ஏதுவாதலால், பிம்பத்தின் நீக்கத்தால் பிரதிபிம்பத்தின் அபாவம் சம்பவிக்கின்றது. ஆதலால் சந்நிதிப்பட்ட பிம்பமோ பிரதிபிம்பத்திற்கு நிமித்தகாரணமாம். பிரமத்தின் அதிஷ்டானமே உபாதானகாரண மெனப்படுகின்றது. ஆதலால் பிரதிபிம்பத்தின் உபாதானகாரணம் கண்ணாடி முதலியனவாம். விவரணகாரர்மதத்தில் பிரதிபிம்பத்தின் சொரூபமோ பிம்பத்தினும் வேறன்று. ஆனால் கண்ணாடியிலிருத்தற்றன்மை எதிர்முகத்தன்மை பிம்பத்தினும் வேறாகுந்தன்மைத் தர்மங்களின் உற்பத்தி கண்டத்திருக்குமுகத்தி லுண்டாகின்றது. அம்மூன்று தர்மங்களும் அநிர்வசநீயமாம். அவற்றின் அதிஷ்டானவடிவ உபாதானகாரணம் கண்டத்திருக்கும் முகமாம். சந்நிதிப்பட்ட கண்ணாடி முதலியன நிமித்தகாரணமாம். இவ்வாற்றால் சேதனத்தின் பிரதிபிம்பவாதத்தில் இரண்டுமத முண்டு. விவரணகாரர் மதத்தில் பிரதிபிம்பத்திற்குப் பிம்பத்தோடு அபேதமிருத்தலால் பிரதிபிம்பத்தின் சொரூபம் சத்தியமாம். வித்தியாரணியசுவாமி முதலி

யோர்களது மதத்தில் கண்ணாடிமுதலியவற்றில் அநிர்வசநீயமுகா பாசத்தின் உற்பத்தி உண்டாகின்றது. இதனையே ஆபாசவாதம் என்பர். விவரணத்திற்கூறிய பக்ஷத்தினைப் பிரதிபிம்பவாதம் என்பர். இரண்டுபக்ஷங்களின் பரஸ்பரகண்டநமும் ஸ்வபக்ஷத்தின் மண்டநமும் பெருநூல்களில் விளக்கமாயிருக்கின்றன; விரிவஞ்சி ஈண்டு தப்படவில்லை.

## உகச. இருவர்பக்ஷங்களும் கொள்ளத்தக்கனவா மெனல்.

பிரதிபிம்பவாதத்திலேனும் ஆபாசவாதத்திலேனும் ஆக்கிரகமில்லை. சேதனத்தில் சமசாரத்தாமத்தின் சம்பந்தமில்லை; ஜீவேசுவரர்களுக்குப் பரஸ்பரம் பேதமில்லை என்னும் அர்த்தத்தை அறிவித்தற்பொருட்டு அநேகவிதம் சொல்லப்பட்டிருக்கின்றது. எந்தப்பக்ஷத்தினுல் அஸங்கப் பிரஹ்மாத்மபோத முண்டாகுமோ அந்தப் பக்ஷமே ஆதரிக்கத்தக்கதாம்.

## உகரு. பிம்பப்பிரதிபிம்பங்களின் அபேதபக்ஷத்தின் கிரமம் அபேதத்தை அறிவித்தலில் எளிதாமெனல்.

அங்ஙனமாயினும், பிம்பப் பிரதிபிம்பங்களின் அபேதபக்ஷத்தின் கிரமத்தால் அஸங்கப் பிரஹ்மாத்மபோதம் அநாயாசமாக உண்டாகின்றது. ஏனெனின், கண்ணாடி முதலியவற்றில் முக முதலியவற்றின் இலௌகிகப் பிரதிபிம்பம் உண்டாகின்றது. அண்டும் பிம்பத்தின் சொரூபமோ என்றும் ஏகரசமாம். உபாதியின் சந்நிதானத்தினுல் பிம்பப் பிரதிபிம்பங்களின் பேதப்பிரம முண்டாகின்றது. அங்ஙனமே பிரஹ்மசேதனமோ என்றும் ஏகரசமாம். அஞ்ஞானமுதலிய உபாதிகளின் சம்பந்தத்தால ஜீவத்தன்மை ஈசுவரத்தன்மைகளின் பிரதிவடிவப் பிரம முண்டாகின்றது. இவ்வாற்றல் அஸங்கசேதனத்தில் ஜீவ ஈசபேதங்களின் முற்றும் அபாவமிருக்கின்றது. ஜீவத்தன்மை ஈசுவரத்தன்மைத் தர்மங்களோ ஒன்றற்கொன்று பின்னமாய்க் கற்பிதமாம். ஒன்றற்கொன்று பின்னமான தர்மிகள் கற்பிதமு மன்று. ஆதலால் பிம்பப் பிரதிபிம்பங்களின் அபேதவாதம் அத்வைத மதத்திற்கு அத்தியந்த அநுகூலமாம்.

---

## உகரு. ஆபாசவாதம் பிரதிபிம்பவாதத்தினும் சிறிது பேதமாமாறு.

ஆனால் ஆபாசவாதத்தில் எங்ஙனம் அநிர்வசநீயம் பிரதிபிம்பமோ, அதற்கதிஷ்டானம் கண்ணாடி முதலிய உபாதிகளோ, அங்ஙனமே விவரணத்திற்கூறிய பிரதிபிம்பவாதத்திலும் கண்ணாடியிலிருத்தற்றன்மை எதிர்முகத்தன்மைமுதலிய தர்மங்கள் அநிர்வசநீயமாம். அவற்றின் அதிஷ்டானம் முகமுதலிய பிம்பமாம். ஆதலால் இரண்டுபக்ஷங்களினும் அநிர்வசநீயத்திற்குப் பரிணாமமுடைய உபாதானம் அஞ்ஞானமென்று கூறுதல் வேண்டும்.

## உகசா. பிரதிபிம்பத்திற்கு நிழல்வடிவத்தன்மையை நிஷேதித்தல்.

சில நூலாசிரியர் சாயையைப் (நிழலை) ப்பிரதிபிம்பமெனக் கொண்டிருக்கின்றனர். அது சம்பவியாது. ஏனெனின் சரீரம் விருக்ஷ முதலியவற்றினால் எவ்வளவிடத்தில் பிரகாசத்தின் தடை உண்டாகிறதோ, அவ்வளவிடத்தில் பிரகாச விரோதியான அந்தகாரமுண்டாகின்றது. அவ்வந்தகாரத்தினைச் சாயையென்பர். அந்தகாரத்திற்கு நீலவுருவமிருத்தலால் சாயைக்கும் நியமமாக நீலவுருவமுண்டாகின்றது. ஸ்படிக முதலியவற்றின் பிரதிபிம்பம் வெண்மையாகின்றது. சொர்ணத்தின் பிரதிபிம்பம் பீத உருவமுடையதாகின்றது. சிவப்பான மாணிக்கத்தின் பிரதிபிம்பத்தில் சிவப்பு உருவமுண்டாகின்றது. பிரதிபிம்பத்தினைச் சாயை வடிவமாகக் கொள்ளின் சகலப் பிரதிபிம்பங்களுக்கும் நீல உருவம் வேண்டும். இதனால் சாயை வடிவம் பிரதிபிம்பமன்று.

## உகஎ. பிரதிபிம்பம் பிம்பத்தினும் வேறாகிய வியாவகாரிகத் திரவியவடிவமா மென்பதை நிஷேதித்தல்.

சிலர் இங்ஙனம் கூறுகின்றனர்:—அந்தகார சொரூபமாகிய சாயையினும் பிரதிபிம்பத்திற்குப் பேதமிருக்கினும், மீமாம்ஸகமதத்தில் ஒளியின்மையை அந்தகாரமெனக் கொள்ளாது ஆலோகவிரோதியாகிய பாவரூபம் அந்தகாரமாம்; அதனிடத்திற் கிரியை யிருத்தலானும் நீல உருவ மிருத்தலானும் அந்தகாரம் திரவியமாம்; கிரியையும் குணமும் திரவியத்திலேயே யிருக்குமாக

லின் பத்தாந்திரவியம் அநந்தகாரமாமெனக் கொளவதுபோல, பிரதிபிம்பமும் பிருதிவி ஜல முதலியவற்றினும் வேறாகிய திரவியமாம் என்று இவ்வாறு பிரதிபிம்பத்தினைச் சுவதந்திரத் திரவியமெனக்கொள்ளின,அவனை, அப்பிரதிபிம்பம் நித்தியத் திரவியமா? அல்லது அநித்தியத் திரவியமா? என்று கேட்கவேண்டும். நித்தியத்திரவியமாமாயின் ஆகாயமுதலியவற்றைப்போலஉற்பத்திநாசமில்லாததாகவே யிருத்தலின், பிரதிபிம்பத்திற்கு உற்பத்திநாசம் தோற்றலாகாது. இதனால பிரதிபிம்பத்தினை அநித்தியத் திரவிய மெனின், உபாதானத்தின தேசத்தில காரியத்திரவிய மிருக்கின்றது. ஆதலால் பிரதிபிம்பத்தின உபாதானகாரணம் கண்ணாடி முதலியனவென்றே கொள்ளவேண்டியதாகும். கண்ணாடிமுதலியவற்றிற்குப் பிரதிபிம்பத்தின உபாதானத்தன்மை சம்பவியாது. ஏனெனின், கண்ணாடி முதலிய உபாதானத்தில் பிரதிபிம்பவடிவத திரவியத்தின் இருப்பை அங்கீகரிக்கின, அவனை இது கேட்கவேண்டும்:—பிரதிபிம்பத்திலுள்ள உருவம, குறுமை நெடுமைமுதலிய பரிமாண மெனனும குணங்களும, அங்ஙனமே பிம்பத்தினும் விபரீத எதிர்முகத்தன்மை முதலிய தாமங்களும, கைகால் முதலிய அவயவங்களும பிரதிபிம்பத்தில் தோற்றுகின்றன. அவை பிரதிபிம்பத்தில வியாவகாரிகமா?, அன்றி? மித்தையாகத் தோற்றுகின்றனவா? உருவம பரிமாண முதலியவற்றிற்குப் பிரதிபிம்பத்தில் வியாவகாரிக அபாவம அங்கீகரித்து, 'பிரதிபிம்பத்தின் உருவமுதலியவற்றிற்குப் பிராதிபாஸிகம் அங்கீகரிக்கின், வியாவகாரிகத திரவியசொரூபபிரதிபிம்பத்தின் அங்கீகாரம் நிஷ்பலமாம. பிரதிபிம்பத்தின் உருவம பரிமாண முதலியவற்றை வியாவகாரிகமெனக் கொள்ளின், அற்ப பரிமாணமுடைய கண்ணாடியில மகா பரிமாணமுடைய அநேக பிரதிபிம்பங்களின் உற்பத்தி சமபவியாது. பிரதிபிம்ப மித்தியாத்தன்மையிலோ சரீரத்தின் மத்தியில் சுருங்கிய இடத்தில சொப்பனத்தின் மித்தையாகிய யானை முதலியவற்றின் உற்பத்தி உண்டாகுதலால் முற்கூறிய தோஷம் சமபவியாது. அங்ஙனமே பிரதிபிம்பத்தினை வியாவகாரிகத் திரவியமெனக் கூறின், ஒருவித உருவமுடைய கண்ணாடியின் சமான உருவமுடைய பிரதிபிம்பத்தின் உற்பத்தியே உண்டாதல் வேண்டும. அநேகவித உருவமுடைய அநேக பிரதிபிம்பங்களின் உற்பத்தி ஒரு கண்ணாடியில் உண்டாகின்றது. ஒரு

உருவமுடைய உபாதானத்தினால் அநேகவித உருவமுடைய அநேக உபாதே(காரி)யங்களின் உற்பத்தி உண்டாகிறதில்லை. தர்ப்பணத்தின் இடையில் அல்லது தர்ப்பணத்திற்கு அதிசமீபத்திலுள்ள மற்றைய பதார்த்தங்கள் ஒன்றும் தோற்றுகிறதில்லை. எதனால் அநேகவித உருவமுடைய பிரதிபிம்பங்களின் உற்பத்தி சம்பவிக்கின்றதோ, அதனால் பிரதிபிம்பத்திற்கு வியாவகாரிகத் திரவியவடிவம் கூறுதல் சம்பவியாது. ஆனால் தர்ப்பணத்தின் அதிசமீபத்தில் உள்ள வேறெதுவுமோ பிரதிபிம்பத்திற்கு உபாதானமாகக் காணப்படுகிறதில்லை. கண்ணாடியே உபாதானமெனக் கொள்ளவேண்டியதாகும். அது சம்பவியாது. ஏனெனின், கனமுள்ளதாய் அவயவத்தோடு கூடியதாய் முன்போல விகாரமின்றியதாய்த் தோற்றிக்கொண்டிருக்க, கண்ணாடியில் குழிவு உயர்வு தாடை மூக்குமுதலிய அநேகவித அவயவமுதலிய வேறு திரவியமாகிய பிரதிபிம்பத்தின் உற்பத்தி கூறுதல் முற்றும் யுக்திஹீனமாம். ஆதலால் பிம்பத்திற்கு வேறாய் வியாவகாரிகத் திரவியவடிவப் பிரதிபிம்ப மிருக்கின்றதென்னும் பக்ஷமும், சாயாவாதத்தைப்போல அசங்கதமாம்.

## ௨௧௯. ஆபாசவாதப் பிரதிபிம்ப வாதங்களின் யுக்தியோடு கூடிய தன்மையைக் கூறி, இரண்டு பக்ஷங்களிலும் அஞ்ஞானம் உபாதானமாதலைக் கூறுகின்றார்.

இவ்வாற்றால் சந்நிதிப்பட்ட கண்ணாடி முதலியவற்றினின்றும் முகமுதலிய அதிஷ்டானத்தில் பிரதிபிம்பத்தன்மைமுதலிய அநிர்வசநீய தர்மங்கள் உற்பத்தியாகின்றன. அல்லது சந்நிதிப்பட்ட முகமுதலியவற்றினின்றும் கண்ணாடிமுதலிய அதிஷ்டானத்தில் அநிர்வசநீயப் பிரதிபிம்பம் உற்பத்தியாகின்றது என்னும் இரண்டு பக்ஷமும் யுக்தியோடு கூடியனவாம். அதனால் அநிர்வசநீய தர்மத்திற்கு அல்லது அநிர்வசநீயப் பிரதிபிம்பத்திற்கு உபாதானகாரணம் கூறுதல் வேண்டும்.

## ௨௨௦. மூலாஞ்ஞானத்திற்கு அல்லது, தூலாஞ்ஞானத்திற்குப் பிரதிபிம்பத்தின் அல்லது அதன் தர்மங்களின் உபாதானத்தன்மை சம்பவியாமையின் சங்கை.

ஆண்டு ஜகத்தின் சாதாரண காரணமாகிய மூலாஞ்ஞானமே பிரதிபிம்பத்தன்மை முதலிய தர்மங்களுக்காவது அல்லது தர்

மிககாவது உபாதானமெனக் கூறின், ஆகாய முதலியவற்றைப் போல மூலாஞ்ஞானத்தின் காரியமாகுதலால பிரதிபிம்பத் தன்மை முதலிய தாமம் அல்லது தாமியாகிய பிரதிபிம்பம சத்தியமாதல்வேண்டும்; முற்கூறியபடி அநிர்வசநீயமாகக் கொண்டிருக்கின்றனா. ஆதலால் மூலாஞ்ஞானத்திற்கு அநிர்வசநீயத்தின உபாதானத்தன்மை சமபவியாது. அங்ஙனமே விவரணகாரா மதத்தில் முகாவச்சின்ன சேதனத்துள்ள அஞ்ஞானத்தினைப பிரதிபிம்பத்தன்மை முதலிய தாமங்களுக்கு உபாதானமாகக கொண்டிருக்கின்றனா. வித்தியாரணியசுவாமி முதலியோா மதத்தில் கண்ணுடி யவச்சின்ன சேதனத்திருக்கும அஞ்ஞானத்தைப பிரதிபிம்பத்திற்கு உபாதானமாகக கொண்டிருக்கின்றனா. ஆனுல் அவஸ்தா (தூலா) ஞ்ஞானத்தின் காரியத்திற்கு அநிர்வசநீயத்தன்மை யிருத்தலால சத்தியத்தின அடைவு இல்லையாயினும், அதிஷ்டான ஞானத்தினுல் அநிர்வசநீயத்தின நிவிருத்தி உண்டாகின்றது. பிரதிபிம்பாத்தியாசத்தின அதிஷ்டானம முற கூறியபடி முகாவச்சின்னசேதனம் அல்லது கண்ணுடியவச்சின்னசேதனமாம். முகத்தின் ஞானம அலலது கண்ணுடியின ஞானமே அதிஷ்டானத்தின ஞானமாம. அதற்குப பிற்றிய காலத்திலும பிரதிபிம்பத்தின பிரதீதி எல்லோருக்கும அநுபவசித்தமாம. ஆதலால் முகாவச்சின்ன சேதனத்தை அலலது கண்ணுடியவச்சின்ன சேதனத்தை ஆவரிக்கும அவஸ்தாஞ்ஞானமும பிரதிபிம்பாத்தியாசத்திற்கு உபாதானமெனல் பொருந்தாது.

## ௨௨௧. முற்கூறிய சங்கைக்கு ஓர் நூலாசிரியரது கிரமப்படி சமாதானம்.

இந்தஸ்தானத்தில் ஓா நூலாசிரியா இவ்வாறு சமாதானம செய்கின்றனா:—சுத்திரஜதமுதலியவற்றின் அத்தியாசத்தில் அதிஷ்டானத்தின் விசேஷ ஞானத்தினுல் ஆவரணசத்தி விக்ஷேபசத்தி வடிவ அஞ்ஞானத்தின் இரண்டு அமசங்களும நிவிருத்தியாகின்றன. அங்ஙனமாயினும, அநுபவாநுசாரமாகப பிரதிபிம்பாத்தியாசத்தின் அதிஷ்டான ஞானத்தால் அஞ்ஞானத்தின ஆவரணசத்தி அமசமே நிவிருத்தியாகின்றது. ஆதலால அதிஷ்டான ஞானத்தினுல் ஆவரணசத்திவடிவ அம்சத்தின் நிவிருத்தி உண்டாகியும, பிரதிபிமப முதலியனவும அவற்றின் ஞானமுமாகிய விக்ஷேபத்திற்

கேதுவான அஞ்ஞானத்தின் அம்சம் இருத்தலால், அதிஷ்டான ஞானத்திற்கு பிந்தியகாலத்திலும் பிரதிபிம்பமுதலியன தோற்றுகின்றன. ஆதலால் உபாதி அவச்சின்னசேதனத்திலுள்ள தூலாஞ்ஞானத்தின் காரியம் பிராதிபாசிகமாமென்னும் பக்ஷம் சம்பவிக்கின்றது.

## உஉஉ. முற்கூறிய சங்கைக்குப் பிறநூலாசிரியர் முறைப்படி சமாதானம்.

அன்றியும் பிறநூலாசிரியர் மதம் இதுவாம்:—கண்ணாடி முதலியவற்றின் உபாதானமாகிய மூலாஞ்ஞானமே பிரதிபிம்பாத்தியாசத்திற்கு உபாதானமாம். ஆதலால் கண்ணாடி முதலியவற்றின் ஞானமுண்டாகியும் பிரதிபிம்பத்தின் பிரதீதி உண்டாகின்றது. பிரஹ்மத்தின் ஞானத்தினால் பிரஹ்மசேதனத்தை ஆவரிக்கும் அஞ்ஞானமும் அதன் காரியமும் நிவிர்த்தி ஆகின்றன. கண்ணாடி முதலியவற்றின் ஞானத்தினால் கண்ணாடி முதலியவற்றால் அவச்சின்ன சேதனத்தை ஆவரிக்கும் அஞ்ஞானத்தின் நிவிர்த்தி உண்டாகியும், பிரஹ்ம சொரூபத்தை ஆவரிக்கும் அஞ்ஞானத்தின் நிவிர்த்தி உண்டாகிறதில்லை. பிரஹ்மாத்ம சொரூபத்தை மறைக்கும் அஞ்ஞானத்தை மூலாஞ்ஞானமென்பர். உபாதியவச்சின்ன சேதனத்தை மறைக்கும் அஞ்ஞானத்தை அவஸ்தாஞ்ஞானமென்பர். அதனையே தூலாஞ்ஞானமென்பர். மூலாஞ்ஞானத்தோடு தூலாஞ்ஞானத்திற்கு பேதமிருக்கின்றதா? அல்லது அபேதமிருக்கின்றதா? என்னும் விசாரத்தைமேல் எழுதுவோம்.

## உஉ௩. மூலாஞ்ஞான தூலாஞ்ஞானங்களின் பேதத்தில் சிறிது விசாரம்.

மூலாஞ்ஞானத்திற்கு பிரதிபிம்பாத்தியாசத்தின் உபாதானத்தன்மையை அங்கீகரிக்கின், கண்ணாடி முதலியவற்றைப்போல வியாவகாரிகமாகவே பிரதிபிம்ப முதலியனவும் உண்டாதல்வேண்டும். பிரஹ்மஞானமின்றியே பிரதிபிம்பத்தன்மை முதலிய தாமங்களிலும், அங்ஙனமே பிரதிபிம்பத்திலும் மித்தியாத்தன்மைப் புத்தியிருத்தலால் பிராதிபாஸிகமாம். மூலாஞ்ஞானத்திற்கு முற்கூறிய அத்தியாசத்தின் உபாதானத்தன்மையை அங்கீகரிக்கின், பிராதிபாஸிகத்தன்மை சம்பவியாது. அங்ஙனமாயினும் பிரஹ்மஞானத்தினால்

நிவிருத்தியாகத்தக்க அஞ்ஞானத்தின் காரியம் வியாவகாரிகமாம். பிரஹ்ம ஞானமின்றியே நிவிருத்தியாகத்தக்க அஞ்ஞானத்தின் காரியம் பிராதிபாஸிகமாம். இவ்வாறு வியாவகாரிகப் பிராதிபாஸிகங்களுக்குப் பேதங்கூறின் முற்கூறிய சங்கை உண்டாகின்றது. அஞ்ஞானத்திற்கு வேறானதாய்த் தோஷ ஜந்யமாகாது, கேவல அஞ்ஞான ஜந்யமாமாயின் அதனை வியாவகாரிகம் என்பர். அஞ்ஞானத்திற்கு வேறானதாய்த் தோஷ ஜந்யமாவதைப் பிராதிபாஸிகமென்பர். இவ்வாறு வியாவகாரிகப் பிராதிபாஸிகங்களுக்குப் பேதங் கூறின் முற்கூறிய சங்கை சம்பவியாது. ஏனெனின் கண்ணாடி முதலிய உபாதியினால் முக முதலியவற்றின் சம்பந்தமுண்டாகப் பிரஹ்ம சேதனத்துள்ள மூலாஞ்ஞானத்தின் பிரதிபிம்பத்தன்மை முதலிய தர்மவடிவ அல்லது பிரதிபிம்பத் தன்மைமுதலிய தர்மிவடிவ பரிணாம முண்டாகின்றது. இரண்டு பக்ஷங்களிலும் அதிஷ்டானம் பிரஹ்மசேதனமாம்.

## உஉச. ஆபாசவாதப் பிரதிபிம்ப வாதங்களில் தர்மி அல்லது தர்மத்தின் அத்தியாசத்தினது உற்பத்திக்கு உபாதானமாகத் தூலாஞ்ஞானத்தைக் கொண்டு அதிஷ்டானத்திற்குப் பேதங்கூறுதல்.

வித்தியாரணியசுவாமிகள் மதத்தில் பிரதிபிம்பத்திற்கு உற்பத்தியை அங்கீகரிக்கின் கண்ணாடி முதலிய அவச்சின்ன சேதனம் அதிஷ்டானமாம். கண்ணாடி முதலிய அவச்சின்ன சேதனத்துள்ள அஞ்ஞானம் உபாதானமாம். அங்ஙனமே விவரணகாரர் மதத்தால் பிரதிபிம்பத்தன்மை முதலிய தர்மங்களின் உற்பத்தியினையே அங்கீகரிக்கின், பிம்பாவச்சின்ன சேதனம் அதிஷ்டானமாம். பிம்பாவச்சின்ன சேதனத்து அஞ்ஞானம் உபாதானமாம். இவ்வாற்றால் தர்மாத்தியாசபக்ஷ தர்மியத்தியாசபக்ஷங்களில் அதிஷ்டானத்திற்கும் உபாதானத்திற்கும் பேதமுண்டு என்று முன் சொல்லப்பட்டிருக்கின்றது. அது அவஸ்தாஞ்ஞானத்திற்கு முற்கூறிய அத்தியாசத்தின் உபாதானத்தன்மையை அங்கீகரித்துக் கூறப்பட்டிருக்கின்றது.

---

## மூலாஞ்ஞானத்திற்கு உபாதானத்தன்மையை அங்கீகரித்து, அதிஷ்டானத்திற்குப் பேதமும் மூலாஞ்ஞானத்திற்கு முற்கூறிய அத்தியாசத்திற்கு உபாதானமாந்தன்மையின் யோக்கியதையும் கூறுதல்.

மூலாஞ்ஞானத்திற்குஉபாதானத்தன்மையை அங்கீகரிக்கின், இரண்டுமதங்களிலும் அதிஷ்டானத்திற்குப் பேதம் சம்பவியாது. மூலாஞ்ஞானத்திற்கே முற்கூறிய அத்தியாசத்தின உபாதானத் தன்மையை அங்கீகரித்தல் வேண்டும். ஏனெனின், அவ்வஞ்ஞானத்திற்கு முற்கூறிய அத்தியாசத்தின உபாதானத்தன்மையை அங்கீகரிக்கின கண்ணாடி முதலியவற்றின ஞானத்தால், அல்லது முக முதலியவற்றின ஞானத்தால் அஞ்ஞானத்தின ஆவரணசக்தி அம்சத்தின் நிவிருத்தி உண்டாக விக்ஷேபசத்தி அம்சத்தின ஸ்திதியை அங்கீகரிக்கின, பிரஹ்ம ஞானத்தால் பிரஹ்ம சொருபத்தை ஆவரிக்கும மூலாஞ்ஞான அம்சமே நஷ்டமாகும். அங்ஙனமே சுத்தி முதலியவற்றின ஞானத்தால சுத்தியாதி யவச்சின்ன சேதனத்தை ஆவரிக்கும் தூலாஞ்ஞானம்சமே நஷ்டமாகும். வியாவகாரிகப் பிராதிபாஸிக விக்ஷேபத்திற்கேதுவாகிய இருவகை அஞ்ஞானமசங்களும சேஷமாயிருத்தலின், விதேககைவல்யத்திலும வியாவகாரிகப பிராதிபாஸிக விக்ஷேபத்தின இருப்பினால் சகல சம்சாரத்தின் நீக்கமின்மையும உண்டாகும். ஆதலால் ஆவரண ஏதுவான அஞ்ஞானம்சத்தின நிவிருத்தி உண்டாக விக்ஷேப ஏதுவாகிய அஞ்ஞானமசம எஞ்சியிருப்பதாகக கூறுதல் சமபவியாது.

## உஉசா. தூலாஞ்ஞானத்திற்குப் பிரதிபிம்பாத்தியாசத்தின் உபாதானத்தன்மையைக் கூறுவோர் மதம்.

தூலாஞ்ஞானத்திற்குப் பிரதிபிமபாத்தியாசத்தின் உபாதானத்தன்மையைக கூறுவோர இங்ஙனம கூறுகின்றனர்:—ஆவரண ஏதுவாகிய அஞ்ஞானமசத்தின நிவிருத்தி உண்டாக விக்ஷேப ஏதுவாகிய அஞ்ஞானமசம எஞ்சியிருத்தல சுவாபாவிக மன்று. ஆனால் விக்ஷேப ஏதுவாகிய அஞ்ஞானமசத்தின் நிவிருத்திக்குப் பிரதிபந்தக முளதாயின, ஆண்டு விக்ஷேப ஏதுவாகிய அஞ்ஞானமசத்தின சேஷமிருக்கும. பிரஹ்ம ஞானத்தினால் ஆவரண

ஏதுவாகிய அஞ்ஞானம்சத்தின் நிவிருத்தி உண்டாகியும், விக்ஷேப ஏதுவாகிய அஞ்ஞானம்சத்தின் நிவிருத்தியில் பிரதிபந்தகமான பிராரப்தகர்மமிருக்கும். அவ்வளவு காலம் விக்ஷேப ஏதுவாகிய அஞ்ஞானம்சத்தின் சேஷமிருக்கும். பிராரப்த வடிவப் பிரதிபந்தகத்தின் அபாவமுண்டாக, விக்ஷேப ஏதுவான அஞ்ஞானம்சத்தின் நிவிருத்தி உண்டாகின்றது. ஆனால் இவ்வளவு பேதமுண்டு:— ஆவரிக்கும் அஞ்ஞானம்சத்தின் நிவிருத்தியோ மகாவாக்கியஜந்நிய அந்தக்கரணத்தின் பிரமை வடிவ விருத்தியினால் உண்டாகின்றது. பிராரப்தபலத்தால் எவ்வளவு வருஷம் ஜீவித்திருக்கின்றானோ, அது வரையிலும் முன் விருத்தியோ இருக்கிறதில்லை. விக்ஷேப நிவிருத்தியின்பொருட்டு மரணத்திற்கு முற்பின்றிய காலத்தில் மகாவாக்கிய விசாரத்தின் விதானம் (விதி) வித்துவானுக்கில்லை. மரணமூர்ச்சை காலத்தில் மகாவாக்கிய விசாரத்தின் சம்பவமுமில்லை. ஆதலால் விக்ஷேபசக்தியின் நாசத்திற் கேது தத்துவஞானத்தின் சமஸ்காரத்தோடு கூடிய சேதனமாம். ஆவரணசக்தியின் நாசத்திற் கேது தத்துவஞானமாம். எங்ஙனம் மூலாஞ்ஞானத்தினது விக்ஷேபசக்தியின் நிவிருத்தியில் பிரதிபந்தகம் பிராரப்தகர்மமோ, அங்ஙனமே பிரதிபிம்பாத்தியாசத்தில் விக்ஷேபசக்தியின் நிவிருத்தியில் முகமுதலிய பிம்பத்தோடு கண்ணாடிமுதலிய உபாதியின் சம்பந்தமே பிரதிபந்தகமாம். அதன் சற்பாவத்தில் ஆவரண அம்சத்தின் நிவிருத்தி உண்டாகியும், பிரதிபிம்ப முதலிய விக்ஷேபத்தின் நிவிருத்தி உண்டாகிறதில்லை. பிம்ப உபாதியின் சம்பந்த வடிவப் பிரதிபந்தகத்தின் நிவிருத்தி உண்டாக, விக்ஷேபத்தின் நிவிருத்தி உண்டாகின்றது. சுத்திரஜத முதலிய அத்தியாச முண்டாயின், ஆண்டு ஆவரணத்தின் நாசத்திற்குப்பின் விக்ஷேபத்தின் நிவிருத்தியில் பிரதிபந்தகத்தன்மையின் அபாவத்தால் விக்ஷேபம் சேஷமிராது. இவ்வாற்றால் விக்ஷேப நிவிருத்தியில் பிரதிபந்தகத்தின் அபாவத்தோடு கூடிய அதிஷ்டானஞானம் ஏதுவாதலாலும், மோக்ஷதசையில் பிராரப்தவடிவப் பிரதிபந்தக மில்லாமையினாலும் சமஸ்காரத்தின் உணர்ச்சி சம்பவியாது. ஆதலால் ஆவரணசக்தியின் நாசத்திற்குப் பின்னும் விக்ஷேபசக்தியின் இருப்பை அங்கீகரிக்கின், முற்கூறிய தோஷமில்லாமையினால் அவஸ்தாஞானத்தினையும் பிரதிபிம்பாத்தியாசத்திற்கு உபாதானமாகக் கொள்ளுதல் உசிதமாம்.

---

## ௨௨௭. முற்கூறியமதத்தை நிஷேதித்தலோடு மூலாஞ்ஞானமே பிரதிபிம்பாத்தியாசத்திற்கு உபாதானமெனல்.

இங்ஙனம் கூறுதலும் பொருந்தாது. ஏனெனின் யாண்டுத் தேவதத்தனது முகம் கண்ணாடிமுதலிய உபாதி என்பவற்றின் யதார்த்தசாக்ஷாத்காரம் யஜ்ஞதத்தனுக்குண்டாகின்றதோ, அதற்குப்பிறகியகாலத்திலும் தேவதத்தனமுகத்திற்குக் கண்ணாடியோடு சம்பந்தமுண்டாக, யஜ்ஞதத்தனுக்குத் தேவதத்தன முகத்திலுள்ள பிரதிபிம்பத்தன்மைமுதலிய தர்மங்களின் அத்தியாசம் விவரணமதத்தில் உண்டாகின்றது. அங்ஙனமே வித்தியாரணியசுவாமிகள் மதத்தில் தேவதத்தன முகத்தின் பிரதிபிம்பத்தினது அத்தியாசம் கண்ணாடியில் உண்டாகின்றது. அது உண்டாகலாகாது. ஏனெனின் முற்கூறிய அத்தியாசத்தின நிவிருத்தியில் பிம்ப உபாதிகளின் சம்பந்தமே பிரதிபந்தகமாம். முகம் அல்லது கண்ணாடி வடிவ அதிஷ்டானத்தின ஞானகாலத்தில் அந்தப்பிரதிபந்தக மில்லாதிருத்தலின், பிரதிபந்தகத்தின் அபாவத்தோடுகூடிய அதிஷ்டான முண்டாகின்றது. விவரணகாரர் மதத்தில் "தேவதத்தனது முகத்தில் தர்ப்பணத்திலிருக்குந்தன்மை எதிர்முகத்தன்மை முதலியன இல்லை" என்னும் ஞானம் அத்தியாசத்திற்கு விரோதியாம். வித்தியாரணிய சுவாமிகள் மதத்தில் "'கண்ணாடியில் தேவதத்தன் முகமில்லை" என்னும் ஞானம் முற்கூறிய அத்தியாசத்திற்கு விரோதியாம். ஏனெனின் இரண்டு மதங்களிலும் கிரமமாகத் தேவதத்தன முகத்தில் கண்ணாடியிலிருத்தற்றன்மை எதிர்முகத்தன்மை, கண்ணாடியில் தேவதத்தன் முகம் என்பதாக அத்தியாசத்தின வடிவத்திற்குப் பேதமிருக்கின்றது. அதற்கேதுவான விக்ஷேப சத்தி விசிஷ்ட அஞ்ஞானாம்சத்தின் நிவிருத்தியும் உண்டாயிருக்கின்றது. ஆதலால் உபாதானத்தின் அபாவத்தால் முற்கூறிய ஸ்தலத்தில் யஜ்ஞதத்தனுக்குத் தேவதத்தனது முகத்தின்பிரதிபிம்பப் பிரமம் உண்டாதல் வேண்டும். 'பிரஹ்ம சேதனத்துள்ள மூலாஞ்ஞானத்திற்கே பிரதிபிம்பாத்தியாசத்தின் உபாதானத்தன்மையை அங்கீகரிக்கின், முற்கூறிய உதாரணத்தில் தேவதத்தனது முகத்தின் ஞானமும் கண்ணாடியின ஞானமுமுண்டாகியும், பிரஹ்மவடிவ அதிஷ்டான ஞானத்தின் அபாவத்தால் உபாதானத்தினிருப்பால் முற்கூறிய அத்தியாசம் சம்பவிக்கின்றது.

ஆதலால் மூலாஞ்ஞானமே பிரதிபிம்பாத்தியாசத்திற்கு உபாதானமாமென்னும் பக்ஷமே நலமுடையதாம்.

## உஉஅ மூலாஞ்ஞானம் உபாதானமாம் என்னும் பக்ஷத்திற் சங்கை.

ஆனால் இப்பக்ஷத்தில் இது சங்கையாம்:—பிரஹ்மசேதனத்துள்ள மூலாஞ்ஞானத்திற்கு பிரதிபிம்பாத்தியாசத்தின் உபாதானத்தன்மையை அங்கீகரிக்கின், பிரஹ்மஞானமின்றிப் பிரதிபிம்பப் பிரமத்தின் நிவிருத்தி உண்டாதல் வேண்டும். ஏனெனின் அதிஷ்டானத்தின் யதார்த்த ஞானத்தினால் அஞ்ஞானத்தின் நிவிருத்திவாயிலாகப் பிரமத்தின் நிவிருத்தி உண்டாகின்றது. பிரதிபிம்பாத்தியாசத்தின் அதிஷ்டானம் முற்கூறிய பக்ஷத்தில் பிரஹ்மசேதனமாம். கண்ணாடியவச்சின்ன சேதனம் அல்லது முகாவச்சின்ன சேதனம் அதிஷ்டானமன்று. முகம் கண்ணாடி முதலியவற்றின் ஞானத்தால் மூலாஞ்ஞானத்தின் நிவிருத்தியை அங்கீகரிக்கின், உபாதானத்தின் நாசத்தால் முகம் கண்ணாடி முதலிய வியாவகாரிக பதார்த்தங்களின் அபாவமுண்டாதல் வேண்டும். ஆதலால் மூலாஞ்ஞானத்திற்கு உபாதானத்தன்மையை அங்கீகரிக்கின், முகம் முதலியவற்றால் பிம்பசன்னிதியின் வியோககாலத்திலும் பிரதிபிம்பாத்தியாசத்தின் நிவிருத்தி சம்பவியாது.

## உஉகூ. இச்சங்கைக்குச் சமாதானம்.

இச்சங்கைக்கு இது சமாதானமாம்:—ஆவரணசத்தி விக்ஷேபசத்தியென்னும் பேதத்தால் இரண்டம்சங்களையுடையது அஞ்ஞானமாம். பிரதிபந்தகமின்றிய அதிஷ்டான ஞானத்தினால் எல்லா அஞ்ஞானத்தின் நிவிருத்தியும் உண்டாகின்றது. பிராரப்த கர்மமாகிய பிரதிபந்தகமிருக்கின், பிரஹ்மவடிவ அதிஷ்டான ஞானமுண்டாகியும், விக்ஷேப வடிவாகிய அஞ்ஞானாம்சத்தின் நிவிருத்தி உண்டாகிறதில்லை. கடமுதலிய அநாத்ம பதார்த்தகோசர ஞானமுண்டாயின், அவற்றால் அஞ்ஞானத்தின் நிவிருத்தியோ உண்டாகிறதில்லை. ஆனால் எவ்வளவுகாலம் கடாதிகளின் ஸ்புரணமிருக்கின்றதோ, அவ்வளவுகாலம் அந்தகாரத்தினால் ஆவரி(மறை)க்கப்பட்ட வீட்டின் ஏகதேசத்தில் பிரபையின் பிரகாசத்தினால் அந்தகாரம் சுருங்குவதுபோல, அஞ்ஞான ஜந்நிய ஆவரணத்தின் சுருங்குதல் உண்டாகின்றது. அங்ஙனமே முகம் கண்ணாடி முதலி

யவற்றின் சாக்ஷாத்காரத்தால் பிரஹ்மத்தை மறைக்கும் மூலாஞ்
ஞானத்தின் நிவிர்த்தியானது உண்டாகாவிடினும், அஞ்ஞானத்
தாற்றோன்றிய பிரதிபிம்பாத்தியாச வடிவ விக்ஷேபத்திற்கு
முகம் கண்ணாடி முதலியவற்றின் ஞானத்தினால் உபாதானத்தில்
ஒடுங்குதல்வடிவ சங்காரம் உண்டாகின்றது. உபாதானத்தில்
விலயமாதலையே காரியத்தின் சூக்ஷ்ம அவஸ்தை யென்பர். இவ்வாற்
றால் அதிஷ்டான ஞானத்தின் அபாவத்தால் அஞ்ஞானத்தின்
நிவிர்த்தியின்றிப் பிரதிபிம்பாத்தியாசத்தின் பாதவடிவ நிவிர்
த்தி சம்பவியாதாயினும், முகம் கண்ணாடி முதலியவற்றின் ஞான
த்தால் பிரதிபந்தகாபாவ முண்டாக, காரியத்திற்கு உபாதானத்
தில் விலயவடிவ நிவிர்த்தி உண்டாகின்றது.

## ௨௯௦. ஏகதேசியின் கிரமமாகப் பாதத்தின் இலக்ஷணம்.

இவ்வாற்றால் சம்சாரதசையில் பிரதிபிம்பாத்தியாசத்தின்
பாதம் உண்டாகிறதில்லை யென்று ஏகதேசி யங்கீகரித்திருக்கின்
றனர். இம்மதத்தில் அபாவ நிச்சயத்தைப் பாதமென்று கூறுவ
தில்லை. ஏனெனின் "முகத்தில் கண்ணாடியிலிருத்தற்றன்மை
யில்லை, கண்ணாடியில் முகமில்லை" என்று விவரணகாரர் வித்
தியாரணிய சுவாமிகளின் மதப் போதத்தால் இருவகை அத்தியாசத்
தின் அபாவ நிச்சயம் சகல அஞ்ஞானிகளுக்கும் அநுபவ சித்த
மாம். அதன் அபாவத்தைச் சம்சாரதசையிற் கூறுதல் சம்பவி
யாது. ஆதலால் பிரம்மஞானமின்றிப் பிரதிபிம்பாத்தியாசத்தின்
பாதமில்லை யெனக்கொள்ளின், அவர் மதத்தில் கேவலம் அதிஷ்
டான சேஷத்தினைப் பாதமென்பர். பிரதிபிம்பாத்தியாசத்தின்
அபாவ நிச்சயம் முற்கூறியபடி உண்டாகியும், சம்சாரதசையில்
அஞ்ஞானத்தின் சத்தையிருத்தலால், கேவல அதிஷ்டானம் சேஷ
மன்று; ஆனால் அஞ்ஞான விசிஷ்ட அதிஷ்டான மிருக்கின்றது.
இவ்வாற்றால் பிரதிபந்தகமின்றிப் முகம் கண்ணாடி முதலியவற்றின்
சாக்ஷாத்காரத்தினால் அதிஷ்டான ஞானமின்றிப் பாதவடிவ அஞ்
ஞான நிவிர்த்தியின் அபாவமுண்டாகியும், தனது உபாதானத்தில்
காரியத்தின் விலயவடிவ சங்காரமுண்டாகின்றது. உபாதான
வடிவமாகக் காரியம் நிலைத்தலையே சூக்ஷ்மாவஸ்தை யென்பர்.

---

## ௨௩௧. அநேக நூலாசிரியர்கள் மதப்படி பாதத்தில் இலக்ஷணமும், பிரஹ்மஞானமின்றிப் பிரதி பிம்பாத்தியாசத்தினது பாதத்தின் சித்தியும்

அநேக நூலாசிரியர் மதத்தில் பிரஹ்மஞானமின்றி மூலாஞ் ஞானத்தின் நாசமின்றியும் மூலாஞ்ஞான ஜந்யப் பிரதிபிம்பாத் தியாசத்தின் பாத முண்டாகின்றது. அவர்கள் அபிப்பிராயம் இது வாம்:—மித்தியாத்துவ நிச்சயம் அல்லது அபாவநிச்சயம் பாத மெனப்படுகின்ற தென்பது சர்வ கிரந்தங்களின் நிச்சயமாம். அநேக இடங்களில் மித்தியாத்துவ நிச்சயமும் அபாவநிச்சய பதார்த்தமாகின்றது. இங்கு அதிஷ்டானமாத்திரம் சேஷ மிருக் கின்றது. அஞ்ஞானம் சேஷித் திருக்கவில்லை. இவ்வபிப்பிராயத் தால் சில நூலாசிரியர் அதிஷ்டானமாத்திரத்தின் சேஷமே பாத த்தின் சொரூபமெனக் கூறியிருக்கின்றனர். அதிஷ்டானமாத்திர த்தின் சேஷம் பாதத்தின் லக்ஷணமன்று. பாதத்திற்கு இதுவே லக்ஷணமாயின், ஸ்படிகத்தில் செம்மைப் பிரமுதலிய ஸோபா திக (உபாதியோடுகூடிய) அத்தியாச முண்டாகின்றது. அங்கு அதிஷ்டான ஞானத்திற்குப் பிந்தியகாலத்திலும் செம்பரத்தம் பூவிற்கும் ஸ்படிகத்திற்கும் பரஸ்பர சம்பந்தவடிவப் பிரதிபந்தக மிருக்கச் செம்மை அத்தியாசத்தின் நிவிருத்தி உண்டாகிறதில்லை. அங்ஙனமே வித்துவானுக்குப் பிராரப்தகாமப் பிரதிபந்தக மிருக் கச் சரீரமுதலியவற்றின் நிவிருத்தியுண்டாகிறதில்லை. ஆதலால் அஞ் ஞானகாரிய விசிஷ்ட அதிஷ்டானம் இரண்டிடங்களிலு மிருத்த லின், கேவல அதிஷ்டான சேஷத்தின் அபாவத்தால் பாத வியவ கார மில்லை. அது உண்டாதல்வேண்டும். சுவேத(வெண்மை) ஸ்படி கத்தின் சாக்ஷாத்காரத்தால் செம்மை அத்தியாசத்தின் பாத முண் டாகின்றது. பிரஹ்ம சாக்ஷாத்காரத்தால் ஜீவன்முக்த வித்துவானு க்குச் சம்சாரத்தின் பாதமுண்டாகின்றது. இவ்வாறுல விக்ஷேபத் தோடுகூடிய அதிஷ்டானத்தில் பாத வியவகாரத்தைச் சகல நூலா சிரியர்களும் எழுதியிருக்கின்றனர். ஆண்டு அத்தியஸ்த பதார்த் தத்தில் மித்தியாத்தன்மை நிச்சயம் அல்லது அபாவநிச்சயமே பாதத்தின் சொரூபமெனச் சம்பவிக்கின்றது. பிரதிபந்தகமின்றிய முகம் கண்ணாடி முதலியவற்றின் ஞானத்தால் முகத்திற பிரதிபி ம்பத்தன்மை முதலிய தர்மங்களின், அங்ஙனமே கண்ணாடியில்

பிரதிபிம்ப முதலிய தர்மிகளின் மித்தியாத்தன்மை நிச்சய முண்டாகின்றது. அங்ஙனமே அபாவ நிச்சய முண்டாகின்றது. ஆதலால் பிரஹ்ம ஞானமின்றிப் பிரதிபிம்பாத்தியாசத்தின் பாத முண்டாகிறதில்லை என்று கூறுதல் பொருத்தமுடையதன்று.

## உ௯உ. முகம் கண்ணாடி முதலிய அதிஷ்டானத்தின் ஞானம் பிரதிபிம்பாத்தியாசத்தின் நிவிருத்திக்கு ஏதுவாதல்.

அதிஷ்டான ஞானத்தினால் அத்தியாசத்தின் பாதரூப நிவிருத்தி யுண்டாதல்போல முகம கண்ணாடி முதலியவற்றின் அபரோக்ஷஞானத்தினாலும பிரதிபந்தகமின்றிய காலத்தில பிரதிபிம்பாத்தியாசத்தின் நிவிருத்தி அநுபவசித்தமாம். ஆதலால் பிரதிபந்தகாபாவத்தோடுகூடிய முகம கண்ணாடி முதலியவற்றின் ஞானமும அதிஷ்டானத்தினைப்போல அத்தியாச நிவிருத்திக்கு ஏதுவாமென்று மதிக்கத்தக்கதாம. முகம கண்ணாடி முதலியவற்றின் ஞானத்திற்குப பிரதிபிம்பாத்தியாச நிவிருத்தியின காரணத்தன்மை சமபவிக்கவும செய்கின்றது. ஏனெனின் சமான விஷயமுடைய ஞானத்தோடு அஞ்ஞானத்திற்கு விரோதமுண்டு. பின்ன விஷயமுடைய ஞானத்தோடு அஞ்ஞானத்திற்கு விரோதமின்று. ஆதலால் முகம கண்ணாடி முதலிய ஞானத்திற்கு முகம கண்ணாடியாதி அவச்சின்ன சேதனத்துள்ள அவஸ்தாஞ்ஞானத்தோடுதான் விரோதமிருக்கின்றது. பிரஹ்மத்தை ஆச்சாதி(மறை)க்கும்மூலாஞ்ஞானத்தோடு பிரஹ்மஞானமொழிந்த மற்றைய ஞானங்களுக்கு விரோதமில்லை. ஆதலால பிரஹ்மஞான விரோதியாகிய மூலாஞ்ஞானத்தோடு கண்ணாடிமுதலிய ஞானத்திற்கு விரோதமின்மையால், பிரதிபிம்பாத்தியாசத்தின் உபாதானமாகிய மூலாஞ்ஞானத்தின் நிவிருத்தியானது இல்லையாயினும், அஞ்ஞான நிவிருத்தியின்றியும விரோதிஞானத்தால்பூர்வஞானம நிவிருத்தியாதல் அநுபவசித்தமாம்.

## உ௯௩. முகம் கண்ணாடி முதலியவற்றின் ஞானத்திற்கு மூலாஞ்ஞானத்தின் நிவிருத்தியின்றிப் பிரதிபிம்பாத்தியாசத்தைக் கெடுக்குந்தன்மை.

எங்கு இரஜ்ஜுவின் அஞ்ஞானத்தினால் சாப்பப் பிரமத்திற்குப்பின் தண்டப்பிரம முண்டாகின்றதோ, அங்குத் தண்டஞான

த்திஞல் சர்ப்பத்தின் உபாதானமாகிய அவஸ்தாஞ்ஞானத்தின் நிவிருத்தியோ உண்டாகிறதில்லை. எனெனின் அதிஷ்டானத்தின் தத்துவஞானத்திஞலேயே அஞ்ஞானத்தின் நிவிருத்தி உண்டாகின்றது. ஆதலால இரஜ்ஜு ஞானமின்றி இரஜ்ஜு சேதனத்திருக்கும் அஞ்ஞானத்திற்கு நிவிருத்தி சம்பவிக்கிறதில்லை. தண்டப் பிரமத்திஞலே இரஜ்ஜு சேதனத்திருக்கும் அஞ்ஞானத்தின் நிவிருத்தி உண்டாகுமாயின, உபாதானத்தின் அபாவத்தால் தண்டாத்தியாசத்தின் சொரூபமே சித்தியாது. ஆதலால் தண்ட ஞானத்திஞல் அஞ்ஞான நிவிருத்தியின்றி எங்ஙனம் சர்ப்பாத்தியாசத்தின் நிவிருத்தி யுண்டாகின்றதோ, அங்ஙனமே "முகத்திற் பிரதிபிம்பத்தன்மையில்லை, கண்ணுடியில் முகமில்லை" எனறிவ்வாறு முகம் கண்ணுடிகளின ஞானம் பிரதிபிம்பாத்தியாசத்திற்கு விரோதியாயிருத்தலின், அதனுலும பிரதிபிம்பாத்தியாசத்தின நிவிருத்திஉண்டாகின்றது. பிரதிபிம்பாத்தியாசத்தின உபாதானமாகிய மூலாஞ்ஞானத்திற்கு முற்கூறிய ஞானத்திஞல நிவிருத்தி சம்பவிக்கிறதில்லை. முற்கூறிய ஞானத்திஞல மூலாஞ்ஞானத்தின் நிவிருத்தியைக் கூறின, மூலாஞ்ஞானத்தின் காரியமாகிய முகம கண்ணுடிமுதலிய வியாவகாரிக பதார்த்தங்களும நஷ்டமாதலவேண்டுமே. ஆதலால் முகம கண்ணுடி முதலியவற்றின் ஞானத்திற்கு விரோதியான விஷயத்தையுடையதா யிருத்தலின, அஞ்ஞான நிவிருத்தியின்றியும பிரதிபிம்பாத்தியாசத்தைக் கெடுக்குந்தன்மை யிருக்கின்றது. பாவாபாவங்களுக்குப் பரஸ்பர விரோதமுண்டு. ஆதலால் அவற்றின் ஞானமும ஒன்றற்கொன்று விரோதியாம். யாண்டு ஸ்தாணுவில் ஸ்தாணுத்தன்மை ஞானத்திற்குப்பின் புருஷத்தன்மைப் பிரமமுண்டாகின்றதோ, ஆண்டு "ஸ்தாணுத்தன்மையில்லை" யென்னும் விரோதியாகிய பிரமஞானத்திஞல் முன் பிரமஞானத்தின் நிவிருத்தி உண்டாகின்றது. கடமுதலிய பூதலத்தில் கடாபாவத்தின் பிரமஞானத்திற்குப்பின் கடத்தோடு இந்திரியத்தின் சையோக முண்டாகக் "கடமுடையது பூதலம்" என்னும விரோதியாகிய பிரமஞானத்திஞல பூர்வப்பிரமஞானத்தின் நிவிருத்திஉண்டாகின்றது. யாண்டு இரஜ்ஜுவில சர்ப்பப் பிரமத்திற்குப்பின் தண்டப் பிரமத்திஞல சர்ப்பப பிரமத்தின் நிவிருத்தி உண்டாகின்றதோ, ஆண்டுத் தண்டப்பிரமத்திஞல சர்ப்பப்பிரமத்தின் நிவிருத்தி யுண்டாகின்றது. இவ்வாற்றுற் சிலவிடத்துப் பிரமஞானத்திஞல் பிரமா

ஞானத்தின் நிவிருத்தியும், சிலவிடத்துப் பிரமாஞானத்தினால் பிரமஞானத்தின் நிவிருத்தியும் சிலவிடத்துப் பிரமஞானத்தினால் பிரமஞானத்தின் நிவிருத்தியும் உண்டாகின்றன. யாண்டுப் பிரமத்தினால் பிரமையின் நிவிருத்தியும் பிரமத்தினால் பிரமத்தின் நிவிருத்தியும் உண்டாகின்றனவோ, ஆண்டுப் பிரமத்தின் உபாதானமாகிய அஞ்ஞானத்தின் இருப்பிலேயே பூர்வஞானத்தின் நிவிருத்தி உண்டாகின்றது. யாண்டுப் பிரமாஞானத்தினால் பிரமத்தின் நிவிருத்தி உண்டாகின்றதோ, ஆண்டு அதிஷ்டானத்தின் யதார்த்தஞானம் பிரமையாயிருத்தலின், அஞ்ஞானத்தோடு பிரமத்தின் நிவிருத்தி உண்டாகின்றது. இவ்வாற்றால் அதிஷ்டானஞானமின்றி மூலாஞ்ஞானத்தின் நிவிருத்தியுமின்றி முகம் கண்ணாடி முதலியவற்றின் ஞானத்தால் பிரதிபிம்பாத்தியாசத்தின் நிவிருத்தி சம்பவிக்கின்றது.

விரோதிஞானத்தினால் பூர்வஞானத்தின் நிவிருத்தி உண்டாகின்றதென்பது நியமம். அதிஷ்டானத்தின் யதார்த்த ஞானத்தினாலேயே பூர்வப் பிரமத்தின் நிவிருத்தி யுண்டாமென்னும் நியமமில்லை. ஆனால் அதிஷ்டானத்தின் யதார்த்த ஞானமின்றி அஞ்ஞானத்தின் நிவிருத்தி யுண்டாகிறதில்லை. ஆகலால் அஞ்ஞானத்தின் நிவிருத்தி கேவல அதிஷ்டானத்தின் விசேஷப் பிரமையினாலுண்டாகின்றது என்பது நியமமாம். விவரணகாரர் மதத்தில் முகத்தில் பிரதிபிம்பத்தன்மை கண்ணாடியிலிருத்தற்றன்மை எதிர்முகத்தன்மை என்னும் அத்தியாசம் உண்டாகின்றது. அதற்கு விரோதி "முகத்தில் பிரதிபிம்பத்தன்மை முதலியன இல்லை" என்னும் ஞானமாம். வித்தியாரணியசுவாமிகளின் மதத்தில் "கண்ணாடியில் முக" மென்னும் அத்தியாச முண்டாகின்றது. "கண்ணாடியில் முகமில்லை" என்னும் ஞானம் அதற்கு விரோதியாம். நையாயிகமதத்திலும் பாவாபாவங்களுக்கு ஒன்றற்கொன்று விரோதம் அங்கீகரித்து, அவற்றின் ஞானங்களுக்கும் விஷய விரோதத்தால் விரோதம் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. இவ்வாற்றால் மூலாஞ்ஞானத்திற்குப் பிரதிபிம்பாத்தியாசத்தின் உபாதானத்தன்மையை அங்கீகரிக்கின், பிம்ப உபாதியின் சந்நிதானவடிவப் பிரதிபந்தகமின்றிய காலத்தில் முகம் கண்ணாடி முதலியவற்றின் ஞானத்தால் அஞ்ஞான நிவிருத்தியின்றியும் முற்கூறிய அத்தியாசத்தின் நிவிருத்தி சம்பவிக்கின்றது.

## உகூச முற்கூறிய பக்ஷத்தில் பத்மபாதாசாரியராற் செய்யப்பட்ட பஞ்சபாதிகையின்படி தூலாஞ்ஞானத்திற்கு அத்தியாசத்தின் ஏதுத்தன்மையைக் கூறும் வாதியின் சங்கை.

ஆனால் இப்பக்ஷத்தில் இது சங்கையாம்:—சாரீரகபாஷியத்திற்குப் பஞ்சபாதிகை என்னும் உரை பத்மபாதாசாரியராற் செய்யப்பட்டிருக்கின்றது. அதற்குப் பாஷியகாரரது வசனத்தினால் சர்வஞ்ஞத்தன்மை உண்டாயிருக்கின்றது. அந்தச் சர்வஞ்ஞ வசனமாகிய பஞ்சபாதிகையில் இது எழுதப்பட்டிருக்கின்றது:—யாண்டுச் சர்ப்பம் இரஜதமுதலிய பிரமமுண்டாகின்றதோ, ஆண்டு இரஜ்ஜு சுத்திகளின் ஞானத்தினால் சர்ப்ப மிரஜத முதலியவற்றின் உபாதானமாகிய அஞ்ஞானத்தின் நிவிருத்தி உண்டாகின்றது. அஞ்ஞானத்தின் நிவிருத்தியினால சர்ப்ப மிரஜதமுதலிய அத்தியாசத்தின் நிவிருத்தி உண்டாகின்றது. இரஜ்ஜு சுத்தி முதலியவற்றின் ஞானத்தினைச் சர்ப்ப மிரஜத முதலியவற்றின் நிவிருத்தியில் சாக்ஷாத் காரணமெனக் கொள்ளின, உபாதானத்தின் நாசத்தால் பாவகாரியத்தின நாசமுண்டாகும என்னும நியமத்திற்குக் கேடுண்டாகும். அதிஷ்டான ஞானத்தினால் அஞ்ஞானத்திற்கு நாசமுண்டாகின்றது. அஞ்ஞானத்தின நாசத்தால் அத்தியாசத்திற்கு நாசமுண்டாகின்றது என்று இவ்வாறு அங்கீகரிக்கின், முற்கூறிய நியமத்திற்கு வியபிசாரமுண்டாகிறதில்லை. அந்தகாரத்தினைப்போல அஞ்ஞானமும பாவரூபமாயினும், அஞ்ஞானம் அநாதியாயிருத்தலின் காரியமன்று. ஆதலால் அஞ்ஞானத்தின் நிவிருத்தியோ அதிஷ்டான ஞானத்தினாலும சம்பவிக்கின்றது. ஆனால் பாவகாரியமாகிய சர்ப்பமுதலிய அத்தியாசத்தின் நிவிருத்தி உபாதானத்தின் நாசமின்றி உண்டாகிறதில்லை. கடத்துவம்சத்தின் நிவிருத்தியும் வேதாந்தமதத்திலுண்டாகின்றது. அபாவ பதார்த்தங்களுக்கு உபாதானகாரண மிருப்பதில்லை. ஆதலால் உபாதானத்தின நாசமின்றியும கடத்துவம்சவடிவ காரியத்தின் நாசமுண்டாம. ஆனால கடத்துவம்சம பாவமன்று. ஆதலால் உபாதான நாசத்திற்குப பாவகாரியத்தின் நாசத்தில் நியதமாக ஏதுவாகுந் தன்மையைப பாதுகாத்தற்குப் பஞ்சபாதிகையில் அஞ்ஞான நிவிருத்தி வாயிலாக அதிஷ்டான ஞானம அத்தியாச

நிவிருத்திக் கேதுவாதல் கூறப்பட்டிருக்கிறது. அஞ்ஞான நிவிருத்தியை விட்டு அதிஷ்டானஞானம அத்தியாச நிவிருத்திக்குச் சாக்ஷாத் ஏதுவாதல் நிஷேதஞ் செய்யப்பட்டிருக்கின்றது. மூலாஞ்ஞானத்திற்குப் பிரதிபிம்பாத்தியாசத்தின உபாதானத்தின் மேன்மையை அங்கீகரிக்கின், முற்கூறியபடி அஞ்ஞான நிவிருத்தியின்றியே பிரதிபிம்பாத்தியாசத்தின் நிவிருத்தி அங்கீகரிக்க வேண்டியதாகின்றது. ஆதலால் பஞ்சபாதிகை வசனத்திற்கு விரோதமுண்டாகும். அவஸ்தாஞ்ஞானத்தினை முற்கூறிய அத்தியாசத்திற்கு உபாதானமாகக்கொள்ளின் விரோதமில்லை. ஏனெனின் அவஸ்தாஞ்ஞானத்தினை முற்கூறிய அத்தியாசத்திற்குஉபாதானமாகக் கூறின், அவர்கள் மதத்தில் விவரணகாரர் மதப்படி முகாவச்சின்ன சேதனத்திருக்கும அஞ்ஞானம் தாமாத்தியாசத்திற்கு உபாதானமெனச் சித்திக்கின்றது. வித்தியாரணிய சுவாமிகளின மதப்படி கண்ணாடி அவச்சின்ன சேதனத்திருக்கும அஞ்ஞானம் தாமி அத்தியாசத்திற்கு ஏதுவெனச் சித்திக்கின்றது. பிரதிபந்தகமின்றிய காலத்தில முகஞானத்தினால் அல்லது கண்ணாடிஞானத்தினால் அவ்வஞ்ஞானங்களுக்குக் கிரமமாக நிவிருத்தி உண்டாகின்றது. அஞ்ஞான நிவிருத்திவாயிலாகப பிரதிபிம்பாத்தியாசத்தின் நிவிருத்தி உண்டாகின்றது. ஆதலால் அவஸ்தாஞ்ஞானத்திற்குப் பிரதிபிம்பாத்தியாசத்தின் உபாதானத் தனமையை அங்கீகரித்தல் பஞ்சபாதிகை வசனத்திற்கு அநுகூலமாம. மூலாஞ்ஞானத்திற்கு முற்கூறிய அத்தியாசத்தின் உபாதானத்தன்மையைக் கூறுதல் பஞ்சபாதிகை வசனத்திற்கு விருத்தமாம. இவ்வாற்றால் முற்கூறிய அத்தியாசத்திற்கு ஏதுவாதலை அவஸ்தாஞ்ஞானத்திற்கு அங்கீகரிக்கின், அதற்கு இது பூர்வபக்ஷமாம.

## ௨௩௫. முற்கூறிய சங்கை பொருந்தாமை.

ஆனால் அவஸ்தாஞ்ஞானத்திற்கு ஏதுத்தன்மையை அங்கீகரிக்கினும், பஞ்சபாதிகை வசனத்தோடுள்ள விரோதம் பரிகாரமாகாது. அது வருமாறு:—யாண்டுதேவதத்தனது முகத்தின் அல்லது தேவதத்தமுகம பிரிந்த கண்ணாடியின் சாக்ஷாத்காரம யஞ்ஞதத்தனுக்குண்டாய், அடுத்தகணத்தில் தேவதத்தனது முகத்திற்குத் தாபபணத்தோடு சம்பந்த முண்டாகின்றதோ, ஆண்டும் பிரதிபிம்பாத்தியாசம உண்டாகின்றது.

மூலாஞ்ஞானத்திற்கு உபாதானத்தன்மையை அங்கீகரிக்கின், முகம் கண்ணாடிமுதலிய சாக்ஷாத்காரத்தினால் அதன் நிவிருத்தி உண்டாகிறதில்லை. முகஞானத்தால் முகாவச்சின்ன சேதனத்துள்ள அஞ்ஞானத்தின் நிவிருத்தியும், அங்ஙனமே கண்ணாடி ஞானத்தினால் கண்ணாடி யவச்சின்ன சேதனத்துள்ள அஞ்ஞானத்தின நிவிருத்தியும அவசிய முண்டாகின்றன. முக கண்ணாடிகளின் சாக்ஷாத்காரத்திற்குப் பிந்தியகாலத்திலும முக கண்ணாடிகளின சந்நிதானத்தால பிரதிபிம்பாத்தியாச முண்டாகின்றது. ஆதலால் முக கண்ணாடிகளின் சாக்ஷாத்காரத்தால் அவஸ்தாஞ்ஞானத்தின் ஆவரண சக்தி விசிஷ்ட அஞ்ஞானாம்சத்தின் நாசம் உண்டாகாமையால், விக்ஷேப வடிவத்தால் அறியப்படாத அதிஷ்டானத்திலும அத்தியாசம சம்பவிக்கின்றது. ஆண்டுக் கண்ணாடிக்கும முகத்திற்கும் பரஸ்பரவியோகமுண்டாக, பிரதிபந்தகாபாவத்தோடுகூடிய அதிஷ்டான ஞானத்தினால அஞ்ஞான நிவிருத்திவாயிலாக அத்தியாசத்தின் நிவிருத்தி கூறுதல அவஸ்தாஞ்ஞானவாதிக்கும் சம்பவிக்கிறதில்லை. ஆனால் ஞானத்தினால் சாக்ஷாத் அத்தியாசத்தின் நிவிருத்திகூறுதலே சம்பவிக்கின்றது. ஏனெனின் இரஜ்ஜுஞானத்தினால் சுக்தியின் அஞ்ஞானத்தினது நாசம் உண்டாகிறதில்லை. ஆதலால் ஞானத்தினால அஞ்ஞானமாத்திரத்தின் நாசமுண்டாகிறதில்லை. ஆனால சமானவிஷயமுள்ள அஞ்ஞானத்திற்கு ஞானத்தினால நாசமுண்டாகின்றது. ஞானத்தினால எதன பிரகாசமுண்டாகின்றதோ, அது ஞானத்தின் விஷய மெனப்படுகின்றது. அஞ்ஞானத்தினால் ஆவரிக்கப்படுவது யாதோ, அது அஞ்ஞானத்தின் விஷய மெனப்படுகின்றது. யஞ்ஞதத்தனுக்கு அத்தியாசத்திற்கு முற்காலத்தில் உண்டாகிய முக கண்ணாடிகளின் சாக்ஷாத்காரம யாதோ, அதனால ஆவரணத்தின் நாசம உண்டாகுதலால் அஞ்ஞானத்தினாலாகிய ஆவரண வடிவ அஞ்ஞானத்தினது விஷயத்தின அபாவம முக கண்ணாடிகளி லிருக்கின்றது. ஆதலால் ஞான அஞ்ஞானங்களின் விரோதத்தைச சம்பாதிக்கும சமானவிஷயத்தன்மையின் பங்கத்தால, முற்கூறியவிடத்து அஞ்ஞான நிவிருத்தியின்றி அத்தியாசமாத்திரத்தின் நிவிருத்தி அவஸ்தாஞ்ஞானவாதிக்கும அங்கீகரிக்க வேண்டியதாகின்றது. இவ்வாற்றால் அவஸ்தாஞ்ஞானத்திற்கு முற்கூறிய அத்தியாசத

தின் உபாதானத்தன்மையை அங்கீகரிக்கினும் பஞ்சபாதிகை வசனத்தோடுள்ள விரோதம் பரிகாரமாகிறதில்லை.

## உ௬௯. மூலாஞ்ஞானத்திற்கு முற்கூறிய அத்தியாசத்தினது ஏதுத்தன்மையை யங்கீகரிக்கின் பஞ்சபாதிகையின் வசனத்தோடு விரோதமும், மூலாஞ்ஞானத்திற்கு ஏதுவாந் தன்மையை அங்கீகரிக்கின் அவிரோதமும் உளதாதல்.

அன்றியும சூக்ஷ்மமாக விசாரிக்கின், அவைதாஞ்ஞானத்திற்கு முற்கூறிய அத்தியாசத்தின் ஏதுத்தன்மையை அங்கீகரித்தலே பஞ்சபாதிகை வசனத்திற்கு விரோதமாம. மூலாஞ்ஞானத்திற்கு ஏதுத்தன்மையை அங்கீகரித்தல விரோதமன்று. அது வருமாறு:—ஞானத்தால் கேவல அஞ்ஞானத்தின் நிவிருத்தி யுண்டாகின்றது. அஞ்ஞான வடிவ உபாதானத்தின் நிவிருத்தியினால் அஞ்ஞான காரியத்தின நிவிருத்தி உண்டாகின்றது. இவ்வாறு பஞ்சபாதிகைவசன மிருக்கின்றது. அதற்கு இது அபிப்பிராயமன்று. பாவகாரியத்தின நாசத்தில உபாதானத்தின் நாசம் நியத ஏதுவாயிருத்தலின், ஞானத்தினால் அத்தியாச நிவிருத்தி சமபவிக்கிறதில்லை. ஏனெனின உபாதானத்தின் நாசமின்றிப பாவகாரியத்தின் நாசமுண்டாகிற தில்லையெனின், பாவகாரியத்தின் நாசத்தில் உபாதானத்தின் நாசம நியத ஏதுவாம். பாவகாரியம் துவியணுகமாம. அதன் உபாதானம் பரமாணுக்களாம. அவற்றிற்கு நித்தியத்தன்மை யிருத்தலால் நாசம சம்பவியாது. ஆதலால் பரமாணு சையோகத்தின் நாசத்தால் துவியணுகத்தின் நாசமுண்டாகின்றது. ஆண்டுப் பாவகாரியத்தின் நாசத்தில உபாதான நாசத்தின் ஏதுத்தன்மைக்கு வியபிசாரமிருக்கின்றது. ஆதலாலபாவகாரியத்தின் நாசத்தில் உபாதானநாசம ஏதுவாதலாகிய நியமத்தைப் பாதுகாக்கும அபிப்பிராயத்தினால் பஞ்சபாதிகை கூறியதன்று. கேவல ஆக்கிரகத்தினால பஞ்சபாதிகையின் வசனத்திற்கு முற்கூறிய நியமத்தைப் பாதுகாத்தலில் அபிப்பிராயமெனக்கூறின், தண்டப் பிரமத்தினால் சாபபாத்தியாசத்தின் நிவிருத்தி உண்டாகாது. நையாயிகமதத்திலும் துவியணுகத்திற்கு வேறாகிய திரவியத்தின் நாசத்தில உபாதானத்தின் நாசத்தினை ஏதுவெனக் கொண்டிருக்

கின்றனர். சகல பாவகாரியங்களின் நாசத்தில் உபாதான நாசத்தை ஏதுவாகக்கூறின், பரமாணுவும் மனமும நித்தியமாம்; அவற்றிற்கு நாசம் சம்பவியாமையால், அவற்றின் கிரியைக்கும் நாசமுண்டாகாது. அங்ஙனமே நித்தியமான ஆத்மாவின் ஞான முதலிய குணங்களுக்கும நித்தியமாகிய ஆகாயத்தின் சப்த முதலிய குணங்களுக்கும நாசமுண்டாகாது. ஆதலால பாவகாரியங்களின் நாசத்தில் உபாதானத்தின் நாசம் நியத ஏதுவாமென்று கூறுதல் அசங்கதமாம். ஆனால் சிலவிடங்களில ஆசிரயத்தின் நாசமுண்டாகக் காரியத்தின் ஸ்திதி யிருக்கிறதில்லை. ஆண்டு உபாதானத்தின் நாசமும் காரிய நாசத்திற் கேதுவாம். அங்ஙனமாயினும் காரிய நாசத்தில் உபாதானத்தின் நாசம நியத ஏதுவன்று. உபாதானத்தின் இருப்பில் அந்நிய காரணத்தினாலும காரியத்தின் நாசமுண்டாகின்றது. இவ்வாற்றால முற்கூறிய நியமசம்ரக்ஷணையின அபிப்பிராயத்தால் பஞ்சபாதிகை கூறியதன்று. ஆனால் அதிஷ்டான ஞானத்தினால் அத்தியாசத்தின் நிவிருத்தி உண்டாகுமிடத்து, அதிஷ்டான ஞானத்திற்கு அத்தியாச நிவிருத்தியில காரணத்தன்மை யில்லை. அதிஷ்டான ஞானமோ அஞ்ஞான நிவிருத்திக்குக் காரணமாம. அஞ்ஞான நிவிருத்தி அத்தியாச நிவிருத்திக்குக் காரணமாம. எங்ஙனம் குலாலன்பிதா கடத்தில் பிறிதோராற்றாற் பெறப்பட்டவனாயிருத்தலின் காரணமாகானோ, அங்ஙனமே அத்தியாச நிவிருத்தியில் அதிஷ்டானத்தின் ஞானம பிறிதோராற்றாற் பெறப்படுவதாயிருத்தலின் காரணமன்று. இவ்வாற்றால் அதிஷ்டான ஞானத்தினால் அத்தியாசத்தின் நிவிருத்தி உண்டாகுமிடத்து, ஞானத்தினால் அஞ்ஞான மாத்திரத்தின் நிவிருத்தி உண்டாகின்றது. அத்தியாசத்தின் நிவிருத்தி உபாதானமாகிய அஞ்ஞானத்தின் நாசத்தால் உண்டாகின்றது. இது பஞ்சபாதிகை வசனத்தின் அபிப்பிராயமாம். எங்கும் அத்தியாசத்தின நிவிருத்தியில் அஞ்ஞான நிவிருத்திக்கு ஏதுத்தன்மை யிருக்கின்றது என்னும அபிப்பிராயத்தால் பஞ்சபாதிகை கூறியுளதேல், தண்டப்பிரமத்தினால் அஞ்ஞான நிவிருத்தியின்மையால் சர்ப்பப்பிரமத்தின் நிவிருத்தி உண்டாகலாகாது. ஆதலால் அதிஷ்டானத்தின யதார்த்த ஞானத்தினால் அத்தியாச நிவிருத்தி உண்டாகின்றது. ஆண்டு அஞ்ஞானத்தின் நிவிருத்தியே அத்தியாச நிவிருத்திக்கு ஏதுவாமென்னும் நியமம் பஞ்சபாதிகை நூலிற் கருதப்பட்டதாம். அவஸ்தாஞ்ஞானத்திற்குப்

பிரதிபிம்பாத்தியாசத்தின் ஏதுத்தன்மையை அங்கீகரிக்கின், அவர் மதத்தில் முகம் கண்ணாடி முதலியவற்றின் ஞானமே அதிஷ்டானத்தின் ஞானமாம். அதனால் அஞ்ஞான நிவிருத்தி வாயிலாக அத்தியாசத்தின் நிவிருத்தியை அங்கீகரித்தல். பஞ்சபாதிகையின் அநுசாரமாம். யஞ்ஞதத்தனுக்குப் பூர்வஞானத்தால் ஆவரண நாசஸ்தலத்தில் தேவதத்தனது முகத்தின் உபாதி சந்நிதிப்பட்ட பிரதிபிம்பாத்தியாசமுண்டாகின்றது. உபாதி பிரிந்தகாலத்தில் அதிஷ்டான ஞானத்தினால் அத்தியாசம் நிவிருத்தியாகின்றது. ஆண்டு அஞ்ஞான நிவிருத்தி வாயிலாக அத்தியாசத்தின் நிவிருத்தி சம்பவிக்கிறதில்லை. ஆனால் அதிஷ்டான ஞானத்தினால் சாக்ஷாத் அத்தியாசத்தின் நிவிருத்தி உண்டாகின்றது. இதனால் பஞ்சபாதிகையோடு விருத்தமாம். மூலாஞ்ஞானத்திற்குப் பிரதிபிம்பாத்தியாசத்தின் உபாதானத்தன்மையை அங்கீகரிக்கின், முகம் கண்ணாடி முதலிய ஞானத்தால் பிரதிபிம்பாத்தியாசத்தின் நிவிருத்தி உண்டாகும். ஆண்டு முகம் கண்ணாடி முதலியவற்றிற்கு இப்பக்ஷத்தில் அதிஷ்டானத்தன்மை யின்மையால், அதிஷ்டான ஞான ஜந்ய அத்தியாசத்தின் நிவிருத்தியில்லை. ஆனால் விரோதி விஷயத்தின் ஞானத்திற்கு விரோதியாயிருத்தலின் முகம் கண்ணாடி முதலியவற்றின் ஞானத்திற்கு அத்தியாசத்தை நிவர்த்திக்குந்தன்மையுண்டு. பஞ்சபாதிகையில் அதிஷ்டான ஜந்ய அத்தியாசத்தின் நிவிருத்தியே அஞ்ஞான நிவிருத்தி வாயிலாகக் கருதப்பட்டதாம். அதிஷ்டான ஞானமின்றி வேறுவகையால் அத்தியாசம் நிவிருத்தியாதலில் அஞ்ஞான நிவிருத்திக்கு வாயிற்றன்மை கருதப்படவில்லை. இவ்வாற்றால் மூலாஞ்ஞானத்திற்குப் பிரதிபிம்பாத்தியாசத்தின் உபாதானத்தன்மையை அங்கீகரிக்கின், முகம் கண்ணாடி முதலியவற்றின் ஞான ஜந்ய அத்தியாசத்தின் நிவிருத்தி அதிஷ்டான ஞான ஜந்யமன்று. அவஸ்தாஞ்ஞானத்தை முற்கூறிய அத்தியாசத்திற்கு உபாதானமெனக் கொள்ளின், முகம் கண்ணாடி முதலியவற்றின் ஞான ஜந்ய அத்தியாசத்தின் நிவிருத்தி அதிஷ்டான ஞான ஜந்யமாம். அதிஷ்டானத்தினால் அத்தியாசத்தின் நிவிருத்தி உண்டாயின், அது அஞ்ஞான நிவிருத்தி வாயிலாகவே பஞ்சபாதிகையிற் கருதப்பட்டதாம். முன் அறியப்பட்ட அதிஷ்டானத்தில் அத்தியாசமுண்டாய நிவிருத்தி உண்டாயின், ஆண்டு முற்கூறியபடி அஞ்ஞான நிவிருத்தி வாயிலாக அத்தியாசத்தின் நிவிரு

த்தி ஸம்பவிக்கிறதில்லை. ஆதலால் அவஸ்தாஜ்ஞானத்திற்குப் பிரதிபிம்பாத்தியாஸத்தின் உபாதானத்தன்மையை அங்கீகரித்தலே பஞ்சபாதிகை வசனத்திற்கு விரோதமாம்; மூலாஜ்ஞானத்திற்கு முற்கூறிய அத்தியாஸத்தின் உபாதானத்தன்மையை அங்கீகரித்தல் விரோதமில்லை.

## ௨௯௭. பிரதிபிம்பாத்தியாஸத்தின் வியாவகாரிகத்தன்மை பிராதிபாஸிகத்தன்மைகளின் விசாரபூர்வகமான சொப்பனாத்தியாஸத்தினது உபாதானவிசாரத்தின் பிரதிஜ்ஞை

இவ்வாற்றால் ஆகாயமுதலிய பிரபஞ்சத்தைப்போல மூலாஜ்ஞான ஜந்நியமாம் பிரதிபிம்பாத்தியாஸம். ஆனால் ஏகதேசியின் கிரமப்படி பிரஹ்மஜ்ஞானமின்றி அதன் பாதவடிவ நிவிருத்தி உண்டாகாதிருத்தலின், பிரதிபிம்பாத்தியாஸத்தில் வியாவகாரிகத்தன்மையைச் சங்கை உண்டாகின்றது. அங்ஙனமாயினும் பிம்ப உபாதியின் ஸம்பந்த வடிவ * ஆகந்துக தோஷ ஜந்நியமாம்; ஆதலால் பிராதிபாஸிகமாம். ஆகாயமுதலிய பிரபஞ்சத்திற்குஅத்தியாஸமுள்ளது. அவை அவித்தைமாத்திரத்தால் தோன்றியனவாம்; ஆதலால் வியாவகாரிகமாம். பின்னர் முற்கூறியபடியே அதிஷ்டானஞானமின்றி விரோதிஞானத்தினால் பாதவடிவ நிவிருத்தியின் ஸம்பவமிருத்தலின், ஸம்ஸாரதசையில் பாதிக்கப்படும் தன்மை வடிவ பிராதிபாஸிகத்தன்மையும் ஸம்பவிக்கின்றது. எங்ஙனம் பிரதிபிம்பாத்தியாஸத்தில் மதபேதத்தால் அவஸ்தாஜ்ஞானமும் மூலாஜ்ஞானமும் உபாதானமென்று கூறப்பட்டனவோ, அங்ஙனமே சொப்பனாத்தியாஸமும் சில மதத்தில் அவஸ்தாஜ்ஞான ஜந்நியமும் வேறுமதத்தில் மூலாஜ்ஞான ஜந்நியமுமாம்.

## ௨௯௮—௨௱௭. சொப்பனத்தில் விசாரம்.

## ௨௯௮. மூலாஜ்ஞானம் சொப்பனத்திற்கு உபாதானமாதலின் கிரமம்.

அவஸ்தாஜ்ஞானத்திற்குச் சொப்பனத்தின் உபாதானத்தன்மையை இவ்வாறு கூறுகின்றார்:—அஜ்ஞானத்தின் அவஸ்தாவிசே

* ஆகந்துகம்—செயற்கை, போக்குவரத்துடையது, ஒன்றன் தருமம் மற்றொன்றிலேறுதல்.

ஷம நித்திரையாம். ஏனெனின் ஆவரண விக்ஷேப சக்தியோடு கூடியதன்மை அந்நித்திரா லக்ஷணமாம். சொப்பனகாலத்தில ஜாக்கிர திருஷ்டா திருசியங்களின் ஆவரணம் அநுபவசித்தமாம். தேவதத்தனென்னும் பெயருள்ள பிராமணஜாதியான ஜாக்கிர காலத்திலபிமானப்பட்டவன் முதலியவைகளை மறந்திருப்பதினால் தான் சிராத்த முதலியவைகளைச் செய்வது போருக்குப் போதல் முதலிய ராம பத்தினியோடு கூடித் தூங்குகின்றவனும், தன்னை பருந்துத்தனென்னும் பெயர், க்ஷத்திரியஜாதி, பாலிப்பவனென்னப்பவதானிருந்து கூடியவனுய் தன்னவன் பிராமணனென்பதையும் மறந்ததினுலும் பிடிக்கப்பட்டு, தனதுயிர்தப்ப ராஜனடியில் அழுது கொண்டிருக்க அநுபவிக்கின்றான். ஆகையால் ஜாக்கிரகாலத்தின் வியாவகாரிக திருஷ்டா திருசியங்களுக்கு மூலாஞ்ஞானத்தினால் ஆவரணத்தைக் கூறின், ஜாக்கிர காலத்திலும் அதேபோல் ஆவரணமுண்டாதல் வேண்டும். வேறு மூல அவரணத்தைச் செய்வதாகக் காணப்படுகிறதில்லை. ஆதலால் சொப்பன காலத்தில் நித்திரையே ஆவரணஞ் செய்கின்றது. சொப்பனத்தின் பதார்த்த வடிவ பரிணாமமும் நித்திரையினாலேயாகின்றது. இவ்வாறுள்ள ஆவரண விக்ஷேப சக்தி விசிஷ்ட நித்திரையாம் ஆதலால் அஞ்ஞான லக்ஷணம் நித்திரையிலிருத்தலால் அஞ்ஞானத்தின் அவஸ்தாவிசேஷம் நித்திரையாம். ஆனால் அவஸ்தாஞ்ஞானம் ஏற்றியாம். ஏனெனின் மூலாஞ்ஞானமே அந்தக்கரண வடிவ விசிஷ்டமாயச் சொற்ப உபாதி அமைசினின்ற சேதனத்தை அவரணஞ் செய்கின்றது. அதனை அவஸ்தாஞ்ஞானமென்றும், தூலாஞ்ஞானமென்றும் கூறுவர். இவ்வாறுள்ள அந்தக்கரண வடிவ விசிஷ்டமாயிருத்தலின் அவஸ்தாஞ்ஞானம் ஸாதியாம். அதன் உற்பத்தியில நிமித்தகாரணம் ஜாக்கிர போகத்திற்கு ஏதுவான கர்மங்களின் உபரமமாம். மூலாஞ்ஞானத்தின் ஆகார விசேஷமாகவே யிருத்தலின் மூலாஞ்ஞானம் உபாதான காரணமாம். நித்திரை வடிவ அவஸ்தாஞ்ஞானத்தினால் ஆவரிக்கப்பட்ட வியாவகாரிக திருஷ்டாவினிடத்துப் பிராதிபாஸிக திருஷ்டா அத்தியஸ்தமாம். அந்த நித்திரையினால் ஆவரிக்கப்பட்ட வியாவகாரிக திருசியத்தில் பிராதிபாஸிக திருசியம் அத்தியஸ்தமாம். ஆதலால் பிராதிபாஸிக திருஷ்டாவின் அதிஷ்டானம் வியாவகாரிக திருஷ்டாவாம். பிராதிபாஸிக திருசியத்தின் அதிஷ்டானம் வியாவகாரிக திருசியமாம். கர்மபோகத்திற்கெதிர்முகமா

யின் அப்போது ஜாக்கிரமுண்டாகின்றது. அக்காலத்தில் பிரஹ்ம ஞான மின்றிய புருஷர்களுக்கும வியாவகாரிக திருஷ்டா திருசி யங்களின் ஞானமே அதிஷ்டானத்தின் ஞானமாம. அதனுல் அவ ஸ்தாஞ்ஞான வடிவ உபாதானததின் நிவிருததிவாயிலாகப் பிராதி பாஸிக திருஷ்டா திருசியஙகளின் நிவிருத்தி உண்டாகின்றது. வியாவகாரிக திருஷ்டாவின் ஞானததினுல பிராதிபாஸிக திருஷ டாவின் நிவிருததியும் வியாவகாரிக திருசியததின் ஞானத்தினுல் பிராதிபாஸிக திருசியததின் நிவிருத்தியும உண்டாகின்றன.

## உகூகூ. முற்கூறிய பக்ஷத்திற் சங்கை.

இப்பக்ஷததில் இது சங்கையாம:—முறகூறியபடி ஜாக்கிர திருஷ்டாவுக்கும சொப்பன திருஷ்டாவுக்கும பேதமுண்டு. அந நிய திருஷ்டாவினது அநுபவிக்கபபடடதின ஸமிருதி அந்நியனுக்கு ண்டாகுமாயின், தேவதத்தனது அநுபவிககப்பட்டதின் ஸமிருதி யஞ்ஞதத்தனுக் குண்டாதல் வேண்டும. ஆதலால் சொப்பனத் தின் அநுபவிககப்பட்டதின் ஸமிருதி ஜாக்கிரகாலத்தி லுண்டாகி ன்றது. திருஷ்டாவின பேதம அங்கீகரிக்கின் ஸமிருதி சம்ப வியாது.

## உசo. முற்கூறிய சங்கைக்குச் சமாதானம்.

அதற்கு இது சமாதானமாம:—அநநியனது அநுபவிக்கப பட்டதின ஸமிருதி அநநியனுககுண்டாகாதாயினும, தன்னுல் அநு பவிக்கப்பட்டதின் ஸமிருதி தனக்குண்டாகும். அஙஙனமே தனது தாதாதமிய முடையவனது அநுபவிக்கப்பட்டதின் ஸமிருதியும் தனக்குண்டாம. ஆதலால் தேவதத்த யஞ்ஞதததாகளுக்குப் பர ஸபரம தாதாதமியமில்லை. ஜாக்கிரததின் திருஷ்டாவில் சொப்பன திருஷ்டாவிற்கு அததியஸததன்மை யிருததலால், அவனிடத்து அவனது தாதாத்மிய முண்டு. அததியஸத பதாாத்ததததிற்கு அதி ஷ்டானத்தில் தாதாத்மிய முணடாகின்றது. இவ்வாற்றுல் ஜாக் கிர திருஷ்டாவின் தாதாதமிய முடையவன் சொபபன திருஷ்டா வாம். அவனது அநுபவிக்கப்பட்டதின ஸமிருதி ஜாக்கிர திருஷ் டாவிற் குண்டாகினறது. யஞ்ஞதத்தனிடததுத தேவதத்தனது தாதான்மிய மின்மையால தேவதததனது அநுபவிககப்பட்டதின் ஸ்மிருதியினது அடைவு யஞ்ஞதததனுககில்லை. இவ்வாற்றுல் சொப்பனத்தியாசத்தின் உபாதானம நித்திரைவடிவ அவஸ்தாஞ் ஞானமாம.

## சொப்பனத்தின் பிராதிபாஸிக ஜீவனுக்கும் ஜகத்திற்கும் அதிஷ்டானமாதல்.

சொப்பனகாலத்தில் திருசியமாததிரததின் அஞ்ஞானத்தால் உற்பததி அங்கீகரிதது, வியாவகாரிக ஜாக்கிரகாலத்தின் ஜீவனைத் திருஷ்டாவாகக் கொள்ளின சமபவியாது. ஏனெனின், வியாவகாரிக ஜீவனது சொரூபம் நிததிரைவடிவ அஞ்ஞானத்தால் ஆவரிக்கப்பட்டிருக்கின்றது. அஞ்ஞானததினுல ஆவரிக்கப்பட்ட ஜீவனது சம்பநததகதினுல விஷயததின் அபரோக்ஷமுண்டாகின்றது. இதனுல சொபபனப் பிரபஞ்சத்தின அபரோக்ஷ ஞானத்தின் அசம்பவமுண்டாகும. ஆதலால் திருசியததைப்போல திருஷ்டாவும வியாவகாரிக ஜீவனிடத்து அததியஸ்தமாம். அது ஆவரிக்கப்படாததாம். அதன் சமபந்தத்தினுல் பிராதிபாஸிகத திருசியததின் அபரோக்ஷஞானம சமபவிககினறது. இவ்வாறுல பாரமாாத்திக வியாவகாரிக பிராதிபாஸிக பேதததால மூவகைச்சீவவாதிகளாகிய நூலாசிரியா சொப்பனத்திறகு அதிஷ்டானம வியாவகாரிக ஜீவனும ஜகத்தும் என்று கூறியிருககின்றனா.

## உசஉ. முற்கூறிய பக்ஷத்தின் பொருத்தமின்மையோடு சேதனத்திற்குச் சொப்பனத்தின் அதிஷ்டானத்தன்மை.

ஆனுல் இம்மதம பொருத்தமில்லாததாம.ஏனெனின் வியாவகாரிகத் திருஷ்டாவும திருசியததைப்போல அநாதமாவாக இருத்தலின ஜடமாம். ஆனுல்சத்தாஸ்பூர்த்தியைத தருதல் வடிவ அதிஷ்டானததனமை வியாவகாரிகத் திருஷ்டா திருசியங்களில சமபவியாது. ஆனுல சேதனத்திற்குச சொப்பனப் பிரபஞ்சத்தின அதிஷ்டானததன்மை கூறுதல் உசிதம்ாம. இதனுறுன் இரஜ்ஜு சுத்திகள் சர்ப்ப இரஜதங்களுக்கு அதிஷ்டானமாமெனனும வசனததிற்கு இரஜ்ஜு அவசசின்னசேதன அதிஷடானத்தில் தாற்பரியம கூறப்பட்டிருக்கின்றது. அநேக நூலகளிலும சேதனமே சொப்பனப் பிரபஞ்சததிற்கு அதிஷ்டானமெனச் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆதலால் அகஙகாராவச்சின்னசேதனம சொப்பனத்திற்கு அதிஷ்டானமாம. இவ்விரண்டு மதங்களும நலமுடையனவாம்.

### ௨௪௩. அகங்காராவச்சின்ன சேதனத்தைச் சொப்பனத்தின் அதிஷ்டானமாகக்கொண்டு, தூலாஞ்ஞானம் அதற்கு உபாதானமாதலும், ஜாக்கிரத்தின் ஞானத்தால் அதன் நிவிருத்தியும்.

அவற்றில் அகங்காராவச்சின்ன சேதனத்தைச் சொப்பனத்தின் அதிஷ்டானமாகக் கொள்ளின், மூலாஞ்ஞானத்தால் அதன் ஆவரணம் சம்பவியாது. ஆதலால் அகங்காராவச்சின்னத்தை ஆச்சாதிக்கும் அவஸ்தாஞ்ஞானமே சொப்பனத்தின் உபாதானமென்பசு சம்பவிக்கின்றது. ஜாக்கிரத்தின் போதத்தால் பிரஹ்மஞானமின்றி அதன் நிவிருத்தியும் சம்பவிக்கின்றது.

### ௨௪௪. அகங்கார அநவச்சின்னசேதனத்தைச் சொப்பனத்தின் அதிஷ்டானமாகக்கொண்டு மூலாஞ்ஞானத்திற்கு அதன் உபாதானத்தன்மையும், உபாதானத்தில் விலயவடிவமான அதன் நிவிருத்தியும்.

அவித்தையில் பிரதிபிம்பசேதனம் அல்லது பிம்பவடிவான ஈசுவரசேதனம் அகங்கார அநவச்சின்ன சேதனமாம். அதற்கதிஷ்டானத்தன்மையில் அதனை ஆச்சாதி (மறை)க்கும் மூலாஞ்ஞானமே சொப்பனத்தின் உபாதானமாகக் கொள்ளவேண்டியதாகின்றது. ஜாக்கிரத்தின் போதத்தினால் அதன் பாதவடிவ நிவிருத்தி உண்டாகிறதில்லை. ஆனால் உபாதானத்தில் விலயவடிவச் சொப்பனத்தின் நிவிருத்தி ஜாக்கிரத்தில் உண்டாகின்றது.

### ௨௪௫. அகங்கார அநவச்சின்ன சேதனத்தினையே அதிஷ்டானமெனக்கொண்டு விரோதிஞானத்தினால் அஞ்ஞானத்தின் விக்ஷேப ஏதுவானசத்தி ஒன்றனது நாசத்தின் அங்கீகாரம்.

அல்லது பிரதிபிம்பாத்தியாச நிரூபணத்தில் முற்கூறியபடி ஜாக்கிரபோதம் விரோதிஞானமாயிருத்தலின் சொப்பனாத்தியாசத்தின் நிவிருத்தியைக் கூறுவாம். ஆனால் விரோதிஞானத்தினால் ஆவரண ஏதுவாகிய அஞ்ஞான அம்சத்தின் நிவிருத்தி உண்டாகிறதில்லை; விக்ஷேப ஏதுவாகிய அம்சத்தின் நிவிருத்தி உண்டா

கின்றது. விரோதிஞானத்தினால் சகல அஞ்ஞானத்தின் நிவிருத்தியைக் கூறின், தண்டப்பிரமத்தினால் சர்ப்பப்பிரமத்தின் நிவிருத்தி வேதலத்தில் உபாதான சிதியின்மையால் தண்டப்பிரமத்தின் அசம்பவமே உண்டாகும். வி[illegible]மும் அம்சமும் யாவும் நிவிருத்தியாயின், தண்டமும் விக்ஷேபமுமாம்; அதனால் உபலம்பம் உண்டாகலாகாது. ஆதலால் இவ்வாறு அங்கீகரித்தல் உசிதம்:—ஒரு அஞ்ஞானத்தில் அனந்த விசேஷங்களுக்கு ஏதுவாகிய அனந்த சக்திகளிருக்கின்றன. விரோதிஞானத்தினால் ஒரு விக்ஷேபத்திற் கேதுவான சக்தியின் நாசமுண்டாகின்றது. வேறு விக்ஷேபத்திற் கேதுவாகிய சக்தி இருக்கின்றது. அதனால் காலாந்தரத்தில் அதே அதிஷ்டானத்தில் மறுபடி அத்தியாசமுண்டாகின்றது. இதனாற்றான் அதீதசொப்பனத்திற்கு ஜாக்கிரபோதத்தினால் பாதமுண்டாகியும், ஆகாமி (இனிவரும்) சொப்பனவடிவ விக்ஷேபத்திற் கேதுவாகிய சக்தி அவசேஷமாயிருத்தலால், வேறுதினத்தில் சொப்பனத்தியாசமுண்டாகின்றது. ஆதலால் [illegible] அநவச்சின்ன சேதனத்திற்குச் சொப்பனத்தின் அதிஷ்டானத்தன்மையும் சம்பவிக்கின்றது.

## ௨௬௯. முற்கூறிய சேதனத்திற்குச் சொப்பனத்தின் அதிஷ்டானவாதத்திலும் சரீரத்தின் உள்ளிடத்திருக்கும் சேதனத்திற்கே அதிஷ்டானத்தன்மை சம்பவித்தல்.

ஆனால் முற்கூறிய சேதனத்திற்குச் சொப்பனத்தின் அதிஷ்டானத்தன்மை வாதத்திலும் சரீரத்தின் உள்ளிடத்திருக்கும் சேதனமே அதிஷ்டானமாகச் சம்பவிக்கின்றது. பாகியதேசத்திருப்பதனை அதிஷ்டானமெனக் கொள்ளின், கடமுதலியவற்றினைப் போல ஒவ்வொரு சொப்பனத்தின் பிரதீதி எல்லோருக்கும் உண்டாதல்வேண்டும். கடமுதலியவற்றின் அபரோக்ஷத்தன்மையிலும் சர்ப்பரஜதமுதலியவற்றின் அபரோக்ஷத்தன்மையிலும் எங்ஙனம் இந்திரிய வியாபாரத்தின் அபேக்ஷை இருக்கின்றதோ, அங்ஙனமே சொப்பனத்தின் அபரோக்ஷத்தன்மையிலும் இந்திரிய வியாபாரத்தின் அபேக்ஷையும் வேண்டும். சரீரத்தின் உள்ளிடத்திருக்கும் சேதனத்தில் சொப்பனத்தின் அத்தியாசத்தை அங்கீகரிக்கின், பிரமாதாவோடு சம்பந்தியாயிருத்தலின் சுகமுதலியவற்றினைப்

போல இந்திரிய வியாபாரமின்றியே அபரோக்ஷத்தன்மை சம்ப விக்கின்றது. இவ்வாற்றால் அகங்காராவச்சின்ன அல்லது அகங் கார அநவச்சின்ன சேதனமே சொப்பனத்தின் அதிஷ்டானமாம். இவ்விரண்டு மதங்களும் பிரமாண முடையனவாம.

## உ௪எ. சரீரத்தின் உள்ளிடத்திருக்கும் அகங்கார அநவச்சின்ன சேதனத்திற்குச் சொப்பனத்தின் அதிஷ்டானத்தன்மையின் யோக்கியதை.

அகங்கார அநவச்சின்னத்தைக் கூறின் அதனிடத்தும் இர ண்டு பேதமுண்டு. அவித்தையிற் பிரதிபிம்ப ஜீவசேதனம் அல் லது அவித்தையிற பிம்ப ஈசுவரசேதனம என்னும் இரண்டும் அக ங்கார அநவச்சின்னமாம். இரண்டும வியாபகமாயிருத்தலின் சரீர த்தின் உள்ளிருப்பனவாம. ஏனெனின் சேதனத்தில பிம்பப் பிரதி பிம்பபேதம சுவபாவிகமாயின், விருத்ததாயாசிரயத்தன்மை உள் ளிருப்பதாகியஒருசேதனத்தில் சமபவியாது. அந்தப்பிம்பப் பிரதி பிம்பத்தன்மை வடிவ ஈசுவர ஜீவத்தன்மைகள் உபாதியானுகியன வாம. ஒரேசேதனத்தில அஞ்ஞானசம்பந்தத்தால் பிம்பத்தன்மை பிரதிபிம்பத்தன்மைகள் கற்பிதமாம. ஆதலால் சரீரத்திருக்கும ஒரு சேதனத்திலேயே இருவகை வியவகாரம உண்டாகின்றது. அங்ஙனமே உள்ளிடத்திருக்கும சேதனத்திலேயே சொப்பனுத் தியாசத்தின் அதிஷ்டானத்தன்மையினது அவச்சேதகமாக அந் தக்கரணத்தை அங்கீகரிக்கின், அகங்காரவச்சின்னத்திற்கு அதி ஷ்டானத்தன்மை சித்திக்கின்றது. அந்தச் சேதனத்திலேயே சொப்பனத்தினது அதிஷ்டானத் தன்மையின் அவச்சேதகம அந்தக்கரணமெனக் கொள்ளாவிடின், அகங்கார அநவச்சின்னத் திற்கு அதிஷ்டானத்தன்மை சித்திக்கின்றது. ஒரேதேவதத்தனிட த்துப் புத்திரதிருஷ்டியினுல் சொல்லக்கருதின் பிதாவென்பா. தேவதத்தனது ஜனகன்திருஷ்டியாற் சொல்லக்கருதின புத்திர னென்பர். கருத்தினபேதத்தால் ஒரு தேவதத்தனிடத்தில் பிதாத் தன்மை புத்திரத்தன்மை வடிவ விருத்ததாமங்களின வியவகாரத் தைப்போல, சரீரத்துள்ளிருக்கும ஒருசேதனத்தில அவச்சின்ன த்தன்மை அநவச்சின்னத்தன்மை பிம்பத்தன்மைப் பிரதிபிம்பத் தன்மை வடிவ விருத்ததாமங்களின வியவகாரம் சமபவியாமை யில்லை. இவ்வாற்றால அவித்தையிற பிரதிபிம்பவடிவ ஜீவசேதனத

திலேனும் பிம்பவடிவ ஈசுவரசேதனத்திலேனும் சொப்பனத்தின் அதிஷ்டானத்தன்மையை அங்கீகரித்து, அகங்கார அநவச்சின்னத்தில் சொப்பனுத்தியாசம் அங்கீகரிக்கினும், சரீரதேசத்திருக்கும் ஆந்தரசேதனமாகிய இடத்திலேயே சொப்பனத்தின் அதிஷ்டானத்தன்மை உசிதமாம்.

## ௨௪௮. வெளியும் உள்ளும் சாதாரணமான தேசத்திருக்கும் சேதனத்தில் சொப்பனத்தின் அதிஷ்டானத்தன்மையைக் கூறுதலில் கௌடபாதர் பாஷியகாரர் முதலியோரது வசனத்திற்கு விரோதமுளதாதல்.

வெளியும் உள்ளும் சாதாரணமான தேசத்திருப்பதில் சொப்பனத்தின் அதிஷ்டானத்தன்மையைக் கூறின், கௌடபாதாசாரியர் பாஷியகாரர் முதலியோரது வசனத்திற்கு விரோதமுண்டாகும். ஏனெனின் மாண்டூக்கியகாரிகையின் வைதத்தியப் பிரகரணத்தில் கௌடபாதாசாரியர் இது கூறியிருக்கின்றனர்:— சொப்பனத்தின் யானை மலை முதலியவற்றின் உற்பத்திக்குரிய தேசகாலங்களில்லாதிருத்தலின் சொப்பனத்தின் பதார்த்தம் மித்தையாம். இவ்வாறு கௌடபாதாசாரியரது வாக்கியத்தின் வியாக்கியானத்தில் பாஷியகாரர் முதலியோர் இது கூறியிருக்கின்றனர். க்ஷணம் கடிகை முதலியகாலத்திலும் சூக்ஷும் நாடியாகிய தேசத்திலும் வியாவகாரிக யானை முதலியவற்றின் உற்பத்தி சம்பவியாது. ஆதலால் சொப்பனபதார்த்தம் மித்தையாம். இவ்வாற்றால் சரீரத்தின் உள்ளிடத்தில் சொப்பனத்தின் உற்பத்தி சொல்லப்பட்டிருக்கின்றது. சாதாரண சேதனத்தில் அதிஷ்டானத்தன்மையை அங்கீகரிக்கின் சூக்ஷுமதேசத்தில் உற்பத்தி கூறுதல் அசங்கதமாகும். ஆதலால் சரீரத்தின் உள்ளிடத்திருக்கும் அகங்கார அநவச்சின்ன சேதனத்தில் சொப்பனுத்தியாசமிருக்கின்றது.

## ௨௪௯. அகங்கார அநவச்சின்ன சேதனம் அவித்தையில் பிரதிபிம்பமும் பிம்பமுமாகிய இரண்டுமாம். அவற்றில் பிரதிபிம்பவடிவ ஜீவசேதனத்திற்கு அதிஷ்டானத்தன்மையின் சம்பவம்.

அகங்கார அநவச்சின்ன சேதனம் அவித்தியாப் பிரதிபிம்பமும் பிம்பமுமாகிய இரண்டுமாம். மதபேதத்தால் இரண்டற்கும்

சொப்பனத்தின் அதிஷ்டானத்தன்மை யிருக்கின்றது. அங்ஙன மாயினும் அவித்தையில் பிரதிபிம்பவடிவ ஜீவசேதனத்திற்கு அதிஷ்டானத்தன்மையைக் கூறுதலே நலமுடையதாம். ஏனெனின் அபரோக்ஷ அதிஷ்டானத்தில் அபரோக்ஷ அத்தியாசமுண்டாகின்றது. அத்தப் பிரஹ்மத்தினைப்போல ஈசுவர சேதனத்தின் ஞானம் கேவலம் சாஸ்திரத்தினாலுண்டாகின்றது. ஈசுவரசேதனத்தைச் சொப்பனத்தியாசத்தின் அதிஷ்டானமெனக் கொள்ளின்,சாஸ்திர வடிவப்பிரமாணமின்மையால் அதிஷ்டானத்தின் அபரோக்ஷத்தன்மையின்றி, அத்தியாசத்தினது அபரோக்ஷத்தன்மையின் அசம்பவமுண்டாகும். அவித்தையில் பிரதிபிம்ப ஜீவசேதனமாகிய அகங்காரவச்சின்னமோ அகமெனும் வடிவ விருத்திக்குக் கோசரமாகின்றது. அகங்கார அவச்சின்ன அவித்தையில் பிரதிபிம்பவடிவ ஜீவசேதனமும் அகமெனும்வடிவ விருத்திக்குக்கோசரமோ அன்று. ஆனால் ஜீவசேதனம் அவரிக்கப்படாததன்று. ஆதலால் தானே அபரோக்ஷமாதலில் அபரோக்ஷ அத்தியாசம் சம்பவிக்கின்றது.

## உ௫௦. முற்கூறியபக்ஷத்தில் சம்க்ஷேபசாரீரகத்திற் கூறிய அத்தியாசத்தின் அபரோக்ஷத்தன்மையின் பொருட்டு அதிஷ்டானத்தின் மூவித அபரோக்ஷத்தன்மை.

சம்க்ஷேபசாரீரகத்தில் அத்தியாசத்தின் அபரோக்ஷத்தன்மையின்பொருட்டு, அதிஷ்டானத்தின் அபரோக்ஷத்தன்மை மூன்றுவிதமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. சர்ப்பம் இரஜத முதலியவற்றின் அபரோக்ஷத்தன்மையின் உபயோகியான இரஜ்ஜு சுத்தி முதலியவற்றின அபரோக்ஷத்தன்மை இந்திரியத்தா லுண்டாகின்றது. ஆகாயத்தில் கருமை முதலிய அத்தியாசத்தின் அபரோக்ஷத்தன்மையின உபயோகியான ஆகாயத்தின அபரோக்ஷத்தன்மை மனத்தி லுண்டாகின்றது. சொப்பனத்தின் அபரோக்ஷத்தன்மையின் உபயோகியான அதிஷ்டானத்தின அபரோக்ஷத்தன்மை சுபாவசித்தமாம். இவ்வாறாக சம்க்ஷேப சாரீரகத்தில் சர்வஞ்ஞாத்ம முனியானவர் தானே அபரோக்ஷமாதலில் சொப்பனத்தியாசத்தைக் கூறி யிருக்கின்றனர். ஆதலால் ஜீவசேதனமே சொப்பனத்தின் அதிஷ்டானமாம்.

## சமாதான பூர்வகமான ஜீவசேதன வடிவ அதிஷ்டானத்தின் சொரூபப் பிரகாசத்தினால் சொப்பனத்தின்பிரகாசம்.

ஜீவசேதனத்திற்கு ஆவரிக்கப்பட்டதாயிருத்தலின் தானாகப் பிரகாசிக்கும் சுபாவத்தை அங்கீகரிக்கின், அவித்தை வியாபகமாயிருத்தலின் அதனிடத்துப் பிரதிபிம்ப வடிவ ஜீவசேதனமும் வியாபகமாம். அதற்குக் கடமுதலியவற்றோடு எப்போதும் சம்பந்தமிருக்கின்றது. ஆதலால் நேத்திர முதலியவற்றால் நேர்ந்த விருத்தியின் அபேக்ஷையின்றிக் கடமுதலியவற்றின் அபரோக்ஷத்தன்மையுண்டாதல் வேண்டும். ஜீவசேதனத்தோடு சம்பந்தமுடையதின் அபரோக்ஷத்தன்மையிலும் விருத்தியின் அபேக்ஷையை அங்கீகரிக்கின், தானே அபரோக்ஷமாகும் ஜீவசேதனத்தினால் சொப்பனாத்தியாசத்தின் அபரோக்ஷத்தன்மையைக் கூறியது அசங்கதமாகும். அங்ஙனமாயினும் சொப்பனாத்தியாசத்திற்கு ஜீவசேதனம் அதிஷ்டானமாம். கடமுதலியவற்றிற்கு அதிஷ்டானம் ஜீவசேதனமன்று; ஆனால் பிரஹ்மசேதனமேயாம். ஆதலால் சொப்பன பதார்த்தங்களுக்கோ தம் அதிஷ்டானமாகிய ஜீவசேதனத்தில் தாதாத்மிய சம்பந்தமிருக்கின்றது. கடமுதலியவற்றின் அதிஷ்டானம் பிரஹ்மசேதனமாயிருத்தலின், அவற்றின் தாதான்மிய சம்பந்தம் பிரஹ்மசேதனத்தோடிருக்கின்றது; ஜீவசேதனத்தோடில்லை. நேத்திர முதலியவற்றால் நேர்ந்த விருத்தி வாயிலாக ஜீவசேதனத்திற்குக் கடமுதலியவற்றோடு சம்பந்தமுண்டாகின்றது. விருத்திக்கு முந்திய காலத்தில் உள்ள கடாதிகளின் சம்பந்தம் யாதோ, அது அபரோக்ஷத்தன்மையினைச் சம்பாதிப்பதன்று. ஆதலால் கடமுதலியவற்றோடு ஜீவசேதனத்தின் விலக்ஷண சம்பந்தத்திற்கு ஹேதுவாகிய விருத்தியின் அபேக்ஷையினால் அபரோக்ஷத்தன்மை உண்டாகின்றது. சொப்பனாத்தியாசத்தில் அதிஷ்டானத்தன்மையுடைய சம்பந்தத்தால் ஜீவசேதனத்தினது என்றும் சம்பந்தமுள்ளனவாகிய பதார்த்தங்களின் பிரகாசம் விருத்தியின்றியே உண்டாகின்றது. இவ்வாறு பிரகாசாத்மஸ்ரீசரணரென்னும் ஆசாரியர் கூறியிருக்கின்றனர். மதபேதத்தால் விருத்தியின் பிரயோஜனத்தை மேற்கூறுவாம். இவ்வாற்றால் அவித்தையிற் பிரதிபிம்ப ஜீவசேதனம் சொப்பனத்திற்கு அதிஷ்டானமாம். அதனது

சொரூபப் பிரகாசத்தினால் சொப்பனத்தின் பிரகாசமுண்டாகின்றது.

## ௨௫௨. அத்வைத தீபிகையில் நிருசிம்ஹாசிரம ஆசாரியர் கூறிய ஆகாசகோசர சாக்ஷுஷ விருத்தியை நிரூபித்தலோடு சம்க்ஷேப சாரீரகத்திற்கூறிய ஆகாசகோசர மானசவிருத்தியின் அபிப்பிராயம்.

ஆனால் இப்பிரசங்கத்தில் ஆகாசகோசர மானசவிருத்தி சொல்லப்பட்டது. ஆண்டுநிருசிம்ஹாசிரமாசாரியர் அத்வைததீபிகையில் இது கூறியிருக்கின்றனர்:—உருவமின்றிய ஆகாசகோசர சாக்ஷுஷவிருத்தி சம்பவியாதாயினும், ஆகாயத்திற் பரவிய பிரகாச வடிவமுடையதாயிருத்தலின், பிரகாசவடிவ சாக்ஷுஷவிருத்தி உண்டாகின்றது. ஆலோகாவச்சின்ன சேதனத்திற்கு எங்ஙனம் விருத்தி வாயிலாகப் பிரமாதாவோடு அபேதமுண்டாகின்றதோ, அங்ஙனமே ஆலோகதேசத்திருக்கும் ஆகாசாவச்சின்ன சேதனத்திற்கும் அபேதமுண்டாகின்றது. இவ்வாற்றால் ஆலோகவடிவ சாக்ஷுஷவிருத்திக்கு விஷயமாயிருத்தலின், ஆகாயத்தின் அபரோக்ஷத்தன்மையும் நேத்திர ஜந்நியமாகவே சொல்லப்பட்டிருக்கின்றது. சம்க்ஷேபசாரீரகத்தில் மானஸ அபரோக்ஷத்தன்மை சொல்லப்பட்டிருக்கின்றது. அதன் அபிப்பிராயம் இதுவாம்:—ஆகாயமோ உருவமின்றியதாம். ஆதலால் ஆகாயவடிவ விருத்தியோ சம்பவியாது. அந்நியவடிவ விருத்தியினால் சமானதேசத்திருக்கும் அந்நியத்தின் பிரத்தியக்ஷ மங்கீகரிக்கின், கடத்தின் உருவ வடிவ விருத்தியினால் கடத்தின் நெடுமை குறுமைப் பரிமாணங்களின் பிரத்தியக்ஷ முண்டாதல் வேண்டும். ஆலோக வடிவ விருத்தியினால் ஆலோக தேசத்திருக்கும் வாயுவின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமுமுண்டாதல் வேண்டும். ஆதலால் ஆலோகவடிவ சாக்ஷுஷ விருத்தியினால் ஆகாயத்தின் அபரோக்ஷத்தன்மை சம்பவியாமையால் மானஸ அபரோக்ஷத்தன்மையே சம்பவிக்கின்றது.

---

## அங்கீகரித்தலோடு அத்வைததீபிகையிற் கூறிய தன்மை நலமுடையதெனல்.

சூக்ஷ்மமாக விசாரிக்கின் அத்வைததீபிகையின்படி அந்நிய வடிவ விருத்தியினால் அந்நியத்தின் அபரோக்ஷத்தன்மை அப்பி ரசித்தமாம். அதன் அங்கீகாரம் தோஷமாம். அங்ஙனமாயினும், பிரயோஜன வலியால் சிலவிடத்து அந்நியாகார விருத்தியினால் அந் நியத்தின் அபரோக்ஷத்தன்மை அங்கீகரிக்கின், முற்கூறிய தோஷ த்தின் பரிகாரமுண்டாகின்றது. சம்க்ஷேபசாரீரகத்தின்படி பா கிய பதார்த்தத்தில் அந்தக்கரண கோசரத்தன்மை அப்பிரசித்த மாம். அதனை அங்கீகரித்தல் தோஷமாம. பிரயோஜன வலியால் அந்நியாகார நேத்திரத்தினது விருத்தியுடன் கூடிய அந்தக் கரண விருத்தியின் கோசரத்தன்மை பாகியபதார்த்தங்களில் அங் கீகரிக்கின், கேவல அந்தக்கரணத்திற்குப் பாகியபதார்த்தத்தைக் கோசரிக்குந் தன்மையில்லை யென்னும் நியமத்தின் பங்கவடிவ தோஷமில்லை. இவ்வாற்றால் இருவகை எழுத்தும சம்பவிக்கின் றது. அங்ஙனமாயினும் அத்வைததீபிகையின் கிரமமே நலமுடை யதாம். ஏனெனின் ஆலோகவடிவ விருத்திக்கு சககாரித்தன்மை வடிவ காரணத்தன்மையை அங்கீகரித்து, அந்தக்கரணத்தில் பாகி யபதார்த்த கோசர சாக்ஷாத்காரத்தின் கரணத்தன்மை அதிகமா யங்கீகரிக்கவேண்டியதாகின்றது. அத்வைததீபிகையின்படி அந் தக்கரணத்திற்குப் பாகிய சாக்ஷாத்காரத்தின் கரணத்தன்மை அங்கீகரிக்க வேண்டியதில்லை. ஆதலால இலாகவமாம். நேத் திரத்திற்குச் சககாரித்தன்மை அங்கீகரியாது கேவல அந்தக்கர ணத்தினை ஆகாயப் பிரத்தியக்ஷத்திற் கேதுவாகக் கொள்ளின், மூடிய கண்களுக்கும ஆகாயத்தில் மானஸப் பிரத்தியக்ஷ முண் டாதல்வேண்டும. அந்தக்கரணத்திற்கு ஞானத்தின் உபாதானத் தன்மை யிருத்தலால் காரணத்தன்மை கூறுதல் முற்றும அயுக்த மாம். ஆதலால் சமக்ஷேபசாரீரகத்தில் ஆகாயத்தின் பிரத்தியக்ஷ த்திற்கு மானஸத்தன்மையைக் கூறுதல் பிரௌடிவாதமாம். இவ்வாற்றால் அத்தியாசத்தின் அபரோக்ஷத்தன்மைக்கு ஏதுவா கிய அதிஷ்டானத்தின் அபரோக்ஷத்தன்மை இந்திரியத்தினால் அல்லது சொரூபப்பிரகாசத்தினால்உண்டாகின்றதென்றிவ்வளவே கூறுதல் உசிதமாம். இவ்வாற்றால் மதபேதத்தினால் சொப்பனத்

தின் உபாதானம் அவஸ்தாஞ்ஞானம் அல்லது மூலாஞ்ஞானமாம்.

### உருச. இரஜ்ஜு சர்ப்பமுதலியவற்றிற்கு எல்லா மதங்களிலும் தூலாஞ்ஞானமே உபாதானமாதல்.

இரஜ்ஜு சர்ப்ப முதலியவற்றிற்கோ சகலமதங்களிலும் அவஸ்தாஞ்ஞானமே உபாதானகாரணமாம். இரஜ்ஜு முதலியவற்றின் ஞானத்தால் அவற்றின் நிவிருத்தி உண்டாகின்றது. இரஜ்ஜுவின் ஞானத்தினால் அஞ்ஞான நிவிருத்தி வாயிலாகச் சர்ப்பத்தின் நிவிருத்தி உண்டாகின்றது. ஆதலால் ஒருமுறை யறியப்பட்ட இரஜ்ஜுவில் காலாந்தரத்தில் உபாதானத்தின் அபாவத்தால் சர்ப்பப்பிரமம் உண்டாகலாகாது என்னும் சங்கைக்குச் சமாதானத்தை விருத்தியின் பிரயோஜன நிரூபணத்திற் கூறுவாம்.

### உருரு. சொப்பனத்தின் அதிஷ்டானமாகிய ஆத்மாவின் சுயம்பிரகாசத்தன்மையில் பிரமாண வடிவமாயுள்ள பிரகதாரணிய சுருதியின் அபிப்பிராயம்.

சொப்பனத்தின் அதிஷ்டானத்திற்குத் தானே அபரோக்ஷமாதற்றன்மையினால் சொப்பனத்தின் அபரோக்ஷத்தன்மை முன் சொல்லப்பட்டிருக்கின்றது. சுயஞ்சோதிப் பிராஹ்மண வாக்கியத்திலும் "அத்ராயம் புருஷ: ஸ்வயம் ஜ்யோதிர்பவதி இங்கு இப புருஷன் சுயஞ்சோதியாகின்றான்" என்பதாகச் சொப்பனத்தின் பிரசங்கத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது. அதன் அபிப்பிராயம் இதுவாம்:—மூன்றவஸ்தைகளிலும் ஆத்மா சுயம்பிரகாசமாயிருக்கினும், தனது பிரகாசத்தில் அந்நியப்பிரகாசத்தின் அபேக்ஷையின்றியதாய் எல்லாவற்றையும் பிரகாசிப்பது யாதோ அதனைச் சுயம்பிரகாசமென்பர். ஜாக்கிராவஸ்தையில் சூரியன் முதலியவற்றையும் நேத்திர முதலியவற்றையும் பிரகாசிப்பிப்பதாய், அந்நியப்பிரகாசத்தின் அபேக்ஷையின்றியதன்மை அவ்வாத்மாவினிடத்து நிச்சயிக்கப்படுகிறதில்லை. ஏதால தரிசிக்குச் சுழுத்தியில் ஒரு ஞானமும் தோற்றுகிறதில்லை. இதனாற்றான் சுழுத்தியில் ஞான சாமாநியத்தின் அபாவத்தை நையாயிகர் அங்கீகரித்திருக்கின்றனர். ஆத

லால் ஆத்மப்பிரகாசத்தின் நிச்சயம் சுழுத்தியில் உண்டாகிறதில்லை. இவ்வபிப்பிராயத்தினால் சுருதியானது சொப்பனாவஸ்தையில் ஆத்மாவைச் சுவயம்பிரகாசமென்று கூறியிருக்கின்றது.

## உடுசு. சொப்பனத்தில் இந்திரிய அந்தக்கரணங்கள் ஞானசாதனமாகாமையைக்கூறி, தானே அபரோக்ஷமாம் ஆத்மாவினால் சொப்பனத்தின் அபரோக்ஷத்தன்மையைக் கூறுதல்.

சொப்பனாவஸ்தையிலும் நேத்திர முதலிய இந்திரியங்களின் சஞ்சாரமுண்டாயின், சொப்பனத்திலும் ஆத்மாவுக்கு வேறு பிரகாசத்தை அபேக்ஷியாமையின்மையால் சுயம்பிரகாசத் தன்மையின் நிச்சயம் கூடாததாகும். இவ்வாற்றால் இந்திரிய வியாபாரமின்றிச் சொப்பனத்தில் ஆத்மப்பிரகாசம் இருக்கின்றது. சொப்பனத்தில் கையில் தண்டத்தைக் கொண்டு ஓடடை எருமை முதலியவற்றினை அடிக்கின்றவனாய் நேத்திரத்தினால் மா முதலியவற்றினைப் பார்த்துக்கொண்டு திரிகிறான். கை கண் கால் முதலியவற்றின் கோளகங்கள் அசைவின்றியனவாகக் காணப்படுகின்றன. ஆதலால் சொப்பனத்தில் வியாவகாரிக இந்திரியங்களின் வியாபாரமில்லை. பிராதிபாஸிக இந்திரியத்தின் அங்கீகாரமில்லை. சொப்பனத்தில் பிராதிபாஸிக இந்திரியம் உளதாயின், சொப்பனத்தில் வேறு பிரகாசமின்மையால் சுவயம்பிரகாசத்தன்மை சுருதியிற் கூறப்பட்டிருக்கின்றது; அதற்குப் பாதமுண்டாகும். விசாரசாகரத்தில் சொப்பனத்தில் இந்திரியத்தைப்பிராதிபாஸிகமென்றுகூறியிருக்கின்றோம். அது பிரௌடிவாதமாம். சொப்பனத்தில் பிராதிபாஸிக இந்திரியத்தை அங்கீகரித்தும் ஞானத்தின் சமகாலத்தில அவற்றின் உற்பத்திஉண்டாகுதலால் ஞானத்திற்குச்சாதனமாந்தன்மை அவற்றிற்குச் சம்பவியாது. இவ்வாற்றால் தனது மேன்மையைப் போதித்தற்குப் பூர்வவாதியின் வார்த்தையை அங்கீகரித்துச் சமாதானமுளது. ஆதலால் சொப்பனத்தில ஞானத்தின் சாதனம் இந்திரியமன்று. இந்திரிய வியாபாரமின்றிக் கேவல அந்தக்கரணத்திற்கு ஞானசாதனத்தன்மையின்மையாலும், தத்துவதீபிகையின் மதத்தால் அந்தக்கரணத்திற்குச் சொப்பனத்தில் யானை முதலிய வடிவ பரிணாமமுண்டாகுதலால ஞான கருமத்திற்கு ஞான சாத

னத்தன்மை சம்பவியாமையாலும் அந்தக்கரண வியாபாரமின்றி ஆத்மப்பிரகாச மிருக்கின்றது. ஆதலால் சுயம் அபரோக்ஷமான ஆத்மாவினால் சொப்பனத்தின் அபரோக்ஷத்தன்மை உண்டாகின்றது. சொப்பனவஸ்தையில் யானை முதலியவற்றில் சாக்ஷாத்தன்மை தோற்றுகின்றது. அதுவும் யானைமுதலியவற்றைப்போல அதநியஸதமாம.* ஜாக்கிரதத்திற் கட முதலியவற்றின் சாக்ஷாத்தன்மை வியாவகாரிகமாம்; இரஜ்ஜு சர்ப்ப முதலியவற்றின் சாக்ஷாத்தன்மை அத்தியஸதமாகுதலால் பிராதிபாஸிகமாம்.

## உருள—உருக. திருஷ்டி சிருஷ்டி, சிருஷ்டி திருஷ்டி வாதங்களின் பேதம்.

## உருள. திருஷ்டி சிருஷ்டி வாதத்தில் சகல அநாத்மாக்களின் ஞாதசத்தை (சாக்ஷிபாஸியத்தன்மை) யைக்கூறி திருஷ்டி சிருஷ்டி பதத்திற்கு இரண்டுபொருள் கூறுதல்.

திருஷ்டிசிருஷ்டி வாதத்திலோ எந்த அநாத்ம பதார்த்தத்திற்கும் அஞ்ஞாதசத்தையில்லை. ஆனால் ஞாதசத்தையுண்டு. ஆதலால் இரஜ்ஜு சர்ப்பத்தைப்போலச சகல அநாதம வஸதுக்களும் சாக்ஷிபாஸியமாம. அவற்றில் இந்திரிய ஜந்நிய ஞானத்தின் விஷயத்தன்மை தோற்றுகின்றது. அது அதநியஸதமாம. திருஷ்டிசிருஷ்டிவாதத்தில் இரண்டுபேதமுண்டு. சித்தாந்தமுக்தாவலிமுதலிய கிரந்தங்களில இது சொல்லப்பட்டிருக்கின்றது:—திருஷ்டி அதாவது ஞானசொரூபமே சிருஷ்டியாம; ஞானத்திற்கு வேறாகசசிருஷ்டியில்லை. * ஆகர நூல்களில இது சொல்லப்பட்டிருக்கின்றது:— திருஷ்டி சிருஷ்டியாவது ஞான சமயத்தில் அநாத்ம பதார்த்தத்தின் சிருஷ்டியுளது; ஞானத்திற்குமுன் அநாதம பதாாததம் மிருப்பதில்லை என்பதாம். ஆதலால் சகல திருசியங்களுக்கும் ஞாதசத்தையிருக்கின்றது; அஞ்ஞாதசத்தை யில்லை. இவ்வாறு இருவகைத் திருஷ்டி சிருஷ்டிவாதமுண்டு. சகல அத்வைதசாஸதிரங்களுக்கும் இதுவே அபிப்பிராயமாம்.

---

* உபநிஷத்பாஷிய கீதாபாஷிய சூத்திரபாஷியங்களும், அவற்றின் வியாக்கியானங்களும் பிரமேயகிரந்தமென்றும, பரமதகண்டனமும் ஸ்வமதஸ்தாபனமும செய்யும கண்டநம், சித்சுகி, அத்வைதசித்தி, கௌடப் பிரஹ்மாநந்திய முதலியன ஆகரகிரந்தமென்றும் சொல்லபபடுகின்றன.

## ௨௫௮. சிருஷ்டி திருஷ்டிவாத (வியாவகாரிக பக்ஷ)த்தைக் கூறுதல்.

சில நூலாசிரியர் ஸ்தூலப்பார்வையுடைய புருஷர்களை அநுசரித்துச் சிருஷ்டிதிருஷ்டி வாதத்தை அங்கீகரித்திருக்கின்றனர். முதலில் சிருஷ்டி உண்டாகின்றது. பிந்தியகாலத்தில் பிரமாணத்தின் சம்பந்தத்தினால் திருஷ்டி உண்டாகின்றது. சிருஷ்டிக்குப் பின் திருஷ்டி உண்டாகின்றதென்பது சிருஷ்டிதிருஷ்டி என்னும் சொல்லிற்குப் பொருளாம். இந்தப் பக்ஷத்தில் அநாத்மபதார்த்தத்திற்கும் அஜ்ஞாதசத்தையுண்டு. அநாத்ம கடமுதலியவற்றிற்கு இரஜ்ஜுசர்ப்ப முதலியவற்றின் விலக்ஷண வியாவகாரிக சத்தையுண்டு. திருஷ்டிசிருஷ்டிவாதத்தில் எந்த அநாத்மவஸ்துவும் பிரமாணத்திற்கு விஷயமன்று. ஆனால் பிரஹ்மமே வேதாந்த வடிவ சப்தப்பிரமாணத்திற்கு விஷயமாம். அசேதன பதார்த்தங்கள் முழுவதும் சாக்ஷிபாஸ்யமாம். அவற்றில் சாக்ஷிபாஸ்யத்தன்மைமுதலிய உணர்ச்சி பிரமைவடிவமாம். பிரமாணப் பிரமேயவிபாகமும் சொப்பனத்தைப்போல அந்நியதமாம். சிருஷ்டிதிருஷ்டிவாதத்தில் அநாத்மபதார்த்தமாகிய கடமுதலியன பிரமாணத்திற்கு விஷயமாம். அங்ஙனமே குருசாஸ்திரமுதலியனவும் வியாவகாரிகமாம்; சுத்திரஜத முதலியவற்றின் விலக்ஷணமாம். வியாவகாரிக ரஜத முதலிய பதார்த்தங்களால் கடக முதலிய வடிவப் பிரயோஜனசித்தி உண்டாகின்றது. பிராதிபாஸிகத்தினால் பிரயோஜனசித்தி உண்டாகிறதில்லை. அங்ஙனமாயினும் அதிஷ்டான ஞானத்தினால் நிவிர்த்தி இரண்டற்கும் சமானமா யுண்டாகின்றது. சத்தாத்து விலக்ஷணத்தன்மை வடிவ அநிர்வசநீயத்தன்மையும் இரண்டிடத்தும் சமானமாம். அங்ஙனமே சுவ அதிகரணத்தில் முக்காலத்தைய அபாவமும் இரண்டற்கும் சமானமாம். ஆதலால் பிராதிபாஸிகத்தினைப்போல வியாவகாரிக பதார்த்தமும் மித்தையாம். ஆதலால் சிருஷ்டிதிருஷ்டி வாதத்திலும் அத்வைதத்திற்கு ஹானியில்லை.

## ௨௫௯—௨௬௬. மித்தியாப் பிரபஞ்சத்தின் மித்தியாத் தன்மையின் சங்கை சமாதானம்.

### ௨௫௯. முற்கூறிய இரண்டு பக்ஷங்களிலும் மித்தியா பதார்த்தங்களின் மித்தியாத்தன்மைத் தர்மத்தில் துவைதவாதிகளின் ஆக்ஷேபம்.

இப்பிரசங்கத்தில் இதுசங்கையாம். திருஷ்டி சிருஷ்டிவாதத்திலும், அங்ஙனமே சிருஷ்டி திருஷ்டிவாதத்திலும் சகல அநாத்

ரார்களும் மித்தையாமென்பதில் விவாதமில்லை. ஆனால் மித்தியா பதார்த்தங்களில் மித்தியாத்தன்மைத் தாமமிருக்கின்றது. அதில் நியாயவாதி இவ்வாக்ஷேபம் செய்கின்றார்:—பிரபஞ்சத்தில் மித்தியாத்தன்மைத் தாமம் சத்தியமா? அல்லது மித்தையா? சத்தியமெனின் சேதனத்துக்கு வேறான அநாத்ம தாமங்களுக்குச் சத்தியத்தன்மை உண்டாகுதலால் அத்வைதத்திற்கு ஹானியுண்டாகும். மித்தியாத்தன்மையை மித்தையெனக் கூறினும், அத்வைதத்திற்கு ஹானியுண்டாகும். அது வருமாறு:—மித்தியா பதார்த்தத்திற்குத் தனது விரோதியாகிய பதார்த்தங்களின் பிரதிக்ஷேபகத் (நிராகரிக்குந்) தன்மை யிருத்தலால் பிரபஞ்சத்தின் மித்தியாவடிவ மித்தியாத்தன்மையோடு அதன் சத்தியத்தன்மைக்குப் பிரதிக்ஷேபம் (மறுப்பு) உண்டாகாது. எங்ஙனம்: ஒரே பிரஹ்மத்தில் சப்பிரபஞ்சத்தன்மை நிஷ்பிரபஞ்சத்தன்மைத் தாமங்களிருக்கின்றன. மித்தியாவடிவ சப்பிரபஞ்சத்தன்மைத் தாமத்தோடு நிஷ்பிரபஞ்சத்தன்மைக்குப் பிரதிக்ஷேப (விரோத) முண்டாகிறதில்லை. ஆனால் சப்பிரபஞ்சத்தன்மை நிஷ்பிரபஞ்சத்தன்மையென்னும் இரண்டு தாமமுடையது பிரஹ்மமாம். கற்பிதம் சப்பிரபஞ்சத்தன்மை; பாரமார்த்திகம் நிஷ்பிரபஞ்சத்தன்மையாம். அங்ஙனமே பிரபஞ்சத்திற் கற்பிதம் மித்தியாத்தன்மையும் பாரமார்த்திகம் சத்தியத்தன்மையுமாம். இவ்வாறாயின் பிரபஞ்சத்தின் பாரமார்த்திக சத்தியத்தன்மைத் தாமத்தின் சத்பாவத்தினால் அத்வைதத்திற்கு ஹானியுண்டாகும்.

## ௨௬௦. முற்கூறிய ஆக்ஷேபத்திற்கு அத்வைத தீபிகையிற்கூறிய சமாதானம்.

இவ்வாக்ஷேபத்திற்கு அத்வைததீபிகையில் இச்சமாதானம் எழுதப்பட்டிருக்கின்றது:—"இருக்கின்றது குடம்" என்பதாகக் குடமுதலியவற்றில் சத்தியத்தன்மை தோற்றுகின்றது. அதிஷ்டானத்துள்ள சத்தியத்தன்மையின் விளக்கம் கடமுதலியவற்றிலுண்டாகின்றது. அல்லது அதிஷ்டானத்திலுள்ள சத்தியத் தன்மையின் அநிர்வசநீய சம்பந்தம் கடமுதலியவற்றில் உற்பத்தியாகின்றது. கடமுதலியவற்றில் சத்தவிலக்ஷணத்தன்மை வடிவ மித்தியாத்தன்மைத் தாமம் சுருதி சித்தமாம். சத்விலக்ஷணத்தில் மித்தியாத்தன்மை யிருத்தலால் மித்தியாத் தன்மைக்குச்

தின் சப்பிரபஞ்சத்தன்மையோடு நிஷ்பிரபஞ்சத்தன்மையினது பிரதிக்ஷேபத்தின் ஆபத்தியில்லை. பிரபஞ்சத்தின் வியாவகாரிக மித்தியாத்தன்மையினாலே சத்தியத்தன்மைக்குப் பிரதிக்ஷேபம் சம்பவிக்கின்றது.

## உகூக. மித்தியாப் பிரபஞ்சத்தின் மித்தியாத்தன்மைத் தர்மத்தில் வேறுவகையால் துவைதவாதிகளின் ஆக்ஷேபம்.

துவைதவாதி வேறுவகையாக ஆக்ஷேபஞ் செய்கின்றார். அது வருமாறு:—பிரபஞ்சத்தின் மித்தியாத்தன்மைத்தர்மத்தினை மித்தையெனக் கொள்ளினும் பிரபஞ்சத்தின் பாரமார்த்திக சத்தியத்தன்மையின் பிரதிக்ஷேபம் உண்டாகிறதில்லை. ஏனெனின் சமான சத்தையுடைய தர்மங்களுக்கு விரோத முண்டாகின்றது. விஷமசத்தையுடைய பதார்த்தங்களுக்கு விரோத முண்டாகிறதில்லை. விஷமசத்தையுடைய பதார்த்தங்களுக்கு விரோத முண்டாயின், சுத்தியிற் பிராதிபாசிக ரஜத தாதான்மியத்தினாலே வியாவகாரிக ரஜதபேதத்திற்குப் பிரதிக்ஷேபம் உண்டாதல்வேண்டும். இவ்வாற்றால் பிரபஞ்சத்தின் வியாவகாரிக மித்தியாத்தன்மையினால் பாரமார்த்திக சத்தியத்தன்மையின் பிரதிக்ஷேபம் சம்பவியாமையால் பிரபஞ்சம் சத்தியமாம். இதனால் அத்வைதத்தின் அசம்பவமிருக்கின்றது.

## உகூஉ. முற்கூறிய ஆக்ஷேபத்திற்கு முற்கூறிய சமாதானமே பொருந்துமாறு.

இச்சங்கைக்கும் முற்கூறியதே சமாதானமாம். ஏனெனின் முற்கூறியபடி சர்ப்பம் இரஜத முதலியவற்றின் மித்தியாத்தன்மையினால் அவற்றின் சத்தியத்தன்மைக்குப் பிரதிக்ஷேப முண்டாகலாகாது. ஆகலால் பிரமாணத்தினால் நிச்சயிக்கப்பட்ட தர்மத்தினால் விரோதி தர்மத்தின் பிரதிக்ஷேபகத்தன்மையில் பிரமாணத்தினாலே நிச்சயிக்கப்படுந்தன்மைப் பிரயோஜகமுண்டு. இரஜதத்தின் மித்தியாத்தன்மை பிரமாணத்தால் நிச்சயிக்கப்பட்டதாம். அதற்கு விரோதியான சத்தியத்தன்மையைப் பிரதிக்ஷேப மென்பர். அங்ஙனமே பிரபஞ்சத்தின் மித்தியாத்தன்மையும் சுருதி முதலிய பிரமாணங்களால் நிச்சயிக்கப்பட்டதாம். அதனாலே பிரபஞ்ச சத்தியத்

தன்மையின் பிரதிக்ஷேபமுண்டாகின்றது. சுக்தியில் இரஜதத்தின் தாதாத்மியம் பிரமசித்தமாம்; பிரமாணத்தால் நிச்சயிக்கப்பட்டதன்று. அதனால் இரஜதபேதத்தின் பிரதிக்ஷேபமுண்டாகிறதில்லை. மாறாகிய சுக்தியில் இரஜதபேதம் பிரமாணத்தால் நிச்சயிக்கப்பட்டதாம். அதனால் இரஜத தாதாத்மியத்தின் பிரதிக்ஷேபமுண்டாகின்றது. பிரபஞ்சத்தின் மித்தியாத்துவமையின் மித்தியாத்துவத்தை வியாவகாரிகமாகக் கொண்டால், அதன் தர்மியாகிய பிரபஞ்சத்தைச் சத்தியமெனக் கொள்ளல் முற்றும் விருத்தமாம். ஏனெனின் வியாவகாரிக தர்மத்தின் ஆசிரயம் வியாவகாரிகமே யாகின்றது. ஆதலால் துவைதவாதியின் இரண்டாவது ஆக்ஷேபமும் அசங்கதமாம்.

## உகூங. அத்வைத தீபிகையிற் கூறிய சமாதானம் சத்தையின் பேதத்தை அங்கீகரிக்கிற் சம்பவித்தலும், ஒரு சத்தையை அங்கீகரிக்கின் சம்பவியாமையும்.

இவ்வாறாயினும் அத்வைததீபிகையின்படி பிரதிக்ஷேபக தர்மத்தின் சமான சத்தையுடையது தர்மியாமாயின், அதன் விரோதியாகிய தர்மத்திற்குப் பிரதிக்ஷேபமுண்டாமென்னும் நியமத்தை அங்கீகரிக்கின், பிரபஞ்சத்தின் மித்தியா வடிவ மித்தியாத்தன்மையினால் பிரபஞ்சத்தினது சத்தியத்தன்மையின் பிரதிக்ஷேபம் சம்பவிக்கின்றது. பிரஹ்மத்தின் சப்பிரபஞ்சத் தன்மையினால் நிஷ்பிரபஞ்சத் தன்மையின் பிரதிக்ஷேபமுண்டாகிறதில்லை. ஆனால் சத்தாபேதமங்கீகரிக்கின், அத்வைத தீபிகையிற் கூறிய சமாதானம் சம்பவிக்கின்றது. பிரஹ்ம வடிவ சத்தையின் விபாகமே கடமுதலியவற்றினுண்டாகின்றது. வியாவகாரிக பிராதிபாசிக பதார்த்தங்களில் பின்ன சத்தை யில்லையெனினும் இப்பக்ஷத்தில் ஒரு சத்தையை அங்கீகரிக்கின் முற்கூறியசமாதானம் சம்பவியாது.

## உகூச. முற்கூறிய ஆக்ஷேபத்திற்கு நூலாசிரியர் நிச்சலதாசர் கூறிய சமாதானம்.

ஆனால் எமது பாவனையினால் இது சமாதானமாம்:—பிரமாணத்தால் நிச்சயிக்கப்பட்ட தர்மத்தோடு தனது விரோதியாகிய தர்மத்திற்குப் பிரதிக்ஷேபமுண்டாகின்றது. இரண்டு தர்மங்க

னும பிரமாணத்தால் நிச்சயிக்கப்பட்டன வாகும். இடத்துப் பிறதர்ம த்திற்குப் பிரதிக்ஷேப முண்டாகிறதில்லை. பிரபஞ்சத்தின் மித்தியா த்தன்மை சுருதிமுதலிய பிரமாணங்களால நிச்சயிக்கப்பட்டதாம். பிரபஞ்சத்தின் சத்தியத்தன்மையில் ஒரு சுருதி வாக்கியமும பிர மாணமாவதில்லை. யாதொன சுருதிவாக்கியங்களால சத்தியத்தன்மை யின் அபாவம கூறுகின்றது. ஆதலால பிரபஞ்சத்தின் மித்தி யாத்தன்மையினால சத்தியத்தன்மையின் பாத முண்டாகின்றது. "கட மிருக்கின்ற" தென்பதாகிய பிரத்தியக்ஷப் பிரமாணத்தினால் பிரபஞ்சத்தில சத்தியத்தனமை தோற்றிய போதிலும், அபௌரு ஷேய சுருதி வசனங்களினும புருஷப்பிரத்தியக்ஷம் வலியின்றிய தாம. ஆதலால் பிரபஞ்சத்தின சத்தியத்தன்மை பிரமாண சித்த மன்று. பிரஹ்மத்தின சப்பிரபஞ்சத்தனமை நிஷ்பிரபஞ்சத்தன் மை யிரண்டும் பிரமாண சித்தமாம. ஆதலால ஒரு தாமத்தினால் மற்றொன்றின் பாத முண்டாகிறதிலலை. ஆனால நிஷ்பிரபஞ்சத்த னமை ஞானத்தினால் பரம புருஷார்த்தத்தின பிராபதி உண்டாகி ன்றது. ஆதலால நிஷ்பிரபஞ்சத தன்மையைப் பிரதிபாதித்தலில் சுருதிக்குத தாற்பரியமாம. அத்வைத நிஷ்பிரபஞ்ச பிரஹ்மத்தி னது போதத்திற்கு உபயோகி, சப்பிரபஞ்சத்தின் நிரூபணமாம. ஆதலால்சப்பிரபஞ்சத்தனமை நிரூபணத்திலசுருதிக்குததாற்பரிய மின்மையால் சப்பிரபஞ்சத்தன்மை பாரமார்த்திகமன்று; கற்பித மாம். ஆனால் தோஷ முதலியவைகளின்றிய கேவல அவித்தியா ஜந் நியமா யிருத்தலால பிராதிபாஸிகமன்று; வியாவகாரிகமாம. இவ் வாற்றால நிஷ்பிரபஞ்சத் தனமையினால் சப்பிரபஞ்சத்தன்மையின் பாதம சித்திக்கின்றது. ஏனெனின சப்பிரபஞ்சத் தனமையைக் கூறும வாக்கியத்திற்கு வியாவகாரிக சப்பிரபஞ்சத தனமையில் தாற்பரியங் கூறுதலால சப்பிரபஞ்சத்தன்மையின சங்கோச முண் டாகின்றது. பிரஹ்மத்தின சப்பிரபஞ்சத்தனமை எப்போது மி ல்லை. ஆனால வித்தைக்குமுன் அவித்தியாகாலத்தி லிருக்கின்றது. ஆதலால நிஷ்பிரபஞ்சத்தனமையத தாமத்தால பாதிக்கப்படுவது பிரபஞ்சத்தன்மையாம. அதனால் நிஷ்பிரபஞ்சத்தனமையின் பிரதி க்ஷேபம சம்பவிக்கிறதில்லை. ஆதலால துவைத வாதியின் ஆக்ஷே பம அசங்கதமாம்.

---

## வேறு நூலாசிரியர் கூறிய சமாதானம்.

அன்றியும் நிருசிம்ஹாசிரமாசாரியருக்கநியமான நூலாசிரியர் முற்கூறிய ஆக்ஷேபத்திற்கு இச்சமாதானங் கூறியிருக்கின்றனர்:—சுவாசிரயகோசர தத்துவ சாக்ஷாத்காரத்தினால் எந்தத் தர்மத்திற்குப் பாத முண்டாகிறதில்லையோ, அந்தத் தர்மத்தினால் விரோதிதர்மத்தின் பிரதிக்ஷேபம் உண்டாகின்றது. சுவாசிரயகோசர தத்துவ சாக்ஷாத்காரத்தினால் எந்தத் தர்மத்தின் பாதம் உண்டாகின்றதோ, அதனால் சுவ விரோதிதர்மத்தின் பிரதிக்ஷேப முண்டாகிறதில்லை. மித்தியாத்துவத்தின் ஆசிரயமாகிய பிரபஞ்சம் யாதோ அதனதிஷ்டானமாகிய பிரஹ்மத்தைக் கோசரிக்கும் தத்துவ சாக்ஷாத்காரத்தினால் பிரபஞ்சத்தினது மித்தியாத்தன்மையின் பாத முண்டாகிறதில்லை. மாறான பிரஹ்ம சாக்ஷாத்காரத்தினால் பிரபஞ்சத்தில் மித்தியாத்துவ ப்ரதிஷ்டமான மித்தியாத்துவ ப்ரதீதி உண்டாகின்றது. ஆதலால் பிரபஞ்சத்தின் மித்தியாத்தன்மையினால் அதற்கு விரோதியான சத்தியத்தன்மையின் பிரதிக்ஷேப முண்டாகின்றது. சப்பிரபஞ்சத்தன்மையின் ஆசிரயம் பிரஹ்மம். அதன் சாக்ஷாத்காரத்தால் சப்பிரபஞ்சத்தன்மையின் பாதமுண்டாகின்றது. ஆதலால் பிரஹ்மத்தின் நிஷ்பிரபஞ்சத்தன்மையினால் சப்பிரபஞ்சத்தன்மையின் பாதமுண்டாகின்றது. எங்ஙனம்: சுத்தியில் சுவதாதாத்மிய மிருக்கின்றது; கற்பிதத்திற்கும் தனது அதிஷ்டானத்தில் தாதாத்மிய மிருத்தலால் இரஜத தாதாத்மிய மிருக்கின்றது. ஆண்டுச் சுத்தி சாக்ஷாத்காரத்தினால் சுத்தி தாதாத்மியத்தின் பாத முண்டாகிறதில்லை. ஆதலால் சுத்தி தாதாத்மியத்தினால் சுவவிரோதி சுத்தி பேதத்தின் பிரதிக்ஷேப முண்டாகின்றது. சுத்தி சாக்ஷாத்காரத்தினால் இரஜத தாதாத்மியத்தின் பாதமுண்டாகின்றது. ஆதலால் இரஜத தாதாத்மியத்தினால் சுவவிரோதி இரஜதபேதத்தின் பிரதிக்ஷேப முண்டாகிறதில்லை. அங்ஙனமே பிரபஞ்சத்தின் மித்தியா வடிவ மித்தியாத்தன்மையால் சத்தியத்தன்மையின் பிரதிக்ஷேப முண்டாகின்றது. பிரஹ்மத்தின் சப்பிரபஞ்சத் தன்மையினால் நிஷ்பிரபஞ்சத் தன்மையின் பிரதிக்ஷேப முண்டாகிறதில்லை. இவ்வாறு துவைதவாதியின் ஆக்ஷேபத்திற்கு அநேக சமாதான முண்டு. அவர்கள் வசனங்களினின்றும் ஜிஞ்ஞாஸுக்களைப் புறமுகமாக்குதல் தகுதியாம்.

---

## ௨௬௬-௨௭௧. மதபேதத்தால் ஐந்துவகைப் பிரபஞ்சத்தின் சத்தியத்தன்மையினது பிரதிக்ஷேபம் (திரஸ்காரம்).

### ௨௬௬. தத்துவ சுத்திகாரர் கிரமப்படி பிரபஞ்சத்தின் சத்தியத்தன்மையினது பிரதிக்ஷேபம்.

பிரபஞ்சத்தின் மித்தியாத்தன்மையினால் அதன் சத்தியத் தன்மையினது பிரதிக்ஷேபம் உண்டாகுமென்று சொல்லப்பட்டது. ஆண்டுச் சத்தியத்தன்மையின் பிரதிக்ஷேபம் மதபேதத்தால் ஐந்துவகையாம். தத்துவசுத்திகாரர் மதத்தில் "கடமிருக்கின்றது" என்றல் முதலிய பிரத்தியக்ஷஞானத்தின் விஷயம் கடமுதலியவற்றின் அதிஷ்டானமாகிய சத்துவடிவ சேதனமாம். சத்து ரூபசேதனத்தில் அத்தியஸ்த கடமுதலியன தனது அதிஷ்டானத்திற்கு அபின்னமாய்ப் பிரமவிருத்திக்கு விஷயமாகின்றன. எங்ஙனம் சுத்தி ரஜ்ஜுமுதலியவற்றை விஷயஞ்செய்வதாகிய இதுவென்னும் வடிவ சாக்ஷாத் விருத்தி உண்டாகின்றதோ, இரஜத சர்ப்பமுதலியன சாக்ஷாத் விருத்திக்கு விஷயமாகாது, பிரமவிருத்திக்கு விஷயமாகின்றனவோ, அங்ஙனமே நேத்திரமுதலிய பிரமாண ஜந்திய சகல ஞானங்களுக்கும் விஷயம் அதிஷ்டான சத்தையாம். கடமுதலியவற்றைக் கோசரிப்பது பிரமாணஜந்யவிருத்தியாகாது. ஏனெனின் அஞ்ஞாதகோசரம் பிரமாணமாகின்றது. ஜடபதார்த்தத்திற்கு அஞ்ஞானத்தாலாகிய ஆவரணம் சம்பவியாமையின் அஞ்ஞாதத்தன்மையின் அபாவத்தால் பிரமாண கோசரத்தன்மை சம்பவிக்கிறதில்லை. ஆதலால் இரஜதம் சர்ப்ப முதலியவற்றினைப் போலப் பிரமத்தின் விஷயம் கடாதிகளாம். அவற்றின் அதிஷ்டானம் சத்துவடிவமாம். அதுவே நேத்திராதிப் பிரமாண ஜந்திய விருத்திக்கு விஷயமாம். இவ்வாறுள்ள சகல பிரமாணங்களுக்கும் விஷயம் சத்ரூபசேதனமாம். சத்ரூபசேதனத்தில் தாதாத்மியத்தினால் அநேக பேதவிசிஷ்ட கட முதலியவற்றின் பிரதீதி பிரம வடிவமாம். ஆதலால் கட முதலியவற்றிலுள்ள சத்தை எப்பிரமாணத்திற்கும் விஷயமன்று. இதனாற்றான் கடமுதலியவற்றின் மித்தியாத்துவத்தை அநேக சுருதி ஸ்மிருதிகள் அநுவாதம் செய்கின்றன. தத்துவசுத்திகாரர் இவ்வாறு நேத்திர முதலிய பிரமாணத்திற்குக் கோசரமாவது அதிஷ்டான சத்தையென்று கூறியிருக்கின்றனர். கடமுதலியவற்றின் சத்தை நேத்திர முத

லிய பிரமாணத்தின் கோசரமன்று. ஆதலால் பிரபஞ்சத்தின் சத்தியத்தன்மைக்கும் பிரதிக்ஷேபம் சொல்லப்பட்டிருக்கின்றது.

## ௨௯௭. பிறநூலாசிரியர் கிரமப்படி பிரபஞ்சத்தின் சத்தியத்தன்மையினது பிரதிக்ஷேபம்.

அன்றியும் ஓர் நூலாசிரியர் இவ்வாறு கூறுகின்றனர்:—"கடமிருக்கின்றது" என்பன முதலிய உணர்ச்சிகளுக் கோசரமானது கடமுதலியவற்றின் சத்துவமாம். சுருதியுக்தி ஞானிகளது அநுபவம் என்பவைகளால் கடமுதலியவற்றில் மித்தியாத்துவ மிருக்கின்றது. ஆண்டுபாதிக்கப்படாத தத்துவவடிவ சத்துவத்திற்கு மித்தியாத்தன்மையோடு விரோதமிருத்தலின் கடமுதலியவற்றில் ஜாதிவடிவ சத்துவமிருக்கின்றது. எங்ஙனம் சகலகடங்களிலும் கலந்திருக்கும் தர்மம் கடத்துவமோ, அங்ஙனமே "கடமிருக்கின்றது" "படமிருக்கின்ற" தென்று ஒருவடிவமான உணர்ச்சிக்குக் கோசரமாவது சகல பதார்த்தங்களிலும் கலந்திருக்கும் தர்மமாகிய ஜாதிவடிவ சத்துவமாம். அல்லது தேசகாலங்களின் சம்பந்த மின்றியே கடமுதலியவற்றின் பிரதீதி உண்டாகிறதில்லை. தேச காலங்களின் சம்பந்த விசிஷ்ட கடமுதலியவற்றின் பிரதீதி உண்டாகின்றது. "ஈண்டுக் கடமிருக்கிறது" "இப்போது கடமிருக்கிற" தென்பதாகத் தேச சம்பந்தத்தினையும் காலசம்பந்தத்தினையும் கடமுதலியவற்றைக் கோசரிக்கும் பிரதீதி விஷயஞ் செய்கின்றது. அத்தேசசம்பந்த வடிவமே அல்லது காலசம்பந்த வடிவமே கட முதலியவற்றின் சத்துவமாம். அல்லது கடமுதலியவற்றின் சொரூபமே "கடமிருக்கின்ற" தென்னும் உணர்ச்சிக்கு விஷயமாம். கடமுதலியவற்றின் வேறாகிய சத்துவத்தைத் முற்கூறிய பிரதீதி விஷயஞ் செய்கிறதில்லை. ஏனெனின், ந என்னும் சொல்லின்றிய வாக்கியத்தினால் எந்தப் பிரதீதி உண்டாகின்றதோ, அதன் நிஷேதம் ந (இல்லை) என்னும் சொல்லோடுகூடிய வாக்கியத்தினால் உண்டாகின்றது. "கடமில்லை" யென்னும் வாக்கியத்தினால் கடத்தினது சொரூபத்தின் நிஷேத முண்டாகின்றது. இது எல்லோருக்கும் சம்மதமாம். ஆதலால் "கடமிருக்கின்ற" தென்னும் ந என்னும் சொல்லின்றிய வாக்கியத்தினால் கடத்தினது சொரூப மாத்திரத்தின் போதத்தினையே அங்கீகரித்தல் உசிதமாம். இவ்வாற்றால் "கடமிருக்கின்ற" தென்னும் பிரதீதியின் கோசரம் கடத்தின்

சொரூபமாம். ஆதலால் சொரூபத்திற்கு அதிக்கிரமித்த கடமுத லியவற்றில் சத்துவத்தின் அபாவத்தால் அதன் பிரதிக்ஷேபத்தைக் கூறியிருக்கின்றனர்.

## ௨௬௮. நியாயசுதாகாரர் கிரமப்படி பிரபஞ்சத்தினது சத்தியத்தன்மையின் பிரதிக்ஷேபம்.

அன்றியும் நியாயசுதாகாரர் மதத்தில் அதிஷ்டானத்தின்கண் ணுள்ள சத்தையின் சம்பந்தம் கடமுதலியவற்றில் முற்கூறிய பிர தீதியின் கோசரமாம். தத்துவசுத்திகாரர் பக்ஷத்திலோ கடமுத லிய அநாத்மகோசரப் பிரதீதி பிரமாணஜந்யமன்று. கேவல அதி ஷ்டான சத்தையைக் கோசரிப்பது பிரமாணமாம். இம்மதத்தில் அதிஷ்டானசத்தையின் சம்பந்த விசிஷ்டகடாதிகள் பிரமாணத் தின் விஷயமாம். இத்துணைப் பேதமுளது. இவ்வாற்றால் கடமுத லியவற்றில் அதிஷ்டான சத்தையின் சம்பந்தமிருத்தலின், கட முதலியவற்றில் சத்துவம் தோற்றுகின்றது. கடமுதலியவற்றின் சத்துவத்தின் அபாவத்தால் அதன் பிரதிக்ஷேபம் சொல்லப்படு கின்றது. அதிஷ்டானசத்தையின் பிரதீதி கடமுதலியவற்றில் அங் கீகரிக்கின், அந்நியதாக்கியாதியின் அங்கீகாரமுண்டாகின்றது. ஆதலால் அதிஷ்டான சத்தையின் அநிர்வசநீய சம்பந்தம் கடமுத லியவற்றோடு உண்டாகின்றது என்று கூறுதலே உசிதமாம்.

## ௨௬௯. வேறு ஆசிரியர் கிரமப்படி பிரபஞ்சத்தினது சத்தியத்தன்மையின் பிரதிக்ஷேபம்.

அன்றியும் பூர்வாசிரியர் இவ்வாறு சத்துவத்தின் பிரதிக்ஷே பத்தைக் கூறுகின்றனர். சுருதியில் இது சொல்லப்பட்டிருக்கின் றது:— "ப்ராணா வை ஸத்யம் தேஷாமேஷ ஸத்யம்-பிராணன் சத்தியமாம். அதனின் இது சத்தியமாம்" என்பதாம். பிரா ணன் என்னும் சொல்லின் பொருள் இரணியகர்ப்பம்; இரணி யகர்ப்பம் சத்தியமாம்; அதனை அபேக்ஷித்துப் பரமாத்மா மேலான சத்தியமாம் என்பது சுருதியின் அர்த்தம். 'ஸத்யஸ்ய ஸத்யம்-சத்தியத்திற்குச் சத்தியம்" என்பதாக வேறு சுருதி யிருக்கின் றது. அநாத்ம சத்தியத்தன்மையினும் ஆத்ம சத்தியத்தன்மை மே லானதாம் என்பது சுருதியின் அர்த்தம். எங்ஙனம் அந்நியராஜனை அபேக்ஷித்து மேலான ராஜனை இராஜ இராஜனென்று சொல்லுகி

ன்றனரோ, அங்ஙனமே மேலான சத்தியத்தைச் சத்தியத்தின் சத்தியமென்று சொல்லியிருக்கின்றது. இவ்வாற்றால் சுருதிவாக்கியங்களில் சத்தியத்திற்கு உயர்வுதாழ்வு கூறப்பட்டிருக்கின்றது. ஆண்டு வேறுவித உயர்வு தாழ்வு சம்பவியாது. எப்போதும் பாதிக்கப்படுந்தன்மையின்மையும் சிறிதுகாலம் பாதிக்கப்படுந்தன்மையின்மையுமாகிய வடிவமே சத்தியத்தன்மையில் உயர்வுதாழ்வுகளாம். அநாத்மபதார்த்தங்களில் ஞானத்திற்கு முற்காலத்தில் பாதிக்கப்படுந் தன்மையின்மை வடிவ சத்தியத்துவமிருக்கின்றது. பரமாத்மவஸ்துவில் எப்போதும் பாதிக்கப்படுந்தன்மை யின்மை வடிவ சத்தியத்துவமிருக்கின்றது. ஆகையால் இரணியகருப்பனே தாழ்ந்த சத்தியமாம்; பரமாத்மா மேலான சத்தியமாம். இவ்வாற்றால் இருவகைச் சத்தியத்துவமும் சுருதிசம்மதமாம். அவற்றில் சிறிதுகாலம் பாதிக்கப்படுந்தன்மையின்மை வடிவ சத்தியத்தன்மைக்கு மித்தியாத்தன்மையோடு விரோதமில்லை. ஆனால் எப்போதும் பாதிக்கப்படுந்தன்மை யின்மை வடிவ சத்தியத்தன்மைக்கு மித்தியாத்தன்மையோடு விரோதமிருத்தலின், அதற்குப் பிரபஞ்சத்தின் மித்தியாத்தன்மையோடு பிரதிக்ஷேப முண்டாகின்றது.

## ௨௭௦. சம்க்ஷேபசாரீரகத்தின்படி பிரபஞ்சத்தினது சத்தியத்தன்மையின் பிரதிக்ஷேபம்.

சம்க்ஷேப சாரீரகத்தில் இது சொல்லப்பட்டிருக்கின்றது:— பிரத்தியக்ஷமுதலிய பிரமாணங்களால் கடமுதலியவற்றில் சத்தியத்தன்மை தோற்றுகின்றது. அங்ஙனமாயினும், பிரஹ்மத்தைப் போதிக்கும் வாக்கியங்களிலேயே பிரமாணத்தன்மை யிருக்கின்றது. அநாத்மாவைக் கிரகிக்கும் பிரத்தியக்ஷமுதலியன பிரமாணாபாசங்களாம்; பிரமாணங்களன்று. ஏனெனின் அறியப்படாத அர்த்தத்தின் போதத்தை யுண்டுபண்ணுவது பிரமாணமாம். அஞ்ஞானத்தினாலாகிய ஆவரணத்திற்கு ஜடபதார்த்தங்களில் சம்பவமின்மையால், சேதனத்திற்கு வேறாகியவற்றில் அஞ்ஞாதத்தன்மையின் அபாவத்தால் அவற்றை அறிவிக்கும் பிரத்தியக்ஷமுதலியவற்றிற்குப் பிரமாணத்தன்மை சம்பவியாது. இவ்வாற்றால் பிரமாணாபாசத்தினால் கடமுதலியவற்றில் சத்தியத்தன்மையின் சித்தி உண்டாகின்றது. சுருதிவடிவப் பிரமாணத்தினால் கடமுதலியவற்றில் மித்தியாத்தன்மையின் சித்தி உண்டாகின்றது. முக்கி

யப் பிரமாணத்தினால் பிரமாணுபாசத்தின் பாதவாயிலாகச் சத்தியத்தன்மையின் பிரதிக்ஷேப முண்டாகின்றது. இவ்வாறு பிராரத்தில் அத்தியந்தம் பாதிக்கப்படுந்தன்மை யின்மை வடிவ சத்தியத்தன்மையின் பிரதிக்ஷேபம் ஐந்துவிதமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆதலால் பிரபஞ்சம் மித்தையாம்.

## ௨௭௧—௨௮௦. கர்மம் ஞானசாதனமாதலில் விசாரம்.

### ௨௭௧ மித்தையாகிய பிரபஞ்சத்தின் நிவிருத்தியில் கர்மத்தின் உபயோகமின்மையை அநுவதித்தலோடு சித்தாந்தத்தின் இருவகைச் சமுச்சயத்தை நிச்சயித்தல்.

மித்தையின் நிவிருத்தியில் கர்மத்தின் உபயோகமில்லை. ஆதலால் கேவல கர்மத்தால் அல்லது கர்மசமுச்சித (கலப்புள்ள) ஞானத்தினால் அநர்த்த நிவிருத்தி சம்பவியாது. கேவல ஞானத்தினால் அநர்த்த நிவிருத்தி உண்டாகுமென்னும் பொருள் அத்வைத வாதத்தின் நூல்களில் மிகப் பிரசித்தமாம். பாஷையிலும் விசாரசாகரத்தின் ஆறாவது தரங்கத்தில் ஸ்பஷ்டமாம்; ஆதலால் இங்கு எழுதப்படவில்லை. இந்த ஸ்தானத்தில் இது சித்தாந்தமாம். அநேக சுருதிஸ்மிருதிகளில் கர்ம சமுச்சித (கலப்புள்ள) ஞானத்தினால் மோக்ஷப்பிராப்தி சொல்லப்பட் டிருக்கின்றது. பாஷியகாரரால் அநேக இடங்களில் சமுச்சயவாதத்தின் நிஷேதம் பிரதிபாதனம் செய்யப்பட்டிருக்கின்றது. ஆஃடு இது நிச்சயமாம்:—சமசமுச்சயம் கிரமசமுச்சய மென்னும் பேதத்தால் சமுச்சயமிருவகையாம். ஞானம் கர்ம மிரண்டும் ஒன்றற்கொன்று சேர்ந்து மோக்ஷத்திற்குச் சாதனமா மென்றறிந்து ஒரேகாலத்தில் இரண்டையும் அநுஷ்டித்தல் சமசமுச்சயம் எனப்படுகின்றது. ஒரே அதிகாரிக்கு முன் கர்மத்தை அநுஷ்டித்தலும் பிறகாலத்தில் சகல கர்மங்களையும்விட்டு ஞானத்திற் கேதுவாகிய சிரவணாதிகளை அநுஷ்டித்தலும் கிரமசமுச்சய மெனப்படுகின்றது. அவற்றில் சமசமுச்சயத்திற்கோ நிஷேதமுண்டு. சுருதிஸ்மிருதிகளில் ஞானகர்மங்களுக்கு யாண்டுஞ் சமுச்சய மெழுதப்பட்டிருக்கின்றதோ, அதற்கு முற்கூறிய கிரமசமுச்சயத்தில் தாற்பரியமாம்.

---

## உஎஉ. பாஷியகாரர்கூறிய சாதனத்தன்மை.

பாஷியகாரர் சித்தாந்தம் இதுவாம்:—மோக்ஷத்திற்கு நேர் சாதனம் கர்மமன்று. மோக்ஷத்திற்கு நேர் சாதனம் ஞானமாம். ஞானத்திற்குச் சாதனம் கர்மமாம்.

## உஎங. வாசஸ்பதிமிசிரர் ஞானவிருப்பத்திற்குச் சாதனமாமெனல்.

ஆனால் பாமதி நிபந்தனமென்னும் நூலில் வாசஸ்பதிமிசிரர் இது கூறியிருக்கின்றனர்:—ஞானத்திற்குச் சாக்ஷாத்சாதனம் கர்மமன்று. ஜிஞ்ஞாஸைக்(ஞானவிருப்பிற)குச் சாதனம் கர்மமாம். ஏனெனின் கைவல்யசாகையில் சகல ஆசிரம தர்மங்களும் விவிதிஷைக்குச் சாதனமாமென்று ஸ்பஷ்டமாகக் கூறியிருக்கின்றது. ஞானவிருப்பத்தினை விவிதிஷையென்பர். மூன்றாவது அத்தியாயத்தில் சர்வகர்மங்களுக்கும் ஞானத்தில் அபேக்ஷையைச் சூத்திரகாரர் கூறியிருக்கின்றனர். ஆண்டு சூத்திரவியாக்கியானங்களில் பாஷியகாரர் இது கூறியிருக்கின்றனர்:—சமதமாதி சாதனங்களோ ஞானத்திற்குச் சாதனமாமாகலின், ஞானத்திற்குச் சமீபமாம். ஜிஞ்ஞாஸைக்குச் சாதனம் கர்மமாம்; ஆதலால் சமம் தமம் முதலியவற்றின் அபேக்ஷையால் ஞானத்திற்குத் தூரமாம். இவ்வாற்றால் சுருதி வசனத்தினாலும் பாஷிய வசனத்தினாலும் ஜிஞ்ஞாஸைக்கு நேர் சாதனம் கர்மமாம்; ஜிஞ்ஞாஸை வாயிலாக ஞானத்திற்கும் சாதனமாம். ஞானத்திற்குச் சாக்ஷாத்சாதனமே கர்மமெனின், ஞானமுதிக்குமவரையில் கர்மாநுஷ்டானத்தின் அடைவுண்டாகுதலால் ஞானத்தோடு கர்மத்தியாகவடிவ சந்நியாசத்திற்கு லோபமுண்டாகும். ஆதலால் ஜிஞ்ஞாஸைக்குச் சாதனம் கர்மமாமென்பது வாசஸ்பதியின் மதம்.

## உஎச. விவரணகாரர்கூறிய கர்மம் ஞானத்திற்குச் சாதனமாந்தன்மை.

விவரணகாரர் மதம் இதுவாம்:—"வேதாநுவசநேந விவிதிஷந்தி - வேதவாக்கியத்தால் அறிய விரும்புகின்றனர்" என்பதாகச் சுருதியில் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆண்டு அக்ஷரமரியாதையோடு வேதாத்தியயனமுதலிய தர்மங்களுக்கு விவிதிஷையின் சாதனத்தன்மை தோற்றுகின்றது. அங்ஙனமாயினும் இச்

சைக்கு விஷயமாகிய ஞானத்தின் சாதனத்தன்மையிலேயே சுருதிக்குத் தாற்பரியமாம். காமத்திற்கு இச்சையின் சாதனத்தன்மையில் சுருதிக்குத் தாற்பரியமில்லை. எங்ஙனம்: குதிரையினாற் போக விரும்புகின்றான் என்னும் வாக்கியத்தினால் அக்ஷர மரியாதையினால் போகுதலைக் கோசரிக்கும் இச்சைக்குச் சாதனமாதல் அசுவத்திற்குத் தோற்றுகின்றது. சஸ்திரத்தால் கொல்லவிரும்புகிறானென்னும் வாக்கியத்தினால் கொல்லுதலைக் கோசரிக்கும் இச்சையின் சாதனத்தன்மை சஸ்திரத்திற்குத் தோற்றுகின்றது. ஆண்டு இச்சைக்குக் கோசரமாகும் போகுதல் யாதோ அதன் சாதனத்தன்மை குதிரையிற் கருதப்பட்டதாம். இச்சைக்கு விஷயமாகிய கொல்லுதலின் சாதனத்தன்மை சஸ்திரத்தில் கருதப்பட்டதாம். அங்ஙனமே இச்சைக்கு விஷயமான ஞானத்தின் சாதனத்தன்மை கருமங்களுக்குக் கருதப்பட்டது. இன்னும் இப்பக்ஷத்தில், கருமங்களுக்கு ஞானத்தின் சாதனத்தன்மையை அங்கீகரிக்கின், ஞானோதய பரியந்தம் கர்மாநுஷ்டானத்தின் ஆபத்தியிருத்தலால் சந்நியாசத்திற்கு லோபமுண்டாகும் என்று தோஷஞ் சொல்லப்பட்டிருக்கின்றது. அதற்கு இது சமாதானமாம்:—எங்ஙனம் விதை விதைத்தற்குமுன் பூமியின் * காஷணம் (பிளப்பு) உண்டாகின்றதோ, விதை விதைத்தபின் பூமியி (மண்ணி)ன் ஆகாஷணம் (தவிதல்) உண்டாய நெல் முதலியவற்றின் சித்தி பூமியின் ஒதுக்குதல் சேர்த்தல்களால் உண்டாகின்றதோ, அவ்விதமே காமத்தினாலும் காமசந்நியாசத்தினாலும் ஞானத்தின் சித்தி உண்டாகின்றது. அந்தக்கரணத்தின் சுத்திவாயிலாகப் பிரத்தியகத்தத்துவத்தின் தீவிர ஜிஞ்ஞாசை வைராக்கியத்தோடு உண்டாகின்றது. அதுபரியந்தம் காமம் செய்யவேண்டியதாம். வைராக்கியத்தோடு தீவிர ஜிஞ்ஞாசை உண்டாகியபின், சாதனத்தோடு காமங்களை விடுதலாகிய சந்நியாசம் செய்யவேண்டியதாம். இவ்வாற்றால் ஞானத்திற்குச் சாதனம் காமமாம். அங்ஙனமாயினும் தீவிரஜிஞ்ஞாசைக்கு முன்னரே செய்யவேண்டியதாம். தீவிர ஜிஞ்ஞாசைக்குப் பிற்காலத்தில் சந்நியாசத்தின் அங்கமான சமமுதலியனவே செய்யவேண்டியனவாம்; காமமன்று. ஆதலால் காமத்தின் அபேக்ஷையால் சமமுதலியவற்றிற்கு அந்தரங்கத்தன்மையைப் பிரதிபாதிக்கும் மூன்றாமத்தியாயத்திலுள்ள

---

* காஷணம்=உழுதல்.

பாஷ்யவசனங்களுக்கு விரோதமில்லை. இவ்வாற்றால் விவரணகாரமதத்தில் கர்மம் ஞானத்திற்குச் சாதனமும், வாசஸ்பதியின் மதத்தில் விவிதிஷைக்குச் சாதனமுமாம்.

இரண்டு மதங்களிலும் விவிதிஷைக்கு முந்திய காலத்தில் கர்மத்தின் அநுஷ்டானமும், பிந்திய காலத்தில் சம முதலியவற்றோடு சந்நியாச பூர்வகமான சிரவண முதலியவற்றின் அநுஷ்டானமும் உண்டு. விவிதிஷைக்குப் பிந்திய காலத்தில் ஒருவருடைய மதத்திலும் கர்மம் கர்த்தவ்வியமன்று.

## உஎரு. வாசஸ்பதி விவரணகாரர்களது மதத்தின் விலக்ஷணத்தன்மையிற் சங்கை.

இந்த ஸ்தானத்தில் இச்சங்கை யுண்டாகின்றது.—இரண்டு மதங்களிலும் விவிதிஷைக்கு முந்திய காலத்திலேயே கர்மம் செய்யவேண்டியதாயின், மதபேத நிரூபணம் நிஷ்பலமாகும். ஏனெனின் வாசஸ்பதியின் மதத்தில் கர்மத்தின் பலம் விவிதிஷையும், விவரணகாரர் மதத்தில் கர்மத்திற்குப் பலன் ஞானமுமாம். பலம் சித்தியாயின் சாதனத்தின் தியாகமுண்டாகும். ஆதலால் வாசஸ்பதியின் மதத்தில் விவிதிஷை சித்திக்குமவரையில் கர்மாநுஷ்டானத்தை அங்கீகரித்து, விவரணகாரர் மதத்தில் விவிதிஷைக்குப் பிந்திய காலத்திலும் ஞானம் சித்திக்கும் வரையில் கர்மாநுஷ்டானத்தை அங்கீகரிக்கின், இரண்டு மதங்களிலும் விலக்ஷணத்தன்மை சம்பவிக்கின்றது. வாசஸ்பதியின் மதத்தை யநுசரித்த ஜிஞ்ஞாசு கர்மத்தைவிட்டு, விவரணகாரர் மதத்தை யநுசரித்த ஞானத்திற்கு முந்திய ஜிஞ்ஞாசு கர்மாநுஷ்டானத்தைச் செய்யின் மதபேத நிரூபணம் ஸபலமாகும். முற்கூறியபடி இரண்டு மதங்களிலும் விவிதிஷையின் சித்தியினால் கர்மத்தியாக மங்கீகரிக்கின் பரஸ்பர விலக்ஷணத்தன்மை தோற்றுகிறதில்லை. ஆதலால் மதபேத நிரூபணம் நிஷ்பலமாம்.

## உஎசா. முற்கூறிய சங்கைக்குச் சமாதானம்.

அதற்கு இது சமாதானமாம்.—இரண்டு மதங்களிலும் விவிதிஷை பரியந்தமே கர்மத்தின் அநுஷ்டானமாம். அங்ஙனமாயினும் மதபேதத்தால் கர்மத்தின் பலத்தில் விலக்ஷணத்தன்மையிருக்கின்றது. அது வருமாறு:—வாசஸ்பதியின் மதத்தில் கர்மத்தின்

பலம் விவிதிஷையாம். விவிதிஷையின் உற்பத்தி யுண்டாகக் கர்ம ஜந்ய அபூர்வத்திற்கு நாச முண்டாகின்றது. விவிதிஷை உண்டாகியும் உத்தம குரு லாபமுதலிய சாமக்கிரி உண்டாயின் ஞானமுண்டாகும். எந்தச் சாதனத்தின் குறைவாவது இருக்குமாயின் ஞானமுண்டாகாது. கர்மத்தின் வியாபாரம் விவிதிஷையின் உற்பத்தியிலுளது. தத்துவஞானம் கர்மத்தின் பயனன்று. ஆதலால் ஞானத்தின் உற்பத்தியில் கர்மத்தின் வியாபாரமில்லை. இவ்வாற்றால் வாசஸ்பதியின் மதத்தில் விவிதிஷைக்கு ஏதுவான கர்மாநுஷ்டானம் செய்தும், ஞானத்தின் சித்தி நியமமாக உண்டாகிறதில்லை. ஆனால் உத்தம பாக்கியத்தினால் சகல சாமக்கிரிகளும் சித்திக்கின் ஞானமுண்டாம். ஆதலால் ஞானத்தின் பிராப்தி நியத மன்று. விவரணகாரர் மதத்தில் விவிதிஷைக்கு முற்காலத்தில் அநுஷ்டிக்கப்பட்ட கர்மத்திற்கும் ஞானம் பலமாம். ஆதலால் பலத்தின் உற்பத்தியின்றி கர்ம ஜந்ய அபூர்வத்திற்கு நாசம் உண்டாகாமையால், ஞானத்தின் உற்பத்தி பரியந்தம் கர்ம ஜந்ய அபூர்வ மிருக்கின்றது. எவ்வளவு சாமக்கிரியின்றிக் கர்மத்தின் பலமாகிய ஞானமுண்டாகிறதில்லையோ, அவ்வளவு சாமக்கிரியைக் கர்மம் சம்பாதிக்கின்றது. இவ்வாற்றால் இப்பக்ஷத்தில் ஞான ஏதுவாகிய கர்மத்தை அநுஷ்டானஞ் செய்யின் நிகழும் சரீரத்திலேனும்; இனி வரும் சரீரத்திலேனும் அவசியம் ஞானமுண்டாகின்றது. ஆதலால் ஞானத்தின் உற்பத்தி நியதமாம். இவ்வாற்றால் வாசஸ்பதியின் மதத்தில் சுப கர்மத்தினால் விவிதிஷை நியமமாக உண்டாகின்றது. ஞானத்தின் சித்தி நியதமன்று. விவரணகாரர் மதத்தில் அதே கர்மத்தினால் ஞானத்தின் உற்பத்தி நியமமாக உண்டாகின்றது. ஆதலால் இரண்டு மதங்களுக்கும் பரஸ்பர பேத முண்டு; கலப்பில்லை. விவிதிஷைக்கு ஏது கர்மமாம்; அல்லது ஞானத்திற்கு ஏதுவாம். இரண்டு மதப்படி வேதாத்தியயனம், யாகம், தானம், கிருச்சிரசாந்திராயண முதலிய ஆசிரம கர்மங்களுக்கே வித்தையில் உபயோகமிருக்கின்றது.

## ௨௭௭. ஓர் ஆசிரியர் மதப்படி வர்ணமாத்திரத்தின் தர்மங்கள் வித்தையில் உபயோகமாமெனல்.

வர்ண மாத்திரத்தின் தர்மங்கள் வித்தையில் உபயோகமாமென்று ஒரு ஆசிரியர் கூறுகின்றனர்.

 உஎஅ. கல்பதருகாரர் மதப்படி சகல 

## நித்திய கருமங்களும் வித்தையில் உபயோகமாமெனல்.

கல்பதருகாரர் மதம் இதுவாம்:—சகல நித்திய கர்மங்களுக்கும் வித்தையில் உபயோகமுண்டு. ஏனெனின் சூத்திரகாரரும் பாஷியகாரரும் ஆசிரமமின்றிய புருஷர்களுக்கும் வித்தைக்கு ஏதுவாகிய கர்மத்திலும், அங்ஙனமே சிரவண முதலியவற்றிலும் அதிகாரம் சொல்லியிருக்கின்றனர். அங்ஙனமே ரைக்வர் வாசக்நவி முதலிய ஆசிரமமின்றியவர்களுக்கும் பிரஹ்மவித்தை சுருதியிற் கூறப்பட்டிருக்கின்றது. வாசக்நவி புத்திரி கார்க்கியினை வாசக்நவி யென்பர். ஆசிரம கர்மங்களுக்கே வித்தையில் உபயோக முளதாயின், ஆசிரமமின்றிய புருஷர்களிடத்தில் ஞானத்தை யுண்டுபண்ணும் கர்ம மின்மையால் ஞானமுண்டாகலாகாது. ஆதலால், ஜபம், கங்கா ஸ்நானம், தேவதா த்தியான முதலியவற்றோடு கூடிய சகல சுபகர்மங்களுக்கும் வித்தையில் உபயோக முண்டு. இது கல்பதருகாரர் மதம். ஆனால் கல்பதருகாரர் மதத்திலும் காமிய கர்மத்திற்கு வித்தையில் உபயோக மில்லை. ஆனால் நித்திய கர்மத்திற்கே வித்தையில் உபயோகமுண்டு. ஏனெனின் வேறுவிதமாகவோ வித்தையில் கர்மத்தின் உபயோகம் சம்பவிக்கிறதில்லை. வித்தையின் பிரதிபந்தகமான பாவத்தின் நிவிருத்தி வாயிலாகவே வித்தையில் கர்மத்தின் உபயோக முண்டாகின்றது. காமிய கர்மத்தினால் சுவர்க்கம், புத்திரன் முதலியவற்றின் அடைவாகிய பயனுண்டாகின்றது. அதனால் பாவத்தின் நிவிருத்தி உண்டாகிறதில்லை. நித்திய கர்மத்தினாலேயே பாவத்தின் நிவிருத்தி உண்டாகின்றது. ஆதலால் சகல நித்திய கர்மங்களுக்கும் வித்தையில் உபயோகமுண்டு.

## உஎகூ. சம்க்ஷேபசாரீரக கர்த்தாவின் மதப்படி காமியமும் நித்தியமுமாகிய சகல சுபகர்மங்களுக்கும் வித்தையில் உபயோக முண்டெனல்.

சம்க்ஷேபசாரீரக கர்த்தா இது கூறியிருக்கின்றனர்:—காமியமும் நித்தியமுமாகிய சகல சுபகர்மங்களுக்கும் வித்தையில் உபயோக மிருக்கின்றது. ஏனெனின் "யஜ்ஞேந விவிதிஷந்தி - யாகத்தினால் அறிய விரும்புகின்றனர்." என்றிவ்வாறு கைவல்ய சாகையிற் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆண்டு நித்திய காமியங்களின் சாதாரணமாம யஜ்ஞமென்னும் சொல். "யஜ்ஞேநவாஹவை

நூ-டீ-இ- நாமநத்திஞல் பாவம் கெடுகின்றது.'' என்றல் முதலிய வாக்கியங்களால பல சுபகாமத்திற்கும பாவத்தைக் கெடுக்குந் தன்மை தோற்றுகின்றது. ஆதலால ஞானத்தின் பிரதிபநதக மான பாவத்தை நிவாததிக்கும் வாயிலாக நித்திய கர்மத்தைப் போல, காமிய காமத்திற்கும வித்தையில உபயோகமுண்டு. இது சம்க்ஷேபசாரீரக கர்த்தாவாகிய சர்வஞ்ஞாத்மமுநியின் மதம்.

## உ௮0—உ௮௬. சந்நியாசம் ஞானத்திற்குச் சாதனமா மென்பதில் விசாரம்.

## உ௮0 பாவநிவிருத்தி வாயிலாக ஞானத்திற்கு ஏதுவாதலால் கிரமமாகக் கர்மமும் சந்நியாசமுமாகிய இரண்டும் கர்த்தவ்வியமாமெனல்.

ஆதலால தீவிர முமுக்ஷுவானவன் பரியந்தம சகல சுபகாமங்களும் செய்யததக்கனவாம. மிகுந்திட வைராக்கியத்தோடுகூடிய தீவிர ஜிஞ்ஞாஸை உண்டாயின், சாதனத்தோடு காமத்தை விடுதலாகிய சந்நியாசம காத்தவ்வியமாம (செய்யத்தக்கதாம). எங்ஙனம் சுபகாமத்திஞல் பாவத்தின் நிவிருத்தி உண்டாகின்றதோ, அங்ஙனமே சந்நியாசத்திஞலும ஞானத்திற்குப் பிரதிபநதகமான பாவத்தின் நிவிருத்தி உண்டாகின்றது. ஞானத்திற்குப் பிரதிபந்தக மான பாவம் அநேகவிதமாம. அவற்றிற் சில பாவம் காமத்திஞலும, சில சந்நியாசத்திஞலும் நிவிருததி யாகின்றன. ஆதலால ஞானததிற்குப் பிரதிபநதகமான பாவத்தின் நிவிருததி வாயிலாகக் கர்மமும் சந்நியாசமுமாகிய இரண்டும் ஞானததிறகு ஏதுவாயிருததலின் கிரமமாகக் காததவ்வியமாம்.

## உ௮க. ஓர் ஆசாரியர்மதத்தில் சந்நியாசத்திற்குப் பிரதிபந்தகமாகிய பாவத்தின் நிவிருத்தியும், புண்ணியத்தின் உற்பத்திவாயிலாகச் சிரவணத்தின் சாதனத்தன்மையும்.

ஓர் ஆசிரியர் மதம இதுவாம:—கேவல பாவ நிவிருததிவாயிலாகவே சந்நியாசததிற்கு ஞானத்திறகுச சாதனமாந்தன்மையில்லை. ஆஞல் சந்நியாச ஜந்நிய அபூர்வத்தோடு கூடிய புருஷனுக்கே சிரவண முதலியவற்றிஞல ஞான முண்டாகின்றது. ஆத

லால் சிரவணத்தின் அங்கம் சந்நியாசமா யிருத்தலின், முமுக்ஷு பாவமின்றியவனுக்கும் சந்நியாசம் கர்த்தவ்வியமாம்.

## ௨௮௨. விவரணகாரர் மதத்தில் சந்நியாசம் ஞானப்பிரதிபந்தக விக்ஷேபத்தின் நிவிருத்தி வடிவ திருஷ்டபலத்திற்கு ஏதுவாதல்.

விவரணகாரர் மதம் இதுவாம்:—சந்நியாசமின்றி விக்ஷேபத்தின் அபாவமுண்டாகாது. ஆதலால் ஞானப்பிரதிபந்தக விக்ஷேபத்தின் நிவிருத்தி வடிவ திருஷ்ட பலமே சந்நியாசத்திற்காம். ஆதலால் ஞானப்பிரதிபந்தக பாபத்தின் நிவிருத்தி அல்லது ஞானத்திற்கு ஏதுவாகிய தர்மத்தின் உற்பத்தி வடிவ அதிருஷ்டபலத்திற்கு ஏது சந்நியாசமாமென்று கூறுதல் அயோக்கியமாம். யாண்டு திருஷ்டபலம் சம்பவிக்கிறதில்லையோ, ஆண்டு அதிருஷ்டபலத்தின் கற்பனை யுண்டாகின்றது. விக்ஷேப நிவிருத்தி வடிவ திருஷ்டபலம் சந்நியாசத்திற்குச் சம்பவிக்கின்றது. அதற்கு அதிருஷ்டபலம் கூறுதல் சம்பவியாது. சில பிரதான புருஷர்களுக்குப் பிற ஆச்சிரமங்களிலும் காமக் குரோதவடிவ விக்ஷேபத்தின் அபாவமுண்டாயின், காமங்களின் இடையில் வேதாந்தத்தின் விசாரம் சம்பவிக்கின், முற்கூறியபடி சந்நியாசம் வியர்த்தமாம். அங்ஙனமாயினும் "ஆஸுப்தேராம்ருதே: காலம் நயேத்வேதாந்தசிந்தயா—சுழுத்திபரியந்தமும் மரணபரியந்தமுமாகிய காலத்தை வேதாந்த சிந்தனையால் கழிக்கவேண்டும்." என்னும் கௌடபாதீயத்தின் வசனத்திலும், "தச்சிந்தநம் தத்கதநம் அந்யோந்யம் தத்ப்ரபோதநம்—அதனைச் சிந்தித்தலும் அதனைக் கூறுதலும் ஒருவருக்கொருவர் அதனை யறிவித்தலும்" என்னும் பஞ்சதசீ வாக்கியத்திலும், "ப்ரஹ்மஸம்ஸ்தோ(அ)ம்ருதத்வமேதி - பிரமநிஷ்டையையுடையவன் அமிர்தத்தன்மையை யடைகிறான்" என்னும் சுருதிவசனத்திலும் நிரந்தரம் செய்யப்படுகின்ற பிரமத்தின் சிரவண முதலியவற்றால் ஞானமுண்டாகின்றது என்னுதற்குப் பிரஹ்மத்தின் நிலை அதாவது அந்நிய வியாபாரத்தின்மையால் நிலைத்திருத்தல் உண்டாகின்றமையால், அந்தப் புருஷன் ஞானவாயிலாக அமிர்தத்தன்மையை யடைகின்றானென்பது சுருதியின் அர்த்தமாம். காமத்தின் இடைக்காலத்தில் ஒருகாலத்துச் செய்யப்படும்

சிரவண முதலியவற்றால் ஞானமுண்டாகிறதில்லை. நிரந்தரம் சிரவண முதலியவற்றின் அப்பியாசத்திற்கு ஏது சந்நியாசமாம். ஆதலால் அதிருஷ்டமின்றியே திருஷ்டபலத்திற் கேது சந்நியாசமாம்; என்றும் வியாததமன்று.

### ௨௮௩—௨௯௧. க்ஷத்திரிய வைசியர்களுக்குச் சந்நியாசத்திலும் சிரவணத்திலும் அதிகாரத்தை விசாரித்தல்.

### ௨௮௩. க்ஷத்திரிய வைசியர்களுக்குச் சந்நியாசத்திலும் சிரவணத்திலும் உள்ள அதிகார விசாரத்தின் பிரதிஜ்ஞை.

இப்பிரசங்கத்தில் க்ஷத்திரிய வைசியர்களுக்குச் சந்நியாசத்திலும் சிரவணத்திலும் அதிகாரமுண்டு அல்லது இல்லையென்னும் இவ்விசாரத்தை மதபேதமாக எழுதுவாம்:—

### ௨௮௪. ஓர் நூலாசிரியரின் மதப்படி சந்நியாசத்திலும் அங்ஙனமே பிரஹ்ம சிரவணத்திலும் பிராமணனுக்கே அதிகாரமுண்டு; க்ஷத்திரிய வைசியர்களுக்கு அதிகாரமில்லையெனல்.

ஒரு நூலாசிரியர் இவ்வாறு கூறுகின்றனர்:—சந்நியாசத்தை விதிக்கும் அநேக வாக்கியங்களில் பிராஹ்மணனென்னும் பதமிருத்தலால் பிராஹ்மணன் மாத்திரத்திற்குச் சந்நியாசத்தில் அதிகாரமுண்டு. சந்நியாசமின்றியே கிரகஸ்தர் முதலியோர்களுக்குப் பிரஹ்ம விசாரத்திற்கு அவகாசமில்லை. ஆதலால் சந்நியாசத்திலும் அங்ஙனமே பிரஹ்ம சிரவணத்திலும் க்ஷத்திரிய வைசியர்களுக்கு அதிகாரமில்லை.

### ௨௮௫. வேறு நூலாசிரியர் மதப்படி சந்நியாசத்தில் கேவலம் பிராஹ்மணனுக் கதிகாரமுண்டு; க்ஷத்திரிய வைசிரியர்களுக்குச் சந்நியாசத்தை விட்டுக் கேவல பிரஹ்ம சிரவணத்தில் அதிகாரமுண்டெனல்.

வேறு நூலாசிரியர் இவ்வாறு கூறுகின்றனர்:—சந்நியாசத்தில் கேவலம் பிராஹ்மணனுக்கே அதிகாரமுண்டெனினும், பிரஹ்ம சிரவணத்தில் க்ஷத்திரிய வைசியர்களுக்கும் அதிகாரமுண்டு.

ஆனால் ஜன்மாந்தர ஸம்ஸ்காரத்தினால் எந்த உத்தமபுருஷனுக்கு விஷயங்களில் திளைத்தலைமை (பற்றுடைமை) முதலிய தோஷங்கள் இல்லையோ, அப்படிப்பட்ட சுத்தபுத்தியுடையவனுக்குச் சந்நியாஸமின்றி ஞானமுண்டாகின்றது. இக்காரணத்தினாலே கிரகஸ்த ஆசிரமத்திலேயே அநேக மஹரிஷிகள் பிரஹ்மவித்துக்களாகச் சொல்லப்படுகின்றனர்.

## ௨௮௬. அவர்களினும் வேறு நூலாசிரியர் மதப்படி க்ஷத்திரிய வைசியர்களுக்குப் பிரஹ்ம சிரவணத்திற்போல வித்வத்ஸந்நியாஸத்திலும் அதிகாரமுண்டென்னல்.

அவர்களினும் வேறு நூலாசிரியர் இவ்வாறு கூறுகின்றனர்:—எங்ஙனம் பிரஹ்ம சிரவணாதிகளில் க்ஷத்திரிய வைசியர்களுக்கு அதிகாரமுண்டோ, அங்ஙனமே சந்நியாஸத்திலும் க்ஷத்திரிய வைசியர்களுக்கு நிஷேதமில்லை. ஞான உதயத்தினால் கர்த்திருத்துவ போக்திருத்துவ புத்தியின் அபாவமும், அங்ஙனமே ஜாதி ஆசிரம அபிமானங்களின் அபாவமும் உண்டாகின்றன. கர்த்திருத்துவ போக்திருத்துவ புத்தியின்றியும், ஜாதி ஆசிரமங்களின் அபிமானமின்றியும் கர்மாதிகாரம் ஸம்பவியாமையால், ஸர்வ கர்ம பரித்தியாக பூர்வக அக்கிரிய அசங்க ஆத்ம வடிவமாக நிலைத்தலாகிய வித்வத்ஸந்நியாஸத்திலும் க்ஷத்திரிய வைசியர்களுக்கு அதிகாரமுண்டு. கேவல விவிதிஷாஸந்நியாஸத்தில் அவர்களுக்கு அதிகாரமில்லை.

## ௨௮௭. வார்த்திககாரர் மதத்தில் விவிதிஷா ஸந்நியாஸத்திலும் க்ஷத்திரிய வைசியர்களுக் கதிகாரமுண்டெனல்.

வார்த்திககாரர் மதம் இதுவாம்:—விவிதிஷாஸந்நியாஸத்திலும் க்ஷத்திரிய வைசியர்களுக்கு அதிகாரமுண்டு. அநேக சுருதிவாக்கியங்களில் பிராஹ்மணர்களுக்குச் சந்நியாஸம் கூறியிருக்கினும், சந்நியாஸத்தை விதிக்கும் ஜாபால சுருதியில் பிராஹ்மணனென்னும் பதமில்லை. கேவலம் வைராக்கிய சம்பத்தியினால் சந்நியாஸம் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆதலால் அநேக சுருதிவாக்கியங்களில் துவிஜன (இருபிறப்பாளன்) என்பதின் உபலக்ஷணமாகப்

பிராஹ்மண பதமிருக்கின்றது. ஸ்மிருதியில இது கூறப்பட்டிருக்கின்றது:—"ப்ராஹ்மணா: க்ஷத்ரியோ வாபி வைச்யோ வா ப்ரவ்ரஜேத் க்ருஹாத் த்ரயாணாம் வர்ணாநாம் வேதமதீத்ய சத்வார ஆச்ரமா:-பிராஹ்மணனாயினும க்ஷத்திரியனாயினும வைசியனாயினும கிரகத்தினின்றும் போகக்கடவன; மூன்று வர்ணங்களுக்கும வேதத்தை ஓதி நான்கு ஆசிரமங்கள்" என்பதாக ஸ்மிருதி வசனத்திலும க்ஷத்திரிய வைசியர்களுக்குச சந்நியாசத்தி லதிகாரமிருக்கின்றது. இது வார்த்திககாரராகிய சுரேசுவராசாரியா மதம்.

## உ௮௮. வேறோர் நூலாசிரியர் மதப்படி பிராஹ்மணர்களுக்கு ஞானத்தில் சந்நியாசத்தின் அபேக்ஷையும், க்ஷத்திரிய வைசியர்களுக்குச் சந்நியாசத்தில் அதிகாரமின்மையும் ஞானத்திற்கு உபயோகமுள்ள காமத்திலும் வேதாந்த சிரவணத்திலும் அதிகார முண்மையும்

வேறு ஒரு நூலாசிரியா இவ்வாறு கூறுகின்றனர்:—சந்நியாசத்தை விதிக்கும சுருதி வாக்கியங்களில் பிராஹ்மணபத மிருக்கின்றது. அது உபலக்ஷணமாத்திரத்திற்கு உபலக்ஷணமாமென்று கூறுதலிற் பிரமாணமிலலை. ஜாபால சுருதியில் பிராஹ்மணபதமில்லையாயினும, அநேக சுருதிகளை அனுசரித்து ஆண்டும பிராஹ்மண காத்தரின் அத்தியாகார முண்டு. ஆதலால க்ஷத்திரிய வைசியர்களுக்குச சந்நியாசத்தில அதிகாரமிலலை. ஆனால அநேக ஸ்தானங்களில "கிரகஸ்தனாகிய ராஜா ஞானமுடையவன்" என்று கூறப்பட்டிருக்கின்றது. இதனால் இது கொள்ளவேண்டியதாம்:—பிராஹ்மணனுக்குப் பிரஹ்ம விசாரத்தின் அங்கம சந்நியாசமாம. சந்நியாச மின்றிக் கிரகஸ்த முதலிய ஆசிரமத்திலுள்ள பிராஹ்மணனுக்குப் பிரஹ்ம விசாரத்தில் அதிகார மிலலை. சந்நியாசியாகிய பிராஹ்மணனுக்கே பிரஹ்ம விசாரத்தில அதிகார முண்டு. க்ஷத்திரிய வைசியர்களுக்குச் சந்நியாசமின்றியே பிரஹ்ம விசாரத்தில் அதிகாரமுண்டு. ஏனெனின சந்நியாசத்தை விதிக்கும வசனங்களில் பிராஹ்மணபத மிருத்தலால் க்ஷத்திரிய வைசியர்களுக்குச் சந்நியாசத்தின் விதியில்லை. ஆத்மகாமனுக்கு ஆத்மசிரவணத

தின் அபாவத்தைக கூறுதல் சம்பவியாது. ஆகலால் க்ஷத்திரிய வைசியாகளுக்கு ஞானததிற் குபயோகமுள்ள அதிருஷ்டம் கேவலம் காமத்தினுலேயே உண்டாகின்றது. சந்நியாசஜந்நிய அதிருஷ்டததின அபேக்ஷை க்ஷத்திரியவைசியாகளுக்கு ஞான த்திலில்லை. இதனுற்முன் கீதையில "கர்மணைவஹிஸம்ஸித்தி மாஸ்திதா ஜநகாதய:- காமததினுலேயே ஜனகா முதலியோர் கள் நற்சித்தியைப் பெறறாகள" எனபதாகப பரமேசுவரன் கூறி யிருக்கின்றா. இவ்வாக்கியததில அநதக்கரணததின் சுத்தி அல்லது ஞானம நற்சித்தி என்னும சொலலிறகுப் பொருளா மென்று பாஷியகாரா எழுதியிருக்கின்றனா. சந்நியாசமினறிய கேவல காமததினுல அநதக்கரணததின சுததியை ஜநகா முதலி யோர் அடைநதனா; அல்லது சந்நியாசமினறிய கேவல காமத்தி னுல் ஞானப் பிரதிபந்தகம நீங்குதல் வாயிலாகச் சிரவணததி னுல ஞானத்தை அடைநதார்கள் என்பது கீதாவாக்கியத்தின் பொருளாம. இரணடு கிரமததினுலும க்ஷத்திரியவைசியாகளுக் குச் சந்நியாச அபேக்ஷையினறிய கேவல காமமே ஞானத்தைப் பிரதிபந்திக்கும பாவததின் நிவிருத்திக்கு ஏதுவாம. பிராஹ்மண னுக்குச சந்நியாசததோடு கூடிய காமததினுல் ஞானததிற்குப் பிரதிபந்தகமான பாவததின் நிவிருத்தி உண்டாகின்றது. சிரவண ததின் அங்கம சந்நியாசமாமெனனும பக்ஷததிலும சந்நியாசம் பிராஹ்மணனது சிரவணததிறகு அங்கமாம; க்ஷத்திரியவைசியர்க ளது சிரவணததிற்கு அங்கமனறு. ஆனுல பலத்தின் அபிலாஷை யினறியதும, குரோதமுதலிய தோஷங்களினறியதுமான ஈசுவ ரார்ப்பண புததியினுல தனது வருணுசிரம தாமங்களின் அநுஷ் டானத்தோடு கூடிய கர்மததின் அவகாசகாலத்தில் சிரவணத்தி னுலேயே க்ஷத்திரியவைசியர்களுக்கு ஞானமுண்டாகின்றது. எவ் வாற்றுனும ஞானததிற்கு உபயோகியான காமத்தினும் சிரவணத் தினும க்ஷத்திரியவைசியாகளுக்கும அதிகாரமுணடு. பிராஹ்மண னைப்போல க்ஷத்திரியவைசியாகளுக்கும் ஞானவிருப்புடைமை சம மாம. பிரயோஜன விருப்புடையோனுக்குச் சாதனத்தில் அதிகார முண்டாகின்றது. ஆதலால் ஆத்மகாமராகிய க்ஷத்திரியவைசியா களுக்கு வேதாந்தசிரவணத்தி லதிகாரமுண்டு.

---

## உ௮௯. ஓர் நூலாசிரியர்மதத்தில் சூத்திரனுக்குச் சிரவணத்தி லதிகாரமுண்டெனல்.

மனிதர் மாத்திரத்திற்கு ஆன்மவிருப்பின் சம்பவ மிருத்தலால் க்ஷத்திரிய வைசியர்களைப்போல ஞான விருப்புடைமையின் இருப்பால் சூத்திரனுக்கும் முற்கூறியபடி வேதாந்தசிரவணத்தின் அதிகார முண்டாதல்வேண்டும். அங்ஙனமாயினும் "நஶூத்ராய மதிம்தத்யாத்-சூத்திரனுக்கு மதியைத் தரலாகாது" என்றல் முதலிய வசனத்தினால் சூத்திரனுக்கு உபதேசத்தின் நிஷேதமுண்டு. முற்றும் உபதேசமின்றிய புருஷனுக்கு விவேக முதலியவற்றின் அசம்பவ மிருத்தலால் ஞானவிருப்புடைமை சம்பவியாது. அங்ஙனமே சூத்திரனுக்கு யாகமுதலிய கர்மங்களின் நிஷேதமு மிருத்தலின், வித்தைக்கு உபயோகமுள்ள கர்மத்தின் அபாவத்தால் அவனுக்கு ஞானத்திற்கேதுவாகிய சிரவணத்தி லதிகாரமில்லை. இது ஓர் நூலாசிரியர் மதமாம்.

## உ௯௦. வேறு நூலாசிரியர் மதப்படி சூத்திரனுக்கும் வேதத்திற் கந்நியமான புராண இதிகாசமுதலிய வடிவ அத்தியாத்ம நூல்களின் சிரவணமுதலியவற்றி லதிகாரமுண்டெனல்.

வேறு நூலாசிரியர் மதம் இதுவாம்:—உபநயன பூர்வகமாக வேதத்தின் அத்தியயனம் சொல்லப்பட்டிருக்கின்றது. சூத்திரனுக்கு உபநயனம் சொல்லப்படவில்லை. ஆதலால் வேத சிரவணத்திலோ சூத்திரனுக் கதிகாரமில்லை. அங்ஙனமாயினும், "ஶ்ராவயேச் சதுரோ வர்ணான்-நான்கு வருணத்தவர்களையும் கேட்பிக்க" என்றல் முதலிய வசனத்தால் இதிகாச புராண முதலியவற்றின் சிரவணத்தில் சூத்திரனுக்கு மதிகார மிருக்கின்றது. முற்கூறிய வசனத்தில் சூத்திரனுக்கு உபதேசத்தில் நிஷேதம் சொல்லப்பட்டிருக்கின்றது. அதன் அபிப்பிராயம் இதுவாம்:— வைதிக மந்திரத்தோடுகூடிய யாகமுதலிய கர்மங்களி னுபதேசம் சூத்திரனுக்குச் செய்யலாகாது. அங்ஙனமே வேதத்திற்கூறிய பிராணன் முதலிய சகுண உபாசனையின் உபதேசம் சூத்திரனுக்குச் செய்யலாகாது; உபதேசமாத்திரத்தின் நிஷேதமில்லை. உபதேசமாத்திரத்தின் நிஷேதமுளதாயின், கர்மசாஸ்திரத்தில் சூத்திர ஜாதியினது

தர்மத்தின் நிரூபணம் நிஷ்பலமாகும். வித்தைக்கு உபயோகமுள்ள கர்மத்தின் அபாவத்தால் வித்தையில் அநதிகாரம் கூறியிருப்பது யாதோ அதற்குச் சமாதானம் இதுவாம்:—சாதாரண அசாதாரண மான சகலசுபகர்மங்களுக்கும் வித்தையில் உபயோகமுண்டு. சத்தியம், அஸ்தேயம் (திருடாமை), க்ஷமை, சௌசம், தானம், விஷயத்தினின்றும் திரும்புதல், பகவந்நாம உச்சாரணம், தீர்த்தஸ்நானம், பஞ்சாக்ஷரமந்திரராஜ முதலியவற்றின் ஜபம் என்னும் முதலிய சகல வர்ணங்களின் சாதாரண தர்மங்களிலும் அதிகாரமே சூத்திர கமலாகரத்தில் கூறிய நான்குவர்ணங்களின் அசாதாரண தர்மங்களிலும் சூத்திரனுக்கதிகாரமுண்டு. அக்கர்மங்களின் அநுஷ்டானத்தால் அந்தக்கரணத்தின் சுத்திவாயிலாக ஞானத்தின் பிராப்தி சம்பவிக்கின்றது. ஆதலால் இதிகாசபுராண முதலியவற்றின் சிரவணத்தால் விவேகமுதலியன சம்பவித்தலின், சூத்திரனுக்கும் ஞானவிருப்புடைமையிருத்தலின், வேதத்திற் கநந்யமான அத்தியாத்ம கிரந்தங்களின் சிரவணமுதலியவற்றில் சூத்திரனுக்குமதிகாரமுண்டு. பாஷ்யகாரரும் முதலத்தியாயத்தின் மூன்றாம்பாதத்தில் இது கூறியிருக்கின்றனர்:—உபநயன பூர்வகமாக வேதத்தின் அத்தியயனம் சொல்லப்பட்டிருக்கின்றது. சூத்திரனுக்கு உபநயனமின்மையால் வேதத்திலதிகாரமில்லையாயினும், புராணமுதலியவற்றின் சிரவணத்தால் சூத்திரனுக்கும் ஞானமுண்டாய் விடுமாயின், ஞான சமகாலத்திலேயே சூத்திரனுக்கும் பிரதிபந்தமின்றிய மோக்ஷமுண்டாகும். இவ்வாறு பாஷ்யகாரர் வாக்கியத்திலும் வேதத்திற் கநந்யமான ஞானத்திற் கேதுவான அத்தியாத்ம கிரந்தங்களின் சிரவணத்தில் சூத்திரனுக் கதிகாரமுண்டு.

## ௨௯௧—௨௯௩. மனிதர்மாத்திரத்திற்குப் பக்தி ஞானங் களின் அதிகாரமுண்டெனல்.

## ௨௯௧. அந்தியஜர்முதலிய மனுஷர்களுக்கு தத்துவஞானத்தி னதிகாரம்.

ஜன்மாந்திர சம்ஸ்காரத்தினால் அந்தியஜர் (கடைச்சாதியர்) முதலியோருக்கும் ஞானவிருப்புண்டாய் விடுமாயின், பௌருஷேய வசனத்தினால் அவர்களுக்கும் ஞானமுண்டாய்க் காரியத்தோடு அவித்தையின் நிவிருத்தி வடிவ மோக்ஷ முண்டாகின்றது ஆதலால் தேவர் அசுரர்களைப்போல சகல மனுஷர்களுக்கும் தத்

துவ ஞானகாலத்தில் அபாவமுண்டாதல்வேண்டும். ஏனெனின் உபாதான காரணமாகிய அவித்தைக்கு நாசமுண்டாகிய பின் காரியத்தின் ஸ்திதி சம்பவியாது.

## உகூகூ. முற்கூறிய சங்கைக்கு ஓர் ஆசாரியரின் மதப்படி சமாதானம்.

ஒருவர் இச்சமாதானங் கூறுகின்றனர்:—எங்ஙனம் வில்லழிந்தாலும் விடப்பட்ட அம்பின்வேகம் நிலைத்திருக்கின்றதோ, அங்ஙனமே காரணத்திற்கு நாசமுண்டாகியும் வித்வானது சரீரத்தின் ஸ்திதி சம்பவிக்கின்றது.

## உகூஎ. முற்கூறிய சமாதானத்தின் அசம்பவம்.

இச்சமாதானமுஞ் சம்பவியாது. ஏனெனின் நிமித்தகாரணத்திற்கு நாசமுண்டாயின் காரியத்தின் ஸ்திதியிருக்கும். உபாதான மழிந்தபின் காரியத்தின் ஸ்திதி சம்பவியாது. பாணத்தின் வேகத்தினது உபாதானகாரணம் பாணமாம். அதன் நிமித்தகாரணம் வில்லாம். அதனால் பாணத்தினது வேகத்தின் ஸ்திதி சம்பவிக்கின்றது. ஆதலால் அவித்தை யென்னும் உபாதானத்திற்கு நாசமுண்டாகியும், வித்துவானது சரீரத்தின் ஸ்திதியினது அசம்பவ மிருத்தலால், தத்துவஞான முண்டாகியும் அவித்தையின் லேச மிருக்குமென்று நூலாசிரியர்கள் எழுதியிருக்கின்றனர்.

## உகூஅ. அவித்தியாலேசத்தின் மூவகை.

ஆண்டு மதபேதத்தால் அவித்தியாலேசத்தின் சொரூபம் மூன்று வகையாம். எங்ஙனம் கழுவப்பட்ட வெள்ளைப்பூண்டு பாத்திரத்தில் கந்தமிருக்கின்றதோ, அங்ஙனமே அவித்தையின் சம்ஸ்காரத்தை அவித்தியாலேச மென்பர். அல்லது அக்கினியினால் தகிக்கப்பட்ட படத்தைப்போல, தனது காரியத்தில் சாமர்த்தியமின்றிய தாய் ஞானத்தினால் பாதிக்கப்பட்ட அவித்தையினை அவித்தியாலேச மென்பர். அல்லது ஆவரணசக்தி விக்ஷேபசக்தி வடிவ அம்சங்களிரண்டினையுமுடையது அவித்தையாம். தத்துவ ஞானத்தினால் ஆவரணசக்தி விசிஷ்ட அவித்தை அம்சத்திற்கு நாசமுண்டாகின்றது. பிராரப்தகாயவடிவாய் பிரதிபந்தமிருக்க, விக்ஷேபசக்தி விசிஷ்ட அவித்தை அம்சத்தின் நாசமுண்டாகிறதில்லை. தத்துவஞானத்திற்குப் பிந்திய காலத்திலும் தேகமுதலிய விக்ஷேபத்திற்கு உபாதானமாகிய அவித்தை அம்சத்தின் சேஷ மிருக்கின்றது. அத

ளால் ஸொரூபத்தின் ஆவரண முண்டாகிறதில்லை. அதனையே அவி த்தியாலேச மென்பர.

### உகூகூ. இவ்வர்த்தத்தில் சர்வஞ்ஞாத்மமுனிவர் மதம்.

சர்வஞ்ஞாத்ம முனிவர் மதமோ இதுவாம்:—தத்துவஞான த்திற்குப் பிற்காலத்திலும் சரீரமுதலிய தோற்றம் உண்டாகாது. ஜீவன்முத்தியைப் பிரதிபாதிக்கும் சுருதி வசனத்திற்குச் சுவார்த்த த்தில் தாற்பரியமில்லை. ஏனெனின் சிரவண விதியின் அர்த்தவாத வடிவ ஜீவன் முத்தியைப் பிரதிபாதிக்கும் வசனமாம். எந்தச் சிரவணத்தின் பிரசாதத்தால் ஜீவித்திருக்கும் புருஷனுக்கு முத்தி உண்டாகின்றதோ, அத்தன்மையை உத்தமமானது அந்தச்சிரவண மாம். இவ்வாற்றால் அந்தச் சிரவணத்தின் ஸ்துதியில் தாற்பரிய மிருத்தலின் ஜீவன்முத்தியைப் பிரதிபாதிக்கும் வசனத்தில் ஞானி க்குத் தேக முதலியவற்றின் தோற்றங் கூறுதல் சம்பவியாது. இவ்வாற்றால் தத்துவ ஞானத்திற்கு மறைவின்றிய அடுத்த (பிற) காலத்திலேயே விதேக மோக்ஷமுண்டாகின்றது என்னும் மதத் தில் ஞானத்திற்குப் பின் அவித்தையின் லேசமிருப்பதில்லை.

### ௩௦௦. முற்கூறிய மதத்திற்கு ஞானியின் அநுபவத்தினுள்ள விரோதம்

ஆனால் இம்மதம் ஞானியின் அநுபவத்திற்கு விருத்தமாம். எந்தத் தத்துவ ஞானத்தினால் காரியத்தோடு அவித்தையின் நிவி ருத்தி உண்டாகின்றதோ, அந்தத் தத்துவஞானத்தின் நிவிருத் திக் கிரமத்தைக் கூறுவாம்.—

தத்துவஞானத்தால் அவித்தையின் நிவிருத்தி யுண்டாகத் தத்துவஞானத்தின் நிவிருத்தி உத்தரகாலத்தி லுண்டாகின்றது என்னும் கிரமத்தால் தத்துவஞானத்தின் நிவிருத்தி உண்டாகிற தில்லை. ஏனெனின், தத்துவஞானத்தினால் அந்நிய அநாத்ம வஸ்து க்களின் சேஷமோ இருக்கிறதில்லை. கேவல சேதனத்திற்கு அசங் கத்தன்மை யிருத்தலால் நாசஞ்செய்யுந் தன்மை சம்பவிக்கிற தில்லை. தத்துவஞானத்திற்குத் தன்னைக் கெடுக்குந் தன்மையும் சம்பவியாது. இதனால் தத்துவஞானத்திற்கு நாசமுண்டாகாது.

### ௩௦௧. அவித்தையின் நிவிருத்திகாலத்தில் தத்துவஞானத்தின் நிவிருத்திக்கிரமம்.

இவ்வாற்றால் அவித்யா நிவிருத்திக்குப் பிந்திய காலத்தில் தத்துவஞானத்தின் நிவிருத்தி சம்பவியாமையால், அவித்தையின

நிவிருத்தி காலத்திலேயே தத்துவ ஞானத்தின் நிவிருத்தி இவ்வாறு உண்டாகின்றது:— ஜலத்திற் போடப்பட்ட தேற்றாம்பொடியினால் ஜலத்தின்கண்ணுள்ள சேற்றின் பிரிவு உண்டாகின்றது. அதனுடனே தேற்றாம்பொடியும் பிரிந்துபோகின்றது. தேற்றாம்பொடியின் பிரிவில் வேறு சாதனங்களின் அபேக்ஷையில்லை. புற்கற்றையிற் பற்றிய நெருப்பானது போடுவதினால் புற்கற்றை லயமாகின்றது. அதனுடனே நெருப்பும் லயமாகின்றது. அவ்வண்ணமே காரியத்தோடு அவித்தையின் நிவிருத்தி உண்டாக அதனுடனே தத்துவஞானத்தின் நிவிருத்தியும் உண்டாகின்றது. ஆதலால் தத்துவஞானத்தின் நிவிருத்தியில் வேறு சாதனத்தின் அபேக்ஷையில்லை.

## ௧௦௨. பிராரப்த அர்த்தத்தில் பஞ்சபாதிகைக்காரர் மதம்.

பஞ்சபாதிகைக்காரராகிய பத்மபாதாசாரியர் மதம் இதுவாம்:—ஞானத்திற்கு அஞ்ஞானமாத்திரத்தோடு விரோதமுண்டு. அஞ்ஞானத்தின் காரியத்தோடு ஞானத்திற்கு விரோதமில்லாதிருத்தலினால், தத்துவஞானத்தால் கேவலம் அஞ்ஞானத்தின் நிவிருத்தி உண்டாகின்றது. அஞ்ஞானத்தின் நிவிருத்திக்குப் பிற்காலத்தில் உபாதானமின்மையால் காரியத்தின் நிவிருத்தி உண்டாகின்றது. ஆனால் தேகமுதலிய காரியங்களின் நிவிருத்தியில் பிராரப்த கர்மம் பிரதிபந்தகமாம். இதனால் முற்கூறியபடி அவித்தியாலேசமிருக்கின்றது. சில ஜீவன்முக்தர்களுக்குத் தேக முதலியவற்றின் பிரதீதியும் சம்பவிக்கின்றது. பிராரப்த வடிவப் பிரதிபந்தகத்தின் அபாவமுண்டாக, தேகாதிகளின் நிவிருத்தியும் தத்துவஞானத்தின் நிவிருத்தியும் உண்டாகின்றன. இம்மதத்தில் பிராரப்தத்தின் அபாவத்தோடு அவித்தையின் நிவிருத்தியே தத்துவஞானத்தின் நிவிருத்திக்கு ஏதுவாம்.

## ௧௦௩-௧௦௯. தத்துவஞானத்தின் காரணமும் சககாரியுமாகிய சாதனத்தில் விசாரம்.

## ௧௦௩. உத்தமமத்திம அதிகாரிகளின் பேதத்தால் தத்துவஞானத்தின் இரண்டு சாதனங்களைக்கூறுதல்.

எந்தத் தத்துவஞானத்தினால் அவித்தையின் நிவிருத்தி உண்டாகின்றதோ, அந்தத் தத்துவஞானத்திற்கு இரண்டு சாதனமுண்டு.

உத்தம அதிகாரிக்கோ சிரவண முதலியன சாதனங்களாம். மத்திம அதிகாரிக்கு நிர்க்குணப் பிரஹ்மத்தின் அகங்கிரக (யானென்பதைக் கொள்ளும்) உபாசனையே தத்துவஞானத்தின் சாதனமாம். இது சகல அத்வைத சாஸ்திரத்தின் சித்தாந்தமாம்.

## ௯௦௪. முற்கூறிய இரண்டு பக்ஷங்களிலும் பிரசங்கியானத்தைத் தத்துவ ஞானத்திற்குக் காரணமாகிய பிரமாணமெனல்.

ஆனால் இரண்டு பக்ஷங்களிலும் தத்துவஞானத்திற்குக் காரணமாகிய பிரமாணம் பிரசங்கியானமென்பது சில நூலாசிரியர் மதமாம். விருத்தியின் பிரவாகத்தைப் பிரசங்கியானமெனபர். எப்படி மத்திம அதிகாரிக்கு நிர்க்குணப் பிரஹ்மாகார நிரந்தர விருத்தி வடிவ உபாசனை கர்த்தவ்வியமும் அதுவே பிரசங்கியானமுமாமோ, அங்ஙனமே உத்தமாதிகாரிக்கும் மனனத்திற்குப் பின் நிதித்தியாசன வடிவப் பிரசங்கியானமே பிரஹ்ம சாக்ஷாத்காரத்திற்குக் கரணமாம். ஆறுவகைப் பிரமாணங்களிலும் பிரசங்கியானமில்லாமையால், அதற்குப் பிரமையின் கரணத்தன்மை சம்பவியாதாயினும் சகுணப் பிரஹ்மத்தின் தியானத்திற்குச் சகுணப் பிரஹ்மத்தினது சாக்ஷாத்காரத்தின் கரணத்தன்மையும், நிர்க்குணப்பிரஹ்மத்தின் தியானத்திற்கு நிர்க்குணப் பிரஹ்மத்தினது சாக்ஷாத்காரத்தின் கரணத்தன்மையும் சகல சுருதி ஸ்மிருதிகளிலும் பிரசித்தமாம். அங்ஙனமே விபவகிதகாமினி(ஸ்திரீ)யின் பிரசங்கியானத்திற்குக் காமினியினது சாக்ஷாத்காரத்தின் கரணத்தன்மை உலகத்திற்பிரசித்தமாம். ஆகலால் நிதித்தியாசன வடிவப் பிரசங்கியானமும் பிரஹ்ம சாக்ஷாத்காரத்தின் கரணமெனச் சம்பவிக்கின்றது. பிரசங்கியானஜந்ய பிரஹ்மஞானத்திற்குப் பிரமாணஜந்யத்தன்மையின்மையால் பிரமாத்தன்மையின் சம்பவமில்லையாயினும், சம்வாதிப்பிரமத்தைப்போல விஷயத்தின் பாதமில்லாமையால் பிரமாத்தன்மை சம்பவிக்கின்றது. நிதித்தியாசனவடிவப் பிரசங்கியானத்திற்கு மூலம் சப்தப் பிரமாணமாம். இதனாலும் பிரஹ்ம ஞானத்திற்குப் பிரமாத்தன்மை சம்பவிக்கின்றது.

---

## மதத்தில் பிரசங்கியானத்திற்கு மனதின் சககாரியாதலும் மனம் பிரஹ்மஞானத்திற்குக் கரணமாதலும்.

பாமதீகாரவாசஸ்பதியின் மதம் இதுவாம்:—மனதின் சககாரி பிரசங்கியானமாம். பிரஹ்ம ஞானத்தின் கரணம் மனமாம். பிரசங்கியானத்திற்கு ஞானத்தின் கரணத்தன்மை அப்பிரசித்தமாம். சகுண நிர்க்குணப் பிரஹ்மத்தின் தியானமும் மனதின் சககாரியாம். அவற்றின் சாக்ஷாத்காரத்தினது கரணம் தியானமன்று; மனமே கரணமாம். அங்ஙனமே வியவஹிதகாமினியின் தியானமும்காமினியின் சாக்ஷாத்காரத்திற்குக் கரணமன்று. ஆனால் காமினியின் சிந்தனத்தோடுகூடிய மனமே அச் சாக்ஷாத்காரத்திற்குக் கரணமாம். இவ்வாறாதல் மனமே பிரஹ்மஞானத்திற்குக் கரணமாம்.

## ௯௦௬. அத்வைதக்கிரந்தங்களின் முக்கியமதம்.

(ஏகாக்கிரதன்மையோடுகூடிய மனம் சககாரியாதலும்வேதாந்த வாக்கிய வடிவ சப்தம் பிரஹ்மஞானத்திற்குக் கரணமாதலும்)

அத்வைதக்கிரந்தங்களின் முக்கியமதம் இதுவாம்:—வாக்கிய ஜந்நிய ஞானத்திற்குப் பின் பிரசங்கியானத்தின் அபேக்ஷையில்லை. மகாவாக்கியத்தினாலேயே அத்வைதப் பிரஹ்மத்தின் சாக்ஷாத்காரமுண்டாகின்றது. சகல ஞானங்களிலும் சககாரி மனமாம். ஆதலால் நிதித்தியாசன ஜந்நிய ஏகாக்கிரதன்மையோடு கூடிய மனம் சககாரியாம். வேதாந்த வாக்கிய வடிவ சப்தமே பிரஹ்ம ஞானத்திற்குக் கரணமாம்; மனமன்று. ஏனெனின் விருத்தி வடிவ ஞானத்திற்கு உபாதானமாயிருத்தலின் ஆசிரயம் அந்தக்கரணமாம். ஆதலால் ஞானத்திற்குக் கர்த்தா மனம். அதற்கு ஞானத்தின் கரணத்தன்மை சம்பவியாது. வேறு ஞானங்களின் மனதிற்குக் கரணத்தன்மை அங்கீகரிக்கினும் பிரஹ்மஞானத்தின் கரணத்தன்மை முற்றும் விருத்தமாம். ஏனெனின் “யந்மநஸா ந மநுதே” எதனை (பிரஹ்மத்தை) மனதினாலே உலகம் அறிகிறதில்லையோ” என்றல் முதலிய சுருதிகளில் பிரஹ்மம் மானதஞானத்திற்கு விஷயமாதல் நிஷேதிக்கப்பட்டிருக்கின்றது. பிரஹ்மத்திற்கு ஔபநிஷதத் (உபநிஷத்தினால் அறியப்படும்) தன்மை சொல்லப்பட்டிருக்கின்றது. ஆதலால் உபநிஷத்துவடிவ சப்தமே பிரஹ்ம

ஞானத்திற்குக் காரணமாம். கைவல்யசாகையில் யாண்டு மனதிற்குப் பிரஹ்மஞானத்தின் காரணத்தன்மை நிஷேதிக்கப்பட் டிருக்கின்றதோ, அதே ஸ்தானத்தில் வாக்கிற்கும் பிரஹ்மஞானத்தின் காரணத்தன்மை நிஷேதிக்கப்பட்டிருக்கின்றது. ஆதலால் சப்தத்திற்கும் பிரஹ்ம ஞானத்தின் காரணத்தன்மை சுருதி விருத்தமாம். அங்ஙனமாயினும், சப்தத்திற்குப் பிரஹ்ம ஞானத்தின் காரணத்தன்மையில்லை என்னும் அர்த்தத்தில் சுருதிக்குத் தாற்பரிய முளதாயின், பிரஹ்மத்திற்கு உபநிஷத்தினால் அறியப்படுந் தன்மைவடிவ ஔபநிஷதத்தன்மையைக் கூறுதல் அசங்கதமாகும். ஆதலால் சப்தத்தின் இலக்ஷணா விருத்தியினால் பிரஹ்ம கோசர ஞானமுண்டாகின்றது. சக்தி விருத்தியினால் பிரஹ்மத்தின் ஞானம் சப்தத்தால் உண்டாகிறதில்லை. இவ்வாறு சுருதிக்குத் தாற்பரிய மிருக்கின்றது. ஆதலால் சக்திவிருத்தியினால் சப்தத்திற்குப் பிரஹ்மஞானத்தின் காரணத்தன்மை நிஷேதிக்கப்படுகின்றது. இலக்ஷணா விருத்தியினால் சப்தத்திற்குப் பிரஹ்மஞானத்தின் காரணத்தன்மையிருத்தலால் பிரஹ்மத்திற்கு ஔபநிஷதத்தன்மை சம்பவிக்கின்றது. பிரஹ்ம சாக்ஷாத்காரத்தினை மானதமாகக் கொண்டுள்ளவா மதத்திலும் பிரஹ்மத்தின் பரோக்ஷஞானம் சப்தத்தினாலேயே அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. ஆதலால் பிரஹ்ம ஞானத்தில் சப்தத்திற்குக் காரணத்தன்மை இரண்டு மதங்களிலும் ஆவசியமா யிருத்தலின் பிரஹ்ம சாக்ஷாத்காரத்திற்குக் காரணம் சப்தமாம்; மனமன்று. இவ்வாற்றால் பிரஹ்ம சாக்ஷாத்காரத்தின் காரணம் சப்தமாம்.

## ௯௦௭. சப்தத்தினால் அபரோக்ஷ ஞானத்தின் உற்பத்தியில் சங்கை சமாதானம்.

சப்தத்தில் பரோக்ஷ ஞானத்தை உண்டு பண்ணும் சாமர்த்தியமுண்டு. சப்தத்தினால் அபரோக்ஷ ஞானத்தின் உற்பத்தி சம்பவியாது. அங்ஙனமாயினும், சாஸ்திரத்திற் கூறிய சிரவண மனன பூர்வக அந்தப் பிரஹ்ம கோசர பரோக்ஷ ஞானத்தின் சம்ஸ்கார விசிஷ்ட ஏகாக்கிர சித்தத்தோடு கூடிய சப்தத்தினால் அபரோக்ஷஞானம் உண்டாகின்றது. பிரதிபிம்ப பிம்பங்களின் அபேதவாதத்தில் ஜலமாத்திரத்தோடும் கண்ணாடி முதலியவற்றோடும் கூடிய நேத்திரத்தினால் சூரியன் முதலியவற்றின் சாக்ஷாத்காரமுண்டாகின்றது. ஆண்டுக் கேவல நேத்திரத்திற்குச் சூரியன் முத

லியவற்றின் சாக்ஷாத்காரத்தில் சாமர்த்தியமில்லை. சஞ்சலமான அல்லது மலினமான உபாதியின் சந்நிதானத்திலும் சாமர்த்திய மில்லை. நிச்சலமும் நிர்மலமுமான உபாதியோடு கூடிய நேத்திரத்தில் சூரியன் முதலியவற்றினது சாக்ஷாத்காரத்தின் சாமர்த்திய முண்டு. அங்ஙனமே சமஸ்கார விசிஷ்ட நிர்மல நிச்சல சித்த வடிவ கண்ணாடியின் சகாயத்தால் சப்தத்தினும் பிரஹ்மத்தின் அபரோக்ஷஞானம் சம்பவிக்கின்றது. வேறு திருஷ்டாந்தம்:- எங்ஙனம் இலௌகிக அக்கினியில் ஓமித்தலால் சுவர்க்க யதுவான அபூர்வத்தின் உற்பத்தி உண்டாகிறதில்லை. வைதிக சமஸ்காரத்தோடு கூடிய அக்கினியில் ஓமித்தலால் சுவர்க்கத்தை யுண்டு பண்ணும் அபூர்வத்தின் உற்பத்தி உண்டாகின்றது. ஓமத்திற்கு சுவர்க்க சாதனத்தன்மை சுருதியிற் சொல்லப்பட்டிருக்கின்றது. இரண்டாவது க்ஷணத்தில் அழிவதாகிய ஓமத்திற்கு காலாந்தரத்தில் உண்டாவதாகிய சுவர்க்கத்தின் சாதனத்தன்மை சம்பவியாது. ஆதலால் சுவர்க்க சாதனத்தன்மையின் அநுபபத்தியாகிய அர்த்தாபத்தி பிரமாணத்தினால் எங்ஙனம் அபூர்வத்தின் சித்தி உண்டாகின்றதோ, அங்ஙனமே பிரஹ்ம ஞானத்தினால் அத்தியாச வடிவ சகல துக்கங்களின் நிவிருத்தி சுருதியிற் சொல்லப்பட்டிருக்கின்றது. கர்த்ருத்வ முதலிய அத்தியாசம அபரோக்ஷமாம். அவ்வபரோக்ஷ அத்தியாசத்தின் நிவிருத்தி பரோக்ஷ ஞானத்தினால் சம்பவிக்கிறதில்லை. அபரோக்ஷ ஞானத்தினாலேயே அபரோக்ஷ அத்தியாசத்தின் நிவிருத்தி உண்டாகின்றது. ஆதலால் பிரஹ்ம ஞானத்திற்கு அபரோக்ஷ அத்தியாச நிவிருத்தியின் அநுபபத்தியினால் வேறு பிரமாணத்திற்கு கோசரமாகாத பிரஹ்மத்தின் அபரோக்ஷ ஞானம் சப்தத்தினால் சித்திக்கின்றது. எங்ஙனம் கேள்வியர்த்தாபத்தியினால் அபூர்வத்தின் சித்தி உண்டாகின்றதோ, அங்ஙனமே சப்த ஜந்ய பிரஹ்மத்தினது அபரோக்ஷ ஞானத்தின் சித்தியும் கேள்வியர்த்தாபத்தியினால் உண்டாகின்றது.

## ௯௦அ. வேறு நூலின்படி சப்தத்திற்கு அபரோக்ஷ ஞானத்தை யுண்டுபண்ணுந்தன்மை.

வேறு நூல்களில் சப்தத்திற்கு அபரோக்ஷ ஞானத்தை உண்டு பண்ணுந்தன்மை இத்திருஷ்டாந்தத்தினால் கூறப்பட்டிருக்கின்றது:—எங்ஙனம் பாகிய பதார்த்தத்தின் சாக்ஷாத்காரத்தில்

மனம் சாமர்த்திய மின்றிய தாயினும், பாவனையோடு கூடிய மன தினால் நஷ்ட வனிதையின் சாக்ஷாத்கார முண்டாகின்றதோ, அங்ங னமே கேவல சப்தமோ அபரோக்ஷ ஞானத்திற் சாமர்த்திய மின் றியதாம். ஆனால் முற்கூறிய மனதோடு கூடிய சப்தத்தினால் பிர ஹ்மத்தின் அபரோக்ஷஞான முண்டாகின்றது.

## ௩௦௯—௩௨௫ விஷய ஞானங்களின் அபரோக்ஷத் தன்மையில் விசாரம்.

## ௩௦௯. வேறு நூலாசிரியர்மதப்படி ஞானமும் விஷயமுமாகிய இரண்டிலும் அபரோக்ஷத் தன்மை வியவகாரத்தைக் கூறுதல்.

வேறு நூலாசிரியர் இவ்வாறு கூறுகின்றனர்:—ஞானமும் விஷயமுமாகிய இரண்டிலும் அபரோக்ஷத்தன்மை விவகாரமுண் டாகின்றது. ஏனெனின் நேத்திர முதலிய இந்திரியங்களால் அறி யப்பட்ட கட முளதாயின், ஆண்டுக் கடத்தின் பிரத்தியக்ஷ ஞான மிருக்கின்றது; கடமும் பிரத்தியக்ஷமாம். இவ்வாறு இருவகை விய வகாரம் அநுபவசித்தமாம். ஆண்டு ஞானத்தில் அபரோக்ஷத் தன் மை கரணத்தின் அதீனமன்று. ஏனெனின் இந்திரிய ஜந்நிய ஞா னம் அபரோக்ஷமாம். அநுமானாதி ஜந்நிய ஞானம் பரோக்ஷமாம். ஆகவே ஞானத்தில் பரோக்ஷத்தன்மை அபரோக்ஷத்தன்மைகள் கரணத்தின் அதீனமாம். அவ்விந்திரியஜந்நிய ஞானத்தின் அபரோ க்ஷத்தன்மையை நூலாசிரியர்கள் கண்டனம் செய்திருக்கின்றனர். ஆதலால் அபரோக்ஷ அர்த்தத்தைக் கோசரிக்கும் ஞானம் அபரோ க்ஷமெனப்படுகின்றது. இவ்வாறாதல் ஞானத்தில் அபரோக்ஷத்தன் மை விஷயத்தின் அதீனமாம். ஆதலால் அபரோக்ஷ விஷயத்தின் ஞானம் அபரோக்ஷமேயாகும். இந்திரியத்தால் தோன்றியதாகுக; அல்லது வேறு பிரமாணங்களாற் றோன்றியதாகுக; இதில் அபிநி வேச (ஆக்கிரக) மில்லை. இந்நூற்றுணை சுக முதலியவற்றின் ஞான மும், ஈசுவர ஞானமும், சொப்பனத்தின் ஞானமும் இந்திரியஜந் நியமன்று; அங்ஙனமாயினும் பிரத்தியக்ஷமாம். ஆதலால் ஞானத் தில் இந்திரிய ஜந்நியத்தன்மை வடிவ அபரோக்ஷஞானமே யுளது. ஆனால் அபரோக்ஷ அர்த்த கோசர ஞான முளதாயின் அது அப ரோக்ஷஞான மெனப்படுகின்றது.

## சங்கைசமாதானம்.

அபரோக்ஷ ஞானத்தின் விஷயத்தினை அபரோக்ஷ மென்பர். ஆதலால் அபரோக்ஷ அர்த்தத்தைக் கோசரிக்கும் ஞானத்திற்கு அபரோக்ஷத்தன்மையைக் கூறுதலில் அந்நியோந்நியாசிரய தோஷ முண்டாகின்றது. ஏனெனின் ஞானத்தின்கண் உள்ள அபரோக்ஷத்தன்மையை நிரூபித்தலில் விஷயத்தின்கண் உள்ள அபரோக்ஷத் தன்மையின் ஞானம் ஏதுவாம். விஷயத்தின்கண் உள்ள அபரோக்ஷத் தன்மையை நிரூபித்தலில் ஞானத்தின்கண் உள்ள அபரோக்ஷத் தன்மையின் ஞானம் ஏதுவாம். அங்ஙனமாயினும் விஷயத்தில் அபரோக்ஷத் தன்மையை அபரோக்ஷ ஞானத்தின் விஷயத்தன்மை வடிவமாகக் கொள்ளின், அந்நியோந்நியாசிரய தோஷமுண்டாகும். ஆதலால் விஷயத்தின் அபரோக்ஷத்தன்மை முற்கூறிய சொரூப மன்று. ஆனால் பிரமாத்திரு சேதனத்தோடு அபேதமே விஷயத்தின் அபரோக்ஷத் தன்மையாம். ஆதலால் ஞானத்தின் அபரோக்ஷத்தன்மையை நிரூபித்தலில் விஷயத்தின் அபரோக்ஷத்தன்மை ஞானத்தின் அபேக்ஷை யுண்டாகியும், விஷயத்தின் அபரோக்ஷத் தன்மையை நிரூபித்தலில் ஞானத்தின்கண் உள்ள அபரோக்ஷத்தன்மையினது ஞானத்தின் உபயோக மின்மையால் அந்நியோந்நியாசிரய தோஷமில்லை.

## ௬௧௧. விஷயத்தில் பரோக்ஷத்தன்மை அபரோக்ஷத் தன்மைகளைச் சம்பாதிக்கும் பிரமாத்திருசேதனத்தின் பேத அபேதத்தோடு விஷயத்தின்கண் உள்ள பரோக்ஷத்தன்மை அபரோக்ஷத்தன்மைகளின் அதீனமே ஞானத்தின் பரோக்ஷத்தன்மை அபரோக்ஷத்தன்மைகளா மென்பதின் நிரூபணம்.

சுக முதலிய அந்தக்கரணத்தின் தாமம் சாக்ஷி சேதனத்தில் அத்தியஸ்தமாம். அதிஷ்டானத்தின் வேறு சத்தை அத்தியஸ்தத்திற் கில்லை யாகலின், சுக முதலியவற்றிற்குப் பிரமாத்திரு சேதனத்தோடு என்றும் அபேத மிருத்தலால், அவற்றில் என்றும் அபரோக்ஷத்தன்மை யிருக்கின்றது. அபரோக்ஷ சுக முதலியவற்றைக் கோசரிக்கும் ஞானமும் அபரோக்ஷமே யாகின்றது. பாகிய கட முதலியன பாகிய சேதனத்தில் அத்தியஸ்தமா யிருத்த

லின், பிரமாத்திரு சேதனத்தோடு அவற்றிற்கு என்றும் அபேத மில்லையாயினும், விருத்தி வாயிலாகப் பாகிய சேதனத்திற்குப் பிரமாத்திரு சேதனத்தோடு அபேதம உண்டாகின்றது. அக்காலத்தில பிரமாத்திருசேதனமே கட முதலியவற்றின் அதிஷ்டான மாகின்றது. ஆதலால் இந்திரிய ஜந்நிய கடாதி கோசரவிருத்தி உண்டாயின், அக்காலத்திலேயே கட முதலியவற்றில் அபரோக்ஷத்தன்மைத் தாமமுண்டாகின்றது. அபரோக்ஷத்தன்மை விசிஷ்ட கட முதலியவற்றின ஞானமும அபரோக்ஷ மெனப்படுகின்றது. கட முதலியவற்றைக் கோசரிக்கும அநுமிதி முதலிய விருத்தி உண்டாயின், அக்காலத்தில் பிரமாத்திரு சேதனத்தோடு கட முதலியவற்றின் அபேதம இல்லாதிருத்தலின, அவற்றில் அபரோக்ஷத்தன்மைத் தாமம உண்டாகாது. ஆதலால் கட முதலியவற்றின் அநுமிதி முதலிய ஞானத்தினை அபரோக்ஷம என்று கூறுவதில்லை; ஆனாற் பரோக்ஷமென்பா. பிரஹ்மசேதனத்திற்குப் பிரமாத்திருசேதனத்தோடு என்றும அபேதமிருத்தலின், பிரஹ்ம சேதனம் என்றும் அபரோக்ஷமாம. ஆதலால் மகாவாக்கிய வடிவ சப்தப்பிரமாண ஜந்நிய பிரஹ்மத்தின ஞானமும அபரோக்ஷ மென்றே சொல்லப்படுகின்றது. இவ்வாறுல் ஞானத்தின் பரோக்ஷத்தன்மை அபரோக்ஷத்தன்மைகள் பிரமாணத்தின மன்று. ஆனால் விஷயத்தின்கண் உள்ள பரோக்ஷத்தன்மை அபரோக்ஷத்தன்மைகளின் அதீனமாகவே ஞானத்தின பரோக்ஷத்தன்மை அபரோக்ஷத்தன்மைகளுள. விஷயத்தில் பரோக்ஷத்தன்மை அபரோக்ஷத்தன்மைகளோ சமபாதிடபன பிரமாத்திரு சேதனத்தின் பேதமும் அபேதமுமாம். ஆதலால சப்த ஜந்நிய பிரஹ்மத்தின் ஞானமும அபரோக்ஷமாமெனறு கூறுதல் சம்பவிக்கின்றது.

## ௯௧௨. முற்கூறிய மதத்தில் அவாந்தரவாக்கிய ஜந்நிய பிரஹ்ம ஞானத்தினது அபரோக்ஷத்தன்மையின் பிராப்திவடிவ தோஷம்.

ஆனால் இம்மதத்தில் அவாந்தரவாக்கிய ஜந்நிய பிரஹ்ம ஞானமும அபரோக்ஷமாதல் வேண்டும. ஏனெனின் முற்கூறிய படி பிரமாத்திருசேதன சொரூபமா யிருத்தலால் பிரஹ்மம் என்றும அபரோக்ஷமாம. அபரோக்ஷ வஸ்துவைக் கோசரிக்கும் ஞானம அபரோக்ஷமேயாம. ஆதலால் நித்திய அபரோக்ஷ சுபாவ

முடைய பிரஹ்மத்திற்குப் பரோக்ஷஞானம் சம்பவியாது. அவாந்தரவாக்கியத்தினால் எல்லா நூலாசிரியர்களும் பிரஹ்மத்தின் பரோக்ஷஞானத்தை அங்கீகரித்திருக்கின்றனர். அங்ஙனமே "பத்தாமவ" னிருக்கின்றானென்னும் வாக்கியத்தினால் பத்தாமவனது பரோக்ஷஞானமே உண்டாகின்றது. பஞ்சதசிமுதலிய நூல்களிலுமமுற்கூறிய வாக்கியத்தினால் பத்தாமவனது பரோக்ஷஞானமே சொல்லப்பட்டிருக்கின்றது. பிரமாத்திருசேதனத்திற்கு அபின்னமாய்ப் பத்தாமவனிருக்கின்றான். அந்நிலமை தசமனாகிய விஷயத்திற்கு அபரோக்ஷத்தன்மை யிருத்தலின் அவனது ஞானமும் அபரோக்ஷமாதல் வேண்டும்.

## ௬௧௬. முற்கூறிய தோஷத்தினால் அபரோக்ஷத் தன்மைக்கு வேறு இலக்கணம்.

ஆதலால் இவ்வாறு அங்கீகரித்தல்வேண்டும்:—எங்ஙனம் சுக முதலியன பிரமாத்திருசேதனத்தில் அத்தியஸ்தமாகின்றனவோ, அங்ஙனமே தர்ம அதர்மங்களும் பிரமாத்திருசேதனத்தில் அத்தியஸ்தமாம். ஆதலால் சுக முதலியவற்றைப்போல, தர்ம முதலியனவும் பிரமாத்திருசேதனத்தோடு அபின்னமா யிருத்தலின் அபரோக்ஷமாதல் வேண்டும். அங்ஙனமாயினும் யோக்கிய விஷயத்திற்குப் பிரமாத்திருசேதனத்தோடுள்ள அபேதமே விஷயத்தின் கண் உள்ள அபரோக்ஷத்தன்மையைச் சம்பாதிப்பதாம்; தர்ம முதலியன யோக்கியமன்று. ஆதலால் அவற்றிற்குப் பிரமாத்திருசேதனத்தோடு அபேதமிருக்கினும் அவற்றில் அபரோக்ஷத் தன்மையில்லை. எங்ஙனம் விஷயத்தின்கண் உள்ள யோக்கியதை விஷயத்தின்கண் உள்ள அபரோக்ஷத்தன்மையில் அபேக்ஷிக்கப் படுகின்றதோ, அங்ஙனமே பிரமாணத்தின்கண் உள்ள யோக்கியதை ஞானத்தின் அபரோக்ஷத்தன்மையில் அபேக்ஷிக்கப்படுவதாம். அவாந்தரவாக்கியத்திலும் "பத்தாமவ னிருக்கின்றா" னென்னு வாக்கியத்திலும் அபரோக்ஷஞானம் உண்டாவதற்கு யோக்கியதை யில்லை. ஆனால் மகாவாக்கியத்திலும் "நீபத்தாமவ" னென்னும் வாக்கியத்திலும் அபரோக்ஷஞானம் பிறத்தற்கு யோக்கியதை யிருக்கின்றது. எங்ஙனம்: விஷயத்தின் யோக்கியதை முதலியன பிரத்தியக்ஷமுதலிய வியவகாரத்தால் அறியப்படுகின்றன. எந்தவிஷயத்திற்குப் பிரமாதாவோடு அபேதமுள்ளதாகப் பிர

த்தியக்ஷ விவகாரமுண்டாகின்றதோ, அவ்விஷயம் யோக்கியமென ப்படுகின்றது. எவ்விஷயத்திற்குப் பிரமாதாவோடு அபேதமுண் டாகியும் பிரத்தியக்ஷ வியவகாரமுண்டாகிறதில்லையோ, அவ்விஷ யம் அயோக்கிய மெனப்படுகின்றது. எங்ஙனம்: தாமாதர்ம சம்ஸ காரம் அயோக்கியமாம். விஷயத்தைப்போல பிரமாணத்திலும் யோக்கியத்தன்மை முதலியன அநுபவாநுசாரமாக அறியவேண் டியனவாம். பாகிய இந்திரியங்களில் பிரத்தியக்ஷஞானம் உண்டா தற்கு யோக்கியதை யிருக்கின்றது. அநுமான முதலியவற்றில் பரோக்ஷஞானத்தை உண்டுபண்ணுவதில் யோக்கியதையிருக்கின் றது. அநுபலப்தியிலும் சப்தத்திலும் இருவகை ஞானத்தை யுண்டுபண்ணும் யோக்கியதை இருக்கின்றது.

## கூகச. அபரோக்ஷஞானத்தில் சர்வஞ்ஞாத்ம முனிவரது மதத்தின் அநுவாதம்.

ஆனால் இத்துணை விசேஷமுண்டு:—பிரமாதாவோடு சம்பந்த மின்றிய பதார்த்தத்திற்குச் சப்தத்தினால் கேவலம் பரோக்ஷ ஞானம் உண்டாகின்றது. எப்பதார்த்தத்திற்குப் பிரமாதாவோடு தாதாத்மிய சம்பந்தமுண்டாகின்றதோ, அதனிடத்துயோக்கியதை உண்டாகியும், பிரமாதாவோடு அபேதத்தைப் போதிக்கும சப்த முண்டாகாவிடின், சப்தத்தினால் பரோக்ஷஞானமே உண்டாகும்; அபரோக்ஷஞானம உண்டாகாது. எங்ஙனம் "பத்தாமவ னிருக் கின்றான்" என்றல் முதலிய வாக்கியங்களில் பிரமாதாவோடு அபேதத்தைப் போதிக்கும் சப்தமின்மையால் முற்கூறிய வாக்கி யங்களைக் கேட்போனுக்குத் தனக் கன்னியமின்றிய பத்தாமவன் பிரஹ்மமென்பவற்றின் பரோக்ஷஞானமே உண்டாகின்றது; அப ரோக்ஷஞானம உண்டாகிறதில்லை. எந்தவாக்கியத்தில் பிரமாதா வோடு அபின்னமான யோக்கிய விஷயத்திற்குப் பிரமாதாவோடு அபேதத்தைப் போதிக்கும் சப்தமுண்டாகின்றதோ, அந்தவாக்கி யத்தினால் பரோக்ஷஞான முண்டாகிறதில்லை; அபரோக்ஷஞானமே உண்டாகின்றதென்னும் மதம் சர்வஞ்ஞாதம முனிவரதாம். இம் மதத்தில் கேவல சப்தமே அபரோக்ஷஞானத்திற்கு ஏதுவாம். பரோக்ஷஞானத்தின் சமஸ்கார விசிஷ்ட ஏகாக்கிர சித்தத்தோடு கூடிய சப்தத்தினால் அபரோக்ஷஞான முண்டாகின்றது. இம் மதம் முதலிற் கூறப்பட்டிருக்கின்றது.

ரூபத்தையும், அங்ஙனமே ஞாதாவையும், அங்ஙனமே ஞேயமாகிய கட முதலியவற்றினையும் ஞானம் விஷயஞ் செய்கின்றது. ஆதலால் சகல ஞானமும் திரிபுடி கோசரமா மென்பது பிரபாகரர் மதம். அம்மதத்தில் அபேத முளதாயினும், விஷய விஷயித்தன்மைகளின் அங்கீகாரமுண்டு. ஆதலால் சுவப்பிரகாச ஞானவடிவ சுகத்தில விஷய விஷயித்தன்மை அசங்கதமன்று. சுவ, அதாவது தனது சொரூபம் எதற்குப் பிரகாசம் (விஷயி) ஆகின்றதோ, அது சுவப்பிரகாச மெனப்படுகின்றது. இவ்வாற்றுல் சுவப்பிரகாச மென்னும் சொல்லின் அர்த்தத்தினுலும் அபேதத்தில் விஷய விஷயித்தன்மை சமபவிக்கின்றது. அஙஙனமாயினும பிரகாசிக்கப்படுவது பிரகாசிபபது என்பவற்றின் பேதம அநுபவ சித்தமாயிருத்தலின், பேதமின்றிப் பிரபாகரர் விஷய விஷயித்தன்மைகளைக் கூறுதல் அசங்கதமாம். ஆதலால் சுவப்பிரகாச மென்னும சொல்லிற்கு முற்கூறியது பொருளன்று. ஆனல் சுவ (தனது) சத்தையினுல் பிரகாசித்தலே (சம்சய முதலியன இல்லாமையே) சுவப்பிரகாசமென்னும் சொல்லிற்குப் பொருளென்று அத்வைத நூல்களிற் கூறப்பட்டிருக்கின்றது.

## ஙகள. அபரோக்ஷத்திற்கு முற்கூறிய இலக்ஷணம் சம்பவியாதென்பதை அநுவதித்தல்.

இவ்வாறுல் சுவப்பிரகாச ஞானத்திற்கு அபின்னமான சொரூப சுகத்தில விஷய விஷயித்தன்மைகள் சமபவியாமையின, அபரோக்ஷத்திற்கு முற்கூறிய இலக்ஷணம அதில சமபவியாது.

## ஙகஅ. முற்கூறிய தோஷமின்றிய அபரோக்ஷத்தின் இலக்ஷணம்.

அபரோக்ஷத்தின் இலக்ஷணம் இதுவாம:—தனது வியவகாரத்திற்கு அநுகூலமான சைதன்னியத்தோடு அபேதம அபரோக்ஷ விஷயத்தின இலக்ஷணமாம். அந்தக்கரணமுமம சுக முதலியனவும் சாக்ஷி சேதனத்தில்அத்தியஸ்தமா யிருத்தலின், தர்மத்துடன் அந்தக்கரணத்திற்குச் சாக்ஷி சேதனத்தோடு அபேத மிருக்கின்றது. சாக்ஷிசேதனத்தால அவற்றின பிரகாச மிருத்தலின், அவற்றின் வியவகாரத்திற்கு அநுகூலம சாக்ஷி சேதனமாம. ஆதலால் சுவ அதாவது அந்தக்கரண சுகமுதலியவற்றின் வியவகாரத்திற்கு அநுகூலமான சாக்ஷி சேதனம எதுவோ, அதனேடு அபேதவடிவ அப

ரோக்ஷத்தின் இலக்ஷணம் சுக முதலியவற்றோடு கூடிய அந்தக்கரணத்திற் சம்பவிக்கின்றது. காம முதலியவற்றிற்குச் சாக்ஷிசேதனத்தோடு அபேதமோ உளது. ஆனால் அவற்றில் யோக்கியத்தன்மை யின்மையால் அவற்றின் வியவகாரத்திற்கு அநுகூலம் சாக்ஷிசேதனமன்று. ஆதலால் தனது வியவகாராநுகூல சேதனத்தோடு காம முதலியவற்றிற்கு அபேதமில்லை. இருத்தலின் அவற்றில் அபரோக்ஷத்தன்மையில்லை. அங்ஙனமே கட முதலியவற்றைக் கோசரிக்கும் விருத்திகாலத்தில் கட முதலியவற்றின் அதிஷ்டான சேதனத்திற்கு விருத்தி யுபகித சேதனத்தோடு அபேத முண்டாகின்றது. ஆதலால் கட முதலியவற்றைக் கோசரிக்கும் விருத்தி காலத்தில் கட முதலிய சேதனம் கட முதலிய வியவகாரத்திற்கு அநுகூலமாம். அதற்கு அபின்னமான கட முதலியன அபரோக்ஷமெனப்படுகின்றன. கட முதலியவற்றைக் கோசரிக்கும் விருத்தியின் அபாவ காலத்திலும் தனது அதிஷ்டான சேதனத்தோடு கட முதலியன அபின்னமாம். ஆனால் அக்காலத்தில் அவற்றின் வியவகாரத்திற்கு அநுகூலமான அதிஷ்டான சேதன மில்லை. ஏனெனின் விருத்தி யுபகிதத்தோடு அபின்னமாய் வியவகாரத்திற் கநுகூலமாகின்றது. ஆதலால் கட முதலியவற்றைக் கோசரிக்கும் விருத்தியின் அபாவகாலத்திற் கட முதலியன அபரோக்ஷமன்று. அங்ஙனமே பிரஹ்மத்தைக் கோசரிக்கும் விருத்தி யுபகித சாக்ஷி சேதனமே பிரஹ்மத்தின் வியவகாரத்திற்கு அநுகூலமாம். அதனோடு அபின்னமாகிய பிரஹ்மத்திற்கு அபரோக்ஷத்தன்மை சம்பவிக்கின்றது. எங்ஙனம் வியவகாரத்திற் கநுகூலமான சைதன்யத்தோடு விஷயத்திற்குள்ள அபேதம் விஷயத்தின்கண் உள்ள பிரத்தியக்ஷத்தன்மையின் பிரயோஜகமோ, அங்ஙனமே கட முதலிய விஷயத்தோடு கட முதலிய வியவகாரத்திற் கநுகூலமாகிய சைதன்னியத்திற்குள்ள அபேதம் ஞானத்தின்கண் உள்ள பிரத்தியக்ஷத் தன்மையின் பிரயோஜகமாம்.

## ௬௧௧. விருத்திவடிவப் பிரத்தியக்ஷ ஞானத்தில் முற்கூறிய அபரோக்ஷத்தின் இலக்ஷணத்தினது அவ்வியாப்தி.

சேதனத்தில் கட முதலியன அத்தியஸ்தமாம். விஷய வடிவ விருத்தி காலத்தில் விருத்திசேதனத்தோடு விஷயசேதனத்திற்கு

ஏகத்துவ மிருத்தலின், தனது அதிஷ்டானமாகிய விஷய சேதனத்தோடு அபின்னமான கட முதலியவற்றிற்கு விருத்தி சேதனத்தோடு அபேத முண்டாகியும், விருத்தியோடு அபேதம் கடமுதலியவற்றிற்குச் சம்பவியாது. எங்ஙனம் இரஜ்ஜுவிற கற்பிதமான சர்ப்ப தண்ட மாலைகளுக்கு இரஜ்ஜுவோடு அபேதம உண்டாகியும், சர்ப்ப தண்டமாலைகளுக்குப் பரஸ்பரம பேதமே உண்டாகின்றது; அபேத முண்டாகிறதில்லை. பிரஹ்மத்தில் கற்பிதமான சகல றுவைதங்களுக்கும் பிரஹ்மத்தோடு அபேத முண்டாகியும், ஒன்றுகொன்று அபேத முண்டாகிறதில்லை. அங்ஙனமே விருத்தி சேதனத்தோடு விருத்திக்கும கட முதலியவற்றிற்கும அபேதம் சம்பவிக்கின்றது; ஆனால் விருத்திக்கும கட முதலிய விஷயங்களுக்கும் பரஸ்பரம் அபேதம சம்பவிக்கிறதில்லை. ஆதலால் விருத்தியிலேயே பிரத்தியக்ஷ ஞானத்தில் முற்கூறிய இலக்ஷணத்திற்கு அவ்வியாப்தி இருக்கின்றது.

## கஉ௦. முற்கூறிய அவ்வியாப்திக்கு அத்வைத வித்தியாசாரியர் முறைப்படி பரிகாரம்.

அங்ஙனமாயினும், அத்வைத வித்தியாசாரியர் முறைப்படி அபரோக்ஷத்தன்மைத் தர்மம் சேதனத்திற்காம்; விருத்திக்கன்று. எங்ஙனம அநுமிதித்தன்மை இரசைதத்தன்மை முதலியன அந்தக்கரண விருத்தியின் தர்மமோ, அங்ஙனமே அபரோக்ஷத்தன்மைத் தர்மம விருத்தியிலில்லை. ஆனால் விஷயாகார விருத்தி உபகித சேதனத்திற்கு அபரோக்ஷத்தன்மைத் தர்ம மிருத்தலின், சேதனத்தின் அபரோக்ஷத் தன்மைக்கு உபாதி விருத்தியாம. ஆதலால விருத்தியில அபரோக்ஷத்தன்மையை ஆரோபித்தலால விருத்திஞானம அபரோக்ஷமா மென்று வியவகரிக்கின்றனர். இவ்வாறனுல் விருத்தி ஞானம் இலக்ஷியமன்று. ஆதலால அவ்வியாப்தியில்லை. விருத்திஞானத்தில் அபரோக்ஷத் தன்மைத் தர்மம் இஷ்டமாம. அபரோக்ஷத்தின் இலக்கணம் செல்லாதாயின் அவ்வியாப்தி யுண்டாம். விருத்தி ஞானம இலக்ஷியமன்று; விருத்தி உபகித சேதனமே இலக்ஷியமாம. ஆதலால் அவ்வியாப்திச் சங்கையில்லை. சேதனத்தின் தர்மமாகிய அபரோக்ஷத் தன்மையை அங்கீகரித்தலினாலேயே சுக முதலியவற்றின் ஞானத்தில் அபரோக்ஷத் தன்மை சம்பவிக்கின்றது. விருத்தியின் தர்மமாகிய அபரோக்ஷத் தன்

மையை அங்கீகரிக்கின், சுக முதலியவற்றைக் கோசரிக்கும் விருத்தியின் அங்கீகார மின்மைப் பக்ஷத்தில் சாக்ஷி வடிவ சுக முதலியவற்றின் ஞானத்தில் அபரோக்ஷத்தன்மை வியவகாரம் உண்டாகலாகாது. ஆதலால் அபரோக்ஷத்தன்மைத் தர்மம் சேதனத்திற்காம்; விருத்திக்கன்று.

### ௯௨௧. முற்கூறிய பக்ஷத்திற் சங்கை.

இப்பக்ஷத்தில் இது சங்கையாம்:—சம்சார தசையிலும் ஜீவனுக்குப் பிரஹ்மத்தோடு அபேதமிருத்தலின், சகல புருஷர்களுக்கும் பிரஹ்மம் அபரோக்ஷமாமென்னும் வியவகார முண்டாதல் வேண்டும். அவாந்தரவாக்கிய ஜந்திய பிரஹ்மத்தின் ஞானமும் அபரோக்ஷமாதல் வேண்டும். ஏனெனின் அவாந்தரவாக்கிய ஜந்திய விருத்தி உபகித சாக்ஷி சேதனத்திற்குப் பிரஹ்ம வடிவ விஷயத்தோடு அபேதமிருக்கின்றது.

### ௯௨௨. முற்கூறிய சங்கைக்குச் சமாதானம்.

அங்ஙனமாயினும் இது சமாதானமாம்:—தனது வியவகாரத்திற்கு அநுகூலமான சேதனத்தோடு ஆவரிக்கப்படாத விஷயத்திற்கு உள்ள அபேதமே அபரோக்ஷ விஷயத்தின் இலக்ஷணமாம். ஆவரிக்கப்படாத விஷயத்தினோடு தனது வியவகாரத்திற் கநுகூலமான சேதனத்தின் அபேதம் அபரோக்ஷ ஞானத்தின் லக்ஷணமாம். சம்சார தசையில் ஆவரிக்கப்பட்ட பிரஹ்மத்திற்குத் தனது வியவகாரத்திற் கநுகூலமான சேதனத்தோடு அபேத முண்டாயினும், ஆவரிக்கப்படாத விஷயத்தின் அபேதமிருத்தலின், பிரஹ்மத்தில் அபரோக்ஷத்தன்மையில்லை. அங்ஙனமே அவாந்தர வாக்கிய ஜந்திய ஞானத்திற்கும் ஆவரிக்கப்பட்ட விஷயத்தோடு அபேதமிருத்தலின், அந்த ஞானத்திற்கு அபரோக்ஷத்துவமில்லை. ஆதலால் முற்கூறிய சங்கை சம்பவியாது.

### ௯௨௩. முற்கூறிய பக்ஷத்தில் வேறு சங்கை.

வேறு சங்கை:—முற்கூறியபடி ஆவரிக்கப்படாத விஷயத்தின் அபேதத்தினால் அபரோக்ஷத்தன்மை அங்கீகரிக்கின், அந்நியோந்நியாச்ரய தோஷமுண்டாகும். சமான கோசர ஞானமாத்திரத்தினை ஆவரணத்தை நிவர்த்திப்பதாகக்கொள்ளின், பரோக்ஷ ஞானத்தினாலும் அஞ்ஞானத்தின் நிவிருத்தி உண்டாதல்வேண்டும்.

சித்தாந்தத்தில் அசத்துவாபாதக அஞ்ஞான சக்தி அல்லது திரோதானம பரோக்ஷ ஞானத்தினால் நாசமாகின்றது. அபானுபாதக சக்திவிசிஷ்ட அஞ்ஞானத்தின் நாசம் பரோக்ஷ ஞானத்தினால் உண்டாகிறதில்லை. அபரோக்ஷ ஞானத்தினாலேயே அஞ்ஞானத்தின நாச முண்டாகின்றது. இவ்வாற்றால் அஞ்ஞானநிவிருத்தி ஞானத்தினது அபரோக்ஷத்தன்மையினது சித்தியின் அதீனமாயிருக்கின்றது. ஆவரிக்கப்படாத விஷயத்தோடு தனது வியவகாரத்திற கநுகூலமான சேதனத்திற்கு அபேதம உளதாக, ஞானத்தின் அபரோக்ஷத்தன்மை லக்ஷணத்தைக் கூறுதலால், அஞ்ஞான நிவிருத்தியின் அதீனமான ஞானத்தின அபரோக்ஷத் தன்மையினது சித்திசொல்லப்பட்டது. இதனால் அந்நியோந்நியாசிரயதோஷமாம.

## ௯௨௪. முற்கூறிய சங்கைக்குச் சமாதானம்.

அதன் சமாதானம இதுவாம்:—முற்கூறியபடி அஞ்ஞான நிவிருத்திக்கு ஞானத்தின அபரோக்ஷத்தன்மையில அபேக்ஷை உளதாயினும, அஞ்ஞானத்தின்நிவிருத்தியில அபரோக்ஷத்தன்மையினது அபேக்ஷையில்லை. ஏனெனின ஞானமாத்திரத்தினால அஞ்ஞானத்தினது நிவிருத்தியை அங்கீகரிக்கின, பரோக்ஷ ஞானத்தினாலும் அஞ்ஞானத்தின நிவிருத்தி உண்டாதல்வேணடும. இந்தோஷத்தின் பரிகாரத்தின்பொருட்டு அபரோக்ஷ ஞானத்தினால அஞ்ஞானத்தின் நிவிருத்தி சொல்லப்பட்டிருக்கின்றது. அதனிடத்து அந்நியோந்நியாசிரய தோஷ முண்டாகின்றது. ஆதலால ஞானமாத்திரத்தால் அஞ்ஞானத்தின நிவிருத்தி யென்றும, அபரோக்ஷ ஞானத்தினால அஞ்ஞானத்தின நிவிருத்தி யென்றும கூறவில்லை. ஆனால் பிரமாணத்தின் மகிமையினால யாதொரு விஷயத்தோடு ஞானத்தின தாதாத்மிய சமபந்தமுண்டாகின்றதோ, அந்த ஞானத்தினால அஞ்ஞானத்தின் நிவிருத்தி உண்டாகின்றது. பிரமாண மகிமையினால் பாகியேந்திரிய ஜந்நிய கடமுதலியவற்றின் ஞானம் விஷயத்தோடு தாதாத்மிய சமபந்தமுடையதாகின்றது. சப்தஜந்நிய பிரஹ்ம ஞானமும மகாவாக்கிய வடிவப் பிரமாணத்தின் மகிமையினால விஷயத்தோடு தாதாத்மிய சமபந்தமுடையதாகின்றது. ஆதலால முற்கூறிய இரண்டு ஞானங்களாலும அஞ்ஞானத்தின் நிவிருத்தி உண்டாகின்றது. எல்லாவற்றிற்கும் உபாதானம் பிரஹ்மமா யிருத்தலால் பிரஹ்மகோசர சகல ஞானங்களுக்கும

தாதான்மியசம்பந்த முண்டு. ஆதலால் அநுமிதி வடிவப் பிரஹ்ம ஞானத்தினாலும் அவாந்தர வாக்கிய ஜந்திய பிரஹ்மத்தின் பரோக்ஷ ஞானத்தினாலும் அஞ்ஞானத்தின் நிவிருத்தி உண்டாதல் வேண்டும். அங்ஙனமாயினும், முற்கூறிய ஞானத்திற்கு விஷயத்தோடு தாதாத்மிய சம்பந்த மிருக்கின்றது. அது விஷயத்தின் மகிமையினாலாம்; பிரமாணத்தின் மகிமையினாலன்று. ஏனெனின் மகாவாக்கியத்தினால் ஜீவப்பிரஹ்மாக்களின் அபேதத்தைக் கோசரிக்கும் ஞானமுண்டாகின்றது. அதற்கு விஷயத்தோடு தாதான்மிய சம்பந்தமோ பிரமாணத்தின் மகிமையினாற் கூறப்படுகின்றது. வேறு ஞானத்திற்குப் பிரஹ்மத்தோடு தாதாத்மியசம்பந்த மிருக்கின்றது. அது பிரஹ்மத்திற்கு வியாபகத்தன்மை யிருத்தலாலும் எல்லாவற்றின் உபாதானத்தன்மை யிருத்தலாலும் விஷயத்தின் மகிமையினாற்கூறப்படுகின்றது. இவ்வாற்றால் விலக்ஷணபிரமாண ஜந்திய விஷய சம்பந்தியாகிய ஞானத்தினால் அஞ்ஞானத்தின் நிவிருத்தி உண்டாகின்றதென்று கூறுதலில் ஞான மாத்திரத்தால் அஞ்ஞான நிவிருத்தியின் ஆபத்தியில்லை. ஞானத்தின் அபரோக்ஷத்தன்மையின் அபேக்ஷை அஞ்ஞான நிவிருத்தியில் இல்லாமையால் அந்நியோந்நியாசிரய தோஷமுமில்லை. இவ்வாற்றால் தனது வியவகாரத்திற் கநுகூலமான ஆவரிக்கப்படாத சைதன்யத்தோடு விஷயத்தின் அபேதம் அபரோக்ஷ விஷயத்தின் லக்ஷணமாம். முற்கூறிய சைதன்யத்திற்கு விஷயத்தோடுள்ள அபேதம் அபரோக்ஷ ஞானத்தின் இலக்ஷணமாம். ஆதலால் சப்தஜந்திய பிரஹ்ம ஞானத்திலும் அபரோக்ஷத்தன்மை சம்பவிக்கின்றது.

## கூஉரு. சப்தத்தினால் அபரோக்ஷ ஞானத்தின் உற்பத்தியில் சொல்லப்பட்ட மூன்று மதங்களில் முதல் மதத்தின் நலமுடைமை.

இவ்வாறு சப்தத்தினால் அபரோக்ஷ ஞானத்தின் உற்பத்தியில் மூன்றுமதங்கள் சொல்லப்பட்டன. அவற்றுள், முதல்மதமே நலமுடையதாம். ஏனெனின் ஞானத்தின்கணுள்ள பரோக்ஷத்தன்மை அபரோக்ஷத்தன்மைகள் பிரமாணாதீனமாம். சககாரிசாதன விசிஷ்ட சப்தத்திலும் அபரோக்ஷ ஞானத்தைப் பயத்தலின் யோக்கியதை யுண்டென்பது முதல் மதம். விஷயத்தின் அதீனமாகவே ஞானத்தின் அபரோக்ஷத்தன்மை முதலிய தாம

ங்களிருக்கின்றன, பிரமாணத்தின் அதீனமன்று என்னும் அபிப்பிராயத்தினால் இரண்டாவது மதமும் அத்வைதவித்தியாசாரியரது மூன்றாவது மதமுமிருக்கின்றன. அவ்விரண்டு மதங்களிலும் கேவல விஷயத்தின் அதீனமாகவே அபரோக்ஷத்துவ முதலிய வற்றை அங்கீகரிக்கின், அவாந்தர வாக்கியத்தினாலும் பிரஹ்மத்தின் அபரோக்ஷஞான முண்டாதல் வேண்டும். ஆதலால் ஞானத்தின் அபரோக்ஷத்தன்மையில் பிரமாணத்தின் அதீனத்தன்மை அவசியமாகவே வேண்டும். ஆதலால் முதல் மதமே நலமுடையதாம்.

## ௬௨௯-௬௪௨. விருத்தியின் பிரயோஜனத்தைக் கூறுதல்.

### ௬௨௯. கிரந்தத்தின் ஆரம்பத்தில் கூறிய மூன்று வினாக்களையும் அவற்றிற் சொல்லப்பட்ட இரண்டின் விடையையும் அநுவதித்தல்

கிரந்தத்தின் ஆரம்பத்தில் விருத்தியின் சொரூபம் காரணம் பயன் என்னும் மூன்றின் வினாவுளது. அவற்றுள் அந்தக்கரண விருத்திகளின் பிரகாச வடிவ பரிணாமம் விருத்தியெனப்படுகின்றது என்று கூறுதலால் விருத்தியின் சாமானிய வடிவம் சொல்லப்பட்டது. அதன்பின் யதார்த்தத்தன்மை அயதார்த்தத்தன்மை முதலிய பேதங்களைக் கூறுதலால் விருத்தியின் விசேஷ வடிவம் சொல்லப்பட்டது. பிரமாண நிரூபணத்தால் விருத்தியினது காரணத்தின் சொரூபம் சொல்லப்பட்டது.

### ௬௨௭. விருத்தியின் பிரயோஜன சம்பந்தியாகிய மூன்றாவது வினாவினது விடையின் ஆரம்பம்.

விருத்தியின் பிரயோஜனம் வினாவப்பட்டது. அவ்விருத்தியின் பிரயோஜனம் இதுவாம்:—ஜீவனுக்கு அவஸ்தை மூன்றின் சம்பந்தம் விருத்தியினாலே உண்டாகின்றது. புருஷார்த்தப் பிராப்தியும் விருத்தியினாலே உண்டாகின்றது. ஆதலால் சம்சாரப் பிராப்திக்கு ஏது விருத்தியாம். மோக்ஷப்பிராப்திக்கும் ஏது விருத்தியாம். ஏனெனின் அவஸ்தாத்திரயத்தின் சம்பந்தத்தால் ஜீவனுக்குச் சம்சார மிருக்கின்றது.

---

## னத்தைக் கூறும் அவசரத்தில் ஜாக்கிரத்தின் இலக்ஷணம்.

ஆண்டு இந்திரியஜந்திய ஞானத்தின் அவஸ்தையினை ஜாக்கிராவஸ்தை யென்பர். அவஸ்தையென்னும் சொல் காலத்தின் வாசகமாம். சுகமுதலியவற்றின் ஞான காலமும் உதாசீன காலமும் ஜாக்கிராவஸ்தை யெனப்படுகின்றது. சுக முதலியவற்றின் ஞானம் இந்திரிய ஜந்திய மன்று; அங்ஙனமே சுக முதலியவற்றின் ஞான காலத்தில் அந்நியவிஷயத்தின் ஞானமும் இந்திரியஜந்தியமாகாது. அங்ஙனமே உதாசீன காலத்திலும் இந்திரிய ஜந்திய ஞான மில்லை. அங்ஙனமாயினும், சொல்லப்படும் சொப்பனாவஸ்தை சுழுத்தி யவஸ்தைகளுக்கு வேறாய் இந்திரிய ஜந்திய ஞானத்தின் ஆதாரகாலம் எதுவோ, அது ஜாக்கிராவஸ்தை யெனப்படுகின்றது. சுக முதலியவற்றின் ஞானகாலத்திலும் உதாசீன காலத்திலும் இந்திரிய ஜந்திய ஞான மில்லையாயினும், அதனாதாரமாயிருக்கின்றது. இந்திரிய ஜந்திய ஞானத்தின் அபாவம் சொப்பனாவஸ்தையிலும் சுழுத்தி அவஸ்தையிலும் இருக்கின்றது. ஆதலால் சொப்பனாவஸ்தை சுழுத்தி அவஸ்தைகளுக்கு வேறான காலம் சொல்லப்பட்டது. இவ்வாறுள்ள ஜாக்கிராவஸ்தை என்னும் வியவகாரம் இந்திரிய ஜந்திய ஞானத்தின் அதீனமாம். அவ்விந்திரிய ஜந்திய ஞானம் அந்தக்கரணத்தின் விருத்தி வடிவமாம். அந்தக்கரணத்தின் விருத்திக்கு மதபேதத்தால் இவை பிரயோஜனமாம்.

## ௯௨௯. சில நூலாசிரியர் மதப்படி ஆவரணத்தின் அபிபவம் விருத்தியின் பிரயோஜனமாமெனல்.

சிலரோ ஆவரணத்தின் அபிபவ(நாச)த்தை விருத்தியின் பிரயோஜன மென்பர். ஆவரணாபிபவத்திலும் நாநாமத முண்டு. எங்ஙனம் மின்மினியின் பிரகாசத்தால் மகாந்தகாரத்தினது ஏகதேசத்தின் நாச முண்டாகின்றதோ; அங்ஙனமே அஞ்ஞானத்தினது ஏகதேசத்தின் நாசம் ஆவரணாபிபவம் என்னும் சொல்லிற்குப் பொருளாமென்பது சாம்பிரதாயிக மதம்.

## ௯௩௦. சமஷ்டி அஞ்ஞானம் ஜீவனது உபாதியாகும் பக்ஷத்தில் பிரஹ்ம அல்லது ஈசுவர அல்லது ஜீவசேதனங்களின் சம்பந்தத்தால் ஆவரணத்தினது அபிபவம் சம்பவியாமை.

சமஷ்டி அஞ்ஞானம் ஜீவனது உபாதியாம் என்னும் பக்ஷத்தில் கடமுதலிய விஷயங்களோடு சேதனத்திற்கு எப்போதும்

சம்பந்த மிருக்கின்றது. ஆதலால் சேதன சம்பந்தத்தினாலே ஆவரணத்தின அபிபவம சம்பவிக்கிறதில்லை. ஏனெனின் பிரஹ்ம சேதனமோ ஆவரணத்தின் சாதகமாம்; விரோதியன்று. ஈசுவர சேதனத்தினால் ஆவரணத்தின் அபிபவ முண்டாயின், "அது என்னால் அறியப்பட்டது" என்னும வியவகாரம ஜீவர்களுக்கு உண்டாகலாகாது; ஈசுவரனால் அறியப்பட்டது எனனும் வியவகாரம உண்டாகல் வேண்டும். ஏனெனின ஈசுவரனுக்கும ஜீவனுக்கும வியாவகாரிக பேத முண்டு. ஆதலால ஈசுவரனால் அறியப்பட்டவொன்று ஜீவனுக்கறியப்படுவதாகாது. ஆதலால ஜீவ சேதனத்தின் சம்பந்தத்தால் ஆவரணத்தின அபிபவம் அதின் இப்பக்ஷத்தில ஜீவசேதனங்களுக்கும கடமுதலியவற்றோடு சதாசமபந்தமுளதாம. ஏனெனின் ஜீவசேதனத்தின் உபாதி மூலாஞ்ஞானமாம. அதனிடத்து ஆரோபிக்கப்பட்ட பிரதிபிம்பத்தன்மை விசிஷ்ட சேதனத்தை ஜீவனெனபர். மூலாஞ்ஞானத்திற்குக் கடமுதலியவற்றோடு எப்போதும சம்பந்த மிருத்தலின, ஜீவசேதனத்திற்கு எப்போதும சம்பந்த மிருக்கின்றது. ஆதலால் கட முதலியவற்றினது ஆவரணத்தின அபிபவம எப்போதும வேண்டும். இதனால விருத்தியினால் ஆவரணத்தின அபிபவத்தைக் கூறின், பரோக்ஷ விருத்தியினாலும ஆவரணத்தின் அபிபவம உண்டாதல வேண்டும.

### ௩௩௧. இப்பக்ஷத்தில் அபரோக்ஷ விருத்தியினால் அல்லது அபரோக்ஷ விருத்தி விசிஷ்ட சேதனத்தினால் ஆவரணத்தினது அபிபவத்தின் சம்பவம்.

ஆதலால் அபரோக்ஷ விருத்தியினால் ஆவரணத்தின் அபிபவ முண்டாகின்றது. அல்லது அபரோக்ஷ விருத்தி விசிஷ்ட சேதனத்தினால் ஆவரணத்தின அபிபவ முண்டாகின்றது. எங்ஙனம மின்மினியின் பிரகாசத்தினால் பேரிருளின் ஏகதேசம நாசமாகின்றதோ, மின்மினியின் அபாவகாலத்தில் மகாந்தகாரம (பேரிருள்) மீண்டும விரிகின்றதோ, அங்ஙனமே அபரோக்ஷ விருத்தி சம்பந்தத்தினால் அல்லது அபரோக்ஷ விருத்தி விசிஷ்ட சேதனத்தின் சமபந்தத்தினால் மூலாஞ்ஞானத்தினது அமசத்தின் நாச முண்டாகின்றது. விருத்தியின் அபாவதசையில அஞ்ஞானம விரிகின்றது. இது சம்பிரதாயத்தை அநுசரித்த மதமாம.

மும் சேதனம் அபிவியங்கியமுமாம். இவ்வாறுல் பிரதிபிம்பத்தைக் கிரகித்தலாகிய வியஞ்சகத்தன்மை கட முதலிய விஷயங்களி லிருக்கின்றது. பிரதிபிம்பத்தைச் சமர்ப்பித்தலாகிய வியங்கியத்தன்மை சேதனத்தி லிருக்கின்றது. கட முதலியவற்றில் சுபாவமாகப் பிரதிபிம்பத்தைக் கிரகித்தலின் சாமாத்திய மில்லை. ஆனால் தனது வடிவை விருத்தி சம்பந்தத்தினுல் சேதனப் பிரதிபிம்பத்தின கிரகணம் தகுதியாகின்றது. எங்ஙனம்: கண்ணுடி சம்பந்த மின்றிச் சுவரில் சூரியனது பிரதிபிம்பம் உண்டாகாது, கண்ணுடி சம்பந்தத்தினுல் உண்டாகின்ற தாதலின் சூரிய பிரதிபிம்பத்தைக் கொள்ளுதலின் யோக்கியதை குட்டியததில (சுவரில்) கண்ணுடி சம்பந்தத்தால் உண்டாகின்றதோ, எங்ஙனம் திருஷ்டாந்தத்தில் சூரியப்பிரபைக்குக் குட்டியத்தோடு சாமானிய சம்பந்தம் உளதாய், அபிவியஞ்சக அபிவியங்கியத்தன்மைச் சம்பந்தம் கண்ணுடி அதீனமா யிருக்கின்றதோ, அங்ஙனமே ஜீவசேதனத்திற்கு விஷயத்தோடு எப்போதும் சம்பந்த மிருக்கின்றது. ஆனுல் விருத்தி சம்பந்தத்தால் கட முதலியவற்றில ஜீவசேதனத்தின் பிரதிபிம்பத்தைக் கிரகித்தற்றகுதி யுண்டாகின்றது. ஆதலால் ஜீவசேதனத்திற்குக் கட முதலியவற்றோடுள்ள அபிவியஞ்சக அபிவியங்கியத்தன்மைச் சம்பந்தம் விருத்தியின் அதீனமாம். இவ்வாறுல ஜீவசேதனத்தோடு கட முதலியவற்றின் விலக்ஷண சம்பந்தத்திற்கு ஏது விருத்தியாம். ஆதலால விஷய சம்பந்தத்தின்பொருட்டு விருத்தி யிருக்கின்றது. அச்சம்பந்தத்தால் விஷயத்தின பிரகாச முண்டாகின்றது. ஜீவ சேதனம விபுவாம். இப்பக்ஷத்தில விலக்ஷண சம்பந்தத்தை உண்டுபண்ணுவது விருத்தியாம்.

## ௩௩௪. அந்தக்கரண விசிஷ்ட சேதனம் ஜீவனு மென்னும் பக்ஷத்தில் விஷய சம்பந்தத்தின் பொருட்டு விருத்தியின் அபேக்ஷை உண்டெனல்.

அந்தக்கரண விசிஷ்ட சேதனம ஜீவனுமென்னும பக்ஷத்திலே விருத்தியின்றி ஜீவசேதனத்தோடு கட முதலியவற்றிற்கு முற்றும சம்பந்த மில்லை. இந்திரிய விஷயங்களின சம்பந்தத்தால் அந்தக்கரணத்தின் விருத்தி கட முதலிய தேசத்திற செல்லுமாயின், அப்போது ஜீவசேதனத்திற்குக் கட முதலியவற்றோடு சம்பந்த முண்டாகின்றது. விருத்தியின் வெளிச்செல்லுதலின்றி உள்

ஜீவனுக்கு வெளிக்குடமுதலியவற்றோடு சம்பந்த முண்டாகிறதில்லை. இவ்வாற்றால் அந்தக்கரணாவச்சின்ன பரிச்சின்ன ஜீவனாவன். இப்பக்ஷத்தில் விருத்தி விஷய சம்பந்தத்தின் பொருட்டாம் என்னும் பொருள் வெளிப்படையேயாம்.

## ௯௯௫. முற்கூறிய இரண்டு பக்ஷங்களின் விலக்ஷணத் தன்மை.

இவ்வாற்றால் அஞ்ஞான உபாதியுடையவனை ஜீவனென்னும் பக்ஷத்தில் ஜீவசேதனத்திற்கு விஷயத்தோடு சம்பந்தமோ என்று மிருக்கின்றது. அபிவியஞ்சக அபிவியங்கியத்தன்மைச் சம்பந்தம் எப்போது மிருப்பதில்லை. அதன் பொருட்டு விருத்தி யிருக்கின்றது. அந்தக்கரணாவச்சின்னம் ஜீவன் என்னும் பக்ஷத்தில் ஜீவனுக்கு விஷயத்தோடு முற்றும் சம்பந்த மில்லை. அதன் பொருட்டு விருத்தி யிருக்கின்றது. இவ்வாறு விருத்தியின் பல சம்பந்தத்தில் விலக்ஷணத் தன்மையை ஆசிரியர்கள் கூறியிருக்கின்றனர்.

## ௯௯௬. மதபேதத்தால் சம்பந்தத்தில் விலக்ஷணத் தன்மையைக் கூறுதல் அசங்கதமெனல்.

ஆனால் மதபேதத்தால் சம்பந்தத்தில் விலக்ஷணத்தன்மையைக் கூறுதல் அசங்கதமாம். ஏனெனில் அந்தக்கரணம் ஜீவனது உபாதியா மென்னும் பக்ஷத்திலும் அஞ்ஞானமோ ஜீவத்தன்மைக்கு உபாதியாக அவசியம் விரும்பப்படுகின்றது. இல்லையாயின் பிராஞ்ஞ வடிவ ஜீவனது அபாவ முண்டாகின்றது. ஆதலால் ஜீவத்தன்மையின் உபாதி சகல மதங்களிலும் அஞ்ஞானமாம். கர்த்திருத்தன்மை முதலிய அபிமானம் அந்தக்கரண விசிஷ்டத்தி லுண்டாகின்றது. ஆதலால் அந்தக்கரணாவச்சின்னத்தினை ஜீவனென்பர். அஞ்ஞானத்தில் பிரதிபிம்பம் ஜீவனாமென்னும் பக்ஷத்திலும் அஞ்ஞான விசிஷ்டம் பிரமாதாவன்று; அந்தக்கரண விசிஷ்டமே பிரமாதாவாம். ஜீவசேதனத்திற்கோ விஷயத்தோடு எப்போதும் சம்பந்த மிருக்கின்றது. ஆனால் பிரமாத்திரு சேதனத்திற்கு விஷயத்தோடு சம்பந்த மில்லை. பிரமாத்திரு சேதனத்தின் சம்பந்தத்தினாலேயே விஷயத்தின் பிரகாச முண்டாகின்றது. ஜீவசேதனத்தின் சம்பந்தத்தினால் விஷயத்தின் பிரகாச முண்டாகிறதில்லை. எங்ஙனம் பிரஹ்ம சேதனமும் ஈசுவர சேதனமும் அஞ்ஞானத்திற்குச் சாதகமோ, அங்ஙனமே அவித்தையை உபாதியாகவுடைய ஜீவசே

தனமுமாம். அதன் சம்பந்தத்தால் விஷயத்தில் ஞாதத்தன்மை முதலிய வியவகாரம் உண்டாகிறதில்லை. ஜீவசேதனத்திற்கு ஞாதத்தன்மை முதலியவற்றின் அபிமானமு முண்டாகிறதில்லை. பிரமாதாவின் சம்பந்தத்தினாலேயே விஷயத்தில் ஞாதத்தன்மை முதலிய வியவகார முண்டாகின்றது. வியவகாரத்தின் அபிமானமும் பிரமாதாவிற்கு உண்டாகின்றது. அந்தப்பிரமாதா விஷயத்திற்கு வேறான இடத்திலிருக்கின்றான். ஆதலால் பிரமாதாவிற்கு விஷயத்தோடு சம்பந்தம் எப்போது மிருப்பதில்லை. பிரமாதாவோடு விஷயத்திற்குள்ள சம்பந்தம் விருத்தியின் அதீனமாம். இவ்வாறாயின் ஜீவனது உபாதிக்கு வியாபக மங்கீகரிக்கின் அல்லது பரிச்சின்ன மங்கீகரிக்கின் இரண்டு பக்ஷங்களினும் பிரமாதாவோடு விஷயத்திற் குண்டாம் சம்பந்தம் விருத்தியின் அதீனமாதல் சமானமாம். அதனிடத்து விலக்ஷணத் தன்மையைக் கூறுதல் கேவலம் புத்தி சாமர்த்தியத்தைக் காட்டுதற்பொருட்டாம்; சாமர்த்திய மின்மைக்குச் சாதகமாம். பிரமாதாவிற்கு விஷயத்தோடு சம்பந்த மில்லை.

## ௧௧௭. நான்கு சேதனங்களைக் கூறுதலோடு முற்கூறிய பொருளின் சித்தி.

இதனாலான பிரமாதிரு சேதனம், பிரமாண சேதனம், விஷயசேதனம், பலசேதனமென்னும் பேதத்தால் நான்குவகைச் சேதனஞ் சொல்லப்பட்டிருக்கின்றது. பிரமாதாவிற்கு விஷயத்தோடு சம்பந்தமுளதாயின், பிரமாதிரு சேதனத்தோடு விஷய சேதனத்திற்கு விபாகத்தைக் கூறுதல் அசங்கதமாகும். அந்தக்கரண விசிஷ்டசேதனம் பிரமாதிருசேதனமாம். விருத்தி யவச்சின்னசேதனம் பிரமாணசேதனமாம். கடமுதலியவற்றின் அவச்சின்னசேதனம் விஷயசேதனமாம். விருத்தி சம்பந்தத்தினால் கட முதலியவற்றில் சேதனத்தின் பிரதிபிம்ப முண்டாயின், அதனைப் பலசேதனமென்பர். சிலர் இவ்வாறு கூறுவர்:—கடாவச்சின்ன சேதனமே அறியப்படாததாயின், அப்போது விஷயசேதனமெனப்படுகின்றது. அறியப்பட்டதாயின், அப்போது கடாவச்சின்ன சேதனத்தினையே பலசேதனமென்பர். அதனையே பிரமேயசேதனமென்பர். ஆனால் வித்தியாரணிய சுவாமியும் வார்த்திககாரரும் பிரமாண விருத்திக்குப் பிந்தியகாலத்தில் குடமுதலியவற்றிலுண்டாகும் சேதனத்தின் ஆபாசம் யாதோ, அதுவே பலசேதன

மெனக் கூறி யிருக்கின்றனர். இவ்வாற்றால் பிரமாத்திருசேதனம பரிச்சின்னமாம. அதன சம்பந்தத்தினாலேயே விஷயத்தின பிரகாச முண்டாகின்றது. ஜீவசேதனத்தை விருத்தியினைக் கொள்ளினும பிரமாதாவோடு விஷயத்தின சம்பந்தம விருத்தியினாலாகிய தாம். ஆதலால் இரண்டு மதங்களினும விஷயசம்பந்தத்தில் விலக்ஷணத்தன்மை யில்லை

### ௩௩௮. ஜாக்கிரத்தில் உண்டாவதாகிய விருத்தியின் அநுவாதத்தோடு சொப்பனாவஸ்தையின் இலக்ஷணம்.

முற்கூறிய பிரயோஜனமுடைய இந்திரிய ஜந்நிய அந்தக்கரணத்தின விருத்தி ஜாக்கிராவஸ்தையி லுண்டாகின்றது. இந்திரியத்தினால் ஜந்நியமாகாத விஷயாகோசர அந்தக்கரணத்தின் அபரோக்ஷவிருத்தி யாதோ, அதனவஸ்தையினைச் சொப்பனாவஸ்தை யென்பர். சொப்பனத்தில் ஞேயமும ஞானமும அந்தக்கரணத்தின பரிணாமமாம்.

### ௩௩௯. சுழுத்தியவஸ்தையின் இலக்ஷணம்.

சுககோசரமும அவித்தியாகோசரமுமான அஞ்ஞானத்தின் சாக்ஷாத்பரிணாம ரூப விருத்தியின் அவஸ்தையினைச் சுழுத்தியவஸ்தை யென்பர். சுழுத்தியில அவித்தையின விருத்தி சுககோசரமும அஞ்ஞானகோசரமு மாகின்றது. அவித்தியாகோசர விருத்தி ஜாக்கிரத்திலும் "நானறியேன்" என்பதாக உண்டாகின்றதெனினும் அவ்விருத்தி அந்தக்கரணத்தினதாம்; அவித்தையினதன்று. ஆதலால் சுழுத்தி இலக்ஷணத்திற்கு ஜாக்கிரத்தில அதிவியாப்தி யில்லை. அங்ஙனமே பிராதிபாஸிக ரஜதவடிவவிருத்தி ஜாக்கிரத்தில் அவித்தையின பரிணாமமாம. அது அவித்தியாகோசரமன்று. அங்ஙனமே சுகவடிவ விருத்தி ஜாக்கிரத்திலிருக்கின்றது. அது அவித்தையின்பரிணாம மன்று. இவ்வாற்றால் சுககோசரமும அவித்தியாகோசரமுமாகிய அவித்தியா விருத்தியின் அவஸ்தையினைச் சுழுத்தியவஸ்தை யென்பர்.

### ௩௪௦. சுழுத்திசம்பந்தமுள்ள பொருளினைக் கூறுதல்.

சுழுத்தியில அவித்தையின் விருத்தியில ஆரூடசாக்ஷி அவித்தையினைப் பிரகாசிக்கின்றது. சொரூபசுகத்தையும பிரகாசிக்கின்

